# பேரியல் பொருளாதாரம்

(முதல் தொகுதி)



ஆசிரியர்
கார்டனர் அக்லே

தமிழாக்கம்
இரா. அரங்கநாதன், எம்.ஏ.,
பேராசிரியர், பொருளாதாரத்துறை,
பச்சையப்பன் கல்லூரி, சென்னை.






தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க:வெ.) வரிசை எண்—538

# பேரியல் பொருளாதாரம்

## (முதல் தொகுதி)

ஆசிரியர்
கார்டனர் அக்லே

தமிழாக்கம்
இரா. அரங்கநாதன், எம்.ஏ.,
பேராசிரியர், பொருளாதாரத்துறை,
பச்சையப்பன் கல்லூரி, சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—December, 1973

T.N.T.B.S. (C.P.) No. 538



**MACROECONOMIC THEORY (Vol. I)**

*Gardner Ackley*

*Translation*

R. RANGANATHAN

**Price Rs. 9-80**

This Translation is Published by Arrangement with M/s The Macmillan & Co., New York, U.S.A.

Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

*Printed by*
KALYAN PRINTERS,
1/10. Munlappa Mudali St.,
Madras-1.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின்மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழி லேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற் பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறை களிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ் வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறு வதற்கு மதுரைப் பல்கலைக் கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'பேரியல் பொருளாதாரம்' (முதல் தொகுதி) என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 538ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 573 நூல்கள் வெளிவந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூகநல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

பெற்றோர்கள்
ஆர். எம். அக்லே,
மார்கரெட் அக்லே
ஆகியவர்கள் நினைவாக
இந்நூலினைப்
படைக்கிறேன்.

# முன்னுரை

மிச்சிகன் பல்கலைக் கழகத்தில் 'நாட்டு வருமானம்' என்ற பொருள் பற்றி பதினான்கு ஆண்டுகளாகப் படிப்பித்ததன் விளைவு இந்த நூலாகும். இந் நூலை எப்பொழுது எழுத ஆரம்பித்தேன் என்பது எனக்கே தெரியாது. ஆனால், இந் நூலைச் சிறு சிறு பிரிவு களாக 1955ஆம் ஆண்டு முதல் பயன்படுத்தி வந்தேன்.

முதலாண்டுப் பட்ட வகுப்பு மாணவர்கள், பட்ட வகுப்பு மாணவர்கள் இந்தப் பொருளைப் படிப்பதற்கு எனத் தேர்ந்து எடுத்துள்ளனர். இந் நூல் அவர்களுக்கு, குறிப்பாக முதலாண்டுப் பட்ட வகுப்பு மாணவர்களுக்குப் பயன்படுவதாக அமைந்துள்ளது. ஆயினும், சில சிறப்புப் பகுதிகளை அதிகாரங்களின் இறுதியில் இணைப்புகளாகத் தந்து உள்ளேன். தவிர, சிறப்பு வகுப்புகளுக்குப் பயன்படும் கருத்துகளையும் தந்துள்ளேன். ஆனால், மாணவர்கள் தங்கள் தங்கள் மட்டத்திற்குத் தக்கவாறு உள்ள அதிகாரங்களை மட்டும் படிக்கலாம். இதனால் நூலில் உள்ள கருத்து ஒருமிப்புக் குலைந்துவிடாது. இந் நூலின் இறுதியில் உள்ள மூன்று அதிகாரங் களைப் பட்டப் படிப்பு மாணவர்கள் ஓதுக்குதல் நலம். சில விரிவுரையாளர்கள் அதிகாரங்கள் 4, 9 ஆகியவைகளைத் தவிர்க்க லாம். இதனால் கருத்து அமைப்புப் பாதிக்கப்படாது.

இந் நூலுக்குப் பெரிதும் பயன்பட்ட சில பொது நூல்களின் கருத்து அமைப்புகள்கூட நெகிழ்ச்சியுடையன. ஜெ. எம். கீன்ஸ் அவர்களின் 'வேலை, வட்டி, பணம் இவற்றின் பொதுக் கோட்பாடு' (General Theory of Employment, Interest and Money) என்ற நூலை மாணவர்கள் பெருவாரியாக வாங்கி 4, 6, 14, 16, 22, 23 ஆகிய அதிகாரங்களைப் படிக்கின்றனர். கீன்ஸின் நூலுக்குப் பின் தோன் றிய பல நூல்களின் கருத்துகளைத் தேர்ந்து எடுத்து இணைத்துள் ளேன். இதனால் இந் நூல் நெகிழ்ச்சியை அதிகப்படி அளிக்கிறது. இவைகள் அதிகப்படியான குறிப்புகளை அளிக்கின்றன. கீன்சு அவர்களின் நூல் அவ்வளவு திருப்தி அளிப்பதாக இல்லை என்பது என் வாதம். ஆயினும், பொருளியல் மாணவர் ஒவ்வொருவரும் அதை நன்கு பயில வேண்டும்.

நான் படிப்பித்தபோதும், இந் நூலை எழுதியபோதும் கோட் பாட்டை அடிப்படையாகக்கொண்டு தொகுத்துள்ளேன். ஆனால்,

'இந் நூலைக் கற்பிக்கும்போது தற்காலிகப் பொருளியல் நிலைமைகளையும், தற்காலிகப் பொருளியல் கொள்கைகளையும் ஆய்வதுடன் தொடர்பு கொள்ளும் வகையில் கற்பிப்பதைச் சிலர் கையாளக் கூடும். அவ்வகையிலும் இந் நூல் பயன்படக்கூடும். அவ்வாறு பயன்படுத்துகையில் வேறு சில கோட்பாட்டு நூல்களைத் துணை கொண்டு கற்பிப்பதைவிட, தலைவரின் பொருளியல் அறிக்கைகளைப் (Economic Report of the President) பயன்படுத்துதல் சாலச் சிறந்தது.

இந் நூல் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்துள்ளதாயினும், அனுபவபூர்வமான சில கருத்துகளையும் ஆங்காங்கே புகுத்தியுள்ளேன். குறிப்பாக 'நுகர்ச்சித் தொடர்பு' என்ற தலைப்பில் அமைந்துள்ள வாதம் அனுபவபூர்வமானதே. (அங்கு மொத்த உற்பத்தித் தொடர்பைப் பற்றி அனுபவபூர்வமுள்ள வாதம் அமைந்துள்ளது.) ஆனால், மற்றத் தலைப்புகளின் அனுபவ பூர்வமான கருத்துகளையும் புள்ளியியல் கருத்துகளையும் புகுத்தவில்லை என்ற குறைபாட்டைச் சிலர் சுட்டிக்காட்டக்கூடும். குறிப்பாக முதலீடு என்ற தலைப்பில் இவ்வகைக் கருத்துகளை நான் புகுத்தவில்லை என்ற குறைபாட்டையும் சுட்டிக்காட்டக்கூடும். ஆனால், நுகர்ச்சித் தொடர்பு இன்றைய பேரினப் பொருளியலின் அடித்தளம் என்பதும், முதலீடு அனுபவபூர்வ தேர்வுக்குள் அடங்காது என்பதும் என் சமாதானம். ஆனால், அறிமுகப் படிப்பில் மாணவர்களுக்குக் கோட்பாட்டிற்கும் உண்மைகளுக்கும் உள்ள தொடர்புகளை விளக்க வேண்டுமே தவிர, அவற்றின் உண்மைகளைச் சோதிக்க முற்படுத்தக்கூடாது.

இந் நூலில் உள்ள கருத்துகள் மூலக் கருத்துகள் அல்ல; அப்படி மூலக் கருத்துகளாகவும் இருக்கக்கூடாது. ஆயினும், இதுபோன்ற நூல்களை எழுதும்போது 'பொருளியல் பகுப்பாய்வினிற்குச் சிலர் எழுதிய கருத்துகளை ஆங்காங்கே புகுத்துவது என்பது தவிர்க்க முடியாத ஒன்றாகும். ஆனால், அவற்றை மிகைப்படுத்துதல் அல்லது அவற்றைப் பற்றிய கருத்துரை கூறுவது மிகையாகும். அத்தகைய விரிவாக்கங்கள் சிறந்தவை என்றால் அவற்றை இந் நூலைப் பயிலும் மாணவர்களே குறித்துக் கொள்வார்கள். அவற்றைப் பற்றி எந்த அளவிற்குக் குறைத்துக் கூற முடியுமோ அந்த அளவிற்கு நன்மையாகும்.'[1]

ஜெ. எம். கீன்சு என்பவருக்கு என் தலைமுறையில் வந்த மாணவர்கள் கொண்டுள்ள நன்றிக் கடன் உணர்ச்சியைப்போல் நானும்,

[1] F. M. Taylor, Principles of Economics, Preface to 9th ed. (Ronald, 1925).

நன்றிக் கடன் உள்ளவன் ஆவேன். அதில் ஐயப்பாடு இல்லை. ஆனல், இது கீன்சு எழுதிய நூலின் துணை நூலுக்கும் அப்பாற் பட்டது. கீன்சு அவர்கள் எழுதிய நூல் தொன்மைக் கருத்து களைப் புரட்சிகரமாக அமைத்துள்ளது; ஆனல், கீன்சியன் இலக் கியங்களுக்குப் பிற்பட்டு வந்த நூல்கள், கீன்சு அவர்களின் கருத்து களை மிஞ்சிய அளவிற்குப் பேரினப் பொருளியல் கருத்துகளைக் கொண்டுபோய் உள்ளன.

இந்நூலின் சில பகுதிகள் நான் முன்பு எழுதிய சில நூல்களின் கருத்துகளோடு இணைந்து அமைந்துள்ளன. அந் நூல்கள் பின்வரு மாறு: 'பண வீக்கத்தின் பகுப்பாய்வும் அதன் கட்டுப்பாடும் மூன் றுவது அணுகு முறை' (A Third Approach to the Analysis and Control of Inflation). இந் நூல் 'விலைகளுக்கும் பொருளியல் நிலைப்பாடு, வளர்ச்சிக்கும் உள்ள தொடர்பு' என்ற தலைப்பில் பொருளாதார இணைக் குழுவிற்கு 1958ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ஆம் தேதி அளித்த கட்டுரைத் தொகுப்புகளில் அமைந் துள்ளது. இக் கருத்துகளை அதிகாரம் 16-ல் சில மாறுதல்களுடன் இணைத்துள்ளேன். இதுபோல் அதிகாரம் 19-ல் 'செல்வம்–சேமிப்புத் தொடர்பு' என்ற கட்டுரையில் கண்ட சில கருத்துகளை, மாறுதல்களுடன் இணைத்துள்ளேன். இக் கட்டுரை அரசியல் பொருளியல் செய்தி இதழ், தொகுதி 59 (ஏப்ரல் 1951) என்ற குறிப்பேட்டில் முதல் முதலாக வெளி வந்தது. அதிகாரம் 20-ல் காணப்படும் கருத்துகள், 'இதாலிய பொருளியல் பிரச்சினைகளுக் குக் கீன்சின் பகுப்பாய்வு' என்ற தலைப்பில் 'Banca Nazionale del Lavoro Quarterly Review' செப்டம்பர் 1957 குறிப்பேட்டில் வெளி வந்தவை. இக் கருத்துகளை வெளியிட அனுமதி வழங்கிய சிகாகோ பல்கலைக்கழக அச்சகத்திற்கும் Banca Nazionale del Lavoro அச்சகத்திற்கும் நான் கடமைப்பட்டுள்ளேன். பக்கம் 448-ல் நான் அளித்த விளக்கப் படத்தைப் (படம் 12-1) பயன் படுத்தி மிச்சிகன் பல்கலைக்கழகத்தின் ஒரு பகுதியான அளவை ஆராய்ச்சித் துறையினர் அனுமதி அளித்தனர். அவர்களுக்கு என் நன்றி.

பகுப்பாய்வின் ஒழுக்கத்திலும் கோட்பாட்டிலும் அதிக ஆர்வம் காட்ட என்னைப் பக்குவப்படுத்திய என் முதல் ஆசிரியர் ஹவர்ட் எஸ். எல்லிஸ் அவர்களுக்கு என் நன்றி. இது தவிர வேறு சில ஆசிரியர்கள் எனக்கு ஆர்வமூட்டினர். அவர்களுக்கும் என் நன்றி. ஈ. எம். ஹூவர் ஜூனியர், லியோனர்ல்ட் எல். வாட் கின்ச், Z. சிலார்க் டிகின்சென், ஐ. எல். ஷார்ஃப்மென், ஆர்தர் ஸ்மித்தீஸ் ஆகியவர்களுக்கு என் நன்றி உரித்தாகுக. எனக்குத்

தூண்டுதல் அளித்து, மதிப்பற்ற ஒத்துழைப்புத் தந்தவர்கள் என் உடன் பணியாற்றும் நண்பர்கள் ரிச்சர்ட் ஏ. மஸ்கிரேவ், டானியல் பி. சூட்ஸ், வாரன் எல். ஸ்மித், ஜார்ஜ் கடோனு, ஜேம்ஸ் என். மார்சன் ஆகியவர்கள். இண்டியான பல்கலைக்கழகப் பேராசிரியர் ஹென்ரி ஆலிவர் என் கையெழுத்துப் படியைப் படித்துக் கணக்கற்ற நல்ல பல கருத்துரைகளை வழங்கினுர். நூற்றுக்கணக்கான மாணவர்கள் என் கருத்துகளைக் கூர்மைப்படுத்த உதவினர். அவர்களில் எழுதும் பணிக்கு உதவிய, குறிப்பாக என் முன்னுள் மாணவர்கள் வில்லியம் பி. யோா. என்னிஸ் கோலர், என்ரிக் ஜெரோப்–பாயா ஆகியவர்களுக்கு என் நன்றி. மேலும் ஆராய்ச்சி செய்ய உதவிய ஃபோர்ட் நிறுவனத்தாருக்கும் என் நன்றி. இணை ஆராய்ச்சி மன்றங்களின் நிர்வாகக் குழுவிற்கு (Conference Board of Associated Research Councils) என் நன்றி. ஐக்கியக் குடியரசின் கல்வித்துறை புல்பிரைட் நிறுவனம் ரோம் நாட்டில் எழுத உதவி அளித்தமைக்கு நன்றி. மிச்சிகன் பல்கலைக் கழக அலுவலகப் பணியாளர்கள் எனக்கு அளித்த ஒத்துழைப்பு மதிப்பிட முடியாதது. குறிப்பாக, திருமதி எவிலின் அலன்டிராப் அம்மையார் பல வரைவுகளைச் சலிக்காமல் தட்டச்சு செய்து உதவியதற்கு நன்றி. இறுதியாக என் குடும்பத்தினரும், என் மனைவியும் தந்த ஒத்துழைப்பு மிகவும் குறிப்பிடத்தக்கது. இத்துணை உதவிகள் இல்லாவிடில் இந் நூல் வெளி வந்திராது.

**கார்டனர் அக்லே**

# பொருளடக்கம்

பாகம் ஒன்று — பக்கம்

## கருத்துகளும் அளவிடுதலும்

1. அடிப்படைக் கருத்துகள் ... 1
பேரியல் பொருளியல் என்பதன் பொருள் ... 3
பேரியல் பொருளியல் மாறிகள் ... 5
சார்பு தொடர்புகளும் முழுமைத் தொகுதி அளவைகளும் ... 9
பொருளாதார மாதிரிகள் ... 15
சமநிலை, நிலையியல், இயக்கவியல் ... 19
பொருள் நிறைந்த பேரியல் பொருளாதாரம் சாத்தியமா? ... 25

2. நாட்டு வருமானமும் நாட்டின் ஆக்கமும் ... 33
நாட்டு வருமானக் கருத்து ... 35
நாட்டின் ஆக்கம் என்ற கருத்து ... 40
சுருக்கிய அங்காடிப் பொருளியல் அமைப்பில் நாட்டு வருமானமும் நாட்டு ஆக்கமும் ... 46

3. ஐக்கிய அரசுகளின் நாட்டு வருமானமும் நாட்டு ஆக்கக் கணக்குகளும் ... 55
தொழிலாக்கமும் வருமானக் கணக்கும் ... 56
ஆக்கமும் அரசின் வருமானமும் ... 70
ஆக்கமும் குடும்பங்களின் வருமானமும் ... 78
அயல்நாட்டுப் பேரங்களின் கணக்கு ... 88
பல்வேறு துறைக் கணக்குகளை ஒன்றுபடுத்தல் ... 92
தொழில் கணக்கில் உள்ள சிறப்புப் பிரச்சினைகள் ... 96
ஐக்கிய அரசு கணக்குகளிலிருந்து சில விளக்கமான விவரங்கள் ... 107
சேமிப்பும் முதலீடும் ... 110
அநுபந்தம்: அரசு வெளிப்பாட்டின் மதிப்பீடு ... 116

பக்கம்

4. வெளிப்பாடும் வேலையும் ... 122

உண்மை நாட்டு ஆக்கம் ... 122

உண்மை வெளிப்பாட்டுப் பிரச்சினைக்கான வரிப்பட விளக்கம் ... 131

வணிகத்துறை கையாளும் முறை ... 140

'உண்மை' நாட்டு வருமானம் ... 141

வேலை, வேலையின்மை ஆகியவைகளை வெளியிடுதல் ... 143

வேலை, வெளிப்பாடு ஆகியவைகளின் குறுங்காலத் தொடர்பு ... 147

பின்வரும் அதிகாரங்களின் எடுகோள்கள் ... 156

பாகம் இரண்டு

கிளாசிக்கல் பேரியல் பொருளாதாரம்

5. சேவின் விதியும் பண அளவுக் கோட்பாடும் ... 163

முற்றொருமைகள்—கோட்பாடுகள் இவைகளின் எதிர் நிலை ... 163

'சேவின்' (Say's) விதி ... 168

ரொக்க இருப்புகளும் பண அளவைக் கோட்பாடும் ... 174

விறைப்பான விலைகளும் பண அளவுக் கோட்பாடும் ... 184

சேவின் விதி பண அளவைக் கோட்பாட்டுக்குப் பொருந்துமா? ... 185

6. கூலிகள், விலைகள், வேலையும் ஆக்கமும் ... 190

கிளாசிக்கல் வேலை நிறைவுச் சமநிலை ... 190

கிளாசிக்கல் மாதிரியின் வரிப்பட விளக்கம் ... 199

விறைப்பான கூலிகளின் விளைவுகள் ... 205

பணவாக்கக் கொள்கையும் வேலைநிறைவும் .. 207

7. சேமிப்பு, முதலீடு, வட்டிவீதம் ... 210

பண அளவைக் கோட்பாட்டைத் தேவைக் கோட்பாடாகக் கொள்ளல் ... 210

சேமிப்பும் முதலீடும் ... 213

பத்திரங்கள் மறு விற்பனை அங்காடிகள் ... 221

பக்கம்

பண அளவைக் கோட்பாட்டுடன் தொடர்புடைய சேமிப்பும் முதலீடும் ... 227
சேமிப்பும் பதுக்குதலும் ... 234
சேமிப்பும், முதலீடும், வேலையும் ... 237

8. கிளாசிக்கல் கோட்பாட்டின் சுருக்கம் ... 240
விக்செலின் வாய்பாடு ... 241
கூலிகள் விறைப்பானவை என்றில்லாதிருந்தால் வேலைநிறைவு ... 247
கிளாசிக்கல் பொருளாதாரத்தில் பணவாக்கக் கைகோளும் வருவாய்க்குரிய கொள்கையும் ... 251

பாகம் மூன்று

## கீன்சின் பேரியல் பொருளியல்

9. வேலை நிறைவுக்கான சில தடைகள் ... 259
நீர்மை விருப்பம்; ஊக வாணிபத்திற்கான பணத் தேவை ... 261
ஊக வாணிபத்தை ஏற்றுக்கொண்ட பண அளிப்பும் தேவையும் ... 269
பணத் தேவைக்கான வட்டி நெகிழ்ச்சியுடைய மற்றொரு மூலம் ... 274
கிளாசிக்கல் மாதிரியுடன் ஊக வாணிபத்திற்கான பணத் தேவையை உடன் சேர்த்தல் ... 278
ஊக வாணிகத்தின் சிறப்பு ... 289
நீர்மை வலை ... 292
முன்னுக்குப் பின் முரணுடைய சேமிப்பும் முதலீடும்... 295
தானே இயங்கும் நிறை வேலை சாத்தியமா? ... 297
பணவாக்க நிர்வாகமும் வட்டி வீதமும் ... 300
பின் சேர்க்கை: கடன் நிதிகள் பகுப்பாய்வில் பதுக்குதல், பதுக்குதலின்மை ... 306

10. நுகர்ச்சிச் சார்பு தொடர்பு ... 317
நுகர்ச்சிச் சார்பு தொடர்புக்கான கருத்தியல் ... 318
நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் காரண காரியப் பகுப்பாய்வு ... 332

பக்கம்


நுகர்ச்சிச் சார்பு தொடர்பு கருதுகோளுக்கான புலவழிச் சான்றுகள்: வரவு செலவுத் திட்டங்களின் ஆராய்ச்சி ... 336

காலத் தொடர் வரிசையின் 1929–41 விவரங்களிலிருந்து கிட்டும் புலவழி ஆதரவு ... 343

சில புள்ளியியல் பிரச்சினைகள் ... 347

நெடுங்கால நுகர்ச்சிச் சார்பு தொடர்பு ... 360

போர்க் காலம், போருக்குப் பிந்திய காலங்களில் நுகர்ச்சி நடத்தை ... 376

பின்சேர்க்கை : நுகர்ச்சியும், பயன்பாடு உச்சப் பாடும் ... 385

11. குறுங்கால நுகர்ச்சி நடத்தை ... 385

நுகர்ச்சிச் சார்பு தொடர்பில் பின்னீடு உளதா? ... 390

நுகர்வுப் பிடிப்பு ... 394

சுருக்கம் ... 405

12. நுகர்ச்சிச் செலவுகளை வளப்படுத்தும் வேறு சில காரணிகள் 408

நுகர்ச்சியை வளப்படுத்தும் சில ‘புறவயக்’ காரணிகள் ... 409

நீள்பயன் நுகர்ச்சிச் செலவின் நிலைபேறின்மை ... 432

உளவியல் தொடர்புடைய காரணிகள் ... 438

நுகர்ச்சிச் செலவுகளைப் பாதிக்கும் அமைப்பு பற்றிய காரணிகள் ... 451

நுகர்ச்சியும் நாட்டின் மொத்த ஆக்கமும் ... 457

வருவாய்க்குரிய கொள்கையும் நுகர்ச்சியும் ... 464

நுகர்ச்சிச் சார்பு தொடர்பிற்கான தீர்மானத்தின் சுருக்கம் ... 468

கலைச்சொற்கள் ... 471

# 1. அடிப்படைக் கருத்துகள்

(Basic Concepts)

பேரியல் பொருளாதாரக் கோட்பாடு (Macro-Economic Theory) என்பது பொருளியல் பகுப்பாய்வினுக்கு (economic analysis) வழங்கும் ஓர் ஒழுங்கற்ற சொல்லாகும். அதற்கு வருவாய்ப் பகுப்பாய்வு (income analysis), வேலைப் பகுப்பாய்வு (employment analysis) என்ற மற்றொரு மிகத் தெளிவான தலைப்பு வழக்கில் உள்ளது. வேலையின்மை (unemployment), பொருளாதார நிலைபேறின்மை (economic instability), பண வீக்கம் (Inflation), பொருளியல் வளர்ச்சி (economic growth) போன்ற பல பிரச்சினைகளை இந் நூல் விளக்குகிறது என்று மேலும் சொன்னால், இதனைப் படிப்போர்க்கு, இதன் உட்கருத்து நன்கு புலனாகும். மேற்கூறிய பிரச்சினைகள், சமகாலத்து மேனாட்டுச் சமுதாயங்களில், குறிப்பிடத்தக்க பிரச்சினைகளாகவும், இன்றைய சமுதாயங்களில் குறிப்பாகக் குடியாட்சி அமைப்புகளில், பெருமளவு சமூகச் சிக்கல்களாகவும், அரசியல் சிக்கல்களாகவும் விளங்குகின்றன என்று வாசகர்களுக்கு நினைவூட்டத் தேவையில்லை.

ஆனால், இந் நூல், பொருளியல் கொள்கையின் மேற்குறிப்பிட்ட பிரச்சினைகளை ஆராய்கிறது எனச் சொன்னால், அது வாசகர்களுக்குத் தப்பான எண்ணத்தை உண்டாக்கும். இந் நூல் இப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணும் நூலென வாசகர்கள் கருதுமுன் அவர்களுக்கு ஓர் எச்சரிக்கை விடுத்தல் நலம். அது, இந் நூல் கடினமும் சிக்கலுமான இப் பிரச்சினைகளின் பகுத்தாய்வுக்குத் தேவைப்படும் கருத்தியல் பணிச் சட்டத்தினை (Theoretical framework) அளிப்பதல்லாமல், விடை காண்பதன்று என்பது. பிரச்சினைகளுக்கு விடை காணும் தகவல்களைப்பற்றிய சில கடினமான வினாக்களுக்கு முதற்கண் விடை காண வேண்டும். அழுத்தமான தகவல்கள், நிறைவான பகுத்தாய்வு இவ் விரண்டுமட்டுமே பிரச்சினைகளுக்குத் தீர்வு காணப் போதாதவை; ஏனெனில் தீர்வு

களுக்கு மதிப்பீடுகள் தேவை. இப் பிரச்சினைகள், தகவல்களைத் தழுவியும், பகுப்பாராய்ச்சிப் பணிச் சட்டத்தைத் (analytical framework) தழுவியும், பலதரப்பட்ட நோக்குகளில் அடிப்படைச் சமூகத் தேர்வினைத் தழுவியும் உள்ளதால், இவைகளின் தீர்வு தக்க கொள்கைகளை ஒட்டியதாகவும், அவை அரசியல், பொருள் துறை, ஆட்சித் துறை போன்ற பல துறைகளுக்கும் பயன்படக் கூடிய நிறுவனங்களால் அமைக்கப் பெற வேண்டும்.

தொடர்புடைய தகவல்கள் எவை? சமூக விருப்பங்கள் எவை? நிறுவன அமைப்புகளுக்குத் தேவைப்படும் காரணிகள் யாவை? என்பவற்றை எடுத்துக் காட்ட, கோட்பாடு பெரிதும் பயன்படு கிறது. ஆழமான பகுப்பாய்வு, பிரச்சினைகளுக்கு விடை காணும் காரணிகளில் (factors) ஒன்று என்பது தெளிந்த ஒரு குறிப்பு. தகவல்கள் போதாமை அல்லது நோக்கங்களைச் சிறந்த முறையில் தேர்ந்தெடுக்க முடியாமை, போன்றவைகளை விட, தவறான பகுப் பாய்வினாலும், குறைபட்ட சிந்தனையாலும் மட்டுமே சமூகக் கொள்கையின் பெரும் பகுதி அன்றும் இன்றும் அல்லலுறுகிறது. பொருளியல் பகுப்பாய்வு தவறான விருப்பங்களை (choice) அதாவது உண்மையில் பதிலீடுகள் (alternatives) அல்லாதவற்றைப் பதிலீடுகள் என எடுத்துக்காட்டியுள்ளது. அதோடு நில்லாமல், தொடர்பற்ற உண்மைகளை ஒன்று சேர்த்தும், அவைகளைக் கூர்ந்த கவனத்துடன் ஆராயவும் வழிவழி வந்த வல்லுநர்களைத் தூண்டி யது. நம் சமூகத்தில் காணும் இத்தகைய மிகப் பெரிய பிரச்சினை களுக்குத் தீர்வு காணும் பெரும் பங்கைக் கோட்பாடு தாங்கி நிற் கிறது. ஆயினும், பொருளியல் பிரச்சினைகளுக்குத் தேவைப்படும் விடையின் ஒரு பகுதியையமட்டுமே கோட்பாடு அளிக்கிறது.

பேரியல் பொருளியல் கோட்பாடு, கடந்த இருபது ஆண்டு களில் வெகு விரைவாக வளர்ந்ததாயினும், அதன் தோற்றுவாய் மிகப் பழமையானது. இதன் பரப்பு இன்று பெரிதும் விரிவடைந்து இருப்பதால், இதன் கருத்துகளை ஒரு நூலில் சுருக்குதல் கடினம். எனவே, இந் நூல் அடிப்படைக் கருத்துகளை மட்டும் விளக்குகிறது. இது ஒரு முகவுரை நூல். கருத்துகளின் வரலாறு, அவற்றின் படிப்படி வளர்ச்சி, போன்றவைகள் ஆங்காங்கே காணப்பட்டா லும் அவை குறிப்புகளன்றி முறையான முழு விளக்கங்கள் அல்ல.

## பேரியல் பொருளியல் என்பதன் பொருள்
## (The Meaning of Macro Economics)

பேரியல் பொருளியல் (Macro Economics) என்பது நுண்ணியல் (Micro) பொருளியல் என்பதினின்று பிரிக்கப்பட வேண்டும்.

மிகப் பெரிய பொருளியல் செயல்களைப் பெருமளவில் பேரியல் பொருளியல் விளக்குகிறது. பொருளாதார வாழ்க்கையின் எல்லா அளவுகளிலும் அது கவனம் செலுத்துகிறது. அது பொருளியல் பட்டறிவு என்ற 'யானை'யின் தனிப் பகுதிகளின் அளவு, உருவம், செயல் ஆகியவைகளைக் கவனியாமல் அதன் மொத்த அளவு, உருவம், செயல் போன்றவைகளைக் கூர்ந்து கவனிக்கிறது. இவ் வுருவகத்தைச் சற்று மாற்றினால், அடர்ந்த ஒரு காட்டில் உள்ள சிறு சிறு மரங்களை விடுத்து, காட்டின் முழுச் சிறப்பு இயல்புகளைத் தனிப்பட்ட முறையில் இது ஆராய்கிறது என அமையும்.

குறிப்பாக, பொருளியல் அமைப்பின் மொத்த உற்பத்தியின் அளவு, அதன் வளப் பொருள்கள் எந்த அளவிற்குப் பயன்படுகின்றன, நாட்டு வருமானத்தின் அளவு, பொது விலை மட்டம் போன்ற மாறும் தன்மையுள்ளவைகளின் மீது பேரியல் பொருளியல் கவனம் செலுத்துகிறது. நுண்ணியல் பொருளியல் நிறுவனங்களிடையே உற்பத்திப் பங்கீடு, பண்டங்கள் பங்கீடு, நிறுவனப் பங்கீடு, போட்டியிடும் பல பயன்களிடை வளப் பங்கீடு ஆகியவைகளைக் கவனிக்கிறது. நுண்ணியல் பொருளியல் வருமானப் பங்கீட்டுப் பிரச்சினைகளையும் ஆராய்கிறது. குறிப்பிட்ட சில பண்டங்களின் தொடர்பு விலைகளில் அது நாட்டமுடையது.[1]

மரபுவழிப் பொருளியல் கோட்பாட்டின் பெரும் பகுதி கடந்த இருபத்தைந்து ஆண்டுகள் வரை நுண்ணியல் பொருளியல் கருத்து

[1] நுண்ணியல் பொருளியல் கோட்பாடு, தனி நிறுவனம், தனிக் குடும்பம் போன்றவைகளின் நடத்தையைக் குறிக்கும் என்ற விளக்கத்தைச் சில பொருளியல் வல்லுநர்கள் விரும்புகிறார்கள். அங்ஙனம் கொண்டால், விலை, பங்கீடு, கோட்பாடுகளின் பெரும்பகுதி பேரின இயல்புகளைக் கொண்டவை. உதாரணமாக, தொழிற்சாலை (industry) என்ற கருத்து. கணக்கிலடங்காத சிறு சிறு, ஏன் பண்டங்களின் கூட்டுத் தொகையாம். நுகர்வோர் மிதியடி தேவை என்பது பல குடும்பங்களின் மிதியடிகளின் தேவைகளின் கூட்டு; மிதியடிகளின் அளிப்பு என்பதும் பல நிறுவனங்களின் உற்பத்தியின் கூட்டு. ஒரு வட்டாரத்திற்கு அல்லது ஒரு தொழிற்சாலைக்குத் தேவைப்படும் உழைப்பு, அதன் அளிப்பு ஆகியவைகள் தெளிவாகக் கூட்டுத் தொகைகளாகும். பொருளியல் அமைப்பு முழுமைக்கும் தேவைப்படும் கூட்டுத் தொகுதியைக் குறிக்கும் என்ற பொருளில் பேரியல் பொருளியல் என்ற கருத்து இங்கே ஆளப்படுகிறது. அமைப்பின் முழுமையுடன் பின்வரும் துணைக் கூட்டுகளையும் பேரியல் பொருளியல் குறிப்பிடுகிறது (a) இடைப் பொருள்கள் அதாவது நுகர்ச்சிப் பொருள்கள், முதற் கருவிப் பொருள்கள் ஆகிய இவற்றின் மொத்தங்கள்; (b) (நுகர்ச்சிப் பொருள்கள், முதற் கருவிப் பொருள்கள், இவைகளின் மொத்தக் கூட்டுத் தொகை அமைப்பின் மொத்த உற்பத்திக் கூட்டுத் தொகையுடன் சேர்வதுபோல்; அல்லது மொத்தக் கூலி வருமானம், சொத்து வருமானம் ஆகியவை நாட்டு வருமானக் கூட்டுத் தொகையுடன் சேர்வது போல்), அமைப்பின் மொத்தக் கூட்டுத் தொகையுடன் இணையும் தன்மையுள்ள துணைக் கூட்டுத் தொகுதியையும் இக் கருத்துக் குறிப்பிடுகிறது. அமைப்பு முழுவதற்கும் ஒவ்வாத சிறு கூட்டுத் தொகைகளைச் சில வேளைகளில் பேரியல் பொருளியல் கையாளுகிறது. ஆனால், அவைகள் மொத்தக் கூட்டுத் தொகைகளின் துணைப் பங்கீடுகள் என்ற பொருளில் அமையும். சிற்றினப் பொருளியலும் கூட்டுத் தொகைகளைப் பயன்படுத்துகிறது. ஆனால், அவை அமைப்பு முழுமைக்கும் பொருந்தும் கூட்டுத் தொகைகள் என்ற பொருளில் அமையா.

களையே பெரும்பாலும் குறித்து வந்தது. விலை, மதிப்பு இவற்றின் கோட்பாடுகள், குடும்பக் கோட்பாடுகள், நிறுவனக் கோட்பாடுகள், தொழிற்சாலைக் கோட்பாடுகள், உற்பத்திக் கோட்பாடு, நலக் கோட்பாடு (Welfare Theory) அவைகளின் பெரும்பகுதி நுண்ணியல் பொருளியல் வகையினைச் சாரும். பணவாக்கக் கோட்பாடு (Monetary Theory), வர்த்தகச் சுழல் கோட்பாடு (Business Cycle Theory) ஆகியவை நீண்டவரலாறு உடையனவாயினும், பேரினப் பொருளியல் வகையைச் சார்ந்தவை என்பது தெளிவு.

பேரியல் பொருளியல் கோட்பாடு, நுண்ணியல் பொருளியல் கோட்பாடு, இவ் விரண்டிற்கும் உள்ள வேறுபாடுகளை எளிதில் வரையறுக்க முடியாது. பொருளியல் அமைப்பின் பொதுக் கோட்பாடு இரண்டையும் தழுவியது. அது தனியார் நடத்தை, தனி உற்பத்தி, தனி வருமானங்கள், தனி விலைகள் ஆகியவைகளை விளக்கும். இவைகளின் கூட்டுகள் அல்லது சராசரிகள், மொத்தங்கள் ஆகும். இம் மொத்தத்தை (aggregates) பேரியியல் பொருளியல் விளக்குகிறது. இத்தகைய பொதுக் கோட்பாடு வழக்கில் உள்ளது. ஆனல், அதன் பொதுத் தன்மை அதன் பொருளடக்கத்தை மிகவும் சுருக்கியுள்ளது. பொருள் அமைந்த முடிவுகள் கிடைக்க வேண்டுமானல், பேரியல் பிரச்சினைகளைப் பேரியல் கருவிகள் கொண்டு ஆராயவேண்டும்; அதுபோல் நுண்ணியல் பொருளியல் பிரச்சினைகளை நுண்ணியல் கருவிகள் கொண்டு ஆராய வேண்டும்.

பொருள் செறிந்த ஒரு பேரியல் பொருளியல் சாத்தியமா? என்று சிலர் ஐயப்படலாம். (எடுத்துக்காட்டாக) மொத்த உற்பத்தி என்பது, தனி உற்பத்திகளின் கூட்டு என்பது உண்மை. ஆயினும் தனித் தொகைகளை உடனுக்குடன் விளக்காமல் கூட்டுத் தொகைகளை விளக்குதல் எப்படி முடியும்? இவ் வினவிற்கான விடை பல சிக்கல்களை எழுப்புகிறது. இச் சிக்கல்கள் மிகவும் கடினமானவை யாதலால் அவைகளைச் சற்றுப் பொறுத்துக் கவனிப்போம். ஆயினும் இவ் வினவிற்குத் தக்க விடையளித்தல் ஒரு விதத்தில் நல்லது. எனவே; இவ்வதிகாரம் பொருள் செறிந்த பேரியல் பொருளியல் சாத்தியமா ? என்ற வினவுடன் முடிவடைகிறது. இவ் வினவிற்கு விடையளிக்குமுன், பொருளியல் மாறிகள் (economic variables), சார்புத் தொடர்புகள் (functional relationships), பொருளியல் மாதிரிகள் (economic models), நிலையியல், (statics), இயக்கியல், (dynamics) போன்றவைகளோடு தொடர்புடைய ஆராய்ச்சி முறை (methodological) குறிப்புகளை முதற்கண் விளக்குதல் வேண்டும்.

## பேரியல் பொருளியல் மாறிகள்
## (Macro Economic Variables)

மாறிகள் என்பவைகளை எளிதில் வரையறுக்கலாம். அவை அளக்கக்கூடியவை. அவைகளின் மாற்றம் முக்கியமானது என்பதாலும், அல்லது மற்ற மாறிகளின்மீது அவை பயன் அளிப்பதாலும் அவைகளின்மீது நமக்கு நாட்டம் உண்டு. பேரியல் பொருளியலுடன் தொடர்பு உள்ள மாறிகள் யாவை என்பதை இங்குப் பட்டியலிடத் தேவையில்லை. சிறப்பியல்பு வாய்ந்த மாறிகள் சிலவற்றினைத் துவக்கத்திலே குறிப்பிட்டு, அவற்றின் வேறுபாடுகளை விளக்குதல் ஏற்புடையது. அவைகளில் 'இருப்பு' (stock), 'ஓட்டம்' (flow) என்பவையின் வேறுபாடு முதலிடம் பெறுகிறது. (இவைகளைச் சிறந்த முறையில் வேறுபடுத்தாமையால் பல குழப்பங்கள் விளைகின்றன). இருப்பு வகையைச் சேர்ந்த மாறிகளுக்குக் கால அளவில்லை. ஆனால், ஓட்ட வகையைச் சேர்ந்த மாறிகளுக்குக் கால அளவு (time dimension) உண்டு. ஓர் உந்து வண்டியின் எடை என்பது இருப்பு வகையைச் சேர்ந்த மாறும் தன்மையது; அதன் வேகம் ஓட்ட வகையைச் சேர்ந்த மாறும் தன்மையது. உந்து வண்டிகளின் எண்ணிக்கை (population) என்பது இருப்பு வகையைச் சார்ந்த மாறியாகும். ஆனால், வண்டிகளின் போக்குவரத்து (traffic) என்பது, ஓட்ட வகையினைச் சார்ந்த மாறியாகும். ஓர் உந்து வண்டியின் எடை 2,200 பவுண்டுகள்; அதன் எண்ணிக்கை (population) ஒரு நாள், அல்லது ஒரு மாதம் அல்லது ஒரு வருடம் அல்லது ஒரு நிமிடம் ஆகிய கால அளவை ஒட்டிப் பேசுகையில் 30 கோடியாகும்; 2,200 பவுண்டுகள் ஆகாது. இருப்பு என்பதை ஒரு குறித்த காலத்தைக் கொண்டு அளவிட முடியும் என்பது உறுதியான உண்மை. உந்து வண்டியின் எடை சேறு, சகதி சேர்க்கையாலும் அல்லது வேறுபல காரணங்களாலும் மாறலாம்; அதுபோல் உந்து வண்டியின் எண்ணிக்கை, உற்பத்தி, பழமை எனக் கழித்தல் இவைகளை ஒட்டி, கூடலாம் அல்லது குறையலாம். ஆனால், இருப்பின் பருமன் (magnitude) என்பதற்குக் கால அளவு இல்லை. ஓட்டம் என்பதைக் கால அளவைக் கொண்டுதான் அளவிட முடியும். மணிக்கு அறுபது மைல் வேகம் என்று சொன்னால் (அது நிமிடத்திற்கு ஒரு மைல் வேகம் என்று; அல்லது ஒரு வினாடிக்கு 1/60 மைல் வேகம் என்று; அல்லது இருபத்து நான்கு மணி நேரத்தில் 1,440 மைல்கள் வேகம் என்று பொருள்படும்—இவைகள் எல்லாம் ஒன்றை, அதாவது, வேகத்தைக் குறிக்கின்றன; ஆனால், பல கால அலகுகளைக் கொண்டு வெளியிடப்பட்டிருக்கிறது.) வண்டிகளின் போக்குவரத்து, என்பதை ஒரு குறிப்பிட்ட நேரத்தில், ஒரு குறிப்பிட்ட

இடத்தை எத்தனை வண்டிகள் கடந்தன என்பதைக் கொண்டு அளவிடுகிறோம். அதனை ஒரு உந்து வண்டி, ஒரு நாளைக்குச் செல்லும் மைல்களைக் கொண்டு குறிக்கிறோம். இக் கருத்தினை, வேறு பல அலகுகள் கொண்டு அளவிடலாம். அவைகள் எல்லாம் கால வரம்பினைக் கொண்டு அளவிடப்படுகின்றன. கால வரம்பில்லாமல் குறிப்பிடும் மாறிகளுக்குப் பொருளில்லை. வேகம் ஒரு மைல் என்றாலும், வண்டி போக்குவரத்து ஐம்பது என்றாலும் பொருளில்லை.

இதுகாறும் கூறியவை விளக்கமானவை எனத் தோன்றும். இருப்பினும், பல கருத்துகள், பொருளாதாரத்தைக் கற்கத் தொடங்குபவர்கட்கும், அதனைக் கற்று ஓரளவு முதிர்ச்சி பெற்றவர்கட்கும் பெருத்த குழப்பத்தை விளைவிக்கின்றன. அவைகளில் 'பணம்' (money) 'செலவு' (expenditures) இவைகளின் வேறுபாடு ஒன்று. பணம் என்பது இருப்பினைக் குறிக்கும் சொல்; ஆனால், செலவு அல்லது லேவாதேவி (transactions) என்பவை ஓட்டத்தைக் குறிக்கும் சொற்கள். அதுபோல் 'வருமானம்' (income) என்பது ஓட்டத்தைக் குறிக்கும் சொல். ஆனால், 'சொத்து' (wealth) என்பது இருப்பைக் குறிக்கும் சொல்; மேலும் சொன்னால், 'சேமிப்பு' (saving) என்பது ஓட்டம். (மாதத்திற்கு 100 டாலர்கள் என்பது); ஆனால், 'சேமிப்புகள்' (savings) என்பவை இருப்பு; (1959 ஜூலை மாதம் முதல் தேதி ஐக்கிய அரசுகள் (United States) குவித்து வைத்த சேமிப்புகள் 10,000 டாலர்கள்). 'முதலீடு' (investment) என்பது ஓட்டம். (1958ம் ஆண்டு ஐக்கிய அரசுகளில் (United States) ஆண்டுக்கு 55 மிலியன் டாலர்கள்); முதலீடுகளின் மொத்தம் என்பது இருப்பு. (1958ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி தொழில் நிறுவனங்களில் அது 140 மிலியன் டாலர்கள் இருக்கலாம். சேமிப்பு, சேமிப்புகள் என்பவை ஒரு நிலைபாடுடைய (standardised) சொற்களாக வழக்கில் உள்ளன. ஆனால், மொத்த முதலீடுகளின் குவியல்களைத் தவறாக முதலீடு எனக் குறிக்கின்றனர். இவைகள் இருப்பை அல்லது ஓட்டத்தைக் குறிக்கின்றனவா என்பது அவைகள் ஆளப்படும் இடம் கொண்டு பொருள் அமையும். முதல் (capital) அல்லது 'முதல் இருப்பு' (capital stock) என்பன இருப்பைக் குறிக்கும் பொருளில் எப்பொழுதும் அமைவதால் குழப்பம் ஏதுமில்லை.

'விலை' (price) என்பது 'இருப்பு' மாறியா? அல்லது 'ஓட்டம்' மாறியா? விலை கால வரம்பிற்குட்பட்ட தன்று. (ஆனால், விலை மாற்றங்கள் கால வரம்பினுக்கு உட்பட்டவை.) ஆயினும், விலை என்பது இருப்பினைக் குறிப்பதற்கு ஏற்ற பருமன் உடையதன்று. ஆனால், வழக்கில் இச் சொல்லை, இரண்டு ஓட்டங்களின்

(உண்மையான, உள் அடங்கிய (potential) விகிதம் என்ற கருத்தில் அமையும்—அதாவது ரொக்கத்தின் ஓட்டம், பொருள்களின் ஓட்டம் ஆகிய இரு ஓட்டங்கள்—விகிதத்தின் மேல் எண் (numerator), கீழ்எண் (denominator) ஆகிய இரண்டிலும் கால அலகு இருப்பதால் ஒன்றை ஒன்று அடித்து நீக்கிவிடுகிறது.

பொருளியலில் வேறு பல விகித மாறிகள் இருக்கின்றன. அவை இருப்புகளிடையே, ஓட்டங்களிடையே அல்லது இருப்புகள் ஓட்டங்கள் இவ் விரண்டிற்கும் உள்ள தொடர்பை வெளிப்படுத்து கின்றன. இருப்புகளிடையே உள்ள விகிதத் தொடர்புக்கு 'நீர்மை' (liquidity) என்ற கருத்து எடுத்துக்காட்டாகும். இதனை ஒருவரது அல்லது ஒரு நிறுவனத்தின் மொத்தச் சொத்தின் சதவிகிதமாக அளவிடுகிறார்கள். ஓட்ட விகிதத் தொடர்புக்கு எடுத்துக்காட்டுச் சேமிப்புக்கும் வருமானத்திற்கும் உள்ள தொடர்பாகும். இருப் புகள், ஓட்டங்கள் இவைகளுக்கிடையே உள்ள தொடர்புகளுக்கு எடுத்துக்காட்டுகள் 'வேகம்' (velocity) என்ற கருத்துகளுக்கும் அவைகளைப் பேரம் செய்வதற்கென உள்ள பணத்தை அதன் இருப் புடன் உள்ள விகிதத்தால் அளவிடுகிறார்கள். கால அளவு அடி படாமையால் வேகத்தைக் கால அளவு கொண்டுதான் அளவிடல் வேண்டும். மொத்தப் பண இருப்பு ஆண்டிற்குப் பன்னிரண்டு முறை புரள்கிறது (turns over) அல்லது மாதத்திற்கொரு முறை, அல்லது காலாண்டுக்கொருமுறை புரள்கிறது என வெளிப்படுத்து கிறார்கள்.

பல மாறிகளில் ஏதேனும் ஒன்றைப் பயில நேரிட்டால், மாண வர்கள் அது இருப்பினைக் குறிக்கும் மாறியா? அல்லது ஓட்டத்தைக் குறிக்கும் மாறியா? அல்லது விகிதக் கருத்தா என்று ஒரு கணம் சிந்திக்க வேண்டும். அதனை விகிதக் கருத்து என உணர்ந்தபின், அது இருப்புகளிடையே உள்ள விகிதத்தைக் குறிக்கின்றதா அல்லது ஓட்டங்களிடையே உள்ள விகிதத்தைக் குறிக்கின்றதா, அல்லது இருப்புகள், ஓட்டங்கள் இவ் விரண்டிற்குமிடையே உள்ள விகிதத்தைக் குறிக்கின்றதா என்பதையும் சிந்திக்க வேண்டும். இத்தகைய பயிற்சிகளால் பல குழப்பங்களை நீக்கலாம்.

ஓட்டங்கள் கால அளவைக் கொண்டு குறிக்கப்படுகின்றன என்று முன்பே சொன்னோம். அவை, எந்த அலகு கொண்டு அளக்கப்படுகின்றன என்பது முக்கியமல்ல. ஆனால், வருமானப் பகுத்தாய்வினில் (income analysis) 'ஓர் ஆண்டு' என்ற அலகு வழக்கிலிருக்கிறது. வருவாயினைக் காலத்தால் அதாவது ஓர் ஆண்டு, ஒரு மாதம், ஒரு நாள் அல்லது ஒரு வினாடி இவைகளைக் கொண்டு வெளிப்படுத்தினாலும், ஓட்டம் என்பது ஒரு குறித்த

காலத்தில் நிகழும் உடனடி நிகழ்ச்சி அல்லது ஒரு காலவரம்பில் நிகழும் உடனடி நிகழ்ச்சிகளின் சராசரி என்பதை மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். 1959ஆம் ஆண்டு, மே மாதம், இருபத்தாறும் தேதி திங்கட்கிழமை காலை 10 மணி 03 விநாடியளவில், நுகர்வோரின் செலவுக்குரிய வருமானம் (disposable income) ஆண்டிற்கு 331 மிலியன் டாலர்கள் என்ற வீதத்தில் இருந்தது. 1958ஆம் ஆண்டில் நுகர்வோர் வருமானம் ஆண்டிற்கு 316·5 மிலியன் டாலர்கள் என்ற வீதத்தில் அமைந்தது என்று சொன்னால் அது அவ்வாண்டின் சராசரி வருமான ஓட்டத்தின் வீதத்தைக் குறிக்கிறது. ஓர் உந்து வண்டி குறித்த காலத்தில் மணிக்கு 60 மைல் வேகம் செல்கிறது அல்லது எட்டு மணியளவு உடைய ஒரு நாளில் அது 60 மைல் வேகம் செல்கிறது என்றால், அதன் வேகம் அளக்கும் கருவி அந்த நாளில் எப்பொழுதும் 60 மைல் வேகம் காட்டுகிறது என்று பொருளில்லை; ஆனால், அது அந்த எட்டு மணி நேரத்தில் 480 மைல்களைக் கடந்தது. அல்லது சராசரியாக அது மணிக்கு 60 மைல் வேகம் சென்றது எனப் பொருள்படும். ஓட்டங்களின் பெரும் பகுதிகளை நாம் வேகம் அளக்கும் கருவி அல்லது வேறு கருவி கொண்டு அளவிட முடியாது. எனவே, பழக்கத்தில் அவற்றை ஒரு கால அளவைக் கொண்டுதான் அளவிட முடியும். 1959ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் ஜான் டோ (John Doe) என்பவர் 731 டாலர்கள் வருமானத்தைப் பெற்றார் என்றால், அவரது மார்ச்சு மாத வருமானம் மாதம் ஒன்றுக்கு 731 டாலர்கள் வீதம் அமையும்; அல்லது ஆண்டிற்கு 8,772 டாலர்கள் வீதம் வருமானம் பெறுவார் என அமையும். ஆயினும், கருத்தளவில் ஓட்டங்கள் குறிப்பிட்ட ஒரு காலத்தில் நிகழ்பவையாதலால், அவற்றைக் காலம் என்ற அலகு கொண்டே அளவிடுகிறோம்.[1]

[1] இக் கருத்தைக் 'காலப் பகுத்தாய்வு' (Period Analysis) என வசதியாகச் சுருக்கி, அதனைப் பொருளியல் கோட்பாட்டில் அடிக்கடி பயன்படுத்துகிறார்கள். (வருமானம் போன்ற) ஓட்டங்கள் (flows) தொடரத்தக்க மாறுதல்களுக்கு உட்பட்டவையல்ல. ஆனால், அவை இடைக் காலங்களில் மட்டும் (அதாவது குறிப்பிட்ட ஒரு 'காலத்தின்') இறுதியிலோ அல்லது தொடக்கத்திலோ மாறும் தன்மையுடையன). வேறு சில மாறுமியல்புடைய ஓட்டங்களைப் போல்), வருமானமும் படிமுறையில் (stair step) மாறும் தன்மையுடையது. 'அதாவது 100, 90, 85, 82·5 என்ற வகையில் அமையும் எனக் கூறுகிறோம்'. குறித்த ஒரு காலத்தில் கிட்டிய வருமானங்களின் கூட்டுத் தொகை என, இந்த அளவுகளைக் குறிப்பிட்டால், அவ்வருமானத்தின் ஓட்ட அளவு அதன் இருப்பின் அளவை ஒக்கும். இதனால் இருப்பு-ஓட்டம் (stock flow) இவைகளால் ஏற்படும் இன்னல்களைத் தவிர்க்க முடிகிறது. (அல்லது தவிர்ப்பதுபோல் காணப்படுகிறது). சில ஆசிரியர்கள் வெளிப்படையாகக் காலப் பகுத்தாய்வை (சில நேரங்களில் வெளிப்படையாகவும் மற்ற சமயங்களில் மறைமுகமாகவும்) ஆளுகிறார்கள். காலப் பகுத்தாய்வு குறிப்பிட்ட சில இடங்களில் மட்டுமே இங்கு ஆளப்படுகிறது. அவ் விடங்களில் எல்லாம் இங்குக் காலப் பகுத்தாய்வு கொண்டு விளக்கம் தந்துள்ளோம் என்றும் குறிக்கப்பட்டிருக்கிறது. காலப் பகுத்தாய்வை எடுகோளாகக் கொண்டு தீட்டிய பகுத்தாய்வின் முடிவுகள் எல்லாம் பொதுப்படை முடிவுகள் என தவருகக் கொள்ளப்பட்டன. இது பழுதுள்ள முறை என்பது ஆசிரியரின் கருத்து.

பொருளியல் கோட்பாட்டின் முதன்மை வாய்ந்த பல பிரச்சினைகள் ஓட்டங்கள் (flows) இருப்புகள் (stocks) இவைகளிடையே உள்ள தொடர்புடையவை, மறு மதிப்பீடுகளுக்கன்றி இருப்புகள் ஓட்டங்களினால் மட்டுமே மாறுகின்றன. புதிய உற்பத்திகளாலும், பழையன கழிதலாலும், மூலப் பொருள்களின் இருப்பு அதிகமாகிறது. சேமிப்புகள் மிகுவதால் (அல்லது செலவுகள் குறைவதாலும்) சேமிப்புகள் அதிகமாகின்றன. இவைகளினால் இருப்புகளுக்குக் கிட்டும் விளைவுகள் ஒன்றாயினும், இருப்புகள் வேகமாக அல்லது குறைவாக மாறுகின்றனவா என்பது இவைகளின் விளைவுகளை நிர்ணயிக்க மிகவும் அவசியம்.

இயக்க இயல் (dynamic) பேரியல் பொருளாதாரப் பகுத்தாய்வின் பல கடினமான பிரச்சினைகள் இக்கருத்தையே அடிப்படையாகக் கொண்டவை. (எடுத்துக் காட்டாக, முதலீட்டின் 'வேக வளர்ச்சி' கோட்பாடு (acceleration theory), இருப்பு, இவை தொடர்புடைய வட்டி கோட்பாடுகள், இதுபோல் ஓட்டம் இன்னும் பல பிரச்சினைகள் 'பதுக்குதல்' (hoarding) என்ற கருத்தின் அடிப்படைகளாம். இவைகளைப் பற்றிய கருத்துகளைப் பின்னர் அறிவிப்போம்.

## சார்பு தொடர்புகளும் முழுமைத் தொகுதி அளவுகளும் (Functional Relationships and Parameters)

பொருளியல் வல்லுநர்கள் கணக்கியல் மொழியையும். அதன் துணைக் கருவிகளையும், பெருவாரியாகப் பயன்படுத்துகிறார்கள். தங்கள் கருத்துக்களைத் தெளிவான முறையிலும், நல்ல முறையிலும் வெளியிட முடியும் என்பதை இவை பிரதிபலிக்கின்றன. ஆகவே, பழங்கால, குழம்பிய 'போக்குகள்' (tendencies) அல்லது 'காரணங்கள்' (causes) என்ற கருத்துகளை விடுத்து, மாறும் தன்மைகளிடையே உள்ள சார்புத் தொடர்பைப் (functional relationships) பெரிதும் ஆளுகிறார்கள்.

இரண்டு அல்லது அதற்கும் அதிகமான மாறிகளின் இடையே உள்ள மதிப்பு, அளவு, இரண்டும் ஓர் இணையற்ற முறையில் தொடர்புடையன என்பதைச் சார்புத் தொடர்பு விளக்குகிறது. ஒரு மாறி மாறினால், அதனால் மற்றதும் முன்னறியக்கூடிய ஒழுங்கான முறையில் மாறும். இரண்டு மாறும் தன்மையுடையவற்றின் சார்புத் தொடர்பை மட்டும் இங்கு எடுகோளாகக் கொள்வோம். நுண்ணியல் பொருளியல் விலைக் கோட்பாட்டில் (Micro Economic Price Theory) காணப்படும் தேவைப் பட்டியல் (demand schedule)

என்பது நமக்கெல்லாம் தெரிந்த ஒரு தொடர்பு. இது ஒரு பொருளின் விலைக்கும் அதன் தேவையளவுக்கும் இடையே உள்ள தொடர்பை உணர்த்துகிறது. தேவைப்பட்டியல் (demand schedule) கிட்டினால் (அதாவது சார்புத் தொடர்பு. (function) கிடைத்தால் பிறகு, ஒவ்வொரு விலைக்கு ஏற்பத் தேவைப்படும் பொருளின் அளவு அதனுடன் இணையற்ற முறையில் தொடர்புடையது. தேவையளவு என்பது விலையின் சார்புத் தொடர்பாகும்—இங்கு அது எதிர் விகித சார்புத் தொடர்புடையது ('Inverse' function), அதாவது விலை ஏறினால், பொருளின் தேவையளவு குறையும்; விலை இறங்கினால் தேவையளவு மிகும்.) இது நேர்விகித சார்புத் தொடர் புடையவற்றிற்கு நேர் மாறானது (நேர் விகித சார்புத் தொடர் பினில் மாறும் தன்மையன இரண்டும் ஒரே முகமாக மாறு கின்றன.)இதனை அளிப்பு அட்டவணை பலவற்றில் நன்கு காணலாம். ஒரு சார்புத் தொடர்பு காரண காரியத் தொடர்பை விளக்க லாம்; ஆனால், உண்மையில் காரண காரியத் தொடர்பை விளக்க வேண்டிய அவசியமில்லை. B என்பது மாறுவதால் A என்பது மாறுகிறது. நுண்ணியல் பொருளியலில் காணப்படும் தேவைப் பட்டியலில் இத்தகைய தொர்டர்பைப் பெருவாரியாகக் காண லாம். ஒரு பண்டத்திற்கு அங்காடியில் வழங்கப்படும் விலை, அப் பண்டத்தின் தேவையை நிர்ணயிக்கிறது; அல்லது அப்பண்டத்தின் தேவைக்குக் காரணமாகிறது.

சார்புத் தொடர்பு கருத்தைக் குறியீடுகளால் குறிப்பிடலாம்; $D=f(P)$ இதில் 'D' என்ற குறி ஒரு பொருளின் தேவையளவைக் குறிக்கிறது. 'P' என்ற குறி அதன் விலையைக் குறிக்கிறது. 'f' என்ற குறி, அதன் இடைத் தொடர் 'இதன் சார்பு' (function of) என்பதைக் குறிக்கிறது. [P என்ற குறி f என்ற குறியினால் பெருக் கப்பட்டது (multiplied by) என்பது பொருளன்று] ஒரே மாறியைப் பல சார்புத் தொடர்புகள் கொண்டு குறிக்க நேருமிடத்து, அவைகளில் சிலவற்றைக் 'கிரேக்க' (Greek) குறிகளாலும் அல்லது இடப்பக்கத்தில் காணும் குறியை மீண்டும் எழுதிக் கீழ்க்காணுமாறு குறிப்பிடலாம். $D=\phi(P)$ அல்லது $D=D(P)$ இவைகளும் (அதாவது $\phi$, D என்பவை) 'f' என்ற குறி உணர்த்தும் பொருளையே குறிக் கின்றன.

இத்தகைய எளிய இரட்டை மாறிகளுடைய (அதாவது விலை, அளவு) தேவைச் சார்புத் தொடர்பு, பல்வேறு தன்மைகளுள் இரண்டினை மட்டும் நம் கவனத்திற்கு உட்படுத்துகிறது. ஆனால், சில சமயங்களில், ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் தேவையளவு அதன் விலையை மட்டும் சாராமல், மற்றப் பொருள்களின் விலைகள்,

நுகர்வோர் ஆகியவைகளைச் சார்ந்து நிற்கும். அத்தொடர்பைக் கீழ்க்காணும் வகையில் வெளிப்படுத்தலாம். $D_1 = D$ ($P_1$, $P_2$, $P_3$ ......$P_n$ Y) இங்கு $D_1$ என்பது ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் தேவையளவைக் குறிக்கிறது. $P_1$ என்பது அதன் விலையாகும் $P_1P_2P_3...P_n$ என்பவை. மேல் குறிப்பிட்ட பண்டத்தின் விலையைப் பாதிக்கக் கூடிய மற்றப் பண்டங்களின் விலைகள். Y என்பது நுகர்வோரது வருமானத்தைக் குறிக்கிறது. வேறு பல மாறிகளை நாம் இங்குக் குறிப்பிடலாம். அவைகளில் ஒரு குறிப்பிட்ட பண்டத்தை உற்பத்தி செய்பவர் அல்லது வேறு பண்டங்களை உற்பத்தி செய்ப வர்கள் செய்யும் விளம்பரச் செலவுகள், இப்பண்டங்களின் தரம் (அதை அளவிட முடியுமானுல் அது மாறும் தன்மையுள்ளது ஆகிறது), வட்டி வீதம் போன்றவை குறிப்பிடத்தக்கவை. மேல் காணும் இரட்டை மாறிகளைத் (அவையாவன: விலை, பொருள் களின் அளவு ஆகியவை) தேவைச் சார்புத் தொடர்பில் பயன்படுத் துகையில், இவ்விரண்டின் மதிப்பு மாருமலிருக்கும்படி செய்து, ஒரு பண்டத்தின் விலை மாறினுல், அதனுல் அப்பண்டத்தின் தேவையளவு எங்ஙனம் மாறுகிறது என்பதில் நாம் நாட்டமுடையவர்களாகிருேம். இதனை 'மற்றவை மாருதிருப்ப' (ceteris paribus) என்ற தொடர் கொண்டு குறிப்பிடுகிருேம். மற்ற மாறி களில் ஏதேனும் ஒன்றின் மதிப்பு மா றினுல், விலைக்கும் தேவைக்கு மிடையே ஒரு புதுச் சார்புத் தொடர்பை நாம் பெறுவோம். மற்ற மாறிகளில் ஏதேனும் ஒன்றின் மதிப்பு மாறினுல், சாதாரண தேவை வளைகோடு (demand curve) இடம் பெயர்கிறது. தனிப்பட்ட சார்புத் தொடர்பை நாம் கவனிக்குமிடத்து ஒன்று நீங்கலாக மற்ற எல்லா மாறிகளின் மதிப்புகளைச் சமன்பாட்டின் (equation) வலப் புறத்தில் குறித்து, அவற்றின் மதிப்புகள் மாருதவை எனச் சொல்லுகிருேம். இவைகளை முழுமைத் தொகுதி அளவைகள் (parameters) அதாவது புறச் சூழ்நிலைகள்—அதாவது அவைகள் மாறுமியல்பு வாய்ந்தவைகள் எனக் கருதுகிருேம். ஆயினும், நம் பிரச்சினைக்குத் தீர்வுகாண இவை பயன்படாமையால், இவற்றில் நாம் அதிக கவனம் செலுத்துவதில்லை. $P_1$ அல்லது $P_2$ அல்லது Y அல்லது விளம்பரச் செலவுகள் மாறினுல், அல்லது மற்ற மாறும் தன்மையுள்ளவைகளின் மதிப்பு மாறினுல், ஒரு பண்டத்தின் தேவையளவு எங்ஙனம் பாதிக்கப்படுகிறது என்ற குறிப்பில் நாம் நாட்டமுடையவர்கள் ஆகிருேம். அதாவது மற்றவை மாரு திருப்ப ஒரு பண்டத்தின் தேவையளவு எங்ஙனம் பாதிக்கப்படு கிறது என்ற குறிப்பில் நாம் நாட்ட முடையவர்கள் ஆகிருேம். அதாவது மற்றவை மாருதிருப்ப ஒரு பண்டத்தின் தேவையளவு ($D_1$) எப்படிப் பாதிக்கிறது என்பது நம் கவனத்தைக் கவரும் நல்லதொரு கருத்து.

பல மாறிகளின் மதிப்புகளை உடனுக்குடன் நிர்ணயிக்கும் தொடர்புகள் கொண்ட அமைப்புடன் இந்தத் தேவைச் சார்புத் தொடர்பையும் மற்றச் சார்புத் தொடர்புகளையும் இணைக்குங்கால், 'மற்றவை மாறாதிருப்ப' என்ற தொடர் கொண்டு குறிப்பிட்ட சமன்பாட்டில் ஒரு மாறிக்காக இதைப் பொருத்த முடியாது. ஏனெனில், ஒரு சமன்பாட்டில் உள்ள மாறி மற்றச் சமன்பாட்டில் உண்மை மாறும் தன்மையதாக அமையப் பெறுவதால் அத் தொடர் கொண்டு குறிப்பிட முடியாது. (அதாவது அவைகளை உள்ளடக்கவோ (suppress) அல்லது வெளிச் சூழ்நிலைகள் அதாவது முழுமைத் தொகுதி அளவைகள் (parameters) எனக் கொள்ளவோ முடியாது. அதாவது மாறி என நாம் கருதும் ஒன்றை அதே சமயத்தில் கொடுக்கப்பட்ட ஒன்று எனக் கொள்ளுதல் தவறு. இதன் பொருள் நாம் இரண்டிற்கு மேற்பட்ட மாறும் தன்மையுள்ள சார்புத் தொடர்புகளை அடிக்கடி ஆராய வேண்டும் என்பதாகும்.

மாறி ஒன்று, அதன் மதிப்பிற்கு இரண்டிற்கு மேற்பட்ட மாறிகளைத் தழுவியிருக்கிறது என்ற கருத்து, பொருளியலைப் பயிலத் துவங்குபவர்கட்குச் சில இடையூறுகளை விளைவிக்கும். ஆயினும், சில சாதாரணப் பேரியல் பொருளியல் மாதிரிகளிலும் கூட இத்தகைய சார்புத் தொடர்புகள் ஆளப்படுகின்றன. எனவே, மாணவர்கள் இக்கருத்தைத் துவக்கத்திலேயே நன்கு வரப் படுத்தல் நலம்.

எண்கள் அடங்கிய ஒரு எளிய எடுகோள் இக்கருத்தை ஒருகால் நன்கு விளக்கலாம். தேவைச் சார்புத் தொடர்பினைப் பயன்படுத்தி, மூன்று மாறிகளில் மட்டும் கவனம் செலுத்தி, மற்றவைகள் புறச் சூழ்நிலைகள் (Parameters) எனக் கொண்டால்

$$D_1 = D(P_1, Y)$$

என்ற சமன்பாடு கிடைக்கும். இதில் காணும் குறிகள் முன்பு கூறியவைகளையே விளக்குகின்றன. ஒரு குறிப்பிட்ட சார்புத் தொடர்பின் தேர்ந்தெடுக்கப்பட்ட மதிப்புகள் கீழ்க்காணும் அட்டவணையில் (அட்டவணை 1–1) கொடுக்கப்பட்டுள்ளன. இந்த அட்டவணையில் தகவல்கள் இரண்டு வகையில் வரிசைப்படுத்தப் பட்டிருக்கின்றன. இதனால் மதிப்புகளை எளிதில் ஒப்பிட்டுப் பார்க்க முடியும்.

அட்டவணை 1 – 1.

மூன்று மாறும் தன்மை வாய்ந்தவைகளைக் கொண்ட கற்பிதமான தேவைச் சார்புத் தொடர்பு

(Table 1 – 1. Hypothetical Demand Function with the Variables)

| முதல் ஒழுங்குப்பாடு (First Arrangement) | | | | மாற்றி அமைக்கப்பட்ட அதே புள்ளி விவரங்கள் (Some data Rearranged) | | | |
|---|---|---|---|---|---|---|---|
| தொகுப்பு (Combination) | Y | $P_1$ | $D_1$ | தொகுப்பு (Combination) | Y | $P_1$ | $D_1$ |
| a | 100 | 10 | 50 | a | 100 | 10 | 50 |
| b | 100 | 9 | 54 | e | 200 | 10 | 80 |
| c | 100 | 8 | 59 | i | 300 | 10 | 100 |
| d | 100 | 7 | 65 | m | 400 | 10 | 110 |
| e | 200 | 10 | 80 | b | 100 | 9 | 54 |
| f | 200 | 9 | 86 | f | 200 | 9 | 86 |
| g | 200 | 8 | 94 | j | 300 | 9 | 109 |
| h | 200 | 7 | 104 | n | 400 | 9 | 120 |
| i | 300 | 10 | 100 | c | 100 | 8 | 59 |
| j | 300 | 9 | 109 | g | 200 | 8 | 94 |
| k | 300 | 8 | 121 | k | 300 | 8 | 121 |
| l | 300 | 7 | 136 | o | 400 | 8 | 133 |
| m | 400 | 10 | 110 | d | 100 | 7 | 65 |
| n | 400 | 9 | 120 | h | 200 | 7 | 104 |
| o | 400 | 8 | 133 | l | 300 | 7 | 136 |
| p | 400 | 7 | 149 | p | 400 | 7 | 149 |

வருவாய் மாறிலி (constant) என்றும், அது குறிப்பிட்ட ஒரு மட்டத்தில் உள்ளது என்றும் வைத்துக்கொண்டால், தேவையின் அளவு, அந்த வருமானத்திற்கு எதிர்விகித (inverse ratio) மாறும் தன்மையது என்பதை முதல் ஒழுங்குப்பாட்டின் வாயிலாகத் தெளிகிறோம். விலைகள் ஒரு குறிப்பிட்ட மட்டத்தில் உள்ளன என்றும் அந்த மட்டத்தில் அவை மாறிலிகள் என்றும் வைத்துக் கொண்டால், பின்னர் தேவை, வருவாயுடன், நேர் விகிதத் தொடர்புடையது என்பதை இரண்டாவது ஒழுங்குப்பாடு விளக்கு கிறது. குறிப்பிட்ட ஒரு விலை மாற்றம் பல வகை விளைவுகளை உண்டாக்குகிறது. இவ் விளைவுகள் வருமான மட்டத்திற்குத் தக்கவாறு அமையும். வருமானத்தை 100 என்று வைத்துக் கொண்டு, விலையை 10-ல் இருந்து 9 எனக் குறைத்தால் தேவை யளவு 4 அலகுகள் கூடும்; அதேபோல் வருமானம் 200 ஆனால் தேவையளவு 6 அலகுகள் அதிகமாகும்; வருமானம் 300 ஆனால் தேவையளவு 9 அலகுகள் மிகும்; வருமானம் 400 ஆனால் அளவு 10 அலகுகளாக மிஞ்சும். இதுபோல் வருமானத் தேவையின்

மாற்றங்கள் பல விலை மட்டங்களில் தேவை அளவைப் பல வகையில் பாதிக்கிறது.

ஆனால், உண்மையில் இத்தகைய நிலைகள் இருப்பதில்லை. தேவைச் சார்புத்தொடர்பு கீழ்க்காணும் வகையில் அமைந்துள்ளது என்று வைத்துக்கொள்வோம். அதாவது, $D = 70 - 5\ P_1 + \cdot 3Y$ என்று உள்ளது. இத் தேவைச் சார்புத் தொடர்புக் கேற்ற அட்டவணை களை அதாவது மேல் காணும் அட்டவணை போன்றவைகளை மாணவர்கள் கணக்கிடல் வேண்டும். அவ்வாறு கணக்கிடுகையில், வருமானம் எதுவாகிலும், விலை மாற்றம் 1 ஆனால் தேவை அளவு (எதிர் விகிதத்தில்) 5 அலகுகள் மாறும் என்பதை மாணவர்கள் உணர் வார்கள். அதுபோல், வருவாய் 100 என மாறினால் தேவை அளவு (நேர் விகிதத்தில்) 30 அலகுகள் மாறும் என்பதையும் மாணவர்கள் காண்பார்கள். (இவ் வெடுத்துக்காட்டு எல்லா வகை யிலும் எளிதான எடுத்துக்காட்டாகும். எண்கள் அடங்கிய பின்வரும் உதாரணங்கள் எல்லாம் இம்முறையைப் பின்பற்றி அமைந்தவைகள். ஆனால், உண்மையில் சார்புத் தொடர்புகள் இவ் வளவு எளிதானவைகள் என சொல்வதற்கில்லை.) $D = 100 - 5P_1$ என்ற மதிப்பை இத் தொடர்புபெறக் கணக்கிடல் வேண்டும். பின்னர் இத் தொடர்பு வருவாய் மாறிலி, அதாவது வெளிச் சூழ்நிலை எனக்கொண்டால், மற்றவை மாறாதிருப்ப விலை–தேவை தொடர்பாகும் (price-demand function) என்பதை மாணவர்கள் எளிதில் உணர்வார்கள். $Y = 200$ என்று ஆனால், இத் தேவை வளைகோடு (demand curve) இடம் பெயரும்; அதனால் $D_1 = 130 - 5\ P_1$ என்ற தொடர்பு கிட்டும் என்பதைத் தவிர $D_1 = 20 + 3Y$ என்ற தொடர்பு மற்றவை மாறாதிருப்ப, வருவாய்—தேவை தொடர்பா கும். இது விலையை மாறிலியாகக் கொண்டால் (அதாவது $P_1 = 100$) அல்லது அதனை வெளிச் சூழ்நிலை என்று கொண்டால், வருவாய்–தேவை தொடர்பு என்பதும் மாணவர்களுக்கு எளிதில் விளங்கும் கருத்தாகும்.

நாம் பெருவாரியாகப் பயன்படுத்தும் பொருளாதாரத் தொடர்புகள் நான்கு வகையாகும். அவை (1) நடத்தை ஒழுக்கக் கொள்கை (behavioural); அதாவது மக்கள் விருப்பங்களை எடுத்துக் காட்டுவன; (2) 'நிறுவனக் கட்டுப்பாடுகள்' (institutional restraints) அதாவது ஒழுங்கு முறை விதிகளின் செயல் முறையைக் குறிப்பன. (உதாரணமாக பாங்குகளின் ஒத்துக்குப் பணம் (reserves) வைப்புகளின் (deposits) குறிப்பிட்ட பின்னமாக இருத்தல் வேண்டும் என்பது போன்றவை); (3) தொழில் நுட்ப மானவை (technical); அதாவது நுணுக்கப் பயிற்சித் தொடர்பு களை உணர்த்துவன; (4) முற்றொருமைச் சமன்பாடுகள் (identities) அல்லது பொருள் வரையறைகள் (definitions) என்பன.

## பொருளாதார மாதிரிகள்
## (Economic Models)

பொருளாதார மாதிரி என்பது பல்வேறு பொருளாதார உறவுபாடுகளைக் குறிக்கும் ஓர் அமைப்பு. அது மாறி ஏதேனும் ஒன்றை உட்கருத்தாகக் கொண்டது. அவ் வுட்கருத்து, அவ் வமைப்பின் மற்ற மாறிகளுடன் தொடர்புடையது. எளிமையும் தெளிவுமுடைய நுண்ணியல் பொருளாதார மாதிரி, ஒரு பண்டத்தின் விலையையும் அப் பண்டத்தின் தேவை இவ் விரண்டையும் நிர்ணயிக்கப் பயன்படும், அளிப்பு (supply), தேவை (demand) ஆகிய இரண்டு தொடர்புகள் ஒருங்கே அமையப்பெற்றது. இறுதியில் அது கீழ்க்காணுமாறு அமையும்;

$$D = D\ (P) \ldots\ldots\ldots\ldots\ldots\ldots (1)$$
$$S = S\ (P) \ldots\ldots\ldots\ldots\ldots\ldots (2)$$
$$D = S \quad \ldots\ldots\ldots\ldots\ldots\ldots (3)$$

இவைகளில், D, S, ஆகிய இரு குறிகள் முறையே, தேவை, அளிப்பு இவைகளைக் குறிப்பிடுகின்றன. (இங்கு அளிப்பு, தேவை ஆகிய இரு சமன்பாடுகளில் விலை என்ற மாறும் தன்மையுடைய ஒன்று நீங்கலாக, மற்றவைகளை வேண்டுமென்றே மறைத்திருக்கிறோம். ஒரு பண்டத்தின் விலை, அளிப்பு, தேவை ஆகியவைகள் மாறுமிடத்து, மற்ற மாறுமியலமைப்பு வாய்ந்தவை மாறாமல் அப்படியே இருக்கின்றன என்பது பொருள்.)




படம் 1-1.

மேற்காட்டிய பொருளாதார மாதிரியைச் சமன்பாட்டின் வாயிலாக வெளிப்படுத்துவதை விட, அளிப்பு–தேவை விளக்கப் படத்தின் வாயிலாக விளக்குதல் சாலச் சிறந்தது. அது மேற்காணும் படம் 1 - 1 என்பதாகும்.

இவ் விளக்கப் படம் நாம் நன்கு தெரிந்துணர்ந்த ஒரு படம். இதன் வாயிலாக, வாங்குபவர், விற்பவர் ஆகிய இருவரது நடத்தைகளைச் சுருக்கி விளக்கலாம். தேவை வளைகோடு (demand curve), அளிப்பு வளைகோடு (supply curve) ஆகிய இரண்டும் 'X' என்று குறியிட்ட இடத்தில் ஒன்றை ஒன்று வெட்டுகிறது. இதனுல் அப்பொருளின் விலை நிர்ணயிக்கப்படுகிறது. படத்தின் வாயிலாகப் பொருளின் விலை $P_1$ என்று தெரிகிறது. அதுபோல் அப் பொருளின் அளிப்பளவு, தேவையளவு ஆகிய இரண்டும் முறையே $S_0$ $D_0$ என்பவைகளால் தெரிகிறது. இவ் விளக்கப் படத்திற்கு மேல் காட்டிய சமன்பாடு (equation) (*3*) பயன்பட்டது.

விளக்கப் படம் விளக்குமளவிற்குச் சமன்பாடு விளக்கவேண்டுமென்ருல், தேவை, அளிப்பு அகிய இரண்டு சார்புத் தொடர்புகளைக் குறிக்கும் வளைகோடுகளின் 'சரிவுகளை' (slopes) விளக்குதல் நன்று. குறிப்பாக, அளிப்பின் அளவு விலையுடன் நேர் விகிதத் தொடர்புடையது என்பதையும், தேவையின் அளவு விலையுடன் எதிர் விகிதத்தொடர்புடையது என்பதையும் விளக்கவேண்டும். எனவே, அளிப்புத் தொடர்பு உயர்ந்து செல்லும் ஒரு தொடர்பு என்பதும், அதுபோல் தேவைத் தொடர்பு குறைந்து செல்லும் தன்மை வாய்ந்தது என்பதையும் கீழ்க்காணும் குறிகொண்டு விளக்கலாம்.

$$\frac{dS}{dP} > 0 \; ; \quad \frac{dD}{dP} < 0^1$$

இவ் விளக்கப் படத்தின் வாயிலாக, அல்லது (சரிவுகளின் அளவுகளைச் சேர்த்த) சமன்பாட்டின் வாயிலாக இத் தொடர்புகள் எந்த அங்காடியைச் சேர்ந்தவை என்பதை அறிய முடியாது. மேலும், இரு அச்சுக்களிலும் (axis) அலகுகள் (units) குறிக்கப் படாமையால், வாங்கும் பண்டங்கள் எந்த அளவில் தேவைப்படுகின்றன என்பதையும் உணர முடியாது. ஆகவே, சமன்பாடுகளும் விளக்கங்களும் தெளிவற்றவையாகின்றன. ஆகவே, பொருளாதார மாதிரிகளின் பயன் யாது? என்ற ஐயப்பாடு எழுவது இயல்பு. நம் நோக்கங்களை (சரிவுகளைப்பற்றிய, விவரங்களைத் தவிர) விளக்கப்

1 $\frac{dS}{dP}$ என்ற குறி அளிப்பு வளைகோட்டின் சாய்வைக் குறிக்கிறது. '$>0$' என்ற குறி உயர்ந்த மதிப்பைப் பெற்றது என்பதைக் குறிக்கிறது. எனவே, அளிப்பு வளைகோடு மேல்நோக்கும் சரிவுத்தன்மையுடைய வளைகோடாகும். அதுபோல் $\frac{dD}{dP}$ என்பது தேவை வளைகோட்டின் சாய்வைக் குறிக்கிறது. '$< 0$' என்பது குறைந்த மதிப்பைப் பெற்றுள்ளது என்பதைக் குறிக்கிறது. எனவே, தேவை வளைகோடு கீழ்நோக்கிச் செல்லும் சரிவுத் தன்மையுடைய வளைகோடாகும்.

படத்தின் வாயிலாக வெளிப்படுத்த இயலாமையால், ஒரு பொருளின் விலை, அப் பொருளின் அளவுகளைப் பற்றிய தகவல்களைப் படம் கொண்டு முன்னறிவிக்க முடியாமல் போகிறது. ஆயினும், அளிப்பு, (அளிப்போர்களுக்கு இடர் விளைவிக்கும் காரணத்தால், அல்லது உள்ள வசதிகளைக் கொண்டு உற்பத்தி செய்யும் மற்றொரு பொருளின் விலை குறைந்த காரணத்தால்)', குறைவு பட்டால் மற்றவை மாறாமலிருக்க, அப் பொருளின் தேவை குறைவதோடு அல்லாமல் விலையும் அதிகரிக்கும், என்பதைக் கிடைத்த விவரங்களைக் கொண்டு கூறலாம்; அதுபோல், ஒரு பண்டத்தின்மேல் வரி விதிக்கப்பட்டால், அப் பண்டத்தின் விலை, வரி உள்பட உயர்வதோடு அல்லாமல், விற்பவர்களின் நிகர விற்பனை ஊதியம் குறையும். இதனுடன் வாங்கும் பண்டங்களின் அளவும் குறையும் எனச் சொல்லலாம். பண்டங்கள் விற்கப்படும் அங்காடிகளைப் பற்றிய தகவல்கள்—அளிப்பு வளை கோட்டின் மேல்நோக்குச் சரிவுத் தன்மை குறைந்து செல்கிறது; அல்லது தேவை வளைகோட்டின் கீழ்நோக்குச் சரிவுத் தன்மை கூர்மையானது என்பவை கிட்டினால், மேலும் சில விளைவுகளை முன்னறிவிக்கலாம். இவைகளுக்கு மேலான தகவல்கள்—அச்சுகளுக்கு அலகுகள் கொடுக்கப்பட்டால், அல்லது எண்கள் அடங்கிய சமன்பாடுகள் போன்றவை—கிட்டினால், இதைவிடச் சிறந்த விவரங்களை முன்னறிவிக்க முடியும்.

நடவடிக்கைப் படிவங்களைப் பற்றிய தகவல்கள், நுணுக்காய்வுத் தகவல்கள், அல்லது நிறுவனங்களைப் பற்றிய தகவல்கள்; நமக்குத் தெரிந்தால், அல்லது தெரியும் என நாம் நினைத்தால், இவைகளைப் பயன்படுத்திச் சில விளைவுகளை முன்னறிவிக்கப் பொருளாதார மாதிரிகள் பயன்படுகின்றன. இம் முன்னறிக்கைகள் கிட்டிய தகவல்களை ஒட்டியவை. எனவே, அவை சரியானவைகளாக இல்லாவிட்டாலும், கிட்டிய தகவல்களை ஏறத்தாழ ஒட்டி அமைந்த முன்னறிக்கைகள். எனவே, விளக்கப் படங்களையும், சமன்பாடுகளையும் விடுத்து, அறிந்த உண்மைகளைச் சொல் அளவிலும் வெளியிட முடியுமா? என்ற ஐயப்பாடு எழலாம். விளக்கப் படங்களும், சமன்பாடுகளும், மாறிகளின் தொடர்பை, சொற்களை விடச் சிறந்த, சுருக்கமான முறையில் வெளிப்படுத்தப் பயன்படுதலால், அவைகளை நாம் பெரிதும் பயன்படுத்துகிறோம்.

பொருளாதார மாதிரிகள் பயனுள்ளனவாய் விளங்க, அவை முழுமையானவைகளாக இருத்தல் வேண்டும். எத்துணைத்

தெரியாத அளவுகள் (unknowns) இருக்கின்றனவோ, அத்துணைச் சமன்பாடுகள் இருக்கவேண்டும் என்ற கருத்தைக் கணக்கியல் மொழி வாயிலாக நன்கு வெளிப்படுத்தலாம். மேற்சொன்ன சமன் பாடுகள் (1), (3) ஆகிய இவ் விரண்டையும் வைத்து, விலை, தேவைப் பொருளின் அளவு மாற்றங்கள், (அவைகளின் திசைகள்) ஆகியவை களைப் பற்றிய தகவல்களை அறிவிக்க முடியாது.

பொருளாதார மாதிரிகள், பொருளாதாரக் கோட்பாட்டின் சுருக்கமான அறிக்கைகளாகும். கோட்பாடு என்பது, அனுபவத் தால் அல்லது சில நிகழ்ச்சிகளைக் கூர்ந்து கவனிப்பதால் ஏற்படும் விளைவுகளின் தொகுதியாகும். கோதுமை என்ற பண்டத்தை ஆயிரக்கணக்கான விவசாயிகள் உற்பத்தி செய்து நமக்கு அளிக்கி ருர்கள். இவர்களைப் பற்றி, அல்லது இவர்களது ஆக்கவேலையைப் பற்றிப் பல இயல்புகளை நாம் காண்கிருேம். உதாரணமாக, அவர்கள் கண்களின் நிறம், அவர்களது குழந்தைகளின் எண்ணிக்கைகள், அவர்களது ஆக்க நுணுக்கங்கள், பயிரிடும் நிலத்தின் பரப்புப்போன்ற பல இயல்புகளைக் காண்கிருேம். ஆனுல், இவைகளிலிருந்து நமக்குத் தேவையான மிகச் சிறந்த ஒரு இயல்பை மட்டும்—அதாவது கோதுமையின் விலை உயர்ந்தால், எல்லா விவசாயிகளும், அதைப் பயிரிடுவர் என்பதைத் தனிப்படுத்தி, அதனை நன்கு ஆராய்கிருேம். மற்றவைகள் தேவைப் படாதவை எனத் தள்ளி விடுகிருேம். இதனுல் நாம் பெற்ற கோதுமை அளிப்பை ஒரு சார்புத் தொடர்பாகச் சுருக்கி விடுகிருேம். இவ் வியல்புகளின் பொதுத் தன்மை பெரும்பாலும் தவருனவைகளாக வும், முழுமைப் பெருதவைகளாகவும் அமைகின்றன. இருப்பி னும், தவருன அல்லது முற்றுப் பெருத கருத்துக்கும், முழுமை வாய்ந்த மிகச்சிறந்த கோட்பாட்டினுக்குமுள்ள வேறுபாட்டை நன்கு எடுத்துக் காட்டுகிறது.

பொருளாதார மாதிரிகளைப் பற்றியும், பொருளாதாரக் கோட்பாட்டைப் பற்றியும் மேலே அதிகம் கூறலாம். (கூறியவை குறைவாக இருப்பினும் அவை வாதிக்கத் தக்கவை). பொருளா தார மாதிரிகள் எல்லாவற்றைப் பற்றியும் பொதுப்படையாகப் பேசுவதைவிடச் சில குறிப்பிட்ட பொருளாதார மாதிரிகளை விளக்குதல் சாலச் சிறந்ததாகும். அவ்வாறு விளக்குமிடத்து அவைகளைப் பற்றிய பல கருத்துகள் மேலும் புலனுகும். அவற்றை நன்கு ஆராய்ந்து பொருளாதார மாதிரிகளைச் செம்மைப் படுத்தலாம்.

## சமநிலை, நிலையியல், இயக்கவியல்
## [Equilibrium, Statics, Dynamics]

கடந்த பகுதியில் கண்ட அங்காடி மாதிரியை விளக்கப் பயன் பட்ட சமன்பாடு மூன்று என்பது சமநிலைக் (equilibrium) கருத்தை விளக்கியது. அக்கருத்து, அளிப்பு (supply), தேவை (demand) ஆகிய இவ்விரண்டின் அளவுகள் ஒன்றுக் கொன்று சமமானது என்பதைத் தெளிவுபடுத்தியது. 'சமநிலை' என்ற கருத்தைச் சற்று விரிவாக ஆராய்வோம்.

பொருளாதாரத்தைக் கற்க முற்படும் மாணவர் அனைவர்க்கும் பொதுவாகத் தெளிந்த ஒரு கருத்து 'சமநிலை' என்ற கருத்தாகும். ஓர் அமைப்பில் குறிப்பான சில மாறிகள் (variables) மாறும விருப்பினும், அவைகள் மாறி, அக்குறிப்பிட்ட மாறியின் மதிப்பை மீண்டும் மாற்றக்கூடிய சூழ்நிலையை உருவாக்காமலிருந்தாலும், அவ் வமைப்பு, சமநிலையில் உள்ளது எனப் பொருள்படும். (மாறுதற்குரிய சூழ்நிலைகள் இல்லை எனச் சொல்வதைவிட, அவை சமநிலையில் உள்ளன எனக் கூறுவது சாலப் பொருந்தும்). ஒரு பண்டத்தின் விலை $P_0$ என்றிருந்தால், விற்பவர் அனைவரும் விற்க விரும்பும் பொருள் அனைத்தையும் அதே விலைக்கு விற்க அங்காடி கிடைக்கும்; அதுபோல் வாங்குபவர் அனைவரும் தமக்குத் தேவையான பண்டங்களை அதே விலைக்கு வழங்க அளிப்போர்கள்(suppliers) கிடைப்பார்கள். இவை இரண்டும் உடனுக்குடன் நிகழ்பவை. இத்தகைய நிலை வேறு எந்த விலை மட்டத்திலும் கிட்டாது. எனவே $P_0$ என்ற விலை வாங்குவோர், விற்போர், ஆகிய இருவருக்கும் மனநிறைவை விளைவிக்கிறது. ஆகவே, இவர்களில் எவரும் விலையை மாற்றமாட்டார்கள்.—அதாவது உயர்ந்த விலை அல்லது குறைந்த விலையை வழங்கவோ, கொடுக்கவோ மாட்டார்கள். சமன்பாடுகள், (1) (2) ஆகியவைகளில் கண்ட நிலைகள் உள்ளவரை $P_0$ என்ற விலை வழக்கில் மாறுமலிருக்கும்.

சமநிலைப் பகுப்பாய்வு சிந்தனைக்குரியதொரு கருவியாகப் பயன்பட, சமநிலைத்தன்மைகளை எய்தத் தேவையில்லை. புறச் சூழ்நிலைக்கு ஏற்ப, பொருளியல் மாறும் தன்மைகள் சில படிவங்களைப் பெறுகின்றன. அப் படிவங்களை அவை ஒரு முறை பெற்று விட்டால், பிறகு மாறுவதற்கு ஏற்ற போக்கினை அவை வெளிக் காட்ட மாட்டா. ஒரு பொருளாதார அமைப்பு, சமநிலையில் இல்லாதபோது அதனைச் சமநிலைக்குத் தள்ளத் தக்க விசைகள் அவ் வமைப்பிலோ (அல்லது குறிப்பிட்ட ஒரு அங்காடியிலோ) உள்ளது என்று வைத்துக் கொண்டால், சமநிலையின் விளக்கம்-

என்பது, சமநிலையை அடைய மாறும் தன்மையன எவ்வாறு முற்படுகின்றன என்பதாகும். சமநிலையை நிர்ணயிக்கும் புறச் சூழ்நிலைகள் எப்பொழுதும் மாறும் தன்மையுடையனவாதலால், சமநிலை எய்தப்படுவதில்லை. ஆயினும், மாறிகள் குறித்த ஒரு காலத்தில் சமநிலையை எய்த எவ்வாறு முற்படுகின்றன என்பதை ஆராய்வது பயனுள்ளதாகும். ஆனால், அவை சமநிலை மதிப்புகளைப் பெறுகின்றனவா, இல்லையா, என்பதை எளிதில் நிர்ணயிக்க முடியாது.

சமனறு நிலைகள் மீண்டும் மாற்றத்தை உண்டாக்கத் தக்க சூழ்நிலைகளை உருவாக்குகின்றன; அத்தகைய மாற்றங்கள் சமநிலையை அடையும் பாதையில் அமையாமல் போகலாம். இத்தகைய சூழ்நிலையிலும் ஓர் அமைப்புச் சமநிலையை எய்தினால், அது மீண்டும் ஏற்படும் மாற்றங்களைத் தடுத்து நிறுத்தும்.

சமநிலைகள் பல வகைப்படும். பொருளாதார மாறிகள் இருப்பு (stock), ஓட்டம் (flow) ஆகிய இரு இனங்களைச் சார்ந்ததால், 'முழுச் சமநிலை' (full equilibrium) என்பது, இருப்புகள், ஓட்டங்கள் ஆகிய இவ்விரண்டும் மாறாமலிருக்கும் நிலையைக் குறிக்கும். இருப்புகளுடன் இணையும் நிகர் ஓட்டங்களின் மதிப்பு சமநிலையில் சுன்னம் ஆகிறது. (எல்லா ஓட்டங்களும் சுன்னம் ('O') என்ற மதிப்பைப் பெறும் எனச் சொல்வதற்கில்லை. உருக்காலையில் உள்ள இரும்புக்கனியின் மொத்த இருப்பு, அது பயன்படுமளவிற்கு இருப்புடன் சேர்க்கப்படுகிறமையால், அதன் மொத்த இருப்பு ஒரு நிலையில் இருக்கும்.) ஒரு பொருளாதார அமைப்பு முழுமைக்கும் பயன்படும் முழுச்சமநிலை, தொன்மைவாய்ந்த 'தேக்க நிலைத் தன்மை' (stationary state) என்பதாகும். அத்தகைய அமைப்பில், அதன் முதல் (capital) இருப்பை, நிகர் சுன்னம் சேமிப்பு, முதலீடு இவைகள் மாறாமல் வைக்கின்றன. இத்தகைய முழுச்சமநிலை, அல்லது தேக்கச் சமநிலை என்பது பொருளாதார சமுதாயத்திற்கு ஒவ்வாத கருத்தாகும். எனவே, அந்நிலையின் தன்மைகள் அனைத்தும் விவாதிக்கப்படுகின்றன. இருப்பினும் இந்நிலை ஒன்றுதான் முழுச் சமநிலை என்று தெரிந்துகொள்ளல் அவசியம். அவ்வமைப்பில், சேமிப்பு, முதலீடு, இவைகள் உயர்ந்துகொண்டு போகும் வரை, அவ்வமைப்பின் 'முதல்' இருப்பில் (capital stock) மாற்றங்கள் நேரிடும். இம் மாற்றங்கள் ஓட்டங்களின் வீதத்தைப் பாதிக்கும்.

குறுங்கால ஓட்டச் சமநிலை என்பது, பேரியல் பொருளியல் சமநிலைக் கோட்பாட்டிற்கு உடனடியாகப் பயன்படும் நல்லதொரு

கருத்து. இதில் ஓட்டங்கள் (இருப்புகளல்ல) ஒரே நிலையானவை. அவை (குறுங்காலத்தில்) மாறும் போக்கை, அல்லது மாற்றுவதற்கான போக்கை மேற்கொள்ள மாட்டா. இருப்புகளுக்கு, மிகுந்த அல்லது குறைந்த நிகர் மாற்றத்தை, ஓட்டச் சமநிலை தருமேயானால், இருப்பு ஓட்டக் கூட்டுச் சமநிலையை (stock plus flow equilibrium) எய்த முடியாது. இருப்புகளின் வீக்கமும், சுருக்கமும், ஓட்டங்கள் பின்னர் மாறுவதற்கான வித்துக்களைக் கொண்டவை. ஆண்டுதோறும் நிகழும் இருப்புகளின் கூட்டு (அவைகளின் மொத்த அளவுடன் ஒப்பிடுகையில்) மிகவும் குறுகிக் காணப்படுவதால், குறுங்காலப் பகுப்பாய்வில் அவற்றைக் கவனியாமல் விட்டுவிடுகிறோம். ஏனெனில், அம்மாற்றங்களின் விளைவுகள் நீண்டகாலத்திற்குப் பின்னர் வெளிப்படுகின்றன.[1]

இவ்விரண்டு கருத்துகளையும் வேறு துறைக்குப் பொருந்தும் வகையில் உதாரணம் காட்டி விளக்கலாம். ஊர்தி ஒன்றின் எரிபொருள் (gasoline) இருப்பு வீதத்திற்குத் தக்கவாறு (வேக விசை முடுக்கியின் அழுக்கத்திற்குத் தக்கவாறு) அவ் வண்டியின் வேகம் ஒரு வகை சமநிலையை அடைகிறது. விசைப்பெருக்கியின் அமுக்கம் மாறினால் அது வண்டியின் வேகத்தைப் புது சமநிலையை அடைய உடனே தூண்டாது. ஆனால், வண்டியின் வேகம் புது சமநிலையை விரைவில் அடையும். அத்தகைய புது சமநிலையை அடைந்தால் ஊர்தியின் வேகம் குறுங்கால சமநிலையை அடைகிறது. அதிக வேகமாக வண்டியை ஓட்டிச் சென்றால் வண்டியில் உள்ள எரிபொருள் இருப்பு (மீண்டும் நிரப்பப்படாமலிருந்தால் கூடிய சீக்கிரத்தில் தீர்ந்துவிடும். பின்னர் நெடுங்காலச் சமநிலையாகிய-சுன்னம் வேகத்தை (zero speed) அடையும். குறுங்கால சமநிலை, நெடுங்கால சமநிலை ஆகிய இரண்டும் தனித்தியங்கும் திறனற்றவைகளாயினும், பயனுள்ள கருத்துகள்.

பேரியல் பொருளியல் பகுப்பாய்வு இலக்கியங்களில் 'அசையும் சமநிலை' (moving equilibrium) என்ற மூன்றாவது கருத்திற்கு மிகுந்த கவனம் செலுத்துகின்றன; இக் கருத்தில் இருப்புகள் வளரும் தன்மையன. அவைகளின் வளர்ச்சியும், நடப்பு ஓட்டங்களின் வளர்ச்சியும் ஒரே விகிதத்தில் அமைகின்றன. எனவே, இக் கருத்துப்படி எல்லா இருப்பு-ஓட்ட விகிதாசாரங்கள் மாறிலிகள். இருப்புகளுடன் ஏற்படும் சேர்க்கை நடப்பு ஓட்டங்களை

1 இந்த எடுகோள் பொறித் தளவாடங்களுக்குப் (Plant and equipment) பொருந்தும். ஆனால், இருப்புப் பட்டியலுக்குப் (inventories) பொருந்தாது. வர்த்தகச் சுழல் பகுப்பாய்வு (business cycle analysis), இருப்புப் பட்டியல்களின் மாற்றங்களை இந்த எடுகோள் புறக்கணிக்க முடியாது.

இறுதியாக பாதிக்கும் போக்கை வெளிக்காட்டுவதில்லை. இதனை 'விகிதாசார வளர்ச்சி' (Proportional growth) எனக் குறிப்பிடலாம். விகிதாசார வளர்ச்சி, விகிதாசாரமற்ற வளர்ச்சிகளைக் கொண்ட பொருளாதார மாதிரிகள் சிலவற்றைப் பின்வரும் அதிகாரங்களில் காண்போம்.

சமநிலைத் தன்மைகளை ஆராயும் பொருளாதாரப் பகுப்பாய் வின் பகுதியை 'நிலையியல்' (statics) எனக் குறிப்பிடலாம். நிலையிய லின் பலவகைப் பகுதிகளில், 'ஒப்பீட்டு நிலையியல்' (comparative statics) என்ற பகுதி மிகவும் பயனுள்ள பகுதியாகும். இப் பகுதி இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட புறச்சூழ்நிலைகளுக்கு ஏற்ப அமைந்துள்ள சமநிலைத் தன்மைகளை ஒப்பிடுகிறது. முன்பத்தியில் கண்ட நமது அளிப்புத் தேவைப்பயிற்சி உறுதியாக இப் பகுதியைச் சார்ந்தது எனக் கூறலாம்.

நிலையியல் பகுப்பாய்வு—எளிய வகையைச் சார்ந்ததாயினும் அல்லது அவைகளின் ஒப்பீட்டு வகையைச் சார்ந்ததாயினும் பகுப்பாய்வு, சமநிலைத் தன்மைகளை மட்டும் உன்னிப்பாகக் கவனிக்கிறது. சமநிலைத் தன்மையை அடையத் தேவைப்படும் கால அளவை அது கவனிப்பதில்லை; அல்லது மாறிகள் சமநிலையை அடையப் பயன்படுத்தும் பாதைகளையும் அது கவனிப்பதில்லை. இது, 'இயக்க இயல்' (dynamics) பகுப்பாய்வின் தலை சிறந்த நோக்கமாக அமைகிறது.

'இயக்க இயல்' (dynamics), சமனறு நிலைகள் (disequilibrium), மாற்றம் (change) இவைகளை ஆராய்கிறது. இச்சமனறு நிலைகள், குறுங்கால (ஓட்ட) சமநிலையின்மையின் விளைவா, அல்லது நெடுங்கால (இருப்பும் ஓட்டமும்) சமநிலையில் இல்லாத அமைப்பின் அசைவுகளின் விளைவா, என்பதை ஆராயாமல், அசைவு, மாற்றம், இவைகளைக் குறிப்பாக ஆராய்வது இயக்க இயல் பகுப்பாய்வின் சிறந்த கடமையாகும். பொருளாதார மாறிகள் (economic variables) ஒரு சமநிலையிலிருந்து, மற்றொரு சமநிலைக்கு மாறும் அசைவுகளை ஆராய்வது, இயக்க இயலின் கடமையாகும் என்று மிகச் சுருக்கமாகக் கூறலாம். மிக விரிந்த, குறிப்பிடத்தக்க இயக்க இயல், ஒருபோதும் சமநிலையில் இல்லாத ஓர் அமைப்பின் அசைவுகளையும் உள்ளடக்கியதாகும். அவ் வமைப்பு சமநிலையில் இல்லாமைக்குப் பல காரணங்கள் காட்டலாம். ஒன்று, அவ் வமைப்பில் சமநிலையில்லாமல் இருக்கலாம்; அல்லது அவ் வமைப்பின் அசைவுகள் சமநிலை திசைநோக்கி அமையாமல் இருக்கலாம்; அல்லது ஆக்க நுணுக்கங்கள், மக்கள்

தொகை, நுகர்வோர் விருப்பங்கள், அரசின் செயல்கள் போன்ற பல குறிப்பிடத்தக்க வெளிப்புறச் சூழ்நிலைகளின் தொடர்ச்சியான மாற்றங்களாலும் ஏற்படலாம். 'வர்த்தகச்சுழல்' (business cycle) ஆராய்ச்சி இத்தகைய விரிந்த இயக்க இயல் வகையைச் சாரும். ஆனால், விகிதாசார வளர்ச்சியின் அசையும் சமநிலை (moving equilibrium of proportional growth) ஆராய்ச்சியை நிலையியல் என்பதா அல்லது இயக்க இயல் என்பதா? இது அவரவர் விருப்பத்திற்கு ஏற்றவாறு அமையும்.

இயக்க இயலுக்கு மிக்க எளிய நடை பொருந்திய இலக்கணம் ஒன்று உண்டு. இயக்க இயல், காலப்போக்கில் நிலையுள்ள தொடர்புகளை உள்ளடக்கிய அமைப்புகளை அல்லது மாதிரிகளை ஆராய்கிறது என்பது இவ் விலக்கணத்தின் பிழிவு. அத்தொடர்புகளில் உள்ள ஒரு மாறியின் இன்றைய மதிப்பு மற்ற மாறிகளின் உடனுக்குடன் அமையும் மதிப்புகளை மட்டும் சாராமல், அதற்குப் பதிலாக அதனுடன் சேர்ந்த மற்ற மாறிகளின் முந்தைய மதிப்பையும் சார்ந்து நிற்கிறது. (சில சமயங்களில் ஒரே மாறியின் முந்தைய மதிப்பைச் சார்ந்து நிற்கும்.) இதற்குப் பல உதாரணங்கள் காட்டலாம். காலப் பின்னீடுகளை (time lags) உள்ளடக்கிய நடத்தைப் படிவங்கள் ஓர் உதாரணம். (நான் இன்று செய்யும் முதலீடுகளின் செலவு நேற்றைய வட்டி வீத மதிப்பைச் சார்ந்து நிற்கும்). அல்லது சில பழகும் தன்மைகளை (habituations) உதாரணம் காட்டலாம். (எனது இன்றைய நுகர்ச்சிச் செலவு மற்றவைகளைவிட, குறிப்பாக எனது நேற்றைய நுகர்ச்சி மட்டத்தை ஒட்டியதாகும்). அல்லது குவிப்புகளை (cumulants) இதற்கு உதாரணம் காட்டலாம். (எனது இன்றைய சேமிப்புகள், எனது கடந்தகால சேமிப்பு, சேமிப்பின்மை ஆகியவைகளின் மொத்த குவியலை ஒட்டி அமையும்)[1] இத் தொடர்புகளில் ஒன்று அல்லது அதற்கும் அதிகமான தொடர்புகளைக் கொண்ட அமைப்பை இயக்க இயல் அமைப்பு எனக் கூறலாம்.

இயக்க இயல் அமைப்புகளில் ஒரு தனிவகைப்பட்ட நிலையுண்டு என்பது உறுதி. அந்த நிலை கொண்ட அமைப்பில் மாற்றம் இருக்காது. அல்லது சமநிலையும் இருக்காது. இன்றைய மதிப்புகளை நிர்ணயிக்க முந்தைய மதிப்புகளைப் பயன்படுத்துகிறோம். இவைகளின் விளைவும், நேற்று முந்திய நாளின் விளைவுகளை ஒக்கும். அதுபோல் இன்றைய மதிப்புகள் அதே விளைவுகளை நாளைக்கும்

1 இத்தகைய தொடர்புகளில் ஏதேனும் ஒன்றை அல்லது வேறு பல இயக்க இயல் தொடர்புகளைக் காலப் பகுப்பாய்வினைக் கொண்டு அமைக்கலாம். ஆனால், இவைகளில் ஒன்றையும் அவ்வாறு அமைக்கவேண்டியதில்லை.

ஈர்க்கும். இதுபோல் போய்கொண்டே இருக்கும்—இவைகளினுல் ஏற்படும் சமநிலை கிடையாது. ஆகவே, சமநிலைத் தன்மையை இயக்க இயல் பகுப்பாய்வு கொண்டு ஆராய்தல் மிகவும் எளி தானது.

உடனுக்குடன் நிகழும் காரண காரியத் தொடர்புகளை ஒருங்கே பெற்ற அமைப்புகளின் பகுப்பாய்வை மட்டும், நிலையியல் உள்ளடக்கியது என்ற கருத்து, இயக்க இயலுக்கு நாம் தந்த இலக் கணத்தின் வழிவந்தது. நிலையியலின் ஆராய்ச்சியை இவ்வாறு வரையறுப்பது தேவையற்றது. ஏனெனில், சமநிலை காலப் போக்கில் மாருதது என்ருல், பின் அச்சமநிலை உள்ளவரை தொடர்புகளின் கால அளவைகளைப் புறக்கணிக்கலாம். எடுத்துக் காட்டாக வட்டி வீதம் மாறிலியாக உள்ளவரை எனது முதலீடு இன்றைய வட்டி வீதத்தைவிட நேற்றைய வட்டி வீதத்தை ஒட்டி அமைந்தது என்பதில் பொருளில்லை. ஏனெனில், நேற்றைய வட்டி வீதம் இன்றைய வட்டி வீதம் இரண்டும் ஒன்றுதான். (தேதியில் லாத) முதலீடு, (தேதியில்லாத) வட்டிவீதத்தை ஒட்டி அமையும் என்று எளிதில் கூறலாம். இதுபோல் பழக்கங்கள் தனித்து இயங்கு வதில்லை. ஆகவே, அவைகளைப் புறக்கணிக்கலாம். சமநிலைகளை மட்டும் ஆராய வரையறுக்கப்பட்ட பகுப்பாய்வில் காலம் என்ற கருத்து வெளியேறுகிறது. நிலையியலைப் பயனுடையதாக நமது தொடர்புகள் காலப்போக்கில் ஒரு நிலையுள்ளனவாய் இருக்கச் செய்தல் வேண்டும் என்பதை நாம் ஒப்புக்கொள்ளவேண்டும். ஆனுல், சில தொடர்புகள் கால அளவில் ஒரே நிலையுள்ளனவாய் அமைந்துள்ளன என்பதை, சமனறு நிலை, மாற்றம் ஆகியவைகளை ஆராயுமிடத்து நாம் மறக்க முடியாது. இதனுல் சமனறு நிலை, மாற்றம் ஆகிய இரண்டும் முற்ருெருமையான கருத்துக்கள் என நாம் தொடக்கத்தில் குறிப்பிட்டது மீண்டும் வலியுறுத்தப் படுகிறது.

சமநிலைகளின் ஆராய்ச்சியில் மட்டும் கவனம் செலுத்தினுல், நிலையுள்ள சமநிலைகள் யாவை, நிலையற்ற சமநிலைகள் (unstable equilibrium) யாவை என்பதை எளிதில் வேறுபடுத்தி விளக்க முடியாது என்பது தெளிவு. இவ்வாறு இல்லையேல், நிலையியல் தோராயத்தை வெளிப்படுத்துவதற்குப் பெரிதும் பயன்படும் சிறந்ததொரு கருவி எனச் சொல்லலாம்—அவ்வாறு சொல்கையில், சமநிலையை எய்தும் பாதையில் என்ன நடக்கிறது என்பதில் நாம் நாட்டம் கொள்ளாமல், முடிவில் என்ன நடக்கிறது என்பதில் மட்டும் நாம் நாட்டம் உடையவர்கள் ஆகிருேம் என்று சொல்ல லாம். ஆயினும் எளிதில் நம்பத்தக்க அல்லது சரியாகத் தோற்ற

மளிக்கின்ற நிலையற்ற மாதிரிகளை ஏற்படுத்த முடியும் என்பதாலும், அல்லது அமைப்புகள் ஏதோ ஒரு வகையில் நிலையுள்ளவை (அவைகளின் அமைப்பு கலைக்கப்பட்டால், மீண்டும் அவ்வமைப்பைப் பெற நீண்டகாலம் ஆகிறது) என்பதாலும், உண்மை உலகில் காணப்படும் சில அசைவுகள் இம்மாதிரிகளின் அசைவுகளுடன் பொருந்தி அமைந்திருப்பதாலும், நிலையியல் முறை முழுமையற்ற முறை என்றும் பழுதுள்ள கருவியென்றும் நாம் இப்பொழுது நினைக்கிறோம்.

நிலையியல் எளியது என்பதாலும், அது இயக்க இயலைக் கற்க வசதியுள்ள அவசியமான கருவி என்பதாலும் இந் நூல் நிலையியல் முறையைப் பெருவாரியாக ஆள்கிறது. ஆயினும் இயக்க இயல் பகுப்பாய்வு முழுவதையும் புறக்கணிக்கவில்லை.

## பொருள் நிறைந்த பேரியல் பொருளாதாரம் சாத்தியமா?[1]

இறுதியாக நாம் முதலில் எழுப்பிய வினாவிற்கு விடையளிக்கும் கட்டத்தை இப்பொழுது அடைந்தோம். பொருள் நிறைந்த பேரியல் பொருளாதாரம் சாத்தியமா? என்ற இவ் வினாவிற்கான விடையின் ஒரு பகுதி, பேரியல் பொருளாதார வாதம், தனித் துறைக்குப் பொருந்தும் சில வரையறைகளையும், தொடர்புகளையும் கவனிக்கிறது என்ற உண்மையில் அடங்கியுள்ளது. எடுத்துக் காட்டாக, ஒரு தனி நபர் அல்லது பல நபர்கள் அடங்கிய தொகுதி, அண்மையில் உருவாக்கப்பட்ட வெளிப்பாட்டின்மீது செய்யும் செலவுகள் அவற்றைக் கொண்டு ஈர்க்கும் வருமானம் ஆகியவை, எப்பொழுதும் வெளிப்படையாகப் பலதரப்பட்ட பருமன்களைக் கொண்டனவாய் அமைகின்றன. ஆனால், சமூகம் ஒன்று செய்யும் செலவுகள், ஈர்க்கும் வருமானங்கள் ஆகியவைகளுக்குச் (சரியான இலக்கணம் அமைக்கப்பட்டால்) சமமாக இருக்கும் என்று காட்டலாம். ஒரு தனி நபர் முதலீடு செய்யாமல் சேமிக்கலாம்; அல்லது முன்பு சேமிக்காமல், அல்லது நடப்புச் சேமிப்புகள் இல்லாமலும் முதலீடு செய்யலாம்; ஆனால், நல்ல முறையில் இலக்கணம் அமைக்கப்பட்ட சேமிப்பு, முதலீடு ஆகியவை, ஒரு பொருளாதார அமைப்பு முழுமைக்கும் சமமாக இருக்கும். ஒரு நாட்டின் இறக்குமதி வேறு ஒரு நாட்டின் ஏற்றுமதியை மிஞ்சலாம்; ஆனால், எல்லா நாடுகளின் ஏற்றுமதி, இறக்குமதி இரண்டையும் கூட்டுமிடத்து அவை சமமாக அமையும் என்பது தெளிவு. ஒரு தனி நபர் தனக்கு வரவேண்டிய

1 இவ் வினாவிற்குத் தேவையான முழு விடையை இந் நூலின் 20 ஆம் அதிகாரத்தில் காண்க.

ரொக்கத்தைவிட அதிக ரொக்கத்தை வழங்கித் தனது ரொக்க இருப்பைக் குறைக்கலாம். ஆனால், சமுதாயத்தின் மொத்த பண இருப்பு மாறினாலொழிய சமூகத்தின் பண இருப்பு மாற முடியாது. அதுபோல் தனி நிறுவனம் அல்லது ஒரு தொழிற்சாலை, மற்றத் தொழிற்சாலைகளில் இருக்கும் வேலையாட்களைத் தன்பால் இழுப்பதன் பயனாகத் தனது உற்பத்தி. வேலை இவ்விரண்டையும் மிகைப் படுத்தலாம். ஆனால், வேலை நிறைவு இருக்கும்வரை, தொழில் துறை முழுமையும் தொழில் உள்ளீட்டை (labour input) மிகைப் படுத்த முடியாது.

இதுபோன்ற 'பேரியல் பொருளாதார உண்மைகளின்' பொருளையும் அவைகளின் உட்கருத்துகளையும் ஆராய்வது, பேரியல் பொருளாதாரக் கோட்பாட்டின் பெரும் பணியாகும்.

ஆயினும் பேரியல் மாறிகளின் இலக்கணத் தொடர்புகளை மட்டும் ஆராய்வதில் பேரியல் பொருளாதாரம் அதிக கவனம் செலுத்தினால் அது (சில சமயங்களில்) மலடாகிறது. ஆகவே, தூண்டுதலையும் நடத்தையையும் வெளிப்படுத்தும் மாறிகளின் தொடர்புகளையும் அது ஆராயவேண்டும். அத்தகைய தொடர்புகளை அடிப்படையாகக் கொண்ட கோட்பாடுகள், பொருளியல் அமைப்பின் உள்ளடங்கிய தனிபட்ட வேலையாளர்கள், குடும்பங்கள், தொழில் நிறுவனங்கள் ஆகியவைகளின் நடத்தையை விளக்கும் கருத்தியலான எடுகோள்கள் கொண்டனவாய் இருக்க வேண்டும். நடத்தையை விளக்கப் பயன்படும் மொத்தக் கோட்பாடுகள் சாத்தியமா?

சூழ்நிலைகளின் மாறுதல்களுக்கு ஏற்பத் தனி நபர் பொதுவாக ஒரே வகையில்தான் எதிர் உணர்வு செய்வார்கள் என்பது நமக்கெல்லாம் தெரிந்த விளக்கமான கருத்தாகும். உதாரணமாக மற்றவை மாறுதிருப்ப வருவாய் அதிகமானால், நுகர்ச்சிப் பொருள்களை அதிகமாகப் பல குடும்பங்கள் வாங்கும். ஆனால், அவைகளுக்கான அதிகப்படி செலவு மாறும் பருமனுடையது. முன்பு 2,000 டாலர்கள் வருமானத்தைக் கொண்ட குடும்பத்தின் வருமானம் 1000 டாலர்கள் உயர்ந்தால் அதன் அதிகப்படி செலவு, 2000 டாலர்கள் வருமானத்தைக் கொண்ட குடும்பத்தின் வருமானம் அதே 1,000 டாலர்களாக உயர்ந்தபோது செய்யும் அதிகப்படி செலவைவிட, வேறுபட்டு அமையும். ஒரு சிக்கனமான குடும்பத்தின் வருமானம் உயர்ந்தால், அந்த உயர்வு சேமிப்பைப் பெருக்கப் பயன்படும். ஆனால், அது மற்றொரு குடும்பத்தின் நுகர்ச்சிச் செலவை உயர்த்தப் பயன்படும். அல்லது ஒரே குடும்பம், வெவ்வேறு

காலங்களில் ஏற்படும் ஓரேவிதமான வருமான உயர்விற்கு வெவ்வேறு வழியில் எதிர் உணர்வு செய்யும். உயர்ந்துகொண்டு செல்லும்வருமானத்திற்குத் தனித்தனிக் குடும்பங்கள் எவ்வகையில் எதிர் உணர்வு செய்யும் என்பதை நல்ல வகையில் முன்னறிவிக்கக் கூடிய கோட்பாட்டை உருவாக்கல் கடினம். ஆனால், அதிகப்படி எண்களுக்குப் பயன்படும் விதி மொத்தத்தை ஆராய்வதற்குப் பெரிதும் பயன்படுகிறது —அதாவது தனியார் நடத்தையின் ஒழுங்கற்ற மாற்றங்களை மொத்த நடத்தையின் ஒழுங்குப்பாடு விழுங்கிவிடுகிறது. ஒரு பொருளியல் அமைப்பு முழுமையின் மொத்தத்தை ஆராயுமிடத்து, தனி நடத்தையின் ஒழுங்கீனத்தைவிட மொத்த நடத்தையின் ஒழுங்கான அமைப்பை அதிகபட்சம் பயன் படுத்துகிறோம்.

ஆயினும், தனி நபர்களின் நடத்தை வேறுபாடுகள் பெரும் பாலும் ஒழுங்கற்றவை. ஆனால், வருமானம் மாறும்போது நுகர்ச்சி மாற்றங்கள் ஒழுங்கானவைகளாகவும் அளவிடக்கூடியனவாகவும் அமைகின்றன. (நமது உதாரணத்தைத் தொடர்வோமேயானால்) கிராமப் புறங்களில் வாழும் குடும்பங்கள், நகர்ப்புறத்தில் வாழும் குடும்பங்கள், இலாபத்தை முக்கிய வருமானமாகக் கருதும் குடும்பங்கள், கூலி வாங்கிப் பிழைக்கும் குடும்பங்கள் ஆகியவைக ளிடையே, வருமானம் மாறுகையில் முறையான நுகர்ச்சி நடத்தை வேறுபாடுகளைக் காணலாம். பல குடும்பங்கள் அடங்கிய ஒவ் வொரு கூட்டும் வருமானம் மாறுகையில், ஒழுங்கான வகையிலும், முன்னறிவிக்கக்கூடிய வகையிலும் எதிர்வினை செய்தாலும் நுகர் வோரின் மொத்த வருமானம் மாறுகையில், நுகர்வோரின் மொத்தச்செலவுகளும் ஒழுங்கான வகையிலும், முன்னறிவிக்கக் கூடிய வகையிலும் எதிர்வினை செய்யும் என்று சொல்வதற்கில்லை. மொத்த வருமானத்தின் குறிப்பிட்ட மாற்றங்களை ஒரு குறிப் பிட்ட தொகுதி ஒரு குறிப்பிட்ட காலத்தில் பெற்றாலும், அதுபோல் வேறு ஒரு குறிப்பிட்ட காலத்தில் வேறு ஒரு தொகுதி பெற்றிருந்தாலும், நுகர்வோரின் மொத்தச் செலவுகளின் மாற் றங்களைப் பற்றிப் பொதுப்படையாக எதுவும் சொல்வதற்கில்லை.

ஒழுங்கான மொத்தத் தொடர்புகள் அமைவதற்குப் பலவகை எதிர் உணர்வுகளைக் கொண்ட குடும்பங்களிடையே வருமானப் பங்கீடு மாறாமலிருத்தல் வேண்டும்; அல்லது மொத்த வருமானம் மாறுவதற்கேற்றவாறு வருமானப் பங்கீடு மாறி யமையவேண்டும் என்பது தெளிவு.

எடுத்துக்காட்டாக, பின்வரும் அட்டவணை 1-2-ல் அமைந்த வாறு எல்லா வகையிலும் ஒழுங்கான, ஒரே நிலையுள்ள வருமான

நுகர்ச்சி ஷெடியூலைத் (income-consumption schedule) தனித் தனியே அமையப்பெற்ற இரண்டு குடும்பங்கள் உள்ளன என்று வைத்துக்கொள்வோம்.

அட்டவணை 1-2

இரண்டு தொகுதிகளின் கருத்தியல்பான நுகர்ச்சிச்சார்பு தொடர்புகள்

| துறைவருமானம் | துறைநுகர்ச்சி | செலவுகள் |
|---|---|---|
| | A | B |
| *100* | *80* | *90* |
| *150* | *105* | *135* |
| *200* | *130* | *180* |
| *250* | *155* | *225* |
| *300* | *180* | *270* |
| *350* | *205* | *315* |

இரண்டு துறைகளுக்கும் சேர்ந்து கொடுக்கப்பட்ட வருமானம் 300ஆக இருந்தால், அது தொகுதி A என்பதற்கு 100 ஆகவும், தொகுதி B என்பதற்கு 200 ஆகவும் அமையலாம்; அல்லது ஒவ்வொரு தொகுதிக்கும் தலா 150 ஆகவும் அமையலாம்; அல்லது தொகுதி A என்பதற்கு 200 ஆகவும், தொகுதி B என்பதற்கு 100 ஆகவும் அமையலாம். மேல்காணும் அட்டவணையிலிருந்து இத் தொகுதிகளின் மொத்த நுகர்ச்சிச் செலவுகள் முறையே 260, 240, 220 எனத் தெரிகிறது. 500 அலகுகள் கொண்ட ஒரு கூட்டு வருமானத்தைப் பலவிதமாகப் பங்கீடு செய்யலாம்; அதாவது 350—A; 150—B; மொத்த நுகர்ச்சி 340; அல்லது 250—A, 250—B மொத்த நுகர்ச்சி 380; அல்லது 150—A, 350—B மொத்த நுகர்ச்சி 420. எனவே, தொகுப்பு நுகர்ச்சி, தொகுப்பு வருமானம் ஆகியவைகள் இடையே குறிப்பிடத் தக்கதொரு தொடர்பில்லை என்பது தெளிவு.

தொகுப்பு வருமானம் Aவுக்கும் Bயிக்கும் தலா பாதியாகப் பங்கீடு செய்தால் என்று கோட்பாடு அல்லது கூர்வாய்வு நமக்கு வெளிப்படுத்தினால், அம் மொத்தங்களிடையே ஒழுங்கமைப்புக் கொண்ட தொடர்பு அமையும் எனக் கூறலாம். அல்லது தொகுப்பு வருமானம் மாறுகையில், அதனால் A, B ஆகியவர் இடையே ஏற்படும் பங்கீடு ஒழுங்கான முறையில் மாறும் என்று

அதே கோட்பாடும் கூர்வாய்வும் நமக்கு உணர்த்தினுல், தொகுப்பு வருமானம், தொகுப்பு நுகர்ச்சி ஆகியவைகளிடையே நிலையான தொடர்பு மீண்டும் ஏற்படும் எனக் கூறலாம். ஆயினும் நமது தொகுப்பு நுகர்ச்சி — வருமானத் தொடர்பு (aggregate consumption—income relationship) என்பது இருவகை 'விதி களின்' (laws) விளைவாகும். அதாவது பல துறைகளில் உள்ள நுகர்வோர் நடத்தையுடன் தொடர்புடைய விதி; வருமானப் பங்கீட்டுடன் தொடர்புடைய விதி; ஆகிய இரண்டு விதி களின் விளைவு. வருமானம் மாறுகையில் தொகுப்பு நுகர்ச்சி செய்யும் எதிர்உணர்வு, மேல்கண்ட இரண்டு தொகுதிகளில் ஏதேனும் ஒன்றின் எதிர்உணர்வையும் ஒத்து அமைவதில்லை.[1]

ஆழமான பொருள் நிறைந்த பேரியல் பொருளாதாரம் விளங்க, கூர்வுஆய்வு, கோட்பாடு ஆகிய இரண்டும் (நுண்ணியல் கோட்பாட்டின் சில பகுதிகள் உட்பட) சில பயனுள்ள தொகுப்பு களின் கலவை ஓரளவிற்கு நிலையுள்ளதாயும், ஒழுங்கமைப்புக் கொண்டதாயும் உள்ளது எனக் கூறுகின்றன. இதனுல் பொருள் நிறைந்த தொகுப்புக் கோட்பாடுகளையும், அளத்தல்களையும் வெளியிட முடிகிறது.

1 உதாரணமாக, வருமானப் பங்கீட்டை நிர்ணயிக்கும் விதிகள் கீழ்க்காணும் தொடர்புகளை உருவாக்குகின்றன என வைத்துக்கொள்வோம்.

$$A = 40 + \cdot 4\,(A + B) \quad \ldots\ldots (1)$$

இங்கு A, B என்பவை இரு துறை வருமானங்கள். எனவே, தொகுப்பு வருமானம் என்பது (A + B) ஆகிறது. இரு துறைகளின் நுகர்ச்சிச்சார்புத் தொடர்புகள் பின்வருமாறு உள்ளன.

$$CA = 30 + \cdot 5A \quad \ldots\ldots (2)$$

$$CB = \cdot 9B \quad \ldots\ldots (3)$$

இங்கு CA, CB என்பவை துறைகளின் நுகர்ச்சிச் செலவுகள். சமன்பாடு (1) என்பதைச் சமன்பாடுகள் (2) (3) ஆகியவைகளுக்குப் பதிலீடு செய்கையில் கிட்டுவது பின்வருமாறு.

$$CA = 30 + \cdot 5\,[40 + \cdot 4\,(A + B)]$$

$$CB = \cdot 9\,[(A + B) - (40 + \cdot 4\,\{A + B\})]$$

$$C = CA + CB = 14 + \cdot 74\,(A + B) \quad \ldots\ldots (4)$$

ஆகவே, தொகுப்பு நுகர்ச்சி, தொகுப்பு வருமானம் ஆகியவைகளிடையே உள்ள தொடர்பைச் சமன்பாடு (4) உணர்த்துகிறது.

பேரியல் பொருளாதாரம் மற்றுமொரு தத்துவத்தால் நல்ல பயனைப் பெறுகிறது. அதாவது தனியன் நடத்தையை விளக்கப் பயன்படும் பல முக்கிய மாறிகளின் கூட்டுகளை விளக்குமிடத்து ஒன்றை ஒன்று அடித்து நீக்கி விடுகிறது. நுகர்ச்சி—வருவாய் தொடர்பினைக்கொண்டு இக்கருத்தை மீண்டும் நன்கு விளக்கலாம். தனிக் குடும்பங்களின் நுகர்ச்சி நடத்தை, வருமானத்தை மட்டும் சாராமல், வேறு பல முக்கிய காரணிகளை ஒட்டி அமைகிறது. உதாரணமாக குடும்பத் தலைவரின் வயது, குடும்பத்தின் அளவு, உந்து வண்டி, அதுபோன்ற வேறு பல நீள்பயன் பொருள்களின் வயது, அக்குடும்பம் சொந்த வீடு உடையதா அல்லது வாடகை வீட்டில் வசிக்கிறதா, நோய், பிறப்பு, திருமணம், கல்லூரி செல்லும் பிள்ளைகளின் எண்ணிக்கை ஆகிய இவற்றின் தாக்கு (incidence) ஆகியவைகளை ஒட்டியமைகிறது. தனி நபர்கள் அல்லது சிறிய தொகுதிகள் செய்யும் நுகர்ச்சிச் செலவினங்களை விளக்க வேண்டுமானால், மேற்கூறியவற்றுடன் வேறு பல மாறிகளைச் சேர்க்கவேண்டும். ஆனால், கூட்டு நடத்தையை விளக்குமிடத்து இவற்றில் பெரும்பகுதி ஒன்றைஒன்று அடித்து நீக்கி விடுகிறது. மொத்த மக்கள் தொகையின் வயது, அமைப்பு மாற்றம் மெல்ல மாறும் தன்மையுடையது; அதுபோல் சொந்த வீடு வாங்குபவரின் சதவீதம் மெல்ல மாறும் தன்மையுடையது. பிறப்புகள், இறப்புகள், பிணி இவற்றால் இவ்வாண்டு செலவின் படிவம் பல குடும்பங்களில் மாறும்; ஆனால், மக்கள் தொகை மொத்தத்தின் செலவைக் கணக்கிடுமிடத்து இவற்றின் மொத்தத் தாக்கை (incidence) முன்னறிவிக்க முடியும். மேலும் அவை நிலையானவைகள்; சில குடும்பங்கள் மிகப் பழைய அல்லது நொடிந்துபோன உந்து வண்டிகள். மரச்சாமான்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தும்: ஆனால், அதே சமயத்தில் வேறு சில குடும்பங்கள் புதியவற்றைப் பயன்படுத்துகின்றன. இவ்வாறு குறிப்பிட்டுக்கொண்டே போகலாம். மொத்த நடத்தையை ஆராயுமிடத்து, குறிப்பாக நீண்ட கால நடத்தையை ஆராயுமிடத்து மாறிகளைப் புறக்கணிக்க முடியாது. ஆனால், சில சமயங்களில் இவற்றின் மதிப்புக் குன்றிப்போவதால், இவைகளைக் கவனியாமல் விட்டுவிடுகிறோம். பேரியல் பொருளாதாரம் தன்பால் கொண்டுள்ள பல வசதிகளில் இதுவும் ஒன்று. பொருளியல் நடத்தை என்பது மிகச் சிக்கலான ஒரு கருத்து; மேலும் அது பல வகைப்படும். பேரியல் பொருளாதாரத்திலும்கூட வேறு பல மாறிகளை நாம் அவசியம் சேர்த்தாக வேண்டும்; ஆனால்,

நுண்ணியல் பொருளாதாரத்திற்குத் தேவைப்படும் மாறிகளின் அமைப்பைவிடச் சிறிய அளவு மாறிகளைக்கொண்ட அமைப்புகளை நாம் பயன்படுத்தலாம்.

நுண்ணியல் பொருளாதாரம் குறிப்பாக, பல வகைப் பொருள்களின் தராதர விலைகளை ஆராய்கிறது. ஒரு பண்டத்தின் விலையேற்றம் அதன் உற்பத்தியை மிகுவிக்க வளங்களைத் தன்பால் இழுக்கும்; வாங்குபவர் அதனை விடுத்து வேறு பண்டத்தைப் பெறுவர்; இவை இரண்டும் ஒரு பண்டத்தின் விலையேற்றத்தினால் விளையும் பயன்கள். இத்தகைய விலைத்தொடர்புகளின் நெளிவுகளையும், வளப்பயன் அமைப்பை உருவாக்கவும், மாற்றவும், மாற்றியமைக்கவும் பயன்படுகிறது. தராதர விலைகள் என்பது நமது கவனத்துக்குரியதொரு கருத்து. அதாவது A என்ற பண்டத்தின் விலை, B, C, D போன்ற மற்ற பண்டங்கட்கும் இதற்கும் உள்ள தொடர்பைக் குறிக்கிறது; அதுபோல் ஒரு நிறுவனம் அல்லது ஒரு தொழிற்சாலை A என்பதில் கிடைக்கும் கூலி வீதம் (wage rate) மற்ற நிறுவனங்கள், தொழிற்சாலைகள் வழங்கும் கூலி விகிதத்துடன் கொண்ட தொடர்பை உணர்த்துகிறது. ஒரு காரணி வழங்கும் பணியின் விலை (அதனால் பாதிக்கப்படும் காரணி வருவாய்) என்பது, அவ் வருவாயைப் பெறுபவன் மற்ற நுகர்வுப் பொருள்களுக்குப் பொதுவாகக் கொடுக்கும் விலைகள், அல்லது குறிப்பிட்ட ஒரு நுகர்ச்சிப் பொருளுக்குக் கொடுக்கும் விலை ஆகியவைகளுடன் தொடர்புடையது. இதுபோல் பல உதாரணங்களைக் காட்டலாம். பொருளாதார அமைப்பு முழுமையும் ஆராயுமிடத்து, தராதர விலைகளின் பயன்கள் ஒன்றை ஒன்று அடித்து நீக்கி விடுகிறது. மற்ற விலைகளுடன் தொடர்புடைய ஒரு விலை ஏறினால், இவ் விலையுடன் தொடர்புடைய மற்ற விலைகள் இறங்கின என்பது பொருள். தராதர விலை மாற்றங்களின் விளைவால் ஒரு தொழிற்சாலை அல்லது ஒரு பண்டம் நுகர்வோர் அல்லது வளம் இவைகளைக் கூடவோ, குறைவாகவோ பெற்றது என்றால், மற்றவை அவைகளைக் குறைவாகவோ அல்லது கூடுதலாகவோ பெற்றிருக்கவேண்டும். இதனால் கூட்டுத் தொகுதிப் பருமன் பாதிக்கப்படுவதில்லை. நிறுவனம் போன்றவைகளின் உள்ளே ஏற்படும் மாற்றங்களில் மட்டும் நுண்ணியல் பொருளாதாரம் அதிக கவனம் செலுத்துகிறது.

தராதர விலைகள், பேரியல் பொருளாதாரத்துடன் தொடர்பற்றவை என்பது இதன் பொருள் அல்ல. இருப்பினும் பேரியல் பொருளாதாரக் கோட்பாடு இதுகாறும் இதனைப் புறக்கணித்து

வந்தது.[1] ஆனால், தராதர விலைகளின் புறக்கணிப்பை—அதாவது நுண்ணியல் பொருளாதாரம் அதிக நாட்டமுடைய—ஒரு வகையில் தோராயமாக உறுதிப்படுத்தலாம். ஏதேனும் ஒரு விலை என்பது பொதுவாக எல்லா விலைகளுடன் தொடர்புடையதோடு அல்லாமல், பல தனித்தனி விலைகளுடன் தொடர்புடையது ஆதலால், தராதர விலை என்ற கருத்தின் புறக்கணிப்பு, பேரியல் பொருளாதாரத் தொடர்புடைய மாறிகளின் எண்ணிக்கையைப் பெருமளவிற்குக் குறைக்கிறது.

சுருக்கமாகச் சொன்னால், உண்மையைத் தோராயமாக வெளிப்படுத்தும் அளவிற்குப் பொருள் நிறைந்த பேரியல் பொருளாதாரம் அமைகிறது. ஏனெனில்,(1) அது சில பேரியல்பான உண்மைகளில் நம்பிக்கை செலுத்துகிறது. (2) அதனுள் அடங்கியுள்ள பல கூட்டுத் தொகுப்புகளின் கலவை நிலையுள்ளவை அல்லது கூட்டுத் தொகுப்புகளின் அளவைகள் மாறுமிடத்து அது ஒழுங்கான வகையில் மாறும்; (3) தனி நபர்களின் பொருளியல் நடத்தையை விளக்கப் பயன்படும் சில மாறிகள், குறிப்பாக, தராதர விலைகள் என்பது உட்பட, பொருளாதார அமைப்பு முழுமையும் ஆராயுமிடத்து ஒன்றை ஒன்று அடித்து நீக்கி விடுகிறது. இது, இப் பொருள்களைப்பற்றிய நமது முடிந்த முடிவு எனக் கூறுவதற்கில்லை.

1 தொடர்பு விலைகளைக்கொண்ட நிறுவனங்களுக்கான எடுத்துக்காட்டுகளைப் பின்வரும் நூல்களில் காணலாம். ஏ. பி. லெர்னர் அவர்கள் எழுதிய 'கூலிக் கொள்கைகளுக்கும், விலைக் கொள்கைகளுக்குமுள்ள தொடர்பு' என்ற கட்டுரை. இது 'அமெரிக்கன் எகனாமிக் ரெவியூ' என்ற பத்திரிகையிலிருந்து எடுத்து 'வருமானப் பங்கீட்டுக் கோட்பாட்டுக்கான கட்டுரைகள்' என்ற நூலில் மறு முறை அச்சிடப்பட்டிருக்கிறது. (அமெரிக்கன் பொருளாதார சங்கத்தின் கமிட்டியால் தேர்ந்தெடுக்கப்பட்டவை) பிளாக்ஸ்டன் கம்பெனி 1946 பக்கங்கள் 314—29: ஜி. ஆக்லே, டி. பி. சூட்ஸ் ஆகியவர்கள் கூட்டாக எழுதிய 'தராதர விலை மாற்றங்களும் நுகர்வோர் தேவையின் கூட்டுத் தொகுதியும்' என்ற கட்டுரை 'அமெரிக்கன் எகனாமிக் ரெவியூ' என்ற பத்திரிகை பாகம் XL (டிசம்பர் 1950) 785—804.

# 2. நாட்டு வருமானமும் நாட்டின் ஆக்கமும்

## (National Income and National Product)

பேரியல் பொருளாதாரப் பகுப்பாய்வில் சிறப்புள்ள மாறிகள் இரண்டாகும். அவை நாட்டு வருமானம் (National Income), நாட்டின் ஆக்கம் (National Product) என்பவை. இவ் விரண்டும், மற்றவைகளைவிட, ஒரு பொருளாதார அமைப்பின் செயலை நல்ல முறையில் அளவிடப் பயன்படுகின்றன. எனவே, இக் கருத்து களின் பொருளை நன்கு அறிதல் வேண்டும். மேலும் இவற்றை அளத்தல் எப்படி என்பதையும் ஓரளவு கற்கவேண்டும். இவைகளை விடச் சிறந்தது இவற்றின் கூட்டுகள் எத்தன்மையன என்பதை ஆராய்வது—அதாவது தொழில் நிறுவனங்கள், அரசின் பல உறுப்புகள், குடும்பங்கள் ஆகிய இவை ஆற்றும் பலதரப்பட்ட ஆக்க வேலைகளுடன் நாட்டு வருமானமும் நாட்டின் ஆக்கமும் எத்தொடர்பு கொண்டுள்ளன என்பதையும், அவைகளின்வழி நாட்டு வருமானமும் நாட்டின் ஆக்கமும் எப்படி வளர்கின்றன என்பதையும், உணர்தல் வேண்டும். தனியார் கணக்குகளின் எண்ணிக்கைகளுடன் நாட்டு வருமானமும் நாட்டின் ஆக்கமும் எவ்வகைத் தொடர்பு கொண்டுள்ளன என்பதையும், பின்னர் பொருளியல் அமைப்பின் உறுப்புகளாகிய பல்வேறு துறைகளின் கணக்குகளுடன் எப்படித் தொடர்புடையன என்பதையும் அறிய வேண்டும்.

பேரியல் பொருளாதாரக் கோட்பாட்டினை நன்கு கற்க, சமூகக் கணக்கியலில் அடங்கியுள்ள பல பொதுக் கருத்துகள் அனைத்தையும் முதற்கண் அறிதல் வேண்டும். முன் அதிகாரத்தில் குறிப்பிட்ட 'பேரியல் பொருளாதார உண்மைகள்'—சமூகக் கணக்குகள் வழி வந்தவை. முன்னறிக்கை (forecasting), பிரச்

சினைகள், வருவாய்க் கொள்கை (fiscal policy), பொருளாதார வரலாறு போன்றவைகளுக்குப் பேரியல் பொருளாதாரக்— கோட்பாட்டைப் பயன்படுத்த வேண்டுமானல் வருமானம், ஆக்கம், ஆகிய கருத்துகளின் விளக்கமும், அவற்றை எப்படி அளவிடுதல் ஆகியவைகளைத் தெளிவாக உணர்தல் மிகவும் அவசியம்–இந் நூல் கோட்பாட்டை மட்டும் முக்கியமாகக் கவனிப் பதால், நாட்டு வருமானம், நாட்டின் ஆக்கம் ஆகிய கருத்துகளுக் கான மிக நுட்பமான விவரங்களையும் அவற்றை அளவிடுதலையும் தள்ளிவைத்தது. நாட்டு வருமானக் கருத்துகள், அவற்றை அளவிடுதல் ஆகியவற்றில் நாட்டம் கொண்ட மாணவர்கள் அவைகளுக்கான இலக்கியம் விரிந்து கிடப்பதோடு அல்லாமல், நாளுக்கு நாள் வெகு விரைவாக வளர்வதையும் காண்பார்கள்.[1] நாட்டு வருமானம், நாட்டின் ஆக்கம் என்ற கருத்துகள் முழு வதையும் ஆராய்வதாக இந் நூல் பசப்புவதில்லை. மிகப் பெரிய கருத்துகள் சிலவற்றையும்கூட இந் நூல் மேற் போக்காகக் குறிப்பிடுகிறதேயன்றி அவற்றை ஆழமாக ஆராய்வதில்லை.

இவ்வதிகாரத்தில் ஆளப்படும் முறை பின்வருமாறு:—நாட்டு வருமானம், நாட்டின் ஆக்கம் ஆகிய இவ் விரண்டு கருத்துகளையும் பொதுப்படையாக இவ் வதிகாரம் முதற்கண் ஆராய்கிறது. அங்காடி வழி செல்லும் பொருளாதார நடவடிக்கைகளை மேற் கொள்ளும் கருத்தியல்பான எளிய பொருளாதார அமைப்பில், இவ்விரு கருத்துகளின் தொடர்பைப் பின்னர் ஆராய்கிறது. (அத்தகைய அமைப்பில் குடும்பங்கள் அல்லது அரசு ஆகிய நிறு வனங்கள் ஆக்கவேலையில் ஈடுபடுவதில்லை; மேலும் அவ் வமைப்பில் அரசேயில்லை எனவும் கொண்டுள்ளது.) ஐக்கிய அரசுகள் போன்ற சிக்கலான பொருளாதார அமைப்பில் நாட்டு வருமானமும், நாட்டின் ஆக்கமும் எங்ஙனம் தொடர்பு கொண்டுள்ளன என்பதை யும், அவைகளுக்கான இலக்கண அமைப்பையும், அளவிடுதலையும் பின்வரும் அதிகாரம் விளக்குகிறது.

[1] நாட்டு வருமானம், நாட்டின் ஆக்கம் போன்ற கருத்துகளை விளக்க அண்மை யில் வெளியிடப்பட்ட நூல்கள் பலவகையில் பின்வருவன சிறந்தவை. சி. எஸ், ஷொவுப் அவர்கள் எழுதிய 'நாட்டு வருமானப் பகுப்பாய்வு தத்துவங்கள்' (ஹவுட்டன் மைப்பிலின், 1947); எச். சி. எட்டி அவர்களும், ஏ.டி. பீக்சாக் அவர்களும் கூட்டாக எழுதிய 'நாட்டு வருமானமும் சமூகக் கணக்கியல் முறையும்' (ஹட்சின்சன்ஸ் பல்கலைக்கழக நூலகம், 1954); ஜே. பி. பவுல்சன் 'பொருளாதாரக் கணக்கியியல்' (மெக்கிரஹா-ஹில், 1955) அதிகாரங்கள் 14-20; ஐக்கிய அரசுகளின் வருமான, ஆக்கக் கணக்குப்பற்றி ஆராய்ச்சிக் கட்டுரை, வருமானம் சொத்து ஆகியவை களைப் பற்றிய ஆராய்ச்சி என்ற பத்திரிகை, பாகம் 22 காண்க; குறிப்பாக ஜார்ஜ் ஜாசி (George Jaszi) அவர்கள் எழுதிய 'கணக்குகளின் கருத்து அடிப்படை - மறு ஆராய்ச்சி என்ற நூலைக் காண்க. இவைகளை, பொருளாதார ஆராய்ச்சியின் தேசியக்கழகம் வெளியிட்டுள்ளது.

முன்குறிப்பிட்டவாறு, கோட்பாட்டில் மட்டும் நாட்டமுடையவர்கள் என்றால் இறுதியில் சொன்ன விளக்கத்தை ஒதுக்குவதில் தவறில்லை. ஆயினும் கொள்கைப் பிரச்சினைகளுக்கு நாட்டின் வருமானம், நாட்டின் ஆக்கம் போன்ற கருத்துகளை எளிய முறையில் பயன்படுத்த நேரிடுகையில் இவைகளைப்பற்றிய விரிவான விளக்கம் அவசியமாகிறது. நாம் விவாதிக்கும் பிரச்சினைகளுடன் தொடர்பற்ற பலவகைப்பட்ட பொருளாதார பகுப்பாய்வுகளுக்குப் பயன்பட சமூக கணக்கியலின் அறிவு தேவைப்படுகிறது. இந்த நவீன கணக்கியல் முறை வழங்கும் விவரங்களைப் பயன்படுத்தாமல், எளிதில் விடை காணக்கூடிய பொருளாதார பிரச்சினை எதுவுமில்லை. எனவே, சமூகக் கணக்குகளின் அமைப்பு எத்தன்மையது; அதில் பயன்படும் கருத்துகள் யாவை? எவ்வகை விவரங்கள் ஆளப்படுகின்றன; அவை எந்தக்காலத்தைக் குறிப்பன; அவைகளுக்கான புள்ளியியல் மூலங்கள் யாவை? மதிப்பீடுகள் எந்த அளவிற்கு நம்பக்கூடியவை என்பன போன்ற பிரச்சினைகளை நன்கு அலசி முடிவு காண்பது பொருளியலைக் கற்கும் ஒவ்வொரு மாணவனது கடமையாகும். இந் நூலின் மூன்றும் அதிகாரம் இப் பிரச்சினைகளுக்கான அறிமுகத்தைமட்டும் வழங்குகிறது. நாட்டு வருமானம் நாட்டின் ஆக்கம் அவைகளின் கணக்கீடு ஆகிய கருத்துகளுக்கு ஐக்கிய அரசுகள் அதிகாரபூர்வமாக வழங்கிய கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு அதிகாரம் மூன்று எழுதப்பட்டது. எனவே, அத்தகவல்களின் மூலம் எது, அவைகள் எந்த அளவிற்கு நம்பக்கூடியன என்பன போன்ற பிரச்சினைகளுக்கு அதிக கவனம் செலுத்தவில்லை.

## நாட்டு வருமானக் கருத்து
## (The Concept of National Income)

தான் வழங்கும் செல்லுபடியான பணிகளுக்கான வருமானம் அல்லது சொத்துகளின் வாயிலாக ஈர்க்கும் வருமானம் ஆகியவைகளின் மொத்தத் தொகை தனி நபரின் வருமானம் என்பதன் இலக்கணமாகும். நாட்டு வருமானம் என்பது தனி நபர்களின் வருமானங்களின் மொத்த வருமானமாகும். வருமானம் என்பது ஓட்ட வகையைச் சார்ந்த கருத்து ஆகையால், ஒரு குறிப்பிட்ட முழுமைவாய்ந்த கால வரம்பில் நடைபெறும் வருமானப் பேரங்களைக் குறித்தும் அவைகளின் மதிப்பைத் தொகுத்தும் நடைமுறையில் அதனை வெளியிடுகிறோம்.

வருமானம் என்பதைச் சம்பாத்தியம் எனக் குறிப்பிட்டால், அதனை வருமான வரவுகளிலிருந்து எளிதில் பிரித்துவிடலாம். ஒரு குறிப்பிட்ட கால அளவில் வருமானத்தைச் சம்பாதிக்கலாம்; ஆனால், அந்தக் காலத்தில் அதனைப் பெற முடியாது—ஏனெனில்,

அது வரிக்குட்பட்டது அல்லது வேறு ஒரு காலத்தில் வழங்குவதற்காக அல்லது (பெறுவதற்காக) அவ் வருமானம் பின் தங்கிவிடலாம். வருமான வரவுகள் வருமானத்தை மிஞ்சலாம். இதற்குக் காரணங்கள் உண்டு; கடந்த சம்பாத்தியங்களைக் காலம் கடத்தி வழங்குதல் ஒரு காரணம்; அல்லது மாற்றுச் செலுத்துகளாக (transfer payments) இருக்கலாம். இவை கடந்த காலத்தில் அல்லது நிகழ் காலத்தில் ஆற்றிய ஆக்கப் பணிகளுக்கான செலுத்திடுகளைக் குறிப்பிடுவதில்லை; [இடர் உதவித் தொகைகள் (relief payments), தேர்ச்சி மிகுந்த வர்களுக்கான உதவித் தொகைகள் (vetern's benefits), ஆகியவை 'அரசின் மாற்றுச் செலுத்துகளுக்கு எடுத்துக் காட்டுகள்; நுகர்வோரிடமிருந்து நிறுவனங்களுக்குச் சேரவேண்டிய செல்லாக் கடன்கள் (bad debts) 'தொழில் நிறுவனங்களின் மாற்றுச் செலுத்துகளுக்கு'—உதாரணங்கள்; தனி நபர்களிடையே வழங்கப்படும் அன்பளிப்பு, பணவளிப்பு ஆகியவை 'தனி நபர்களிடையே ஏற்படும் மாற்றுச் செலுத்துகளுக்கு' உதாரணங்கள்].

வருமானம் என்ற கருத்தை, சொத்து மாற்றுகள் என்ற கருத்தினிலிருந்து தனிப்படுத்துதல் வேண்டும். வீட்டை விற்று அல்லது பத்திரங்களை (bonds) விற்று, பேட்டெண்டு உரிமைகளை (patent rights) விற்று, அல்லது விற்பனையின் வாயிலாகக் கிட்டும் ஊதியம் வருமானமாகாது என்பது தெளிவான கருத்து அல்லது ஒரு கடன் திருப்பிக் கொடுக்கப்பட்டால், அவ்வாறு திருப்பிக் கொடுக்கப்பட்ட தொகை வருமானமாகாது. மேல் கூறிய பேரங்களின் வாயிலாக நடைபெற்றது எல்லாம் ஒருவகை சொத்து (வீடு, பத்திரம் (bond), பேட்டெண்டு உரிமை,) ஆகியவை வேறு வகை சொத்தாக, ரொக்கமாக மாற்றப்பட்டது. ஆனால், வீடு. பத்திரங்களின் வட்டி வீதம், பேட்டெண்டு உரிமை ஆகியவைகள் ஆற்றும் பணிகளின் நடப்பு ஓட்டம் வருமானமாகும்.

மூலதன ஆதாயம் என்பது தனிப்பட்ட பிரச்சினையை எழுப்புகிறது. பல வகைச் சொத்துகளை அவைகளின் வாங்கிய விலையை விட அதிக விலைக்கு விற்பதால் கிட்டும் ஆதாயம் மூலதன ஆதாயமாகும். இவ்விரு விலைகளினால் ஏற்படும் வேறுபாடு சொத்து மாற்றுச் செலுத்தீடுகளையோ அல்லது உண்மை வருமானத்தையோ குறிப்பதல்ல; ஆனால், சொத்துகளை வாங்கி விற்கும் தொழில் செய்பவர்கட்கு; அல்லது வாங்கிய விலையைவிட உயர்ந்த விலைக்கு விற்று வாழ்க்கை நடத்துபவர்கட்கும் இது வருமானமாகும். இத்தகைய வருமானத்திற்கும், உண்மையான மூலதன ஆதாயத்திற்கும் (அதாவது எதிர்பாராது கிட்டும் தன்மையுடைய

வருமானம்) உள்ள வேறுபாட்டைக் கோட்பாட்டளவில் எளிதில் வரையறுக்க முடியாது. மிகச் சாதாரணமான மூலதன ஆதாயம் நடப்பு ஆக்கப் பணிகளின் சம்பாத்தியங்களைக் குறிப்பிடாமையால், அது வருமானமாகாது.

அவரவர் செய்யும் சம்பாத்தியத்தைக் கணக்கிடுவதற்கு மொத்த சம்பாத்தியத்திலிருந்து அவரவர் செய்யும் செலவுகளைக் கழித்தல் கோட்பாட்டளவில் நல்லதொரு கருத்து. தானே அளிக்கும் கருவிகளின் விலை, சங்க நிலுவைகள் (dues) வேலைக்குச் செல்லச் செய்யும் பிரயாணச் செலவுகள் ஆகியவை தொழிலாளி செய்யும் செலவுகள்; தரகர் செலவுகள், வங்கிச் செலவுகள், காப்பு அறைச் (safe vault) செலவுகள் (அதாவது அக்காப்பு அறைகளில் குடும்ப நகைகளை வைக்காமல், பத்திரங்களை (bonds) வைத்தார் எனக் கொண்டால்) ஆகியவை சொத்து உரிமையாளர்களின் செலவுகள். ஆனால், நடைமுறையில் இவைகளில் மிகச் சில கழிக்கப்படுகின்றன. ஏனெனில், வருமானத்தைச் சம்பாதிப்பதற்கு வேண்டிய வசதிகளைப் பெறச் செய்யும் செலவீடுகளையும், சம்பாதித்த வருமானத்தைப் பயன்படுத்த அல்லது அநுபவிப்பதற்குச் செய்யும் செலவீடுகள் ஆகிய இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை வெகு எளிதில் வரையறுக்க முடிவதில்லை. நுகர்வோன் என்ற வகையில் ஒருவர் தாம் செயலாற்றும் நிறுவனத்திலிருந்து, சற்றுத்தூரம் 30 மைல் தூரத்தில் என்று வைத்துக்கொள்வோம். குடியிருக்கும் காரணத்தால், வேலைக்குச் செல்லும்போது பிரயாணச் செலவுகள் செய்வதில்லையா? பணிபுரிவோர் சங்கத்தில் அங்கத்தினராக இருப்பது பொருளியல் நலம்பெறவா? அல்லது சமூக நலம் பெறவா? அல்லது அரசியல் நலம்பெறவா? அப்படியானால் அவன் சமூக, அரசியல் அல்லது மத சம்பந்த நிறுவனங்களின் நிலுவைகளைக் (dues) கழித்தல் சரியா? சில சமயங்களில் அத்தகைய நிறுவனங்களில் அங்கத்தினராக இருப்பதால் அதிக வருமானத்தைச் சம்பாத்தியம் செய்யும் ஆற்றலைப் பெறலாம். கருவிச் செலவுகள் கழித்தலுக்குட்பட்டவையாகில், ஏன் வேலைக்குத் தேவைப்படும் துணிகளின் செலவுகளைக் கழிக்கக்கூடாது? இவ்வாறு பட்டியலிட்டுக்கொண்டு போனால் முடிவேயில்லை. திறமை உடைய பணியாளர்களாக இருக்கவேண்டுமாகில், ஒவ்வொருவருக்கும் உண்ண உணவு, உடுக்க உடை ஆகியவை மிக்க அவசியம். மேலும் கேளிக்கை, ஓய்வு நேரம் ஆகியவைகளும் ஓரளவிற்குத் தேவைப்படுகிறது. ஆகவே, எல்லா நுகர்வோர் செலவுகளும்—அல்லது ஓரளவிற்குத் தேவைப்படும் பராமரிப்பு வரவு செலவு பட்டியல் (subsistence budget)-சம்பாத்தியம் செய்வதற்கான செலவுகள் என்பதால் அவை நிகர வருமானத்தைக் கணக்கிடுகையில், கழித்தலுக்

குரியன என்று நமது வாதம் முடிவு கூறும். எனவே, நாம் பயன் படுத்தும் பழக்கம்—இது மேனாட்டு மதிப்புச் சட்டத் தொகுப்பின் (Western Code of Values) அடிப்படைக் கருத்து—நுகர்வ தற்குச் சம்பாத்தியம் செய்கிறோமேயல்லாமல் சம்பாத்தியம் செய் வதற்காக நுகர்வதில்லை—என்பதாகும். இக் கொள்கையை அடிப் படையாகக் கொண்டாலும், தனி நபர்கள் செய்யும் சில சிறிய செலவீடுகளைத் (அதாவது வேலையாள் வாங்கும் கருவிகளின் செலவுகள் போன்றவை) தனிப்படுத்தி, அவற்றை வருமானத்தி லிருந்து கழிக்கலாம். நாட்டு வருமானக் கணக்கீட்டு முறைகளின் பெரும்பகுதி இவ்வாறு செய்வதில்லை.

தொழில் நிறுவனங்களைச் சொந்தமாக நடத்தி, அவற்றின் வாயிலாக வருமானத்தை ஈட்டும் கட்டத்திற்கு வருவோம். வருமானத்தைப் பெற இவைகள் செய்யும் செலவுகள் அனைத்தும் முக்கியமானவை. அவைகளுக்கு எளிதில் இலக்கணம் அமைக் கலாம்; எனவே, அவை கழிக்கப்படவேண்டியவை. தொழில் நிறுவனங்கள் பெறும் வருமானம், தனி நபர்களின் வருமானத்தின் ஒரு பிரிவு—அதாவது கூட்டமைப்பு நிறுவனங்கள் பெறும் இலா பங்கள் உண்மையில் பங்குதாரர்கள் ஒவ்வொருவரின் தனி வரு மானங்களாகும். ஆயினும், தொழில் நிறுவனம் ஒன்றின் மொத்த வரவுகள் அதன் உரிமையாளர்களின் வருமானம் அல்ல என்பது முற்றிலும் தெளிந்த ஒரு கருத்து. தொழில் நிறுவனங்கள் செய்யும் செலவுகள், நுகர்வோர் செய்யும் செலவுகளைப்போல் அல்லாமல், வருமானத்தைப் பெறச்செய்யும் செலவுகளாகும். (இங்கும் கூடச் சில சந்தேகங்கள் உருவாகின்றன. குடும்பப் பண்ணைக்காகச் செய்யும் செலவுகள் எந்த வகையைச் சாரும்? குடும்பப்பண்ணை நிர்வாகம் ஒரு வகை வாழ்க்கை முறையோடு அமையாமல், அது வாழ்வதற்கும் வழி செய்கிறது). தொழில் நிறுவனங்களிலிருந்து கிடைக்கும் இலாபங்களைக் குறிக்கும் நாட்டு வருமானத்தைக் கணக்கிடுவதற்குத் தொழில் நிறுவனங்கள் செய்யும் செலவுகளைக் கழித்தல் முறை என்பதை நாட்டு வருமான மதிப்பீட்டாளர்கள் எல்லோரும் உணர்வார்கள்.

இலாப வருமானத்தைக் கணக்கிடுகையில் ஏற்படும் குறிப் பிட்ட சில பிரச்சினைகளைக் கீழே குறித்துள்ளோம். நாட்டு வரு மானம் என்பது பின்வரும் எல்லாவற்றின் கூட்டுத்தொகையாகும்: (a) [வரிகள், சமூகக்காப்புச் செலவுகள் (Social Security Contributions) ஆகியவைகள் கழிக்கப் பெறுமுன்] கிட்டும் கூலிகள், சம்பளங்கள், வாணிகக் கழிவுகள் (commissions) விருப்பூதியங்கள் (bonuses), தொழிலாளர்களின் வேறு பல வகைச் சம்பாத்தி யங்கள்; (b) நிகர வாடகை வருமானம், ஊதியப்பங்கு (royalty)

போன்றவை; (c) வட்டி வருமானம், (d) கூட்டமைப்பு நிறுவனம், தனிஉடைமை நிறுவனம் ஆகியவை ஈட்டும் இலாபங்கள். இவைகள் நிறுவனத்தின் உரிமையாளர்களுக்குப் பங்கீடு செய்யப் பட்டிருக்கலாம், அல்லது பங்கீடு செய்யாமல் நிறுத்தி வைக்கப்பட் டிருக்கலாம். ஆனுல், இவை, வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு விதிக்கப்பட்ட வரிகள் கழிந்த பின்னர் கிடைக்கும் இலாபங்கள்.

பல்வேறு துறைகளிலிருந்து கிட்டும் வருமானத்தைக்கொண்டு நாட்டு வருமானத்தைப் பலவகைத் துணைக் கூறுக்கலாம். உதாரண மாக, கூலிகள், சம்பளங்கள், அவற்றின் துணை வருமானங்கள் என்பவை, தொழில் நிறுவனங்கள், அரசு, தனிநபர், இலாபம் கருதா நிறுவனங்கள், குடும்பங்கள், அயல்நாட்டு மக்கள், பல்வேறு நாடுகளிலிருந்து வந்து நம் நாட்டில் வாழும் மக்கள், அல்லது அவர்களின் நிறுவனங்கள் வழங்கும் தொகை என்று பல துறை களைக் கொண்டு பிரித்துக் கூறலாம். இவைகளை மீண்டும் துணைக் கூறுகளாக்கலாம் — உதாரணமாக தொழில்துறை வழங்கும் ஊதியம், அல்லது தொழிற்சாலை வழங்கும் ஊதியம் எனப் பிரித்துக் கூறலாம்.

நாட்டு வருமானம் என்ற கருத்துடன் நெருங்கிய தொடர் புடைய மற்ருெரு கருத்து 'மக்கள்சார் செலவுக்கான வருமானம்' (disposable personal income) என்பது. இது வரவுகள் என்ற கருத்தை முதற்கண் அடிப்படையாகக் கொண்டது ; இது சம்பாத் தியம் என்ற கருத்திலிருந்து வந்தது அல்ல. வரிகளை நீக்கி இதன் மதிப்பைக் கணக்கிடுவர். நாட்டு வருமானத்திலிருந்து செலவுக் குரிய வருமானத்தைக் கணிக்கிட வேண்டுமானுல், நடப்பு ஆக்கப் பணிகளுக்கான செலுத்தீடுகள் அல்லாத வரவுகளைக் (அதாவது அரசின் மாற்றுச் செலுத்தீடுகள் (transfer payments) போன்றவை) கூட்டல் வேண்டும் ; நிகழ்காலத்தில் பெருத சம்பாத்தியங்கள், வரிகள் ஆகிய இரண்டையும் (அதாவது வேலை வழங்குவோர், வேலையாளர் ஆகியவர் செலுத்தும் சமூகக் காப்புச் செலவுகள், கூட்டமைப்பு நிறுவனங்களின் இலாப வரிகள், கூட்டமைப்புகள் நிறுத்திக்கொண்ட சம்பாத்தியங்கள், மக்கள் சார் வரிகள்) கழித் தல் வேண்டும். இந்தத் தொகையைத்தான் நுகர்வோர் தம் விருப்பம்போல் 'செலவு செய்ய' (dispose of) முடியும் அல்லது சேமிக்க முடியும்.[1]

1 இக் கருத்து உண்மையில் தவருன ஒரு கருத்து. இணைக்கபடாத ஒரு நிறுவனத்தின் வரி போக மீதியுள்ள மொத்த வருமானம் செலவுக்கான வருமானத் துடன் சேர்க்கப்பட்டுள்ளது. இங்கும் இணைக்கப்பட்ட மற்ற நிறுவனங்களின் வரு மானத்தைப்போல் அது நிறுத்திவைக்கப்பட்ட சம்பாத்தியமாகும். மேலும் நுகர் வோரின் சுதந்திரம் (அடைமானத் தொகைகள், ஆயுள் இன்சூரன்ஸ் சந்தா தொகை கள், தவணைச் செலவுகள் போன்றவைகளால்) கட்டுப்படுத்தப்பட்டுள்ளது.

மக்கள்சார் வருமானம் என்பது வருமானக் கருத்தின் மூன்று வது அம்சமாகும். இதனை ஐக்கிய அரசுகளின் வருவாய்க் கணக்குகள் பெருவாரியாக ஆள்கின்றன. மக்கள்சார் செலவுக் குரிய வருமானத்துடன் வரிகளைச் சேர்த்து இதனைக் கணக் கிடலாம்; அல்லது சமூகக்காப்புச் செலுத்தீடுகள் செய்த பின்னர், வரிகள் நீக்கப் பெறுவதற்குமுன் உள்ள மக்கள்சார் நடப்பு வருமான வரவுகள் என்று இதனைச் சொல்லலாம். இது மாதம் தோறும் கணக்கிடப்படும் வருமானத் தொகையாகும். எனவே, அதனுடன் தொடர்புடைய ஒவ்வொரு மாத இறுதியில் வெளி யிடப்படும். (செலவுக்குரிய வருமான மதிப்பீடுகள் காலாண்டுக்கு ஒரு முறை அதாவது 3 மாதங்கள் முடிவடைந்தவுடன் கணக்கிடப் படுகின்றன;) ஆனால், நாட்டு வருமான மதிப்பீடுகள், நாட்டு ஆக்கத்தின் மதிப்பீடுகள் மிகப் பெருங்காலப் பின்னீட்டிற்குப் பிறகுதான் மதிப்பிடப்படுகின்றன.

## நாட்டின் ஆக்கம் என்ற கருத்து

நாட்டின் ஆக்கம் என்பது ஒரு பொருளாதார அமைப்பில் உற்பத்தியான பண்டங்கள், பணிகள் ஆகியவற்றை, அவைகளின் அங்காடி விலை கொண்டு மதிப்பிடப்படும் ஒரு தொகை. இதுவும் ஒரு ஓட்டக் கருத்து. (flow concept). ஒரு குறிப்பிட்ட கால அளவில் நிகழும் லேவா தேவிகளின் (transactions) குவியல்களைக் கொண்டு நடை முறையில் இது அளக்கப்படுகிறது.

நாட்டின் மொத்த ஆக்கத்தைக் கணக்கிடுங்கால் இரு முறைக் கூட்டு (double counting) என்பது பலவகைச் சிக்கல்களில் தலை சிறந்து விளங்கும் சிக்கலாகும். ரொட்டி வெளிப்பாட்டைக் கணக் கிடுகையில், ரொட்டி செய்யத் தேவைப்பட்ட கோதுமை மாவு, கோதுமை மாவுக்குத் தேவைப்படும் கோதுமை, அந்தக் கோது மையை உற்பத்தி செய்யத் தேவைப்பட்ட உரப் பொருள்கள் ஆகியவைகள் ரொட்டி என்ற வெளிப்பாட்டைக் கணக்கிடுகையில் சேர்க்கப்படாதவை. இவ்வளவு இருந்தும் இறுதியில் ரொட்டி என்ற பண்டத்தை நாம் கணக்கிடுறோம். ரொட்டி, மாவு. கோதுமை, உரப் பொருள் ஆகியவைகளின் மதிப்பை ஒன்று கூட்டுவதில்லை. இதனை நாம் 'இடை நிலைப் பட்டங்களை' (intermidiate products) விடுத்து, 'இறுதிப் பண்டங்களையே' (final products) கணக்கிடுகிறோம். இதை வேறு வகையில் சொல்ல லாம். இறுதிப் பண்டங்களை, நுகர்ச்சிப் பண்டங்கள் அல்லது (கூட்டு நுகர்ச்சிக்காக) அரசிற்கு விற்பனை செய்யும் பண்டங்கள் என்று வரையறுத்துக் கூறலாம். புதிய முதற் கருவிப் பண்டங் களையும் இறுதி வெளிப்பாட்டுடன் இணைப்பது நடை முறை.

முதற் கருவிப் பண்டங்கள் இறுதிப் பண்டங்கள் அல்ல என்ற கருத்தை ஒட்டி அதிகம் கூறலாம். முதற் கருவிப் பண்டங்கள் அவைகளுக்காக விரும்பப்படுவதில்லை. அவைகள் துணை கொண்டு (நேரடியாக, அல்லது மறைமுகமாக) உற்பத்தியைப் பெருக்குவதற் காக விரும்பப்படுகின்றன. ரொட்டி உற்பத்தி செய்வதற்கு இயந் திரம் ஆற்றும் பணிகள், ரொட்டி உற்பத்திக்கு மாவு ஆற்றும் பணிகளை ஒத்ததாகும். இயந்திர முறை உற்பத்தி, கையினுல் உற்பத்தி செய்யும் முறையை விட அதிகத் திறனுடையது. ஆகவே, இயந்திரங்களை உற்பத்தி செய்து அவைகளைப் பயன் படுத்துகிருர்கள். எனவே, இயந்திர உற்பத்தி என்பது அதிகப்படி ரொட்டி உற்பத்தி எனப் பொருள்படும் என்பது வெகு விரைவில் புலனுகும் கருத்து. ரொட்டி உற்பத்தி என்பதை ஒரு முறை கூட்டியபின், அதன் உற்பத்தியைப் பெருக்கப் பயன்பட்ட இயந்திர உற்பத்தியைக் கூட்டுதல் தேவையில்லை. ஆனுல், உண்மையில் இயந்திரப் பணிகள், மாவு ஆற்றும் பணிகளைவிட உயர்ந்தவை; ஏனெனில், இயந்திரம் அதே பணியைப் பல ஆண்டுகள் புரியும் ஆற்றலைப் பெற்றது. இவ் வாண்டு உற்பத்தியான புது இயந்திரம் ரொட்டி உற்பத்தியைப் பெருக்கப் பல ஆண்டுகள் பயன்படும் ஒரு முதற் கருவிப் பொருள். இவ்வாறு கூறுவதில் பொருள் வேறு பாடு ஏதுமில்லை. ஆனுல், அவ் வியந்திரத்தின் மதிப்பை (அல்லது அவ் வியந்திரத்தை உற்பத்தி செய்யப் பயன்பட்ட வளப்பொருள் களின் மதிப்பு) ரொட்டியின் மதிப்பைக் கணக்கிடுகையில் சேர்த் துக் கணக்கிடுவதால், ரொட்டி என்ற பண்டத்தைக் கூட்டும் இடத்து இயந்திரத்தின் மதிப்பை மீண்டும் ஒரு முறை கூட்டுதல் தவருகும். ஓர் இயந்திரத்தின் மதிப்பு அல்லது அதனை ஆக்கப் பயன்பட்ட வளங்களின் மதிப்பு ஆகியவை ரொட்டியின் மதிப்பி லிருந்து கிடைக்கப் பெற்றவை (derived). ஆதலால், அதன் மதிப்பு மாவின் மதிப்பை ஒத்திருக்கிறது.

முதற் கருவிப் பொருள்களை நாட்டின் ஆக்கத்துடன் இணைக்கக் கூடாது என்ற வாதம் (a) உற்பத்தி செய்யப்பட்ட முதற் கருவிப் பொருள்கள் எல்லாம் மற்ற முதற்கருவிப் பொருள்கள் பழமை யாகும்போது அவற்றைப் பதிலீடு செய்யப் பயன்பட்டால்; (b) அம்முதற் கருவிப் பொருள்கள் பழமையாதல் காலப்போக்கில் இடையூறு இல்லாமல் நிகழ்ந்தால் வளம் பெறும் ரொட்டி உற்பத்தித் தொழிற்சாலையில் பத்து ஆண்டுகளுக்குப் பயன்படும் இயந்திரங்கள் பத்து அமைக்கப் பெற்றன என்று வைத்துக் கொள்வோம்; அவைகளில் ஒன்று ஆண்டுக்கொரு முறை பழுது அடைந்து பதிலீடு செய்யப்படுகிறது என்றும் வைத்துக் கொள் வோம். அவ்வாறு அமைந்தால் ரொட்டியின் மதிப்பு இயந்தி

ரத்தின் மதிப்பை உள்ளடக்கியதாகும். அதுவும் ரொட்டியின் மதிப்பை எடைபோட மாவின் மதிப்புச் சேருவதைப்போல் அமைகிறது. ஆகவே, ரொட்டி, இயந்திரங்கள் ஆகியவைகளை இறுதிப் பண்டங்கள் எனக் கணக்கிடக் கூடாது. அவ்வாறு செய்தால் ரொட்டி, மாவு, ஆகியவைகளைக் கணக்கிடுதல் எப்படி இருமுறைக் கூட்டாகுமோ (double countings) அதுபோல் இங்கும் அதே தவற்றைச் செய்வோம்.

பழுதடைதலும், பதிலீடு செய்தலும், ஒன்றை யொன்று நடைமுறையில் ஒத்து அமைவது அவ்வளவு எளிதல்ல. எல்லா இயந்திரங்களும் ஒரே ஆண்டில் பழுதடைகின்றன வென்றும், அவற்றையெல்லாம் அதே ஆண்டில் பதிலீடு செய்ய நேரிடுகிறது என்றும் வைத்துக்கொண்டால், பின் வரும் ஒன்பது ஆண்டுகளுக்கு ஒன்றையும் பதிலீடு செய்ய முடியாத நிலையை அடைகிறோம். ரொட்டி என்ற பண்டம் ஒன்றைமட்டும் இறுதிப் பொருள் எனக் கணக்கிட்டால் பத்தாவது ஆண்டில் பொருளாதார அமைப்பின் உற்பத்தி, கடந்த ஒன்பது ஆண்டுகளின் உற்பத்தியைவிட உண்மை யில் மிகுந்து காணும். என்பதைக் கவனிக்கத் தவறிவிடுகிறோம். (அதாவது ரொட்டியின் உற்பத்தி ஒரு நிலையுள்ளதாயும், இயந் திரத்தின் உற்பத்திமட்டும் நடைபெறுகிறது எனக் கொண்டால்),- அல்லது பத்தாவது ஆண்டில் ரொட்டி உற்பத்தியின் குறைவு (வளப்பொருள்கள் ரொட்டி உற்பத்தியைப் பெருக்குவதைத் தவிர்த்து இயந்திர உற்பத்தியைப் பெருக்க மாற்றப்படுவதால்), உற்பத்தி உண்மையில் குறைவாகிறது என்று சொல்ல முடியாது.

எல்லா இயந்திரங்களும், மற்றவைகளை ஈடு செய்வதற்கென உற்பத்தி செய்யப்படுகின்றன என்று கொண்டால், அவை ஆண்டுக் காண்டு நிகழும் உற்பத்திப் போக்கின் படத்தைத் தெளிவாகக் காட்டும். இதற்கு ரொட்டி உற்பத்தி, இயந்திர உற்பத்தி இரண்டையும் ஒன்று சேர்த்துக் குறிப்பிடவேண்டும். இவ்வகைக் கணக்கீட்டு முறையில் இருமுறைக் கூட்டு அடங்கியுள்ளது என உணர்ந்தால், இதனை நாட்டின் மொத்த ஆக்கம் எனக் கூறலாம். நாட்டின் நிகர் ஆக்கம் (net national product) என்பது, இயந் திரப் பணிக்கான செலவுகளை, மொத்த ஆக்கத்திலிருந்து கழித் துப் பெறும் தொகையைக் குறிக்கும். எல்லா இயந்திரங்களும் ஒரே ஆண்டில் பழுதடையும் தன்மையன என்ற நமது எளிய, ஆனால், உண்மைக்குப் புறம்பான உதாரணத்தில் காணும் கணிப்பு (calculations) பின்வரும் அட்டவணை (அதாவது அட்டவணை 2-1-ல் கண்டவாறு அமையும். இதில் இயந்திரப் பதிலீடு நடை பெறும் ஆண்டில் ரொட்டியின் உற்பத்தி ஒரே நிலையில் உள்ளது என்ற எடுகோள் அமைகிறது).

அட்டவணை 2–1.

கருத்தியலான, மொத்த, நிகர் ஆக்கங்கள், ஆண்டுவாரி மொத்தங்கள்
(Hypothetical Gross & Net products, Totals & by Years)

(டாலர்களில்)

| ஆண்டு | ரொட்டி வெளிப்பாடு | இயந்திர வெளிப்பாடு | மொத்த ஆக்கம் | தேய்மானம் | நிகர ஆக்கம் |
|---|---|---|---|---|---|
| 1 | $ 200 | — | $ 200 | $ 40 | $ 160 |
| 2 | 200 | — | 200 | 40 | 160 |
| 3 | 200 | — | 200 | 40 | 160 |
| 4 | 200 | — | 200 | 40 | 160 |
| 5 | 200 | — | 200 | 40 | 160 |
| 6 | 200 | — | 200 | 40 | 160 |
| 7 | 200 | — | 200 | 40 | 160 |
| 8 | 200 | — | 200 | 40 | 160 |
| 9 | 200 | — | 200 | 40 | 160 |
| 10 | 200 | 400 | 600 | 40 | 560 |
| 10 ஆண்டு மொத்தம் | $ 2000 | $ 400 | $ 2400 | $ 400 | $2000 |

ஒரு பொருளாதார அமைப்பின் ஆக்கப் பணியின் போக்கை, ரொட்டி உற்பத்தியின் அளவு வெளியிடுவதை விட, மொத்த ஆக்கம், அல்லது நிகர ஆக்கம், ஆகியவை, அவ் வமைப்பில் ஆண்டுக் காண்டு நிகழும் ஆக்கப்பணியின் போக்கை நல்ல முறையில் வெளிப்படுத்துகின்றன. பத்தாண்டு காலத்தில் நிகழ்ந்த ரொட்டி வெளிப்பாட்டின் மொத்தம், நிகர ஆக்கத்தின் மொத்தம், ஆகியவை ஒரே சமமாக உள்ளதை மேல்காணும் அட்டவணை புலனாக்கும். எனவே, ரொட்டியின் வெளிப்பாட்டைக் கணக்கிடு கையில் இயந்திரங்களின் மதிப்பையும் சேர்த்துக் கணக்கிடுகிறோம்.

நாட்டின் ஆக்கத்தை அளவிடுகையில் பதிலீடு செய்பவை இடையூறு உள்ளதாக அமைந்தாலும், காலப் போக்கில், பதிலீடு களை (replacements) விடப் பொறித்தளவாடங்களை அதிகமாக உற்பத்தி செய்யப்படுவதாலும், முதற் கருவிப் பொருள்களின் மொத்த இருப்பு நிரந்தரமான வளர்ச்சியுறுகிறது என்பதையும் உணரவேண்டும். ஆனால், முதற் கருவிப் பொருள்களின் வளர்ச்சி வெகு விரைவில் 'உண்மை' (true) இறுதிப் பண்டங்கள் வளர்ச்சிக்கு உதவி புரியும். ஆகவே, இறுதிப் பண்டங்கள் வெளிவரும்போது அவைகளைக் கணக்கெடுத்தல் நல்ல முறை என்று சிலர் வாதிக்கி றார்கள். முதலீடு கரையும் தன்மையுடையது என்பதையும், புதிய

முதற் கருவிப் பொருள்களை உற்பத்தி செய்வதற்கான பணிகளைப் பிரதிபலிப்பதில்லை என்பதையும் நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டும்.

ஆகவே, ஓர் ஆண்டின் மொத்த ஆக்கம் என்பது, 'உண்மை' இறுதிப் பண்டங்கள், புதிய முதற் கருவிப் பண்டங்கள் ஆகியவை களின் கூட்டுத் தொகை என்று சொல்வதைப் பகுப்பாய்வாளர்கள் எல்லோரும் விரும்புவார்கள். அதுபோல் நிகர் ஆக்கம் என்பது நுகர்ச்சிப் பண்டங்கள், அரசு உற்பத்தி செய்யும் பண்டங்கள், முதற் கருவிப் பண்ட இருப்புகளின் நிகர உயர்வு – அதாவது பதிலீடு செய்வதைவிட முதற் கருவிப் பண்டங்களின் புதிய ஆக்கம் - ஆகியவைகளின் கூட்டுத் தொகையாகும்.

தேய்வடையும் அல்லது பழையன எனக் கழிக்கப்படும் இயந் திரங்களை ஈடு செய்ய முதற் கருவிப் பொருள்கள் எந்த அளவு பயன்பட்டன என்பதை அளவிட முடியாது. இதனை நன்கு உணர் தல் வேண்டும். கணக்குப் புத்தகங்கள் குறித்து வைத்திருக்கும் நடப்புத் தேய்மானச் செலுத்தீடுகளை நாட்டின் மொத்த ஆக்கத்தி லிருந்து கழித்தால் நாட்டின் நிகர ஆக்கத்தைத் தோராயமாக அளவிட வழி செய்யலாம். ஆனல், நடப்புத்தேய்வு செலுத் தீடுகள், இயந்திரங்கள், 'தேய்வதை' அல்லது அவை 'பயன்படு வதை'க் கணக்கிட முடியாத காரணத்தால் அவை நாட்டு நிகர ஆக்கத் தோராய மதிப்பீடுகளாகும்; எனவே, முதற் கருவிப் பண் டங்களுக்கான மொத்த தேய்மானச் செலுத்தீடுகள், அப் பண்டங் களின் அடக்க விலைக்குச் (cost) சமமாகும் என்பதைமட்டும் நம்ப லாம். ஆகவே, ஏதாவது ஒரு சமயத்தில் (தக்க சமயத்தில் இல்லா விட்டாலும்), நமது நாட்டின் நிகர ஆக்கக் கணக்குகள் ஒரு கழிவு எண்ணிக்கையை உணர்த்தும்; இதனைக் கொண்டு ஆக்கத்தின் இறுதி மதிப்புடன் இயந்திரத்தின் விலை உள்ளடங்கியது என்பதை உணரலாம். இந்த முறை சரியானதாகாவிட்டாலும், ஆண்டுக்கு ஆண்டு நடைபெறும் ஆக்க வேலையின் நெளிவுகளை (fluctuations), முதற் கருவிப் பண்டங்களைக் கொண்டு உற்பத்தி செய்த இறுதிப் பண்டங்களை அளவிட வழி செய்கிறது.

மேலே விவாதித்த பிரச்சினைகளுடன் நெருங்கிய தொடர் புடைய வேறு ஒரு பிரச்சினை, இருப்புப் பட்டியலின் (inventories) மாற்றங்கள் என்பது. ஒரு குறிப்பிட்ட ஆண்டில் (ரொட்டி செய்வ தற்குப் பயன்படும்) மாவைவிட அதிகக் கோதுமை உற்பத்தி செய்தோம் என்று வைத்துக்கொள்வோம். அவ்வாறு வைத்துக் கொண்டால், இவ் வாண்டில் நமது வெளிப்பாடு, ரொட்டி என்ற

இறுதிப்பண்டத்தின் அளவைமட்டும் உணர்த்தாமல், பயன்படுத்தாமல், மிஞ்சியிருக்கும் கோதுமையின் அளவையும் உணர்த்தும். இவ் வாண்டில் மிஞ்சியுள்ள கோதுமையைக் கணக்கில் சேர்க்க மாட்டோம். ஏனெனில், இது அடுத்த ஆண்டில் அதிகப்படி ரொட்டி உற்பத்தி செய்யப் பயன்படும். இதற்குப்பதிலாக இவ் வாண்டு ஆக்கக் கணக்கில், இவ்வாண்டில் உற்பத்தியான இறுதிப் பண்டங்களையும், இடை நிலைப் பண்டங்களின் இருப்புப் பட்டியல் (inventories) அதிகரிப்பையும் சேர்த்துவிடுகிறோம் (அல்லது இருப்புப் பட்டியலின் குறைவைக் கழித்துவிடுகிறோம்; முதல் ஆண்டில் இடை நிலைப் பண்டங்களின் இருப்புப் பட்டியலை, இறுதிப் பண்டங்களை உற்பத்தி செய்யப்பயன்படுத்தினால், இவ் வாண்டின் வெளிப்பாடு என்பது, இறுதிப் பண்டங்களின் வெளிப்பாட்டில் இருந்து இருப்புப் பட்டியல் குறைவுகளைக் கழித்தபின் உள்ள மதிப்பை உணர்த்தும்).

இறுதிப் பண்டங்களின் இருப்புப் பட்டியல்கள் (உற்பத்தி செய்வதைவிட அதிகம் விற்பதால்) மாறுமாகையால், நாட்டின் ஆக்கம் என்பதற்கு, நுகர்ச்சிப் பண்டங்கள், அரசு உற்பத்தி செய்யும் பண்டங்கள், முதற்கருவிப் பண்டங்கள் ஆகியவைகளின் நடப்பு விற்பனைகளுடன், இறுதிப் பண்டங்கள், அல்லது இடை நிலைப் பண்டங்கள் ஆகியவைகளின் இருப்புப் பட்டியல் அதிகரிப்புகளையும் கூட்டி இலக்கணம் அமைக்கலாம். இவ்வாறு இலக்கணம் அமைப்பது முறை. எனவே, இறுதிப் பண்டங்களின் விற்பனை, இருப்புப் பட்டியலின் அதிகரிப்பு ஆகிய இரண்டின் கூட்டுத் தொகையை நாட்டின் ஆக்கம் உணர்த்துகிறது.

மற்றும் ஒரு சரிக்கட்டுப் பதிவு (adjustment entry) மிஞ்சியுள்ளது. இவ் வாண்டு உற்பத்தி செய்த இடைநிலைப்-பண்டங்கள் இறுதிப் பண்டங்கள் ஆகியவைகளின் ஒரு பகுதியை நாம் ஏற்றுமதி செய்கிறோம். இது நம் நாட்டு ஆக்கத்தின் ஒரு பகுதி; எனவே, நமது உள்நாட்டு விற்பனை; இருப்புப் பட்டியல் அதிகரிப்பு, ஆகியவைகளின் கூட்டுத் தொகையுடன் சேர்க்கப்பட வேண்டும். அதுபோல் உள்நாட்டு உற்பத்தியை உயர்த்த நாம் செய்யும் இறக்குமதிகளையும் கவனிக்கவேண்டும். 100 டாலர்கள் மதிப்புள்ள உடையைப் பிரிட்டிஷ் கம்பனி நூல் கொண்டு செய்யப்பட்ட காரணத்தால் அது ஐக்கிய அரசுகள் செய்த 100டாலர் உற்பத்தியைக் குறிக்காது. அது உற்பத்தியைக் குறிக்க வேண்டுமானால், அந்த உடையின் துணியின் மதிப்பைக் கழிக்கவேண்டும். இது நமதுநாட்டு ஆக்க மதிப்பிலிருந்து அதன் கணக்கின் ஒரு பகுதியாக அமையாமல், பிரிட்டிஷ் நாட்டு ஆக்கக் கணக்கின் ஒரு பகுதியாகும். அதை

விடுத்து இவ் வுடையின் உற்பத்திக்கான $ 100 மதிப்பை நமது உள்நாட்டு நுகர்வோர் இறுதி வெளிப்பாட்டின் மதிப்புடன் சேர்த்து வருகிறோம். ஆனால், அவ் வுடைக்குத் தேவைப்பட்ட துணியின் மதிப்பை நாம் ஏற்றுமதிசெய்யும் புகையிலை மதிப்பி லிருந்து கழித்துவிடுகிறோம். இப்படி உருவாகும் நாட்டு ஆக்கத்தின் மொத்தம் சரியானதாகும். ஆனால், மேற்கூறிய கருத்தில் அது அமையாவிட்டால், அது தவறான கருத்தைப் புகுத்தும்.

நாட்டு ஆக்கத்தை எல்லாம் தொழில் நிறுவனங்கள் உற்பத்தி செய்தவை என்றும், அவை விற்கப்படுபவை அல்லது தொழில் நிறுவனங்களின் இருப்புப் பட்டியலுடன் சேர்க்கப்படுபவை என்றும் இதுவரை வாதித்து வந்தோம். ஆனால், உண்மையில் அரசின் பல துறைகள் செய்யும் வெளிப்பாடு விற்கப்படுவதில்லை. ஆனால், அவைகளும் முறைப்படி கணக்கில் சேர்க்கப்பட வேண்டும் என்பதை நாம் உணரவேண்டும். குடும்பத்திற்குப் பயன்படு வதற்காக அவை குடும்பங்களில் உற்பத்தி செய்யப்படுகின்றன. இவைகளின் மதிப்பையும் கணக்கில் சேர்க்கப்பட வேண்டும். ஆனால், அரசத்துறைகளின் வெளிப்பாடு, குடும்பங்கள் செய்யும் உற்பத்தி ஆகியவைகளுக்கு இலக்கணம் அமைத்தல் ஒரு பெரும் பிரச்சினை; அவற்றை மதிப்பிடுதல் மேலும் ஒரு சிக்கலான பிரச்சினை. எனவே, தனிக் குடும்பம், அரசு இவைகள் இல்லாத ஒரு கருத்தியல்பான, எளிய பொருளாதார அமைப்பின் கணக்கு களை முதற்கண் கவனிப்போம்.

## சுருக்கிய அங்காடிப் பொருளியல் அமைப்பில் நாட்டு வருமானமும் நாட்டு ஆக்கமும்

இப் பகுதியின் எடுகோள்கள் (assumptions) பின்வருமாறு:

(1) தொழில் நிறுவனங்கள் மட்டும் உற்பத்தியை உரு வாக்குகின்றன.

(2) தொழில் நிறுவனங்கள், தனிஉடைமை நிறுவனங்கள் அல்லது கூட்டு உரிமை நிறுவனங்கள் எனப் பல வகைப்படும்; ஆகவே, நிறுவனங்கள் பெறும் வருமானம், அவைகளின் உரிமை யாளர்களின் தனி வருமானம் எனப் பிரிக்கப்படவில்லை.

(3) தொழில்துறைகள் செய்யும் உற்பத்தி விற்கப்படுகிறது; மேலும் இறுதிப் பண்டங்கள், (finished products) கச்சாப் பொருள்கள் (raw materials) இவைகளின் இருப்புப் பட்டியலில் மாற்றங்கள் இல்லை.

(4) அரசாங்கம் கிடையாது; எனவே, அரசின் செலவுகள் வரிகள், உதவித்தொகைகள் இவைகள் இல்லை.

(5) பன்னாட்டுப் பொருளியல் தொடர்புகள் இல்லை அதாவது நமது பொருளாதார அமைப்பு மூடிய அமைப்பு (closed economy).

தொழில்துறைகள் மட்டும் உற்பத்தி முழுவதையும் செய்வதால், நாட்டு வருமானம் முழுவதையும் தொழில்துறைகள் மட்டும் சம்பாதிக்கின்றன. இது கூலி, சம்பளம் (salaries) (வேறு பல பணியால் ஈடுகள்), வட்டி, வாரம் (rent), ஊதியப் பங்கு (royalty), சொத்தின் பணிகள், தொழில் நிறுவன உரிமையாளர்களின் இலாபம் போன்றவைகளை உள்ளடக்கியது. இவ்வருமானங்களைத் தொழில்துறையிலிருந்து மக்களுக்கு வரும் ஓட்டங்கள் எனக் குறிப்பிடலாம். இதனைக் கீழ்க்காணும் படத்தின் (2–1) வலக்கைப் பக்கத்தில் குறித்துள்ளோம்.




விளக்கப் படம் 2.1.

அதுபோல் நாட்டின் மொத்த ஆக்கம் முழுவதும் தொழில் துறையிலிருந்து உருவாகிறது. அது நுகர்ச்சிப் பொருள்களின் உற்பத்தி மதிப்பையும், முதற்கருவிப் பொருள்களின் மதிப்பையும் உள்ளடக்கியது. இருப்புப் பட்டியல்களில் மாற்றம் எதுவுமில்லை

என்பது எடுகோள் ஆகையால், இப் பண்டங்களின் உற்பத்தியும், அவைகளின் விற்பனையும் முற்றொருமைகள். இது நாட்டின் ஆக்கம் என்பது நாட்டின் செலவு என்ற கருத்தை எழுப்புகிறது. நாட்டின் மொத்த ஆக்கம் என்பது நுகர்ச்சிப் பண்டங்களுக்காக நுகர்வோர் செலவுகள் அல்லது தொழில் நிறுவனங்களிலிருந்து (வாங்கும்) நுகர்ச்சிப் பண்டங்கள், தொழில் நிறுவனங்கள் தாமே வாங்கும் புதிய முதற்கருவிப் பண்டங்களின் கூட்டுத் தொகை யாகும்.

தொழில் நிறுவனங்களிலிருந்து வாங்கும் பொருள்களுக்கான செலவு தொழில் செய்து பெற்ற வருமானத்தைக் கொண்டு செய்யப்படும் செலவுகளாகும். நுகர்வோரிடமிருந்து தொழில் துறைக்குக் கிட்டும் வருமானம் ஓட்டமாகும் ; இது வேறோர் எதிர் ஓட்டத்தை ஏற்படுத்துகிறது ; இதன் பருமன் தொழில்துறையி லிருந்து நுகர்வோர்க்கு வரும் ஓட்டத்தின் பருமனை ஒத்து உள்ளது. எதிர் ஓட்டத்தின் பருமன் வருமான ஓட்டத்தின் பருமனுடன் முற்றொருமையானுல், நுகர்வோர் ஒன்றைவும் சேமிக்க மாட்டார்கள் ; செலவு ஓட்டத்தின் பருமன், வருமான ஓட்டத்தின் பருமனை மிஞ்சினுல், நுகர்வோர் சேமிப்பின்மையை (dissaving) மேற்கொள்கிருர்கள் ; செலவு ஓட்டத்தின் பருமன், வருமான ஓட்டத்தின் பருமனைவிடக் குறைந்தால் நுகர்வோர் சேமிப்பார்கள். இது படத்தின் கீழ் வரிசையில் குறிக்கப்பட் டுள்ளது.

புதிய முதற்கருவிப் பண்டங்களுக்குச் செலவிடும் ஓட்டங்கள் வேறு ஒரு வகையைச் சாரும். நுகர்வோர் செலவு, நுகர்வோர் வருமானம் ஆகிய இரண்டின் தொடர்புக்குள்ள பொருளில் அமை யாததால், அவை தொழில் செய்து பெற்ற வருமானம் என்று சொல்வதற்கில்லை. உண்மையில், தொழிலிலிருந்து வரும் வருமானம் (income from business) என்ற தனிவகை வருமான மில்லை. தொழில் செய்து வருமானம் ஈட்டப்படுகிறது என்பதில் ஐயமில்லை ; ஆனுல், எல்லா வருமானங்களும் தனி நபர்களின் வருமானங்கள். சில தனி நபர்கள், முதலாளிகள் அல்லது தொழில் நிர்வாகிகள் என்ற முறையில் பல நீள்பயன் சரக்குகளின் (durable goods) மீது பணம் செலவிடுகிருர்கள். தற்போதைய வருமானங் களைச் செலவிடவேண்டும் என்று இவை செலவு செய்யப்பட வில்லை. ஆனுல், எதிர்காலத்தில் வருமானத்தை ஈட்டலாம் எனக் கருதி முதற் கருவிப் பண்டங்கள் மீது செலவு செய்யப்படுகின்றன. முதற் கருவிப் பண்டங்கள் மீது செலவு செய்யும் நிதிகள், இவை களைப் பெற விரும்பும் தனி நபர்களின் கடந்த கால சேமிப்புகளா

கலாம்; அல்லது தொழில் நிறுவனங்களுக்குக் கடனுக வழங்கப் பயன்படும் மற்றவர்களின் சேமிப்பாகலாம்; அல்லது ஒரு பகுதித் தனி நபர்களின் நடப்புச் சேமிப்புகளாகலாம்; அல்லது தொழில் நிறுவனங்களுக்கு, முன்பு அல்லது இப்பொழுது வந்து சேர வேண்டிய நீர்மை இருப்புகளாக (liquid balances) இருக்கலாம்; அல்லது வங்கி அமைப்பு, அரசு ஆகியவை உற்பத்தி செய்த புதிய பணமாக இருக்கலாம். இந் நிதிகள் எவ்வழி வந்தன என்பது முற்றிலும் தொடர்பற்ற பிரச்சினையாகும். இவ் வோட்டம், நுகர்வோர் செலவின் ஓட்டத்துடன் விளக்கப் படத்தின் இடப் பக்கத்தில் ஒன்று சேர்வதைக் காணலாம்.

ஆக, வருமானம், செலவு ஆகிய இரண்டின் வட்ட ஓட்டத்தைப் (circular flow) படமாக்கி விளக்கினேம். தொழில் துறையிலிருந்து தனி நபர்களுக்கு வரும் வருமான ஓட்டம், நாட்டு வருமானமாகும். அதுபோல், மக்களிடமிருந்து தொழில்துறைக்குத் திரும்பவரும் எதிர் ஓட்டம் நுகர்வோர் செலவு என்ற ஓட்டமாகும். இவ் வோட்டத்தின் வீதம் முன் குறிப்பிட்ட ஓட்டத்தின் வீதத்தைவிடக் குறைந்து காணப்படும். இது சேமிப்பின் அளவைக் குறிக்கிறது. நுகர்வோர் செலவு ஓட்டத்துடன் தொழில் நிறுவனங்கள் செய்யும் (மொத்த) முதலீட்டுச் செலவு ஓட்டத்தைச் சேர்த்தால், தொழில் நிறுவனங்களின் வெளிப்பாட்டிற்கான செலவுகளைக் குறிக்கும். இவ் வோட்டம் நாட்டின் மொத்த ஆக்கம் (grow national product) என்பதைக் குறிக்கிறது. தொழில் நிறுவனங்கள் பலவற்றின் செலவு 'உள் ஓட்டம்' (inflow) அவைகளிலிருந்து வெளிக் கிளம்பும் 'வெளி ஓட்டம்' (outflow) ஆகிய இரண்டிற்கும் உள்ள தொடர்பு ஒன்றை மட்டும் நாம் விளக்கவேண்டும்.

இவ்விரு ஓட்டங்களின் வித்தியாசம், தேய்மானச் செலவின் அளவை ஒக்கும் என்பது சிறிது சிந்தித்தால் புலனுகும் கருத்து. தொழில் நிறுவனங்கள் எல்லாவற்றின் 'உள் செல்லும்' இனங்கள் இரண்டு வகை இறுதிச் செலவுகளிலிருந்து வருகின்றன—அதாவது நுகர்ச்சிப் பண்டங்களுக்கான செலவுகள், முதற் கருவிப் பொருள்களுக்கான செலவுகள் ஆகியவை. ஒரு நிறுவனம் வேறு பல நிறுவனங்களுக்கு இடைநிலைப் பண்டங்களை (intermediate goods) விற்பனை கூடச் செய்கிறது; கோதுமையை விவசாயி மாவு அரைக்கும் ஆலைக்கு விற்கிறுன்; மாவு அரைக்கும் ஆலை மாவை ரொட்டிக் கிடங்கிற்கு விற்கிறது; ரொட்டிக் கிடங்கு ரொட்டியைச் சில்லறை வியாபாரிக்கு விற்கிறது. ஆனுல், இவ்வோட்டங்கள் எல்லாம் தொழில் துறைக்குள்ளே ஏற்படுகின்றன. ஒரு

தொழில் நிறுவனத்திற்குள் வரும் ஓட்டங்கள் வேறு பல நிறுவனங்களின் ஓட்டங்களாகும். இதனை விளக்கப் படத்தின் மேல் புறத்தில் குறித்துள்ளோம். நுகர்வோர் வாங்கும் பண்டங்கள் முதற் கருவிப் பண்டங்களின் விற்பனை ஆகிய இவ்விரண்டு மட்டும் தொழில் நிறுவனங்களின் வெளியிலிருந்து கிளம்பித் தொழில் நிறுவனங்களுள் செல்லும் ஓட்டங்களாகும்.

இதுபோல் தொழில் நிறுவனங்களிலிருந்து வரும் வெளி ஓட்டங்கள் வருமானங்களாகும். மற்ற நிறுவனங்களிலிருந்து இடைநிலைப் பண்டங்களைத் தனி நிறுவனங்கள் பெறுகின்றன. ஆனால், அவையெல்லாம் தொழில் துறைக்குள்ளே நின்று விடுகின்றன. இறுதியாக, ஒரு தொழில் நிறுவனத்திற்குள் வருபவையெல்லாம் வெளியேற வேண்டியவை. இவை மற்ற நிறுவனங்களிடமிருந்து வாங்குபவைகளாவும் அல்லது தேய்மானச் செலவுகள் தவிர மற்றவை எல்லாம் வருமானங்களாகவுமாகின்றன. இத் தொடர்பு, இலாபங்களை மிச்சங்கள் (residues) எனக் கருதுவதால் ஏற்படுகிறது. ஒரு பண்டத்தின் விற்பனையிலிருந்து வரும் வருமானம், அப்பண்டத்தின் உற்பத்திக்கான செலவுகள் ஆகிய இரண்டின் வித்தியாசத்தை இலாபம் குறிக்கிறது. நமது எளிய மாதிரியில், பண்டத்தின் உற்பத்திச் செலவு என்பது இடைநிலைப் பண்டங்களைப் பெறுதல் (இது தொழில்துறை முழுவதிலும் ஒன்றை ஒன்று அடித்து நீக்கி விடுகிறது), ஒப்பந்த வருமானச் செலுத்தீடுகள் (கூலிகள், சம்பளங்கள், வட்டி போன்றவை) தவிர தேய்மானச் செலவு ஆகியவைகளை உள்ளடக்கியது. ஆகவே, தொழில்துறை முழுவதற்கும் வரும் விற்பனை ஓட்டங்கள், வருமான ஓட்டங்களுடன் சமமானவை. (அதாவது ஒப்பந்தச் செலுத்தீடுகள், மிச்சச் செலுத்தீடுகள், தேய்மானச் செலவுகள் ஆகியவைகளின் கூட்டுத் தொகையாகும்).

மேற்கூறிய ஓட்டங்களின் தொடர்புகளை விளக்கப் படத்தில் நன்கு சுருக்கிக் காட்டியுள்ளோம். பல்வேறு ஓட்டங்களின் பருமன்களை அவைகளின் அகலம் (breadth) குறிப்பிடுகிறது. வட்டத்தின் இடப்பக்க மேல்புறத்தில் காணும் அளவு – நுகர்வோர் செலவு, முதற்கருவிப் பண்டச் செலவுகள் ஆகியவைகளின் கூட்டுத் தொகையைக் குறிக்கிறது. இது நாட்டின் மொத்த ஆக்கத்திற்குச் சமம். அதுபோல் வட்டத்தின் வலக்கைப் பக்கம் உள்ள அகலத்தின் அளவு நாட்டின் நிகர ஆக்கத்தின் அளவிற்கும், நாட்டு வருமானத்தின் அளவிற்கும் சமம். நாட்டின் நிகர ஆக்கமும், நாட்டு வருமானமும் முற்றொருமைகள் என்பது விளக்கப்படத்தின் வாயிலாக நன்கு புலனாகிறது.

வட்ட ஓட்டத்தின் வேக வீதத்தைக் குறைக்க இரண்டு தொகைகள் (சேமிப்பு, தேய்மானச் செலவுகள் ஆகியவை) உள்ளன எனத் தெளிந்தோம். இவை இரண்டும், புது முதற் கருவிப் பண்டங்களுக்குச் செலவு செய்யும் தொகையின் வழியாக மீண்டும் வட்ட ஓட்டத்துடன் இணைகின்றன. தேய்மானச் செலவுகள், சேமிப்புகள் ஆகிய இரண்டு தொகையை 'மொத்த சேமிப்பு' (gross savings) எனக் குறிப்பிட்டால், இத் தொகை, மொத்த முதலீட்டுக்குச் (gross investment) சமமாகும். அல்லது நிகர முதலீடு (net investment) (அதாவது மொத்த முதலீட்டி லிருந்து தேய்மானச் செலவுகளைக் கழித்தபின்) உள்ள தொகைக் குச் சமமாகும்.

இவைகளைக் குறிகளின் வாயிலாக (algebraically) நன்கு சுருக்கலாம்.

$$GNP \equiv C + GI \text{———————————} (1)$$
$$NI \equiv GNP - D \text{———————————} (2)$$
$$NI \equiv C + S \text{———————————} (3)$$

இங்கு GNP என்பது நாட்டின் மொத்த ஆக்கம்

C ,, நுகர்வோர் செலவு
GI ,, மொத்த முதலீடு (புது முதற் கருவிப் பண்டங் களைப் பெறுதல்)
D என்பது தேய்மானச் செலவு
S ,, தனிப்பட்ட சேமிப்பு

நுகர்ச்சிப் பண்டங்களுக்காக நுகர்வோர் செய்யும் செலவுகளி னுல், தொழில் நிறுவனங்கள் வாங்கும் முதற் கருவிப் பண்டங்களி னுல் மொத்தச் செலவு எழுவதோடு அல்லாமல் அவ்விரு தொகைள் ஒன்றுக்கு ஒன்று சமம் என்பதைச் சமன்பாடு (1) (equation) உணர்த்துகிறது. மொத்த வருமானங்கள் (மொத்த) வெளிப் பாட்டின் மதிப்பிலிருந்து தேய்மானச் செலவுகளைக் கழித்துப் பெறும் தொகைக்குச் சமம் என்பதைச் சமன்பாடு (2) வெளிப் படுத்துகிறது. வருமானங்களைச் செலவு செய்யலாம் அல்லது சேமிக்கலாம் என்பதைச் சமன்பாடு (3) எடுத்துக்காட்டுகிறது.

மூன்றுவது சமன்பாட்டை இரண்டாவது சமன்பாட்டிற்குப் பதிலீடு (Substitute) செய்து மறு ஒழுங்கீடு செய்தால்

$$GNP \equiv C + S + D \text{———————————} (4)$$

என்ற நான்காவது சமன்பாடு கிட்டும். சமன்பாடுகள் (1) & (4) ஒப்பிடுகையில், GI (மொத்த முதலீடு), S+D (மொத்த சேமிப்பிற்குச்) சமம் என்பது விளங்கும்.

அல்லது சமன்பாடு (1)ஐ இரண்டாவது சமன்பாட்டிற்கும் பதிலீடு செய்தால்

$$NI \equiv C + GI - D$$

அல்லது $NI \equiv C + I$ ——————————(5)

இங்கு I (நிகர முதலீடு) $\equiv GI - D$.

ஐந்தாம் சமன்பாட்டையும் மூன்றும் சமன்பாட்டையும் ஒப்பிடும் இடத்து நிகர (net) முதலீடு நிகர (net) சேமிப்பிற்குச் சமம் என்பதுவிளங்கும்.[1]

தகவல்களை இந்த அளவிற்குச் சுருக்கிய பின்னர் சேமிப்புகள் (savings), முதலீடுகள் (investments) ஏன் சமமாக உள்ளன என்பதைச் சொல்லால் விளக்கலாம். நுகர்வோர் செலவுகள், முதலீட்டுச் செலவுகள் ஆகியவை ஏற்படுவதால் மொத்தச் செலவுகள் ஏற்படுகின்றனவென்றும், அவை இரண்டும் ஒன்றுக் கொன்று சமம் என்பதைச் சமன்பாடு (5) விளக்குகிறது. வருமானங்கள் சேமிப்புகளாகவும் அல்லது செலவுகளாகவும் இருக்கலாம் எனச் சமன்பாடு (3) வெளியிட்டது எனக் குறிப்பிட்டோம். எனவே, நுகர்ச்சிப் பொருள்களுக்கெனச், செய்யாத ஒரு தொகை (அதாவது முதலீடு), நுகர்ச்சிப் பொருள்களுக்காகச் செலவு செய்யாத வருமானத்திற்குச் (அதாவது சேமிப்பிற்கு) சமம்.

சேமிப்பும் முதலீடும் ஒன்றுக்கொன்று சமம் என்பதை இந்த அளவிற்குச் சுருக்கினுல், இவைகளின் சமத்துவத்தைச் சொல்லால் நன்கு விளக்கலாம். நிகர முதலீடு (net investments) ஒருவகைச் செலவு அல்ல; ஆனுல், அது ஒரு கருத்தியல்பான காரணி எனச் சிக்கல்படுத்தினுல் அதன் விளக்கம் சொல் அளவில் புலனுகாது. இத்தகைய சிக்கலான நிலையை அடைந்த பின்னர், உண்மை உலகில், சேமிப்பு, முதலீடு ஆகிய இரண்டின் சமத்துவத்தைச் சொல்லால் விளக்கமுடியாது. இச் சிக்கலான நிலை, உண்மை

1 மாணவர்கள் பக்கம் 33 (மூலநூல்)-ல், காணும் விளக்கப் படத்தைக் கொண்டு அல்லது மேல் காணும் சமன்பாடுகளைக் கொண்டு நாட்டின் ஆக்கம் விற்கப்படாமல், இருப்புப்பட்டியலுடன் சேர்ப்பதால் ஏற்படும் சிக்கலான நிலையையும் விளக்கலாம். அப் படங்களிலும், சமன்பாடுகளிலும் இறக்குமதி (imports) (தொழில் நிறுவனங்கள், நுகர்வோர்கள்) செய்பவை; ஏற்றுமதிகள் (exports) (தொழில் துறைகள்) ஆகியவைகளையும் கூடப் புகுத்தலாம்.

உலகத்தில் மட்டுமல்லாமல் நாம் இதுவரை கருதிவந்த எளிய உலகத்திலும் உள்ளது.

பேரியல் பொருளாதாரக் கோட்பாட்டின் பெரும் பகுதி மேற் கூறிய சிக்கலான சமூகக் கணக்கீட்டு முறையில் பயன்படுத்தி உள்ளது. மற்ற இலக்கியங்களில் காணப்படாத அளவிற்கு, கீன்சு எழுதிய 'தொழிலுக்கான பொதுக் கோட்பாடு' என்ற நூல் (Keynes: General Theory of Employment), இம் முறையைப் பெரு வாரியாகப் பயன்படுத்தியுள்ளது. அரசைத் தவிர்ப்பதற்கும், அதன் கணக்குகளைப் பயன்படுத்துவதின் காரணத்தை எளிதில் உணரலாம். தடையில்லா அங்காடி (free markets), தனி நடத்தை ஆகிய கருத்துகளை - அதாவது வருமானங்களைப் பெறவும், அவற்றைச் செலவு செய்யவும், தனிக்குடும்பங்கள் மேற்கொள்ளும் வழிகள், ஆக்கக் காரணிகளை வாடகைக்கு அமர்த்தத் தொழில் நிறுவனங்கள் கடைப்பிடிக்கும் முறைகள் - போன்றவைகளைப் பொருளாதாரக் கோட்பாடு வழி வழியாக ஆராய்ந்து வந்தது. இச் செயல்கள் எல்லாம் அங்காடியுடன் தொடர்புடையவை மட்டுமல்ல; அவை அங்காடியால் பாதிக்கப்படுபவை. அரசின் செயல்கள் குறிப்பாக, வரி விதித்தல், கடன் வாங்குதல், செலவு செய்தல் — போன்றவைகளை அங்காடிகள் நிர்ணயிப்பதில்லை. அரசியல் முறை, அரசின் செலவுகளை நிர்ணயிக்கிறது. இம் முறையைச் சமூக இயலின் வேறோர் அங்கம் அதாவது அரசியல் நூல் ஆராய்கிறது.

அரசின் நடவடிக்கைகள் சில சமயங்களில் அங்காடி நடவடிக்கைகளை ஒத்திருக்கும். வரி விதித்தல், கடன் வாங்குதல், பணக் கடன் கொடுத்தல் போன்ற சில அரசின் முடிவுகள் சமூகத் தரத்தை ஒத்திருப்பதற்காகவும், அங்காடி விளைவுகளைத் தடுக்கவும், மாற்றியமைக்கவும், சில சமயங்களில் மேற்கொள்ளப்படுகின்றன. இத்தகைய நடவடிக்கைகளைச் சமூகச் சீர்திருத்தங்களுக்காக, அரசு மேற்கொள்ள வேண்டுமானால், முதலில் நாம் அங்காடி நடவடிக்கைகள் எவ்வாறு உள்ளன என்பதை ஆராய வேண்டும். எனவே, அரசேயில்லாத ஓர் அமைப்பை நாம் எடுகோளாகக் கொள்ளுதல் நன்று. இதனை கோட்பாடு மேற்கொண்டுள்ளது. அரசேயில்லாத ஓர் அமைப்பு எளிய கணக்குகளைக் கொண்டது; அவ்வமைப்பில் நாட்டின் நிகர ஆக்கம் நாட்டு வருமானத்திற்குச் சமம். கூட்டு அமைப்புகள் (Corporations) கூட ஓர் அமைப்பில் இல்லை என்று மேலும் கொண்டால், நாட்டு வருமானம், நாட்டின் ஆக்கம் ஆகிய இரண்டும் செலவுக்கான வருமானத்திற்குச் சமம்.

கோட்பாடு கண்ட பல பொதுக்கருத்துகள் உவமைக்குப் பொருந்துமா என்று சோதனை செய்வதற்கும்; கோட்பாடு கண்ட விடைகள் நடைமுறையில் காணும் பல சிக்கல்களுக்கு விடையாகுமா எனச் சிந்திப்பதற்கும், அரசு அல்லது கூட்டமைப்புகள் உள்ள அமைப்பைக் கொண்ட வரம்பினுக்குள் செயல்புரிய வேண்டும். இதற்காக, மேல் காட்டிய சமூகக் கணக்குகளைவிட மிகவும் சிக்கலான கணக்கு முறைகளைப் பயன்படுத்தவேண்டியவர்கள் ஆகிறோம். கோட்பாடு கண்ட உண்மைகளைக் கிடைத்த தகவல்களுடன் பொருத்திப் பார்ப்பதற்கும், அவைகளைக் குறிப்பிட்ட சில கொள்கைப் பிரச்சினைகளுக்குப் பயன்படுத்துவதற்கும், நடைமுறை உலகில் காணும் சமூகக் கணக்குகளை நன்கு கற்றல் வேண்டும். இதனை மூன்றும் அதிகாரத்தில் காண்போம்.

# 3. ஐக்கிய அரசுகளின் நாட்டு வருமானமும், ஆக்கக் கணக்குகளும்[1]

## (United States National Income & Product Accounts)

நாட்டு வருமானம், நாட்டு ஆக்கம் என்ற இவ்விரு அடிப்படைக் கருத்துகளை மொத்தம், நிகரம் என்ற இருவகையில் இது வரை நன்கு விமர்சனம் செய்தோம். இவ்வடிப்படைக் கருத்துக்களின் தொடர்புகள் மிகவும் எளிய பொருளாதார அமைப்பில் எப்படி உள்ளன என்பதையும் கவனித்தோம். ஆனுல், இவைகளில் ஒன்று, வருமானத்தை அல்லது ஆக்கத்தை எவ்வாறு அளவிடுகிறது என்பது அதனுடன் தொக்கிய கருத்து எனக் கொண்டோம். பின்வரும் பிரிவுகளில், ஒரு பொருளாதார அமைப்பில் உள்ள தொழில், அரசு, குடும்பம், மற்றப் பிரிவுகளின் வருமானத்தை

1 இவ்வதிகாரத்தின் விவரங்கள் எல்லாம் ஐக்கிய அரசு வணிகத்துறை மேற்கொள்ளும் தற்கால முறைகளை ஒட்டியவையாகும். இத்துறை ஐக்கிய அரசுகளின் நாட்டு வருமானம், ஆக்கம் ஆகியவைகளுக்கான விவரங்களை மதிப்பிடுவதோடல்லாமல், அவைகளை வெளியிடவும் செய்கிறது. வணிகத்துறையின் ஆராய்ச்சி முறை, அதன் இரு அடிப்படை வெளியீடுகளில் அடங்கி உள்ளது. பொருளாதாரத்தைக் கற்கும் ஒவ்வொரு மாணவனும் இவைகளை நன்கு பயிலவேண்டும். 'நாட்டு வருமானம்' 1954ஆம் ஆண்டுப் பதிப்பு (national income 1954 edition) என்ற வெளியீடு, அடிப்படைக் கருத்துகளை நன்கு விவாதித்துள்ளது அதோடு அல்லாமல், அவைகளின் மதிப்பீட்டுக்கான ஆராய்ச்சி முறைகளையும் விவாதிக்கிறது. மேலும், 1929ஆம் ஆண்டு முதல் 1953ஆம் ஆண்டுவரை கிட்டிய விவரங்களை நன்கு வெளிப்படுத்துகிறது. ஐக்கிய அரசுகளின் வருமானமும் ஆக்கமும் [1958ஆம் ஆண்டு நவம்பர் மாதம் வெளியிட்டது], 1946ஆம் ஆண்டு முதல் 1957ஆம் ஆண்டு வரையுள்ள திருத்தப்பட்ட மதிப்பீடுகளை வெளிப்படுத்துகிறது. அது ஆக்கம், வருமானம், ஆகியவைகளின் நவீன நிலைகுலைவுகளை வெளிப்படுத்தல், கருத்தியலான மாற்றங்கள் பலவற்றை உணர்த்தல், ஆராய்ச்சிமுறை, புள்ளி இயல் விவாதம் ஆகியவைகளைச் செப்பனிடுதல் போன்ற பலவற்றை, மிகவும் சிறப்பாக வெளிப்படுத்துகிறது. ஐக்கிய அரசுகளின் தேசியப் பொருளாதாரக் கணக்குகளின் விமர்சனம் மதிப்பீடு, சிபார்சுகள் என்ற உணர்ச்சியுள்ள நூலையும் காண்க. இவைகளைத் தேசியக் கணக்குகள் மறு ஆராய்ச்சிக் குழு [தேசிய பொருளாதார ஆராய்ச்சிக் குழு, 1958] வெளிப்படுத்தியது.

அளவிடுவதைப் பற்றிக் கவனிப்போம். இந்தப் பணியில் அவ்வமைப்பின் வருமானம், ஆக்கம் ஆகியவைகளின் தொடர்புகளைக் கண்டுபிடிப்பதோடு நிற்காமல், அமைப்பின் பல்வேறு பகுதிகள், பிரிவுகளிலிருந்து வரும் பொருளாதார ஓட்டங்களைக் கொண்டு ஒரு தேசியக் கணக்கு முறையை அமைக்க முடியும் என்பதையும் காணலாம். தொழிற் பகுதிகளின் கணக்குகளை ஆராயத் தொடங்குவோம். நாட்டில் கிட்டும் வருமானம், வெளிப்பாடு ஆகியவைகளின் பெரும்பகுதி இந்தத் துறையிலிருந்து வருவதாகும். அதோடு மட்டுமல்லாமல் அதனை அளவிடும் முறை நுட்பங்களையும் அளிக்கிறது.

## தொழிலாக்கமும் வருமானக் கணக்கும்
## (The Business Product & Income Accounts)

அண்மையில் திருத்தி அமைக்கப்பட்ட ஐக்கிய அரசுகளின் வருமான, ஆக்கக் கணக்குகளில் தொழில் பிரிவுக்கான (business sector) சுருக்க அட்டவணை காணப்படுவதில்லை. கணக்குகளைச் சுருக்கமான முறையில் வெளியிடவேண்டுமென்ற காரணத்தால் இது தள்ளப்பட்டது என விளக்கம் கூறலாம். ஆயினும், இது இடம் பெறுதது ஒரு பெரும் இழப்பை விளைவிக்கிறது. 'புறக் கணிக்கப்பட்ட தொழில் கணக்குகள், நாட்டு ஆக்கத்தையும், தொழில்துறையை ஒத்த மற்றத் துறைகளின் கணக்கீடுகளையும் பிணைப்பதற்கு ஏற்றதொரு கருத்தியல் பாலமாகப் பணிபுரிகிறது.'[1] என்று 'ஐக்கிய அரசுகளின் வருமானம், ஆக்கம்' என்ற நூலின் ஆசிரியர்களும் ஒப்புக்கொள்கிருர்கள். இந்தக் 'கருத்தியலான பாலத்தை' அமைப்பதில் நாம் குறிப்பாக நாட்டமுடையவர்கள் ஆதலால், நாம் அளிக்கும் கணக்குப் பட்டியலில் தொழில்துறைக் கணக்குகளுக்குத் தனி இடம் தந்துள்ளோம்.

தொழில்துறை வருமானம், ஆக்கக் கணக்குகளுக்குத் தேவைப்படும் விவரங்களைத் தொழில் நிறுவனங்களின் ஆதாயம் இழப்பு அல்லது வருமான அறிக்கைகளை ஒருங்கிணைத்துச் சரிக்கட்டுதலால் அமைக்கலாம் என்று கருத்தியல் வழக்கில் கூறலாம். ஒரு தொழில் துறையின் ஆதாய இழப்பு அறிக்கை, அத்துறை குறிப்பிட்ட ஒரு காலத்தில் ஈட்டும் ஆதாயத்தையும் (அல்லது அதன் இழப்பையும்) அத்தொழில் நிறுவன உரிமையாளர்களுக்குத் தெரிவிக்கும் பணியைப் புரிகிறது. அதன் அடிப்படை உருவம் மூன்று தலைப்புகளை உள்ளடக்கியதாகும். (a) விற்பனைகளின் மொத்த வருமானம், தொழில் சாரா மற்ற வருமானம் ஆகியவைகளின்

1 முன் குறிக்கப்பட்ட நூல் பக்கம். 51. (op. cit. p. 51)

கூட்டுத்தொகை (b) விற்ற பண்டங்களின் அடக்கம் (costs); (c) ஆதாயம் (இலாபம்), இது (a)யிலிருந்து (b)யைக் கழித்துப் பெறும் தொகைக்குச் சமமாகும். விற்பனை என்பது, அடக்கவிலை, ஆதாயம் இவைகளின் கூட்டுத்தொகையாதலால், இரண்டு பத்திகள் கொண்ட சமமானக் கணக்கை அமைக்கலாம். அதில் வருமானம் சார் வகைகளை ஒரு புறம் (அதாவது வலப்புறம்) குறித்து, அடக்கங்களையும் ஆதாயங்களையும் மற்றொரு பக்கத்தில் (அதாவது இடப் புறம்) குறிக்கிறோம்.

விற்ற பண்டங்களின் அடக்கம், ஆதாயம் இவைகளின் கூட்டு } சமம் { விற்பனைகள், மற்ற வருமானங்கள் இவைகளின் கூட்டு

மேற்கூறிய ஒவ்வொரு உருப்படியையும் அதன் உபக் கூறு களாக்கும் பணியை இப்பொழுது மேற்கொள்வோம். இவ்வாறு அமைத்தால் அவற்றை மீண்டும் சரிக்கட்டும் பணி எளிதாகும். மேற்கூறியவையின் நிலைகுலைவுகளைத் தரமான கணக்கியல் அமைப்பில் கீழ்க்காணும் வகையில் அமைக்கவேண்டும்.

| விற்ற பண்டங்களின் அடக்கம் (cost of goods sold) | விற்பனைகள் (sales) |
|---|---|
| வாங்கிய பண்டங்கள், பணிகள் மற்ற இல்லத் தொழில்களிடமிருந்து வெளிநாடுகளிலிருந்து கூலிகள், சம்பளங்கள், அவைகளுடன் சேர்ந்தவைகள். தேய்மானம் வரிகள் (இலாபத்தின்மேல் விதிக்கப்படும் வரி நீங்கலாக) செலுத்தப்பட்ட வட்டி செல்லாக் கடன்களும், நன்கொடைகளும். | மக்களுக்கு<br>இல்லத் தொழில்களுக்கு (domestic business)<br>அரசிற்கு<br>வெளிநாடுகளுக்கு |
| இலாபம் : | மற்ற வருமானம்: |
| கூட்டுரிமை (corporate) இலாபம்;<br>கூட்டுரிமை இலாப வரிகள்<br>இருத்திக்கொண்ட சம்பாத்தியங்கள்<br>இலாபப் பங்கீடுகள்<br>அல்லது: உரிமையாளரது வருமானம்<br>அல்லது மக்களின் வாடகை வருமானம் | பெற்ற வட்டித்தொகை (interest received)<br>பெற்ற இலாபப் பங்கீடுகள் (dividend received)<br>உதவித் தொகைகள் (subsidies) |

வலப் புறத்தில் உள்ள விற்பனைகளின் நிலைகுலைவு வாங்குவோரைக் கொண்டு பாகுபாடு செய்யப்பட்டது. ஒவ்வொரு வகைக்கு நல்ல விரிந்ததொரு இலக்கணத்தைக்கூறி ஒவ்வொரு வாங்குபவரையும் அந் நான்கு பிரிவுகளில் ஏதேனும் ஒன்றில் புகுத்தி விடலாம். இடப் புறத்தில் உள்ள அடக்கத்தின் நிலைகுலைவு, பண்டங்களைக்கொண்டு பாகுபாடு செய்யப்பட்டதேயன்றி பணியிலான முறையைக்கொண்டு பாகுபாடு செய்யப்படவில்லை. 'தொழிற்சாலைப் பொதுச்செலவு' (factory overhead) அல்லது 'விளம்பரச் செலவுகள்' (advertising expenses) என்பவைகள் கூலிகள், சம்பளங்கள், தேய்வுச்செலவு, வாங்குதல்கள் என மறு பாகுபாடு செய்யலாம். இலாபத்தை மூவழி பாகுபாடு செய்தல், கூட்டமைப்பான நிறுவனத்திற்குச் சாலப் பொருந்தும். அது கூட்டு நிறுவனம் அல்லது தனி உரிமையாளர் நிறுவனம் என்றிருந்தால், 'உரிமையாளரின் வருமானம்' — அல்லது 'மக்களின் வாடகை வருமானம்' — என்ற தலைப்புகளைப் பயன் படுத்துகிறோம். இறுதியில் கூறப்பட்ட தலைப்பு ஒருவரது உள்ளடங்கிய வருமானம், சொத்துக்களின் வருமானம் என்ற பொருளில் அமைந்தால், 'இலாபம்' என்ற பங்கையும் உணர்த்தும். (தனது, அலுவலகத்திற்கு வாடகை வழங்கும் ஒரு கூட்டமைப்பு 'கூட்டமைப்பு இலாபத்தைச்' சம்பாதிக்கிறது. கூட்டமைப்பில்லாத், தொழில் சொத்து வருமானத்தைத் தனது முக்கிய நிகர வருமானமாகக் கொண்டால் அது உரிமையாளர் வருமானத்தையே ஈர்க்கிறது. இந்தக் கூட்டமைப்பில்லா இலாப வருமானங்கள் உப பாகுபாடு செய்யப்படவில்லை. ஏனெனில், அத்தகைய தொழில் நிறுவனங்கள் தொழில் சேமிப்பு, இலாபப் பங்கீடு ஆகிய இவைகளை வேறுபாடு செய்வதில்லை. இவ்வருமானங்களின்மீது விதிக்கப்பட்ட வரிகள் மக்கள் வரிகளாகக் கருதப்படுகின்றன.

இந்த அறிக்கையில் காணப்படும் அடக்கங்கள் என்பவை, எல்லா இடத்திலும், தலைப்பில் காணப்படும் எல்லாப் பொருள்களுக்கும் ஒரு குறித்த காலத்தில் ஆனச் செலவீடுகளை எப்பொழுதும் குறிப்பன அல்ல என்பதை முதற்கண் குறித்துக்கொள்ள வேண்டும். அந்தக் குறிப்பிட்ட காலத்தில் நடந்த விற்பனைகளுக்கான செலவுப் பங்கீடுகளை மட்டும் அவை குறிக்கின்றன. இவ்விரண்டு கருத்துகளுக்குள்ள வேறுபாடு, முதல் சரக்கு, இருப்புப் பட்டியல்களின் மாற்றங்களின் வேறுபாட்டை உள்ளடக்கியுள்ளது.

புதிய சாதனைகளை உருவாக்க வழங்கும் வாடகைச் செலவுகள், அல்லது புதிய முதல் பொறித்தளவாடம் வாங்குவதற்கான

செலவுகள் ஆகிய இவற்றை, 'கூலிகள், சம்பளங்கள்' அல்லது 'வாங்கிய பொருள்கள்' என்ற தலைப்புகளின் கீழ்க்குறிப்பிடுவதில்லை. இதனை முதல் சரக்குகளை வாங்கவோ அல்லது அமைக்கவோ முன்பு செலவிட்ட அடக்கத்தின் ஒரு விகிதத்தைக் குறிப்பிடும் புத்தகக் கணக்கு முறையால் குறிப்பிடுகிறோம். அதாவது 'தேய்மானம்' என்ற தலைப்பினுல் குறிப்பிடுகிறோம்: ஒரு முதல் சரக்கின் பயன் காலம் முழுவதற்கும் அதன் அடக்கத்தைப் பங்கிடும் முறை மாறும் தன்மையது. ஆயினும், இதில் ஒரு குறிக்கோள் அடங்கி உள்ளது. அதாவது ஒவ்வொரு தனிப்பட்ட காலத்திற்கு அளிக்கப்படும் பங்கீடுகளின் கூட்டுத் தொகை, அம்முதல் சரக்கின் தேய்மான மதிப்பு நீங்கலாக உள்ள மதிப்பிற்குச் சமமாக இருக்கவேண்டும். அதைவிடக் கூடவோ குறைவாகவோ இருக்கக்கூடாது என்பது. ஓர் இயந்திரத்தின் தொடக்க விலை எல்லாம் இவ்வாறு கழிவுப்பெற்றபின் அது பயனுடையதானுல், தேய்மானங்களுக்கான அதிகப்படிச் செலவுகளைப் பதிவு செய்யக்கூடாது. அதன் கணக்குப் புத்தகங்களைப் பொருத்தவரை அந்த இயந்திரத்தின் பணிகள் இலவசமாகக் கிடைத்தவை. அவ்வியந்திரத்தைப் பழுதுள்ளது என்ற காரணத்தால் புறக்கணிக்கப்பட்டால், அல்லது அதன் முழு விலையையும் சரிக்கட்டுவதற்குமுன் பதிலீடு செய்யப்பட்டால், அதன் மீதி அடக்கத்தை (அதாவது அதன் பழைய இருப்பு விலை நீங்கலாக) உள்ளதை அதன் இறுதிப்பணி ஆண்டுக் கணக்கில் பதிவு செய்தல் மரபு, (இத்தகைய ஒவ்வொரு நிலையில், ஒவ்வொரு பயனுள்ள சொத்தின் வாழ்க்கைக்கால இறுதியில் அதன் ஆண்டு அடக்க விலையை மறு கணக்கிடுதலும், அதனுல் முன்பு அறிவித்த அதன் முந்திய ஆண்டுகளின் ஈட்டிய ஆதாயத்தை அல்லது இழப்பை மறு மதிப்பிடுதலும் ஒரு பழக்கம். ஆனுல், இவை நடைமுறைக்கு ஒவ்வாத பழக்கங்கள்.)

ஒரு பயனுள்ள சொத்தின் உண்மைச் செலவீடு அதனுல் உற்பத்தி செய்து விற்ற பண்டங்களின் அடக்க விலை இவ்விரண்டுக்குமிடையே உள்ள வேறுபாடு, இருப்புப் பட்டியல்களின் தொகுப்பு மாற்றங்களினுல் ஏற்படுகிறது. எடுத்துக்காட்டாக ஏதேனும் ஒகு குறிப்பிட்ட காலத்தில் உற்பத்தி உண்டாக்கவில்லை என்றும், அதனுல் கூலிகள் வழங்கப்படவில்லை என்றும், அதன் உற்பத்திக்கான வேறு பொருள்கள் ஒன்றும் வாங்கப்படவில்லை என்றும் வைத்துக்கொள்வோம்.—ஆனுல், பண்டங்கள் மட்டும் (முன்பு உள்ள இருப்புப் பட்டியலில் இருந்து) விற்கப்பட்டன என்றும் வைத்துக்கொள்வோம். இதனுல் கிட்டும் மொத்த வருவாயை 'ஆதாயங்கள்' (profits) எனக் கூறுவதற்

கில்லை. ஆனல், இவற்றை அப் பண்ட விற்பனைக்கான செலவுகள் என மட்டும் குறிப்பிடலாம். ஏனெனில், இருப்புப் பட்டியலில் கண்ட பண்டங்களை உற்பத்தி செய்யக் கூலிகளை முன்பே வழங்கியுள்ளோம்; அதற்கான வேறு பொருள்களை முன்பே வாங்கியுள்ளோம். எனவே, இவற்றைப் பண்ட விற்பனைக்கான செலவுகள் எனக் குறிப்பிடுவதில் தவறு ஏதுமில்லை. அல்லது இவ்வாண்டிற்கான விற்பனை அளவிற்குமேல் பண்டங்களை நாம் உற்பத்தி செய்தோம் என்ற எடுகோளைக் கொண்டால், நாம் இவ்வாண்டில் ஒன்றையும் விற்கவேயில்லை. இதனல் நமது கணக்குகள் இழப்பைக் குறிக்க நாம் விரும்ப மாட்டோம். எனவே, 'அடக்கங்கள்' (costs) என்பவை, உழைப்பு, வேறு பொருள் களுக்கான நடப்புச் செலவுகளை (output) மட்டும் குறிக்காமல், இவ்வாண்டின் விற்பனைகளின் செலவுகளையும் குறிப்பிடுகின்றன. பண்ட இருப்புப் பட்டியல்களின் மாற்றங்கள் முடிந்த பண்டங்களை மட்டும் குறிக்காமல், அவை கச்சாப் பொருள்களின் மாற்றங்களையும், அல்லது செய்வினை முறையில் உள்ள பண்டங்களின் மாற்றங்களையும் குறிக்கின்றன. ஆனல், கணக்கு முறைகளுக்காக நாம் இவ் விரண்டையும் அடிப்படையில் ஒன்ருனவை எனக் கருதியுள்ளோம். இரண்டு ஆண்டுகளுக்கான கச்சாப் பொருள்களின் அளிப்பை இவ்வாண்டு பெற்றிருந்தால், இவைகள் அனைத்தையும் இவ்வாண்டின் விற்பனைக் கணக்கில் பதிவு செய்வதில்லை; ஆனல், அதில் இவ்வாண்டு பண்டங்களுக்காகப் பயன்படுத்திய அளவை மட்டும் பதிவு செய்கிறேம்.

இப் பிரச்சினைக்குத் தீர்வு காணப் பயன்படும் ஒவ்வொரு குறிப்பிட்ட கணக்கியல் முறைகள் மாறுபட்டாலும், உண்மையில் அவைகள் அனைத்தும் 'விற்ற பண்டங்களின் விலையடக்கம்' (cost of-goods sold) எண்களேயாம். இவைகள் குறிப்பிட்ட ஒரு காலத்தில் செலவிடப்பட்ட செலவீடுகளையும், அவற்றிலிருந்து இருப்புப் பட்டியல்களின் அதிகப்படி மதிப்புகளைக் குறைத்தும், (அல்லது இருப்புப் பட்டியல்களின் குறைவுபட்ட மதிப்புகளைக் கூட்டியும்) தொகைகளைக் குறிப்பன.

இருப்புப் பட்டியல்களின் சரிக்கட்டுகளைச் செம்மையாக வெளியிடப் பிரியப்படுவது, இக் கணக்குகளுக்கு நாம் தரும் முதல் மாற்றமாகும். அவ்வாறு மாற்றியமைத்தால், 'விற்பனை, விற்ற பண்டங்களின் விலையடக்கக் கணக்கு (sales & cost of goods account) என்ற தலைப்பை மாற்றி 'உற்பத்தி நடப்புச் செலவீடுகளின் கணக்கு' (Production & current outlay account) என்ற தலைப்பைக் கொடுக்க முடியும். இருப்புப் பட்டியல்களின் ஏற்றத்தைக்

கணக்கின் இரு பக்கங்களிலும் கூட்டி இதனைச் செயல்படுத்து கிறோம். கணக்கின் வலப்புறத்தில் இது 'இருப்புப் பட்டியலின் ஏற்றம்' என்ற தலைப்பில் பதிவு செய்யப்படுகிறது. (இது சில சமயங்களில் எதிர் நிலை (negative) மதிப்பைப் பெறும்) ; கணக்கின் இடப் புறத்தில் காணும் 'விற்ற பண்டங்களின் விலையடக்கம்' என்ற தலைப்பு 'நடப்புச் செலவீடுகள்' என்ற தலைப்பாகும். இருப்புப் பட்டியல்களின் மதிப்பு உயர்ந்தால், நடப்புச் செலவீடுகள் உயரும். அதுபோல் இருப்புப் பட்டியல்களின் மதிப்புக் குறைந்தால் நடப்புச் செலவீடுகள் குறையும். கணக்கின் இரண்டு பக்கங்களையும் ஒரே தொகை கொண்டு மாற்றியமைத்ததால், அவைகளின் மொத்தங்கள் சமமானவைகள். (மூல நூலில் 39-40 ஆகிய பக்கங்களில் காணும் வகையில் ஒரு கணக்கை மாணவர்கள் தங்கள் குறிப்புகளில் அமைக்கவேண்டும். பின்னர் இந்தச் சரிக்கட்டுதல்களையும், இவைகளுக்குப்பின் இவ் வதிகாரத்தில் விளக்கப்படும் சரிக்கட்டுதல்களையும் பொருத்த வேண்டும்).

முன்பு குறிப்பிட்ட வகையில் அமைந்த ஒவ்வொரு தனி நிறுவனங்களின் கணக்குகளை ஒரே கணக்கில் அமைக்கத் தக்க சரிக்கட்டுதல்களையும் நாம் செய்யவேண்டும்.

இதனைச் செய்யும் முன்பு இரண்டு வகை நிறுவனங்களின் (கருத்தியலான) கணக்குகள் ஒருங்கிணைக்கப் பட்டமையை இங்குக் கவனிப்பது அவசியம். தானே குடியிருக்கும் வீட்டின் சொந்தக் காரர் தமக்கே அவ் வீட்டின் பணிகளை விற்கும் 'நிறுவனம்'— என்பது முதல் வகையைச் சாரும். அத்தகைய ஒவ்வொரு நிறுவனமும் ஒரு கருத்தியலான கணக்கைக் கீழ்க்காணும் முறைப் படி அமைத்துள்ளது.

| | |
|---|---|
| கூலி வகையராக்கள் (wages etc.) | விற்பனைகள் : மக்களுக்கு (sales) : (to persons) |
| வாங்கிய பொருள்களும் பணிகளும் (Purchased meterials & services) | |
| தேய்மானம் (depreciation) | |
| வட்டி (interest) | |
| வரிகள் (taxes) | |
| மக்களின் வாடகை வருமானம் (rental income of persons) | |

இந்த இடத்தில் 'விற்பனைகள்' என்பன வாடகைக்காக வீட்டில் குடியிருப்போர் வழங்கும் தொகை கொண்டு ஒப்பிட்ட சொந்தக்காரர் வசிக்கும் வீட்டின் மொத்த வாடகை மதிப்பின் மதிப்பீடுகளைக் குறிக்கின்றன. கூலிகள், வாங்கிய பொருள்களின் மதிப்பு என்பவை, தன் வீட்டை நல்ல முறையில் பாதுகாப்பதற்கான செலவுகளின் மதிப்பைக் குறிக்கின்றன; வீட்டின் அசல் விலை, அதன் மதிப்பிட்ட ஆயுள்காலம் இவ்விரண்டையும் கொண்டு தேய்மானம் மதிப்பிடப்படுகிறது. வரிகளும் (சொத்து வரிகள்) வட்டியும் (அடைமானப் பத்திரங்களின்) இவைகள் குடியிருக்கும் சொந்தக்காரனின் உண்மைச் செலவீடுகள். வாடகை வருமானம் என்பது, அச் சொத்தின் உள்ளடங்கிய வாடகை மதிப்பு, அதன் உண்மையான உள்ளடங்கிய அடக்கங்கள் (costs), இவைகளின் இடையே உள்ளடங்கிய நிகர வேறுபாட்டைக் குறிக்கிறது. இத்தகைய தனி நபரின்—கருத்தியலான—ஆதாய—இழப்புக் கணக்குகள், மற்ற எல்லாக் கணக்குகளைப்போல ஒருங்கிணைக்கப்படுகின்றன. இதனுடன் அல்லாமல் நாம் கீழே விளக்கப் போகும் சரிக்கட்டுதல்களுக்கும் அவை உட்பட்டவை.

தொழில்துறை (business sector) என்ற பிரிவில் காணும் வழக்கத்திற்கு மாறுபட்ட 'நிறுவனம்' அரசின் தொழில் துணிவு (Govt. Enterprise) என்பது. அரசின் தொழில் துணிவு என்பது, ஸ்தல ஆட்சி அல்லது மத்திய ஆட்சிப் பண்டங்களையும் பணிகளையும் உற்பத்தி செய்து, அவற்றைத் தனது அடக்கங்களை ஒட்டிய தோராய விலைக்கு விற்கும், செயலையும், செயலிகளையும் (agency) குறிக்கிறது. இந்த இலக்கணம் சரியானதல்ல; ஆனால், உண்மையில் ஸ்தல ஆட்சித் தொழில் துணிவு, மத்திய ஆட்சித் தொழில் துணிவு இவைகளை எளிதில் வரையறுக்கலாம். ஏதேனும் ஒரு அரசாங்கப் பல்கலைக் கழகம் அரசின் தொழில் துணிவு அல்ல: ஏனெனில், அது வழங்கும் பயிற்சி, அதன் அடக்கங்களை (costs) ஒட்டியுள்ளது எனக் கூறமுடியாது. ஆனால், ஐக்கியத் தபால் நிலையம் (The Federal Post Office), இலட்சக் கணக்கில் இழப்பைத் தந்தாலும், அது அரசின் தொழில் துணிவுக்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். முனிசிபல் விசைப்பொறிகள், கழிநீர் அமைப்புகள், அரசாங்க வழிச்சுங்க (tolls) நெடுஞ்சாலைகள்; ஐக்கியப் பணம் கொடுக்கல், போக்குவரத்து, இன்சூரன்ஸ் செயல்கள் போன்றவைகள் அரசின் தொழில் துணிவுக்கான தெளிந்த எடுத்துக்காட்டுகள்.[1]

[1] வரையறுக்கப்பட்ட 47 ஐக்கியச் செயலிகளின் பட்டியலை 'நாட்டு வருமானம்' — 1954 பதிப்பின் 66ஆம் பக்கத்தில் காண்க. இதனுடன் அனுபந்தம் I (exhibit I)க்கான அடிக்குறிப்பு 6 என்பதையும் காண்க.

இத்தகைய தொழில் துணிவுகளின் செயல்களை எல்லாம் தொழில்துறையில் சேர்ப்பதற்காக காரணங்களைப் பின்னர் குறிப்பிட்டுள்ளோம். அவைகளின் கணக்கியல் முறைகளைக் கவனிப்பதில் மட்டும் நாம் இங்கு நாட்டமுடையவர்களாவோம். இதனை —ஐக்கிய அரசுகளின் கணக்குகள்—மிகவும் எளிய முறையில் ஆண்டு இருக்கின்றன. அரசின் தொழில்துணிவு ஒவ்வொன்றின் கணக்குகளைக் கீழ்க்காணும் தர வகையில் அமைக்கலாம்.

| | |
|---|---|
| கூலி வகையராக்கள் (wages etc) | விற்பனைகள் : (Sales) |
| வாங்கிய பண்டங்கள் பணிகள் (Purchased materials & services) | மக்களுக்கு (to persons) |
| அரசு தொழில் துணிவின் நடப்பு உபரிகள் (current surplus of govt. enterprises) | மற்ற உள்நாட்டுத் தொழில்களுக்கு (to other domestic businesses) |
| | வெளிநாடுகளுக்கு (to abroad) |

தொழில் நிறுவன கணக்கில் காணப்படும் தேய்மானம், வட்டி, வரிகள், தொழில் நிறுவனத்தின் ஆதாயம் ஆகிய இவைகளை ஒன்று சேர்த்து, 'நடப்பு உபரி' (current surplus) என்ற தலைப்பில் அடக்கியது இக் கணக்கின் வெளிப்படையான இழுக்கு. இதற்கான குறிப்புகள் போதுமான அளவில் கிடைத்தால், இவ்வுருப்படியின் நிலைகுலைவை மீண்டும் ஒரு முறை நம்மால் மதிப்பிட முடியும். ஒரு சோசியலிச பொருளாதார அமைப்பில் அத்தகைய தொழில் துணிவுகளுக்குச் சிறந்த இடம் ஒதுக்கப்பட்டமையால், அவ்வுருப்படியின் நிலைகுலைவு, அதிகாரத் தன்மையைப் பெறுகிறது. ஆனல், ஐக்கிய அரசுகள் போன்ற ஒரு பொருளாதார அமைப்பில் மேல்கூறிய கணக்கீட்டு முறை சிறந்ததாகும்; அவ்வமைப்பில் அத்தகைய தொழில் துணிவுகளுக்கு மிகவும் குறைந்த ஒரு மதிப்பைக் கொடுத்திருப்பது காரணமாகும்.

நாம் முன்பு விளக்கிய இரு தனிப்பட்ட நிறுவனங்கள் உள்பட எல்லா நிறுவனங்களின் கணக்குகள், மூலநூலில் பக்கங்கள் 39-40 இவைகளில் காணும், சில அல்லாது எல்லாத் தலைப்புகளின், அல்லது மேல் காணும் மாறுவகை தலைப்புகளின்கீழ்ப் பதிவு செய்யப்படுகின்றன. ஒவ்வொரு தனிப்பட்ட தலைப்பின்கீழ் உள்ள எல்லாப் பதிவுகளையும் ஒன்று சேர்த்தால் அவைகள் ஒருங்கிணைக்கப்பட்ட ஒரு தனி ஒருங்கிணைந்த கணக்காகக் காட்சியளிக்கும். அவற்றில் ஒருங்கிணைக்கப்பட்ட எல்லாப் பதிவுகளும் ஒரு தரத் தலைப்பின் கீழ் அமைவதையும் காணலாம். ஒவ்வொரு

பத்தியின் கீழ்க் காணும் ஒருங்கிணைக்கப்பட்ட கணக்குகளின் மொத்தங்கள் சமமானவைகளாக அமையும். இவ்வாறு ஒருங்கிணைக்கப்பட்ட கணக்கின் வலப் புறத்தைப் பார்த்தால், நாம் நாட்டின் மொத்த ஆக்கக் (gross national product) கருத்தை நெருங்குவதுபோல் தோன்றும்; இதில் 'தொழில்களின்' விற்பனைகள், எல்லாத் தொழில் நிறுவனங்களின் இருப்புப் பட்டியல் உயர்வுகள் ('மற்ற வருமானங்கள்' (other incomes) இதனை விரைவில் எடுத்துவிடுவோம்) ஆகியவைகளின் கூட்டுத் தொகையைக் காணலாம். ஆனால், இதன் மொத்தம் (total) தொழில் மொத்த ஆக்க மதிப்பை மிஞ்சி விடுகிறது. இடைநிலைப் பண்டங்களின் விற்பனைத் தொகைகளையும் உடன் சேர்ப்பதால் அவ்வாறு மிஞ்சுகிறது. கோதுமையை மாவாக்க, விவசாயி, மாவு ஆலைக்கு விற்கும் கோதுமையின் மதிப்பு, மாவு ஆலை ரொட்டிக் கிடங்கிற்கு விற்கும் மாவின் மதிப்பு, ரொட்டிக் கிடங்குச் சில்லறை விற்பனையாளருக்கு விற்கும் ரொட்டியின் மதிப்பு, சில்லறை விற்பனையாளர், நுகர்வோர்க்கு விற்கும் ரொட்டியின் மதிப்பு ஆகியவைகள் எல்லாம் சேர்க்கப்பட வேண்டும். ஆனால், நடைமுறையில் இறுதியில் கூறப்பட்டது நீங்கலாக மற்ற எல்லாவற்றையும் தள்ளிவிடுகிறோம்.

இறுதியில் கூறப்பட்ட பேரம் நீங்கலாக மற்ற எல்லா பேரங்களும், கணக்கின் இடப் பக்கம் காணும் மற்ற 'உள் நாட்டுத் தொழில்களிலிருந்து வாங்கியவை' (purchases from other domestic businesses) என்ற தலைப்பில் அடங்கும். விவசாயி கோதுமையை ஆலைக்கு விற்ற தொகை, விவசாயியின் விற்பனைக் கணக்கில் சேரும். (அதாவது மற்றத் தொழில்களுக்கு விற்றவை என்ற உருப்படி). ஆனால், இதே உருப்படி ஆலையின் வாங்குபவைகள் (from other business) என்ற கணக்கில் காணப்படுவதால், இவை இரண்டும் முற்றொருமையான பதிவுகளாகும். இவற்றை நாம் இப்பொழுது ஒருங்கிணைத்து அமைத்ததால், இந்த இடைநிலை பேரங்களின் மொத்தங்கள், கணக்கின் இரண்டு பக்கங்களில் காணப்படும் மொத்தங்களுக்குச் சமமானவைகளாகும். ஒரு தனிப்பட்ட தொழில் நிறுவனம் எதுவும் மற்ற நிறுவனங்களிலிருந்து வாங்கியவைகளை அப்படியே விற்பதில்லை. ஆனால், எல்லா நிறுவனங்களும் ஒன்றுகும்போது, அப் பேரங்களின் மொத்தங்கள் சமமாக அமைய வேண்டும். இதற்குக் காரணம் எளிதில் காட்டலாம். ஒவ்வொரு பேரமும், அதன் எதிர் வழியால் பார்த்தால், அவையெல்லாம் ஒரே பேரமாக அமைகின்றன.

எனவே, இடைநிலைப் பண்டங்களை ஒன்றுக்கு மற்றொன்று விற்கும் முற்றொருமை மொத்தங்களை இக் கணக்கின் இரு பக்கங்

களிலிருந்து தவிர்த்துவிட்டால், தொழில்கள் வழங்கும் மொத்த நாட்டு ஆக்கம் என்ற கருத்தை நாம் உடனடியாக நெருங்க முடியும். கணக்கின் இடப் பக்கத்தில் காணும் 'மற்ற உள் நாட்டுத் தொழில்களிடமிருந்து வாங்கும் வாங்கிய பண்டங்கள், பணிகள் ஆகியவை' என்ற பதிவை முழுமையாகத் தவிர்க்கிறது. வலப் பக்கத்தில் காணும் 'மற்ற உள்நாட்டுத் தொழில்களுக்குச் செய்யும் விற்பனைகள்' என்ற பதிவை இது புறக்கணிக்கிறதா? சற்று நேரம் இதைச் சிந்தித்தால், அதனை இது தவிர்ப்பதில்லை என்ற முடிவுக்கு நாம் வரமுடியும். இந்தப் பதிவு உண்மையில் இரண்டு பாகங்களைக் கொண்டதாகும். இதில் ஒன்று மட்டும் இடப் பக்கத்தில் காணும் உருப்படியை அடித்து நீக்குகிறது. இதன் இரண்டு பக்கங்கள் (1) மற்ற உள்நாட்டுத் தொழில் களுக்குச் செய்யும் இடைநிலைப் பண்டங்களின் விற்பனைகள்; (2) மற்ற உள்நாட்டுத் தொழில்களுக்குச் செய்யும் முதல் சரக்கு களின் விற்பனைகள் என்பவை. விற்பனையாளர்கள் இவ்விரண் டிற்கும் வேறுபாடில்லை என்று உள்ளார்கள். ஆனால், வாங்கு பவர்களோ இவைகளில், முதல் அல்லாத சரக்குகள் (non-capital goods) நடப்புக்காக வாங்கப்பட்டவைகள் ஆதலால், அதனைப் 'பண்டங்கள், பணிகள் ஆகியவைகள் வாங்குதல்கள்' என்ற தலைப்பில் பதிவு செய்கிறார்கள். முதல் சரக்குகளின் வாங்கு தல்களை ஆதாய—இழப்புக் கணக்குகளில் (profit & loss account) நேரடியாகப் பதிவு செய்வதில்லை. ஆனால், விற்பனைக்கான நடப்புச் செலவுகள் தேய்மானத் தொகைகள் என்ற பெயரால் ஆதாயம் கணிக்கப்படுகிறது.

இவைகள் எல்லாவற்றையும் அடித்து நீக்கிய பின்னர், தொழில்களுக்கு, முதல் கணக்குக்கான விற்பனைகள் (sales to business on capital account) என்ற தலைப்புக் கணக்கின் வலப் புறத்தில் மிஞ்சியுள்ளது.

கணக்கின் இரு பக்கங்களிலிருந்து மீண்டும் கழிவு பெறும் பதிவுகள், தொழில்வழி வரும் நாட்டு மொத்த ஆக்கத்தைக் கூட்டும் கணக்குகளை நமக்கு வழங்குகிறது.

கணக்கின் இரு பக்கங்களிலிருந்து கழிக்கப்பெறும் முதல் கழிவுத் தொகை சரிக்கட்டு, வெளிநாடுகளிலிருந்து வாங்கிய பண்டங்களின் மதிப்புத் தொகையாகும். கணக்கின் இடப் பக்கத்தில் காணும் வெளிநாடுகளிலிருந்து வாங்கிய பண்டங்கள், பணிகள் ஆகிய உருப்படியின் எஞ்சியுள்ளதைத் தவிர்த்துச் சரிக்

கூட்டுகிறோம். ஆனால், இந்தப் பதிவு கணக்கின் வலப் புறத்தில் காணப்படுவதில்லை. மூல நூலின் 32-ஆம் பக்கத்தில் குறிப்பிட்டவாறு, தொழில் ஏற்றுமதிகளை அதன் இறக்குமதிகளிலிருந்து கழித்து வெளிநாடுகளுக்கான நிகர விற்பனைகள் என்ற தலைப்பை அமைத்துள்ளோம்.

'மற்ற வருமானம்' (other income) என்ற ஒரு உருப்படியைத் தவிர, கணக்கின் வலப் பக்கத்தில் உள்ளது, தொழில் துறை வழங்கும் நாட்டின் மொத்த ஆக்கம் ஆகும். இது உண்மையான இறுதிப் பண்டங்களின் விற்பனை, (நுகர்வோர் பண்டங்கள், அரசின் பண்டங்கள்), முதல் சரக்குகளின் விற்பனை, வெளிநாடுகளுக்கான நிகர விற்பனை, இருப்புப் பட்டியல்களின் ஏற்றங்கள் (இது உற்பத்தி செய்து ஆனால், விற்காத எல்லா வகைப் பண்டங்களையும் தன்பால் கொண்டது) ஆகியவைகளைக்கொண்டு அமைந்துள்ளது.

(1) தொழில்கள் வாங்கும் வட்டியைத் தொழில்களுக்கு வழங்கும் வட்டியிலிருந்து கழித்து—அதாவது இடப் பக்கத்தில் காணும் பதிவு இப்பொழுது தொழில்கள், தொழில் மயமில்லாத நிறுவனங்களுக்கு வழங்கும் நிகர வட்டி செலுத்துகைக் குறிக்கிறது; (2) தொழில்கள் வாங்கும் இலாபப் பங்கீடுகளை வழங்கும் இலாபப் பங்கீடுகளிலிருந்து கழித்து—அதாவது வழங்கிய நிகரப் பங்கீடுகளை விடுத்து; (3) உதவித்தொகைகளை எதிர்நிலை உருப்படியாகக் கணக்கின் இடப் பக்கத்தில் குறித்து 'மற்ற வருமானம்' என்ற உருப்படியையும் நாம் தவிர்க்கலாம்.

இடப் பக்கத்தில் மிஞ்சியுள்ள உருப்படிகளை வேறு வகையில் மறுவரிசைப் படுத்தலாம். அவ்வாறு மறுவரிசைப் படுத்தினால், வருமானம் ஈர்க்கும் உருப்படிகளை, வருமானம் ஈர்க்கா உருப்படிகளிலிருந்து தனிப்படுத்த ஏதுவாகும். உருப்படிகளின் பெயர்களில் சில மாற்றங்களை ஏற்படுத்தினால் நமது அட்டவணைக் கீழ்க்காணுமாறு அமையும். (நாம் விளக்கிய அத்துணைச் சரிக்கட்டுகளையும் மாணவர்கள் செயல்புரிந்திருந்தால், அவர்களது கணக்குப் பட்டியல் கீழ்க்காணும் பட்டியல் அதாவது அட்டவணை 3-1-ல் காணுமாறு அமையும் என்பதை எளிதில் புரிந்துகொள்வார்கள்).

## அட்டவணை 3 - 1

### ஒருங்கமைத்த தொழில் வருமானம், ஆக்கக் கணக்குகளின் தொகுப்பு (Consolidated Business Income & Product Account)

| தொழில்துறைவழி கிட்டும் நாட்டு வருமானம் (National Income originating in business) | ஒருங்கமைந்த நிகர விற்பனைகள் (Consolidated net sales) |
|---|---|
| வேலையாள்களின் ஈடு கூலிகள் சம்பளங்கள். | மக்களுக்கு (to persons) |
| இவைகளுடன் சேர்ந்த சில ஈடுகள் [a] | அரசிற்கு (to government) |
| நிகர வட்டி | வெளிநாடுகளுக்கு (to abroad) |
| நிகர இலாபப் பங்கீடுகள் | தொழில்களுக்கு முதல் (capital) கணக்குகளுக்காக (to business on capital account) |
| பகிர்வு செய்யாத கூட்டு இலாபங்கள் | இருப்புப்பட்டியல்களின் ஏற்றங்கள் (Increase in inventories) |
| கூட்டு இலாப வரிப்பொறுப்பு | |
| உரிமையாளரது வருமானம் | |
| மக்களின் வாடகை வருமானம் | |
| அங்காடி விலைக்கான சரிக் கட்டுதல்கள் | |
| எதிர்முகத் தொழில்வரிப் பொறுப்பு [b] | |
| தொழில் மாற்றுச் செலுத்துகள் [c] | |
| அரசு தொழில் துணிவின் நடப்பு உபரி | |
| உதவித் தொகைகள் கழிக்கப்பெறவேண்டும் | |
| தொழில்துறை வழி கிட்டும் நிகர நாட்டு ஆக்கத்தின் (உப மொத்தம்) | |
| தேய்மானம் | |
| தொழில் மொத்த ஆக்கத்தின் செலவுகள் (மொத்தம்) | தொழில் மொத்த ஆக்கம் (மொத்தம்) |

(a) சேர்ந்த ஈடுகள் (supplements) வேலை வழங்குவோர் பொதுநல ஈட்டுறுதிக்காக வழங்கும் செலுத்துகள், ஓய்வு ஊதியத்திற்காக வேலை வழங்குவோர் அளிக்கும் செலுத்துகள், பொதுநல நிதிகளுக்கான செலுத்துகள், 'மற்றத் தொழில் வருமானம்' ஆகியவைகளைக் குறிக்கின்றன.

(b) தொழில் இலாபங்களைப் பொருத்தாத எல்லாத் தொழில் வரிகள், நிலம், வீடு, ஆகியவைகளின்மீது விதிக்கப்படும் வரிகளும், சொந்தக்காரர்களே செலுத்தும் வரிகளும்கூட இதனுள் அடங்கும்; வரி விதிக்காமல் அரசு ஈர்க்கும் வருமானப் பொறுப்புகளும் இதனுள் அடங்கும்.

(c) செல்லாக் கடன்கள் (bad debts) (தொழில்கள் ஒன்றுக்கொன்று செலுத்த வேண்டிய எல்லாக் கடன்களும் அடிக்கப்படுகின்றன. இதனால் மக்கள், தொழில்களுக்குச் செலுத்தவேண்டிய செல்லாக் கடன்கள் மட்டும் மிஞ்சும்) தொழில்கள் வழங்கும் அறச்சார்புள்ள செலுத்துகள், பரிசு வகையராக்கள் இதனுள் அடங்கும்.

தொழில்துறையின் வழி வரும் மொத்த நாட்டு ஆக்கம் என்பது, சில சரிக்கட்டுதல்களையும் தேய்மானத்தையும் கூட்டி, கிடைக்கப்பெறும் நிகர நாட்டு வருமானத்திற்குச் சமமானது என்பது மேற்காட்டிய அட்டவணையின் வாயிலாக நன்கு புலனுகிறது. அல்லது நாட்டு ஆக்கம், நாட்டு வருமானத்துடன் கூட்டிய சரிக்கட்டுதல்களின் தொகைக்குச் சமமாகும்.

தொழில் ஆக்கச் செயல்களின் விளைவுகளை நாட்டு வருமானம், நாட்டு நிகர ஆக்கம் ஆகியவை இரு வழிகளில் அளவிடுகின்றன என்பதை நாம் எளிதில் உணர முடிகிறது. சரிக்கட்டுப் பதிவுகள் —எதிர்மறைத்தொழில் வரிகள், மாற்றுச் செலுத்துகள் (transfer payments) வகையராக்கள்—ஆகியவை எண்ணளவில் வேறுபட்ட அளவைகள் ஆனலும், அவை யிரண்டும் ஒரே செயலுடன் தொடர்புடையவை. இவைகளில் ஒன்று—அதாவது ஆக்கத்தைக் குறிப்பது—பண்டங்களை விற்கும் விலைகளை அடிப்படையாகக் கொண்டு இது அளவிடுகிறது. எனவே, நாட்டு ஆக்கத்தைக் கூட்டுகையில், இப் பண்டங்களின் விற்பனை விலைகளையும் கூட்டுகிறோம். மற்றொரு அளவை-அதாவது நாட்டு வருமானம்-என்பது, ஒவ்வோர் ஆக்கக் காரணியின் சம்பாத்தியத்தைக்கொண்டு ஆக்கச் செயலின் விளைவுகளை வெளிப்படுத்துகிறது. எனவே, சிலர் நாட்டு வருமானம் அல்லது நாட்டு ஆக்கம் என்ற ஒரே கருத்துதான் உள்ளது என்றும், இவைகளை 'அங்காடி விலைகள்'—அல்லது 'காரணி அடக்க விலைகள்' — (factor cost) விலைகள் கொண்டு பல வழிகளில் மதிப்பிடலாம். காரணி அடக்கவிலை கொண்டு வெளியிடும் 'நாட்டு வருமானம்' (அல்லது ஆக்கம்) என்பது 'நாட்டு வருமானமாகும்' — அங்காடி விலைகள்கொண்டு வெளியிடும் 'நாட்டு வருமானத்தை' (அல்லது ஆக்கத்தை) 'நாட்டின் ஆக்கம்' எனக் குறிப்பிடலாம்.

இவ்வளவைகளை ஆதாய இழப்புக் கணக்குகளிலிருந்து கணித்தபின், இவைகளை எப்படி அழைத்தாலும், அவை ஏன் வெவ்வேருகக் காணப்படுகின்றன என்பதை எளிதில் உணரலாம். ஒருங்கிணைப்பு, அடித்தல், சரிக்கட்டுதல் ஆகியவைகளைச் செய்த பின்னரும், வலப்பக்கத்தில் காணும் நம் கணக்கைச் சிறப்பாக ஒருங்கிணைத்த விற்பனை எண்ணிக்கை என்று இப்பவும் கூறலாம். தொழில் நிறுவனங்கள், பண்டங்களை உற்பத்தி செய்தமைக்கு ஓடிவரும் டாலர் செலுத்தீடுகளை அது குறிக்கிறது. வேறு பல கழிவுகளைச் செய்த பின்னர், அது பண்டங்களை விற்று அந் நிறுவனம் திரட்டிய மொத்த வருவாயைக் குறிக்கிறது. அவ் வருவாய் அந் நிறுவனம் உற்பத்தி செய்த ஆக்கத்திற்கு உதவி புரிந்த காரணிகளுக்கு வழங்கப்படும், சம்பாத்தியம், அல்லது

வருமானமாகப் பங்கீடு செய்யப்படுகின்றது. அத்தகைய வருமானங்கள் சில சமயங்களில் ஒப்பந்தம் காரணமாக வழங்கப்படுவன;—அதாவது கூலிகள் அல்லது வட்டி வழங்குதல்—அல்லது இலாபம் என்று வரும்பொழுது அது மீதத்திலிருந்து வழங்கப்படும் வருமானமாக அமைகிறது. அத்தகைய பங்கீடுகளில் ஒன்று மீதத்திலிருந்து வழங்கப்படுகின்றமையால் அவைகளின் மொத்தத் தொகை இலாபத்திற்காக ஒதுக்கப்பட்ட மொத்தத் தொகையைக் காலி செய்திடவேண்டும் என்பதை இலாபத்தின் இலக்கணம் வெளிப்படுத்துகிறது. பண்டங்களை விற்றுப் பெறும் வருமானம், மொத்த வருமானத்தைச் சில சமயங்களில் மட்டும் மிஞ்சுகிறது. ஏனெனில், (1) விற்பனை விலையின் ஒரு பகுதி தேய்மானம் என்ற புத்தகப் பதிவுக் குறிக்கிறமையால்; இத் தேய்மானச் செலவு கள் எவருக்கும் வருமானமாகப் பயன்படுவதில்லை; ஆயினும் மற்ற ஒப்பந்தச் செலுத்தீடுகளுடன் இதனையும் கழிக்க வேண்டும். (2) விற்பனை விலையின் மற்றொரு பகுதி நிறுவனங்கள் அரசிற்குக் கட்டாயமாகச் செலுத்தும் வரிகளைக் குறிக்கின்றமையால்; (3) இன்னுமொரு பகுதி செலுத்தீடுகள் (அல்லது இழப்புகளை) குறிக்கின்றமையால்; இவைகளை மாற்றக்கூடிய செலுத்துகள் எனக் குறிப்பிடலாம்; ஏனெனில், இவைகளுக்கும் ஏற்ற ஆக்கப் பணிகளைத் திரும்பச் செய்ய முடியாமையால்; (4) அரசத் தொழில் நிறுவனங்கள் விற்கும் பண்டங்களின் வருவாயில், விற்பனை விலை களுக்கும் (இடை நிலை வாங்குதல்கள் நீங்கலாக), ஆக்கக்காரணி செலவுகளுக்குமிடையே சில சமயங்களில் (நேர் நிலையான அல்லது எதிர் நிலையான) பிளவு ஏற்படுகிறது. இப் பிளவு காரணிகளின் வருமானத்தைக் குறிப்பன அல்ல.[1] பண்டங்களை விற்கும் விலைகள் - காரணிகளின் விலைகளைவிட—உயர்ந்த நிலையில் அமையவேண்டும். அவ்வாறு அமைந்தால்தான் அவை மேற்கூறிய நான்கு செலுத்தீடுகளையும் உறிஞ்ச முடியும். (தொழில் நிறுவனங்கள் வரிகள் செலுத்த வேண்டுமானால், தனது பண்டங்களை உயர்ந்த விலைக்கு விற்கவேண்டும்; அல்லது அதன் வருமானம் குறைந்த அளவில் அமையவேண்டும்). சில சமயங்களில் தொழில் நிறுவனங்களுக்கு உதவித் தொகைகள் (subsidies) வழங்கப்படுகின்றன. அந் நிலையில் அவைகளின் விற்பனை விலை காரணிகளின் விலைகளைவிடக் குறைந்ததாக அமையும். அப்படி

[1] இப் பிளவின் ஒரு பகுதி வட்டியை அல்லது சாதாரணத் தொழில் நிறுவனத்தின் இலாபத்தை ஒக்கும். அவ்வாறு அமைகையில் அது குறிப்பிட்டுக் கூறமுடியாத ஒரு காரணியின் - அதாவது அரசு அல்லது குடிமக்கள் என்ற காரணியின் ஊதியமாக அமைகிறது. இதில் எந்த அளவைக் காரணிகளின் வருமானம் என்ற தலைப்பில் சேர்ப்பது என்பதை அறிய முடியாது. ஏனெனில், அரசின் குடிமக்கள் தங்களது வருமானம் என்று ஓர் அளவைக் குறிப்பிட முடியாமல் போகிறார்கள். ஆனால், சோசியலிச சமுதாயத்தில் நிலைமை வேறு விதமாக அமையும்.

உதவித்தொகை வழங்கப்படா விட்டால், அந் நிறுவனத்தின் விற்பனை விலை, அதன் காரணி விலைகளைவிட உயர்ந்த நிலையில் அமையும். எனவே, உதவித் தொகைகள் நாட்டு ஆக்கம், நாட்டின் வருமானம் ஆகிய இவ்விரண்டிற்குமுள்ள இடைவெளியைச் சுருக்கப் பயன்படுகின்றன. சில சமயங்களில் உதவித் தொகைகள் இடைவெளியைக் கருத்தளவில் எதிர் நிலையுள்ளதாகச் (negative) செய்கின்றன.

நாட்டு வருமானம், நாட்டு ஆக்கம் இவ்விரண்டிற்கும் உள்ள இத் தொடர்பு பொருளாதாரப் போக்கை அல்லது பொருளாதார 'விதி'யை (law) உணர்த்தவில்லை என்பது கண்கூடாக உள்ளது. இவை இரண்டும் அவைகளுக்கான இலக்கணத்தைப் பொறுத்த வரை உண்மைகள். நமது கணக்குகளில் இலாபத்தின் மீதத் தன்மை (residual character of profit) நமது கணக்குகளைச் சமமாக அமைக்கப் பயன்படுகிறது. அதுபோல் அம்மீதத் தன்மை ஒருங்கிணைக்கப்பட்ட கணக்கையும் சமமாக அமைக்கிறது. எனவே, இலக்கண இயல்பளவில் அவை இரண்டும் உண்மைகள் எனக் கூறியது சாலப் பொருத்தமான தொழில்துறையுடன் தொடர்புடைய வேறு மூன்று பிரச்சினைகளின் விளக்கத்தை இந் நூலின் பின்வரும் ஒரு குறிப்பிட்ட இடத்திற்குத் தள்ளிவைத்துள்ளோம். அப் பிரச்சினைகள், சாட்டுகள் (imputations), இருப்புப் பட்டியல் களின் மதிப்பீட்டுச் சரிக்கட்டுதல்கள், (inventory valuation adjustments) (தேய்மானம் நீங்கலான) முதல் நுகர்ச்சிக்கான உதவித் தொகைகள் (capital consumption allowances) ஆகியவை களாகும்.

## ஆக்கமும் அரசின் வருமானமும்
## (Product & Income Government)

அரசின் பல துறைகளிலிருந்து வரும் நாட்டு ஆக்கம், வருமானம் ஆகியவைகளுக்கான விளக்கத்தைக் கீழ்க்காணும் அட்டவணை 3-2-ல் அமைந்தவாறு காணும் அரசின் வருமானம், செலவு கொண்ட அறிக்கையின் வாயிலாக ஒழுங்குப்படுத்தி அமைக்கலாம்.

**அட்டவணை 3–2.**

**அரசின் வருமானங்கள், செலவுகளுக்கான கணக்கு**

(Govt. Receipts & Expenditures Account)

| | |
|---|---|
| பண்டங்கள், பணிகள் ஆகியவைகளைப் பெறுதல் :— (Purchases of goods & services:) | வரிகள் : (taxes) |
| தொழில் துறையிலிருந்து வாங்கியவை | மக்கள்மீது விதித்த வரிகளின் வரவு. |
| வெளிநாடுகளிலிருந்து வாங்கியவை | கூட்டமைப்பு இலாப வரிகளின் வரவு தொழிலுக்கான எதிர் மறை வரிகளின் வரவு. |
| கூலி, சம்பளம் இவைகளின் சேர்க்கை | பொதுநல ஈட்டுறுதிக்கான செலவீடு. |
| மாற்றுச் செலுத்தீடுகள் : (transfer payments) | தொழில் வழங்குவோர் மக்களின் சொந்த செலவீடு. |
| குடிமக்களுக்கு | |
| அந் நிலையங்களுக்குச் செலுத்திய நிகர வட்டித் தொகை | |
| உதவித் தொகை | |
| இவைகளிலிருந்து அரசத் தொழில் நிறுவனங்களில் கிடைத்த நடப்பு உபரித் தொகையைக் கழிக்க வேண்டும். | |
| வருமானம் அல்லது ஆக்கக் கணக்குகளின் உபரி அல்லது பற்றுக்குறை (deficit) (—) | |
| அரசின் செலவீடுகளும் உபரித் தொகைளும் (மொத்தம்) | அரசின் வரவு (மொத்தம்) |

அரசின் எல்லா மட்டங்களில் நடைபெறும் பேரங்கள் எல்லாவற்றின் மதிப்புகளைத் தொகுத்து ஒருங்கமைத்த அறிக்கையாகும். பொதுநல ஈட்டுறுதி நிதிகளின் கணக்குகளும் அரசின் மற்றக் கணக்குகளுடன் தொகுத்து ஒருங்கமைக்கப் பெறுகிறது. அரசு வாங்கியுள்ள சொத்துக்களின் பேரக் கணக்குகளை இவ்வறிக்கை தவிர்க்கிறது. (நிலம், கட்டடங்கள் ஆகியவைகளை அரசு வாங்குதலை இவ்வறிக்கை தவிர்க்கிறது). அரசு பணம் கடன் வழங்கும் பேரங்களும் இக் கணக்கிலிருந்து

தவிர்க்கப்படுகின்றன. அதுபோல் அரசின் தொழில் நிறுவனங்களின் நடப்புக் கணக்குகளும் தள்ளப்படுகின்றன. ஆயினும், அரசின் தொழில் நிறுவனங்கள் வாங்கும் முதல் சரக்குகளுக்கான கணக்குகள் இந் நிறுவனங்களுக்காக வாங்கிய கடன்களுக்குச் செலுத்தும் வட்டித் தொகை ஆகியவை, அரசின் பொது வரவு செலவுத் திட்டப்பட்டியலில் செலவுக்கான பக்கத்தில் பதிவு செய்யப்படுகின்றன. இந் நிறுவனங்களிலிருந்து கிடைக்கும் நடப்பு உபரித்தொகை அரசின் வருமானத்தை நிர்ணயிக்கும் ஒரு காரணியாக அமைகிறது. ஆனால், இதனைப் பட்டியலில் செலவுக்காக ஒதுக்கப்பட்ட பக்கத்தில், எதிர்மறை (negative) உருப்படியாகப் பதிவு செய்யப்படுகிறது.

இக் கணக்கில் காணப்படும் பல பதிவுகளுக்கு விளக்கம் தேவையில்லை. கணக்கின் இடப் பக்கத்தில் காணும் உபரி அல்லது பற்றுக்குறை உருப்படி, சமப்படுத்தும் உருப்படியாக உள்ளது. மற்ற வருமானம், செலவு உருப்படிகளை ஒன்றுபடுத்தக்கூடிய அளவிற்கு இது அமைக்கப் பெற்றுள்ளது. உபரி அல்லது பற்றுக்குறை ஆகிய இவைகளுக்கு நல்ல இலக்கண இயல்புகள் அமையப் பெறுமையால், (சில இயல்புகளை நாம் முன்னமே குறிப்பிட்டுள்ளோம்) இந்த உபரித்தொகை (அல்லது பற்றுக்குறை) நடைமுறையில் புழங்கும் உபரி பட்ஜெட் அல்லது ரொக்க பட்ஜெட்டில் காணப்படும் உபரித்தொகை ஆகியவைகளுடன் பொருந்தாது. எனவே, அது 'வருமானம் அல்லது ஆக்கக் கணக்கின் உபரி அல்லது பற்றுக்குறை (surplus or deficit on income & product account) என வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளது. ஆயினும், முன்கூறப்பட்ட கருத்துகளுடன் இதனை ஒரு வகையில் பொருத்தி அமைக்க முடியும்.

தொழில் நிறுவனங்களிலிருந்து பெற்றவை என்று இடப் பக்கத்தில் காணப்படும் உருப்படியும், தொழில்துறைக் கணக்குகளில் காணப்படும், அரசிற்கு விற்ற பொருள்களின் மதிப்பு உருப்படியும் ஒன்றானவை. தொழில்துறைக் கணக்கில் காணப்படும் ஓர் உருப்படியை இவ்வாறு இரட்டிப்பாக்கி அமைத்தல், அரசின் கணக்கின் வலப்பக்கம் காணப்படும் கூட்டியல்பான நிறுவனங்களின் இலாப வரி, மறைமுகத் தொழில் வரிகள் போன்ற பதிவுகளுக்கும் பொருந்தும். மக்களுக்கு வழங்கப்படும் மாற்றுச் செலுத்தீடுகள் என்பவை, பொதுநல ஈட்டுறுதி நிதிகளுக்கு வழங்கப்படும் செலுத்தீடுகளையும், நேரடி இடர் காப்புதவி (relief) போன்றவைகளை உள்ளடக்கியவையாகும். வெளிநாட்டு மாற்றுச் செலுத்தீடுகள் என்பவை வெளிநாடுகளுக்கான நிகர ரொக்க மாற்றுச் செலுத்தீடுகளை உள்ளடக்கியவை; அண்மையில் வாங்கிய

பண்டங்களின் மாற்றுச் செலுத்தீடுகளைச் சேர்ப்பதில்லை; அதுபோல் கடன்களும், அவற்றின் மறு செலுத்துகளும் கவனிக்கப்படுவதில்லை. செலுத்திய வட்டித்தொகை என்பது நிகரத் தொகையைக் குறிக்கிறது—அதாவது தொழில்துறைக் கணக்குகளில் செய்வதுபோல் அரசு தான் பெற்ற வட்டித் தொகைகள் கழிக்கப் பெறுகின்றன.

அரசின் கணக்கு அறிக்கையில் காணப்படும் பல பதிவுகள் குறிப்பிடும் கால அளவைகள், ஒன்றுனவையல்ல என்பது இக் கணக்கின் குறிப்பிடத்தக்க சிறப்பியல்பாகும். உதாரணமாக, கூட்டியல்பு வாய்ந்த நிறுவனங்களின் இலாப வரி விதிப்பு என்ற பதிவு, இவ்வாண்டில் ஈட்டிய வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு திரட்டப்பட்ட நடப்பு வரிக் குவியல்களை உணர்த்துகிறது. ஆனால், அவை அரசுக்கு உண்மையில் வழங்கிய செலுத்தீடுகளைக் குறிப்பன அல்ல; ஏனெனில், உண்மையில் வழங்கப்பட்ட தொகை, கடந்த ஆண்டு ஈட்டிய வருமானத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆனால், அவ் வரிகளின் நடப்புக் குவியல்கள் தொழில் துறைக் கணக்குகளில் காணப்படும், தொடர்புடைய குவியல்களாகும். ஆனால், ஆள்சார் வரிகளின் தொகையைக் குறிக்குமிடத்து அதனை நடப்பு வரவுகளைக் கொண்டு குறிப்பிடுகிறார்கள். இதனால் நுகர்வோர் நடத்தையைக் குறிப்பதற்கு, நடப்பில் குவிக்கப்படும் பொறுப்பைவிட நடப்புச் செலுத்தீடுகள் பயனுள்ளவைகளாகக் காணப் படுகின்றன. (ஆனால், அவ் விரண்டும் ஓரளவிற்கு வேறுபாடுள்ளவை). அரசின் கணக்கில் காணப்படும் மற்ற உருப்படிகள் நடப்பு ரொக்கத்தை அடிப்படையாகக் கொண்டவையல்ல. எடுத்துக்காட்டாக, அரசு வாங்கும் பண்டங்களை, அவைகள் எந்த ஆண்டில் அரசுக்கு வழங்கப்படுகிறது என்பதைக்கொண்டு பதிவு செய்கிறார்கள். (அதாவது தொழில்துறை அரசுக்குப் பண்டங்களை வழங்கிய தேதிக் குறிப்பை அடிப்படையாகக் கொண்டவை). ஆனால், இவைகளுக்கான செலுத்தீடுகள் மறு ஆண்டில் கொடுக்கப்படலாம்.[1]

இத்தகைய கால வரையறை வேறுபாடுகள்—மற்றும் முன் குறிப்பிட்ட சில பேரங்களின் தவிர்ப்புகள்—ஆகியவை, இக் கணக்கை ரொக்கக் கணக்காக அமைக்க முடியாமல் செய்கின்றன. அல்லது அரசு உறிஞ்சும் அல்லது வெளிப்படுத்தும் பண அளவினால் விளையும் பற்றாக்குறை அல்லது உபரி ஆகியவைகளைக்கூட வெளிப் படுத்த முடியாமல் தடுக்கின்றன.

1 பொதுவாகத் தொழில்துறைக் கணக்குகள் குவியல்களை அடிப்படையாகக் கொண்டவை; ஆள்சார் கணக்குகள் ரொக்கத்தை அடிப்படையாகக் கொண்டவை; எனவே, அரசின் கணக்குகள்—மற்ற இரண்டு துறைகளின் பதிவுகளைப் பிரதிபலிப்பதால்,—அது மேற்கூறிய இரண்டின் கலப்பை அடிப்படையாகக்கொண்டு அமைதல் அவசியம்.

கணக்கில் காணும் மற்ற உருப்படிகளையும்கூட நிலைமாற்றம் செய்ய முடியும். எடுத்துக்காட்டாக, வரிகளையும், வாங்குதல்களையும், எந்த அரசு விதித்த வரி, அல்லது வாங்கிய பண்டம் எனக் குறிப்பிடலாம். அதாவது ஐக்கிய அரசின் வரிகள், வாங்கிய பண்டங்கள், அல்லது மாநில அரசின் வரிகள் வாங்கிய பண்டங்கள்; அல்லது ஸ்தல அரசின் வரிகள் வாங்கிய பண்டங்கள் என நிலை மாற்றம் செய்யலாம். அதுபோல் செலவுகளையும் அவை புரியும் பணிகள் (functions) கொண்டு வரையறுக்கலாம். அதாவது உறுதிப் பொருள்களுக்கான செலவுகள், உறுதியற்ற பொருள்களுக்கான செலவுகள், பணிகளுக்கான செலவுகள், அல்லது அமைப்புச் செலவுகள் (construction expenditure) எனச் செலவுகளைப் பல வகைப் படுத்தலாம்.

நாட்டின் வருமானத்திற்கும் அல்லது நாட்டு ஆக்கத்திற்கும் அரசின் மொத்தப் பங்கு எவ்வளவு என்பதை எளிதில் காண முடியாத வகையில், அரசின் கணக்குகள் பொருத்தப்பட்டுள்ளன. அவ்வாறு அரசின் கணக்குகளை அமைக்க வேண்டுமானால், அது வழங்கும் வெளிச் செலுத்தீடுகள் எல்லாவற்றையும் தொகுத்தமைக்க வேண்டும். அவ்வாறு செய்தால், பயனுள்ள விவரங்களைப் பலியிட நேரிடும். அரசின் பண்டங்கள் (பெரும்பாலும் பணிகள்) விற்கப்படாமையால், தொழில்துறைக் கணக்குகளின் வரவு பத்தி வெளிப்படுத்தும் வகையில் அவைகளின் தொகையை அரசின் வரவு பத்தியில் வெளிப்படுத்த இயலாமல் போகிறது. ஆயினும் அரசின் ஒரு சில செயல்கள் உண்மையில் ஆக்கத் திறமையுள்ளவை ஆதலால், அவற்றை நாட்டின் ஆக்கக் கணக்கில் சேர்த்தல் வேண்டும். ஆனால், எத்தகைய செயல்களைச் சேர்ப்பது? அவற்றை எவ்வாறு மதிப்பிடுவது?

முதல் வினாவைப் பொறுத்தவரை பேராசிரியர் சைமன் குஸ்னட்ஸ் (Professor Simon Kuznets) என்பவர் அறிவித்த கொள்கையை[1]ப் பல பொருளாதார மேதைகள் ஒப்புக்கொண்டுள்ளார்கள். அவர் அரசின் பல பணிகளை இடைநிலைப் பண்டங்களாகக் கருதவேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தினார். இப் பணிகள், தொழில்துறைக் கணக்கில் பதிவு செய்யப்பட்ட வெளிப்பாட்டை உற்பத்தி செய்யப் பயன்பட்டன. ஆனால், அப் பணிகளை முடிந்த பண்டங்களாகக் கருதக் கூடாது. ஆனால், அரசின் பணிகள் இடைநிலைப் பண்டங்களா அல்லது முடிந்த

[1] இதற்கான சுருக்க விரிவுரையை அன்னாரது 'நாட்டு வருமானம்' 'கண்டுபிடிப்புகளின் சுருக்கம்' என்ற நூலின் பக்கங்கள் 131—133 காண்க. அங்குக் கொடுத்துள்ள குறிப்புகளையும் காணலாம். இந் நூலை, தேசியப் பொருளாதார ஆராய்ச்சிக் கழகம், 1946-ஆம் ஆண்டில் வெளியிட்டது. (National Bureau of Economic Research, 1946).

பண்டங்களா என்ற பாகுபாட்டை உறுதிப்படுத்த ஒரு விதமான அளவுகோல் அமையவில்லை. அவ்வாறு கிடைக்கப் பெறுமையால் போலும், ஐக்கிய அரசுகளின் நாட்டு ஆக்க மதிப்பீடு ஒன்றேனும் இவ் வேறுபாட்டை ஏற்றுக் கொள்ளவில்லை.[1] பன்னாடுகளின் பொருளாதார நலத்தை ஒப்பிடுகையில், அரசின் செயல்கள் பெருமளவுக்கு மாறுதல் அடைய அவசியப்படும் காலவரையறையில் ஒரு நாட்டின் பொருளாதார நலத்தை ஒப்பிடுகையில் இது பெருத்த இன்னல் விளைவிக்கும் வரம்பாக அமைகிறது. வருமானக் கோட்பாட்டிற்கு — குறிப்பாகக் குறுங்காலக் கோட்பாட்டிற்கு—இதன் முக்கியத்துவம் மிகவும் குன்றியதாக அமைகிறது. எனவே, நமது முதல் வினா அரசின் எல்லாப் பொதுப் பணிகளும் முடிந்த பண்டங்களின் ஒரு பகுதியாகும் என்ற விடையை நடைமுறையில் பெற்றது.

ஆனால், அவைகளை எப்படி மதிப்பிடுவது? அவைகள் விற்கப் படாமையாலும், அவைகளுக்கு அங்காடி விலையைச் சாட்ட முடியாமையாலும், அவைகளை அவற்றின் அடக்க விலைகளைக் கொண்டு மதிப்பிட வேண்டும். ஐக்கிய அரசுகளின் அதிகாரப் பூர்வமான நாட்டு ஆக்கக் கணக்குகளில் இந்த அடக்கவிலை என்பது உழைப்புச் செலவை மட்டும் குறிப்பிடுகிறது. அது மற்ற எதையும் குறிப்பிடுவதில்லை. மற்றத் தொழில் நிறுவனங்களிடமிருந்து பொதுப் பயனுக்காக, அரசு வாங்கும் பண்டங்கள் எல்லாம் அவைகளின் அங்காடி விலை கொண்டு மதிப்பிடப்படுகின்றன. ஆனால், இவைகள் ஏற்கெனவே தொழில் ஆக்கம் என்ற தலைப்பின் கீழ் ஒரு முறைப் பதிவு செய்யப்பட்டன. அவைகளின் துணைக் கொண்டு அரசு செய்யும் பணிக்கு மதிப்பீடு ஏற்றத்தை 'value added' ஏற்றுக் கொள்வதில்லை. ஆனால், உழைப்புச் செலவுகள் என்ற ஒன்று மட்டும் ஏற்றுக் கொள்ளப்படுகிறது. நாட்டின் ஆக்கத்திற்கும் பொதுப் பள்ளிகள் (Public Schools) வழங்கும் பங்கை, அதன் ஆசிரியர்கள் பெறும் சம்பளங்களைக் கொண்டும், ஏவலர்கள், காவலர்கள் பெறும் சம்பளங்களைக் கொண்டும், அவைகளின் நிர்வாக அதிகாரிகள் பெறும் சம்பளங்களைக் கொண்டும் மதிப்பிடப்படுகிறது. (பண்டங்கள், அளிப்புகள், பொறித் தளவாடங்கள் ஆகியவைகளைப் பொதுப் பள்ளிகள் தொழில் நிறுவனங்களிடமிருந்து வாங்குவோமேயானால், இவைகள் தொழில் துறை விற்று முடிந்த பண்டங்களின் மதிப்பாக, நாட்டு ஆக்கக் கணக்கில் பதிவு செய்யப்படுகின்றன). ஆனால் பொதுப்

1 அடக்க விலையுடன் தொடர்புகொண்ட விலைக்கு அரசு விற்கும் பணிகள் மட்டும் இடைநிலைப் பண்டங்களாகக் கருதப்படுகின்றன. ஏனெனில், அரசத்தொழில் நிறுவனங்கள், தொழில்துறை நிறுவனங்கள் என்ற தலைப்பில் உள்ளடக்கப்பட்டுள்ளன.

பள்ளிக் கல்வியை இலாபம் ஈர்க்கும் தொழில்களாக நடத்தினுல், இதைவிட உயர்ந்த மதிப்பை அது பெறும், என சிலர் வாதம் செய்யலாம். அவ்வாறு அமைகையில் அதனை—அங்காடி மதிப்பிட்ட—பொதுச் செலவுகளைவிட உயர்ந்த விலைக்கு விற்க முடிகிறது.

ஆனுல், அரசின் பணிகளுக்குக் கருத்தியலான 'அங்காடி மதிப்பை'ச் (market value) சாட்டும் முயற்சி தோல்வியடையும். கல்வி என்பது ஒரு பொதுப்பணி. எனவே, வேறு தனித்துறைத் தொழில் நிறுவனம் இதனை (ஓர் அளவிற்கு) நல்ல முறையில் செயல் புரியாது என்ற காரணத்தைச் சமூகம் இதற்குத் தந்துள்ளது. மேலும், அமைதியை நிலைநாட்டல், பொதுச் சுகாதாரம், நாட்டுப் பாதுகாப்பு, அல்லது சாலைகள் அமைத்தல் போன்ற பல அரசினர் பணிகளுக்கும் இந்தக் காரணம் உண்மைக் காரணமாக அமையும். அரசின் பணிகள் ஒரு தனி இடத்தைப் பெற்றமையால், தனியார் துறை தொழில் நிறுவனங்கள் அமைக்கும் அங்காடிவிலை என்ற கருத்து இப் பணிகளுக்கு ஒவ்வாது; ஏன் பொருந்தாது.

ஆயினும், தனியார்துறை வெளிப்பாட்டை மதிப்பிடும் விலை களுக்கு ஒத்த முறையில் அரசின் வெளிப்பாட்டையும் ஒரு நல்ல முறைகொண்டு அளவிட முடியும். இவ்வதிகாரத்தின் முடிவில் காணும் அநுபந்தம் (Appendix) மதிப்பீட்டுப் பிரச்சினைகளை விவாதிப்பதோடு அல்லாமல், அரசின் வெளிப்பாட்டை மதிப்பிடும் முறையைச் செம்மைப்படுத்தத் தேவைப்படும் சில கருத்துரை களையும் வழங்குகிறது.

எனவே, அரசின்வழி கிட்டும் நாட்டு ஆக்கம் (மொத்தம், நிகரம் ஆகிய இரண்டும்) அரசாங்கச் சிப்பந்திகளுக்கு வழங்கப்படும் கூலிகள், சம்பளங்கள், மற்றச் சேர்க்கைகள் ஆகியவைகளைக் கொண்டு அதிகாரப் பூர்வமாக மதிப்பிடப்படுகிறது.

அரசின் வழி கிட்டும் நாட்டு வருமானம் மேல் கூறிய சம்பாத்தி யங்களுடன், அரசாங்கப் பத்திரங்களைப் பெற்றவர்களுக்கு வழங்கப்படும் வட்டித்தொகைக் கூட்டையும் தன்னுள் அடக்கியது என்று ஒரு சிலர் கருதலாம். தனியார்துறை வழங்கும் பத்திரங் களைப் பெறுபவர் அதற்காகச் செய்யும் ஆக்கமுள்ள பணிகள், (அவைகளைப் பொருளாதார கோட்பாடு 'துய்ப்புத் தவிர்ப்பு' (abstinence) காத்திருத்தல்' (waiting) 'நீர்மைத் தியாகம்' (sacrifice of liquidity) எனப் பலவாறு அழைக்கிறது) காரணமாக அவர் பயனைச் சம்பாதிக்கிருர்கள் என்று சொன்னுல், அரசாங்கப் பத்திரங்களைப் பெற்றவர்கள்கூட அதே பணிகளைச் செய்கிருர்கள்.

ஆனுல், இப் பணிகளுக்கான பயனே அதிகப்படி உற்பத்தி மதிப்பிலிருந்து தனியார் துறை, தனது பத்திரங்களே வாங்கியவர்களுக்கு அளிக்கிறது. ஆனுல், பொதுத் துறை அப்படி இல்லே. அதிகப்படி உற்பத்தி மதிப்பிலிருந்து சில சமயங்களில் வழங்கும்; மற்றச் சமயங்களில் வழங்காமலுமிருக்கலாம். தனியார் துறையில் கடன் வாங்குபவர் ஒவ்வொருவரும் வட்டி வழங்குவதற்கு முன்பு தாம் கடன் வாங்கும் நிதிகளே ஆதாயமுள்ள வழிகளில் பயன்படுத்த வாய்ப்புகள் உள்ளனவா என்பதை முதற்கண் உறுதிப்படுத்த வேண்டும். அதாவது அவைகளினுல் விளேயும் பயன்கள், அவைகளுக்கான செலவுகளேவிட உயர்ந்த அளவில் உள்ளனவா என்பதை உறுதிப்படுத்த வேண்டும். இவ்வுபரித் தொகையின் ஒரு பங்கை வட்டி வழங்கப் பயன்படுத்துகிருர்கள். ஒரு வேளே அவர்களது முன்னேட்டம் தவருக அமைந்தாலும்—அதாவது வட்டி வழங்கப் போதுமான பயன்களேப் பெருமற்போனுலும்—இத்தகைய ஆக்கமற்ற நிதிகளுக்கு வழங்கப்படும் வட்டித் தொகைகள், நாட்டு வருமானக் கணக்கில், எதிர்நிலே ஆதாய எண்ணிக்கைகொண்டு சரிப்படுத்தப்படுகிறது.

சில சமயங்கள் அரசும் ஆக்கமுள்ள முதலீடுகளுக்காக நிதிகளேக் கடன் வாங்குகிறது. அந்நிலேயில் அதிகப்படி உற்பத்தி மதிப்பிலிருந்து, கடன் வழங்கியோர்கட்கு வட்டி வழங்கப்படுகிறது. எனவே, இச் செலுத்துக்கான ஊதியத்தை அரசு சம்பாதித்ததாகப் பொருள்படும். ஆயினும் அரசு கடன்கள், (எனவே, வட்டி வழங்குதல்கள்) ஆக்கமுள்ள பொது முதலீடுகள் ஆகிய இவ்விரண்டையும் முற்றெருமைப்படுத்த முடியாது. ஆக்கமுள்ள பொது முதலீட்டைப் பெருமலும் நடப்பு வரி வருவாய்களேக் கொண்டு நிதிமயமாக்கப்படுகிறது; அப்படியிருக்கையில் வட்டி செலுத்துகள் ஏற்படமாட்டாது; ஆகவே, அவற்றை அரசின் முதல் செய்த சம்பாத்தியம் எனக் குறிப்பிடத் தேவையில்லே. அரசு கடன்களேப் பயன்படுத்தக்கூடும் என்பது மட்டுமல்லாமல், சில வேளேகளில் கடன்களே ஆக்கமற்ற பற்ருக்குறைகளுக்கு உண்மையாகப் பயன்படுத்துகிறது — பெரும்பாலும் போரினுல் ஏற்படும் பற்ருக்குறைக்கு-அதனேப் பயன்படுத்துகிறது. போர் அதிக ஆக்கத்தை விளேவிக்கிறது. எனவே, அந்த அதிக ஆக்கத்திலிருந்து அரசு வட்டி வழங்குகிறது என்ற கருத்து எந்தப் பொருளிலும் அமையாது.

அரசப் பணிகள் உருவாகும் நாட்டு வருமானம் என்பதை நாட்டு ஆக்கம்—அதாவது, கூலிகள், சம்பளங்கள், அதற்கான சேர்க்கைகள் அமையப்பெற்ற—நாட்டு ஆக்கம் என்ற அளவுடன்

முற்ருெருமையானது என்ற முறையில் அளவிட வேண்டும். வட்டி இதில் சேர்க்கப்படவில்லை.[1]

அரசத்தொழில் நிறுவனங்களைத் தொழில்துறை நிறுவனங்களின் பகுதிகள் எனக் குறிப்பிடுவதற்கான காரணங்கள் இப்பொழுது தெளிவாகக் காணப்படுகின்றன. அரசின் பொது நிறுவனங்களைப்போல் அல்லாமல், இப்பகுதியின் ஆக்கம் விற்கப்படுகிறது. எனவே, அவற்றின் மதிப்பை நிறைவு பெருத கணக்கியல் அடக்கவிலை முறை கொண்டு மதிப்பிடாமல், அங்காடி விலைகள் கொண்டு மதிப்பிடப்படுகிறது. அத்தகைய நிறுவனங்கள் வாங்கும் பண்டங்களை அரசத் தொழில்துறையின் முடிந்த பண்டங்கள் என முடிவு கட்டுதல் தவறு. (அதாவது இந் நிறுவனங்களை அரசின் பொது நிறுவனங்களுடன் சேர்த்துக் குறிப்பிடுவதுபோல); அது போல் அத்தகைய நிறுவனங்கள் உண்மைத் தொழில் நிறுவனங்களுக்குச் செய்யும் விற்பனைகளை முடிந்த பண்டங்களின் விற்பனைகள் எனக் கொள்ளாமல், இடைநிலைப் பண்டங்களின் விற்பனைகள் எனக் கொள்ளுதல் முறையாகும். அரசத்தொழில் நிறுவனங்களுக்கான தேய்மானச் செலவுக் கணக்குகள், வட்டிச் செலுத்துகள் ஆகியவை இடம் பெருமையால் இம் முறை தவருனது எனக் கொண்டாலும், அரசத் தொழில்துறைகளை அரசின் பொதுத் துறைகளோடு இணைத்துக் கணக்கிடும் முறையைவிட இது சிறந்த முறை என்பது தெளிவு.

## ஆக்கமும் குடும்பங்களின் வருமானமும்

## (Product & Income In Households)

மக்கள் சார் பகுதி கணக்குகளின் சிறந்த பணி அதற்கான இலக்கணத்தை நல்ல முறையில் விளக்குதல் ஆகும். குடும்பக் கணக்குகளைத் தவிர, நுகர்வோர்க்கு வேண்டிய பணிகளைப் படைக்கும் இலாபம் கருதா நிறுவனங்கள் இதனுள் அடங்கும். அவைகளில் அரசினர் நடத்தாத இலாபம் கருதாப் பள்ளிகள், கல்லூரிகள், மருத்துவசாலைகள், கிறித்தவ ஆலயங்கள், கிராமப் பொழுதுபோக்கு நிறுவனங்கள், செஞ்சிலுவைக் கழகங்கள் நுகர்

[1] அரசு வட்டி வழங்குதல்கள் நிகர அளவை அடிப்படையாகக் கொண்டமையால், அவைகளின் கழிவு அரசின் மொத்த வட்டி செலுத்துகளின் தொகையைவிடக் குறைந்த தொகையாய் அமைந்துள்ளது. தொழில்துறை அரசுக்கு வழங்கும் வட்டி செலுத்துதல்கள், குடும்பங்களுக்குச் செல்லும் தொகை அரசின் வழியாகச் செல்கிறது என்று குறிப்பிடப்படுகிறது. எனவே, அது நாட்டு வருமானக் கணக்கில் சேர்க்கப்படுகிறது. நாட்டுக் கணக்குகளில் இன்னல் விளைவிக்கும் இந்த வட்டிப் பிரச்சினைக்கான விளக்கத்தை இந் நூலில் பக்கங்கள் 53—54.ல் காண்க.

வோர்களுக்குப் பயன் அளிக்கும் பொதுச் சொத்துகள், நல நிதிகள் போன்ற தன்னிச்சைக் கழகங்கள் குறிப்பிடத்தக்கவை. இத்தகைய நிறுவனங்கள் (உதாரணமாக மருத்துவசாலைகள்) கூலிகள் வழங்கும்போது, அல்லது அதற்கு வேண்டிய மருந்துகளை வாங்கும்போது செலவிடும் தொகைகள் எல்லாவற்றையும் மக்கள் சார் நுகர்ச்சிச் செலவுகளாகும். தனியார் துறை நடத்தும் இலாபம் கருதா மருத்துவசாலைகள் அளிக்கும் விலைகள், அவைகளின் பற்றுக் குறையைப் போக்க தனிக் குடும்பங்கள் வழங்கும் நன்கொடை ஆகியவைகளை மக்களிடையே நடைபெறும் மாற்றுகள் எனக் கருதி, அவைகளை அதற்கான கணக்குகளில் காட்டுவதில்லை. (தொழில்களிலிருந்து பெறும் நன்கொடைகளைத் தொழில் மாற்றுச் செலுத்தீடுகள் எனக் காட்டப்படுகிறது). ஓய்வுச் சம்பளம் கொடுத்தல் அல்லது நல நிதிகள் வழங்கும் செலுத்தீடுகள் இவை எல்லாம், மக்களிடையே நடைபெறும் மாற்றுகள் எனக் கருதி அவைகள் கணக்கில் காட்டப்படுவதில்லை. ஆனால், வேலை வழங்குவோர் அந் நிதிகளுக்குச் செய்யும் செலுத்தீடுகள் மக்கள் சார் வருமானம் எனக் கணக்கிடப்படுகிறது. (இவைகள் கூலிகளின், சம்பளங்களின் சேர்க்கைகள் எனக் கருதப்படுகின்றன). அதுபோல் அந் நிதி தனது முதலீடுகளுக்காகச் செலுத்தும் வட்டித் தொகை, அந் நிதி சம்பாதித்த காலத்தில், அதனை மக்கள் சார் வருமானம் எனக் கருதப்படுகிறது. மக்கள் சார் துறையின் இலக்கணச் சிறப்பியல்புகளை நாம் நன்றாகக் காக்க முடியும். (அதாவது நாம் ஏற்றுக்கொள்ளும் துறைகள் கணக்கில் அடங்கியவைகளானால் அவைகளைக் காக்க முடியும்). ஆனால், இவ்விலக்கணத்தைப் பயன் படுத்த விரும்புவோர் அனைவரும் இவைகளை நன்கு உணரவேண்டும்; அஃதில்லையேல், அவர்கள் அவைகளைத் தவறான முறையில் பயன்படுத்த ஏதுவாகும்.

மக்கள் சார் கணக்கின் படிவம் கீழ்க்காணும் அட்டவணை 3-3-ல் குறிப்பிட்டவாறு அமையும். அரசின் கணக்குகளைப்போல் இதுவும் நாட்டு ஆக்கம் அல்லது நாட்டு வருமானம் இவைகளை மொத்தங்களாக விளக்கும் வகையில் அமைக்கப்படவில்லை. அதற்குப் பதிலாக இக் கணக்குகள், குடும்பங்களின் மொத்த வருமானம் எவ்வழிகளில் கிடைக்கின்றன; கிடைத்த வருமா னத்தைக் குடும்பங்கள் எப்படிச் செலவு செய்கின்றன என்பவை களைக் குறிக்கின்றன.

அட்டவணை 3–3

மக்கள்சார் வருமான, செலவீடு கணக்குகள்

(Personal Income & Outlay Accounts)

| | |
|---|---|
| மக்கள்சார் நுகர்ச்சிச் செலவுகள் | கூலிகள், சம்பளங்கள் அவைகளின் சேர்க்கைகள் |
| தொழில்களிலிருந்து பெற்றவை | தொழில்களிலிருந்து |
| கூலிகள், சம்பளங்கள், இவைகளுக்கான சேர்க்கைகள். | அரசினின்று |
| | குடும்பங்களிலிருந்து |
| வெளிநாடுகளிலிருந்து பெற்றவை | வெளிநாடுகளிலிருந்து |
| செலுத்திய வட்டித் தொகை | வேலையாளர், வேலை வழங்குவோர் ஆகியவர் வழங்கும் பொதுநல ஈட்டுறுதி செலுத்துகள் நீங்க |
| மக்கள் சார் வரிகள் | |
| மக்கள் சார் சேமிப்பு | |
| | மக்களின் வாடகை வருமானம் |
| | உரிமையாளரின் வருமானம் |
| | தொழில்களும், இலாபத்திற்காகப் பயன்படுத்தும் பண்ணைகளும் |
| | இலாபப் பங்கீடுகள் |
| | மக்கள் சார் வட்டி வருமானம் |
| | அரசின் மாற்றுச் செலுத்துகள் |
| | தொழில்துறை மாற்றுச் செலுத்துகள் |
| மக்கள்சார் செலுத்து, சேமிப்பு (மொத்தம்) | மக்கள் சார் வருமானம் (மொத்தம்) |

இவ்வட்டவணையில் காணப்படும் உருப்படிகளின் பெரும் பங்கைத் தொழில்துறைக் கணக்குகள் அல்லது அரசத்துறைக் கணக்குகள் ஆகியவற்றில் முன்னமே குறிப்பிட்டோம். இதில் காணப்படும் முக்கியமான புது உருப்படி கூலிகள், சம்பளங்கள், அவைகளின் சேர்க்கைகள் என்பவை. இவ்வுருப்படி கணக்கின் வலப்பக்கத்தில் 'மக்கள்சார் வரவுகள்' என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இது கணக்கின் இடப் பக்கத்தில் மக்கள் சார் செலவு என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதுபோல் கணக்கில் காணப்படும் மற்ருெரு புது உருப்படி 'மக்கள் சார் சேமிப்பு' என்பது. இது கணக்கின் இரண்டு பக்கங்களைச் சமப்படுத்தத் தேவைப்படும் மிச்சத்தொகையைக் குறிக்கும் உருப்படியாகும். மக்கள் சார் வருமானம் கூட்டமைப்புப்பெருத நிறுவனங்களின் வருமானம் மொத்தத்தை உள்ளடக்கியதால், மக்கள்சார் சேமிப்பு என்பதும், கூட்டமைப்புப்பெருத தொழில் சேமிப்புகளை உள்ளடக்கியதாகும். நுகர்ச்சிச் செலவுகள் புது வீடுகளை வாங்குவதற்கான செலவுகளைச் சேர்க்காததால், (இவைகளைத் தொழில் நிறுவனங்களுக்கு முதல் கணக்கில் விற்கப்பட்டவை எனக் கருதுவதால்) இவைகளுக்காக, வருமானத்திலிருந்து வழங்கப்பட்ட செலுத்துகளை மக்கள் சேமிப்பில் சேர்த்து விடுகிருேம். மக்கள் சார் சேமிப்பு என்ற இவ்வுருப்படி, அட்டவணைக்குப்பின் உள்ள தலைப்பு உணர்த்தும். எளிய கருத்துடன் பொருந்தாமைக்குக் காரணம் இதற்கான இலக்கணச் சிறப்பியல்புகளாகும். ஆயினும், கணக்கில் குடும்பத்துறைக்கு இலக்கணம் அமைத்த குடும்பத்துறை மொத்த மதிப்பின் ஏற்றத்தை அளவிடுவதில்லை—அதாவது சொத்துகளிலிருந்து பொறுப்புகளைக் கழித்துப் பெறும் தொகையை—அளவிடுவதில்லை.

அடுத்தபடியாக, மக்கள் சார் கணக்கில் காணப்படும் வட்டி என்பது எப்படிக் கருதப்படுகிறது என்பதற்கான விளக்கக் குறிப்புகளைக் கவனிப்போம். கணக்கின் வரவுகள் பத்தியில் 'மக்கள்சார் வட்டி வருமானம்' (personal interest income) என்ற பதிவு காணப்படுகிறது. இதைத் தொழில் நிறுவனம் அரசத் துறைக்கணக்குகளில் காணப்படும் வட்டித் தொகை செலுத்து களுடன், குடும்பத்துறை தனக்குள் செலுத்திய வட்டித் தொகைக் கூட்டுகளாக இருக்கலாம் எனச் சிலர் கருதலாம். அல்லது இது குடும்பத்துறை தனக்குள் செலுத்திய வட்டித் தொகைக் கணக்கின் இடப்பக்கத்தில் அதாவது மக்கள் கணக்கில் செலுத்தீடுகள் பத்தியில் 'செலுத்திய வட்டி' (interest paid) எனக் குறிப்பிடப்பட்டிருக்கிறது எனச் சிலர் ஊகிக்கலாம். ஆனால்,

உண்மையில் இரண்டு ஊகங்களும் தவறானவை. ஏன் அவை தவறானவை என்பதற்குக் கீழ்க்காணும் எண்கள் அடங்கிய எடுத்துக்காட்டு விளக்கம் தருகிறது. (இந்தப் பாகுபாடு வெளி நாடுகளிலிருந்து பெறும் வட்டியைத் தவிர்க்கிறது; ஏனெனில், வெளி-உலக-தொடர்புத் துறையை நாம் இன்னும் அடைய வில்லை. ஆயினும் இதில் அடங்கிய கோட்பாடுகளை, அந்தத் துறையை உள்ளடக்கும் வரை அகலப்படுத்திச் செல்லலாம்).

---

தொழில் துறை (Business Sector)

| | | | | |
|---|---|---|---|---|
| வட்டிச் செலுத்தீடுகள் | | | | |
| குடும்பங்களுக்கு | — | 70 | | |
| அரசுக்கு | — | 20 | | |
| தொழிலுக்கு | — | 100 | | |
| மொத்தம் | | | 190 | |
| வட்டி வரவுகள் | | | | |
| குடும்பங்களிலிருந்து | — | 25 | | |
| அரசிலிருந்து | — | 35 | | |
| தொழில்களிலிருந்து | — | 100 | | |
| மொத்தம் | | | 160 | |
| நிகரவட்டிச் செலுத்துகள் | — | | | 30 |

அரசத்துறை

| | | | | |
|---|---|---|---|---|
| வட்டிச் செலுத்துகள் | | | | |
| குடும்பங்களுக்கு | — | 50 | | |
| தொழிலுக்கு | — | 35 | | |
| மொத்தம் | | | 85 | |
| வட்டி வரவுகள் | | | | |
| குடும்பங்களிலிருந்து | — | 10 | | |
| தொழில்களிலிருந்து | — | 20 | | |
| மொத்தம் | | | 30 | |
| நிகரவட்டிச் செலுத்துகள் | — | | | 55 |

குடும்பத்துறை

| | | | |
|---|---|---|---|
| வட்டிச் செலுத்துகள் | | | |
| குடும்பங்களுக்கு | — | 5 | |
| அரசிற்கு | — | 10 | |
| தொழிலுக்கு | — | 25 | |
| மொத்தம் | | | 40 |
| வட்டி வரவுகள் | | | |
| குடும்பங்களிலிருந்து | — | 5 | |
| அரசிலிருந்து | — | 50 | |
| தொழில்களிலிருந்து | — | 70 | |
| மொத்தம் | | | 125 |
| நிகர வட்டிச் செலுத்து | | | —85 |

தொழில்கள், அரசு, மக்கள்சார் துறைகள் வழங்கும் நிகர வட்டிச் செலுத்தினங்களின் தொகை 30+55—85=0 என்பதை நாம் இங்கே குறிப்பிடக் கடமைப்பட்டுள்ளோம். ஆனால், இந்த எண் மக்கள் சார் வட்டி வருமானக் கணக்கில் இடம்பெற நாம் விரும்பமாட்டோம் என்பது தெளிவு. தொழில்களும் அரசும் வழங்கும் வெளிச் செலுத்தினங்களும் ஒரு குடும்பம் மற்றொரு குடும்பத்திற்குச் செலுத்தும் வட்டிச் செலுத்தீடுகளின் கூட்டுத் தொகை மற்றொரு மொத்த வட்டி வருமானமாக அமைகிறது. அதாவது 30+55+5=90 என்று அமைகிறது. ஆயினும், குடும்பங்களின் வட்டி வரவுகள் தெளிவாக 125 என்று அமைகிறது. இந்தக் கூட்டுத் தொகையை அடைய, தொழில் துறை, அரசத் துறை ஆகிய இருதுறைகளின் வெளிச் செலுத்தினங்களுடன் குடும்பத்துறை வழங்கும் மொத்தக் கூட்டுத்தொகையை (total) உடன் சேர்க்கவேண்டும். அது 30+55+40=125 என்று அமையும். மக்கள் சார் கணக்கின் இடப்பக்கம் அல்லது செலுத்தினங்களின் பக்கம் செலுத்திய வட்டி என்ற தலைப்பில் நாம் புகுத்தும் எண்கள், குடும்பங்கள் செலுத்திய மொத்த வட்டித் தொகையைக் குறிக்கிறது. கணக்கின் வலப்பக்கத்தில் காணும் மக்கள் சார் வருமானம், மற்ற இருதுறைகளில் வழங்கும் நிகர வெளிச் செலுத்தினத்துடன், குடும்பத்துறை வழங்கும் மொத்த வெளிச் செலுத்தினங்களும் கூட்டப்படுகின்றன.

கணக்குகளை மேற்கண்ட முறையில் ஆய்வதின் உள்ளடங்கிய கருத்து என்ன? இது பல குடும்பங்கள் மற்றக் குடும்பங்களுக்கு வழங்கும் வட்டிச் செலுத்தீடுகளை, தொழில், அரசு ஆகிய இரு துறைகள் வழியே நேர்முகமாக அனுப்பப் பயன்படுகிறது என்ற கருத்தாகும். பல குடும்பங்கள் மற்றக் குடும்பங்களுக்கு (மற்ற இரு துறைகள் வழி) வழங்கும் வட்டி ஓட்டத்துடன், தொழில் அல்லது இவைகளிலிருந்து வரும் வட்டி வருமானம் உடன் சேர்க்கப்படுகிறது. அதாவது அத்தகைய வெளிச் செலுத்தீடுகள், உள்வரவுகளால் சரிக்கட்டப்படவில்லை என்பது பொருள். குடும்பங்களுக்குத் தொழில்துறை வழங்கும் கடன்களுக்கான வட்டிச் செலுத்துகளையும் குடும்பங்களுக்குத் தொழில்துறை வழங்கும் மற்றப் பண்டங்கள், பணிகள் ஆகியவைகளுக்கான செலுத்துகளையும் வேறுபடுத்தியிருப்பதைக் குறிக்கவும். பின்கூறிய நிலையில், நுகர்வோர்க்குத் தொழில்கள் செய்யும் விற்பனை பதிவு செய்யப்பட்டிருப்பதைக் காணலாம். இந்த விற்பனையின் காரணமாகக் கிடைத்த வருவாயிலிருந்து சில வருமானங்கள் நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ கிளம்புகின்றன; இவை குடும்பங்களுக்கு மீண்டும் திரும்பச் செல்கின்றன. ஆனல், வட்டி விஷயத்தில் இச் செலுத்தீடுகள் தொழில் கணக்குகளில் யாதொரு பதிவையும் செய்யாமல், நேரடியாக நுகர்வோர்க்கு அனுப்பப்படுகின்றன. இந்த ஆய்வினை மதிப்பிட, பல மாற்று வகைக் காரணிகளை விவாதிக்க வேண்டியிருக்கிறது. ஆனல், இதற்காக அதிக நேரத்தை நாம் செலவிட விரும்பவில்லை. இதுகாறும் கூறியவைகளின் உட்கருத்து என்ன என்பதை மாணவர்கள் உணர்ந்தால் நாம் நம் கடமையைச் செய்தவர்கள் ஆவோம்.

குடும்பத்துறை, நாட்டு ஆக்கத்திற்கும், நாட்டு வருமானத்திற்கும், எதை வழங்குகிறது என்ற வினவை நாம் கேட்க இப்பொழுது நேரிடுகிறது. அரசத் துறையைப்போலக் குடும்பத் துறையும் பண்டங்களையும் பணிகளையும் விற்பதில்லை. ஆனல், அளக்கக் கூடிய வகையிலும், நாட்டுக் கணக்குகளில் சேர்க்கக் கூடிய வகையிலும், குடும்பத் துறையில் உற்பத்தி உண்டு என்பது உறுதி. மொத்த அல்லது நிகர ஆக்கத்திற்கு வழங்கும் உற்பத்தித் தொகையில் (1) குடும்பப் பணியாளர்களின் பணிகள்—இவைகளைச் செலுத்திய கூலிகள், சம்பளங்கள், இவைகளுக்கான சேர்க்கைகள் ஆகியவைகளைக்கொண்டு மதிப்பிடப்படுகின்றன. (2) பல குடும்பங்கள் மற்றக் குடும்பங்களுக்கு வழங்கும் கடன் பணி. இதைக் குடும்பங்களின் மொத்த வட்டிச் செலுத்தீடுகளைக் கொண்டு மதிப்பிடுகிறோம். (இவைகள் எல்லாம் குடும்பங்களிடையே நடைபெறும் கொடுக்கல் வாங்கல் என்பதை நினைவு

ப்டுத்திக்கொள்ள வேண்டும்). இவைகளின் தொகையையும் சேர்க்கவேண்டும். உழைப்பாளிகளின் ஊதியங்கள், கடன் வழங்கு வதால் கிட்டும் ஊதியங்கள் ஆகியவைகளின் கூட்டை, இத் தொகை குறிக்கிறது எனக் கருதினால், இந்தத் தொகை, குடும்பத் துறையிலிருந்து கிடைக்கும் நாட்டு வருமானத்தையும் அளவிடு கிறது.

குடும்பங்களில் சம்பளம் பெறும் ஊழியர்கள் ஆற்றும் பணிகளை மட்டும் நாட்டு ஆக்கக் கணக்குகளில் குறிப்பிடுவது ஒரு தவறான முறையாகும். இதே பணிகளை குடும்பத்தின் அங்கத் தினர்கள் ஆற்றும்போது அவற்றை நாட்டு ஆக்கக் கணக்குகளில் குறிப்பிடுவதில்லை. குச்னெட்ஸ் (Kuznets) என்ற மேதை குடும்பத் தலைவிகளின் பணிகளை, எவ்வகையிலும் மதிப்பிடப்பட்ட நாட்டு வருமானத்தில் நான்கில் ஒரு பங்கு மதிப்பை அவை பெற்று உள்ளன என்று மதிப்பிட்டுள்ளார். ஆக்கப் பணிகள் குடும்பத்தி லிருந்து அங்காடிகளுக்கு மாறுகிற கால வரையறையில், இத்தகைய ஆக்கப் பணிகளின் மதிப்புகளை நாட்டு ஆக்கக் கணக்கு களில் குறிப்பிடாதது நாட்டு ஆக்கக் கணக்குகளுக்கு இழுக்கைத் தருகிறது. வீட்டில் சமைத்த உணவை அதன் உள் செல்லும் பண்டங்களின் செலவுகளைக் கொண்டு—அதாவது அதற்குத் தேவைப்படும் இறுதிப் பண்டங்களின் மதிப்புகளைக் கொண்டு மதிப்பிடுவது மரபு. ஆனால், உணவை ஆக்குவதற்கு அக் குடும்பத் தலைவி செலவிட்ட உழைப்பைப் புறக்கணிப்பது தவறு. அதே உணவை ஒரு உணவு விடுதியில் சாப்பிட்டால், அது அதற்குத் தேவைப்படும் பொருள்களின் விலையோடு உழைப்புச் செலவு, முதல் செலவு, இலாபம் ஆகியவைகளை உடன் சேர்த்து மதிப்பிடப்படுகிறது. துணிமணிகள் உற்பத்தி, சலவைத்தொழில், உணவு சமைத்தல் போன்ற பல வெளிப்படையான ஆக்கப் பணிகள் குடும்பத்திலிருந்து அங்காடிக்கு இடம் பெயர்ந்துவிட்டன. அதே நேரத்தில் சில குடும்பத் தலைவிகளும், பண வருமானத் திற்காகப் பணிபுரியும் பணிமங்கையர்களாக, உழைப்பு அங்காடிக்குள் நுழைந்து விட்டார்கள். எனவே, குடும்பத்தின் அங்கத்தினர்கள் தங்கள் குடும்பத்திற்கு ஆற்றும் பணிகளை மதிப்பிட மறுத்தல் பல சிக்கல்களை விளைவிக்கின்றது. அவைகளில் (1) நாட்டு ஆக்கம், நாட்டு வருமானம் ஆகிய கணக்குகளைக் குறைப்பட்டதாக அமைப்பதும், (2) தொழில்துறை வழி வரும் மொத்த ஆக்கத்தின் விகிதத்திற்குத் தப்பான பொருளைத் தருவதும், (3) நாட்டு ஆக்க நெடுங்காலப் போக்கின் அளவுகள் எல்லாவற்றையும் பிழையுள்ளனவாக அமைப்பதும் போன்றவை குறிப்பிடத் தக்கவை. அதோடு மட்டுமல்லாமல். அம்மறுப்பு

அங்காடியின் வழிச் செல்லும் மொத்த ஆக்க விகிதங்கள் பல வற்றைக் கொண்ட, பன்னுடுகளின் நாட்டு ஆக்கம், நாட்டு வருமானம் ஆகியவைகளின் ஒப்பீடுகளையும் பழுதடையச் செய்கிறது.

குடும்பத் தலைவிகள் புரியும் பணிகளை நாட்டு ஆக்கக் கணக்கில் சேர்ப்பதற்காக மதிப்பிட முயலத் தவறுவதற்கு இரண்டு காரணங்கள் காட்டலாம். முதலாவதாக அத்தகைய மதிப்பீடு களுக்கான புள்ளியியல் விவரங்கள் மிகவும் குறைந்து காணப்படு கின்றன. இதனுல் நல்ல முறையில் சரியாக அமைந்த நாட்டு ஆக்கக் கணக்கில் நம்ப முடியாத மிகப் பெரிய எண்ணை இதில் நாம் சேர்க்க நேரிடும். இரண்டாவதாக, இப் பணிகளை ஆக்கப் பணிகள் என்று நாம் ஏற்றுக்கொண்டாலும், இவைகளுக்கும், அங்காடி மதிப்புப்பெற்ற மற்றப் பணிகளுக்கும் நிறைய வேறுபாடு உள்ளது. குடும்பத்தலைவிகள் புரியும் பணிகள் வாரத்திற்கு 6 மணி நேரம் வேலை செய்யும் ஒரு சலவைத் தொழிலாளி பெறும் கூலிக்குச் சமமாகும்; அல்லது வாரத்திற்கு 10 மணி நேரம் வேலை செய்யும் ஒரு சமையல்காரனின் கூலிக்குச் சமமாகும்; அல்லது வாரத்திற்கு 4 மணி நேரம் வேலை செய்யும் தட்டுக் கழுவுகிறவன் பெறும் கூலிக்குச் சமமாகும்; அல்லது வாரத்திற்கு 12 மணி நேரம் வேலை செய்யும் சேய் பராமரிப்பவர் பணியின் கூலிக்குச் சமமாகும் என்பவைகளைக் குறிக்கின்றன என்று சொன்னுல், அது அவர்கள் புரியும் பணிகளை ஏளனம் செய்ததாகும். ஒரு பணியைச் செய்வ தற்கான ஊக்கக் காரணம், பணிகளைத் தேர்ந்தெடுத்தல், பணி களுக்கான பரிசுகள் ஆகியவை பொருளாதாரத் தன்மைக்கு அப்பாற்பட்ட காரணிகளாக அமைகின்றன.

குடும்பங்களில், உற்பத்தி, நுகர்ச்சி ஆகிய இவைகளின் பாகுபாடு மிகவும் மென்மையாக அமைந்துள்ளதை நாம் காண்கிறோம். நான் என் வீட்டுப் பின்புறத்தில் காய்கறிகள் பயிர் செய்தால், நான் மற்ற இன்பங்களையும் வசதிகளையும் பெற்றாலும், நான் பயிரிடும் காய்கறிகள் கடையில் வாங்கும் காய்கறிகளைவிட அதிகச் செலவைப் பெற்றாலும்—நான் ஆக்க வேலையில் ஈடுபட் டுள்ளேன் என்ற பொருளில் ஒருவேளை அமையலாம். இதற்குப் பதிலாக மலர்களைப் பயிர் செய்தால் நான் ஆக்க வேலையில் ஈடுபட் டுள்ளேன் எனப் பொருள்படுமா? நான் மலர்களைப் பயிரிடு வதற்குப் பதிலாக, கோல்ப் (golf) என்ற ஒரு வகை கேளிக்கை யினுல் அதே பயனைப் பெறுவேன் என்றால் கோல்ப் ஆடுவது ஆக்கப் பணி என்று கூறமுடியாது. முக சுஷவரம் செய்வதற்காக நாம் அநேக மிலியன் மணி நேரத்தைச் செலவிடுகிறோம். இது ஆக்க

மாகுமா? அதுபோல் மிதியடிகளைப் பளிச்சென்று இருக்கச் செய்தல், செய்தித்தாள் வாசித்தல், குழந்தைகளுக்கு வேடிக்கை காட்டல், பியனே (piano) வாசித்தல் ஆகியவை ஆக்கப் பணிகளாகுமா?

நாட்டு வருமானம் என்ற கருத்தை ஆராய முற்படும்போது, வேலைக்காகச் செய்யும் பிரயாணம், தனக்கு அவசியப்படும் உணவு, துணிமணிகள் நுகர்ச்சிப் பொருள்களா அல்லது வருமானத்தை ஈட்டச்செய்த செலவுகளா என்பது போன்ற வினவை எழுப்பினேம். இதுவரை எல்லா கருத்துகளையும் வட்டமிட்ட பின்னர் அதே வினக்களுக்கு நாம் மீண்டும் வந்துள்ளோம். பொருளாதாரச் செயல்களை வாழ்க்கையோடு ஒப்பிட முடியாது. அல்லது வாழ்க்கையைப் பொருளாதார வாழ்க்கை, அரசியல் வாழ்க்கை, மதத் தொடர்புள்ள வாழ்க்கை, மற்றப் பிரிவுகளுடன் தொடர்புடைய வாழ்க்கை எனக் கூறுபோட முடியாது.

மேற்கூறிய காரணங்களால் குடும்பங்களின் வழி வரும் நாட்டு ஆக்கம் என்பது கூலி வழங்கிப் பெறும் உழைப்பாளிகளின் பணிகளை மட்டும் உள்ளடக்கியதாகும்.[1] இந்தத் தவறு நெடுங் கால அல்லது பன்னாட்டு ஒப்பீடு செய்யும் காலத்தில், ஓர் அறிவிப்பை நமக்கு வழங்குகிறது.[2] ஆனல், குறுங்கால வருமானப் பகுப்பாய்விற்கு நாட்டு வருமானம், நாட்டு ஆக்க விவரங்களைப் பயன்படுத்துகையில், முன்னறிவிப்புகள் செய்கையில் அல்லது கொள்கைகளை உருவாக்குதல் போன்ற பணிகளுக்கு இத்தவறு எந்த விதத் தீங்கையும் விளைவிக்காது. குடும்பப் பணிகள் அங்காடித் தொடர்புடையவையல்ல என்பதைக்கொண்டு, அங்காடித்தொடர்புடைய உற்பத்தி வேலை ஆகிய இவைகளினல் கிட்டும் வருமானப் பகுப்பாய்வினுக்கு, இவைகளைப் புறக்கணிப்பதில் தவறு ஒன்றுமில்லை. நுகர்வோர் தங்கள் பணிகளைக் குடும்பத்திற்குப் பயன்படுத்துவதால் நேரிடும் விளைவுகளின் இறுதிநிலைகளை அதே

[1] குடும்பங்களில் ஏற்படும் உற்பத்தி, அதற்கான உழைப்பைக் குடும்ப அங்கத்தினர்கள் வழங்கினலும் அல்லது உழைப்பாளிகள் வழங்கினலும், அது முதலையும் பயன்படுத்துகிறது என்பதைச் சுருக்கமாகக் குறிப்பிடலாம்—பொறித்தளவாடங்கள், ஏன் வீட்டையும்கூட அது பயன்படுத்துகிறது. நாட்டு ஆக்கக் கணக்கில் சொந்தக்காரர்கள் வசிக்கும் வீடுகள் கூடப் புரியும் பணிகளின் மதிப்பைக் குறிப்பிட்டோம். ஆனல், சொந்தக்காரர்கள் பயன்படுத்தும் கருவிகள், மோட்டார் வண்டிகள் ஆகியவைகளின் மதிப்பைக் குறிப்பிடவில்லை. இந்தத் தவறு வெகுவாகக் கண்டிக்கப்பட்டது. இத்தகைய பணிகளின் மதிப்புகள், அரசாங்க முதல் சரக்குகளின் மதிப்புகளைக் கணக்கிடுகையிலும் இதே பிரச்சினைகளைக் கிளப்பின. எனவே, அரசின் சரக்குகளை மதிப்பிடுவதற்கு இவ்வதிகாரத்தின் அநுபந்தத்தில் காணப்படும் முறையை ஒத்த முறையைப் பயன்படுத்துதல் சிறந்தது.

[2] சைமன் குச்னெட்ஸ் அவர்களின், 'பொருளாதார மாற்றம்' என்ற நூலில் 145—215 பக்கங்களைக் காண்க.

பணிகளை அங்காடி வழியாகப் பயன்படுத்துவதால் நேரிடும் விளைவு களின் இறுதி நிலைகளை ஒப்பிட்டுப் பார்க்க நேரிடும் வரை, நமது விவரங்கள் குறுங்காலப் பகுப்பாய்வினுக்கும் பயன்படாதவை என்பதில் ஐயமில்லை. ஆனால், குடும்பங்கள் அளிக்கும் பணிகளை மதிப்பிட முயல்வதால் ஏற்படும் பிழையைவிட இப் பிழை மிகவும் சிறியதாக அமைகிறது.

## அயல் நாட்டுப் பேரங்களின் கணக்கு
## (Foreign Transactions Account)

மூல நூலின் 39ஆம் பக்கத்தில் குறிப்பிட்ட நாட்டு வருமான, நாட்டு ஆக்கக் கணக்குகளின் சுருக்கமான அமைப்பு, மற்ற நாடுகளை ஐக்கிய அரசுகளின் ஓர் அங்கமாகக் கருதி, அவைகளின் கணக்குகளைத் தனிப்பட்ட முறையில் ஆராய்வதில்லை. புதிய சுருக்கமான கணக்கியல் முறை, தொழில் துறை கணக்குகளைத் தவிர்ப்பதோடு அல்லாமல், நாட்டு ஆக்கமும், வருமானமும் எத்துறைவழி வருகின்றன என்பதைக்காட்ட முயலுவதுமில்லை. ஆகவே, சுருக்கிய கணக்கியல் புதுமுறை 'அயல்நாட்டுப் பேரங்களின் கணக்கு'களை மட்டும் வெளியிடுகிறது. இக் கணக்கியல் முறை உலகத்தின் மற்ற நாடுகளில் இருந்து ஐக்கிய அரசுகளுக்குக் கிட்டும் வருமானத்தையும் ஆக்கத்தையும் தனிப்படுத்துவதில்லை. ஆனால், வருமானமும் ஆக்கமும், அவைகள் வரும் துறைவழிகளை அடிப்படையாகக்கொண்டு அமைந்தமையால், உலகத்தின் மற்ற நாடுகளின் கணக்குகளை விரிவான முறையில் அமைப்பது அவசிய மாகிறது.

உலகத்தின் மற்ற நாடுகளை ஐக்கிய அரசுகளின் அங்கமாக ஏன் கருதவேண்டும்? நாட்டு வருமானம், ஆக்கம் ஆகியவை களின் கணக்குகளில் சேர்க்கவேண்டிய காரணிகளின் பணி ஊதியம் மற்ற நாடுகளின் கணக்குகளில் சேர்க்கப்பட்டால் நாம் அதைச் சேர்க்கவேண்டிய அவசியமில்லை. ஆனால், உண்மையில், அவை சில சமயங்களில் சேர்க்கப்படுவதில்லை. குறிப்பாக ஐக்கிய அரசுகளின் குடிமக்கள், வெளிநாடுகளில் புரியும் செயல்களுக்கான கூலி: சம்பள வருமானங்கள், வட்டி, இலாபம் ஆகிய வருமானங்கள், ஐக்கிய அரசுகளின் நடப்பு சம்பாத்தியங்கள். ஆனால், அவைகளை வேறு சில காரணங்களால் ஐக்கிய அரசுகளின் வருமானக் கணக்கு களில் பதிவு செய்யப்படுவதில்லை. நாம் ஒரு வேளை அப் பணியில் முனைந்து நின்றோமானால் வெளிநாடுகளிலிருந்து பெறும் காரணி சம்பாத்தியங்களை, நிகர மதிப்பு அடிப்படை கொண்டு பதிவு செய்யப்படுகிறமையால், ஐக்கிய அரசுகளின் வருமானக் கணக்கு

மிகைப்பட்டுக் காணப்படுகின்றன என்ற தவற்றைத் திருத்தி அமைக்கமுடியும். உதாரணமாக ஐக்கிய அரசுகளின் குடிமகன் மற்ற நாட்டு நிறுவனங்களின் பங்குகளைப் (stocks) பெற்றமையால் கிட்டும் இலாபப் பங்கீடுகளை ஐக்கிய அரசுகளின் வருமானக் கணக்கில் பதிவு செய்யப்படவேண்டும். ஆனால், அமெரிக்காவில் உள்ள நிறுவனங்கள் அயல் நாட்டுப் பங்குதாரர்களுக்கு வழங்கும் இலாபப் பங்கீடுகளை ஐக்கிய அரசுகளின் கணக்குகளில் பதிவு செய்யக்கூடாது. (ஆயினும் இதுவரை நமது கணக்கியல் ஆராய்ச்சிமுறை இதனை உள்ளடக்கியதாக அமைக்கப்பட்டது). கூலிகள், சம்பளங்கள், வட்டி, ஊதியப் பங்குகள் (royalties), கிளை நிறுவனங்களின் இலாபங்கள் ஆகியவைகளும்கூட நிகர இனத்தில் பதிவு செய்யப்படவேண்டும். (ஆனால், மேல்காட்டிய தொழில் கணக்குகள் வெளிநாடுகளில் கிளை நிறுவனங்களைக் கொண்ட அமெரிக்கக் கம்பெனிகளின் உள்நாட்டு ஆக்கத்தை மட்டும் பதிவு செய்தன).

காரணிச் செலுத்தீடுகளின் நிகர மொத்தத் தொகை, நாட்டு வருமானத்தைக் குறிப்பதோடு அல்லாமல், மற்ற உலக நாடுகள் வழி வரும் நாட்டு ஆக்கத்தின், மொத்தம், நிகரம் ஆகிய இரு தொகைகளையும் குறிப்பிடுகிறது. ஏனெனில், நமது பொருளாதார அமைப்பைப் பொறுத்தமட்டில், இக் காரணிப் பணிகள் செயல் முடிந்த பண்டங்களாகக் கருதப்படுகின்றன.

ஐக்கிய அரசுகளின் வருமானத்தையும் ஆக்கத்தையும் அமைக்கக் காரணமான சில குறிப்பிட்ட பேரங்களை நாம் தனிப் படுத்த விரும்புவதால், மற்ற உலக நாடுகளின் கணக்குகளைக் கீழ்க்காணும் வகையில் அமைக்கிறோம். இக் கணக்கு மற்ற உலக நாடுகளின் பேரங்களின் கணக்குகள் என்று மீண்டும் ஒரு முறை வலியுறுத்தத் தேவையில்லை. இக்கணக்கு வெளிநாடுகளுக்கு ஐக்கிய அரசுகள் வழங்கும் காரணிப் பணிகளின் நிகர மறுபடிவத்தை (counterpart) உள்ளடக்குவதோடு அல்லாமல், மற்றப் பன்னாடு களின் துறை கணக்குகளில் காணப்படும் பன்னாட்டுப் பதிவுகளின் மறுபடிவங்களையும் உள்ளடக்கியதாகும். இதனுடன், ஐக்கிய அரசுகள் அழைக்கும் 'நிகர அயல்நாட்டு முதலீடு' (net foreign investment) என்ற சமப்படுத்தும் இனத்தையும் உள்ளடக்கியுள்ளது.

அட்டவணை 3—4.

## மற்ற உலக நாட்டுக் கணக்கு
## (Rest-of-World Account)

| | |
|---|---|
| காரணிப் பணிகளின், நிகர வாங்குதல்கள்<br>(ஐக்கிய அரசுகளிலிருந்து மற்ற நாடுகள் பெறுபவை)<br>கூலிகள், சம்பளங்கள்<br>வட்டி<br>இலாபப் பங்கீடுகள்<br>கிளை நிறுவனங்களின் ஆதாயம்<br>(ஐக்கிய அரசு) தொழில்களிலிருந்து பெறும் நிகர வாங்குதல்கள்<br>(ஐக்கிய அரசு) அரசத் துறையிலிருத்து பெறும் நிகர வாங்குதல்கள்<br>(ஐக்கிய அரசு) குடும்பங்களிலிருந்து பெறும் நிகர வாங்குதல்கள் | நிகர முதலீடின்மை (மற்ற உலக நாடுகளால்) ஐக்கிய அரசுகளில் செய்யப்படாத முதலீடுகள்<br>ஐக்கிய அரசுகளிலிருந்து வரும் மாற்றுச் செலுத்தீடுகள் |
| ஐக்கிய அரசுகளுக்கு வழங்கப்படும் நிகர நடப்புச் செலுத்தீடுகள் (மொத்தம்) | நிகர நடப்புச் செலுத்தீடுகளுக்கான மூலங்கள் (sources) (மொத்தம்) |

மற்றத் துறைக் கணக்குகளைப்போல இத்துறைக் கணக்குகளை அமைக்கப் பலவகை 'அடித்தல்கள்' (cancellations) கழிவுகள் (netting outs) சாத்தியமாகும். மேற்காணும் கணக்கு மிகப் பெரிய கழிவுகளைப் புகுத்தி அமைக்கப்பட்ட கணக்காகும். ஏனெனில், ஐக்கிய அரசுகளுக்குச் செய்த விற்பனைகளை, அவைகளின் எதிரான வாங்குதல்களிலிருந்து கழிக்கப்பட்டன. வணிகத் துறையின் புதிய 'அயல் நாட்டுப் பேரங்களின் கணக்கு' (Foreign Transactions Account) பல்வேறு துறைகளின் பேரங்களை நிலை குலைக்காமல் மாற்றி அமைத்திருக்கிறது: ஆனால், பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின் ஏற்றுமதி இறக்குமதிகளின் மொத்தங்களை வெளிப்படுத்துகிறது. இக் கணக்கு மற்ற உலக நாடுகளை விடுத்து, ஐக்கிய அரசுகளை மையமாக வைத்து அமைக்கப்பட்ட கணக்காகும். இக் கணக்கைக் கொண்டு, மற்ற உலக நாடுகள் வழி வரும் நாட்டு வருமானத்தை, அல்லது நாட்டு ஆக்கத்தை நிர்ணயிக்க முடியாது.

அட்டவணை 3—4A.

## வெளிநாட்டுப் பேரங்களின் கணக்கு
## (Foreign Transactions Account)

| | |
|---|---|
| பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின் ஏற்றுமதிகள் (ஐக்கிய அரசுகளிலிருந்து) | பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின் இறக்குமதி (ஐக்கிய அரசுகளுக்கு)<br><br>ஐக்கிய அரசுகளின் மாற்றுச் செலுத்தீடுகள்<br><br>அயல் நாட்டு நிகர முதலீடு |
| வெளிநாடுகளிலிருந்து பெறும் வரவுகள் | வெளிநாடுகளுக்கான செலுத்தீடுகள் |

மேல்காணும் கணக்குகளில் ஏதேனும் ஒன்று, 'அயல் நாட்டுச் செலுத்துநிலை' (Balance of Payments) கணக்கின் சுருக்கிய மறு அமைப்பாகும். ஆனால், இவைகளில் உள்ளடங்கிய இனங்களில் வேறுபாடுகள் உள்ளன. பண்டங்களால் அமைந்த வெளிநாட்டு ஒருமுக மாற்றுகளை, நாட்டு வருமானக் கணக்கும், நாட்டு ஆக்கக் கணக்கும் உள்ளடக்காதது, தலைசிறந்து விளங்கும் வேறுபாடாகும். அத்தகைய மாற்றுகள் அரசத் துறையில் உருவானால், அவைகள் அரசின் வாங்குதல்கள் என்ற இனத்தில் உள்ளடக்கப்படுகின்றன. அவைகள் எந்த நாட்டிற்குப் போய்ச் சேருகின்றன என்பதைக் கருதுவதேயில்லை. அம் மாற்றுகள் நுகர்வோர்துறையில் உருவானால் [உதாரணமாக 'மேற்பார்வை' (CARE) கட்டுகள்] அவைகளை நுகர்வோர் செலவுகள் என்ற தலைப்பில் உள்ளடக்கப் படுகின்றன. (ஆனால், வழக்கில் உள்ள அயல் நாட்டுச் செலுத்து நிலை கணக்குகளில் இவைகளை வாணிப ஏற்றுமதிகள் எனக் கருதி, அவைகளை ஒருமுக மாற்று என்ற இனத்தில் சமமாக்கும் பதிவுகளாகக் குறிக்கப்படுகின்றன).

பன்னாட்டுப் பேரங்களை நாட்டு வருமானம், நாட்டு ஆக்கம் என்ற கணக்குகளில் கருதப்படும் முறையில் மற்றொரு சிறப்பியல்பு உள்ளதை நாம் குறிப்பிடவேண்டும். அது ஐக்கிய அரசுகளின் உள்ள பணத்திற்கான தங்க இருப்புகளை மற்ற உலக நாடுகளின் துறைகளில் உள்ள தங்க இருப்புகளாகக் கருதப்படுவது ஆகும். பணவறைக்கு (Treasury) விற்கப்படும் தங்கத்தை உலகத்தில்

உள்ள மற்ற நாடுகளுக்கு வழங்கும் தொழில் விற்பனைகளாகக் கருதப்படுகின்றன.

சமூகக் கணக்கியல் அமைப்பில், பன்னாட்டுப் பேரங்களைப் பல மாற்று வழிகளில் பயன்படுத்தலாம். சமூகக் கணக்கியல் முறை, நாட்டு ஆக்கம் என்பதற்கு வேறோர் அடிப்படைக் கருத்தை வழங்கியுள்ளது என்பது ஐக்கிய நாடுகளின் (United Nations) கருத்தாகும். இப் புதிய அடிப்படைக் கருத்து பன்னாட்டுப் பேரங்கள் சிலவற்றை மாற்று முறைகளில் பயன்படுத்தலாம் என்ற பொருளில் அமைந்துள்ளது. இதுபோன்ற பல நுட்பமான கருத்தியல் பிரச்சினைகள் பல உள்ளன. ஆனால், அவற்றை எல்லாம் இங்குக் கருதத் தேவையில்லை. ஏனெனில், (1) மற்ற உலக நாடு களின் தொகுதி, ஐக்கிய அரசுகளைப் பொறுத்தமட்டில் மிகவும் சிறிய அதிர்ச்சியைத் தரத்தக்கவை; (2) இந் நூலில் காணும் எல்லாக் கோட்பாட்டுத் தொடர்புடைய விவரங்களின் விளக் கங்கள் எல்லாம் மூடிய பொருளாதார அமைப்பை (closed economy) எடுகோளாகப் பெற்றுள்ளன. பன்னாட்டுப் பொருளா தாரப் பகுதியை அலச விரும்பும் மாணவர்கள் எல்லோரும், பன்னாட்டுப் பேரங்களை ஐக்கிய அரசுகள் எவ்வாறு கருதுகின்றன என்பதையும், அவைகளில் அடங்கியுள்ள பிரச்சினைகளையும், அக் கருத்துகளை எத்தனை மாற்று வழிகளில் பயன்படுத்தலாம் என்பன போன்றவைகளையும் நன்கு கற்றல் வேண்டும். இதோடு மட்டு மல்லாமல், திறந்துள்ள ஒரு பொருளாதார அமைப்பு (open economy) பொருந்தும் வகையில் இவைகளுக்கான சிறந்த கோட் பாடுகளைப் பயன்படுத்திப் பொருள் காணவும் வேண்டும்.

## பல்வேறு துறைக் கணக்குகளை ஒன்றுபடுத்தல்
## (Combining sector Accounts)

பல்வேறு துறைகளின் கணக்குகளிலிருந்து, நாட்டு வருமா னத்தின் கூட்டுத்தொகையை நம்மால் பெற முடியும். கூலிகள், சம்பளங்கள் இவைகளுக்கான சேர்க்கைகள், நிகர வட்டித் தொகை, கூட்டியல்பு ஆதாயங்கள், கூட்டியல் அமைப்பில்லா நிறுவனங்களின் வருமானம், ஆகியவைகள் தொழில்துறைக் கணக்குகளில் காணப்படுகின்றன. இவைகளுடன் அரசத் துறையின் கூலிகள், சம்பளங்கள் இவைகளின் சேர்க்கைகள் ஆகியவை களையும், குடும்பத்துறையில் உள்ள இதே தொகைகளையும், குடும் பங்களின் வட்டிச் செலுத்தீடுகளையும் உடன் சேர்க்க வேண்டும். மற்ற உலக நாடுகளின் கணக்கில் உள்ள தொகையுடன் காரணி களின் நிகர சம்பாத்தியங்களையும் உடன் சேர்க்கவேண்டும்.

இதுபோல் பல துறைகளிலிருந்து வரும் நாட்டு ஆக்கத்தை ஒன்று குவித்தால், நாட்டின் மொத்த ஆக்க மதிப்புக் கிடைக்கும். பல துறைகள் வழிவரும் மொத்த நாட்டு ஆக்கத்தின் மதிப்பைக் கீழ்க்காணும் வகையில் ஒழுங்குபடுத்தி அமைக்கலாம்.

1. தொழில்துறை வெளிப்பாடு
   - (a) நுகர்வோர்களுக்கான விற்பனைகள்
   - (b) அரசிற்கான விற்பனைகள்
   - (c) வெளிநாடுகளுக்கான நிகர விற்பனைகள்
   - (d) முதல் கணக்குகளுக்காகத் தொழில் நிறுவனங்களுக்கான விற்பனைகள்
   - (e) இருப்புப் பட்டியல் மாற்றம்

2. அரசத்துறை வெளிப்பாடு
   - (a) கூலிகள், சம்பளங்கள், சேர்க்கைகள்

3. குடும்பத்தின் வெளிப்பாடு
   - (a) கூலிகள், சம்பளங்கள், சேர்க்கைகள்
   - (b) செலுத்திய வட்டித்தொகை

4. மற்ற உலக நாடுகளின் வெளிப்பாடு
   - (a) கூலிகள், சம்பளங்கள்
   - (b) வட்டி
   - (c) இலாபப் பங்கீடுகள்
   - (d) கிளை நிலையங்களின் ஆதாயங்கள்

நாட்டு ஆக்கத்தின் மேல்காட்டிய நிலைகுலைவு பகுப்பாய்வுக்குப் பயன்படாத ஒரு முறையாகும். இதைவிட நாட்டின் மொத்த ஆக்கத்தைச் செலவுகள்வழி பதிவு செய்யப்பட்ட இனங்களைக் கீழ்க்காணுமாறு மாற்றி அமைத்தல் ஏற்புடையது. (ஒவ்வொரு பதிவுகளுக்கு அப்பால் அமைந்துள்ள அடைப்புக் குறிகளில் காணும் எண்கள், இதுவரை அமைத்த கணக்குப் பட்டியல்களில் உள்ள இனங்களைக் குறிக்கின்றன.)

I. நுகர்வோர் செலவுகள் :

A. தொழில்துறை பண்டங்களுக்கான செலவுகள் (1a)
B. குடும்பங்களின் பணிகளுக்கான செலவுகள் (3a, 3b)
C. இறக்குமதிகளுக்கான செலவுகள் (முன்னுள்ள அமைப்புகளில் இடம் பெறாதவை).

II. அரசத்துறை செலவுகள்
  A. தொழில்கள் வழங்குபவைகளை வாங்குவதற்கான செலவுகள் (1b)
  B. வெளிநாடுகளிலிருந்து வாங்கியவை (முன்னுள்ள அமைப்புகளில் இடம் பெறுதவை)
  C. கூலிகள், சம்பளங்கள், சேர்க்கைகள் (2a)

III. மொத்தத் தனித்துறை உள்நாட்டு முதலீடு
  A. தொழில்களுக்கு முதல் கணக்குக்கான விற்பனைகள் (1d)
  B. இருப்புப் பட்டியல்களின் மாற்றம் (1e)

IV. பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின் நிகர ஏற்றுமதிகள் (1c+4 – 1c — IIB)

இங்கு உள்ள இனங்கள் மேல்காணும் எல்லா அமைப்புகளிலும் உள்ள அதே இனங்களைக் குறிப்பிட்டிருந்தாலும், நாட்டு ஆக்கத்தை வாங்குபவர் என்ற கருத்தை அடிப்படையாகக்கொண்டு இங்குப் பாகுபாடு செய்துள்ளோம். நாட்டின் ஆக்கம் என்பது வெளிப்பாட்டைக் குறிக்கிறது; ஆனுல், அதுவும் ஒரு வகைச் செலவை உள்ளடக்கியது. இங்குக் காணப்படும் பாகுபாடு செலவு செய்யும் துறையைக் கொண்டு அமைந்ததேயல்லாமல், ஆக்கத்தின் மூலத்தை அடிப்படையாகக் கொண்டதல்ல. வெளிப்பாடு, தேவையினுல் நிர்ணயிக்கப்படுகிறது என்ற நவீனக் கருத்தியல் முறையை இப் பாகுபாடு உணர்த்துகிறது. பண்டங்கள் தேவைப்பட்டால் அவைகளை வளங்களின் உற்பத்தித் திறனுக்கு ஏற்றவாறு உற்பத்தி செய்வார்கள். (அதனுல் அவைகளின் உற்பத்திக்கு வளங்கள் பயன்படுத்தப்படுகின்றன). பண்டங்களை வாங்குவதற்கு நுகர்வோர் இல்லை என்றுல் அவைகளை உற்பத்தி செய்யமாட்டார்கள். எனவே, நாட்டு ஆக்க மட்டத்தை அறிய வேண்டுமானுல், நாட்டு ஆக்கத்தை வாங்கும் நுகர்வோர் வகையைக் கொண்டு பாகுபாடு செய்யவேண்டும். அவ்வாறு பாகுபாடு செய்தால், ஒவ்வொரு வகை வாங்குதல்களை நிர்ணயிக்கும் காரணிகளையும் நன்கு அறிய முடியும்.

அவரவர் தரத்திற்குத் தக்கவாறு பண்டங்களை வாங்குபவர்களில், இன்றைக்குள்ள வகைகள் நான்காகும். அவைகள் முறையே நுகர்வோர்கள், அரசு, தொழில்கள், மற்றைய உலக நாடுகள். தொழில்துறைச் செலவுகளை உள்நாட்டுத் தனித்துறை

மொத்த முதலீடு (gross private domestic investment) என அழைக்கிறோம். இருப்புப் பட்டியல் மாற்றங்களை ஒரு வகைச் 'செலவு' எனக் குறிப்பிடுவது ஒரு வகையில் பொருந்தாது. ஏனெனில், அவை சில நேரங்களில் விற்காத பண்டங்களின் எதிர்பாராத குவியல்களைக் குறிப்பதால் அவைகளைச் சில சமயங்களில் இதனுடன் சேர்த்து விடுகிறோம். ஆயினும், இருப்புப் பட்டியல் மாற்றங்களும் பண்டங்களை வாங்கும் அல்லது உற்பத்தி செய்யும் நிறுவனங்களின் செலவுகளைக் குறிக்கின்றன.

பன்னாட்டுப் பேரங்களைப் பொறுத்தவரை 'பண்டங்களின் பணிகளின் நிகர ஏற்றுமதிகள்' என்ற பதிவு நாட்டு மொத்த ஆக்கத்தின் செலவைக் குறிப்பதற்குப் பொருத்தமான தலைப்பாக அமைந்துள்ளது. பன்னாட்டுப் பேரங்களின் இனங்களைக் குறிப்பிடுவதற்கு, துறைவழி முறை பாகுபாட்டைவிட, செலவு வழி முறைப் பாகுபாடு சிறந்த முறையாகக் காணப்படுகிறது. துறைவழி அமைப்பில் தொழில் நிகர விற்பனைகளையும், வெளிநாட்டுக் காரணி நிகர விற்பனைகளையும் காண்கிறோம். ஆனால், நாட்டு மொத்த ஆக்கத்தைச் 'செலவுகள்' எனக் கருதினால், நுகர்வோர், அரசு ஆகிய இருதுறைகள் செய்யும் நிகர இறக்குமதிகளைச் செலவுகளின் ஒரு பகுதியாகக் குறிப்பிடுகிறோம். ஆகவே, நாட்டின் மொத்த ஆக்கத்தைக் குறிப்பிடும் கணக்குகளில் தொழில் துறையின் நிகர ஏற்றுமதிகளையும், காரணிப் பணிகளின் நிகர ஏற்றுமதிகளையும் உடன் சேர்க்க முடியாது. இதைவிட நுகர்வோர், அரசு ஆகியவைகளின் இறக்குமதிகளை இவ்வினங்களிலிருந்து கழித்துக் குறிப்பிடுவது நல்ல முறையாகும். இவைகளின் வித்தியாசம் பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின் நிகர ஏற்றுமதியின் மதிப்பைக் குறிப்பிடுகிறது.

ஒவ்வொருவகைச் செலவை மீண்டும் உப பாகுபாடு செய்யலாம். அவ்வாறு செய்தல் பகுப்பாய்வுப் பணியைச் செம்மைப் படுத்தப் பயன்படுகிறது. மேலும் ஒவ்வொரு செலவையும் தனித்தனி கருத்துகளைக் கொண்டு விளக்குவதற்கும், இவ்வுப பாகுபாடுகள் பயன்படுகின்றன. இந் நூல் உடனடியாகக் கருதும் பயன்களுடன் வேறு பல பயன்களை அறிவதற்கும் நாட்டு வருமானம், நாட்டு ஆக்கம் ஆகியவைகளின் விவரங்கள் பயன்படுகின்றன. ஒரு பயனுக்குத் தேவைப்படும் நிலைகுலைவு மற்றப் பயன்களுக்குத் தேவைப்படும் நிலைகுலைவுகளைவிட வேறுபட்டவை. ஐக்கிய அரசுகளில் உண்மையில் உள்ள கிடைக்கப் பெறும் தகவல்களைப் பல பாகுபாட்டு முறைகளுக்கு ஏற்றவாறு, நுட்பமான வகையில் பாகுபாடு செய்யலாம். அத்தகைய சிறந்த

விவரங்களின் பாகுபாட்டுச் சுருக்கத்தை (1958 ஆண்டுக்கு மதிப்பிட்டு) வெளியிட்டுள்ளார். இதனை அட்டவணை 3-5-ல் காணலாம்,

அண்மைக் காலத்துக்குப் பொருத்தமான தகவல்களை ஒன்று கூட்டி இவ்வதிகாரத்தைச் சுருக்குவதற்குமுன், சில பொருள் களின் (topics) விளக்கத்தைத் தள்ளிவைத்த சில பொருள்களின் விளக்கத்தை ஆராய்வோம். அவைகளில் சிறப்பு வாய்ந்தவைகள் மூன்று உள்ளன. அவைகளை இப்பொழுது கவனிப்போம்.

## தொழில் கணக்கில் உள்ள சிறப்புப் பிரச்சினைகள்
## (Special Problems in the Business Accounts)

### சாட்டுகள் (Imputations)

இதுவரையில் ஒரே ஒரு வகைச் சாட்டுதலைக் கவனித்து வந்தோம். அதாவது சொந்தக்காரர்கள் வசிக்கும் வீடுகளின் சாட்டப்பட்ட வாடகை மதிப்பும், அதனால் விளையும் அதற்கேற்ற காரணி வருமானமும் என்பது. (இது அதனுடன் சேர்ந்த செலவு களைக் கழித்துப் பெறப்படுகிறது). இத்தகைய சாட்டு ஐக்கிய அரசுகளின் நாட்டு ஆக்கக் கணக்குகளில் சேர்ப்பது மரபு. இது ஒன்றுமட்டும் மிகப் பெரியதொரு சாட்டுதலாகக் கருதப் பட்டாலும், இதைவிட மொத்தத்தில் மிகப் பெரிய மதிப்பைப் பெற்றுள்ள பல சாட்டுதல்கள் உள்ளன.

இவைகளில், கூலிகளைப் பண்டச் செலுத்துகளாக (payments-in-kind) வழங்குவது எளிதில் விளங்கும் இனமாக அமைந்துள்ளது. இவைகளுக்கு வேலை வழங்குவோர் அளிக்கும் உணவு, இலவச விடுதி, (இராணுவ சிப்பந்திகளுக்கு) வழங்கும் தர உடைகள் ஆகியவை எடுத்துக்காட்டுகள். இத்தகைய இனங்களை வேலை வழங்குவோர் அளிப்பதால், உழைப்பாளிகளுக்கு வழங்கும் கூலிகள், உண்மையில் உள்ள கூலிகளைவிடக் குறைந்தவைகளாக அமைகின்றன. இத்தகைய பண்டச்செலுத்துகளை நாட்டு வருமானக் கணக்குத் தவிர்ப்பதால், அதன் மதிப்புக் குறைக்கப் படுகிறது. மேலும் இத்தகைய இலவச பணிகளின் மதிப்புப் பிறழ்வதால் இவைகள் நாட்டு வருமானக் கணக்கின் மதிப்புகளில் இயல்பற்ற மாற்றங்களைத் தருகின்றன. எனவே, இத்தகைய இலவசப் பணிகளின் மதிப்பைக் கூலிகள், சம்பளங்கள் ஆகியவை களுடன் சேர்ப்பது முறையாகும். வெளிப்படையானப் பண்டச் செலுத்துகளை மட்டும் சேர்க்கவேண்டும். அதாவது அவைகளின் மதிப்பீடுகள் ஐயமற்றவைகளாக இருக்கவேண்டும். மேலும் அவை

பாகுபாடு உடைய நிலைகளைத் தெளிவாக விளக்கவேண்டும்—அதாவது ஒரு வகை வேலையளிப்போர் ஒரு வகையிலும், மற்றவர் வேறு வகையில் வழங்குவதையும் குறிக்கவேண்டும்.

வருமானக் கூட்டுத் தொகையுடன் கூலிகளையும் சம்பளங்களையும் சேர்ப்பதற்கு ஏற்றவாறு, உற்பத்திக் கூட்டுத் தொகையுடன், நுகர்வோர்க்கான விற்பனைகளின் தொகையையும் கருதவேண்டும். இந்தப் பண்டங்களும் பணிகளும் நுகர்வோர்க்கு இலவசமாக வழங்கப்பட்டாலும் (அல்லது அவைகளை உற்பத்தி செய்தாலும்), அவைகளைத் திருத்தியமைக்கப்பாடதவரை, இடைநிலைப் பண்டங்களாகக் கருதப்படவேண்டும்-அவைகளைச் செயல் முடிந்த பண்டங்கள் எனக் கருதக்கூடாது. ஆனால், அவைகள் மற்றச் செயல் முடிந்த பண்டங்களை உற்பத்தி செய்யப் பயன்படும் கச்சாப் பொருள்கள் அல்ல;—ஆனால், அவைகள் செயல் முடிந்த பண்டங்கள் எனக்கூறுதல் ஒருவகையில் பொருந்தும். இவ்வாறு அவை மறு பாகுபாடு செய்யாதவரை அவைகளின் மதிப்பை எந்த இடத்திலும் ஏற்றுக்கொள்வதற்கில்லை.

எனவே, தொழில்துறைக் கணக்கில் காணப்படும் கூலிகள், சம்பளங்கள் என்ற இனமும், நுகர்வோர்களுக்கான விற்பனைகள் என்ற இனமும் முற்றொருமையான எண்களால் உயர்த்தப் பட்டுள்ளன.—அதாவது உழைபோர்க்கு வழங்கிய இப் பண்டங்களின் அங்காடி மதிப்பைக் கொண்டு உயர்த்தப் பட்டிருக்கின்றன. குடும்பத்துறைக் கணக்குகளில் காணப்படும் கூலிகளும், சம்பள வருமானங்களும், மக்கள்சார் நுகர்ச்சிச் செலவினங்களும்கூட இதே தொகையைக் கொண்டு உயர்த்தப்பட்டிருக்கின்றன. இதனால், உழைப்போர்க்கு உண்மையில் கூலிகள் வழங்கப்பட்டன. ஆனால், அவர்கள் அவைகளைத் தங்களுக்கு வேலை வழங்குவோர் விற்கும் பண்டங்களையும் பணிகளையும் வாங்க உடனடியாகப் பயன்படுத்தினர் என்று ஒருவாறு கற்பனை செய்யலாம்.

உணவுக் கணக்குகளிலும், எரிபொருள் உற்பத்தி செய்து அவற்றைப் பண்ணையில் (பண்ணையாளர்கள்) நுகர்ந்த கணக்குகளிலும் இதுபோன்று ஒரு சாட்டுதலைக் காணலாம். ஆனால், இங்கு உயர்த்தப்பட்ட வருமான இனம் கூட்டமைப்பில்லா நிறுவனத்தின் நிகர வருமானத்தைக்கொண்டு உயர்த்தப் பட்டிருக்கிறது; அதுபோல் செலவினமும் (உற்பத்தி) நுகர்வோர் செலவு தொகையைக் கொண்டு உயர்த்தப்பட்டுள்ளது. இவ்வாக்கங்களை விவசாயிகள் அங்காடியில் விற்றதாகவும், அவைகளை

உடனே தங்கள் நுகர்ச்சிக்காக மறுவாங்குதல் செய்ததாகவும் கற்பனை செய்யலாம். ஆனால், வருமான, ஆக்கக் கணக்குகளின் மொத்தங்கள் இத்தகைய சாட்டுதல்களால் உயர்த்தப்பட்டுள்ளன என்பது தெளிவாக விளங்கும்.

மிஞ்சியுள்ள சாட்டுதல்கள், நிதித் தொடர்புடைய இடைநிலை நிறுவனங்கள் ஆற்றும் செயல்களைக் குறிக்கின்றன. குறிப்பாக வங்கிகள், இன்சூரன்ஸ் கம்பெனிகள் போன்றவை ஆற்றும் செயல்களைக் குறிக்கின்றன. இத்தகைய சாட்டுதல்கள் மிகவும் சிக்கலானவைகள்; எனவே, இவற்றை இங்குச் சுருக்கமாகவே விளக்கியுள்ளோம்.

வணிக பாங்குகள் ஆற்றும் பணிகளின் மதிப்புக்கானக் கணக்குகள் ஒரு சிக்கலைக் கிளப்புகிறது. தங்கள் வாடிக்கைக் காரர்களுக்குத் தாம் ஆற்றும் பணிகளுக்கு வங்கிகள் வெளிப் படையாகக் குறிக்கும் செலவுகள், அவை ஆற்றும் பணிகளின் மதிப்பைவிட மிகக் குறைந்தவை. வங்கிகள் இலாபம் கருதும் நிறுவனங்கள். அவை வழங்கும் கடன்களுக்கும், முதலீடுகளுக்கும் வட்டி பெறுகின்றன; ஆனால், அவைகளிடம் பணம் வைப்போர் களுக்குக் குறைந்த வட்டியை அளிக்கின்றன. வங்கிகளின் வாடிக் கைக்காரர்களை இறுதி நுகர்வோர் எனக் கருதினால், அவர்களுக் காக வங்கிகள் வழங்கும் பணிகளை அவைகளுக்கானக் கணக்குகள் குறைத்து மதிப்பிட்டிருக்கின்றன. வங்கிகள் வழங்கும் கடன்களுக் கும் முதலீடுகளுக்கும் பெறும் வட்டித் தொகை அனைத்தையும், அவைகளிடம் பணத்தை வைப்போர்களுக்கு வழங்கப்பட்டன என்ற சாட்டும் வங்கிகள் தங்களுக்காக ஆற்றும் பணிகளுக்கு, வட்டித் தொகைக்குச் சமமான தொகையைப் பணம் வைப் போர்கள் வழங்குகிறார்கள் என்ற சாட்டும் இதனுள் அமைந்திருப் பதுபோல் தோன்றுகிறது. வங்கிகளின் இருப்புகளைத் தொழில் நிறுவனங்கள் பெறும்வரை, நாட்டு வருமானமும் நாட்டு ஆக்கமும் பாதிக்கப்படவில்லை; ஆனால், வங்கித்துறை வழி வரும் நாட்டு ஆக்கம் என்பது உயர்ந்ததாகவும், மற்றத் தொழில்கள் வழி வரும் நாட்டு ஆக்கம் குறைந்ததாகவும் காணப்படுகிறது. ஆனால், வங்கி யின் வைப்புகளைக் குடும்பங்கள் பெற்றிருக்கும்வரை, நாட்டு வருமானம், நாட்டு ஆக்கம் ஆகிய இரண்டும் உயர்த்தப்பட் டுள்ளன. ஒன்று (சாட்டப்பட்ட) வட்டி வரவைக் கொண்டு உயர்த்தப்பட்டிருக்கிறது; மற்றொன்று (சாட்டப்பட்ட) வங்கியின் பணிகளை நுகர்வோர் பெறும் மதிப்பைக் கொண்டு உயர்த்தப் பட்டுள்ளது.

ஆனுல், ஆயுள் இன்சூரன்ஸ் நிறுவனங்களைப் பொறுத்தவரை, அவைகள் புரியும் பணிகளுக்கு இலக்கணம் அமைப்பதோடு அல்லாமல், அவைகளை மதிப்பிடவும் வேண்டும். இவைகளை மதிப்பெச்சங்களின் (premia) மதிப்புகளைக் கொண்டு மதிப்பிட முடியாது என்பது தெளிவு; ஏனெனில், மதிப்பெச்சங்கள் (premia) பெரும்பாலும் சேமிப்புகள், நுகர்ச்சிகள் அல்ல. இன்சூரன்ஸ் கம்பெனிகளின் எல்லா முதலீடு வருமானங்களும், பாலிசிதாரர்கள் நேரடியாகப் பெறுகிருர்கள்; பின்னர் அவர்கள் அந் நிறுவனத்தின் பணிகளை (Insert what is in broughts) அடக்க விலேக்குப் பெறு கிருர்கள் என்ற சாட்டு உள்ளதுபோல் பசப்புக் காட்டுகிறது. அதாவது இன்சூரன்ஸ் கம்பெனிகளின் பணிகளைக் கூலிகள், சம்பளங்கள், பெற்ற பொருள்கள், தேய்மானம், வரிகள், பங்கு தாரர்கள் உள்ள இன்சூரன்ஸ் கம்பெனிகளில் பங்குதாரர்களுக் காகக் குவிக்கப்பட்ட இலாபம் ஆகியவைகளைக் கொண்டு மதிப் பிட்ட நிறுவனங்களின் 'சேமிப்புகள்' குடும்பத்துறைக்கு மாற்றப் படுகின்றன; எனவே, 'மக்கள்சார் சேமிப்பு' என்பதை, பாலிசி களுக்காகச் செய்யப்பட்ட ஒதுக்குதல்களின் உயர்வையும் உள்ளடக்கியதாகும் என்ற பொருளில் அறியவேண்டும். மக்கள் சார் துறைக் கணக்குகளில், மதிப்பெச்சச் செலுத்தீடுகளும், பயன் செலுத்தீடுகளும் புறக்கணிக்கப்படுகின்றன.

மேலே காணப்படும் பலவகைப் பொதுச் சாட்டுகளின் சுருக்க விளக்கங்கள் எல்லாம் மேலும் பல நுணுக்கங்களைக் கொண்ட தாகும். ஆனுல், இப்பத்திகள் வாசிப்போர் அனைவரும் இத்தகைய மிகப் பெரிய சாட்டுகள் உள்ளன என்பதையும், குடும்ப வட்டி வருமானம், மக்கள்சார் சேமிப்பு வகையராக்களுக்குப் பயன்படுத் துகையில் இவை வேறுபாட்டை ஏற்படுத்தும் என்பதையும் உணர வேண்டும்.

## இருப்புப் பட்டியல் மதிப்பீட்டுச் சரிக்கட்டுதல்கள் (Inventory Valuation Adjustments)

முன்பத்தியில் விளக்கிய விவரங்களைப்போல் இருப்புப் பட்டியல் மதிப்பீடு சரிக்கட்டுதல்களின் விளக்கமும் மிகவும் சிக்கலானது. ஆனுல், இக் கணக்குகளை மேல் போக்காகப் பயன் படுத்துவோர் அனைவரும் இத் தலைப்பின் கீழ்வரும் இனங்களின் பொதுநோக்கையும், அவைகளின் விளைவுகளையும் அறிதல் நன்று.

தொழில்துறைக் கணக்கில், கூட்டமைப்பு நிறுவனங்களின் இலாபத்தையும், கூட்டமைப்பில்லா நிறுவனங்களின் வருமானத்

தையும் குறிக்கும் வருமானப் பக்கத்தில் அல்லது இடப் புறத்தில் 'இருப்புப் பட்டியல் மதிப்புச் சரிக்கட்டுதல்கள்' என்ற இனம் காணப்படுகிறது. ஆனால், இவற்றை நன்கு அறிய, இவைகள் உற்பத்திப் பக்கத்தில் அதாவது கணக்கின் வலப் புறத்தில், வெளிப் படையாகத் தெரியாவிட்டாலும், இவை இடம் பெறுகின்றன என்பதை அறிதல் வேண்டும். ('சரிக்கட்டுதல்கள்' என்ற இனத் தைக் கணக்கின் இரு பக்கங்களிலும் அமைக்கப்படுவது பயனுடைய தானாலும், சில நுணுக்கச்சார்பு காரணங்களால், இவைகளைக் கூட்டமைப்பில்லா நிறுவனக் கணக்குகளில் குறிப்பது மிகவும் கடினமாகிறது.) கணக்குகளின் உற்பத்திப் பக்கத்தில் சரிக்கட்டு தல்களைக் குறிப்பதன் காரணத்தை விளக்குவோம். ஆனால், வழக்கில் அவை, கணக்கின் உற்பத்திப் பக்கத்தில் குறிக்கப்படுவ தில்லை என்பது நினைவிருக்கலாம்.

தொழில்துறைக் கணக்கின் உற்பத்திப் பக்கத்தில் 'இருப்புப் பட்டியல் மாற்றங்கள்' என்ற இனமிருப்பதை நாம் அறிவோம். இங்குக் காணப்படும் இந்த இனம், தொழில்துறைக் கணக்குகளி லிருந்து வழிவந்த இனமல்ல. (அவ்வாறு அமைந்தால் அது ஒரு எதிர்பாராத பொருத்தமாகும்.) தொழில்துறைக் கணக்குகள், இருப்புப் பட்டியல் மாற்றத்தை, குறிப்பிட்ட ஒரு காலத்தின் இறுதியிலும் அதன் தொடக்கத்திலும் உள்ள மதிப்பு வேறு பாடுகள் எனக் குறிக்கின்றன. இவ் வேறுபாடு, விலைகளின் மாற்றங்கள், பண்டங்களின் அமைப்பு அளவு மாற்றங்கள் ஆகிய வைகளின் பெருக்கிய தொகையைக் குறிக்கிறது. 'விலைகள்' என்பவை தொழில்கள் மதிப்பீடுகளுக்காகப் பயன்படுத்தும் அடிப்படைகளைக் குறிக்கின்றன. சில தொழில்கள் உண்மைச் செலவுகளையும், சில நிறுவனங்கள் செலவுகளை மட்டும், இன்னும் சில அங்காடிச் செலவுகளையும், சில அங்காடிகளையும் பயன்படுத்து கின்றன. அடக்கவிலை (cost) என்பதைப் பயன்படுத்துகையில் இருப்பில் உள்ள ஒரு தனி அலகின் வேறுபாடுகளைக் கருதாமையில், ஒரு இருப்பின் மதிப்பை LIFO (last-in-first-out) என்ற முறையைக் கொண்டு, அல்லது FIFO (first-in-first-out) என்ற முறையைக் கொண்டு, அல்லது ஒரு 'சராசரி' முறையைக்கொண்டு அளவிடு கிறார்கள். இம் முறைகளின் நுணுக்கங்களை நாம் ஆராயத் தேவை யில்லை. (ஆயினும் சரிக்கட்டுகளைக் கணக்கிட, இருப்புப் பட்டியலில் உள்ள ஓர் இருப்பின் மதிப்பைத் தனித்தனியே நிர்ணயிக்க வேண்டும்). எந்த முறையைப் பயன்படுத்தினாலும், ஓர் இருப்பின் மதிப்பு மாற்றம் என்பது, ஒரு குறிப்பிட்ட காலத் தொடக்கம் தொட்டு, அக் காலத்தின் முடிவு வரை, இருப்புப் பட்டியல்கள் ஒவ்வொன்றின் அலகு மாற்றம், விலை மாற்றம்

ஆகிய இவ்விரண்டையும் பெருக்கியதால் கிட்டும் தொகையைக் குறிக்கிறது என்பதை மறக்கக் கூடாது.

ஒரு குறிப்பிட்ட காலத்தில் இருப்புகளை மதிப்பிடப்பயன் படும் 'விலைகளின்' மட்டங்கள் மாறினால் அவை, விற்பனை செய்யாமல், இருப்புகளுடன் சேர்க்கப்படும் நாட்டு ஆக்கத்தின் மதிப்பை, முழுமையாகப் பொய்ம்மையாக்குகிறது என்பதை நாம் இப்பொழுது அறியவேண்டும். இதனை விளக்கக் கீழ்க்காணும் உதாரணங்களை ஆராயவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| (1) | கால இறுதியில் உள்ள இருப்பு | ... 12 அலகுகள் விலை $ ·75 = | $ 90 |
| | காலத் தொடக்கத்தில் உள்ள இருப்பு | ... 100 அலகுகள் விலை $ 1·00 = | $100 |
| | இருப்புப் பட்டியல் மாற்றம் (புத்தக மதிப்பு) | | — $ 10 |
| (2) | கால இறுதியில் உள்ள இருப்புப் பட்டியல் | ... 80 அலகுகள் விலை $ 1·50 = | $120 |
| | காலத் தொடக்கத்தில் உள்ள இருப்புப் பட்டியல் | ... 100 அலகுகள் விலை $ 1·00 = | $100 |
| | இருப்புப் பட்டியலின் மாற்றம் (புத்தக மதிப்பு) | | + $ 20 |
| (3) | கால இறுதியில் உள்ள இருப்புப் பட்டியல் | ... 120 அலகுகள் விலை $ 1·20 = | $144 |
| | காலத் தொடக்கத்தில் உள்ள இருப்புப் பட்டியல் | ... 100 அலகுகள் விலை $ 1·00 = | $100 |
| | இருப்புப் பட்டியல் மாற்றம் (புத்தக மதிப்பு) | | + $ 44 |

மேற்காட்டிய உதாரணம் (*1*) என்பதில், அமைப்பளவில் இருப்புப் பட்டியலின் மாற்றம் 20 அலகுகளாக உயர்ந்து இருக்கிறது; ஆனால், இருப்புப் பட்டியல் மதிப்பு வீழ்ந்திருக்கிறது. இவ்வாண்டில் கிடைத்த வெளிப்பாடும் இருப்புப் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளது. நாட்டு ஆக்கம் என்பது விற்பனை செய்த வெளிப்பாட்டை மட்டும் உள்ளடக்காமல், தொழில்துறை இருப்புப் பட்டியல் ஏற்றங்களுக்குப் பயன்பட்ட வெளிப்பாட்டையும் உள்ளடக்கியதாகும்: ஆனால், புத்தக மதிப்பு எண்களைக் காணுமிடத்து, இவ்வாண்டு விற்பனைகள் உற்பத்தியைவிட உயர்ந்து காணப்படுகிறது எனத் தோன்றும். இரண்டாம்

உதாரணத்தில் இதன் திருப்பிய நிலையைக் காணலாம். அவ்வுதாரணத்தில் காணப்படும் மதிப்பு எண்களைக் கொண்டு, இவ்வாண்டின் உற்பத்தி, விற்பனையைவிட உயர்ந்து காண்கிறது என்று முடிவு கட்டலாம். ஆனால், உண்மையில், இவ்வாண்டில் விற்பனையான பண்டங்களின் ஒரு பகுதி இதற்கு முந்தைய ஆண்டில் உற்பத்தியானவை.

இருப்புப் பட்டியலின் திசை மாற்றங்கள், அவைகளைத் தொடக்கவிலை அல்லது இறுதிவிலை இவைகளுடன் தொடர்பு இல்லாமல், தனித்த நிலைமையில் அமைந்துள்ளன என்பது ஒவ்வோர் உதாரணத்திலிருந்து தெரிகிறது. உதாரணம் (1) என்பதில் காணப்படும் நிலை, விற்பனை செய்த ஆக்கத்துடன் இருபது அலகுகள் உற்பத்தி செய்யப்பட்டன என்பதை உணர்த்துகிறது. இவ்வாக்கம் எதிர்மறையற்ற நேர்நிலை மதிப்பைப் பெற்றுள்ளது. இம் மதிப்பு எந்த அலகைக் கொண்டு, அதாவது ஆண்டுத் தொடக்கத்தில் உள்ள உயர்ந்த விலைகளைக் கொண்டு மதிப்பிட்டாலும் அல்லது ஆண்டு இறுதியில் உள்ள குறைந்த விலைகளைக் கொண்டு மதிப்பிட்டாலும் நேர்நிலையானது (positive) இந்த உதாரணத்தின் ஒரு நிலையில் இருப்புப் பட்டியல் மதிப்புக் கூடுதல் (increment) 20 டாலர்களாகும். (20 அலகுகள், அவைகளின் விலை \$ 1·00). மற்ற நிலையில் அது 15 டாலர்களாக அமைகிறது. (20 அலகுகள் அவைகளின் விலை \$ ·75). இம் மதிப்புகளில் ஏதேனும் ஒன்று புத்தகங்களில் காணப்படும் 10 டாலர்கள் என்பதைவிட உண்மையான நிலையை உணர்த்துகிறது.

புத்தக மதிப்பு மாற்றத்திற்கு வேறோர் எண்ணைப் பதிவீடு செய்ய விரும்புகிறோம் என்பது தெளிவு. அவ்வாறு பதிவீடு செய்யக் கருதும் எண், இருப்புப் பட்டியல்களின் அமைப்பு மாற்றத்தின் உண்மையான திசையை நன்கு உணர்ந்த எண்ணாக அமையவேண்டும். ஆனால், இருப்புப் பட்டியல்களின் அமைப்பு மாற்றத்தை எப்படி அளப்பது? ஒரு கணநேரம் சிந்தித்தால், இதற்கான கொள்கை அல்லது முறை புலனாகும். இருப்புப் பட்டியலுடன் சேரும் வெளிப்பாட்டை, விற்பனை செய்த பண்டங்களின் மதிப்பை அடிப்படையாகக் கொண்ட மதிப்புக்கு ஒத்த அடிப்படை முறையைக்கொண்டு அளவிட வேண்டும். விலை மாற்றம் ஏற்படும் ஆண்டில் விற்ற பண்டங்களின் மதிப்பை எவ்வாறு நிர்ணயிப்பது? அதனை, அவ்வாண்டில் பண்டங்களை விற்ற உண்மை விலைகளைக்கொண்டு மதிப்பிடவேண்டும். இது, அவ்வாண்டின் மொத்த விற்பனைகள், ஒவ்வொரு விலை, அவ் விலையில் விற்ற பண்டங்களின் மதிப்பால் நிறையிட்ட சராசரி விலை கொண்டு

மதிப்பிடப்படுகிறது எனப் பொருள்படும். உதாரணமாக, பண்டங்களின் விலை நிலை, ஆண்டுத் தொடக்கம் முதல் இறுதிவரை, ஒழுங்கான போக்கில் இருபது சதவீதம் குறைந்தது என்று வைத்துக்கொள்வோம். அப்பண்டங்களின் (அமைப்பு) விற்பனைகள், அவ்வாண்டின் ஒவ்வொரு நாளும் ஒரே நிலையில் இருந்தன என்று மேலும் வைத்துக்கொள்வோம். பின், பண்டங்களின் மொத்த விற்பனையை, இவ்வாண்டு தொடக்க விலையைவிட 10 சத வீதம் குறைந்த சராசரி விலையைக் கொண்டு மதிப்பிடப்படுகிறது. அவ்வாண்டில் விற்காத பண்டங்களை இதற்கு ஒத்த ஒரு முறை கொண்டு மதிப்பிடப்படவேண்டும். அவைகளை ஒரு வகை 'சராசரி' விலை கொண்டு மதிப்பிடப்படவேண்டும். அத்தகைய 'சராசரி' விலை இங்கு விற்பனைகளின் விலைகள் என்பதை அடிப்படையாகக் கொள்ளாமல், இருப்புப் பட்டியல் மதிப்பை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது. மேல் காட்டிய உதாரணங்களில் மதிப்பீடு அடிப்படையின் மாற்றம் ஆண்டுத் தொடக்கம் முதல் இறுதி வரையிலும் ஒரே தன்மையான போக்கையுடையது என்ற எளிய எடுகோளைக் கொண்டால், சராசரி 'விலைகள்' கொண்டு மதிப்பிடப்பட்ட இருப்புப் பட்டியல் மாற்றம் ஒவ்வோர் உதாரணத்திலும் கீழ்க்கண்டவாறு அமையும்.

(1) +20 அலகுகள் விலை \$ 8·75 = + \$ 17·50

(2) —20 அலகுகள் விலை \$ 1·25 = — \$ 25·00

(3) +20 அலகுகள் விலை \$ 1·10 = + \$ 22·00

இதற்குப் பின், இவ்வாண்டின் இருப்புப் பட்டியல்களின் மாற்றங்களின் அளவுகளின் மதிப்பில் இவைகளுக்குப் பதிலீடு செய்தால், 'இருப்புப்பட்டியல் மதிப்பீடு சாட்டுதலை'ச் செய்தவர்களாவோம். இச்சரிக்கட்டு, இருப்புப் பட்டியல்கள் மாற்றங்களின் புத்தக மதிப்பைத் திருத்திய மதிப்புக்கு மாற்றத் தேவைப்பட்ட தொகையில் அமைந்துள்ளது. இருப்புப் பட்டியல் மதிப்பீட்டுச் சரிக்கட்டின் அளவு மேற்காட்டிய உதாரணம் ஒவ்வொன்றிலும் கீழ்க்காணுமாறு அமையும்.

(1) \$ 17·50 — (—\$ 10) = \$ 27·50

(2) —\$ 25·00 — \$ 20 = —\$ 45·00

(3) \$ 22·00 — \$ 44 = —\$ 22·00

ஓர் ஆண்டில் 'விலைகள்' உயருமிடத்து, (இருப்புப் பட்டியல்களின் அமைப்பு மாற்றங்கள் எவ்வாறு இருப்பினும்) இருப்புப்

பட்டியல் மதிப்பீட்டுச் சரிக்கட்டுகள் எதிர்நிலை மதிப்பைப் (negative) பெறுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. அதுபோல் விலைகள் குறைவு பட்டுக்காணுமிடத்து அவைகளின் மதிப்பு நேர் நிலைத் (positive) தன்மையைப் பெறுகிறது. விலைகள்மட்டும் மாருமல் இருந்தால் சரிக்கட்டுகள் சுன்னம் என்ற மதிப்பைப் பெறுகின்றன. இந்தக் கடைசி விளைவில் நாம் பெரிதும் நாட்ட முடையவர்கள் ஆகிருேம். ஏனெனில், விலைகள் மாருமலிருந்தால், சராசரி (அதாவது மாறிலியான) விலைகளைக் கொண்டு மதிப்பிட்ட அமைப்பு மாற்றத்தைப் புத்தக மதிப்பு மாற்றம் பிரதிபலிக்கிறது.

தொழில்துறைக் கணக்கின் ஆக்கப்பக்கத்தில் உள்ள இனங் களுக்கு இருப்புப் பட்டியல் மதிப்பீட்டுச் சரிக்கட்டுகளைச் செய்த பின்னர், அத்தகைய சரிக்கட்டுகளை வருமானப் பக்கத்தில் உள்ள இனங்களுக்கும் சரிக்கட்டுகளை அமைத்தல் அவசியப்படுகிறது. ஆனால், இங்கு அச் சரிக்கட்டுகளை நாம் வெளிப்படையாகக் குறிப்பிடு கிருேம். அச் சரிக்கட்டுகள் வருமானப் பக்கத்தில் குறிப்பிடுகையில், இருப்புப் பட்டியல் ஆதாயம் அல்லது இழப்பைக் குறிக்கும் தொகையின் அளவாக அமைகிறது. (ஆயினும், இருப்புப் பட்டியல் ஆதாயம் என்ற சொல் பல பொருள்கள் உள்ள சொல்லாகும்; இருப்புப் பட்டியல் மதிப்பீட்டுச் சரிக்கட்டுகள் என்ற பொருள் அவைகளில் ஒன்றைக் குறிப்பிடுகிறது).

மேல் விளக்கிய பத்திகள், இருப்புப் பட்டியல் மதிப்பீட்டுச் சரிக்கட்டுகளின் தத்துவத்தை வெகு எளிதாக எடுத்துக்காட்டு கின்றன. ஆயினும் மாணவர்களுக்குச் சில அறிவிப்புகள் தேவைப் படுகின்றன. முதலாவதாக, இருப்புப் பட்டியல் மதிப்பீட்டுச் சரிக்கட்டுகள் மேற்காட்டிய முறையில் அமைக்கப்படுவதில்லை (உதாரணமாக, இருப்புப் பட்டியல்களின் அமைப்பு மாற்றங்களை நேரடியாக அளவிட நம்மால் முடியாது; இருப்புப் பட்டியல்களின் அமைப்பு மாற்றங்களைச் சராசரி விலைகளைக்கொண்டு மறுமதிப்பீடு செய்யுமுன் இவைகளை முதற்கண் மதிப்பிடவேண்டும்). இரண்டாவ தாக, இருப்புப் பட்டியல்களின் மதிப்புச் சரிக்கட்டுகளைக் கணிப்ப தில் கோட்பாடு தொடர்புடைய சில ஒழுங்கற்ற பிரச்சினைகளும், சிக்கலான புள்ளியியல் தொடர்புடைய பல பிரச்சினைகளும் எழும் என்பதையும் நினைவுறுத்தவேண்டும். ஆயினும் இத்தகைய சரிக் கட்டுகள் எதற்காகச் செய்யப்படுகின்றன என்பதை ஒவ்வொரு மாணவனும் நன்கு அறியவேண்டும்; மேலும் நாட்டு வருமானம், நாட்டு ஆக்கம் ஆகிய கருத்துகளுடன் தொடர்புடைய விவரங் களைப் பரிசீலனை செய்யுமிடத்து; ஒவ்வோர் இருப்புப் பட்டியல் மதிப்பீட்டுச் சரிக்கட்டுகளை நன்கு விளக்கிக் கூறுதல் வேண்டும்.

## முதல் நுகர்ச்சிக்கான சலுகைகள்
## (Capital Consumption Allowance)

அட்டவணை 3-5 என்பதில் 'முதல் நுகர்ச்சிக்கான தள்ளுபடிகள்' என்ற மிக விரிவான இனம் நாம் இதுவரை பயன்படுத்திய தேய்மானம் என்ற இனத்தைப் பதிலீடு செய்தது. தேய்மானம் என்ற இனம் (தொழில்துறைக் கணக்கில்) நாட்டு ஆக்கங்களின் மொத்த மதிப்பு, நிகர மதிப்பு இவைகளுக்கிடையேயுள்ள வேறுபாட்டின் அளவைக் குறிக்கிறது. முதல் நுகர்ச்சிக்கான தேய்மானம் என்ற இந்தப் புது இனம் என்பது தேய்மானம் என்ற இனத்தைப் பெருவாரியாகக் குறிக்கிறது ; ஆயினும் 'நிலை முதல் சரக்குகளுக்கு ஏற்படும் எதிர்பாராத விபத்தினையும்' இவ்வினம் உள்ளடக்கியது. இந்தப் பதிவு எளிதில் தன்னைத் தானே விளக்கிக் கொள்ளும் திறமையுள்ளது ; இதனுடன் 'நடப்புச் செலவுக்கான முதல் செலவீடு' என்ற இனத்தையும் அது உள்ளடக்கியதாகும். இந்தப் பதிவு மிகவும் முதன்மையான இனமாக அமையாவிட்டாலும், இப் பதிவின் சிறப்பை ஒவ்வொரு மாணவனும் நன்கு உணர வேண்டும். அமைப்பு வேலைகளுக்கும், உற்பத்தியாளரின் நெடுபயன் சரக்குகளுக்கும், செலவிடும் தொழில்துறைச் செலவீடுகளை, தனித்தனி நிறுவனங்களின் முதல் கணக்குகளை ஒருங்கமைத்துப் பெற்ற தொகையைவிட உயர்ந்த தொகை கொண்டு ஆக்கக் கணக்குகளில் பதிவு செய்யப்படுகிறது. நாட்டு ஆக்க மொத்தம், தொழில்துறைகளின் வாங்குதல்களை, நடப்புச் செலவில் வாங்கியவைகள் எனக் கருதும் இனங்களையும் உள்ளடக்கியதாகும். இதனுள் அடங்கும் மிகப் பெரிய செலவுகள் எண்ணெய் மற்ற எரிபொருள்களை உற்பத்தி செய்பவர்கள், கிணறுகள் தோண்டுவதற்காகச் செய்யும் செலவுகளை, தனித்துறைக் கணக்குகள் ஆளும் முறைகொண்டு பதிவு செய்யப்படுகிறது ; அதாவது அவைகளை நடப்பு வருமானங்களுடன் சேர்க்கின்றார்கள் ; உள்ளபடி அவற்றை எண்ணெய் மற்ற எரிபொருள்களை எடுக்கும் கிணறுகளின் ஆயுள்கால அளவைக் கொண்டு 'மூலதன ஆக்கங்களாக' (capitalised) அமைக்க வேண்டும். புதிதாக வாங்கிய முதல் சரக்குகள் என்ற தலைப்பின் கீழ் நாட்டு ஆக்கக் கணக்கர் பதிவு செய்ய விரும்பும் இனங்களில், உந்து வண்டிகளின் பல பாகங்களை அச்சிடத் தேவைப்படும் சாயங்கள் போன்றவை குறிப்பிடத் தக்கவை. உந்து வண்டிகளின் மாதிரிகள் விரைவாக மாறுகின்றமையால் சாயங்களுக்கான செலவுகளை நடப்புச் செலவுகளாக இத் தொழில் நிறுவனங்கள் கருதுகின்றன. ஆனல், இவைகளை மற்றத் தொழில் நிறுவனங்கள் பல ஆண்டுகளுக்குப் பயன்படுத்தும். எனவே

அவைகளை மூலதன ஆக்கக் கணக்குகளாகக் கருதுகின்றன. நாட்டு ஆக்கக் கணக்குகளில் இவற்றை முதல் சரக்குகளாகக் கருதினால், இவைகளுக்கான சரியீட்டுப் பதிவைக் (compensatory entry) கணக்கின் வருமானப் பகுதியில் அதாவது இடப் பக்கத்தில் பொருத்தப்படவேண்டும். நாட்டு ஆக்கக் கணக்கின் இடப் பக்கத்தில் அமைக்கப்பட்டுள்ள இப் பதிவுக்கு ஏற்ற பதிவு கணக்கின் வலப் பக்கத்திலும் உள்ளது. ஆனால், வலப் பக்கத்தில் உள்ள பதிவைப் பிரதிபலிக்கும் இடப் பக்கத்தில் உள்ள பதிவுக்கு 'நடப்புச் செலவுக்கான முதல் செலவீடு' (capital outlay charged to current expense) என்று அழைக்கப்படுகிறது. இப் பதிவைத் தான், தேய்மானம், எதிர்பாராத விபத்துச் செலவுகள் ஆகிய இனங்களை உள்ளடக்கிய முதல் நுகர்ச்சிக்கான தள்ளுபடிகள் என்று முன்னமே குறிப்பிட்டோம்.

கணக்கில் காணப்படும் பல இனங்களை இவ்வாறு கருதுவது நாட்டு வருமானம் அல்லது நிகர நாட்டு ஆக்கம் ஆகியவைகளின் அளவைப் பாதிக்காது. இவ்வினங்களை நாட்டின் மொத்த ஆக்கக் கணக்குகளில் சேர்ப்பதற்கு ஒரு நல்ல காரணம் உண்டு என்று சிலர் கருதுகிறார்கள்: அது இவ்வினம், தேய்மானத்தை மறு கணக்கிட்டு, தொழில்துறை ஆதாயத்தைச் சரிக்கட்டப் பயன்படு கிறது என்பது. ஆனால், இந்த முறையை இதுவரையில் பயன் படுத்தவில்லை.

நாட்டு ஆக்கக் கணக்குகளில் ஆற்றல் குறை தள்ளுபடிகள் (depletion allowance) என்ற இனத்தைக் குறிக்கப்படாம லிருப்பதை வெளிப்படுத்த இச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்து வோம். தனித்துறை கணக்கர்கள் ஆற்றல்குறை (depletion) என்ற இனம் தொழில்துறை ஆதாயங்களின் ஒரு பகுதியை, உணர்த்து வதாகக் கருதுகின்றனர். (வீணாக்கப்படுகின்ற இயற்கை வளங்களை மூலதன ஆக்க மயமாக்குவதால் ஏற்படும் விளைவு ஆற்றல் குறை தள்ளுபடியாகும். எவரேனும் ஒருவர் தாதுப் பொருள்கள் உள்ள சுரங்கத்தைக் கண்டுபிடித்தாலும், அல்லது அதனை விலை கொடுத்து வாங்கினாலும், அதற்கான விலை, அதன் அசல் விலை அல்லது கண்டுபிடிப்புக்கான செலவு விலையாக அமைகிறது.) புதுக் கண்டுபிடிப்புகளின் மதிப்பு அல்லது வாங்கிய வளங்களின் மதிப்பு ஆகியவைகளில் ஏதேனும் ஒன்று நாட்டு ஆக்கக் கணக்குகளில் 'முதலீடுகள்' என்ற தலைப்பில் பதிவு செய்யப்படுகிறமையால்,—அல்லது உற்பத்தி என்பதை எப்பொழுதும் உள்ள பொருளில் விளக்கினால் அப் பதிவுகள் இடம் பெற மாட்டா—இவற்றைக் கணக்குகளில் குறிப்பிடாது, வாங்கியவைகளின் மதிப்பையும்,

கண்டுபிடிப்பின் மதிப்பையும் 'பைசல்' (write off) செய்து விடுகிறோம். இதனால் ஆக்கம், வருமானம் ஆகியவைகள் என்ற தலைப்புகள்—குறிப்பாகக் கூட்டமைப்புச் சேமிப்பு, மக்கள்சார் சேமிப்பு—ஆகியவை தங்களது வழக்கமான பொருள்களிலிருந்து பெயர்த்து எடுக்கப்படுகின்றன.

## ஐக்கிய அரசுக் கணக்குகளிலிருந்து சில விளக்கமான விவரங்கள்

## (Illustrative Data from the united States Accounts)

அட்டவணை 3–5, நாட்டு வருமானம், நாட்டு ஆக்கம் ஆகிய வைகளின் கணக்குகளின் 1958ஆம் ஆண்டு விவரங்களை, ஐக்கிய அரசுகளின் வணிகத்துறை அளிக்கும் (சுருக்க அட்டவணைகளில்) வகையில் இங்குத் தரப்பட்டுள்ளது. (இதனைப் பக்கம் 56-ல் நாம் தந்துள்ளோம்.

இங்கு எல்லாத்துறைக் கணக்குகளை ஒரு மிகப் பெரிய கணக்காகக் கூட்டி அமைத்துள்ளோம். இக் கணக்கின் வலப் புறத்தில் அல்லது ஆக்கப் பக்கத்தில், தொழில்துறை மொத்தத் தின் தொகை, மற்றத் துறைகளின் மொத்த (நிகர என்பதைப் போன்ற) ஆக்கங்களின் மதிப்புகளின் கூட்டுத்தொகை தரப் பட்டுள்ளது. ஆனால், இவைகளை மூல நூலில் 61-ஆம் பக்கத்தில் கண்டவாறு மறு அமைப்புச் செய்யப்பட்டிருக்கிறது. கணக்கின் ஆக்கப் பக்கத்தில் உள்ள ஒவ்வொரு இனத்தை விளக்குவது இப்பொழுது மாணவர்களுக்குக் கடினமாக இராது.

கணக்கின் இடப் பக்கம் அதாவது வருமானப் பக்கத்தில் உள்ள இனங்கள், தொழில்துறைக் கணக்கின் அமைப்பை அடிப் படையாகக் கொண்டு அமைந்துள்ளது. ஆனால், மற்றத் துறை களிலிருந்து வரும் வருமானங்களையும் இது உள்ளடக்கியதாகும். மற்ற மூன்று துறைகளிலிருந்து வரும் நாட்டு வருமானத்தை (மொத்த, நிகர) ஆக்க அளவையுடன் முற்றொருமையான அளவைக்கொண்டு அளக்கப்படுகிறது என்பதை நினைவுப்படுத்திக் கொள்ளவேண்டும். அவ்வாறு நினைவுப்படுத்திக்கொண்டால், மற்றத் துறைகளிலிருந்து வரும் ஆக்கங்களை, தொழில்துறையி லிருந்து வரும் ஆக்கத்துடன் சேர்க்கையிலும், அல்லது மற்றத் துறைகளிலிருந்து வரும் வருமானத்தைத் தொழில் துறையி லிருந்து வரும் வருமானத்துடன் சேர்க்கையிலும், கணக்கின் சமமான தன்மை கலைக்கப்படுவதில்லை என்பது புலனாகும். ஆகவே, நாட்டின் மொத்தம் அல்லது நிகர ஆக்கத்திற்கும், நாட்டின் மொத்த அல்லது நிகர வருமானத்திற்குமிடையே உள்ள வேறுபாடுகளும், தொழில்துறைக் கணக்குகளின் வேறுபாடுகளை

அட்டவணை 3–5. ஐக்கிய அரசுகளின் நாட்டு வருமான, நாட்டு ஆக்கக் கணக்குகள், 1958 (மிலியன் டாலர்களில்)

| | | | |
|---|---|---|---|
| உழைப்பாளி சரியீடு | $256·8 | நிகர நாட்டு வருமானம் | 403·8 |
| கூலிகள், சம்பளங்கள் | 239·4 | இதனுடன் முதல் நுகர்ச்சி சலுகைகள் | 37·9 |
| கூலிகள், சம்பளங்கள் இவைகளுக்கான சேர்க்கைகள் | 17·4 | தேய்மானச் செலவுகள் | 34·7 |
| | | தொழில்நிலை முதல் சரக்குகளுக்கான எதிர்பாராத விபத்துச் செலவுகள் | ·7 |
| உழைப்போரின் பொதுநல ஈட்டுறுதிச் செலவுகள் | 8·1 | நடப்புச் செலவுக்கான முதல் செலவுகள் | 2·5 |
| மற்ற உழைப்பு வருமானம் | 9·3 | நாட்டு ஆக்கமொத்தம் | $441.7 |
| உரிமையாளரின் வருமானமும், இருப்புப் பட்டியல் மதிப்பீட்டுச் சரிக்கட்டுகளும் | 46·6 | மக்கள்சார் நுகர்ச்சிச் செலவுகள் | $293·0 |
| | | நெடும் பயன் சரக்குகள் | 37·6 |
| | | நெடும்பயனற்ற சரக்குகள் | 141·9 |
| தொழில் துறைகளிலிருந்து | 32·4 | பணிகள் | 113·4 |
| பண்ணை | 14·2 | உள்நாட்டு மொத்த முதலீடு | 54·9 |
| மக்கள் வாடகை வருமானம் | 11·8 | புதிய அமைப்புகள் | 35·8 |
| | | குடியிருப்புக்கான பண்ணைகள் | 18·0 |
| | | மற்றவை | 17·7 |
| கூட்டியலான இலாபங்களும் இருப்புப் பட்டியல் மதிப்புச் சரிகட்டுகளும் | 36·7 | உற்பத்தியாளரின் நெடும்பயன் பொறித்தளவாடம் | 22·9 |
| வரிகளுக்கு முன்னுள்ள ஆதாயம் | 37·1 | தொழில் இருப்புப் பட்டியலின் மாற்றம் | –3·8 |
| வரிப் பொறுப்புகள் | 18·2 | பண்டங்கள், பணிகள் இவைகளின் நிகர ஏற்றுமதி | 1·2 |
| வரிகளுக்குப் பின்னுள்ள ஆதாயம் | 18·9 | | |
| இலாபப் பங்கீடுகள் | 12·4 | | |

| | | | |
|---|---|---|---|
| பங்கீடு செய்யாதவை | 6·5 | ஏற்றுமதி | 22·6 |
| இருப்புப் பட்டியல் மதிப்பீட்டுச் சரிக்கட்டு | -·4 | இறக்குமதி | 21·3 |
| நாட்டு வருமானம் | 366·2 | அரசு வாங்கிய பண்டங்கள் பணிகள் | 92·6 |
| இதனுடன் மறைமுகத் தொழில் வரிகளின் வரியில்லாப் பொறுப்புகள் | 39·0 | கூட்டரசு (Federal) | 52·2 |
| | | நாட்டு இராணுவம் (விற்பனை நீங்கலாக) | 44·1 |
| தொழில் மாற்றுச் செலவீடுகள் | 1·7 | மற்றது | 8·1 |
| புள்ளியியல், வேறுபாடுகள் | -2·1 | இராச்சியங்களும் தலத் தாபனங்களும் | 40·5 |
| அரசத் தொழில்களின் நடப்பு உபரித் தொகை இவைகளிலிருந்து உதவித் தொகையைக் கழித்து | -1 0 | நாட்டு ஆக்கத்தின் மொத்தம் (goods) | $ 441·7 |

மட்டும் குறிக்கின்றன. இதற்குக் காரணம் எளிதில் காட்டலாம். காரணி விலைகளைக்கொண்டு செய்யும் மதிப்பீட்டிற்கும் அங்காடி விலைகளைக் கொண்டு செய்யும் மதிப்பீட்டிற்கும் நிறைய வேறுபாடு உளது.

கணக்கின் வருமானப் பக்கத்தில் காணப்படும் ஒரு சில இனங்களை இங்கு விளக்குதல் ஏற்புடையதாகும். 'உழைப்பாளி சரியீடு' என்ற தலைப்பில், உழைப்பாளிகளின் செலுத்துகளைக் 'கூலிகள், சம்பளங்கள்' என்பவையுடன் சேர்த்துள்ளோம் என்பதும், வேலை வழங்குவோரின் சரியீட்டை, 'சேர்க்கைகள்' (sufflements) எனக் கருதியுள்ளோம் என்பதையும் குறிப்பிட வேண்டும். 'மற்ற உழைப்பு வருமானம்' என்ற தலைப்பின்கீழ் வேலை வழங்குவோர் தனிப்பட்ட உபகாரச் சம்பளம் அல்லது பொதுநல நிதிகளுக்கும் வழங்கும் தொகையை, இயக்குநர் சம்பளங்கள், உழைப்பாளிகளின் சரியீட்டுச் செலுத்துகள் போன்ற பலதரப்பட்ட உழைப்பு வருமானங்களைக் குறித்துள்ளோம்.

'புள்ளியியல் வேறுபாடுகள் (Statistical discrepancy) என்பது, கணக்கின் வலப் புறத்தில் காணப்படும் இனங்களைப் பல மூலங்களைக் கொண்டு தனித்தனியாக மதிப்பிடுவதால் ஏற்படும் விளைவாகும். இந்த வேறுபாடு கணக்கின் இரு பக்கங்களையும் சமரசப் படுத்தும் (reconciliation) பதிவாகக் கருதி வருமானப் பக்கத்திற்கு மனப்போக்காக ஒதுக்கப்பட்டுள்ளது.

கணக்கின் இறுதியில் உள்ள விளக்கம், உதவித்தொகை நீங்கலாக உள்ள அரசத் தொழில்களின் நடப்பு உபரித்தொகைக்கானது. இவ்வினங்களைப் பிரித்து இதுவரை விளக்கி வந்தோம்; ஆனால், கணக்குகளில் இவைகள் ஒருங்கமைக்கப்பெற்ற மொத்தங்களாகவே குறிக்கப்படுகின்றன. (இவ்விரு இனங்களும் அரசத் துறைக் கணக்கின் இடப் பக்கத்தில் ஒருங்கமைக்கப் பெற்றவாறு குறிக்கப்பட்டுள்ளன.)

கணக்கில் காணும் ஒவ்வொரு இனத்தை நன்கு அறியவும், அவை குறிக்கப்பட்டுள்ள இடங்களில் ஏன் குறிக்கப்படவேண்டும் என்பதை அறியவும், எத்துறைக் கணக்கு அல்லது கணக்குகளிலிருந்து இவைகளைப் பெற்றோம் என்பதற்கான விளக்கத்தை அறியவும் மாணவர்களுக்கு இவ்விளக்கங்கள் பெரிதும் பயன் படுகின்றன.

## சேமிப்பு, முதலீடு
## (Savings & Investment)

அரசு, கூட்டமைப்பு நிறுவனங்கள், பன்னாட்டு வாணிபம், இருப்புப் பட்டியல் மாற்றம் இவை ஏதுமில்லா ஒரு கருத்தியலான

பொருளாதார அமைப்பில், சேமிப்பு முதலீடு ஆகியவைகள் தொடர்பு எப்படி அமையவேண்டும் என்பதை, முன்னொரு அதிகாரத்தில் கண்டோம். ஆனால், உலகில் உள்ள உண்மை வருமானம், உண்மை ஆக்கம் இவைகளைக் கொண்டு மதிப்பிடும் சேமிப்பு முதலீடு ஆகியவைகளுக்கும் அதை ஒத்த (அதாவது சமமான) தொடர்பு அமையவேண்டும். முன்பு கூறியதுபோல், இந்தச் சமமான தன்மை, சேமிப்பு, முதலீடு ஆகிய சொற்களை முன்பு விளக்கிய முறையையும், அவைகளை அளக்க முன் ஆண்ட முறையையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது. அது பொருளாதார விதிகளை (economic law) அல்லது போக்கை (tendency) அடிப்படையாகக் கொண்டதல்ல. (சில சமயங்களில் இவை உண்மையாக இருக்கலாம்; அல்லது பொய்யாகவுமிருக்கலாம்); இலக்கண அமைப்பு அளவில், சேமிப்பு. முதலீடு ஆகிய இரண்டும் ஒன்றுக்கொன்று சமமானவை.

முன்பு காட்டிய நான்கு துறைகளின் கணக்குகளுக்கு மீண்டுமொரு முறை திரும்ப வருவோம். இத்துறைகளின் கணக்குகளில் காணப்படும் பதிவுகளைக் கீழ்க்காணும் வகையில் சுருக்கி, மறு தொகுப்பு செய்து அமைக்கவேண்டும்.

தொழில்துறைக் கணக்கு
(Business Account)

| | |
|---|---|
| BPI<br>(தொழில்துறை மக்கள் சார் வருமானம்)<br>மக்கள் சார் வருமானச் செலுத்தினங்கள்<br>கூலிகளும் சம்பளங்களும் | C நுகர்வோர்க்கான விற்பனைகள்<br>G அரசுக்கான விற்பனைகள்<br>X வெளிநாடுகளுக்கான விற்பனைகள் |
| (பொதுநல ஈட்டுறுதிக் கழிவுகள் நீங்க), இலாபப் பங்கீடுகள், வட்டி, வாடகை வருமானம், கூட்டமைப்பில்லா நிறுவனங்களின் வருமானம், மாற்றுகள்.<br>CS கூட்டமைப்புச் சேமிப்பு<br>IVA இருப்புப் பட்டியல் மதிப்பீட்டுச் சரிக்கட்டு<br>SIC பொதுநலஈட்டுறுதிச் செலுத்தீடுகள், உழைப்பாளி வேலை வழங்குவோர்.<br>BT தொழில்துறை வரிகள்<br>S உதவித்தொகையை நீக்கிய நடப்பு உபரி<br>CCA தேய்மானம், வகையரா | GPDI தொழில்துறைகளுக்கு முதல் கணக்குக்கான விற்பனைகளும் இருப்புப் பட்டியல் மாற்றங்களும். |

அரசின் கணக்கு

(Government Account)

| | |
|---|---|
| G தொழில்துறைகளிலிருந்து வாங்கியவை. | BT தொழில் துறை வரிகள் |
| GM வெளிநாடுகளிலிருந்து வாங்கியவை (நிகரத் தொகை) | PT மக்கள்சார் வரிகள் |
| GTA வெளிநாடுகளுக்கான மாற்றுகள் | SIC பொதுநல ஈட்டுறுதிச் செலுத்தீடுகள் |
| GPI மக்கள் சார் வருமானச் செலுத்தீடுகள் : இவைகளில் கூலிகள், சம்பளங்கள், வட்டி மக்களுக்கான மாற்றுகள் அடங்கும் | |
| –S உதவித்தொகை நீக்கப்பட்ட நடப்பு உபரி | |
| GS அரசு உபரி. | |

குடும்பக் கணக்கு

(Household Account)

| | |
|---|---|
| C தொழில்துறைகளிலிருந்து வாங்கியவை. | BPI, GPI, HPI, RPI } மக்கள் சார் வருமானம் |
| HPI மக்கள்சார் வருமானச் செலுத்தீடுகள் இவைகளில் கூலிகள், சம்பளங்கள், வட்டி ஆகியவை அடங்கும். | |
| HM வெளிநாடுகளிலிருந்து பெற்றவை (நிகரத் தொகை) | |
| PT மக்கள்சார் வரிகள் | |
| PS மக்கள்சார் சேமிப்பு. | |

மற்றைய உலகின் கணக்கு

(Rest-of-World Account)

| | |
|---|---|
| RPI மக்கள்சார் நிகர வருமானச் செலுத்தீடுகள் : இவைகளில் கூலிகள் சம்பளங்கள், வட்டி. இலாபப் பங்கீடு அடங்கும். | NFI அயல் நாட்டு நிகர முதலீடு |
| BP கிளை நிலைய இலாபங்கள் | GTA வெளி நாடுகளுக்கான அரசின் மாற்றுகள் |
| X தொழில்துறை நிகர ஏற்றுமதி | |
| —GM அரசின் நிகரி இறக்குமதி | |
| —HM குடும்பத்தின் நிகர இறக்குமதி | |

தொழில்துறைக் கணக்கிலிருந்து கீழ்க்காணும் சமன்பாடு கிட்டும்.

(1) BPI+CS+IVA+SIC+BT+S+CCA=C+G+X+GPDI கணக்குப் புத்தகங்களைச் சமப்படுத்துவதற்காக மிச்ச இனமாக இலாபத்திற்கு இலக்கணம் அமைத்தமையால், சமன்பாட்டின் இருபக்கங்களும் சமமாக உள்ளன.

அரசத்துறைக் கணக்கிலிருந்து கீழ்க்காண்பது கிட்டும்.

(2) G+GM+GTA+GPI—S+GS=BT+PT+SIC உபரி (GS) என்ற சொல்லுக்குச் சமப்படுத்தும் இனம் என்ற பொருள் அமைந்ததால் இந்தச் சமன்பாடு உண்மையானது.

குடும்பத்துறைக் கணக்குகளிலிருந்து வரும் சமன்பாடு.

(3) C+HPI+HM+PT+PS=BPI+GPI+HPI+RPI மக்கள் சார் சேமிப்பு (PS) என்பது மிச்சம் என்ற பொருளில் அமைந்ததால் இக் கணக்குச் சமமாக உள்ளது.

மற்றைய உலகின் கணக்கிலிருந்து வரும் சமன்பாடு பின்வருமாறு:

(4) RPI+BP+X—GM—HM=NFI+GTA.

இந்தக் கணக்கு அயல் நாட்டு நிகர முதலீடு என்பதற்கு அமைத்த இலக்கணத்தைக் கொண்டு சமமாக உள்ளது.

மேல்காணும் நான்கு வகைச் சமன்பாடுகளைக் கூட்டினுல், இவைகளில் காணப்படும் இனங்களின் பெரும்பகுதி, சமன்பாடுகளின் இருபக்கங்களிலும் இடம் பெறுகின்றன, அல்லது இச் சமன்பாடுகளின் ஒரே பக்கத்தில் எதிர்மறை குறிகொண்டு இடம் பெறுகின்றன என்பது விளங்கும். எனவே, இனங்களின் பெரும்பகுதி ஒன்றை ஒன்று அடித்து நீக்கிய பின்னர்க் கீழ்க்காணும் சமன்பாடு கிடைக்கிறது.

(5) PS+CCA+CS+IVA+BP+GS=NFI+GPDI.

இச் சமன்பாடுகளின் இடப் பக்கத்தில் காணும் இனங்களை, மொத்தச் சேமிப்பு இனங்கள் (items of gross saving) எனக் கூறலாம். அவை பின்வருமாறு:

PS மக்கள்சார் சேமிப்பு.

CCA முதல் நுகர்ச்சிச் சலுகை.

CS (உள்நாட்டு) கூட்டமைப்புச் சேமிப்பு.

IVA இருப்புப் பட்டியலின் மதிப்பீட்டுச் சரிக்கட்டு.

BP (அயல்நாடு) கிளை நிறுவனங்களின் இலாபங்கள்.

GS அரசின் உபரி.

வலப் பக்கத்தில் காணும் இனங்களை மொத்த முதலீடு எனக் கூறலாம். அவை பின்வருமாறு :—

NFI அயல் நாடுகளின் நிகர முதலீடு.

GPDI உள் நாட்டுத் தனித்துறை மொத்த முதலீடு.

மொத்தச் சேமிப்பு, மொத்த முதலீடு இவைகள் ஏன் சமமாக உள்ளன? இவை பொருளாதார விதியை அல்லது போக்கை அடிப்படையாகக் கொண்டு சமமாக அமையவில்லை. சமன்பாடுகளில் காணப்படும் சொற்களுக்கு வழங்கியுள்ள இலக்கணத்தையும், கணக்குகளைச் சமமாக்கிய முறையையும் அடிப்படையாகக் கொண்டு சமமாக அமைந்துள்ளன. இவைகளின் சமமான தன்மையைச் சொற்களால் விளக்குவது இயலாது. ஆனால், அவை சமமாக உள்ளன என்பது மட்டும் நமக்குத் தெரியும்.

மேல் காணும் பலவகைப்பட்ட துறைகளின் கணக்குகளை வேறு வழியில் மறு அமைப்புச் செய்ய முடியும். அவைகளில், 'நாட்டின் பொருளாதார வரவு செலவுப் பட்டியல்' (Nations Economic Budget) முறை குறிப்பிடத்தக்கது. இதனைச் சமன்பாட்டை (5) வேறுவழியில் மறு ஒழுங்குப்படுத்தினால் கிட்டும்.

$$(6)\quad (GPDI-CCA-CS-IVA-BP)+NFI-GS-PS=0.$$

அடைப்புக் குறியினுள் உள்ள தொடர்களின் கூட்டமைப்பு பொருளாதார அமைப்பின் தொழில்துறையின் 'வரவுகளை மிஞ்சிய செலவுகள்' (excess of expenditure over receipts); மற்ற மூன்று தொடர்களின் கூட்டு மற்றைய உலகு, அரசு, மக்கள்சார் துறைகளின் வரவுகளை மிஞ்சிய செலவுகளைக் குறிக்கின்றது. இத் துறைகளின் வரவுகளைவிட மிஞ்சிய செலவுகள் (புள்ளியியல் வேறுபாடுகளைத் தவிர்த்துச்) சுன்னம் என்ற மதிப்பைப் பெற வேண்டும் என்பது தெளிவு.[1]

[1] கணக்குகளை மேற்கண்ட அமைப்பில் வெளியிடுவதை 1946 முதல் 1952 ஆண்டுகளுக்கிடையே அமெரிக்க ஜனாதிபதி வெளியிட்ட பொருளாதார அறிக்கைகள் பயன்படுத்தின. ஜி. கோம் (G. Colm) என்ற மேதை எழுதிய 1960ஆம் ஆண்டில் 'அமெரிக்காவின் பொருளாதார அமைப்பு' (தேசியத் திட்டக்குழு 1952, பக்கம் 29லும் அதன் தொடர்ச்சியிலும் இம் முறையைக் காணலாம். ஐக்கிய அரசுகளின் வருமானமும் வெளிப்பாடும் என்ற நூலில் பக்கங்கள் 220-221, இவைகளில் (வரவு செலவு பட்டியல் என்று குறிப்பிடாமல்) இம்முறை காணப்படுகிறது.

ஒரு பொருளாதார அமைப்பின் ஆக்க வேலைகளை, அதன் உற்பத்தியினுல் விளையும் வருமானத்தைப் பங்கீடு செய்வதை, அளவையை அடிப்படையாகக் கொண்ட அமைப்பில் வெளிப் படுத்த ஏற்பட்ட பல வழிகளில், ஒன்றை இவ்வதிகாரத்தில் குறிப் பிட்டோம். மொத்த வெளிப்பாட்டின் தொகையை, வருமா னத்தின் தொகையை இரட்டிக்கச் செய்யாத வகையில் கிட்டும் விளைவுகளை விளக்க ஏற்பட்ட வகையில் இந்த நாட்டு வருமான, ஆக்கக் கணக்குகள் அமைக்கப்பட்டுள்ளன. மேலும், பொருளா தாரப் பகுப்பாய்விற்கு மிகவும் சிறந்த வகையில் பயன்படக்கூடிய சில தொகுப்புகளின் மொத்தங்களின் நிலை குலைவுகளையும் இவை விளக்குகின்றன.

ஒரு பொருளாதார அமைப்பின் செயல்களை அளவிடும் எண்ணற்ற வழிகளில், இந்த ஒழுங்குபாடும் ஒன்று என்பது தெளிவு. இந்த ஒழுங்குபாட்டு முறை பலவகைப்பட்ட கருத்திய லான கொள்கைகளை உள்ளடக்கியதாகும். இதனுல் இக் கணக்கு களில் காணப்படும் குறிப்பிட்ட கணக்கியல் முறைகளும், நிலை குலைவுகளும் வெளியிடும் விவரங்களுடன் முற்றும் தொடர்புடை யன. இரட்டிப்பாக்காத மொத்தங்கள் (unduplicative total) என்ற கருத்துச் சில கருத்தியலான முன்னேடிக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டது. செயல்களை உணர்த்தும் சுருக் கங்கள் இன்னும் பல உள. அவைகளும், மேற்சொன்ன கருத்திய லான முன்னேடிக் கருத்துகளையே அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது. (ஆயினும் அவை இதற்கு ஒரு வகையில் மாறு பட்ட கருத்தியல் விவரங்களை வலியுறுத்துகின்றன) இவைகளில் 'உள்ளீடு-வெளிப்பாடு பகுப்பாய்வு' (Input-Output Analysis) 'நாணய-ஓட்டம்' (Money flow) என்ற கணக்கியல் முறைகள் குறிப்பிடத்தக்கவை. இந் நூலில் ஆண்டுள்ள பேரினப் பொரு ளியல் கோட்பாடு வகைக்கு விவரங்களின் மேற்கூறிய இரண்டு ஒழுங்குபாடுகள் சிறிதளவு பயனுள்ளவை ஆதலின், இவைகளில் நாட்டமுடைய மாணவர்கள் இவைகளுக்கான விளக்கத்தை வேறு பல நூல்களின் மூலம் பெறலாம்.[1]

பொருளாதார அமைப்பின் மொத்த வெளிப்பாட்டை, நுகர் வோர்கள், அரசு, தொழில் நிறுவனங்கள், உலகத்தின் மற்றைய நாடுகள் ஆகிய பலதுறைகள் 'தேவையாளர்களாய்' (demanders) அமைந்துள்ளார்கள் என்று உணரும் முக்கிய வாதத்தை, நாட்டு

1 பௌசன் அவர்கள் எழுதிய மேற்கூறிய நூலில் அதிகாரங்கள் 24, 25 ஆகியவை களையும், தேசியக் கணக்குகள் பரிசீலனைக்குழு வெளியிட்ட ஐக்கிய அரசுகளின் தேசியப் பொருளாதாரக் கணக்குகள் என்ற நூலையும் குறிப்பிடலாம்.

வருமானக் கணக்குகள் பயன்படுத்துகின்றன. அவைகளின் வாங்குதல்களின் (அல்லது செலவுகள்), மதிப்பு, பொருளாதார அமைப்பின் வெளிப்பாட்டின் மதிப்புடன் முற்றொருமையானது. சில கழிவுகளை நீக்கியபின் உள்ள இதே தொகை, வெளிப்பாட்டை ஆக்கப் பயன்படுத்திய காரணிகளுக்கு வருமானங்களாக வழங்கப்படுகிறது. காரணிகள் பெறும் இவ் வருமானங்கள் அவைகளின் முறையில், நுகர்வோர்களின் வாங்குதல்களுக்குப் பயன்படுகின்றன. இவ் வருமானத்திற்கு வரி விதித்துப் பெறும் பங்கு, அரசு வாங்கும் பண்டங்களுக்குச் செலவிடப் பயன்படுகிறது. (ஆயினும், இத்தகைய வாங்குதல்கள், நடப்பு வருமானத்தில் இருந்து பெறும் வளங்களால் வரையறுக்கப்பட்டுள்ளன).

பின்வரும் கருத்தியல் பகுப்பாய்வின் பெரும் பகுதியில் மிகச் சுருக்கமான கணக்குமுறை ஆளப்பட்டிருக்கிறது. (அத்தகைய முறை அரசே இல்லாத அமைப்பை அல்லது, மிகச் சிறிய அளவு திறனைப் பெற்றுள்ள அரசை, கூட்டமைப்பு நிறுவனங்கள் இல்லாத அமைப்பை ஏற்றுக்கொள்கிறது.) ஆயினும் மாணவர்கள் எல்லோரும் கீழ்க்காண்பவைகளைத் தனிப்படுத்த வேண்டும் (1) இந்தச் சுருக்கம், அடிப்படை விவரங்களை உள்ளடக்கவில்லை; ஆனால், (2) கோட்பாட்டை உண்மையில் உள்ள சில நிலைகளுக்குப் பயன்படுத்துகையில், நாட்டின் உண்மை வருமான ஆக்கக் கணக்குகள் பிரதிபலிக்கும் உண்மை உலகின் சிக்கல்களை இச் சுருக்கம் உள்ளடக்கியது.

## அநுபந்தம் (Appendix)

## அரசு வெளிப்பாட்டின் மதிப்பீடு

## (The Valuation of Government Output)

நாட்டு வருமான, நாட்டு ஆக்கப் புள்ளியியல் வல்லுநர்கள், தொழில்துறை உற்பத்தி செய்த பண்டங்களையும் பணிகளையும், அங்காடி விலைகளைக் கொண்டு மதிப்பிட்டு, அரசின் வெளிப்பாட்டை, உழைப்பு அடக்க விலையை மட்டும் கொண்டு மதிப்பிடுகிறார்கள். அரசின் பணிகளுக்கு, (வீட்டுக்கு உடைமையாளர்கள் வசிக்கும் வீடுகள் புரியும் பணிகளுக்கு அங்காடி விலையைச் சாட்டுவது போல்) அங்காடி விலை எதையும் சாட்ட முடியாது. ஆனால், தனியார்துறை பயன்படுத்தும் மதிப்பீடு முறைகளுக்கு ஒத்த ஒரு முறையை, பொதுத்துறையின் பணிகளை மதிப்பிடப் பெற முடியுமா? இவ் வினாவிற்கு விடையளிப்பதற்கு அங்காடியில் விற்கப்படும் பண்டங்கள், பணிகள் ஆகியவைகளை மதிப்பிடும் அடிப்

படை, உழைப்புச் செலவைக் கொண்டு அரசு உற்பத்தி செய்த பண்டங்கள், பணிகள் ஆகியவைகளை மதிப்பிடும் அடிப்படை, இவ்விரண்டிற்கும் உள்ள வேறுபாட்டைத் தனிப்படுத்த வேண்டும். அங்காடி மதிப்பிட்ட பணியின் விலை, அதன் மொத்த அடக்க விலையையும் இலாபத்தையும் உள்ளடக்கியதாகும். மொத்த அடக்க விலை என்பது, நடப்புப் பொருள்கள் உழைப்பு, தேய்மானம், வட்டி, மறைமுக வரிகள் ஆகியவைகளை உள்ளடக்கியது. ஆதாயம் அல்லது இலாபம் என்ற இனம், உரிமையாளர்கள் வழங்கும் முதலுக்கான விளைவுகளுடன், (uncertainty-bearing) வருமானமும், அல்லது சிறந்த கண்டு பிடிப்புகளுக்கான வருமானமும், சில சமயங்களில், நிருவாகச் செலவுகளையும் உள்ளடக்கியது. சில சமயங்களில் அது எதிர்நிலை மதிப்பைப் பெறும்; உற்பத்தியைத் தொடர்ந்து நடத்தும் பண்டங்களுக்கும், உற்பத்தியாளர்களுக்கும் இலாபம், சராசரியில் நேர்நிலை மதிப்பைப் பெறும்.

அரசு வழங்கும் பணிகள் உழைப்புக்கூலியை மட்டும் உள்ளடக்கியது; ஆனால், நடப்புப் பண்டங்கள், பணிகள் ஆகியவைகளை வாங்கிய தொகையை, தொழில் ஆக்கத்தின் செயல் முடிந்த பண்டங்களாகக் கருதப்படுகின்றன. அரசத் துறையில், தேய்மானச் செலவு, வட்டி, அல்லது இலாபம் இவை ஏதுமில்லை; மறைமுக வரிகளுமில்லை. தனியார்துறை உற்பத்தி செய்யும் பண்டங்களின் மதிப்புடன் மறைமுக வரிகளை உள்ளடக்கியும், ஆனால், அதற்கேற்ற தொகையை அரசின் வெளிப்பாட்டின் மதிப்புடன் உள்ளடக்காதது கணக்குகளுக்கு ஒரு வகை குறையைத் தருகிறது. ஆயினும், இதனை எவ்வாறு சரிக்கட்ட முடியும் என்பது மிகவும் கடினமானது. முதலுக்கான செலவுகளை (அதாவது தேய்மானச் செலவு, வட்டி இலாபம்) பொதுப்பணிகளின் மதிப்பில் உள்ளடக்காதது மிகப் பெரிய தவறாகும்; பல அரசத்துறை பணிகள் பெருமளவு நிலை முதல் சரக்குகளைப் (fixed capital) பயன்படுத்துகின்றன. எனவே, இச் செலவுகளை உள்ளடக்க வேண்டுமா என்பதை மீண்டும் விளக்குவோம்.

தேய்மானச் செலவுகளைக் கணக்கில் உள்ளடக்காததைச் சற்றுச் சிந்தித்தால், தனித்துறை, பொதுத்துறை ஆகிய இரு துறைகள், பயன்படுத்தும் சொத்துகளின் மொத்த ஆயுள் காலத்தைக் கருதுமிடத்து,. இது அத் துறைகளின் நிகர மதிப்பீடுகளில் எவ்வித வேறுபாட்டையும் வழங்குவதில்லை. தனித்துறையின் முதல் சரக்குகள் நாட்டின் மொத்த ஆக்கத்தில் இரண்டுமுறை குறிப்பிடப்பட்டுள்ளன; ஆனால், நாட்டின் நிகர ஆக்கக் கணக்கில்

ஒரு முறைதான் குறிப்பிட்டு உள்ளோம் என்பதை நினைவுப்படுத்தினால், இதற்கான விளக்கம் தெளிவாகும். தனித்துறை மொத்த ஆக்கத்தில் வங்கியின் புதுக்கட்டடத்தின் அடக்கத்தைக் குறிக்கிறோம்—அதாவது அது கட்டப்பட்ட ஆண்டின் கணக்கில் குறிக்கிறோம். அதுபோல் வங்கிகள் அந்தக் கட்டடத்தின் உதவியால் ஆண்டுதோறும் வழங்கும் பணிகளின் மதிப்பை நாட்டுக் கணக்கில் குறிப்பிடுகிறோம். அப்படி வங்கிப் பணிகளின் மதிப்பு, அது பணிபுரியும் கட்டடத்தின் மதிப்பையும் உள்ளடக்கியதாகும். இதைத்தான் இரட்டைக் கணக்கீடு (double counting) எனக் குறிப்பிடுகிறோம். இதனை ஒவ்வொரு ஆண்டின் தேய்மான மதிப்பைப் பணிகளின் மதிப்பிலிருந்து கழிப்பதால் தவிர்க்கிறோம்—அதாவது வங்கிப் பணிகளின் மொத்த மதிப்பிலிருந்து கழிவுபெறும் தொகை, அந்தக் கட்டடத்தின் ஆயுள்காலம்வரை, அதன் மொத்த அடக்கத்தைக் கழிக்கும் தொகைக்குச் சமமாகும். இதனால் மிஞ்சும் தொகை, வங்கிப் பணிகளின் மதிப்பு, நாட்டு ஆக்கக் கணக்கில் முன்பு குறிப்பிடப்பட்ட கட்டடத்தின் மதிப்பு ஆகியவைகளை உள்ளடக்கியதாகும். ஆனால், பின்வரும் கழிவுகளால் இந்தத் தொகை சரிக்கட்டப்பட்டு விட்டது.

நீதி மன்றங்களின் மதிப்பு முறையீட்டை மேற்கூறிய முறையுடன் ஒப்பிட்டுப் பார்ப்போம். இக் கட்டடத்தைத் தனித்துறை ஒப்பந்தக்காரர் (contractors) கட்டி முடித்தால் இதன் மதிப்பு அரசு விற்ற தொழில்துறைப் பண்டங்களில் ஒன்றாகக் கருதி நாட்டு மொத்த ஆக்கக் கணக்கில் குறிப்பிடுகிறோம். நீதிமன்றங்கள் வழங்கும் நீதிமயமான பணிகளைக் கட்டடத்தின் மதிப்பை உள்ளடக்கிய அங்காடி விலை கொண்டு மதிப்பிட முடியாத காரணத்தாலும் இரட்டைக் கணிப்பு முறையைத் தவிர்க்க வேண்டும் என்ற காரணத்தாலும், தேய்மானச் செலவுகளைக் கழிக்க சந்தர்ப்பம் ஏற்படுவதில்லை. இதனைச் செம்மையாகச் செய்ய வேண்டுமாகில், மதிப்பீடுகள் கிடைக்கப்பெற்றால், அரசு முதல் கணக்குகளுக்கான தேய்மானச் செலவை அரசத்துறை வழிவரும் மொத்த ஆக்கத்தின் மதிப்புடன் சேர்த்துப் பின்னர் ஒவ்வொரு ஆண்டிற்குக் கணக்கிடும் நிகர ஆக்க மதிப்பிலிருந்து, முற்றொருமையான எண்ணைக் கழித்தல் வேண்டும். இது மொத்த ஆக்க அளவை முறையைச் செம்மைப் படுத்தும்; நிகர ஆக்க மதிப்பைப் பாதிக்காது; குறுங்கால, அதாவது ஆண்டுக்காண்டு, கணக்கிடப்படும் மொத்த ஆக்கத்தின் படிவத்தையும் பாதிக்காது.

எனவே, அரசத்துறைக் கணக்குகளில் தேய்மானச் செலவுகள் காணப்படாமை, அரசு புரியும் பணிகளின் மதிப்பை அடிப்படை-

யாகக் குறைத்து அமைக்க முற்படாது. வட்டி, இலாபம் போன்ற எஞ்சிய இனங்களின் வேறுபாட்டில் அமைகிறது. முதல் சரக்குகளைப் பயன்படுத்தி உற்பத்தி செய்த பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின் மதிப்புக் கணக்குகள், முதல் சரக்கின் விளைவு களைத் தனித்துறை ஏற்றுக் கொள்கிறது. அதாவது முதலின் ஆக்கத்திறனை அது ஏற்றுக் கொள்கிறது. ஆனால், பொதுத்துறை யில் இந்த நிலை ஏற்படாது.

வங்கிகள், நீதிமன்றங்கள் இவைகளின் ஒப்பீட்டை எளிய எண்களடங்கிய உதாரணம் ஒருவேளை தெளிவுபடுத்தலாம். ஒவ் வொரு கட்டடமும் 100 டாலர்கள் மதிப்புள்ளவை என்றும், ஆயுள்காலம் 10 ஆண்டுகள் என்றும்; எனவே, தேய்மானச் செலவு கள் ஆண்டுக்கு 10 டாலர்கள் என்னும் எடுகோள் அமைத்துக் கொள்வோம். வங்கியின் கட்டடத்தின் உதவியால் வங்கிகள் ஆற்றும் பணிகளின், ஓர் ஆண்டுகால அங்காடி மதிப்பு 50 டாலர் கள். வங்கிக் கட்டடத்தின் ஆயுள்காலம்வரை நாட்டின் மொத்த ஆக்கத்தின் மதிப்பு 600 டாலர்கள் என அமையும். முத லாண்டில் 150 டாலர்களாகவும், மற்ற ஒன்பது ஆண்டுகளில் ஆண்டுக்கு 50 டாலர்களாவும் அமைகிறது. நாட்டின் நிகர ஆக்க மதிப்பு முதலாண்டில் 140 டாலர்களாகவும், மற்ற ஒன்பது ஆண்டுகளுக்கு, ஆண்டுக்கு 40 டாலர்கள் வீதம் அமைகிறது. அல்லது மொத்தத்தில் 500 டாலர்களாக அமைகிறது. அந்த வங்கிக் கட்டடத்தின் மதிப்பு அது அமைக்கப்பட்ட ஆண்டின் நாட்டு ஆக்கக் கணக்கில் குறிக்கப்பட்டது; அதற்கு முற்றொரு மையான தொகையை வங்கிப் பணிகளின் நடப்பு மதிப்பிலிருந்து கழிக்கப்பட்டது; இதனால் எஞ்சிய தொகை அந்த ஆண்டில் வங்கிப் பணிகளின் மதிப்பைக் குறிக்கிறது.

ஓர் ஆண்டுக்கான வங்கிப் பணிகளின் அங்காடி மதிப்பைக் கீழ்க்காணும் வகையில் அமைக்கலாம் என்று வைத்துக் கொள் வோம்.

| | |
|---|---|
| கூலிகளும் சம்பளங்களும் | $ 15 |
| வாங்கிய பண்டங்கள் | 10 |
| தேய்மானம் | 10 |
| வட்டி | 10 |
| இலாபம் | 5 |
| மொத்தம் | $ 50 |

நீதிமன்றங்களில் வழங்கப்படும் நீதிப்பணிகளின் மதிப்பைக் கணக்கிடுகையில் வருடாந்தரக் கூலிகள், சம்பளங்கள் ஆகியவை $15 என்றும் வாங்கிய பொருள்களின் மதிப்பு $10 என்றும் வைத்துக் கொள்ள வேண்டும்.

அரசத்துறையிலிருந்து பெறும் நாட்டின் மொத்த ஆக்கம், கட்டடத்தின் தொடக்க விலையாகிய (100 டாலர்களும்) கூலிகளுக்கும் மற்றப் பொருள்களுக்குமான வருடாந்தரச்செலவு 25 டாலரையும் உள்ளடக்கியதாகும். (வங்கிகளின் கணக்குகளில் வாங்கிய பொருள்கள் என்பவை இடைநிலைப் பண்டங்களாகக் கருதப்பட்டன; எனவே, இவைகளை நாட்டு ஆக்கக் கணக்குகளில் வங்கிப் பணிகள் என்ற இனம் நீங்கலாக, மற்றவைகளைக் குறிப்பிடுவதில்லை; ஆனால், அதே பண்டங்களை அரசுக்கு விற்கையில் அவைகள் செயல் முடிந்த பண்டங்களாகக் கருதப்படுகின்றன.) அந்தக் கட்டடத்தின் ஆயுள் காலத்தில் மொத்த, நிகர ஆக்கங்கள் 350 டாலர்கள்; அதாவது முதல் ஆண்டில் 125 டாலர்களும்; பின்னர் ஆண்டுக்கு 25 டாலர்களாக ஒன்பது ஆண்டுகளுக்கும் அமையும்.

நிகர ஆக்கங்களின் வேறுபாடு அதாவது 150 டாலர்கள் அல்லது ஆண்டுக்கு 15 டாலர்கள் என்பது, வங்கிக்குத் தேவைப்பட்ட மூலதனத்தை வழங்கி, வங்கியின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக் கொண்டவர்களுக்கு அங்காடி விலைகள் ஆண்டுதோறும் வழங்கும் வட்டித் தொகையையும் ஆதாயத் தொகையையும் உள்ளடக்கியதாகும். இதை வேறு வகையில் வெளிப்படுத்தலாம். அதாவது மூலதனத்தின் ஆக்கத் திறனையும் தொழில் துணிவோரது திறனையும் தனியார்துறை மதிப்பீடுகள் ஏற்றுக்கொள்கின்றன. ஆனால், பொதுத்துறை இவைகளில் எதையும் ஏற்றுக் கொள்வதில்லை. பொதுத்துறைத் தொழில் துணிவோர் திறன் என்ற கருத்து இல்லாத காரணத்தால், அதற்கு ஏற்ற மதிப்பைச் சாட்ட முடியவில்லை. ஆயினும், பொதுத்துறை மூலதனக்கணக்குகள் அத் துறை வழிவரும் நாட்டு ஆக்கத்தின் மதிப்பின் ஒரு பகுதியை உதாரணமாக 3%-என்ற மதிப்பை அரசு பயன்படுத்திய மூலதனத் தேய்மானச் செலவுகளாக ஏற்றுக் கொண்டால், அக் கணக்குகள் நல்லமுறையில் அமையும். இந்த மூலதனக்கணக்குகள், நாட்டின் மொத்த ஆக்கக் கணக்கில், (நிகர மதிப்பைச் சேர்க்க முடியாவிட்டாலும்) அரசு பயன்படுத்திய மூலதனத் தேய்மானச் செலவுகளைக் குறிக்க முடியும். இதற்கான விவரங்கள் இப்பொழுது கைவசமில்லை. ஆனால், அரசத் தொழில் நிறுவனங்களுக்கான மூலதனக் கணக்குகளைச் செப்பனிடுவதோடு, இந் நிறுவனங்கள் தம்முள் அடக்கியுள்ள உதவித்தொகை (subsidy)

(அல்லது இலாபம்) இவைகளின் விளக்கங்களைச் செம்மைப்படுத்துவது, இதற்கான முதல் முயற்சியாகும். அரசின் மூலதனப் பொதுக் கணக்குகள் பின்னர் அறிவிக்கப்படலாம்.

அரசின் நிறுவனங்கள் வழங்கும் வட்டித் தொகை, அரசின் மூலதனப் பணிகளை ஏன் அளவிடுவதில்லை என்பதையும், நாட்டு ஆக்கக் கணக்குகள், நாட்டு வருமானக் கணக்குகள் ஆகியவைகளில் அரசின் நிறுவனங்கள் வழங்கும் வட்டித் தொகை ஏன் இடம் பெறுவதில்லை என்பதையும் மேற்கூறிய பகுப்பாய்வு விளக்கவில்லை. போர்கள் புரியவும், (வர்த்தகத்தேக்கங்களில் உதவித் தொகைகள் வழங்கவும்) அரசு பெருவாரியாகக் கடன் வாங்குகிறது. இத்தகைய கடன்களின் மொத்தம், அரசு தன்பால் கொண்டுள்ள உண்மையான ஆக்கத் திறனுடைய மூலதன இருப்புடன் எவ்விதத் தொடர்பும் இல்லை. போருக்குப்பின் உள்ள ஆண்டுகளில் அரசத் துறையிலிருந்து கிட்டிய நாட்டு ஆக்கம், போருக்கு முந்தைய ஆண்டுகளில் அரசத்துறையிலிருந்துஉருவான, நாட்டு ஆக்கத் தொகையை ஓரளவு மிஞ்சுவதில்லை. இந்தத் தொகை, அரசத் துறையின் ஆண்டுக்கான வட்டித் தொகைக் கணக்குகளுடன் (எதிர்பாராத வகையில் மட்டும்) எவ்விதத் தொடர்புமில்லை. போர் புரியும் ஆண்டுகளில் அரசின் ஆக்கமுள்ள மூலதனத்தின் மதிப்புக் குறைகிறது. ஏனெனில், சாலைகளும் கட்டடங்களும் நல்லமுறையில் பாதுகாக்கப்படவில்லை. அரசத் துறையில் மூலதன அமைவு (capital formation) பொதுக் கடன்கள் (அதனால் வட்டித் தொகை) குறைந்து செல்கின்றபோது, உருவாகிறது; ஏனெனில், அந்தச் சமயங்களில் நடப்புப் பணிகளுடன் பொதுப் பணிகளைச் செயற்படுத்தும் பணிகளையும் கடன்களைத் திருப்பித் தருதல் போன்ற பணிகளையும் அரசு புரிகிறது.

# 4. 'வெளிப்பாடும் வேலையும்'[1]

## (Output and Employment)

### உண்மை (Real) நாட்டு ஆக்கம்

### (Real National Product)

நாட்டு ஆக்கம் என்பது, பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின் கூட்டு என்ற கருத்தில் முதல் முதலாக இரண்டாம் அதிகாரத்தில் புகுத்தினோம். நாட்டு ஆக்கம் என்பது பண்டங்கள், பணிகள் ஆகியவற்றால் (அதாவது அவற்றின் ஓட்டத்தால்) ஆனது. இப் பண்டங்களை 'இறுதிப் பண்டங்கள்' (final goods) எனக் குறிப்பிடலாம். இப் பண்டங்கள் நுகர்வோர் அல்லது அரசு ஆகியவைகளின் பயனுக்காக உள்ளன. இத்துடன் நாட்டின் ஆக்க வல்லமையை உறுதிப் படுத்தத் தேவைப்படும் வளஅமைப்பு, வளத்திற்கான பொறித் தளவாடங்கள் ஆகியவைகளின் இருப்புக் குவியல்களுடன் சேர்க்கும் நிகர கூட்டுத் தொகைகளும் சேரும். பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின், கூட்டுகளைச் சுருக்கிக் கூறவும், அவைகள் ஒருகாலத்தில் கொண்ட அளவை மற்றொரு காலத்தில் கொள்ளும் அளவுடன் ஒப்பிடுவதற்கும்—ஒவ்வொரு பண்டத்தையும் அதன் பணமதிப்பாக வெளிப்படுத்தி அம்மதிப்புகளை ஒன்று சேர்க்கிறோம். ஆயினும் பணமதிப்பின் கூட்டுத் தொகை மாறும் தன்மையது என்பது நமக்குத் தெரிந்த ஒரு கருத்து. பல்வேறு அலகுகளை மதிப்பிடப் பயன்படும் விலை மட்டங்கள் மாறுவதாலோ அல்லது அலகுகளின் எண்ணிக்கை மாறுவதாலோ அல்லது

1 இந் நூலை விரைவில் பயில விரைபவர்கள் இந்த அதிகாரத்தைத் தள்ளிவிடலாம். இதனால் இவ்வதிகாரத்தின் கருத்துத் தொடர்ச்சி முறியாது. அல்லது 'உண்மை நாட்டு வருமானம்' 'வேலை, ஆக்கம் இவைகளின் குறுங்காலத் தொடர்புகள்' என்ற தலைப்புகள் உள்ள நான்கு, ஆறு ஆகிய பிரிவுகளைத் தள்ளிவிடலாம்.

இவை இரண்டுமே மாறுவதாலோ, கூட்டுத் தொகை மதிப்பு மாறுகிறது. விலைகள் மாறுவதால், நாட்டு ஆக்கத்தின் பண மதிப்பு மாறுவதை, உண்மைக் காரணங்களால் அல்லது அமைப்பு மாற்றங்களால் நாட்டு ஆக்கத்திற்கு ஏற்படும் மாறுதல் களால் ஏற்படுகின்றன. இவற்றைத் தனிப்படுத்தி இங்குக் கவனிப்போம்.[1]

இப் பிரச்சினையைப் பற்றி நன்கு உணர்ந்தவர்கள், இதில் தவிர்க்க முடியாத, ஐயப்பாடு உள்ளடங்கி இருப்பதைக் காண லாம். பிரச்சினைக் குறியீட்டு எண்ணிக்கை பிரச்சினை என்பதிலி ருந்து எழுந்தது. எனவே, இவ்வையப்பாடு இப் பிரச்சினை உள் ளடங்கியதாகும். நமது கூட்டில் அமைந்த ஒவ்வொரு பண்டத்தின் அமைப்பு, மற்ற ஆக்க மாற்றங்களின் விகிதாசாரமாக அமைந் தால், மொத்த ஆக்கம் எந்த விகிதத்தில் மாறும் என்பதை உறுதி யாகக் கூறலாம். அம்மாற்றம் தனித்தனி ஆக்கங்களின் அளவுகள் மாறும் விகிதத்தில் அமையும். பின்னர் அசல் நாட்டின் மொத்த ஆக்கத்தின் (Gross National Product) டாலர் மதிப்பை ஒவ்வொரு ஆக்கத்தின் அமைப்பு மாறுபட்ட சதவிகிதத்தில் பெருக்கி அதனை இரண்டாவது காலத்தில் கிட்டிய நாட்டின் உண்மை மொத்த ஆக்கத்தின் டாலர் மதிப்பால் வகுத்துக் கிட்டிய ஈவை (quotient) விலை மாற்றங்களின் அளவைக் குறிக்கப் பயன்படுத்தினால்—விலைக் குறியீட்டு எண் கிடைக்கும்.

ஆனால், நடைமுறையில் எல்லா ஆக்கங்களும் முற்றொருமை விகிதாசாரப்படி மாறுவதில்லை. ஆக்கக்கலப்பு முழுவதும் மாறு கிறது. சில பண்டங்களின் அமைப்பு அளவுகள் அதிகமாகும், சில பண்டங்களின் அமைப்பு அளவுகள் குறையும்; அல்லது எல்லாப் பண்டங்களின் அளவுகளும் கூடலாம், அல்லது குறையலாம். ஆனால், அவைகள் பலப்பல சதவிகிதங்களில் மாறுகின்றன. பண்டங்

[1] இக் கருத்துக்களைக் கீழ்க்காணும் இரண்டு சிறந்த நூல்களில் காணலாம். கென்னத் ஆரோ (Kenneth Arrow) அவர்களது 'விலை மாற்றங்களின் அளவு கள்' என்ற கட்டுரையும், 'விலைகள் பொருளாதார நிலைபேறும், வளர்ச்சி ஆகியவை களுடன் தொடர்பு' (The relationship of Price's to Economic stablity & Growth) 'பொருளாதாரக் கூட்டுக் கமிட்டியின்' முன்தோன்றிய குழாமிற்கு மார்ச் 31, 1958 அன்று அளித்த நூலில் 77; 87; 107 116 ஆகிய பக்கங்களில் காணும் 'தொழில் புள்ளியியல் பீரோவின் விலைக் குறியீடுகள்', (The Price Indexes of the Bureau of Labour Statistics) என்ற கட்டுரையும் குறிப்பிடத் தக்கவை. இவை களில் முதல் குறிப்பிட்ட கட்டுரை குறியீட்டு எண்ணிக்கைகளின் கோட்பாட்டை நன்கு விளக்குகிறது. அடுத்து வரும் கட்டுரை குறியீட்டு எண்ணிக்கைகளின் நடை முறையை நன்கு வெளிப்படுத்துகிறது.

களின் மொத்த அமைப்பு அளவு எத்தகையது என்பதைக் குறிப்பிட ஒவ்வொரு தனிப்பட்ட பண்டத்தின் அமைப்பு மாற்றங்களுக்குத்தக்கவாறு எடைகள் (weights) சேர்த்தல் வேண்டும். அதாவது ஒவ்வொன்றின் பொருளாதாரச் சிறப்பிற்குத் தக்கவாறு எடைகளைச் சேர்க்க வேண்டும். மின்சார ரெயில் வண்டிகளின் உற்பத்தி பத்து சதவீதம் பெருகியது என்பதும், பட்டாக்கத்திகளின் உற்பத்தி 20 சதவீதம் குறைந்தது என்பதும் ஒன்றல்ல; முன் கூறியது பின் கூறியதைவிட மேம்பட்ட உற்பத்தித்திறனைக் காட்டுகிறது. ஆனால், உற்பத்தித்திறன் எந்த அளவிற்கு மாறி அமைந்துள்ளது? மின்சார ரெயில் வண்டிகள், பட்டாக்கத்திகள் ஆகியவைகளின் கூட்டு உற்பத்தி மாற்றம் எவ்வாறு அமைந்துள்ளது? அதாவது 9 சதவீதம் கூடுதலா? அல்லது 8 சதவீதம் கூடுதலா? அல்லது 2 சதவீதம் கூடுதலா? இதற்கு விடை காண ரெயில் வண்டிகள், பட்டாக் கத்திகள் ஆகியவைகளின் அங்காடி தராதர விலைகளைப் பயன்படுத்த வேண்டும். ஆனால், இங்கு ஒரு பிரச்சினை எழுகிறது; அதாவது எந்த தராதர விலையைப் பயன்படுத்துவது?—நாம் மதிப்புகளை ஒப்பிட்டுப் பார்க்கும் காலத்தின் தொடக்கத்தில் உள்ள தராதர விலைகளையா? அல்லது அந்தக் காலத்தின் இறுதியில் உள்ள தராதர விலைகளையா? அல்லது இரண்டின் கலவைத் தராதர விலைகளையா? ரெயில் வண்டிகள், பட்டாக் கத்திகள் இவைகளின் தராதர விலைகள் மாறாமலிருந்தால்—அதாவது இரண்டின் விலைகள் ஒரே விகிதத்தில் கூடி அல்லது குறைந்து அமைந்தால்—ரெயில் வண்டிகள், பட்டாக் கத்திகள் ஆகியவைகளின் கூட்டு நிகர மாற்றங்களை நிர்ணயிப்பது கடினமல்ல.

கீழ்க்காணும் அட்டவணையில் அமைந்தவாறு தகவல்கள் அமைந்துள்ளன என்று எடுத்துக் காட்டாக வைத்துக் கொள்வோம்.

அட்டவணை 4-1.

ரெயில் வண்டிகள், பட்டாக்கத்திகள் ஆகியவைகளின் எடுகோளான ஆக்கங்கள், விலைகள், மதிப்புகள்
விகிதாசார விலை மாற்றங்கள்

| ஆக்கங்கள்: | காலம் 1 | காலம் 2 | சத விகித மாற்றம் |
|---|---|---|---|
| ரெயில் வண்டிகள் | 20 | 22 | + 10 % |
| பட்டாக்கத்திகள் | 3,000.000 | 2,400,00 | — 20 % |
| விலைகள்: | | | |
| ரெயில் வண்டிகள் | $ 50,000 | $ 800,000 | + 60 % |
| பட்டாக்கத்திகள் | $ 1 | $ 1·60 | + 60 % |
| மதிப்புகள் நடப்பு விலைகளில்: | | | |
| ரெயில் வண்டிகள் | $ 10,000,000 | $17 600,000 | + 76 % |
| பட்டாக்கத்திகள் | $ 3,000,000 | $ 3,840 000 | + 28 % |
| மொத்தம் | $ 13,000,000 | $21,440.000 | + 64·9 % |
| ஆக்கத்தின் மதிப்பு காலம் 1 விலைகளில்: | | | |
| ரெயில் வண்டிகள் | $ 10,000 000 | $11,000,000 | + 10 % |
| பட்டாக்கத்திகள் | $ 3,000,000 | $ 2.400.000 | — 20 % |
| மொத்தம் | $ 13,000,000 | $13.400.000 | + 3·08 % |
| ஆக்கத்தின் மதிப்பு காலம் 2 விலைகளில்: | | | |
| ரெயில் வண்டிகள் | $ 16,000.000 | $17.600,000 | + 10 % |
| பட்டாக்கத்திகள் | $ 4,800 000 | $ 3 840,000 | — 20 % |
| மொத்தம் | $ 20,800,000 | $21.440,000 | + 3·08 % |

ரெயில்வண்டிகள், பட்டாக்கத்திகள் ஆகியவைகளின் மொத்த அமைப்பு ஆக்கம் 3. 08 சதவீதம் உயர்ந்தது என்று கூறுவது இவ் வட்டவணையின் வாயிலாகக் கூறுதல் கடினமன்று. இவைகளின் மொத்த மதிப்பின் கச்சா எண்ணிக்கை (raw figure) 64. 9 சதவீதம் உயர்ந்தது என்றால் அது விலைகளைப் பெருக்கியதால் கிடைத்த எண்ணிக்கையாகும். மாறிலி விலைகளையும், ஏதேனும் ஒரு விலை அமைப்பைப் பயன்படுத்தியும் கணக்கிட்டால் ஆக்கத்தின் நிகர

உயர்வு 3. 08 சதவீதம் மட்டுமேயாகும். இதே முடிவுக்குவர வேறு ஒரு வழியுமுண்டு. ஆக்கங்களின் மொத்த நடப்பு மதிப்பு களாகிய $13, 000, 000, $ 21, 440, 000 ஆகியவைகளைச் சுருக்கி (deflate) இம்முடிவை அடையலாம். இவைகளைச் சுருக்க காலம் 1-ல் உள்ள 100 காலம் 2-ல் உள்ள 160 என்ற விலை குறியீட்டு எண்கள் பயன் பட்டன. (இவைகளைச் சுருக்க $13, 000, 000 என் பதை ஒன்றுல் வகுக்க வேண்டும். அதேபோல் $ 21, 440, 000 என்ற மதிப்பை 1. 6 என்ற எண்ணுல் வகுக்க வேண்டும்). இது ஆக்கத்தின் (காலம் 1 விலைகளில்) சுருக்கிய விலைகளைத் தருகிறது. அவையாவன $ 13, 000, 000ம் $ 13, 400, 000 ஆகும். மீண்டும் அவைகளின் உயர்வு அளவு 3. 08 சதவீதமாகும்.

பண்டங்களின் விலைமாற்றங்கள் முற்றொருமை விகிதாசாரப் படி அமைந்தன என்று சொன்னுல், அதன் பொருளில் வேறுபாடு இல்லை. அவைகளின் அமைப்பு விலைகள் எவ்வாறு ஆயினும், 500, 000 பட்டாக்கத்திகளின் மதிப்பு ஒரு ரெயில் வண்டியின் மதிப்புக்குச் சமம் என்று கூறுவது தெளிவான கருத்து. எனவே, ரெயில் வண்டிகளின் ஆக்கம் காலம் 1, காலம் 2 ஆகியவைகளில், முறையே 26 [அதாவது உண்மையில் ஆக்கிய 20 வண்டிகள் வண் டிக்குச் சமமதிப்புடைய 6 வேறு பொருள்களும் (equivalents)] 26·8 (அதாவது உண்மையில் 22 வண்டிகளும் அதன் சமமதிப் புள்ள 4·8 பொருள்களும் (equivalents) ஆகும். இதனுல் ஏற்படும் உற்பத்தி அதிகரிப்பு 3·08 சதவீதம். அல்லது இதனை வேறு வழியில் கூறுவோமேயானுல் ஆக்கங்கள் முறையே 13 மிலியன் பட்டாக் கத்திகள் (அதாவது உண்மையில் 3 மிலியனும் அதற் குச்சம மதிப்புடைய 10 மிலியன் வேறு பொருள்களும்) அதுபோல் 2ம் காலத்தில் உற்பத்தி 13·4 மிலியன் (அதாவது உண்மையில் 2·4 மிலியன்களும் அதற்குச் சமமதிப்புடைய 11 மிலியன் வேறு பொருள்களும்) என அமையும். இவைகளின் உற்பத்தி உயர்வு மீண்டும் 3·08 சதவீதமாகும்.

விலைகள் முற்றொருமைத் தன்மையாக மாறுமல் கண்டவாறு மாறுகின்றன என்று வைத்துக் கொள்வோம். ரெயில் வண்டி களின் விலைகள் 100 சதவீதம் உயர்கிறது என்றும், பட்டாக்கத்தி களின் விலைகள் 10 சதவீதமாக மட்டும் உயர்கிறது என்றும் வைத்துக் கொள்வோம். ஆக்கங்களின் அமைப்பு மாற்றங்கள் முன்பு உள்ளனபோல் இப்பொழுதும் இருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். இவைகளினுல் நமது அட்டவணை கீழ்க் கண்டவாறு அமையும்.

அட்டவணை 4-2.

எடுகோளான ஆக்கங்கள், விலைகள், மதிப்புகள்
விகிதாசாரமற்ற விலை மாற்றங்கள்—இரண்டு
அளவைக் குறியீட்டு எண்கள்

| | காலம் 1 | காலம் 2 | சதவிகித மாற்றம் |
|---|---|---|---|
| **ஆக்கம்:** | | | |
| ரெயில் வண்டிகள் | 20 | 22 | + 10 % |
| பட்டாக்கத்திகள் | 3,000,000 | 2,400,000 | — 20 % |
| **விலைகள்:** | | | |
| ரெயில் வண்டிகள் | $ 500,000 | $ 1,000,000 | +100 % |
| பட்டாக்கத்திகள் | $ 1 | $ 1·10 | + 10 % |
| **ஆக்கத்தின் மதிப்பு நடப்பு விலைகளில்:** | | | |
| ரெயில் வண்டிகள் | $ 10,000,000 | $ 22,000,000 | +120 % |
| பட்டாக்கத்திகள் | $ 3,000.000 | $ 2,640,000 | — 12 % |
| மொத்தம் | $ 13,000,000 | $ 24,640,000 | +89·5 % |
| **காலம் 1—ன் விலைகளில் ஆக்கத்தின் மதிப்பு:** | | | |
| ரெயில் வண்டிகள் | $ 10,000,000 | $ 11,000,000 | + 10 % |
| பட்டாக்கத்திகள் | $ 3,000,000 | $ 2 400.000 | — 20 % |
| மொத்தம் | $ 13,000,000 | $ 13,400,000 | +3·08 % |
| அளவைக் குறியீடு 1 | 100·00 | 103·08 | +3·08 % |
| **காலம் 2—ன் விலைகளில் ஆக்கத்தின் மதிப்பு:** | | | |
| ரெயில் வண்டிகள் | $ 20,000,000 | $ 22,000,000 | + 10 % |
| பட்டாக்கத்திகள் | $ 3,300 000 | $ 2,640,000 | — 20 % |
| மொத்தம் | $ 23,300,000 | $ 24,640,000 | +5·75 % |
| அளவைக்குறியீடு 2 | 100·00 | 105·75 | +5·75 % |

இங்கு நாம் ஒரு பிரச்சினைக்குள்ளாகிறோம். அதாவது, பண்டங்களின் ஆக்கங்களைத் தொடக்க விலைகள் கொண்டு அளவிட்டால், உற்பத்தி *3 சதவீதமாக* உயர்ந்திருப்பதைக் காண்கிறோம்.

ஆனால், இறுதி விலைகளைக் (final prices) கொண்டு கணக்கிட்டால், அதே பண்டங்களின் உற்பத்தி 6 சதவீதமாக உயர்ந்திருப்பதைக் காண்கிறோம். இவை இரண்டில் எது சரியானது? என்பது நம்மைக் கட்டுப்படுத்தும் பிரச்சினையாகும். இரண்டுமே சரியான முடிவுகள்தாம்; ஏனெனில், இவைகள் பலதரப்பட்ட பொருள்களைக் கொண்டு அளவிடுகின்றன. முன்பு காணும் அளவுகள், காலம் 1-ல் புழங்கும் விலைத் தரத்தைப் பயன்படுத்தியது. பிந்தையது காலம் 2-ல் புழங்கும் விலைத்தரத்தைப் பயன்படுத்தியது. காலம் 2-ல் ரெயில் வண்டிகளுக்கு அதிகப்படி மதிப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை ரெயில் வண்டிகளின் தொடர்பு விலை உயர்ந்திருப்பதில் இருந்து காணலாம். ரெயில் வண்டிகளின் உற்பத்தி அதிகரித்துக் காண்பதால், பட்டாக்கத்திகளின் மதிப்பை விட ரெயில் வண்டிகளுக்கு அதிகப்படி மதிப்புக் கொடுக்கப்படும் தரத்தைக் கொண்டு அளப்பதால், மொத்த ஆக்கம் பெருகி இருப்பதாகக் காணப்படுகிறது.

மேற்காணும் அட்டவணையில் இரண்டு மாறுபட்ட ‘அளவைக் குறியீட்டு’ எண்களை அமைப்பதையே செய்திருக்கிறோம். (இதைப் போல் வேறு பல அமைப்புள்ள அளவைக் குறியீட்டு எண்களை நம்மால் அமைக்க முடியும்). மேல் காணும் அளவைக் குறியீட்டு எண்களில் ஏதேனும் ஒன்றை அதன் டாலர் நடப்பு விலைகளால் வகுத்தால், கிடைக்கும் எண் சராசரி விலை மாற்றங்களைக் குறிக்கும். அதாவது அவைகளின் உள்ளடங்கிய விலைக் குறியீட்டு எண்ணைக் குறிக்கும். அட்டவணையைக் கொண்டு, காலம் 2க்கான உள்ளடங்கிய குறியீட்டு எண்கள் (காலம் 1 = 100 என்றிருந்தால்) 183·88, 179·23 என அமையும். ஆனால், விலைக்குறியீட்டு எண்ணை நேரடியாகவும் பெறலாம். பின் அதனை டாலர் மதிப்புகளைச் ‘சுருக்க’ப் பயன்படுத்தலாம். இதனால் கிடைக்கும் முடிவு அதன் உள்ளடங்கிய அளவைக் குறியீட்டு எண்ணைக் குறிக்கும். பொதுவாகப் பயன்படும் விலைக் குறியீட்டு எண்களுக்கான சூத்திரத்தைக் (வேறு பல வகை வழிகளில் ஒன்றான) கீழ்க்காணும் அட்டவணையில் கையாண்டு இருக்கிறோம்.

அட்டவணை 4-3.

நடப்பு டாலர் விலைகளைச் சுருக்கப் பயன்படும் விலைக்குறியீடுகளை அமைத்தல்

| | காலம் 1 | காலம் 2 |
|---|---|---|
| விலைகள்: | | |
| ரெயில் வண்டிகள் | $ 500,000 | $ 1,000,000 |
| பட்டாக்கத்திகள் | $ 1.00 | $ 1·10 |
| குறியீடு 1: விலைத் தொடர்புகள் (காலம் 1 = 100) | | |
| ரெயில் வண்டிகள் | 100 | 200 |
| பட்டாக்கத்திகள் | 100 | 110 |
| விலைத் தொடர்புகள் எடை போட்டபின் (அதாவது காலம் 1-ல் உள்ள அங்காடி மதிப்புகளால் பெருக்கிய பின்) | | |
| ரெயில் வண்டிகள் | $ 1,000,000,000 | $ 2,000,000,000 |
| பட்டாக்கத்திகள் | $ 300,000,000 | $ 330,000,000 |
| பெருக்கிய தொகை | 1,300,000,000 | $ 2,330,000,000 |
| பெருக்கிய சராசரி* | | |
| (விலைக் குறியீடு–1) | 100 | 179·23 |
| விலைக் குறியீடு 1 ஐக் கொண்டு மொத்த ஆக்கத்தைச் சுருக்கிய மதிப்பு | $ 13,000,000 | $ 13,747,698 |
| விலைக்குறியீடு ஒன்றைப் பயன்படுத்திக்கிட்டிய இதனுள் அடங்கிய அளவைக் குறியீடு | 100 | 105·75 |
| குறியீடு 2 : விலைத் தொடர்புகள் (காலம்2 = 100) | | |
| ரெயில் வண்டிகள் | 50 | 100 |
| பட்டாக்கத்திகள் | 90·91 | 100 |

அட்டவணை 4-3. (தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| விலைத் தொடர்புகளை எடை போட்ட பின் (அதாவது காலம் 2-ல் உள்ள அங்காடி மதிப்புகளால் பெருக்கிய பின்) | | |
| ரெயில் வண்டிகள் | $ 1,100,000,000 | $ 2,200,000,000 |
| பட்டாக்கத்திகள் | 240,000,000 | 264,000,000 |
| பெருக்கிய தொகை | $ 1,340,000,000 | $ 2,464,000,000 |
| பெருக்கிய சராசரி* | | |
| விலைக் குறியீடு 2) | 54·38 | 100 |
| விலைக் குறியீட்டுக் காலம் 1=100 என்ற மதிப்பிற்குப் பிறழ்ந்தபின் | (100·00) | (183·88) |
| விலைக் குறியீடு இரண்டைக் கொண்டு மொத்த ஆக்கத்தைச் சுருக்கிய மதிப்பு | $ 23,905,848 | $ 24,640,000 |
| குறியீடு இரண்டைப் பயன்படுத்திக் கிட்டிய இதன் உள்ளடங்கிய அளவைக் குறியீடு | 100 | 103·08 |

*எடைகளின் கூட்டுத் தொகையைக் கொண்டு பெருக்கிய தொகையை வகுத்தல்.

காலம் 1-ல் உள்ள விலைக்குறியீட்டைத் தராதர விலைகளாகப் பயன்படுத்தி, காலம் 1-ல்உள்ள அங்காடி மதிப்புகளை எடைகளாகப் பயன்படுத்திக் கிட்டும், ஆக்க அளவு மாற்றத்தொகை, அளவைக் குறியீட்டுக் காலம் 2-ல் உள்ள விலைகளை எடைகளாகப் பயன்படுத்தி வெளியிடும் தொகை, இரண்டும் ஒன்றுனது என்பது குறிப்பிடத்தக்கது.

அதுபோல் காலம் 2-ன் விலைத்தொடர்புகளைக் காலம் 2 அங்காடி மதிப்புகளால் பெருக்கிக் கிடைக்கும் தொகை காலம்1-ல் உள்ள விலைகளைப் பயன்படுத்தும் அளவைக் குறியீடு வெளிப்படுத்தும்தொகை இரண்டும் ஒன்றுனது.

## உண்மை வெளிப்பாட்டுப் பிரச்சினைக்கான வரிப்பட விளக்கம்
## (Graphical Approach to the problem or Real output)

*இதுவரை விளக்கி வந்தவைகளை வரிப்பட விளக்கத்தால் வெளிப்படுத்துவோம். படம் 4-1-ல் இரண்டு பண்டங்களின் அமைப்பு வெளிப்பாடுகளைப் படுகிடை, அச்சு, செங்குத்து அச்சு ஆகியவைகளில் அளப்போம்.*




படம் 4-1.

c, d என்ற புள்ளிகள், நமது உதாரணத்தில் காலம் 1, காலம் 2 இவைகளில் கிடைத்த வெளிப்பாடுகளை உணர்த்துகின்றன. நமக்குக் கிடைத்த தகவல்கள், ஒவ்வொரு பண்டத்தின் தனி அளவை ஒட்டியதானால், ஏதேனும் இரண்டு மொத்த அளவுகளின் ஒப்பீடுகளைப் பற்றி நாம் ஒன்றும் சொல்வதற்கில்லை. புள்ளிகள் l, m, n ஆகியவைகள் வெளிப்படுத்தும் கலவைகள், c என்ற புள்ளி வெளியிடும் கலவையைவிட அதிகமானது என்று மட்டும் சொல்ல முடியும். அதேபோல் i, k ஆகிய புள்ளிகளின் கலவை குறைந்த அளவு வெளிப்பாட்டை உணர்த்துகிறது. ஏதேனும் ஒரு பண்டத்தை அதிக அளவு பெற்று மற்றப்பண்டத்தில் ஒன்றுமே பெருமலிருந்தால் (அதாவது n என்ற புள்ளி உணர்த்துவதைக் கொண்டால்) நாம் நலம் அடைவோம். அதுபோல் இரண்டு

பண்டங்களையும் அதிகமாகப் பெற்றிருந்தாலும், (l, m ஆகியவைகள் வெளியிடுவதைப்போல் பெற்றிருந்தாலும்) நலமடைவோம். ஏதேனும் ஒரு பண்டத்தைக் குறைந்த அளவு பெற்று, மற்றப் பண்டத்தை அதிக அளவு பெற்றிருந்தால், (k என்ற புள்ளி வெளிப்படுத்துவதைப்போல் இருந்தால்) நாம் நலமற்ற நிலையை அடைவோம். அதேபோல் இரண்டு பண்டங்களையும் குறைந்த அளவே பெற்றிருந்தாலும் (i என்ற புள்ளி வெளிப்படுத்துவதைப் போல் இருந்தால்) நாம் நலமற்ற நிலையை அடைவோம். அதிகப்படி தகவல்கள் கிடைக்கப் பெறுமையால் கலவைகள் (d அல்லது g) ஆகியவைகள் வெளிப்படுத்துவதைப்போல், ஒரு பண்டத்தை அதிகமாகவும், மற்றப் பண்டத்தைக் குறைந்த அளவே பெற்றிருந்தால், இவைகளை மற்றவைகளுடன் ஒப்பிடுவதற்கில்லை.

தராதர அங்காடி மதிப்புகள் அதிகப்படித் தகவல்களை நமக்கு அளிக்கின்றன. படம் 4-2-ல் காணும் 'சரிவுகளும் செலவு வரி' (stoping expenditure curve) a b என்பது $ 13,000,000 டாலர்கள் தொடக்க விலையில் வாங்கக்கூடும் ரெயில் வண்டிகள், பட்டாக் கத்திகள் ஆகியவைகளின் கலவைகளை வெளிப்படுத்துகிறது.




படம் 4·2.

இவைகளுடன் 26 ரெயில் வண்டிகளும் சுன்னம் மதிப்புள்ள பட்டாக்கத்திகளின் கலவை (புள்ளி a), 7 மிலியன் பட்டாக்கத்திகளும் 12 ரெயில் வண்டிகளின் கலவை (புள்ளி b), உள்ளபடி

வாங்கப்பட்ட கலவை அதாவது 20 ரெயில் வண்டிகளும் 3 மிலியன் பட்டாக்கத்திகளின் கலவை (புள்ளி c) ஆகியவைகளும் சேர்ந்திருக்கின்றன. இதில் காணப்படும் எல்லாக் கலவைகளின் மதிப்பு ஒரே தன்மையதாகும்.

இதனைத் தகவலாகக் கொண்டால், செலவு சரிவுக் கோட்டுக்கு வலப்புறமுள்ள ஏதேனும் ஒரு கலவை மிகப் பெரிய மொத்த மதிப்பை வெளிப்படுத்துவதோடு அல்லாமல், அப் பண்டங்களை 'மிகப்பெரிய' அளவில் பெற முடியும் என்பதைத் தெளிவுப் படுத்துகிறது. அதுபோல் செலவு சரிவுக்கோட்டுக்கு இடப்புறமுள்ள ஏதேனும் ஒரு கலவை மிகக் குறைந்த மொத்த மதிப்பை வெளிப்படுத்துவதோடு அமையாமல், அப் பண்டங்களை மிகக் குறைந்த அளவே பெற முடியும் என்பதை உணர்த்துகிறது. காலம் 2-ல் வாங்கிய கலவை 'd' என்பது (அதாவது 22 ரெயில் வண்டிகள், 2·4 மிலியன் பட்டாக் கத்திகளால் ஆன கலவை), 'c' என்ற கலவையில் கிடைக்கும் பண்டங்களைவிட அதிகப்படி அளவைக் குறிக்கிறது; உதாரணமாக 'e' என்னும் கலவை 'c' என்ற கலவையின் மதிப்புக்குச் சமமாகும். ஆனால், 'd' என்ற கலவை அதிகப் பட்டாக் கத்திகளை உடையது ஆனாலும், அதிக ரெயில் வண்டிகளையும் பெற்றிருக்கிறது; அதேபோல் கலவை 'f' என்பது கலவை 'c' என்பதின் மதிப்பிற்குச் சமமாகும். ஆனால், கலவை 'd' என்பது அதிக ரெயில் வண்டிகளையும் அதைவிட அதிகப் பட்டாக்கத்திகளையும் பெற்றிருக்கிறது.

'g' என்பதைப்போன்ற கலவை 'c' என்ற கலவையைவிட மட்டமானது. இந்தக் கலவை 4 மிலியன் பட்டாக் கத்திகளைக் (அதாவது கலவை 'c' என்பதைவிட 1 மிலியன் அதிகமான) கொண்டது. ஆனால், 15 ரெயில் வண்டிகளைமட்டும் (அதாவது கலவை 'c'-ல் காண்பதைவிட 5 அலகுகள் குறைந்த அளவை) கொண்டதாகும். 5 ரெயில் வண்டிகளின் இழப்பு, ஒரு மிலியன் பட்டாக் கத்திகளினால் ஈடு செய்யப்பட்டது. காலம் 1-ல் உள்ள தராதர மதிப்புகளைக் கொண்டு கணக்கிடுகையில், இலாபத்தைவிட இழப்பின் மதிப்பு அதிகமாகும். 5 ரெயில் வண்டிகளை 1 மிலியன் பட்டாக் கத்திகளுக்குப் பேரம் செய்தால், அவைகளை 2,00,000 பட்டாக்கத்திகள் கொண்டு ஒரு ரெயில் வண்டியைப் பெற முடியும். இப் பேரவிலை காலம் 1-ல் உள்ள 1 ரெயில் வண்டி 5,00,000 பட்டாக் கத்திகள் விலை விகிதத்தைவிடக் குறைந்ததாகும். இதனைச் செலவுக்கோட்டின் a b சரிவு வெளிப்படுத்துகிறது. இதனை 'c', 'g' ஆகிய புள்ளிகளை இணைக்கும் துண்டுக் கோட்டின் சரிவோடு ஒப்பிடுகையில் குறைந்து இருப்பதாகத் தெரிகிறது.

காலம் 1-ல் உள்ள விலைகளைப் பயன்படுத்தினால், காலம் 1, 2 இவைகளுக்கிடையே உற்பத்தி அதிகரித்திருக்கிறது என்று முடிவாகச் சொல்லலாம். (புள்ளிகள் c, d ஆகியவை வெளிப்படுத்துவதைப்போல்). காலம் 2-ல் உள்ள விலைகளைப் பயன்படுத்தினால் ஆக்க அமைப்பு எத்தகைய படிவத்தைப் பெறும்? இக்கால விலைகளில் 1 ரெயில் வண்டி 9,09,091 பட்டாக்கத்திகளின் மதிப்புக்குச் சமமாகும். இத்தகைய பதிலீட்டை, புள்ளிகள் 'c', 'h' ஆகியவைகளை இணைக்கும் துண்டு கோடு வெளிப்படுத்துகிறது. இக் கோட்டைச் சற்று வளர்த்தினால் a 'b' என்ற இரண்டாவது செலவுக் கோடு கிடைக்கும். காலம் 2-ல் உள்ள தராதர மதிப்புகளைப் பயன்படுத்தினால், இந்தக் கோட்டில் உள்ள எல்லாப் புள்ளிகளும், தொடக்கக் கலவை 'c' என்பதின் மதிப்பிற்குச் சமமாகும். இந்தத் தகவலைக் கொண்டு ஆராயுமிடத்து, புள்ளி h என்ற கலவை, 'c' என்ற கலவையின் மதிப்பிற்குச் சமம். அது போல் புள்ளி 'd'-ல், 'h' என்ற புள்ளியில் காணும் ரெயில் வண்டிகள் (அதாவது 22) கொண்டுள்ளது; ஆனால், அதில் அதிகப் பட்டாக் கத்திகள் உள்ளன. எனவே, புள்ளி 'd' என்பது 'h' என்ற புள்ளியைவிட உயர்ந்தது. அதாவது, காலம் 2-ல் மதிப்புகளைக் கொண்டு கணக்கிடுகையில், காலம் 2-ல் வாங்கிய கலவை, காலம் 1-ல் வாங்கிய கலவையைவிடப் பெரியது. நமது இரண்டாவது சோதனையைப் பயன்படுத்துகையில், 'd' என்பது, முதல் சோதனையைக் கொண்டு வாங்கும் பண்டங்களை விட அதிகமானவைகளைப் பெற முடியும் என்பதை வெளிப்படுத்துகிறது. (அதாவது அது இரண்டாவது செலவுக் கோட்டின் வலப்புறம் அமைகிறது). காலம் 1 விலைகளைக்கொண்டு மதிப்பிடுகையில் உற்பத்தி அளவு 3·08 சதவீதம் அதிகமாகியது என்பதையும்; காலம் 2 விலைகளைக் கொண்டு மதிப்பிடுகையில், உற்பத்தி அளவு 5·75 சதவீதம் உயர்ந்தது என்பதையும் உணர்த்துகிறது.

இரண்டு பண்டங்களின் அளவுக் கலவைகளை ஒப்பிடுவதற்கு ஒரு வரிக்கோட்டு நுட்பவினைமுறை (technique) ஒன்றை நாம் நிறுவியுள்ளோம். அதில் இரண்டு செலவுக் கோடுகளை ஒரு புள்ளியின் வழியாக வரைகிறோம். இக் கோடுகளின் சரிவு இரண்டு வகைத் தராதர விலைகளினால் நிர்ணயிக்கப்படுகிறது.[1]

ஏதேனும் ஒரு புள்ளி இவ்விரண்டு கோடுகளின் வலப்புறத்தில் அமையுமேயானால், அது மிகப்பெரிய பண்ட அளவுகளைக் குறிப்

[1] படம் 4.2-ல் காணும் a b என்ற ஒரு செலவுக்கோடு, தொடக்க நிலையில், தொடக்க விலை கொண்டு வாங்கக்கூடிய எல்லாப் பண்டங்களின் கலவைகளைக் குறிக்கிறது. a'h' என்ற இரண்டாவது செலவுக்கோடு காலம் 2ன் விலைகளைக் கொண்டு தொடக்கக் கலவை அளவுகளைக் காலம் 2 விலைகளில் வாங்கக்கூடிய கலவைகளுக்கான எல்லாத் தொகைகளையும் இணைக்கிறது.

பிடுகிறது எனத் துணிவுடன் கூறலாம். ஆனல், அது அக்கோடு களின் இடப்புறம் அமையுமேயானல், குறைந்த பண்ட அளவையே வெளிப்படுத்துகிறது எனவும் கூறலாம்.

புள்ளி 'o' (படம் 4-2-ல்) வெளிப்படுத்தும் ஓர் இடை நிலே அமைப்பைச் சற்றுக் கவனிப்போம். இக் கலவை ஒரு வகை விலே களேப் பயன்படுத்தினல், (அதாவது செலவுக்கோடு ab என்பதை) (c) என்ற கலவையைவிட உயர்ந்தது ஆகும். அதே நேரத்தில் வேருெரு விலே அமைப்பைப் (அதாவது செலவுக்கோடு a 'b') பயன்படுத்தினல், 'c' என்ற கலவையைவிட மட்டமானதாக அமையும். பண்டங்களின் அளவு மாற்றங்களுக்கு ஏற்ற சதவிகித அளவைகளே நிர்ணயித்தபின், இரண்டு வகை அளவை மாற்றங்கள் வெளியாகும்.—ஒன்று, நேர்நிலே சதவிகித அதிகரிப்பு, ஒருவகை விலேகளேப் பயன்படுத்தினல் கிட்டும். மற்ருென்று, குறைப்பு அதாவது எதிர்வீதக் குறைப்பு, மற்ருெருவகை விலேகளேப் பயன் படுத்தினல் கிட்டும்.

பண்டங்களின் அமைப்பு அளவுகள் மட்டும் கொடுக்கப்பட் டிருந்தால், எல்லாப் பண்டங்களின் அளவுகள் ஒரே நேரத்தில் கூடவோ அல்லது குறையவோ செய்யும் நிலேயைமட்டும் உணர்த்த முடியும் என்பது இவ் வரிக்கோட்டு விளக்கத்தின் ஐயமற்ற முடிவாகும். இதைக்கொண்டு எந்தக் கலவை பெருமளவானது என்பதை வெளிப்படுத்த முடியும்; ஆனல், அது எவ்வளவு பெருமளவு உள்ளது என்பதை வெளிப்படுத்த முடியாது. சில பண்டங்களின் அளவுகள் கூடினலும், சிலவற்றின் அளவுகள் குறைந்தாலும், எந்தக் கலவை 'பெரியது' என்பதைத் தீர்மானிக்க முடியாது. எனவே, விரும்பத்தக்கது என்பதை உணர்த்தமுடியாது. அங்காடி மதிப்புகளேப் பயன்படுத்துகையில், இரண்டு வகை முடிவுகளே வெளிப்படுத்த முடியும்; ஒன்று எல்லாப் பண்டங்களின் அளவுகள் ஒரே முகமாக மாறுமிடத்து அவைகளின் மாற்றங்கள் எத்தன்மையன என்பதையும்; அவைகளின் அளவு எதிர்முகமாக மாறுமிடத்து அவைகளின் நிகர அதிகரிப்பு அல்லது குறைப்பு எத்தன்மையன என்பதையும் தீர்மானிக்க முடியும். விலேகளே எடைகளாகப் பயன்படுத்துமிடத்து அவைகள் அளவை ஒப்பீடு களில் ஏற்படும் ஐயப்பாடுகளே நிவர்த்திக்கின்றன. ஆனல், தராதர விலேகள் மாறினல், ஐயப்பாடுகள் மிகும். இவை நிகர மாற்றங்களின் அளவுகளே ஒப்பிடுமிடத்தும், மாற்றங்களின் திசைகளே ஆராயுமிடத்தும் ஐயப்பாடுகள் எழும்.

நுகர்வோர்க்கான சமப்பயன் வளைகோட்டுப்படம் வரையப் பட்டால் இந்த ஐயப்பாடு நீங்கும்.[1] கலவை 'c' என்பதின் வழியாகச் செல்லும் சமப்பயன் வளைகோட்டுப் படத்தில் காணும். பரப்பை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அதாவது கோட்டிற்கு மேல்புறமும் வலப் புறமும் உள்ள பரப்பு உயர்ந்த (அதாவது பெருமளவு) கலவையைக் குறிக்கும். வளைகோட்டிற்குக் கீழ்ப்புறமும், அதன் இடப் புறமும் உள்ள கலவைகள் மட்டமானவைகள். மேலே குறிப்பிட்ட இரட்டைக் குறியீட்டு எண் சோதனை, சமப்பயன் வளைகோடுகளின் பதிலீடுகள். இம்முறை நுகர்வோர் சமப்பயன் கோட்பாட்டில் அமைந்த சிறந்த கருத்தாகும்.[2]

சமப்பயன் வளைகோடுகளைப் பயன்படுத்துவதால் பல இன்னல்கள் விளைகின்றன. முதலாவதாக அவைகள் நடைமுறைப் பழக்கத்திற்குப் புறம்பானவை (ஆயினும் கருத்தளவில் புறம்பானவையல்ல), எனவே, ஏதேனும் குறிப்பிட்ட ஒரு நபருக்கான சமப்பயன் வளைகோட்டின் சரிவை நிர்ணயிக்க முடியாது. இரண்டாவதாக, இங்கு நமக்குத் தேவைப்படுவது ஒரு குறிப்பிட்ட குழுவின் விருப்பங்களைக் குறிக்கும் சமப்பயன் வளைகோடு தேவை. ஆனல், இக் கருத்துக்கு ஏற்ற நல்ல பொருள் இதுகாறும் அமையவில்லை. ஆயினும், இவ்வின்னல்கள் மேற்குறிப்பிட்ட பயன்களையும், அடிக்குறிப்பில் காணும் வாதத்தையும் அழிக்கவில்லை. இவைகளை எல்லாம்விட மிகப் பெரியதொரு இன்னல் பின்வருமாறு அமைகிறது. அதாவது காலம் 1, 2 ஆகியவைகளின் சமப்பயன் கோடுகள் (அதாவது விருப்புப் பரப்பு) ஒன்ருனவை என்ற நமது எடுகோள் மிகப் பெரியதொரு இன்னலாகும். ஆனல், மக்களின் விருப்பங்கள் காலப்போக்கில் மாறும் தன்மையன. எனவே, இரண்டுவகைப்பட்ட மனிதகுலத்தின், அதாவது ஒரு

[1] சமப்பயன் வளைகோடு பகுப்பாய்வின் எளிய விளக்கத்தை பி. எ. சாமுவேல் சன் அவர்களது 'பொருளாதாரம் - ஒரு முகவுரைப் பகுப்பாய்வு' என்ற நூலில் பக்கங்கள் 446-52 இவைகளில் காண்க.

[2](a) காலம் 1, 2 ஆகியவைகளில் வாங்கிய கலவைகள் நுகர்வோரது சமநிலையை உணர்த்துகிறது (அதாவது செலவுக்கோடு அதற்கேற்ற சமப் பயன் கோட்டை ஒரே ஓர் இடத்தில் தொடுகோடாக (tangent) அமைந்துள்ளது) என்பது; (b) காலம் 1, 2 ஆகியவைகளில் சமப்பயன் கோடுகள் (அதாவது விருப்பங்கள்) மாருமலிருக்கின்றன என்பதும் எடுகோளாக அமைந்தால், படம் 4-ல் உள்ள ab a,w என்ற சமப்பயன் கோடுகளின் சரிவுகள் தெரியாமல் போனலும், இரண்டு செலவுக் கோடுகளுக்கு வலப்புறத்தில் அமைந்த கலவைகள் உயர்ந்த சமப்பயன் கோட்டில் பொருந்தியிருக்கவேண்டும்; அவைகளுக்கு இடப்பக்கத்தில் உள்ள கலவைகள் தாழ்ந்த சமப்பயன் கோட்டில் பொருத்தப்பட்டிருக்கவேண்டும். இரண்டு கோடுகளுக்குமிடையே உள்ள கலவைகளின் மதிப்புள்ள c என்பதின் வழியாகச் செல்லும் சமப்பயன் கோட்டின் சரிவு தெரிந்திருந்தால்தான் வெளிப்படுத்தமுடியும்.

தலைமுறை அல்லது அதற்கு மேம்பட்ட தலைமுறையின் மக்கள் விருப்பங்களின் மதிப்புகளை ஒப்பிட முற்படுகிறோம். எனவே, அவ்விருவகை மனிதகுலமும் ஒரேவகை விருப்பங்களை உடையவர்கள் எனக் கொள்ளுதல் மிகப் பெரிய தவறு. குறுகிய காலப்போக்கிலும்கூட அதாவது ஓராண்டு அல்லது இரண்டு ஆண்டு காலங்களில்கூட—மக்களது விருப்பங்கள் மாறுகின்றன. மக்கள் தொகையில் உள்ளவர் அனைவரும் ஒரே மக்கள். ஆனால், காலப்போக்கில் அவர்கள் பலதரப்பட்ட மக்களாக மாறுகின்றனர். வாழ்க்கையிலும் சரி, நுகர்ச்சியிலும் சரி நாம் கற்கிறோம். அவ் வறிவைக் கொண்டு நமது விருப்பு வெறுப்புகளை மாற்றிக் கொள் கிறோம். எனவே, நாம் மாறுதல் அடைந்து வருகிறோம். விற்பனை யாளர்கள், தம் பொருள்களை விற்பதற்காகச் செய்யும் முயற்சிகள் மட்டுமே விருப்பத்தின் இயக்க நிலையை உணர்த்துகின்றன. நாகரிக உலகில் இவைகள் பகட்டாகத் தெரிகின்றன (ஆனால் உண்மையில் அல்ல).

இதனைக் குறிக்கோளாகக் கொண்டால், குறியீட்டு எண் அமைப்பில், சமப்பயன் வளைகோட்டுத் தத்துவம் பயனற்றதாகப் போய்விடுகிறது. இரண்டு வகைப் பொருத்தமற்ற பண்டங்களின் கூட்டுகளை நாம் ஒப்பிட முயல்கிறோம். இவைகளில் எந்தக் குவியல் பெரிது (அதாவது விரும்பத்தக்கது) என்பது, அப்பண் டங்களை ஒப்பிடும் மக்களது விருப்பங்களைஒட்டி அமையும். எனவே, அவ்வொப்பிடுதல் தனக்கே உரியதொரு ஒப்பிடுதல் அல்லாமல் வெளிப்படையாகக் கூற இயலாது.

நமது இல்லத்தில் உள்ள இசைத்தட்டுக் கூட்டில், அதிகப்படி தொல்இசை இசைத்தட்டுகளும், சிறிய அளவு முற்போக்கு ஜாஸ் (Jazz) இசை, இசைத்தட்டுகளும் இருந்தால், ஒருவேளை அது அவ் வில்லத்தின் முதல்வர்க்கு மிகுந்த விருப்பத்தை அளிக்கும். அல்லது அவை நல்லதொரு கூட்டு எனத் தந்தையார் கருதுவார். ஆனால், அன்னாரது பிள்ளைகள் அவைகளை விரும்பமாட்டார்கள். குறியீட்டு எண் ஒப்பீடுகளும் இத்தன்மையனவாகும். குறியீட்டுஎண்பிரச்சினை (index number problem) என்பது எளிதில் தீர்மானிக்க முடியாத தொருபிரச்சினை, ஏனெனில், அது மக்களது விருப்பங்களை வெளிப் படுத்தும் ஒரு பிரச்சினையாதலால் அதனை எளிதில் தீர்மானிக்க முடி யாது. எனவே, சராசரி விருப்பம் (average taste) அல்லது கூட்டு விருப்பம் (aggregate tastes) ஆகிய இவ்விரு கருத்துகளுக்குத் தக்க பொருள் சொல்ல முடியாதவர்கள் ஆகிறோம். (அதாவது தனிச் சமப்பயன் வளைகோட்டிற்குப் புறம்பான சமூகச் சமப்பயன் வளை கோடு என்பதனைத் தக்க முறையில் விளக்க முடியாதவர்கள்

ஆகிறேம்). அவ்வாறு விளக்க முயன்றால், விருப்பங்கள் காலப் போக்கில் மாறுமலிருக்கின்றன என்பதை எடுகோளாகக் கொள்ள வேண்டியிருக்கிறது.

இரண்டு வேறுபட்ட காலங்களில் கிடைக்கும் இரண்டு வேறு பட்ட பண்டக் குவியல்களின் பருமன்களை ஒப்பிடுகையில் நேரிடும் இந்தத் தவிர்க்க முடியாத ஐயப்பாடு, அவைகளின் விருப்பங்கள் மாறுகின்ற காரணத்தினுல், அல்லது அவைகளுக்கான விருப்பங்கள் மாறுபட்டவை என்ற காரணங்களினுல் மட்டும் உண்டாவதில்லை. ஆனுல், சிறப்பாக, இரண்டு குவியல்களில் உள்ள பண்டங்களும் மாறுகின்ற தன்மையால் ஏற்படுகிறது. 1960-ஆம் ஆண்டில் கணக்கிடப்பட்ட நாட்டின் மொத்த ஆக்கத்தில் உள்ள பண்டங் களின் பலவகைகள் அதே நாட்டில் 1910-ஆம் ஆண்டில் வாழ்ந்த மக்களுக்குத் தெரியாமல் இருக்கலாம். (1910-ல் ஆண்ட பண்டங் களில் பலவகை இன்று உற்பத்தி செய்யப்படாமலிருக்கின்றன.) எத்தனை மின்சாரப் பல்புகள், ஒரு மண் எண்ணெய் விளக்கிற்குச் சமம் என்பதை ஒருவரால் எவ்வாறு கணக்கிட முடியும்? போர்ட் பால்கென் (Ford Falcon) என்ற உந்து வண்டியும் (motor car), மேற்புறம் வரியிட்ட சர்ரெ என்ற (Surrey with-a-fringe-on-top) உந்து வண்டியும் ஒன்ருனதா என்பதை எப்படி நிர்ணயிப்பது? பண்டங்கள் முழுமையாக மறையாமலிருப்பினும் அவைகளின் தரம் மாறுகிறது. எனவே, மாறிய ஆக்க அளவை (changed quantity output) எப்படி நிர்ணயிப்பது? உதாரணங்களாக ஹக்கல்பெரி (huckleberries) என்ற பழங்கள் (சுவை குன்றியவைகள் ஆனுலும்) ஏன் அதிகமாகக் கிடைக்கின்றன என்பதை விளக்க முடியுமா? அல்லது இன்றைய எழுதுகோல்கள் வழவழப்பாக எழுதும் திறனை ஏன் பெற்றிருக்கின்றன என்பதை விளக்க முடியுமா? தன்னிச்சை யாக இயங்கும் துணி துவைக்கும் விசை குடிமகளிரது நேரத்தை மிச்சப்படுத்தி அவர்களை மற்ற வேலைகளைக் குறிப்பாகத் தம் பிள்ளைச் செல்வங்களைப் பள்ளிக்கு நடத்திச் செல்லாமல், வாடகை உந்து வண்டியில் ஏற்றிச் செல்ல ஏன் தருகிறது என்பதையாவது விளக்க முடியுமா!

அரசினர் வெளியிடும் விலைக்குறியீட்டு எண்களில் தரத்தைக் குறிக்கும் முன்னேற்றங்கள் காணப்படுகின்றன. இது இவ்வாறு னுல், 1955 முதல் 1958 வரையிருந்த படர்ந்து செல் பணவீக்கம் (creeping inflation) என்பதைப்பற்றிப் பொருளாதார வல்லுநர் கள் நடத்திய வாதம் அத்தனையும் மனமருட்சியாலானது என்பதில் ஐயமில்லை. நாம் வெளியிடும் குறியீட்டு எண்கள் எல்லாம், தர

முன்னேற்றங்களைப் பிரதிபலித்தால் விலை மட்டங்கள் உயராம லிருக்கும்.[1]

காலம் (அல்லது இடம்) ஆகியவைகள் ஒப்பிடும் இலக்கங்கள் எவ்வளவுக்கெவ்வளவு விரிந்து காண்கின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவு நாட்டின் மொத்த ஆக்கத்தைக் கணக்கிடும் பணி இன்னல்கள் அமைந்ததாகும். ஓராண்டிலிருந்து மற்றோர் ஆண்டில் உள்ள மக்கள் தொகை ஒன்றுனதாயினும், அவர்களது விருப் பங்கள் சிறிதளவு மாறியுள்ளன. தரங்கள் மாறுகின்றமையால், புதிய பண்டங்கள் குறைந்த அளவில் காணப்படுகின்றன. தனிப் பட்ட பண்டங்களின் விலைகளும், அவற்றின் அளவுகளும் ஒரு குறிப்பிட்ட திசையில் மாறும் தன்மையுடையன. ஆனுல், தராதர விலைகளும், பண்டக் கலவையும், குறுகிய காலத்தில் மாருத் தன்மையன. எனவே, உண்மை நாட்டு மொத்த ஆக்கம் (Real GNP) என்ற தலைப்பில் குறிக்கப்பட்டுள்ள மாற்றங்களில் பெரும் பான்மையானவை 'உண்மை மாற்றங்களை' ஒத்தவையாகும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆனுல், இரண்டு குறிப்பிட்ட காலங் களில் உள்ள விலை நிலைகளை ஒப்பிடும் காலத்து, தனி விலைகள், அல்லது தனிப்பண்டங்களின் அளவுகள் இவை குறிப்பிடத் தக்க வகையில் மாறும் தன்மையுடையன. இதனுல் ஏற்படும் வித்தி யாசங்கள், விலைகள், பண்டங்களின் அளவுகள் ஆகியவைகளை எடைபோடப் பயன்படுத்தும் எடைகளைப் பாதிப்பதோடு அல்லாமல் அவைகளை நல்ல முறையில் விளக்க முடியாமலும் போகிறது. மேலும், மக்கள் தொகை மாற்றங்கள், அதன் விருப்ப மாற்றங்கள் ஆகியவை, எந்த முடிவையும் பழுதுள்ள தாக்குகின்றன. இம் மாற்றங்களைத் திருத்தப் பயன்பட்ட எல்லா முறைகளைவிட, விலை மாற்றங்களுக்கு ஏற்றவாறு அமையும் ஆக்க அளவு என்ற முறை சிறந்ததொரு முறையாகும். இம்முறை, திருத்தங்கள் செய்யாத முறையைவிட நலமுடையது.

உதாரணமாக ஐக்கிய அரசுகளின் மொத்த ஆக்கம் *1940–1947* இவைகளுக்கிடையே 133 சதவீதம் உயர்ந்தது என்பதைத் திருத்தமற்ற டாலர் விலைகள் குறிக்கின்றன. அந் நாட்டில் குறிப்பிடத்தக்க அளவில் பண வீக்கம் இருந்தது. அந் நாட்டின் வணிகத்துறை திருத்தி அமைத்த எண்ணிக்கைப்படி

[1] 1958ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ஆம் தேதி கூடிய கூட்டுப் பொருளாதார கமிட்டியின் முன் ஆஜரான பொருளியல் வல்லுநர்கள் அளித்த 'பொருளாதார நிலை பேறும், வளர்ச்சி ஆகியவைகளுடன் விலைத் தொடர்பு என்ற களஞ்சியத்தில் காணும்' ரிச்சர்ட் நான்ஸி ரக்கல்ஸ் (Richard Nancy Ruggles) அவர்கள் எழுதிய, ஐக்கிய அரசுகளின் 1947-57, விலைகள், செலவுகள், தேவை, வெளிப்பாடு, என்ற கட்டுரை யில் பக்கங்கள் 297-300 காண்க; குறிப்பாகப் பக்கங்கள் 298-300 காண்க.

உண்மை வெளிப்பாடு உயர்வு 37·2 சதவீதமாகும். அந் நாட்டின் ஆக்க ஏற்றம் 37·2 சதவீதமாகிலும், அல்லது 25·3 சதவீதமாகிலும் அல்லது 44·3 சதவீதமாகிலும், இவை எல்லாம் 133 சதவீத ஏற்றத்தைவிட குறைந்தவைகள் என்பதில் ஐயமில்லை. வேறோர் எடுத்துக் காட்டாக அந் நாட்டின் மொத்த ஆக்கம், திருத்தமற்ற டாலர் விலைகளில் மதிப்பிடுகையில், 1956–ஆம் ஆண்டில் அது 419·2 மிலியன்களாகவும், 1957–ஆம் ஆண்டில் அது 440·3 மிலியன்களாகவும், அமைந்தது எனக் கூறலாம். இவைகளின் ஏற்றம் 21·1 மிலியன் டாலர்கள் அல்லது 5·0 சதவீதமாகும். இதனை விலைமாற்றங்களைக்கொண்டு திருத்தி அமைக்கையில் அதே வணிகத்துறை (அதாவது 1954 விலைகளைக் கொண்டு திருத்தி அமைக்கப்படுகையில் அதன் மதிப்பை 4·8 மிலியன் டாலர்களாகக் குறைத்து அமைத்தது. இவ்வேற்றம் 1·2 சத வீதமாகும். தராதர விலைகளின் மாற்றங்கள் மிகவும் குறைந்தவைகளாக அமைந்தமையாலும், இரண்டு ஆண்டுகளில் அமைந்த பண்டக் கலவைகள் ஒரே தன்மையாகியமையாலும், இவ்வாண்டுகளுக்கிடையே உள்ள உண்மை நாட்டு ஆக்கத்தின் மாற்றங்களின் அளவுகள் ஏறக்குறைய ஒரே தன்மையனவாக அமைந்தன. எனவே, அந் நாட்டின் உண்மை ஆக்க அளவு மாற்றங்கள் சுன்னம் (10) 2·0 சதவீதம் ஆகிய அளவுகளுக்கிடையே அமைந்தன என்பதைத் துணிவுடன் கூறலாம்.

## வணிகத்துறை கையாளும் முறை
## (The Department of commerce Products)

1951–ஆம் ஆண்டிற்குமுன், ஐக்கிய நாட்டின் உண்மை ஆக்கத்தை மதிப்பிடவிரும்பிய எவரும், வணிகத்துறை வெளியிட்ட உண்மை ஆக்க டாலர் மதிப்புகளை மொத்த விலை அல்லது நுகர்வோர் விலை குறியீட்டு எண்களை அல்லது இவைளின் சராசரியைக் கொண்டு சுருக்கி வெளியிடக் கடப்பாடுடையவர் ஆவர். ஆனால், இப்பொழுது வணிகத்துறை நடைமுறையில் உள்ள விலை குறியீடுகளைக் கொண்டு நாட்டு உண்மை ஆக்கத்தை வெளியிடாமல், அடிப்படைக் காலத்தில் உள்ள நிறைகளைக் கொண்டு வெளியிடமுற்பட்டுள்ளது. நாட்டு மொத்த ஆக்கத்துடன் பொருந்திய டாலர் உற்பத்திகளை அதன் நுணுக்கமான நிலைகளுக்குப் பொருத்தி அதாவது ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே குறியீட்டு எண்கள் கிடைக்கும்வரை பாகுபாடு செய்கிறது. அவ்வாறு பாகுபாடு செய்யப்பட்ட ஒவ்வொரு பகுதியையும் 1954 என்ற அடிப்படை ஆண்டிற்குச் சுருக்கி, அவ்வாறு சுருக்கப்பட்ட ஒவ்வொரு பகுதியையும் ஒன்று கூட்டி, 1954 விலைகளில் அமைந்த உண்மை

மொத்த வெளிப்பாடு என்று குறிக்கிறது. ஒவ்வொரு நுகர்ச்சிப் பொருளுக்கும் தனி விலைகள் பயன்படுத்தப்படுகின்றன. அதாவது பொறித் தளவாட விலைகள், அமைப்புச் செலவுகள்(construction costs); ஒவ்வொன்றுக்குமான மொத்த முதலீடு, ஒவ்வொரு வகை வாங்குதலுக்கான அரசாங்க ஒப்பந்த விலைகள் ஆகியவைகளைப் பயன்படுத்தப்படுகின்றன. ஏற்றுமதி, இறக்குமதி ஆகியவை தனித் தனியே சுருக்கப்படுகின்றன; அவைகளின் வித்தியாசம் மாறிலி விலைகளில் அமைந்த நிகர ஏற்றுமதி மதிப்பிற்குச் சமம். அரசாங்க சிப்பந்திகளின் பணிகளைக் கணக்கிடுகையில், மனிதமணி வேலை நேரங்கள் (man-hour employment) என்ற குறியீட்டு எண்ணைப் பயன்படுத்துகிறது. அதாவது அரசாங்க வெளியீடு குறியீட்டெண்ணைவிட உள்ளிடு குறியீட்டு எண்ணைப் பயன்படுத்துகிறது. அதாவது மாறிலியான உற்பத்தித் திறனைப் பயன்படுத்துகிறது.

திருத்திய எண்களைத் தொடக்க டாலர் எண்களால் பாகுபாடு செய்தால் அதனுள் அடங்கிய விலைகுறியீடு கிட்டும். அதன் அசைவுகள் மற்ற விலை குறியீடுகளுடன் ஒத்தனவாய் தோன்றுமே யல்லாமல் அவைகளுடன் அமைந்தனவாய் காணுது. அல்லது வேறு விலைகுறியீடுகளின் சராசரி குறியீட்டெண்ணின் அசைவுகளுடனும் பொருந்தாது.

நாட்டின் உண்மை ஆக்கத்தை மதிப்பிட ஆளும் பலவகை முறைகளில், வணிக முறை என்பது ஒரு முறையாகும். ஆனுல், ஓர் ஆண்டில் பயன்படும் சுருக்கும் முறை அடிப்படை மற்ருெரு ஆண்டிற்குப் பயன்படும் முறையைவிட வேறுபட்டதானுல் இந்த முறை குறிப்பிடும் ஆண்டிற்கு ஆண்டு உள்ள மாற்ற வடிவம் வேறுபட்டமையும் ஆயினும், ஒரு பொருளியல் அமைப்பின் உண்மை வெளிப்பாட்டை மதிப்பிடுவதற்கு இந்தப் புதுமுறை மற்ற முறைகளைவிட உயர்ந்த முறையாக அமைகிறது. எனவே, ஐக்கிய அரசுகள் தங்களது மொத்த ஆக்கத்தை 1929–ஆம் ஆண்டில் அமைந்த விலைகளைக் கொண்டு ஆண்டுக்கு ஆண்டு சுருக்கி அமைக்கிறது. அதேபோல் காலாண்டிற்கு மதிப்பிடுகையில் 1947 ஆண்டில் அமைந்த விலைகளைப் பயன்படுத்தப்படுகிறது.

## ‘உண்மை’ நாட்டு வருமானம்

## (‘Real’ National Income)

உண்மை வெளிப்பாட்டை மதிப்பிடும் முறையிலிருந்து தனிப்பட்ட முறையில் நாட்டின் உண்மை வருமானத்தைக் கணக்கிட முடியும் என்று சிலர் கருதுகிருர்கள். நாட்டின்

வருமானம் என்பது ஆக்கக் காரணிகளின் சம்பாத்தியத்தின் மொத்தத்தைக் குறிக்கிறது; இச்சம்பாத்தியங்களை டாலர் தொகைகளைக் கொண்டு பெருக்கவோ அல்லது சுருக்கவோ முடியும். ஒவ்வொரு காரணியின் வருமானத்தைக் காரணி விலைகளின் குறியீட்டு எண்ணைக் கொண்டு சுருக்கினால், உண்மை வருமானத்தின் மதிப்பை நம்மால் ஏன் பெறமுடியாது? ஆனால், சற்றுச் சிந்திப்போமேயானால், இந்த முறையைக் கைவிடுவதில் தவறு ஒன்றுமில்லை. உதாரணமாகக் கூலிப் பங்கைக் கவனிப்போம். மொத்தக் கூலிகள், சம்பளங்கள் இவைகளைக் கூலி, சம்பள வீதங்கள் குறியீடு கொண்டு சுருக்குவோமேயானால் உள்ளீடுகளுக்காகச் செலவான நேரத்தை மட்டும் அளவிட முடியுமேயன்றி, வருமானத்தைக் கணக்கிட முடியாது. நாம் காணும் கூலிகள், சம்பளங்கள் ஆகியவைகளின் வீதங்களில் பல, கூலிகள், சம்பளங்கள் ஆகியவை வழங்கப்படும் வீதங்களின் வீக்கங்கள் அல்லது சுருக்கங்களாகும். ஆனால், அவைகளில் சில, ஆக்க அளவுகளின் மாற்றங்களைக் குறிக்கின்றன. எனவே, ஆக்க அளவைக் குறிப்பிடும் கூலி மாற்றத்தைத் தனிப்படுத்திவிட்டால், மிஞ்சியுள்ளது தூய்மையான விலை மாற்றம் என்று ஏன் கொள்ளக்கூடாது? பண்டங்களின் விலைகளைக் கொண்டு சுருக்கி அமைக்கும் முறையை ஆண்டால், வருமானத்தை விடுத்து ஆக்கத்தை அளவிடும் கருத்திற்கு மீண்டும் நாம் வருவோம்.

கீன்ஸ் தமது 'பொதுக்கோட்பாடு' என்ற நூலில்[1] நாட்டின் வருமானத்தை அல்லது நாட்டின் ஆக்கத்தைக் கூலி வீதக் குறியீடு எண் கொண்டு சுருக்கியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. இக்குறியீடு, திறமற்ற பொது உழைப்பின் விலை அசைவுகளைத் தழுவியது. வெளிப்பாட்டை உள்ளீடுகளால் அளவிட அவர் வெளிப்படையாக முற்பட்டார் என்பது இதன் கருத்து. அவரது 'வெளிப்பாட்டைக் கூலி அலகுகள் கொண்டு அளவிடுதல் (output measured in wage units) என்பது வேலைக் குறியீட்டிற்கு வழங்கப்படும் மற்றொரு பெயர். உழைப்பு உள்ளீட்டினை மட்டும் சாராமல், உழைப்பின் ஆக்கத்திறனை முன்னேற்றம் அடையச் செய்யும் முறையையும் சார்ந்த 'உண்மை வெளிப்பாடு' (real output) என்ற கருத்து கீன்சுக்குத் தெரியாமல் இல்லை. ஆனால், 'குறியீட்டு எண் பிரச்சினை (index number problem) கொண்டு உண்மை ஆக்கத்தை அளவிடுவதால் விளையும் ஐயப்பாடுகளை அவர் நன்கு உணர்ந்தவர். மேலும் அவரது கோட்பாடு உண்மையில் ஒரு குறுங்காலக் கோட்பாடு; ஆகவே, குறுங்காலத்தில் ஏற்படும் ஆக்க மாற்றங்கள் குறைந்தபட்ச (minimal) அளவைக் கொண்டவை. (வேலை என்று அளவிடப்பட்ட) உள்ளீடு மட்டும் ஐயப்பாடற்ற இலக்கணமாக அமைந்தது.

[1] அதிகாரம் 4 பக்கங்கள் 37-45

வேலை (employment) என்பது ஐயமற்ற ஒரு கருத்து என்று கீன்ஸ் கூறியது தவருகும். எல்லா வேலைகளும் ஒரே தரமுடையவையல்ல. ஒரு பொறியமைப்பாளரது வேலைநேரம், அல்லது ஓர் அறுவை மறுத்துவரது வேலை நேரம், இவைகள், குழி வெட்டும் சாதாரண கூலியாளின் வேலை நேரமும் ஒன்ருகாது. பொறியமைப்பாளரது வேலை நேரம், குழிவெட்டுபவனது வேலை நேரமாகிய இவ்விரண்டு உள்ளீட்டுகளின் கலவை மாறும் தன்மையுடையன. ஆனல், இப் பிரச்சினையை, நிறையிட்டு கீன்ஸ் தீர்வு கண்டார். அதாவது பொறியமைப்பாளரது வேலை நேரத்தையும், குழி வெட்டுபவனது வேலை நேரத்தையும் அவர்களது தராதர ஊதியத்தைக்கொண்டு நிறையிட்டுத் தீர்வு கண்டார். ஆனல், அவர்களது தராதர ஊதியங்கள்கூட மாறுபவை. ஆனல், இங்குக் 'குறியீட்டு எண் பிரச்சினை' கள்ளத்தனமாகப் புகுத்தப்பட்டுள்ளது என்பதைக் கீன்ஸ் அறியாமல் இல்லை; ஆனல், இச் சந்தர்ப்பத்தில், அதாவது ஆக்கத்தை அளவிடும் சந்தர்ப்பத்தில், இது மிகவும் கடுமையான பிரச்சினையல்ல என்று அவர் நினைத்தார்போலும். அத்தகைய கருத்து அவருக்கு எழுந்ததில் தவறு ஒன்றும் இல்லை.

உண்மை ஆக்கத்தைப் புறக்கணிக்கும் கீன்சின் கருத்தை ஒரு சில பொருளியல் வல்லுநர்கள் பின்பற்றினர்கள். ஆனல், நாம் அதனைப் பின்பற்றுவதாயில்லை. மொத்த வேலை என்பது தெளிவற்ற கருத்தாயினும் அதனைப் பயன்படுத்துவதுபோல், உண்மை வெளிப்பாடு (real output) என்பது ஐயமுள்ள ஒரு கருத்தாயினும் அதனை நாம் பயன்படுத்துவோம். ஒரு குறிப்பிட்ட அளவைக் கொண்ட காலத்தை ஆராயுமிடத்து, மாறும் ஆக்கத்திறன் (changing productivity) என்ற பிரச்சினையை நோக்க நேரிடுகிறது. ஆனல், இதனை உண்மை வெளிப்பாடு, உண்மை உள்ளீடு இவைகளின் அசைவுகளை ஒப்பிட்டு அளவிடலாம்.

## வேலை, வேலையின்மை ஆகியவைகளை வெளியிடுதல்
## (The Measurement of Employment of Unemployment)

வேலை என்ற கருத்தில் ஐயப்பாடுண்டு என்பதைக் கடந்த பத்தியில் குறிப்பிட்டோம். இவ்வையப்பாடு, உழைப்பு நேரங்களின் உள்ளீட்டுக் கலவை மாறுவதாலும், பொறியமைப்பாளர், அல்லது அலுவலர்களது வேலைநேர உள்ளீடும், வயலில் உழைக்கும் உழைப்பாளி அல்லது பேருந்து வண்டி ஓட்டுபவனின் வேலைநேர உள்ளீடும் சமமானது அல்ல என்ற கருத்து உருவானதாலும் எழுந்தது. ஆனல், ஐக்கிய அரசுகள் வேலையை அளவிடப் பெருவாரியாகப் பயன்படுத்தும் முறைகள் எல்லாம் இந்தப் பிரச்சினை

யைச் சற்றேனும் கவனிப்பதில்லை. அந்நாட்டில் ஆளப்படும் வேலை அளவு முறைகள், வேலை செய்யும் நேரங்களின் மாற்றங்களைக்கூடக் கவனிப்பதில்லை.

ஐக்கிய அரசுகளில் ஆளப்படும் வேலை அளவு முறையை மக்கள் தொகைக் கணக்கெடுப்புக் கழகம் (bureau of the census) என்ற அமைப்பு அளிக்கிறது. இம்முறை மொத்த மக்கள் தொகையில் ஓர் அளவு மாதிரியைப் பின்பற்றி அமைந்துள்ளது. இம்மாதிரியின் (sample) தொகுப்பு மெல்ல மாறும். (மக்கள் தொகுதியின் 1/8 பங்கு புது மக்கள் அடங்கிய தொகையாகும்). இதனை மாதந்தோறும் ஆராய்ந்து (மாதிரி மதிப்பீடுகளைத் தகர்த்தெறிந்து) மாதாந்தர மொத்த வேலை மதிப்பீட்டை வெளியிடுகிறது. இவ்வறிக்கை வேலையில் உள்ள மனிதனின் இலக்கணத்தைப் பின்வருமாறு உணர்த்துகிறது. ஆராய்ச்சி நடத்தப்பெறும் வாரத்தில், எவரேனும், ஏதேனும் ஒரு குறித்த காலத்தில், தனித்துறை அல்லது அரசினர் துறை வேலை வழங்குவோரிடம் வேலையில் அமர்ந்திருக்க வேண்டும். அல்லது தானே ஒரு தொழிலைச் செய்தல் வேண்டும். அல்லது சம்பளம் பெறாத குடும்ப உழைப்பாளியாக 15 மணி அல்லது அதற்கு மேற்பட்ட நேரத்திற்கு வேலையில் அமர்ந்திருந்தால், (அதாவது குடும்பத் தொழில் அல்லது குடும்பப் பண்ணையில்) அவர் வேலை உள்ளவர் என்பது பொருள். அவன் வேலையில் இல்லாதபோதும் வேலை உள்ளவன் எனப் பொருள்படும்; அல்லது வேலையிலிருந்து விடுமுறை, உடல் நலமின்மை, அல்லது வேலை நிறுத்தம், அல்லது வேறு காரணங்களால் வேலைக்குப் போகாமலிருந்தாலும், அவன் வேலையில் உள்ளவன் என்ற பொருளில் அமையும்.

இந்த அளவீட்டு முறையில் தலை சிறந்து விளங்கும் வேலைக் கருத்து, சமூக வேலை என்ற கருத்தின்றி, பொருளாதாரத் தொடர்புடைய கருத்தல்ல என்பது முன் கூறியவற்றின் வாயிலாக விளங்குகிறது. விடுமுறையில் உள்ள ஒருவன், அல்லது வேலை நிறுத்தம் காரணமாக வேலைக்குச் செல்லாத ஒருவன் (வேலையில்லாமல் திண்டாடுபவனைப் போல) சமூகப் பிரச்சினையை உண்டாக்குபவன் அல்ல. அவன் பாதி நேரம் வேலை செய்தாலும் பரவாயில்லை, அவன் சமூகத்தில் பிரச்சினையைக் கிளப்பி விடமாட்டான்; ஆனால், நாள் முழுவதும் வேலையில்லாமல் திண்டாடுபவன் சமூகத்திற்குப் பெரும் பிரச்சினையைக் கிளப்பி விடுகிறான். இவ்விளக்கங்களின் தொடக்கம் 1930ஆம் ஆண்டு இருந்த மாபெரு வியாபார மந்தத்தில் (great Depression) அமைந்துள்ளது. ஏனெனில், அவ்வாண்டுதான் முதன் முதலாக இத்தகைய அளவீடுகள்முறை கையாளப்பட்டன.

இந்த வேலை அளவு முறை ஆக்கமுள்ள உழைப்பு உள்ளீடு என்ற கருத்துடன் சமதூர அளவில் அசையும் தன்மையுடையது என்பது ஒரு சிலரின் எடுகோளாகும். விடுமுறை காரணமாக வேலையில்லாமலிருப்பவர்களின் எண்ணிக்கை காலத்திற்கு ஏற்ற வாறு அமையும். அதுபோல், கெட்ட பருவநிலை காரணமாகத் தாற்காலிகமாக வேலையில்லாமல் இருப்பவர்களது தொகையும் அமையும். ஆனால், இத்தகைய காலப்போக்கு மாற்றங்கள் அதிகார பூர்வமான வேலை எண்ணிக்கைகளில் இடம் பெறுவதில்லை. அரை நேரம் (part time) வேலை செய்யும் மக்களின் எண்ணிக்கை (வேலை நேரத்திற்கு மேலும் வேலை செய்யும் (over time) எண்ணிக்கை குறிப்பிடத்தக்க வகையில் மாறுகின்றன.) ஆனால், வேலையில் உள்ளவர் என்ற தலைப்பின்கீழ் அமையும் எண்ணிக்கை ஒழுங்கான முறையில் மாறும் தன்மை உடையதாகும். எனவே, பொருளியல் வல்லுநர்களுக்குத் தேவைப்படும் வேலை என்ற கருத்தை அளவிட, மக்கள் தொகைக் கணக்கீட்டு முறை நல்ல முறையாகக் கருதுவதற்கில்லை.

ஒரு நாட்டின் குறிப்பிட்ட பல அமைப்பின் வேலை அளவுகளை மதிப்பிடத் தனித்தனி முறை ஆளப்படுகிறது. குறிப்பாகப் பொறி வழித் தொழில்களில் வாராந்தர சராசரி வேலை நேரங்களின் அளவையும், ஒவ்வொரு தொழிலில் வேலையில் உள்ள எண்ணிக் கையுடன் கலந்து, நடப்பு உழைப்பு உள்ளீடை அளக்கப்படுகிறது. இதில் உள்ள தகவல்கள் நிறுவனங்களின் மாதிரியிலிருந்து வந்தவை. (இவைகள் மக்கள் தொகை மாதிரிகளிலிருந்து வந்த வையல்ல). இவைகளை ஒன்று சேர்த்து ஒரு நல்ல அறிக்கையாக உழைப்புப் புள்ளியியல் கழகம் (Bureau of Labour Statistics) என்ற அமைப்பு வெளியிடுகிறது. இத் தகவல்கள் நீண்ட கால அளவைகளை ஓரளவு கொண்டதாயினும் (தங்களது மாதிரிகளில் புது நிறுவனங்களைச் சேர்ப்பதால் ஏற்படும்), அவைகளின் குறுங் கால அளவுகள் பொருளியல் வல்லுநர்கள் தேடிச் செல்லும் தகவல்களை ஒட்டியதாகும். ஆனால், இத் தகவல்கள் அனைத்தும், பொறிவழித் தொழில்களின் தகவல்களை மட்டும் குறிக்கின்றன. ஆனால், வணிகத்துறை (Department of Commerce) ஆண்டுதோறும் கிட்டும் முழு வேலை ஆட்களின் எண்ணிக்கை மதிப்பீடுகளை வெளியிடுகின்றது. இதனைத் தொழில் முயல்வோர்களின் எண்ணிக்கையுடன் சேர்த்தால், ஆண்டுக்கான நாட்டின் மொத்த வெளிப்பாட்டைக் கணக்கிடப் பயன்படும் உழைப்பு உள்வீடுகளை மதிப்பிடப் பயன்படுகிறது.

வேலையை அளவிடும் முறை இத்துணைக் கடினமானதாக அமைந்தது. ஆனால், வேலையின்மையை அளவிடும் முறை இதை விட மிகக் கடினமானதாகும்; இதற்காக, வேலை என்பதற்கு மட்டும் இலக்கணம் சொல்லாமல், 'பாட்டாளிப் படை'யில் (labour force) இடம் பெறும் பேற்றை அடையும் மக்களின் இலக்கணத்தையும் சொல்ல வேண்டியிருக்கிறது. பாட்டாளிப் படையில் உள்ளவர், வேலையில் உள்ளவர் ஆகியவர்களின் வேறுபாடு, வேலையில்லாமல் இருப்பவரின் எண்ணிக்கையைக் குறிக்கிறது. வேலையில்லாமலிருக்கும்போது பாட்டாளிப் படையில் இருப்பதற்கு மனத்துணிவு வேண்டும். காலப் போக்கில் வேலை கிடைக்கும் உழைப்பாளிப் பிரச்சினை பெரிய பிரச்சினையாகும். ஏனெனில், அவனுக்குத் தன் ஊரில் காலமில்லாத நேரங்களில் வேலை வாய்ப்புகள் கிடைப்பதில்லை. இதைத் தவிர, ஓய்வு பெற்ற தொழிலாளிகள், மாணவர்கள், ஆகியவர்கள் தக்கவேலை கிடைக்கும்வரை பாட்டாளிப் பட்டாளத்தில் உள்ளவர்கள். தக்கவேலை (right job) கிடைத்தவுடன் அவர்கள் வேலை உள்ளவர்களாக மாறி விடுகிறார்கள்.

'வேலை நிறைவு' (full employment) என்ற கருத்துக்கு நெருங்கிய தொடர்புடைய பல பிரச்சினைகள் உள்ளன. ஆயினும் அவைகள் கருத்தியல் தொடர்பு பிரச்சினைகளாகும். இருப்பினும் மக்கள் தொகைக் கணக்கெடுப்புக் கழகம் (Census Bureau) பின் வரும் தகவல்களைக் கொண்டு ஒருவன் வேலையில்லாதவன் எண்ணிக்கையை மதிப்பிடுகிறது. *(1)* 14 வயது நிரம்பப் பெற்றவர், ஏதேனும் நிறுவனத்தின் உள் இருப்பவர், அல்லது பட்டாளத்தில் சேர்ந்தவராய் இருந்தால் *(2)* 'வேலை உள்ளவர்' என்று பாகுபாடு செய்யப்படாதவர்களாயிருந்தால் (மேலே பார்க்கவும்) *(3)* வேலை தேடுபவராயும் அல்லது அதனைத் தேடாதவராயும் இருந்தால்; ஏனெனில், (a) வேலையிருந்தும், வேலைக்குத் தேவைப்படாதவர்; (b) அல்லது தாற்காலிகமாக உடல்நலமின்மையால் அல்லது (c) தனது வழியில், அல்லது தனது சமூகத்திற்குத் தக்கதொரு வேலை கிடைக்காது என்ற நம்பிக்கையினால், அதனைத் தேடாமலிருப்பவராய் உள்ளவர்கள் வேலையில்லாதவர்கள் ஆவார்கள்.

வேலையின்மையைக் கணக்கிடப் பொதுநல ஈட்டுறுதித் தகவல்கள் (Social Insurance data) முறை பயன்படுகிறது. ஆனால், அது எல்லாத் துறைகளையும் கவராத காரணத்தால் அது ஒரு மாசுள்ள முறையாகும்.

## வேலை, வெளிப்பாடு ஆகியவைகளின் குறுங்காலத் தொடர்பு
## (Short run relationship of Employment & Output)

உண்மை வெளிப்பாடு, உழைப்பு உள்ளீடு ஆகிய இரண்டிற்குமான சரியான அளவுகள் கொடுக்கப்பட்டிருந்தால், இவை இரண்டின் தொடர்பு எப்படி அமையவேண்டுமென்பதை நாம் எவ்வாறு எதிர்பார்க்க முடியும்? ஒரு தனிப்பட்ட பண்டத்தை உற்பத்தி செய்யும் உற்பத்தி அமைப்பின் வெளிப்பாடும் அதன் உழைப்பு உள்ளீடுகளும் ஒரு குறிப்பிடத்தக்க முறையில் தொடர்புடையது என்பதை நாம் அறிவோம். மொத்த வெளிப்பாட்டின் தொகுப்பு நிலையுள்ளது என்று கொண்டபின் அல்லது மொத்த வெளிப்பாட்டின் அளவுடன் ஒழுங்கான முறையில் தொடர்புடையது என்று கொண்டபின், உள்ளீடுகள், வெளிப்பாடுகள் ஆகியவைகளின் மொத்த மட்டத் தொடர்பைக் காணவேண்டும். அதாவது தனித்தனி வெளிப்பாட்டுச் சார்புத் தொடர்பு, அதிலிருந்து மொத்த வெளிப்பாட்டுச் சார்புத் தொடர்புகளின் தன்மைகளைப்பற்றி நாம் என்ன நினைக்கிறோம்?

உற்பத்தி நுணுக்கங்கள் கொடுக்கப்பட்டிருந்தாலும், மற்றக் காரணிகளின் உள்ளீடுகள் கொடுக்கப்பட்டிருந்தாலும், வெளிப்பாடு, வேலையுடன் நேர்கோடற்ற (non-linear) தொடர்புடையது என்பதை நமது தொன்மை வாய்ந்த கோட்பாடு விளக்குகிறது. வேலை அளவு அதிகரிக்கும்போது, வெளிப்பாடும் அதிகரிக்க வேண்டும்; ஆனால், ஒரு நிலையைத் தாண்டிய பின்னர், அது உள்ளீட்டு அதிகரிப்பைவிடக் குறைந்த அளவில் உயர்த்தும்.

வெளிப்பாட்டை 'O' என்ற குறியிட்டு உணர்த்தி, உழைப்பு, முதல், இயற்கை வளங்கள் ஆகியவைகளின் உள்ளீடுகளை முறையே N, K, L என்ற குறிகளால் உணர்த்தினால், நமது மொத்த உற்பத்தித் தொடர்பு $O=f(N, K, L)$ என்று அமையும். இத் தொடர்பு, ஏதேனும் ஒரு உள்ளீட்டு அதிகரிப்பு (மற்றவை மாறிலிகள் ஆனால்) வெளிப்பாட்டை உயர்த்தும் தன்மையுடையது; ஆனால், மீண்டும் உள்ளீடுகளை உயர்த்தினால் அவை வெளிப்பாட்டைக் குறைந்த அளவில்தான் உயர்த்தும். அதாவது உழைப்பு, முதல், 'நிலம்' ஆகியவைகளின் இறுதிநிலை ஆக்கங்கள் நேர்நிலைத் தன்மையன; ஆனால், குறையும் தன்மையன[1].

[1] நுணுக்க முறையில் இத் தொடர்பை அமைக்க வேண்டுமேயானால் இதனை $\frac{do}{dN}, \frac{do}{dK}, \frac{do}{dL} < 0$ என்று அமைக்க வேண்டும். இதில் $\frac{do}{dN}$, ஆகியவை 'ஒரு சிறை நுண்வகைக் கெழுக்'களாகும் (partial derivatives.)

ஆயினும், எல்லா உள்ளீடுகள் எல்லாம் ஒன்றாக ஒரே விகிதா சாரப்படி உயருமானால் வெளிப்பாடு மூன்று வகையாக உயரும். (a) அதே விகிதப்படி அமையும். (அதாவது மாறாப் பரும விளைவுகளாய் (constant returns to scale) அமையும்.) (b) உயர்ந்த விகிதாசாரப்படி அமையும் (அதாவது வளர்ந்து செல் பரும விளைவுகளாய் (increasing returns to scale) அமையும்) (c) குறைந்த விகிதாசாரப்படி அமையும் (அதாவது குறைந்து செல் பரும விளைவுகளாய் (decreasing returns to scale) அமையும். விளக்கப் படம் 4–3 மாறாப் பரும விளைவுகளை விளக்குகிறது.




மற்ற உள்ளீடுகள்

$O_1$க்கு $K_1$னும் $L_1$னும்
$O_2$க்கு $2K_1$ $2L_1$ ஆகியவை
$O_3$க்கு $3K_1$ $3L_1$ ஆகியவை.

படம் 4.3.

மற்றக் காரணிகளின் மாறிலி உள்ளீடுகள் கொடுக்கப்பட்டு இருந்தால் உதாரணமாக K, L, என்று இருந்தால், வெளிப்பாடு O, என்ற வளர்ந்து செல் உழைப்பு வழங்குதலுக்கு ஆன எதிர் மறை செய்யும். இவ் வளைகோடு, தொடர்ந்து செல்லும் குறைந்து செல் இறுதிநிலை (சராசரி) உழைப்பு ஆக்கங்களை உணர்த்துகிறது. (உழைப்பின் இறுதிநிலை ஆக்கம், வெளிப்பாடு தொடர்பின் சரிவாகும்; ஒரு குறிப்பிட்ட இடத்தின் சராசரி ஆக்கத்தை, அப் புள்ளியின் வழியாக மூலத்திற்கு (origin) வரையப் படும் கோட்டின் சரிவு விளக்குகிறது$_1$). ஆனால், உழைப்பு உள்ளீடு இரட்டிப்பு, அதாவது N, லிருந்து 2N, ஆன இரட்டிப்பு, மற்ற

---

மேலும் இவைகளின் இரண்டாம் வகை ஒரு சிறை நுண்வகைக் கெழுக்கள் $\frac{d^2o}{dN^2}$, $\frac{d^2o}{dK^2}$, $\frac{d^2o}{dL^2}$ $< 0$ என அமையும். இவைகளில் முதல் வகை சமயின்மைகள், எல்லா இறுதிநிலை ஆக்கங்களும் நேர்முகமானவைகள் என்பதை வெளிப்படுத்துகிறது; இரண்டாம் வகை உள்ளீடுகள் உயர்ந்தால், அவைகள் குறையும் தன்மையுடையன என்பதை உணர்த்துகிறது.

உள்ளீடு இரட்டிப்புடன் சேர்ந்து அமையப்பெற்ருல், உழைப்பின் சராசரி ஆக்கம் மாறுவதில்லை. அந்தச் சார்புத் தொடர்பு முழுவதும் $O_2$ என்ற இடத்திற்கு மேல் நோக்கி அசைகிறது. இதனுல் உழைப் பின் சராசரி ஆக்கம் விழுவது சரிக்கட்டப்படுகிறது. எல்லா உள்ளீடுகளும் மூன்று மடங்காய் உயர்ந்தால், வெளிப்பாடும் மூன்று மடங்காக உயர்கிறது ($O_3$ என்ற வளைகோடு உணர்த்துவது போல்) ஏதேனும் மாறிலியான மற்றக் காரணிகளின் உள்ளீடுக்கு, உழைப்பின் இறுதி நிலை, சராசரி ஆக்கங்கள், அதிக உழைப்பைப் பயன்படுத்திஞல் குறைகிறது. ஏதேனும் குறிப்பிட்ட உழைப்பு உள்ளீடு கொடுக்கப் பட்டிருந்தால், மற்றக் காரணிகளின் உள்ளீடு கள் உயர்ந்தால், உழைப்பின் இறுதி நிலை, சராசரி ஆக்கங்கள் உயரும். மாறுகின்ற பரும அளவு விளைவுகளைப் படத்தில், மேல் நோக்கிச் செல்லும் அல்லது கீழ்நோக்கிச் செல்லும் வளைவுத் தன்மை பொருந்திய உடைந்த கோட்டால் காட்டியுள்ளோம்.

நுண்கலை அறிவு கொடுக்கப்பட்டுள்ள அமைப்பு ஒன்றுக்கு மேல் கூறிய ஆக்கச் சார்புத் தொடர்பு பெரிதும் பயன்படும். உள்ளீடு வகைகளின் மாற்றங்களுடன் தொழில் நுட்ப ஆய்வு மாற்றங்களும் சேர்ந்தால், வெளிப்பாடு உயரும். தொழில் நுட்ப ஆய்வுப்புதுமைகள் (innovations), ஒரு குறிப்பிட்ட அளவு வெளிப் பாட்டை உற்பத்தி செய்யத் தேவைப்படும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட காரணிகளின் உள்ளீடுகளைக் குறைக்கும் திறமை யுடையது. இதே கருத்தை வேறுவகையில் கூறலாம். அதாவது எல்லாக் காரணிகளின் உள்ளீடுகளையும் குறைக்கலாம்; அல்லது தேவையுள்ள ஒரு காரணியின் உள்ளிடுகையைக் குறைத்து வேறு ஒன்றின் உள்ளிடுகையை உயர்த்தும் திறமையுடையது என்பது. இத்தகைய புதுமைகளைப் பயன்படுத்தவேண்டுமாஞல், உயர்ந்த மதிப்புள்ள காரணிகளின் உள்ளிடுகையைக் குறைத்துத் தேவைப் படும் சிறிய மதிப்புள்ள காரணியின் உள்ளிடுகையை உயர்த்த வேண்டும் அதாவது புதுமைகள் அடக்க விலையைக் குறைக்கப் பயன்படவேண்டும்.

ஆக்கத்திறன் நுணுக்கங்களைத் தொடர்ந்து செம்மைப்படுத்துவ திலும், உழைப்புப் பட்டாளத்தை மிஞ்சுமளவிற்கு முதல் வளர்ச்சி வீதத்தைப் பெருக்குவதிலும், மேஞட்டுப் பொருளாதார அமைப்புகள் முனைந்து நிற்கின்றன. இக் காரணிகள், மக்கள் தொகைப் பெருக்கிஞல், உழைப்பின் ஆக்கம் குறைந்து செல்லும் என்ற நம்பிக்கையைத் தகர்த்து எறிந்தன. அவை உண்மையில், உழைப்பின் சராசரி ஆக்கத்தை உயர்த்தின. அவை உழைப்பு உள்ளீடு வளர்ச்சியைவிட உயர்ந்த அளவு விகித உயர்வைப் பெற்

றுள்ளன. இவை ஐக்கிய அரசுகளில் ஆண்டுக்கு இரண்டு சதவீத சராசரி உயர்வாக அமைந்துள்ளன. இத்தகைய வளர்ச்சி அந் நாட்டில் கடந்த பல பத்து ஆண்டுகளாக நடைமுறையில் உள்ளது.

ஆனால், குறுங்காலத்தில் (இந் நூலில் உள்ள கோட்பாட்டின் பெரும்பகுதி குறுங்கால நோக்கு ஆனதால்) உற்பத்தித் துறையில் பயன்படும் முதலின் அளவு மாறாதது. அதுபோல் நுணுக்கங்களும் மாறாதவை. எனவே, உழைப்பு, குறைந்து செல் விளைவுகளைக் கொண்டது எனக் கொள்ளவேண்டும். அதாவது வெளிப்பாட்டின் ஏற்றத் தாழ்வு, வேலை ஏற்றத் தாழ்விற்குக் குறைந்த விகிதா சாரத்தில் அமையும். இதனைப் பேரினப் பொருளியல் கோட்பாட்டினர் பலர் கொண்டனர். ஆனால், இவ்வெடுகோள்கள், உண்மை விவரங்களுடன் முன்னுக்குப்பின் முரணானவை.

பொருளாதார மாதிரி செய்யும் முன்னறிவிப்புகளை நேரடியாகச் சோதனை செய்யுமளவிற்கு அமைந்துள்ள விவரங்கள் நமக்குக் கிடைப்பதில்லை என்பதை உறுதியாகக் கூறலாம். ஏனெனில், நாம் நாட்டம் கொள்ளும் தொடர்பு கால வரம்பற்றது; ஆனால், விவரங்கள் ஒரு குறிப்பிட்ட கால அளவில் செய்யப்பட்ட நோக்கு களாகும். எனவே, விவரங்கள் செம்மையான முறையில் நமக்குக் கிட்டுவதில்லை என்பது திண்ணம். ஆயினும், நமக்குக் கிட்டிய விவரங்களைக் கூர்மையாக ஆராயுமிடத்து, காலவரம்பற்ற தொடர்பு மேற்கூறிய விளக்கத்திற்குப் பொருந்தியவாறு அமையும் என முடிவு கூறல் மிகவும் கடினம். மேற்கூறிய தகவல்கள் இதற்குப் புறம்பான முடிவை உணர்த்துமாகில், அது அதிகப்படி உழைப்பை வாடகை கொடுத்துப் பெற்றால், உழைப்பின் சராசரி ஆக்கம் மாறிலியாகவும் அல்லது உணரக்கூடிய அளவில் வளரும் தன்மையது ஆகும் என்பது, உழைப்பாளி ஒரு பொறிவழித் தொழிலில் உழைப்பு நேரத்தில் உற்பத்தி செய்யக்கூடிய ஆக்கத்தையும், பொறிவழித் தொழிலில் உற்பத்தி செய்த பண்டங்களையும் ஒப்பிட்டு உழைப்பு உள்ளீடு, பண்ட வெளிப்பாடு இவ்விரண்டிற்குமுள்ள தொடர்பை வெளியிட முடியும். இவ் வெளிய புள்ளியியல் சோதனையை ஐக்கிய அரசுகள் பொருளாதார அமைப்பு ஆண்டு வருகிறது. புள்ளியியல் மயமான மாறிகளின் தொடர்புச் சமன்பாட்டை (Regrssion Equation) 1951-56 கால அளவிற்கு ஐக்கிய அரசுகள் அமைத்தது. இத் தொடர்புச் சமன் பாடு, உழைப்பின் சராசரி ஆக்கம் (நோக்கப்பட்ட வீச்சு மாறு பாடுகளுள்) மாறிலியாக உள்ளது என்பதை உணர்த்தியது. வெளிப்பாடு, உழைப்பு உள்ளீட்டின் விகிதாசாரமாக அமைந் துள்ளது என்பதையும் உணர்த்தியது. இதற்கான மற்றொரு

சோதனையையும் ஐக்கிய அரசுகள் ஆண்டன. அது காலாண்டில் ஐக்கிய அரசுகளின் மொத்த வேலை, மொத்த உண்மை நாட்டின் ஆக்கம் ஆகியவைகளின் தொடர்பை விளக்கும். இதற்கான மாறிகளின் தொடர்புச் சமன்பாட்டை 1947–1957 கால அளவிற்கு அமைத்தது. இதுவும் வேலை அதிகரிக்க உழைப்பின் சராசரி ஆக்கம் மாறிலியானது என்பதையே உணர்த்திற்று.[1]

[1]குறுங்காலத்திற்கான தகவல்களைக் குறிக்குமிடத்து, தொழில் நுட்ப ஆய்வு முன்னேற்றங்களின் விளைவுகளையும், ஒவ்வொரு வேலையாளுக்கான உயர்ந்து செல்முதலையும், மேல் நோக்கிச் செல்லும் போக்காக உணர்த்துதல் சிறந்தது. பின்னர் இப் போக்கைத் தனிப்படுத்தி நாம் நாட்டம் கொண்ட குறுங்காலத் தொடர்பினை வெளிப்படுத்தலாம். அதாவது வேலை, வெளிப்பாடு ஆகியவைகளின் தராதர நெளிவுகளை உணர்த்தலாம். எனவே, நமக்குக் கிடைத்த விவரங்களை (data) ஒரு பெருக்கி மாறியாகப் பொருத்தலாம். அது கீழ்க்காணுமாறு அமையும்.

$$O = a + bN + cT$$

நமது முதல் சோதனைக்கு 'O' என்பது பொறிவழித் தொழில்களின் ஐக்கிய நிசர்வ் குறியீடு (இது பருவ காலங்களுக்கான மாற்றங்களுக்குச் சரி செய்யப்படாமல் உள்ளது; N என்பது பொறி வழித்தொழில் நிறுவனங்களில் உள்ள உற்பத்தி வேலையாளர்களின் எண்ணிக்கை. இது சராசரி வாராந்தர மணிகளால் பெருக்கப்படுகிறது. (உழைப்புப் புள்ளியியல் கழக வெளியீடுகளினால்),

T என்பது காலத்தைக் (time) குறிக்கிறது. இதனை ஒரு குறிப்பிட்ட காலத்தின் மையத்தால் பெருக்கப்படுகிறது. (அதாவது சனவரி 1, 1954=O என்ற அளவு கொண்டு). எல்லா விவரங்களும் மாதாந்தர விவரங்களாகும் a, b, c ஆகிய கெழுக்கள் (Co-efficients) புள்ளி இயல் விவரங்களுடன் தக்க முறையில் 'புகுத்த' தேவைப்படும் மதிப்புகளை இவை பெறுகின்றன. [மீதி மாறுபாட்டின் (Residual Variation) சராசரித் தற்பெருக்கம் (mean square) குறைந்த அளவைக் கொண்டதாக வேண்டும் என்ற குறிக்கோள் கொண்டு] அதற்கான மாறிகளின் தொடர் போக்கு (Regression)

$$O = \cdot 885 + \cdot 246\,N + \cdot 4064\,T$$

[இதன் உடன் தொடர்புக் கெழு (Co-efficient of Correlation) ·950; தரப் பிழைகள் (standard errors): மாறிலி வீதம் (term) 8·63; வேலைக்கெழு (employment Co-efficient) ·0054; போக்குக் கெழு (trend co-efficient ·0181].

பொறிவழித் தொழில் வெளிப்பாடு. இந்தக்கால அளவில் ஒரு மாதக் குறியீட்டுப் புள்ளி வீதத்தில் தோராயமாக 4/10 சராசரி அளவு உயர்ந்தது என்பதை இறுதி அல்லது போக்கு வீதம் வெளிப்படுத்துகிறது. (தோராயமாக ஆண்டுக்கு 3·5 சத வீதம் உயர்ந்தது). இவைகள் வேலை நேரத்திற்குத் தனிப்பட்ட முறையில் உயர்ந்தது. இவை முதல் ஆக்கம் (capital formation) தொழில் நுட்ப ஆய்வு முன்னேற்றங்களின் விளைவுகளாகும். வேலைக்கெழுவீதம் (·2464) என்பது சராசரியில் மிலியன் மணி வேலை நேர அளவில், வெளிப்பாட்டுக் குறியீடு கால் புள்ளி அளவு உயர்ந்தது என்பதை வெளிப்படுத்துகிறது. மாறிலியான வீதம் எல்லா வகையிலும் சுன்னம்(O) என்ற மதிப்பைப் பெற்றுள்ளது. உற்பத்தி சார்புத் தொடர்பு மூலத்தின் (origin) வழியாகச் செல்கிறது என்பது இதன் பொருள். வெளிப்பாடு உழைப்பு உள்ளீட்டின் விகிதாசாரத்தில் அமைந்துள்ளது.

இரண்டாவது புள்ளியியல் பகுப்பாய்வு மொத்தத் தன்மையானது. N என்பதற்கு மொத்த வேலை என்பது பொருள்; அதாவது மிலியன் கணக்கில் அமைந்தது. [மக்கள் தொகுதிக் கணக்கெடுப்புக் கழகம் (Bureau of Census) அளவிட்டது; ஆனால், வேலை நேர அளவு கொண்டு திருத்தப்படாதது]. 'O' என்பது உண்மை நாட்டு ஆக்கம் (GNP) 1954 டாலர்கள் கொண்டு அளவிடப்பட்டு மிலியன்களால் குறிப்பிடப்பட்டது (இதனை வணிகத்துறை அளவிட்டது). விவரங்களை எல்லாம் காலாண்டு விவரங்கள்; 1947 தொடங்கி 1957 முடிய உள்ள கால அளவிற்கு ஆனவை. இவைகள் பருவ காலங்களுக்குத் திருத்தி அமைக்கப் பெற்றவை. இதனால் விளையும் மாறிகளின் தொடர்புச் சமன்பாடு (Regression Equation)

$$O = -38\cdot 9 + \cdot 63N + 2\cdot 27\,T$$ என அமையும்.

விவரங்களுக்கும், தொன்மைவாய்ந்த கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு வெளியிடும் எதிர் நோக்குகள், இவைகளின் முன்னுக்குப்பின் முரணான போக்கை எவ்வாறு விளக்குவது? உழைப்பின் சராசரி ஆக்கம் உயரும் தன்மையது என்பதை உறுதிப்படுத்த உள்ள பலகாரணங்களை எளிதில் பட்டியலிடலாம்.

முதலாவதாக, சில உழைப்பு உள்ளீடுகள் பொது'த் (Overhead) தன்மை வகையைச் சேர்ந்தவைகளாகும். இவைகள் வெளிப்பாட்டின் குறுங்கால மாற்றங்களுடன் இணையாத் தன்மையன. இந்த வகையில் நிர்வாகிகளின் பணிகள், எழுத்தர்களின் பணிகள் இவைகளுடன், தளவாடங்கள் அமைப்புப் பணி, ஆராய்ச்சிப் பணி, ஆகியவைகளும் சேரும். இவைகளின் எண்ணிக்கைக் குறுங்காலத்தில் மாறிலியாக அமைந்துள்ளதாயினும், நெடுங்கால வெளிப்பாடு வளர்ச்சியுடன் விகிதாசார முறைப்படி ஏறுமிறங்கும் தன்மையுடையது. இதனுடன் தொடர்புகொண்ட வேறொரு காரணி, வேலை வழங்குவோர், பல வேலையாட்களை முழுவதும் பயன்படுத்த முடியாவிட்டாலும், தங்களது கூலிப்பட்டியலில் சேர்க்கும் போக்கு ஆகும். இவர்களை வெளிப்பாடு தாற்காலிகமாகக் குறையும் காலங்களில் அமர்த்துவார்கள். இதனை வேலையில்லாத காலங்களில் அவர்கள் வேறு வேலைகளுக்குப் போவதால் தங்கள் நிறுவனத்திற்குக் கிட்டாதவர்களாகி விடுவதைத் தடுக்கக் கையாளுகிறார்கள் இதனால், வெளிப்பாடு உயரும்போது, வாடகை அளிப்பதற்கு, பயிற்சி அளிப்பதற்கு, வேலை கற்றுக்கொடுப்பதற்கான முதலீட்டுச் செலவுகள் உயர்கின்றன. இவ்விரண்டு காரணிகளும், நமது புள்ளி இயல் சோதனை விளைவுகளைப் பெரிதும் பாதிப்பதோடு அல்லாமல், நாட்டின் மொத்த ஆக்க ஒப்பிடுதல்களைப் பெருமளவு பாதிக்கின்றன. 'பொது' (overhead) உழைப்பு, உழைப்புப் 'பதுக்குதல்கள்' ஆகிய இவ்விரண்டும், பொறிவழித் துறைகளைவிட, பொறிவழியற்ற தொழில் நிறுவனங்களுக்குப் பெரும் உறுதுணைகளாக உள்ளன.

உழைப்பின் சராசரி ஆக்கம் உயரும் தன்மையுடையது என்று போக்குக் காட்டப் பயன்படும் மூன்றாவது காரணி, நாட்டின் மொத்த ஆக்கத்தை ஒப்பிடும் பணிக்கு மிகவும் நெருங்கிய

நெகடிவ் மாறிலி வீதம், உழைப்பின் சராசரி ஆக்கம் வேலை உயர்ந்தால், உயரும் என வெளிப்படுத்தினாலும், உழைப்பின் இறுதி நிலை ஆக்கம், அதன் சராசரி ஆக்கத்தைவிடக் குறைந்து அமையாமல், உயர்ந்து அமைந்துள்ளது என வெளிப்படுத்தினாலும், நெகடிவ் மாறிலி என்பது மிகவும் சிறியது; புள்ளியியல் பணிகளுக்கு அது சிறந்தது அல்ல. போக்குக்கான சரிக்கட்டுகள் செய்த பின்னர், வெளிப்பாடு வேலையுடன் விகிதாசாரத் தொடர்பு உடையது எனக்கூறுதல் ஒருவகையில் பொருந்தும். (இதற்கான தரப்பிழைகள் பின்வருமாறு: மாறிலி வீதம் 88.43; வேலைக்கெழு·144, போக்குக் கெழு ·26; உடன் தொடர்பு கெழு ·9998).

தொடர்புடையதாகும். அது நமது மொத்த வேலையைக் கணக்கிடும் அளவை, வேலை வாரத்தில் (work-week) ஏற்படும் மாற்றங்களுக்கான சரிக்கட்டுகள் செய்யப்படாத அளவையாகும். வேலை குறையும்போது, உழைப்பு உள்ளீடு குறைகிறது; ஏனெனில், வேலை நேரமும் குறைகிறது. அதுபோல் வேலை உயரும்போது உழைப்பு உள்ளீடு உயர்கிறது; ஏனெனில், வேலை நேரமும் உயர்கிறது.

மேற்கூறிய காரணிகள் 'பொது' வேலை, மந்தமான காலங்களில் உழைப்புப் பதுக்குதல், ஒவ்வொரு வேலையாள் செய்யும் சராசரி வேலை நேர மாற்றங்கள்—ஆகியவை நமது அளவுகளுடன் மட்டுமே தொடர்புடையன. ஆனால், அவை உழைப்பு உள்ளீடு வெளிப்பாடு இவைகளுக்கிடையே உள்ள 'உண்மை'த் தொடர்பை விளக்கப் பயன்படுவதில்லை. வேலை அதிகமாக, உழைப்பின் சராசரி ஆக்கம் மாறிலியாயும் (அல்லது உயரும் தன்மையாயும்) அமைவதற்கான வேறு பல அடிப்படைக் காரணங்களும் உண்டு.

தொன்மை வாய்ந்த உழைப்பின் குறைந்து செல் விளைவுகள் அதிகமாக எதிர்பார்க்கப்படுகிறது. இது ஏதேனும் ஒரு காரணியின் உள்ளீடு (குறிப்பாக உழைப்பு உள்ளீடு) அதிகமானல் அல்லது குறைந்தால், மற்ற உள்ளீடுகள் (குறிப்பாக முதல் என்பது சிறந்தது) மாறிலிகளானல் நேரிடும் விளைவுகளைக் குறிக்கிறது. ஒரு குறிப்பிட்ட இடத்தில் உள்ள முதற்கருவிப் பொருள்கள் குறுங்காலத்தில் வேலை மாறுமிடத்து மாறிலிகளாய் அமைந்தாலும், பயனுள்ள முதற் கருவிப் பொருள்கள் அவ்வாறு மாறும் தன்மையுடையன அல்ல. முதற் கருவிப் பொருள்களைப் பண்ட உற்பத்திக்காகப் பயன்படுத்துகையில் அவை உழைப்புடன் சேர்ந்து விரிவடையும் அல்லது சுருங்கும் என்று ஒருவகையில் கூறலாம். இந்நூலில் பக்கங்கள் 92-94-ல் சுருக்கிய உற்பத்திக் கோட்பாடு, மிக எளிய தொழில் நுட்ப ஆய்வு எடுகோள்களைப் பயன்படுத்தியது. கொடுக்கப்பட்ட ஓர் அளவுள்ள பண்ணையில் பண்ணை உழைப்பு உள்ளீடு மாற்றங்கள், அல்லது பண்ணை அளவு, உழைப்பு வளம் ஆகியவை மாருமலிருக்க, உரப்பொருள் மாற்றங்கள், போன்றவைகளைப் பயன்படுத்தியது. தொழில்துறை உதாரணங்கள் ஒரு சில வேலைகளில் பயன்படுத்தப்படுகின்றன. உதாரணமாக மாறிலிகளான தறிகள் அமைந்த துணி ஆலையில், தறி கவனிப்போர்களின் எண்ணிக்கை மாற்றங்கள், அல்லது இயந்திரங்களுக்கும், உழைப்பாளிகளுக்கும் உள்ள விகிதம் குறைந்து அமைந்திருப்பது போன்றவை.

ஆயினும், பலதரப்பட்ட உற்பத்திகளுக்குப் பயன்படும் ஒரு சிறந்த அமைப்பும் உண்டு. அது குறுங்கால உழைப்பு உள்ளீடுகளுக்கும், மற்றக் காரணிகளுக்குமிடையே மாறிலியான விகிதாசார அமைப்பாகும். வெளிப்பாடு வீழ்ந்தால், வேலையாட்கள் நீக்கப்படுகிறார்கள்; ஆனால், இயந்திரங்களும் சோம்பல் உறுகின்றன; அவைகளும், வேலை நீக்க விகிதாசாரப்படி அமையும்; ஒவ்வொரு இயந்திரமும், ஒரு குறிப்பிட்ட அளவுள்ள வேலையாட்களே இயங்கும் தன்மையுடையனவாய் அமைக்கப் பெற்றிருப்பதால், அவைகளும் சோம்பியுள்ளன. வெளிப்பாடு மீட்சியுறும்போது வேலையாட்கள் அதிகமாகச் சேர்க்கப்படுகிறார்கள். இதனால் பயனுள்ள மூலக் கருவிப் பொருள்களின் அளவும் விகிதாசாரமாக விரிவடைகிறது. எல்லா உள்ளீடுகளும் ஒரே காலத்தில் விகிதாசாரப்படி உயர்ந்தால், குறைந்து செல் விளைவு ஏற்படுவதில்லை என்பதைத் தொன்மை வாய்ந்த கோட்பாடு ஒப்புக் கொள்கிறது. சில வேலைகளில் அவை வளர்ந்து செல் பரும விளைவுகளாய்க்கூட அமையலாம். ஏனெனில், எல்லா உள்ளீடுகளும் ஒரே சமயத்தில் உயர்வதால், அவை நிறுவனத்திற்கும் பொருளாதார அமைப்புக்கும் வளர்ந்து செல் பரும விளைவுகளை அளிக்கின்றன.

பொருளாதாரத்துறையில் குறிப்பாக உற்பத்திக் கோட்பாட்டில் கடந்த சில ஆண்டுகளாகப் பலத்ததொரு புரட்சி நடந்து வந்தது. எல்லா உள்ளீடுகளும் வசதியுள்ள அல்லது இலாபகரமான முறையில் தன்னிச்சையாக எந்த விகிதத்திலும் மாறும் தன்மையுடையது என்ற பழமை எடுகோளுக்கு உள்ளீடுகளின் விகிதங்கள் மாறிலிகளாக உள்ளன என்ற எடுகோள் பதிலீடு செய்யப்பட்டுள்ளது. 'உள்ளீடு—வெளிப்பாடு பகுப்பாய்வு' (input, output analysis) அல்லது 'செயல்=அல்லது முறைப் பகுப்பாய்வு' (activity or process analysis), அல்லது 'முதலடுக்கு நிகழ்ச்சி முறை' (linear programming) பகுப்பாய்வு போன்ற ஆய்வுகள் இதனை எடுகோளாகக் கொண்டுள்ளன. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட போட்டியிடும் முறைகளில் விடுப்பெடுப்பு உண்டு. ஆனால், முறை ஒன்றைத் தேர்ந்தெடுத்தபின் உள்ளீடுகளை மாறா விகிதத்தில் அமைக்க வேண்டும். ஆனால், பொருளாதாரம் நாட்டமுடைய பொறித் தளவாடங்களின் திறன் (plant capacity) அல்லது 'வளர் விரைவு முடுக்கம்' (acceleration) என்பன போன்ற கருத்துகளுடன் இந்த வலியுறுத்துதல் தொடர்பற்றதல்ல. ஆனால், மேற்கூறிய கருத்துகளை இந் நூலின் பிற்பகுதிகளில் ஆராய்வோம்.

வேலை, வெளிப்பாடு இவ்விரண்டின் குறுங்கால மாற்றங்களின் அனுபவ சாட்சியம், மாறா விகித நோக்கத்துடன் முன்னுக்குப்பின்

முரணாக அமையாதது என்பதை ஒரு வகையில் வெளிப்படுத்து கிறது.

ஆயினும், இதற்குச் சில அபாய அறிவிப்புகளும், தகுதிகளும், உடனடியாகத் தேவைப்படுகின்றன.

முதலாவதாக, முதல், மற்ற மாறும் உள்ளீடுகளின் மாறு விகித அமைப்புக் கொண்டவை என்பது சரியாகத் தோற்றம் அளிக்கும் கருத்து. ஆயினும், அத்தன்மை பொறிவழித் தொழில் நிறுவனங்களின் செய்கைகளுக்கே உரித்தானது. ஆனால், பொறிவழித் தொழில் துறைகளின் வேலை அளவு ஐக்கிய அரசு களிலும்கூட மொத்த வேலையளவில் 26%லிருந்து 28%க்குள் அமைந்துள்ளது. நாட்டு வருமானத்தில் அது 30%லிருந்து 32 சத வீதத்திற்குள் அமைகிறது. பணிகள், வாணிபம், சுரங்க வேலைப்பாடுகள், நிதி, போக்குவரத்து, சாதனங்கள், அரசு, ஆகியவைகளில் உள்ளீடுகளை மாறு விகிதத்தில் அமைத்துப் பயன் படுத்தும் உற்பத்திச் சார்புத் தொடர்புகள் மிகச் சில. ஆயினும், இச் செயல்களின் பெருமளவு ஏன் பல செயல்களில், உழைப்பு என்பது 'பொது' காரணி என்பதைப் பெரிதும் உணர்ந்து வந்தன. கொட்டகைகளில் வரும் மக்கள் தொகை பெருகினாலும், குறைந்த அளவு அல்லது ஓர் அளவிற்கும் வேலை உயராமல் 'வெளிப்பாடு' பெருக வழியுண்டு. எல்லா விதப் பணிகளில், வாணிபத்தில், நிதியில், போக்குவரத்தில், உள்ள வேலையாளர்களின் எண்ணிக்கை ஒரு பெரிய அளவிற்கு, குறுங்கால வெளிப்பாடு மாற்றங்களைச் சாராமல் தனிப்பட்ட நிலையில் உள்ளது. (இது அரசின் பல பகுதி களில் பணி புரிபவர்களின் எண்ணிக்கைக்கும் பொருந்தும். ஆனால், வெளிப்பாடு என்பதை வழி வழியாக வேலை அளவு கொண்டு கணக்கிடப்பட்டு வருகிறது). உழவுத் தொழிலில் குறுங்கால வெளிப்பாடு மாற்றங்கள் வெகுவாக வானிலையைச் சாருமேயல் லாமல், வேலையளவைச் சார்ந்து நிற்பவையல்ல. அவ்வாறு குறுங் கால வெளிப்பாடு மாற்றங்கள் வெளிப்படையாகக் காணப்படுமே யானால், அவை பழங்காலக் குடும்ப உழவு அமைப்பு என்ற முகமூடி கொண்டு மறைக்கப்படுகிறது. ஓராண்டில் சில நாட்கள் கூடுத லாகவோ அல்லது குறைவாகவோ அல்லது ஒருநாளில் சில மணி நேரங்கள் கூடுதலாகவோ அல்லது குறைவாகவோ பணி புரிந்தால் அவைகள் வேலைப் புள்ளியியல் விவரங்களில் பிரதிபலிக்கமாட்டா.

எனவே, குறுங்காலத்தில் உழைப்புக் குறைந்து செல் விளைவு களை வெளிப்படுத்தும் என்று எல்லாப் பேரினப் பொருளியல் கோட்பாடு பத்தாண்டு காலமாகக் கொண்ட எடுகோளை, வேலை

ஆக்க விவரங்கள் வெளியிடத் தவறின என்பதில் வியப்பில்லே. அதற்குப் பதிலாக, உழைப்பின் சராசரி ஆக்கம் மாறிலியாகவும், அல்லது உயர்ந்து செல் வெளிப்பாட்டுடன் உழைப்பின் சராசரி ஆக்கம் உயர்வதுபோல் காணப்படுகிறது என்ற கருத்து எளிதில் உணரக்கூடிய கருத்தாக அமைந்துள்ளது. குறைந்து செல் இறுதி நிலே விளேவுகள் வேலே உச்சி (peap) நிலேகளில் மட்டும் காணப்படு கின்றன என்ற கருத்தியல்பான, எளிதில் நம்பத்தக்க எடுகோளேச் சோதிக்குமளவிற்கு இவ் விவரங்கள் செம்மைப்படுத்தப்படவில்லே. இந்தக் கருத்தியலான எடுகோள் பொறித்தளவாடங்கள் உச்ச நிலேயில் வேலே செய்கின்றன; அவைகளின் பெருந்திறனுக்கு அப்பாலும் வேலே செய்கின்றன; இதனுல் அடக்க விலேகள் உயர் கின்றன ஆனுல், பல புதுப் பொறித்தளவாடத் திறன்களுக்கான திட்டங்கள் வரையறுக்கப்படுகின்றன என்பவை போன்ற நோக்கு களேச் சார்ந்து அமையும். மிகை நேர வேலேத் (overtime labour) திறன் குறைந்தது என்பதை எவரும் உணர்வார். அத்தகைய உழைப்பை, உழைப்புச்சுருக்கம் பயமுறுத்துகையில், மற்ற நேரங் களில் வேலேக்குத் தகுதியில்லாத உழைப்பாளிகளேக் கூலிக்கு அமர்த்துகிருர்கள் என்பதும் தெரிந்ததே; பல தொழில்கள் ஒதுக் கீடுகளே அல்லது ஒதுக்குத் திறமை (stand by capacity)) ஆகியவை களேத் தம்பால் கொண்டுள்ளன என்பதும்; அவைகளின் பெருமளவு குறை திறனுடைய, அல்லது குறை புதுமையான என்பது (அதனுல் குறைந்த அளவு ஆக்க முடைய) பொறித் தளவாடங்கள் என்பது, சில சமயங்களில் வாணிபப் பணி நிறுவனங்கள்கூடக் கூலிக்கு அதிகப்படி உதவியைத் தேடுகின்றன என்பது, அந் நிறுவனங்களின் அலுவலக அமைப்பு, அலுவலகத்தின் பருமன் ஆகியவைகளே நோக்குமிடத்து அந்த உதவி பெரும்பாலும் குறை திறனுடை யது என்பது எல்லோருக்கும் தெரிந்த உண்மைகள்.

குறுங்கால வெளிப்பாடு மாற்றங்களின் முழுப் பரப்பினுள், வெளிப்பாடு, உழைப்புடன் விகிதாசார அளவில் அல்லது அதற்கும் மேற்பட்ட அளவில் விரிவடையும் தன்மையுடையது. ஆயினும் ஏதேனும் ஒரு குறிப்பிட்ட நிலேயில் (நமது அனுபவ பரப்பிற்குள்) அது குறைந்து செல் விளேவினே அளிக்கக்கூடும் என்று எதிர் பார்த்தல் இயற்கை.

## பின்வரும் அதிகாரங்களின் எடுகோள்கள்
## (Assumptions of subsequent Chapters)

மொத்த வேலே விரிவடையுமிடத்து, உழைப்பின் சராசரி (இறுதி நிலே) ஆக்கம் குறையும் தன்மையது, என்ற தொன்மை

வாய்ந்த எடுகோளையே பின்வரும் அதிகாரங்களில் ஆள்கிறோம் என்பதை வாசகர்கள் உணர்வார்கள்.

தொன்மை வாய்ந்த எடுகோளைத் தொடர்ந்து ஆள்வதற்கான காரணங்கள் பல உள. முதலாவதாக கிளாசிகல் எழுத்தாளர் களும், கீன்சும் இவ்வெடுகோள்களையே ஆண்டுவந்தனர்; அவர்க ளிடையே கருத்து வேறுபாடில்லாமல் இருக்க இவ்வெடுகோள் பெரிதும் பயன்பட்டது. கிளாசிகல் ஆசிரியர்களின் பகுப்பாய்வை பற்றிய கீன்சின் குறைகூற்றுகளை (Criticisms) விவாதிக்கையில், அவ் விரு வாதங்களை முக்கியமான பிரச்சினையல்லாத ஒரு விவரத்தைத் திருத்தியமைக்காமலும், திருப்பிக் கூறுமலும் அறிந்தால், அதனுல் ஏற்படும் குழப்பத்தைத் தவிர்க்க முடிகிறது. இரண்டாவதாக, மாறிலியான விளைவுகள் என்பதைவிடக் குறைந்து செல் விளைவு என்ற எடுகோளை ஆளுகையில் விளைவின் சுருக்கும் மிதமானதாக இருக்கும் வரையில் அது விளைவுகளைப் பெருமளவிற்குப் பாதிப்ப தில்லை. மாறிலியான சராசரி (இறுதி நிலை) உழைப்பு ஆக்கத்தை எடுகோளாகக் கொள்ள விரும்பும் வாசகர்கள், அவ்வெடு கோளுக்கு ஏற்ற திருத்தங்களைத் தாமே அளித்துத் தங்கள் வாதத்தைச் செம்மைப்படுத்தவேண்டும். இறுதியாக, எடுகோளை நாம் ஆளுவதற்கு ஒரு சிறந்த காரணமும் உண்டு. மிக உயர்ந்த வேலை வெளிப்பாடு மட்டங்களில், இவ்வெடுகோள் முன்பு குறிப்பிட்ட காரணங்களால், இவ்வெடுகோள் ஒன்றே சிறந்த எடுகோளாக உள்ளது என்பது இந் நூலாசிரியரின் கருத்து.

ஆக்கக் குறைப்புப் பெருமளவாக இல்லாமல் இருந்தால், குறைந்து செல் விளைவு எடுகோள், பயன்களைப் பெருமளவிற்குப் பாதிக்காது என்று முன்பத்தியில் கூறிறேம். ஆனுல், அவ்வெடு கோள், பயன்களைப் பெருமளவு பாதிக்கும் திறமையுடையது என்பது ஆசிரியரின் கருத்து. மிக உயர்ந்த கூட்டு முறையை நாம் சிறிது தளர்த்திறேமேயானுல், குறைந்து செல் விளைவு என்ற தொன்மைவாய்ந்த எடுகோள் பயன்களைப் பெருமளவு பாதிக் கிறது. இது பின்வரும் 20-ஆம் அதிகாரத்தின் முக்கியக் கருத் தாகும்.

'மிதமான' (moderate) 'மிகுதியான' (considerable) குறைந்து செல் விளைவு என்ற எதிரி நிலைத் தொடர்கள் விளக்க மற்றவைகள். ஒருகால் விளக்கப்படம் 4–4 அவைகளை நன்கு விளக்கும் போலும். படத்தின் 'A' என்ற பிரிவில்) தனது மாறும் தன்மையதை (variable) உயர்த்துகையில், குறைந்து செல் விளைவைப் பெறும் ஒரு நிறுவனத்தின் குறுங்கால அளிப்பு வளை

கோட்டைக் (இறுதி நிலைச் செலவு) குறிக்கிறது. தொன்மை வாய்ந்த முறையை ஒட்டி, இறுதி நிலைச் செலவு முதற்கண் மிதமாக உயர்ந்து பின்னர் வெளிப்பாடு உயர, அதுவும் பெருமளவிற்கு உயர்கிறது என்ற எடுகோளைக் கொண்டுள்ளோம். அந்தக்




படம் 4.4.

குறிப்பிட்ட நிறுவனத்தின் அளிப்பு வளைகோட்டின் படிவம் படத்தில் காட்டியவாறு அமைந்தால், இந்தப் பொருளாதார அமைப்பின் மொத்த அளிப்புக்கோடும் இதே படிவத்தைப் பெறும் என்று நாம் நினைக்கலாம். குறுங்கால மாறும் தன்மையுடைய உள்ளீடுகளை உயர்த்தினால்-அதாவது முதலும் மற்ற இயற்கை வளங்களும் மாறாமல், உழைப்பு என்ற உள்ளிடுகையை மட்டும் மாற்றினால், வெளிப்பாடு உயரும். ஆனால், உழைப்பின் திறன் குறையும் என்பதை (அதாவது செலவுகள் உயரும் என்பதை) இப் படிவம் விளக்குகிறது

மொத்த உழைப்பின் அளிப்புக்கு வரம்பு (limits) இல்லாவிட்டால், வெளிப்பாடும் வரம்பில்லாமல் உயரும். அதாவது இந்த வளைகோடு செங்குத்துத் தன்மையதாய் அமையுமேயல்லாமல், செங்குத்தாக இராது. ஏதேனும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் உழைப்பின் இறுதிநிலை ஆக்கம் சுன்னம் (O) என்ற மதிப்பைப் பெறும்-அதாவது அளிப்பு வளைகோடு செங்குத்தாக அமையும் என்ற எடுகோள் பொருள் அமைந்ததாகும். ஆனால், உண்மையில் கிடைக்கப்பெறும் மொத்த உழைப்பின் அளிப்பிற்கு வரம்புண்டு. இவ் வரம்பு மொத்த வெளிப்பாட்டினையும் வரம்பிற்குள்ளாக்குகிறது. இவ்விடம் மொத்த அளிப்புச் சார்புத் தொடர்பு செங்குத்தாக மாறுமிடத்திற்குக் கீழ்ப்பட்ட இடத்தில் அமைகிறது. ஆயினும், இம் முடிவு (குறிப்பாகப் பிரச்சினைகளைப் பெருமளவில் ஆராயுமிடத்து) பெரிய வேறுபாட்டை உண்டாக்குகிறது. குறுங்கால மொத்த அளிப்புச் சார்புத் தொடர்பு தட்டையாக (flat) உள்ள வரம்பா?–உதாரணமாக FN என்று படத்தில் காணும்

இடமா?-அல்லது அது உண்மையில் செங்குத்துத் தன்மையுடைய வரம்பா?-உதாரணமாக FN' என்று படத்தில் காணும் வரம்பா? என்று ஆராயுமிடத்து இம் முடிவு பெரிய வேறுபாட்டை உண் டாக்குகிறது.

FN' என்ற இடத்தைவிட, FN என்ற இடத்தில் காணும் வேலை நிறைவு இடத்தில் வெளிப்பாடு வரம்பு உள்ளது என்ற எடுகோளை ஆளுவோம். பின்னர் நாம் நாட்டம் கொள்ளும் வெளிப்பாடு மாற்றங்களின் வீச்சு, வேலை மட்டம் சிறுமமாக உள்ள மட்டம் MN, வேலை நிறைவு மட்டம் FN ஆகிய இரு இடங் களுக்கிடையே அமையும். இதனால் உழைப்புத்திறன் மாற்றங்கள் மிதமானவைகளாக அமையும்.

படத்தின் B பகுதி தனது மாறும் தன்மையதை உயர்த்து கையில், மாறாப் பரும விளைவுகளை அளிக்கும் நிறுவனத்தைக் குறிக்கிறது. இதில் சில காரணிகள் மாறும் உள்ளீடுகளாய் அமைந்து, முதல் பொறித் தளவாடங்கள் மாறாத் தன்மை யுடையனவாய் அமைந்துள்ளது. இது நாம் முன்பே விவாதித்த ஒரு மாற்று எடுகோள். படத்தின் A பகுதியில் காணும் விவரங்க ளுடன் இந்த எடுகோள் பொருந்தி அமைந்துள்ளது. ஆயினும், உண்மையில் வேலை நிறைவு மட்டம் ஒவ்வொரு படத்தில் (FN' என்று அமையாமல்) FN என்று அமையும் வரை, இவ்விரண்டு கருத்துகளின் வேறுபாடு குறிப்பிடத் தக்கதல்ல. ஆயினும் B பகுதி படம் முறையானது என்று கொண்டால், உழைப்பு அளிப்பின் வரம்பு FN' என்று கொண்டால் இது கோட்பாட்டி னுக்கு மாற்றத்தைத் தரும் என்பது தெளிவு. ஆனால், A பகுதியில் காணும் FN' என்ற நிலை இதுபோன்ற பிரச்சினைகளுக்கும் உள்ளாகும் என்று சொல்வதற்கில்லை.

சில குறிப்பிட்ட பொருளாதார அமைப்புகளுக்கு, அல்லது சில சரித்திர நிகழ்ச்சிகளுக்கு மட்டுமே, தொடர்புடைய வேலை நிறைவு வரம்புகள் FN' என்பதைப்போல் அமையலாம். அத் தகைய நிலைகளை 19-ஆம் அதிகாரத்தில் காண்போம். இப் போதைக்கு A பகுதியில் காணும் படிவம் (அதாவது மிதமான குறைந்து செல் விளைவு) FN என்ற வரம்புடைய நிறை வேலை நிறைவு வரம்புடன் தொடர்புடைய படிவம் என எடுகோளாகக் கூறுதல் ஏற்புடையது. வரம்பு FN' என்ற எடுகோளைவிட இவ் வெடுகோள் நாம் முன்பு ஆராய்ந்த விவரங்களுடன் பொருந்தி அமைந்துள்ளது.

# 5. சேயின் விதியும் பண அளவுக் கோட்பாடும்
## (Say's Law and the Quantity Theory of Money)

### முற்றொருமைகள் கோட்பாடுகள்-இவைகளின் எதிர்நிலை
### (Identities Versus Theories)

அதிகாரங்கள் இரண்டு மூன்று ஆகியவை கணக்கீட்டுத் தொடர்புகளை விளக்கின. நான்காம் அதிகாரத்தின் பிற்பகுதி தொழில் நுட்ப ஆய்வுப் பேரினத் தொடர்பினை ஆராய்ந்தது. குறிப்பாக உள்ளிடுகை (input) உற்பத்தி (output) இவைகளின் தொடர்புகளை ஆராய்ந்தது. இப்பொழுது உறுதியான பேரியல் பொருளாதாரத் தொடர்புகள் சிலவற்றை ஆராய இருக்கிறோம். அதற்குமுன் ஒரு சிறிய ஆராய்ச்சி முறைக் (Methodological) குறிப்பை ஆராய்தல் நலன்.

மொத்தச் செலவு, மொத்த உற்பத்தியின் பண மதிப்பீடு, (எளிய எடுகோள்கள் அடங்கிய) மொத்த வருமானங்கள் ஆகியவற்றின் சம நிகர்வினை இரண்டாம் அதிகாரத்தில் கண்டோம். இது அவற்றின் விளக்கம் பற்றிய முற்றொருமையன்றி வேறில்லை. ஆனல், அவற்றின் காரணகாரியத் தொடர்பைப் பற்றி இம் முற்றொருமை ஒன்றையும் வெளிப்படுத்தவில்லை. அதனைக்கொண்டு, உற்பத்திச் செலவை நிர்ணயிக்கிறது என்றும், அல்லது, செலவு உற்பத்தியை நிர்ணயிக்கிறது என்றும் சொல்ல முடியாது. வாங்கிய பொருள்களின் அளவும், விற்ற பொருள்களின் அளவும் முற்றொருமைத் தன்மை வாய்ந்தவை என்பதைமட்டும் இது வெளிப்படுத்துகிறது. சேமிப்பு, முதலீடு ஆகியவைகளின் முற்றொருமையும் இப் பிரிவைச் சாரும் ஆயினும் அது வாங்கிய பொருள்கள் விற்ற பொருள்கள் இவ்விரண்டின் முற்றொருமையைவிட ஓர் அளவு தனிப்பட்ட முற்றொருமையாகும்.

கணக்கீட்டுத் தொடர்புகள், காரண காரியத் தொடர்புகளைப் பற்றி ஒன்றும் கூருதிருப்பினும் இம்மாறும் தன்மையுள்ளவை களின் நேர்முக அல்லது மறைமுக, காரணகாரியத் தொடர்பைப் பற்றிய சில அடிக்கோள்களை வழங்கலாம். இதற்கு, கணக்கீட்டுத் துறையிலிருந்து விலகி, பொருளியல்துறைக்குச் செல்லவேண்டும். இவ்விரு முறைகளின் வேறுபாடுகள் நன்கு புலனுக, மொத்த உற்பத்தி, மொத்தச் செலவு என்ற கூட்டுத் தொகைகளை விடுத்து, அவைகளை ஒத்த விற்பனைத் தனிப்பண்டத்தின் வாங்குதல் போன்ற சிற்றினப் பொருளியல் கருத்துகளை மேற்கொள்ளல் வேண்டும். ஒவ்வொரு பொருளை ஒரு குறிப்பிட்ட காலத்தில் வாங்கும், அல்லது விற்கும் அளவுகள் இவ்விரண்டும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் முற்ருெருமையாக இருப்பதை நாம் உணர்கிருேம். (அல்லது ஒரு குறிப்பிட்ட காலத்தில் அதனை வாங்கும் அல்லது விற்கும் விதம்) மதிப்பளவில், அல்லாமல் அமைப்பளவிலும் (Physical) முற்ருெருமைகள்-ஒரு பொருளின் ஒவ்வொரு வாங்குதலும் அதன் ஒவ்வொரு விற்பனையும்கூட என்ற உண்மையை இக் கருத்துப் பிரதிபலிக்கிறது. ஒரு பொருளின் விற்ற அளவை அளிப்பு (supply) எனக் கூறி, அதனை 'S' என்ற குறியிட்டிுல் குறிக்கிருேம். என்றும், அதுபோல் ஒரு பொருளின் வாங்கும் அளவை தேவை (demand) எனக் கூறி, அதனை 'D' என்ற குறியிட்டுக் குறிப்பிடு கிருேம் என்றும் வைத்துக்கொள்வோம். பிறகு அளிப்பு, தேவை இவ்விரண்டிற்கும் ஒரு தொடர்புண்டு; அது, அளிப்பு, தேவை இவ்விரண்டும் சமம் என்பது. $S \equiv D$. ஆனுல், அளிப்பு, தேவையை நிர்ணயிக்கிறதா, அல்லது, தேவை அளிப்பை நிர்ணயிக்கிறதா, அல்லது, இரண்டுமே வேறு ஒன்ருல் நிர்ணயிக்கப்படுகிறதா என்பவைகளைப் பற்றி இம் முற்ருெருமை ஒன்றும் கூறவில்லை. மேலும், இது பண்டங்களின் தன்மையைப் பற்றி அல்லது அவை களின் அங்காடியின் தன்மையைப்பற்றி ஒரு தகவலையும் வெளியிட வில்லை; இருப்பினும் எல்லா அங்காடிகளுக்கும், எல்லாப் பண்டங் களுக்கும் பொதுவாக உள்ள தன்மைகளை மட்டும் குறிக்கிறது.

ஆயினும், அங்காடி பற்றிய ஒரு கோட்பாடும் உண்டு என நாம் அறிவோம். அது வாங்குபவர், விற்பவர் இவர்களுடைய நடத்தையைப் பற்றிச் சில அடிக்கோள்களை வழங்குகிறது. உதாரணமாக, பண்டங்களின் அளிப்பு, தேவை, விலை என்ற மூன்றும் மாறும் தன்மையுடன், நேர் விகிதத் தொடர்புடையது, என்றும் அதுபோல் பண்டங்களின் தேவை, அளிப்பு, விலை என்ற மூன்றும் மாறும் தன்மையுடையன எதிர் விகிதத் தொடர்புடையது என்றும் கூறுகிறது. இவை மக்களின் நடத்தைகளை உள்ளவாறு, கருதுகோள் (hypothesis) கலப்படமில்லாமல் எடுத்துக் காட்டுகின்

றன. ஆயினும், நடைமுறையில், அளிப்புக் கருதுகோள், உள்ளீடுகள் வெளியீடுகள் ஆகியவைகளுக்குத் தேவைப்படும் தொழில் நுட்ப ஆராய்ச்சி எடுகோள், உற்பத்தி ஒழுங்கமைப்புக்குத் தேவைப் படும் எடுகோள் (அதாவது தனி நிறுவனங்கள் அல்லது பொது நிறுவனங்களின் நடவடிக்கைகளைப் பற்றியவை) நிறுவனங்கள். உற்பத்தியை மேற்கொள்ளத் தூண்டிய கருதுகோள் (அதாவது அதிக இலாபம் சம்பாதிப்பதற்கான கருதுகோள்) பற்றிய எடுகோள் போன்றவைகளால் ஆனது. அதுபோல் தேவைத் தொடர்பு, தொழில் நுட்ப ஆராய்ச்சி, பயன் தரும் பண்டங்கள் பலவற்றைப் பற்றிய உளவியல் தொடர்புப் பதிலீடுகள்; வரு மானத்தின் ஒரு பகுதி விலைகளுடன் தொடர்பற்றது என்ற பல கருதுகோள்களைக் கொண்ட தொடர்பாகும்.

தேவை, அளிப்பு இவைகளுக்கான இந்தக் கருதுகோளை, அங்காடி விலையை நிர்ணயிப்பதற்கும், வாங்கிய விற்ற பொருள் களின் அளவுகளை நிர்ணயிப்பதற்கும், பயன்படுத்துகிறோம். அங்கா டியில் பொருளை வாங்குபவர்கள், விற்பவர்கள் ஆகியவர்களுடைய நடத்தையைப் பற்றிய எடுகோள்-விலை சரிக்கட்டுதலால், அங் காடியில் தேவை அளிப்பை மிஞ்சாமலும் அளிப்புத்தேவையை மிஞ்சாமலும் இருக்குமாறு செய்யும் நடவடிக்கைகள்—இவைகளுக் கான எடுகாள்களைச் சேர்த்துத் தேவை அளிப்புக் கருதுகோளைப் பயன்படுத்துகிறோம்.

இவ்வதிகப்படியான எடுகோள்கள் சிக்கலானவை. ஏனெனில், விற்பவர் (அல்லது வாங்குபவர்) கூறும் விலைகள் எத்தன்மையன, எவ்வளவு விரைவாக அவை கூறப்படுகின்றன, எந்தக் கால அளவில் (frequency) கூறப்படுகின்றன, விற்பனையாளர்களின் கையிருப்புச் சரக்குகள் (inventories) பற்றிய கொள்கை எத் தன்மையன ஆகிய இவைகளைச் சார்ந்தவையாகும். மேலும் அங்காடியில் என்ன நடக்கின்றன என்பதைப்பற்றி வாங்குபவர் விற்பவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்ற எடுகோளும் மேற் கூறியவற்றைச் சிக்கலாக்குகிறது.

இந்தக் கோட்பாடுகள் அனைத்தையும் கீழ்க்காணும் விளக்கப் படத்தின் வாயிலாகச் சுருக்கலாம். (நமது சுருக்கங்கள் பெரும் பாலும் அவ்வளவு தெளிவானவைகள் அல்ல, என்று கொண் டாலும்) படம் 5-1-ல் அளிப்பு, தேவை இவைகளின் சார்புத் தொடர்புகள் ஒரு குறித்த இடத்தில் ஒன்றை ஒன்று வெட்டு கின்றன. இவ்விடம் விலை, அளவு இரண்டையும் 'நிர்ணயிக்கிறது' (determines). வாங்கிய பொருள், விற்ற பொருள் இவைகளைப்பற்றி இங்கு தந்துள்ள விளக்கம், முன்பு குறிப்பிட்ட விளக்கம் பற்றிய முற்றொருமையினின்று வேறுபட்டதாகும் என்பது இப்பொழுது




படம் 5.1.

தெளிவாகும். இங்கு ஒரு பொருளின் விற்ற அளவு அதன் விலை யுடன் விலை சார்புடையது என்பதை..............

$$\bar{S} = S(P)$$

என்ற சமன்பாடு குறிக்கிறது. அதுபோல் அப்பொருளின் வாங்கிய அளவு அதன் விலையுடன் தொடர்புடையது என்பதை

$$\bar{D} = D(P)$$

என்ற சமன்பாடு குறிக்கிறது. சமநிலைத் தன்மையை (equilibrium condition)

$$\bar{S} = \bar{D}$$

என்ற சமன்பாடு விளக்குகிறது. மேலும் அது இச் சமன்பாடு விளக்கப் படத்தில் வெட்டும் இடத்தைக் குறிக்கிறது. $S \equiv D$ என்று முற்றொருமை குறியிட்டு விளக்கவில்லை என்பதைக் கவனிக்கவும்.

S+D ஆகிய குறிகளுக்கு இச் சமன்பாட்டில் அமைந்த பொருளும், அவை முற்றொருமையுடையன வென்று நாம் கண்ட சமன்பாட்டில் அமைந்த பொருளும் சற்றே வேறனவை. எனவே, இவ்விரண்டும் மாறுபட்ட விளக்கங்கள் என்பது தெளிவு. அதனால் தான் அதே குறிக்கொண்டு இரண்டையும் இங்குக் குறிக்கவில்லை. $\bar{S}$ என்ற குறி விற்பவர் வழங்க விரும்பும் அளவையும் வாய்ப்புக் (chance) கிடைத்தால் அதுபோல அதனை விற்க முற்படுவார் என்பதையும் குறிக்கிறது. D என்ற குறி வாங்குபவர் வாங்க விருப்பப்படும் அளவையும் அவர்களால் முடிந்தால் அதனை வாங்குவார் என்பதையும் குறிக்கிறது. விலையுடன் தொடர்புடைய தால், இவைகளின் அளவுகள் மாறும்; ஏன் உண்மையில் அவைகள்

மாறுகின்றன. எல்லா விலைகளிலும் வாங்கிய அல்லது விற்ற பொருள்களின் அளவுகள் உண்மையில் சமமாக இருந்தாலும், விலையுடன் தொடர்புடையதால் அவைகளின் அளவுகள் மாறும் தன்மையன. சமநிலை நிலையில் (condition of equilibrium) உள்ளது என்பதை அதாவது $\bar{S}$ என்பது $\bar{D}$ என்பதற்குச் சமம் என்பதை, படத்தில் காட்டியவாறு விலை $P_0$ என்ற நிலையில் இல்லாமல் வேறு நிலையில் இருந்தால், வாங்குபவர் விற்பவர் (அல்லது இருவரும்) ஏமாற்றம் அடைகிறார்கள் என்பது பொருள்—அதாவது வாங்குபவர் விற்பவர்கள் அந்த விலைக்கு வாங்க விரும்புவதைவிட, அதிகமாகவோ அல்லது குறைவாகவோ வாங்குகிறார்கள் அல்லது விற்கிறார்கள் என்பது பொருள். இந்த ஏமாற்றத்தால், உண்மையில் செய்வதைவிட வேறு பல செய்கைகளில் ஈடுபடுவார்; அதாவது $P_0$ என்ற விலை நிலை அல்லாத வேறு விலை நிலை சமநிலைத்தன்மையை உணர்த்தாது எனக் கூறலாம். S என்பது Dக்குச் சமம்; $\bar{S}$ என்பது $\bar{D}$க்குச் சமமாக இல்லாமல் இருந்தால் $\bar{S}$ என்பது Sக்குச் சமம் இல்லை என்றும், $\bar{D}$ என்பது Dக்குச் சமம் இல்லை என்றும் பொருள்படும்.[1] வாங்குபவர் விற்பவர் இருவரும் மனநிறைவு பெறவேண்டுமென்பது சமநிலைக்குத் (equilibrium) தேவைப்படுகிறது. அதாவது.

$$\bar{S} = S; \bar{D} = D$$

அல்லது $S \equiv D$ என்பதால்; $\bar{S} = \bar{D}$ என்ற நிலை சமநிலைக்குத் தேவை.

நிலையான சமநிலை (எப்பொழுதும்போல்) உள்ளது எனக் கொண்டால், நாம் சமநிலையில் மட்டும் நாட்டமுடையவர்கள் ஆகிறோம். $\bar{S}$க்கும் Sக்கும்; $\bar{D}$க்கும் Dக்கும் உள்ள வேறுபாடுகளை ஒதுக்கிவிடுகிறோம். தேவை, அளிப்புக்குச் சமமானது அல்லது அது தேவையுடன் முற்றொருமையானது என்ற குழப்பம் நமக்கு ஏற்படாது. (இதனை ஒத்த மற்றொரு பகுப்பாய்வினைச் சற்றுக் கவனிப்போம். சில பொருளியல் வாதிகள் சேமிப்பு முதலீட்டுக்குச் சமம்; அல்லது அது முதலீட்டுடன் முற்றொருமையானது என வாதிக்கின்றார்கள். சேமிப்பும் முதலீடும் சமத்தொடர்புடையது. ஆனால், அது முற்றொருமைத் தொடர்புடையதாக முடியாது என்ற கருத்தியலான நம்பிக்கையில் வாதிடுகிறார்கள்.

[1] விலை நிலை $P_0$ அல்லாமல் வேறு நிலையில் இருக்க முடியுமா என்பது விற்பவர் வாங்குபவர்களிடையே ஏற்படும் எதிருணர்வு வேகத்தைப் (Speed of response) o பற்றிய எடுகோள்களை ஒட்டியிருக்கும். இவ்வெதிர் உணர்வுகள் உடனுக்குடன் நிகழ்பவையல்ல; எனவே, வேறு விலை நிலைகள் உண்மையில் இருக்க முடியாது. உடனுக்குடன் நிகழும் எதிருணர்வு உண்டு எனக் கொண்டாலும், விலை சமநிலையில் எப்பொழுதும் இருக்குர் எனக் கொண்டாலும், $\bar{S}$ $\bar{D}$ இவைகளுக்கிடையே வேறுபாடுகள் உண்டு. $P_0$ என்ற விலையில்லாது வேறு விலை நிலையிலும் வேறுபாடு உண்டு.

சமநிலைக் கருத்தை விளக்குவதற்கும், நிலையியல், (Statics) இயக்கயியல் (Dynamics) இவைகளின் தன்மை, தொடர்பு ஆகியவைகளைத் தெளிவாக்க, இந்த ஒற்றை அங்காடி மாதிரிக்கு மீண்டும் வருவோம். இப்பொழுது ஒரே மாறுதன்மையுடையதின் விளக்கம் பற்றிய, நடத்தை பற்றிய தொடர்புகளுக்கான அடிக் கோள்களை ஒரே சமயத்தில் குறிப்பிடுவோம்.

கூட்டுத் தொகைகளுக்கு மீண்டும் வருவோம். நாட்டுக் கணக்குகள் (National Accounts) முற்றொருமை என்பது மொத்தச் செலவு, மொத்த உற்பத்தி இவ்விரண்டும் முற்றொருமைகள் என்று குறிப்பிடப்படுகிறது. ஆனால், இவைகளுக்கான காரண காரிய கோட்பாட்டினைக் குறிப்பிடவில்லை-ஒன்று மற்றொன்றை நிர்ணயிக் கிறது என்றும் கூறவில்லை. ஆனால், அதே சமயத்தில் இவ்விரண்டு கூட்டு மாறும் தன்மையுள்ளவற்றிற்கு உண்டான எளிய அல்லது சிக்கலான கோட்பாடு வழங்கும் பணியை முழுவதும் புறக்கணிக்க வில்லை. உற்பத்தி, செலவு இவைகளுக்கிடையே ஒரு எளிய தொடர்புண்டு என இது வலியுறுத்துகிறது. அது உற்பத்தி செலவை நிர்ணயிக்கிறது என்பது உற்பத்தி அதிகமானால் அதற் கேற்பச் செலவு அதிகமாகும். (ஆனால், செலவு உற்பத்தியை நிர்ண யிக்கிறது என்ற புதுக்கோட்பாடும் உள்ளது என்பதைப் பார்க்கப் போகிறோம். சேவின் (Say's Law) விதியைவிட உண்மையான தாயினும், இது மிகவும் சுருக்கமான ஒரு விதியாகும்.)

## 'சேவின் விதி'
## (Say's Law)

**'சேவின் விதி'** (Say's Law) என்றதலைப்பின்கீழ் ஆராயப்படும் கருத்துகள், நவீனப் பொருளியல் வாதிகள் தங்களுக்கு முன்வந்த கிளாசிகல் பொருளாதாரக் கருத்தினர் (Classical Economists) ஆராய்ச்சிகளை நல்ல முறையில் மாற்றியமைக்கப் பயன்படும் வசதியுள்ள (Straw man) பரிசோதனைக் கருவியாகப் பயன் பட்டன. கிளாசிகல் பொருளாதாரக் கருத்தினரது கோட்பாடுக் கான மற்றக் கருத்துகளுக்கும் இது பொருந்தும். கிளாசிகல் பொருளாதாரக் கருத்தினர் என்ற சொல் டேவிட் ரிக்கார்டோ (David Ricardo) (1772-1823) முதல் 1930 வரை, பழமைக்கே கட்டுப்பட்டு வந்த ஆங்கிலேய, அமெரிக்க பொருளியல் வாதிகளை உணர்த்துகிறது. இந்தக் கற்பனை அறிஞரின் எல்லாக் கருத்து களும் எனக் கூறப்படுபவைகளைக் கிளாசிகல் பொருளாதாரக் கருத்தினரில் ஒருவரேனும் பின்பற்றவில்லை. பேரினப் பொருளியல் பிரச்சினைகளுக்கான இவரது கருத்துகள், செயற்கைச் சுருக்கங்கள்

என்பதைவிட, எளிதானவைகள்; அவைகள் ஏறத்தாழ உண்மை கள் எனவும் சொல்லலாம். ஆயினும் பேரியல் பொருளியல் தகவல்களுக்கு அவர் தரும் கருத்துகள் உண்மையில் மிக எளி தானவை. இன்று நமக்குத் தொல்லை தரும் பிரச்சினைகளை அவர் ஆராயவில்லை: ஏனெனில், அவர் வாழ்ந்த சமுதாயத்தில், பொரு ளியல் அமைப்பில் இத்தகைய, பிரச்சினைகள் எழவில்லை. அவை களுக்கு அங்கு இடமும் இல்லை. பேரியல் பொருளியல் வினுக் களுக்கு தரும் விடைகள் போதியவைகள். ஆனால், நாம் மிகவும் முதன்மையானவை எனக் கருதும் வினுக்களை அவர்பால் கேட்க வில்லை போலும்.

வரலாறு அளவில், கிளாசிகல் பொருளாதாரக் கருத்தினரது பேரியல் பொருளியல் கோட்பாடுகள், பயனற்றவைகள் ஆயினும், பகுப்பாய்வு அளவில் அவைகள் பெரும் பயன் அளிப்பவைகள். எனவே, கிளாசிகல் கோட்பாட்டினை உருவப்படுத்துவதனால் நாம் நமது கோட்பாடுகளை நல்ல முறையில் ஆராய முடிகிறது;ஏனெனில், நம் கோட்பாடுகளின் பெரும்பகுதி கிளாசிகல் கருத்துகளின் வளர்ச்சிகளும் பெருக்கங்களும் ஆகும்.

கிளாசிகல் பொருளாதாரக் கருத்தினரது கொள்கைகள், ரிகார்டோ (Ricardo) அல்லது மில் (Mill) அல்லது டாசிக் (Taussig) என்பவர்களின் நூல்களில் இடம் பெறுகின்றனவா என்பதைப் பற்றிய ஆராய்ச்சி மாணவர்களுக்குத் தேவையில்லை. இதே ஆசிரி யர்களின் நூல்களில் இன்று பிறந்த கருத்துகளுக்கான முன்னோடி கள் காணப்பட்டனவா என்பதைப்பற்றிய ஆராய்ச்சியும் தேவை யில்லை.

'சேவின் விதி' (Say's Law) (ஜே.பி. சே என்ற பிரான்ஸ் நாட்டுப் பொருளியல் வல்லுநர் 1767–1832 என்பவரின் பெயரைச் சூடியது) என்பதை அளிப்பு, தனக்கானத் தேவையை ஆக்குகிறது '(supply creates its own demand)' என்று சுருக் கலாம். இக் கொள்கை, பண்டமாற்று (barter) அமைப்புக்குப் பொருந்தும் ஆயினும் அத்தகைய நிலைக்கு மட்டும் அது பொருந்தும் எனச் சொல்வதற்கில்லை. சேவின் தத்துவத்தைக் கீழ்க் காணுமாறு நன்கு விளக்கலாம். மக்கள் வேலைக்கென வேலை செய் வதில்லை, (ஏனெனில், எல்லா வேலைகளும் மகிழ்ச்சி தரக்கூடியவை யல்ல) ஆனால், பயன்தரும் மற்றப் பொருள்களையும் வாங்குவதற் காக வேலை செய்கிறார்கள். உழைப்புப் பகுப்பினை (division of labour) மாற்று. ஆகியவைகளை மேற்கொள்ளும் அமைப்பில், ஒருவர் தமக்கு வேண்டிய பொருள்களையும் பணிகளையும் தம்

உழைப்பினுல் நேரடியாகப் (இராபின்சன் குருசோ செய்தது போல்) பெறுவதில்லை; அவரவர் தம்திறனுக்குத் தக்கவாறு பண்டங்களை உற்பத்தி செய்து, தம் தேவைக்கு மிஞ்சிய உபரியை மற்றப் பொருள்களுக்கு மாற்றிப் பெறுகிருர்கள். உற்பத்தி, என்ற ஒரு செயல் மற்றப் பொருள்களுக்கான தேவையை உண்டாக்குவதற்கென மேற்கொள்ளும் செய்கையாகும்; அந்தத் தேவையின் அளவு ஒவ்வொருவரும் உற்பத்தி செய்யும் உபரியின் மதிப்பாகும். எனவே, பொது அமித உற்பத்தி (over production) என்பது எவ்வாறு நிகழும் ? ஒவ்வொருவரின் உற்பத்தி அவரது அளிப்பு ஆகும். இது அவரது மற்ற பொருளின் தேவையாகும்; எனவே, மொத்தத் தேவை என்பது ஒரு விதத்தில் மொத்த அளிப்புக்குச் சமம். ஒவ்வொரு தனியாளுக்கு அதிக ஓய்வு நேரத்தினுல் ஏற்படும் பயன் அவர் வாங்கும் பொருள்களின் பயன்களை மிஞ்சியதானுல் மொத்த உற்பத்தி குறையும். அத்தகைய 'வேலையின்மை'யைத் (unemployment) தாமே தேர்ந்தெடுத்ததாகும்; அது அவரைத்தேடி வரவில்லை.[1]

நாட்டின் ஆக்கம், நாட்டின் வருமானம், மொத்தச் செலவு ஆகிய விளக்கம் பற்றிய முற்றொருமைகளிலிருந்து கோட்பாட்டை வேறுபடுத்த வேண்டிய அவசியம் மீண்டும் ஏற்படுகிறது. வருமானம், உற்பத்தி, அல்லது செலவு இவைகள் எந்த அளவிலிருந்தாலும் மேற்சொன்ன முற்றொருமை பொருந்தும். உற்பத்திப் பெருகினுல் அதற்கேற்ப அது வருவாயையும் செலவையும் அதிகப்படுத்தும் என்பதைச் சேவின் விதி (Say's Law) வலியுறுத்துகிறது. எனவே, வருவாய், ஆக்கம் ஆகியவை எப்பொழுதும் வேலை நிறைவு (full employment) அளவிலே இருக்கும். அந்த அளவைவிட வேலை அளவு குறைவுபட்டால் வளங்கள் பயனற்றுக் கிடக்கின்றன. எனவே, அவைகள் பயன்படுத்தப்படின் பெருகும் அதிக உற்பத்தி (ஆக்கம்) அதற்கேற்ப அதிக வருமானத்தை உண்டாக்கும்; அவ்வருமானம் அதிகப்படி உற்பத்தியான பண்டங்களை வாங்கப் பயன்படும் வேலை நிறைவு மட்டத்திற்குக் குறைந்த மட்டத்தை எவரும் விரும்பமாட்டார். எனவே, வேலை நிறைவு மட்டம் கிட்டும் வரையில் உற்பத்தி பெருகிக்கொண்டே போகும்.

[1] சேவின் விதி விளக்கத்திற்கு எப்.எம். டெய்லர் பொருளியல் நோக்கங்கள் (ஒன்பதாம் பதிப்பு, ரோனுல்ட் 192:) பக்கங்கள் 196.205 காண்க. F. M. Taylor : Principles of economics( 9th edition Ronald 1921) p. p. 196-205 முழு விளக்கத்திற்கு; ஜே. எ. சும்பீட்டர் பொருளியல் பகுப்பாய்வு வரலாறு.) ஆக்ஸ்போர்ட் பல்கலை அச்சகம். 1954) பக்கங்கள் 615.625 காண்க. For a fuller decussion see J.A. Schumpeter : History of Economic Analysis (Qxford University Press 1954 ( 625, p.p. 615-25.

மற்றவர் தேவைக்கு ஏற்றவாறு, சரியான பாதையில் ஆக்க வேலைகளை மக்கள் திருப்புவதில்லை என்பதைச் சேவின் விதி (Say's Law) ஒப்புக் கொள்ளுகிறது. மிதியடிகளைப் பிணைக்கும் கயிறுகளை (shoe lace) உற்பத்தி செய்பவன், குறித்த விலையில் அதன் தேவைக்கு அதிகமாக உற்பத்தி செய்து, அதனை அங்காடியில் விற்க முயலுகிறான். இதனால் அவனிடம் உள்ள உபரிக்கயிறுகள் மற்றப்பொருள்களை உதாரணமாக உருளைக்கிழங்குகளைத், தான் எதிர்பார்த்த அளவைவிடக் குறைந்த அளவு வாங்குகிறது. இதனால் அவன் கயிறுகளை உற்பத்தி செய்யாமல், அதிக ஓய்வு எடுத்துக்கொள்ளுகிறான்; அல்லது கயிறு செய்வதை விடுத்து வேறு பொருள்களை உற்பத்தி செய்ய முனைகிறான். இத்தகைய உற்பத்தி களின் தவறான சரிக்கட்டுதல் தாற்காலிகமானது, அதனை அங்காடி உடனடியாகத் திருத்திவிடும்.

சேவின் விதி (Say's Law) பண்டமாற்று முறையுள்ள அமைப் பிற்குப் பொருந்தியது எனக்கொண்டாலும், அதே விதி பண மாற்று முறை அமைப்புக்கும் ஓரளவு பொருந்தும். கருமிகளைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் பணத்தை அதற்கென சேர்த்து வைக்காமல், பல பொருள்களை வாங்க அதனைப் பயன்படுத்து கிறார்கள். தங்கள் பொருள்களையும் பணிகளையும் பணத்திற்கு விற்று அதனைக் கொண்டு மற்ற பொருள்களை வாங்குகிறார்கள். எனவே, பணம் என்பது மாற்றுவதற்கு வசதியுள்ள ஒரு மத்தியம். அது பண்டமாற்று முறையின் இன்னல்களைத் தவிர்க்கிறது.

பணம் அதற்கெனத் தேவைப்படும் ஒரு பொருள் அல்ல. எனவே, மக்கள் அதனைப் பயனற்ற இருப்புகளாக ஒரு நாளும் வைக்க மாட்டார்கள். இக் கருத்துகள்; இதனுடன் தொடர் புடைய ஆனாலும் தனித்து நிற்கும் பண அளவு கோட்பாடு (Quantity Theory of Money) என்பதின் அடிப்படைக் கருத்துகள். இக் கோட்பாட்டைச் சிறிது கவனிப்போம். பணி மாற்று முறையை மேற்கொள்ளும் அமைப்பும், பண்டமாற்று முறையை ஆளும் அமைப்பும் ஒரு வகையில் செயல் புரிகின்றன; ஏனெனில், மக்கள் பணத்தைப் பயனற்றதாக வைப்பதில்லை என்பது மேற் கூறியவற்றால் தெளிந்த ஒரு கருத்து. இந்த அமைப்பில், மக்கள் தங்களது பண இருப்புகளை அதிகப்படுத்துகிறார்கள் என்றும், ஆகவே, தாங்கள் விற்றுக் கிடைத்த பண அளவைவிடக் குறைந்த அளவு பணம் கொண்டு மற்றப் பொருள்களை வாங்குகிறார்கள் என்றும் வைத்துக்கொள்ளுவோம். விலைகள் வளையும் தன்மை (flexible) உடையனவாய் இருந்தால், அதாவது அளிப்புத் தேவையைவிட மிஞ்சியதானால் விலை உடனே குறையும்தன்மையது.

இந்நிலை அளிப்பு, தேவையைவிட மிஞ்சியது ஆகாது. அதேபோல் தேவை அளிப்பைவிட மிஞ்சியதானால், விலை உடனே கூடும் தன்மையது. தேவை, அளிப்பைவிட மிஞ்சியது ஆகாது. விற்பவர்களிடையே பலத்த போட்டியிருப்பதாலும், அதுபோல் வாங்குபவர்களிடையே கடும் போட்டியிருப்பதாலும், தாம் விற்கும் பொருள்களை மிக உயர்ந்த விலைக்கு விற்க ஆசைப்படுவதாலும், அதுபோல் தாம் வாங்கும் பொருள்களை மிகக் குறைந்த விலைக்கு வாங்க விரும்புவதாலும், விலையின் இந்த வளைந்து கொடுக்கும் தன்மை வெளிப்படுகிறது. ஒவ்வொருவரும் தமக்குக்கிடைத்த வருமானத்தில் பத்தில் ஒரு பங்கைத் தமது ரொக்க இருப்புகளுடன் சேர்த்துவிட்டு, மிஞ்சிய ஒன்பதில் ஒரு பங்கை நுகர்ச்சிக்காகச் செலவிடுகிறார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம்.[1] எல்லாப் பணவிலைகள் (money prices) போட்டியுள்ளவை, அல்லது வளையும் தன்மையுள்ளவை ஆகையால், அவை முன்பைவிட இப்பொழுது பத்தில் ஒரு பங்கு குறைந்தன என்று வைத்துக்கொள்ளுவோம். அவ்வாறு குறைந்தால் முந்தைய உற்பத்தி முழுவதும் விற்கப்படும் ஆனால், அவைகளின் உண்மை விலை (அதாவது மற்றப் பொருள்களின் விலையோடு ஒப்பிடுங்கால்), வாங்குபவர், விற்பவர் இருவருக்கும் மாறாது. ரொக்க இருப்புகளுடன் அதிகம் சேர்க்க மக்கள் விரும்பாத வரை, புதிய 10 சதவீத விலை மட்டத்திற்கு அமைப்புப் பணிபுரிகிறது. அதில் ஒவ்வொருவரும் முன்பைவிட இப்பொழுது 10 சதவீதம் குறைந்த வருமானத்தைப் பெறுகிறார்கள். ஆனால், அந்த வருமானம் முன்பு வாங்கிய பொருள்களையே இப்பொழுதும் வாங்கப் பயன்படுகிறது. அதுபோல் (இப்போதிய 10 சதவீதம் குறைந்த அளவைக் கொண்ட) பொருள்களை வாங்கப் போதுமான வருமானத்தை மற்றவர்களுக்கு வழங்கும்.

ஏதேனும் ஒரு காலத்தில் மக்கள் தம்மிடத்தில் உள்ள பயன்படாத முன் சேர்த்து வைத்த, ரொக்கங்களைச் செலவிட முற்படுவார்கள். ஆனால், விலைகள் 11 சதவீதமாகக் கூடும். இவ் விலையேற்றம் முன்பு இருந்த விலை குறை நிலையில் இருந்ததைவிட இப்பொழுது பணத் தேவை அதன் அளிப்பைவிட மிஞ்சியதாகும்.

1 இருப்புகள் (stocks) ஓட்டங்கள் (flows) இவைகளின் விளக்கம் பற்றிய பிரச்சினைகளை இங்குப் புறக்கணித்திருக்கிறோம். இவைகளைப்பற்றி ஓரளவிற்கு உறுதியான கருத்துகளைக் கூற வேண்டுமானால், இவைகளைக் கால வரம்பு என்ற அலகைக் கொண்டு கூறுதல் நன்று. அதாவது குறிப்பிட்ட ஒரு காலத்தில், உள் செலுத்து (inpayments)க்கு ஏற்ற வெளி செலுத்துகள் (outpayments) உண்டு. ஆனால், மிகச் சிறந்த கருத்துகள் இதன் உள்ளடங்காத காரணத்தால் இவைகளின் ஆராய்ச்சி இங்குத் தேவையற்றது.

பதுக்குதல் அல்லது பதுக்கிய பொருளை மீண்டும் செலவிடுதல் ஆகியவை சாதாரண சூழ்நிலைகளில் நடைபெறுவன அல்ல. பயனில்லா ரொக்கத்தை அறிவுடைய மாந்தர் வெறுத்தனர். எனவே, அதனை அவர்கள் பதுக்கவில்லை; பதுக்கி வைக்காத காரணத்தால் அதனை மீண்டும் அவர்கள் செலவிடவில்லை. எனவே, விலை மட்ட மாற்றங்கள் பதுக்குதலை ஒட்டியவை அல்ல. மக்கள் தமக்குக் கிட்டிய பணம் அனைத்தையும் பொருள்களுக்காகச் செலவிட்டனர்; எனவே, விலை மட்ட மாற்றங்கள், புழக்கத்தில் (circulation) உள்ள ரொக்க அளவின் மாற்றங்களால் ஏற்படுகின்றன. ஒரு மனிதன், தன் வீட்டின் பின்புறத்தில் புதையல் (தங்கச் சுரங்கம்) ஒன்று இருப்பதாக வைத்துக்கொள்ளுவோம், இப் பணத்தைக் கண்டெடுத்தபின் இதனைப் பொருள்களுக்காகவும், பணிகளுக்காகவும் செலவிட்டால், பண விலைகள் மிகும்; ஆனால், உண்மை விலைகள் (real prices) மாறாமலிருக்கலாம். அல்லது சமூகத்தில் உள்ள மக்களில் ஒரு சிலர், பணம் அச்சடிக்கும் உரிமையைப் பெற்றிருந்தனர் (அதாவது அரசு அல்லது பாங்குகள்) என வைத்துக்கொள்ளுவோம்; இப் புதுப் பணத்தைக் கொண்டு தங்கள் செலவை அதிகமாக்குகிறார்கள் எனவும் வைத்துக் கொள்வோம். இதனால், பொது விலை மட்டம், மீண்டும் மிகும். இம் மிகுதியின் விகிதம் பண அளிப்பு மிகுதி விகிதத்தை ஒத்திருக்கும். எனவே, விலைகள் பண அளிப்பின் விகிதங்களாகும்.

பணத்தைப் பயன்படுத்தும் அமைப்பில் மக்கள் தாமாகப் பணத்தைக் குவிப்பதில்லை என்பது சேவின் விதி கூறுவதைவிட அதிகமானதும் குறைவானதும் ஆகலாம். ஆனால், இந்தக் கருத்து நிர்ணய (absolute) விலை மட்டங்களை விளக்குவதை முதன்மையாகக் கொண்டது. பண்டமாற்று முறையில், தராதர விலைகள் மட்டுமே உள்ளன. அதாவது ஒரு சட்டையின் விலை ஏழு ஆப்பிள்கள்; ஓர் ஆப்பிளின் விலை மூன்று கொட்டைகள் ஆகும்; இருபத்தொன்று கொட்டைகள் ஒரு சட்டையை வாங்கும். பணம் என்ற பொருள் இருந்தால், அதனை மாற்றும் மத்தியமாகக் கொண்டால், பின் எல்லா விலைகளும் (அந்த மத்தியத்தின் வழி வெளியிடுவதால்) பணத்தின் இருப்புகள் மாறுதலுக்கு ஏற்றவாறு, விலை மாற்றங்கள் அமையும். அதாவது பண அளவிற்கேற்றவாறு நிர்ணய விலைகள் அமையும்.

பண்டங்களுக்கான மொத்தத் தேவை (aggregate demand for goods) குறைவுபடுவதால் நேரிடும் வேலையின்மை அதாவது, தானாக இயல்கிற வேலையின்மை (involuntary unemployment) என்பதைப் பற்றிச் சேவின் விதி சில கருத்துகளைத் துணிந்து தெரிவிக்கிறது.

சேவின் (மொத்தத் தேவைக் குறைவு ஏற்படாது என்று சொன்ஞலும்) அவரது கூற்றுப் பண்டமாற்று அமைப்புக்குத் தெளிவானது ஆயினும் பணமாற்று அமைப்புக்குத் தெளிவானதல்ல. (ஏனெனில், பண்டமாற்று அமைப்பில் நிர்ணய விலைகள் இல்லை என்பதை நாம் முன்பே கவனித்தோம்). சோதனைக்குள்ளான சில குறிப்பிட்ட நடவடிக்கைகளுக்கான எடுகோள்கள், மிகவும் சிக்கலான அங்காடிக் கோட்பாடு ஆகியவைகளிஞல் ஏற்படும் விளைவுகளுக்குச் சேவின் விதி விளக்கம் தருகிறது. சேவின் விளைவுகளுக்குக் காரணமான கிளாசிகல் பொருளாதாரக் கருத்தினரது சில நோக்கங்களைப் பின்வரும் பல அதிகாரங்களில் விளக்குவோம். பணத்தைப் பயன்படுத்தும் அமைப்பில், கூலி வழங்கும் அமைப்பில் சேமிப்பு-முதலீடு உள்ள அமைப்பில், இவ்விளைவு எந்தச் சூழ்நிலையில் எப்படி உருவாகிறது என்பதை இங்கு ஆராய்வோம். பண அளவுக்கோட்பாட்டின் பணப் பயனின் பல நோக்கங்களை முதற்கண் செய்யும் ஆராய்ச்சி பயனுள்ளதாகும்.

## ரொக்க இருப்புகளும் பண அளவைக்கோட்பாடும்
## (Cash Balances & Quantity Theory)

அவ்வாறு செய்ய, பணத்தைப் பயன்படுத்தும் அமைப்பில், ஒவ்வொருவரது ரொக்க இருப்புகள் காலப்போக்கில் எத்தகைய நடத்தையையுடையது என்பதை விளக்கவேண்டும். அவரது இருப்புக் கீழ்க்காணும் விளக்கப் படத்தில் (படம் 5–2) காணுமாறு அமையும்.



படம் 5-2.

'O' என்ற காலத்தில் இம் மனிதன் 100 டாலர் ரொக்கத்தைப் பெறுகிறுன். இதற்கு முன் அவரது வரவு 'O' வாகும். இப்பொழுது அது 100 டாலர்களாகும். இவரது அடுத்த வரவு 20 கால அலகுகளுக்குக் (நாட்களுக்கு) கழித்து கிடைக்கும். கிடைக்கும்

வரவில், இருபதில் ஒரு பங்கை ஒவ்வொரு நாளும் செலவு செய்கிறார் என்பதையும் அடுத்த கால அளவுக்கு முன் அவரது ரொக்க இருப்பு 'O' வாகக் குறையும். இருப்பின் நடவடிக்கை இத் தன்மையது மட்டுமல்ல. நமக்கு மிகவும் விளங்கிய இருப்பு நடவடிக்கை நேராகக் கீழ்நோக்கிச் சரிவுறும் கோட்டை மிகவும் வளைந்த கோட்டைப்பதிலீடு செய்கிறதாகும். இருப்பு (balance) வெகுவிரைவில் அதாவது சம்பள நாளுக்கு அடுத்தாற்போல் உள்ள காலத்தில் 'O' என்ற மதிப்பைப் பெறும். ஆயினும் நேர்கோட்டின் எடுகோள், ஒரு கோட்பாட்டையும் விடாமல், கணக்கிடுதலைச் சுருக்குகிறது.

மேற் குறிப்பிட்ட விளக்கப் படத்திற்கு உரிய நபரின் ரொக்க மீதி O முதல் 100 டாலர் மாறுகிறது. சராசரியாக 50 டாலர்கள் ரொக்கம் வைத்து இருக்கிறார் (நேர்கோடு விளக்கம்). இந்தச் சராசரி மீதி 50 டாலர்கள் என்பது அவரது வருமானத்தின் (100 டாலர்களின்) பாதி என்பது, அவரது ஒவ்வொரு வருமான காலத்தில் அவரது வருமானம் எனக் குறிப்பிட்டால் அது அவரது வருமானத்தின் பாதியாகும். அவரது வருமானத்தை ஆண்டு வீதம் கூறினாலும், அந்த ஆண்டில் அவர் நான்கு முறை வருமானம் பெறுகிறார் என்றாலும், அவரது சராசரி மீதி அவரது வருமானத்தில் எட்டில் ஒரு பங்காகும். (வருமானத்தை ஓட்டம் (flow) என்றும் ரொக்க மீதியை (cash balance) இருப்புக் (stock) கருத்து என்றும் கொண்டால், அவைகளிடையே உள்ள விகிதத்தின் அளவு வருமான ஓட்டத்தைக் குறிப்பிடும் கால அலகை ஒட்டியதாகும். கால அலகு, என்பது ஒரு பொருளற்ற அலகாகும். ஆயினும் ஆண்டுக் கணக்கீட்டிற்கு அது பயன்படும் வசதியான அலகாகும்).

மேற்குறிப்பிட்ட நபர் ரொக்கத்தை அதற்காகச் சேகரிப்பவரல்லர். வரவுகளுக்கும், செலவுகளுக்குமிடையே உள்ள கால இடைவெளியைச் சரிக்கட்டுவதற்காக அவர் சிறிது ரொக்கத்தைச் சேகரிக்கிறார். அப்படியானால் அவர் ரொக்க மீதம் அவருடைய அறிவுடைச் செயல் அதனை அவர் நல்ல உணர்வோடு செய்கிறார் என்றும் சொல்லவேண்டும். அவரது 'ரொக்கத்தேவை-அவரது வருட வருமானத்தில் எட்டில் ஒரு பங்குக்குச் சமம் என்பது பொருள். வளைவுக்கோடு முறையில் அவரது சராசரி மீதம் குறைந்ததாகும்; எனவே, அவரது ரொக்கத் தேவையும் அவரது வருமானத்தில் குறைந்த பங்காகும். இந்தத் தேவையை 'நடைமுறைத் தேவை' (transactions demand) எனச் சொல்லலாம். நடைமுறைகளுக்காக அவர் ரொக்கத்தைப் பயன்படுத்துகிறார் என்பது பொருள்.

தனியார் ரொக்கத்தை மீதப்படுத்திவைக்கும் தன்மையை வேறொரு முறையால் விளக்கலாம். அது, அவரது ஒவ்வொரு

சராசரி டாலரும் பத்து நாட்களுக்கு மீதம் பிடித்து வைத்திருக்கிறார் என்பது. சில டாலர்கள் ஒன்று, இரண்டு, மூன்று, பதினெட்டு, பத்தொன்பது, இருபது நாட்களுக்கும் மீதம் பிடித்து வைத்திருக்கிறார். ஆனால், சராசரி டாலர் 10 நாட்களுக்கு மீதம் பிடித்து வைக்கிறார். (அவர் மீதத்திற்கு வளைவுக் கோட்டுக் காலப் பாதையை மேற்கொண்டால், சராசரி காலம் குறையும்) தான் வாங்கும் ஒவ்வொரு டாலரும் சராசரியில் 10 நாட்களுக்குள் அதனைப் பொருள்களுக்காக மாற்றப்படுகிறது (அதாவது பொருள்களுக்காகக் கொடுக்கப்படுகிறது) என்று வேறு விதமாகக் கூறலாம். 10 நாட்கள் என்பது அவரது வருவாய் காலத்தில் பாதி ஆகையாலும் அத்தகைய காலங்கள் நான்கு இருப்பதாலும், தனக்குக் கிட்டும் ஒவ்வொரு டாலரும் சராசரியில் ஓர் ஆண்டுக்கு 'எட்டு முறை மாற்றப்படுகிறது. இது அதன் மாற்றுவேகத்தின் (Velocity) ஒரு பகுதி.

அவர் ரொக்கத்தின் தேவை என்பது அவரது (வருட) வருவாயில் எட்டில் ஒரு பங்கு என்பதும், அல்லது ரொக்க வரவின் மாற்று வேகம், ஆண்டுக்கு எட்டு முறை என்பதும் ஒரே நிகழ்ச்சியை இரண்டு வகையில் விளக்குவதாகும். அதுபோல் வேறு ஒரு காலத்தைக் கொண்டு, வேறு எண்கள் அடங்கிய முடிவைப் பெறலாம். (எடுத்துக்காட்டாக, வழங்கும் காலத்தை (payment period) கால அலகாகச் சில சமயங்களில் கொள்ளலாம். அவ்வாறானால் ரொக்கத்தின் தேவை பாதி எனவும், அதன் மாற்று வேகம் (velocity) இரண்டு எனவும் அமையும்).

மேற் கூறிய நமது நண்பர் தம்மிடம் உள்ள பணத்தை மாற்றிவிட்டால், அதன் பின் அந்தப் பணம் என்னவாகிறது? அல்லது அவர் மாற்றிய பணம் எங்கிருந்து வந்தது? என்ற வினாக்களின் விடை பணத்தின் பயன்கள் (அல்லது பணம் மீதம் வைப்பது) போன்ற கருத்துகளின் விளக்கத்தை முடிவு பெறச் செய்யும். இதற்கு நமது எடுத்துக்காட்டைச் சற்று மாற்றவேண்டும். முன்பு கண்ட விளக்கப்படம் அமைப்பின் எல்லா வருமான வரவுகளின் மொத்த ரொக்க மீதத்தைக் குறிக்கிறது என்று வைத்துக்கொள்வோம். கூலிகள், சம்பளங்கள், வட்டி, இலாபம் இவையெல்லாம் எல்லோருக்கும் ஒரே நாளில் வழங்கப்படுகின்றன என்று வைத்துக் கொள்வோம். அவர்கள் மொத்தத்தில் 100 டாலர்கள் வருவாயை O, 20, 40 நாட்களில் பெறுகிறார்கள். இதற்குத் தேவையான ரொக்கம் எங்கிருந்து வருகிறது? வந்தபின் அதனை மாற்றும் பொழுது திரும்பவும் அது எங்கே போகிறது? எல்லாத் தொழில் நிறுவனங்கள் ஒரு மாபெரும் நிறுவனத்தில் அமைக்கப்பட்டன

(அரசு என்பது இல்லை) என்ற எடுகோளை மேற்கொள்ளுவோம். தொழில் நிறுவனங்களின் ரொக்க மீதம் என்பது வருமான வரவு தாரர்களின் வருமானத்தின் கண்ணுடி பிரதிபலிக்கும் பிம்பமாகும். விளக்கப்படம் 5-3 தொழில் நிறுவனங்களின், நுகர்வோரின் ரொக்க மீதத்தின் தொடர்பை விளக்குகிறது.







படம் 5-3.

இவ்விரு படங்களிலிருந்து தொழில்துறையின் ரொக்க இருப்புகள் (cash balances) 'O' என்ற அளவிற்குக் குறைந்து கொண்டு போகிறது. இதற்குக் காரணம் வருமானங்கள் எல்லாம் 'O' என்ற நாளில் கொடுக்கப்படுகின்றன. அதன் பிறகு நுகர் வோரது ரொக்க இருப்புகள் சுருங்கிக்கொண்டு போகிறது. அதனுல் தொழில்துறை ரொக்க இருப்புகள் வளர்கின்றன. 20ஆம் நாள் கால அலகில் தொழில்துறை, நுகர்வோர்கட்கு விற்பதின் வழி, எல்லா ரொக்க இருப்புகளையும் தம்வசம் குவிக்கின்றன. இவைகள் மீண்டும் வருமானம் வழங்குவதற்குப் பயன்படுகின்றன. இந்தத் தொடர்பு திருப்பித் திருப்பி வரும் தன்மையது.

தொழில்துறைகள்கூட ரொக்க இருப்புகளைச் சேமித்து வைக் கின்றன. அவைகளுடைய சராசரியும்கூட 50 டாலர்கள் தாம். அவற்றின் இருப்புகள் ஆண்டுக்கு எட்டு முறை சுழல்கிறது. புழக் கத்தில் இருக்கும் மொத்த ரொக்கத்தின் மதிப்பும் 100 டாலர்கள்.

இதில் ஒவ்வொரு டாலரும் தொழில்துறை அல்லது நுகர்வோரது இருப்பாகும். அது முன்னும் பின்னும் திரும்பித் திரும்பி வரும் தன்மையது. ஆக்கப் பணிகளைத் தொழில்துறைகளுக்கு வழங்குவதால் மக்களிடம் இருந்து தொழில் துறைக்கும், உற்பத்திப் பொருள்களை மக்களுக்கு விற்பதால், தொழில் துறையிலிருந்து மக்களுக்கும், அது முன்னும் பின்னும் போகும் தன்மையதாகும்.

தொழில்துறை நுகர்வோர் ஆகிய இரு துறையினரது 'பணத்தின் மொத்தத் தேவை' (the total demand for money) *100* டாலர்கள் என்பது தெளிவு. இது நடைமுறைக்கான தேவை. (transactions demand) இதனை வருட வருமானத்தில் நான்கில் ஒரு பங்கு எனக் குறிப்பிடலாம். அந்த அமைப்பின் மொத்த நடைமுறை ஆண்டுக்கு *800* டாலர்கள். எனவே, பணத்தின் தேவை, வருட நடைமுறையில் எட்டில் ஒரு பங்காகும். இதனை அப் பணத்தின் 'நடைமுறை வேகம்' (transactions velocity) ஆண்டுக்கு எட்டு முறை எனச் சொல்லலாம். அல்லது வருவாய் வேகம் (Income velocity) என்பது ஆண்டுக்கு நான்கு முறை. அதாவது ஒரு சராசரி டாலர், தொழில்துறையிலிருந்து மக்களுக்கும், பின்பு மக்களிடமிருந்து தொழில்துறைக்குமாக நான்கு முறை முன்னும் பின்னுமாக அலைகிறது.

நுகர்வோரின் கையிருப்புகள் மேல்நோக்கிக் குழிந்த (concave) பாதையைப் பின்பற்றினால், தொழில்துறையின் கையிருப்புகள், மேல்நோக்கிக் குவிந்த (convex) பாதையைப்பின் பற்றும். நுகர்வோரின் பணத்திற்கான சராசரித் தேவை குறைவுபட்டால், அது தொழில்துறையின் சராசரித் தேவை மிகுந்து காணுவதால், சரிக்கட்டப் படுகிறது. நுகர்வோர் பணத்தை வேகமாக மாற்ற முற்பட்டால், தொழில்துறை மெல்ல மாற்றும். இவ்விரு சூழ்நிலைகளில் பயனில்லாப் பணம் இல்லை. இந்நிலையில் தொழில்துறை, நுகர்வோர் ஆகிய இருவரது சிறுமமான (minimum) கையிருப்பு 'O' என்ற அளவைக் கொண்டது.

மேற்கூறியவை அனைத்தும் மிக எளியன. ஆயினும் அவற்றின் விளக்கம் மிகவும் அவசியம்.

இவைகளையே பெரிதும் சிக்கல் உள்ளனவாக்கலாம். வழங்கும் தேதிகள் எல்லாம் பொருந்தாதவைகளாகும். வருவாய் கிட்டும் நாள் எல்லாத் துறைகளிலும் ஒரே நாளாக இருக்காது. வேறு வேறு நாட்களில் வருமானத்தை வழங்குகிறார்கள். தொழில் துறை என்பது பெரிய ஒரு நிறுவனமல்ல; ஆனால், அது சிறு சிறு நிறுவனங்கள் கூட்டுச் சேர்ந்து அமைக்கப்பெற்றது. அவைகளில்

பல இடைநிலைப் பண்டங்களை விற்பனை செய்கின்றவை யாகையால், ஒவ்வொன்றும் தங்களுக்குத் தேவைப்படும் ரொக்க இருப்புகளை வைத்துக் கொள்கின்றன. இச் சிக்கல்கள் அனைத்தையும் மூலக் கருத்தை மாற்றி அமைக்கா வண்ணம் இணைக்கலாம்; மக்கள் பிறர்க்குக் கொடுப்பதற்குச் சேமிக்கிறார்கள். அச் சேமிப்புகள் தொழில்துறைக்குக் கடனாக வழங்கப் படுகிறது. எனவே, தொழில்துறை அதற்கு வேண்டிய பணவசதிகளை விற்பனை மூலம் பெறுமல், கடன்களாகவும் பெறுகிறது என்ற சிக்கலையும் பிணைக்க லாம். (வேறு பல சிக்கல்களையும் புகுத்தலாம்; ஆனால், அவைகளை எளிதில் கையாள முடியாது. குறிப்பாகத் தேக்கநிலை உள்ள அமைப்புகள், எதிர்கால கொடுக்கல்களின் காலமும், அவைகளின் தன்மையையும் உறுதியாகக் கூற முடியும். தகவல்கள் போன்ற சிக்கல்களையும் புகுத்தலாம். ஆனால், இவைகளைப் பற்றிய ஆராய்ச்சி மீண்டும் தொடரும்).

நடைமுறைகளின் அளவை நிர்ணயிக்கக் கூடிய காரணி களையும், அதற்கேற்ற ரொக்கத்தையும், வருமானத்தையும் நிர்ண யிக்கும் காரணிகளையும் இங்குச் சற்றுச் சுருக்கமாக ஆராய்வோம். இவைகளை நிர்ணயிக்கும் காரணிகளில், சமூகம் வழங்கும் பழக் கங்கள் (Payments habits) என்பது சிறந்த காரணியாகும். மேற் கூறிய உதாரணத்தில் வழங்கும் காலம் 10 நாட்களாகக் குறைக் கப்பட்டனவென்று வைத்துக்கொள்வோம். 20 நாட்களுக்கு ஒருமுறை 100 டாலர்கள் வழங்குவதற்குப் பதிலாக 10 நாட் களுக்கு ஒருமுறை 50 டாலர்கள் வழங்குகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். முன்பு நடைபெற்ற வாணிபம், முன்பு இருந்த வருட வருவாய் கொடுக்கல் எல்லாம் இப்பொழுதும் நடைபெறும். ஆனால், முன்பு இருந்ததைவிடப் பாதியளவு ரொக்க இருப்பைக் கொண்டு இவைகளைச் செயலாற்றுகிறார்கள். எனவே, இப்பொழு தைய தேவை ஆண்டின் மொத்த நடவடிக்கையில் பதினாறில் ஒரு பங்காகும் அல்லது வருட வருமானத்தில் அது எட்டில் ஒரு பங்காகும். வருமான வேகம் (income velocity) இப்பொழுது 8, நடைமுறை வேகம் (transactions velocity) என்பது 16 ஆகும். இதனைப் படம் 5-4ல் காண்க.

வழங்கும் தன்மைகள் (Payments habits) என்ற காரணி வருமானம் எவ்வளவு விரைவாகக் கிடைக்கிறது என்பதைக் குறிக் கவும், அல்லது சரக்குகளுக்குச் செலுத்த வேண்டிய பட்டியல் தொகைகள் எவ்வளவு விரைவில் சரிக்கட்டப்படுகின்றன என்ப தைக் குறிக்கவும், ஏற்றதொரு சாதகமாக விளங்குகிறது. (ஒரு குறித்த தவணையில்தான் சரக்குகளுக்கான பணத்தைக் கொடுக்க




படம் 5-4.

வேண்டும் என்ற ஒரு பழக்கத்தை [ அதாவது (charge accounts) என்பதை எடுத்துக்காட்டாக வைத்துக் கொண்டால் இக் காரணி தொழில்துறையில் புழங்கும் இடைநிலை நடைமுறைகளைக் குறிக்கப் பெரிதும் பயன்படுகிறது.]

வேகத்தை மற்றொரு தீர்மானி (determinant) நிர்ணயிக்கிறது. அது தொழில் பிணைப்பு (business integration) என்பதாகும். தொழில்கள் செங்குத்தாகப் பிணைக்கப்பட்டால் குறைந்த அளவு றொக்கம் தேவைப்படுகிறது. ஆனால், அதே தொழில்கள் செங்குத்தாகச் சிதைவுற்றிருந்தால் அதிக அளவு றொக்கம் தேவைப்படும். இவைகளைப்பற்றிய முழு விவரங்களை வேகத்தின் தீர்மானிகள் என்ற தலைப்பை ஏதேனும் ஒரு சிறந்த வங்கியியல் புத்தகத்தில் மாணவர்கள் காணலாம்.[1]

1 மற்றும் ஒரு சிறந்த தீர்மானி வெகு எளிதாக விளக்கியிருப்பது கொடுப்பதற்கான தேதிகள் ஒன்றை ஒன்று மேற்சென்று கலந்திருப்பதைக் (overlapping) காண்க. அவார்ட் எஸ். எல்லிஸ் 'வேகக் கோட்பாட்டின் சில அடிப்படைகள்' 'காலாண்டுப் பொருளியல் ஜர்னல்' மே 1938 பாகம். 52 பக்கங்கள் 431-72 'பணவியல் கோட்பாட்டின் விளக்கமுறை' (பிலடெல்பியா 1951) என்ற நூலில் மறு அச்சீடு செய்யப்பட்டுள்ளது. பக்கங்கள் 89-128.

இவைகளை முற்றொருமைகள் என்று கொள்ளாமல், சமநிலைக் கருத்தினை விளக்குபவை எனக் கொள்ளவேண்டும். V என்பதை (Pt T)/M அல்லது (C என்பதை Y/M) என்று விளக்கி (அல்லது அளவிட்டால்), இச் சமன்பாடுகள் வரையறை பற்றிய விளக்கங்கள். எனவே, அவைகள் முன்னறிவிக்கக்கூடிய தன்மை அல்லது விளக்கங்கள் வழங்கும் தன்மையற்றன. கோட்பாட்டு அளவில், இச் சமன்பாடுகள வரையறை அளவில், உண்மையில்லாத சிலவற்றை உண்மையுள்ளவை என வலியுறுத்தும் தன்மையன.

வழங்கும் தன்மைகள் (Payment habits) தொழில்துறை அமைப்பு (Industrial structure) ஆகியவை கொடுக்கப் பட்டிருந்தால், நடைமுறைக்கான ரொக்கம், நடைமுறைகளின் பணஅளவைப் (money volume of transactions) பொறுத்திருக்கும். நாம் உதாரணம் காட்டிய அமைப்பு இரட்டிப்பு அளவு பெருகி விட்டதனுல்—அதாவது இரட்டிப்பு ஆக்கம், இரட்டிப்பு உண்மை வருமானம் (real income) உள்ளதனுல், அதனுல் பெருகிய நடைமுறைகளுக்கு இரட்டிப்பு அளவு பணம் தேவைப்படுகிறது. இதற்கு விலை நிலை மாருத்தன்மையதாக இருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட காலத்தில் நமது அமைப்பில் மொத்த வருமானம் இப்பொழுது மொத்த வருமானம் 200 டாலர், மொத்த விற்பனை 200 டாலர்கள். அதாவது 200 டாலர்கள் ரொக்கம் பிறர்க்கு வழங்கத் தேவைப்படுகிறது. தொழில்துறையின் கையிருப்பு இப்பொழுது 100 டாலர் முன்பு இருந்த 50 டாலர் அல்ல; இதை வேறு வழியாகக் கூறலாம்; விலைகள் 50 சதவீதம் குறைந்தால், இரட்டிப்பு அளவு சரக்குகள், உண்மை வருமானம் ஆகியவைகள் எல்லாவற்றையும் அதே 100 டாலர் ரொக்கத்தை வைத்து விற்று விடலாம்.

பண அளவுக்கோட்பாட்டை இப்பொழுது நம்மால் மாற்றி அமைக்க முடியும். அதற்குக் கீழ்க்காணும் எடுகோள்கள் தேவை.

(1) குறித்த வழங்கும் தன்மைகள்

(2) ஆக்கம் செங்குத்துத்தன்மை அமைப்பைப் பெற்றது.

(3) விலைகள் இணையும் தன்மையன

(4) மக்களுக்குப் பயனில்லாச் சொத்தில் விருப்பமில்லை.

இவைகள் எடுகோள்களாயின் (Price level) புழக்கத்தில் உள்ள பண அளவின் விகிதமாக அமையும். (Price level wil proportional to money in circulation).

இக் கருத்துகளைக் கீழ்க்காணும் சமன்பாடுகளின் வாயிலாக வெளியிடலாம்.

$$MV = PtT$$
$$MC = y = P_0y$$
$$M = mPtT$$
$$M = ly = lP_0y$$

இதில் காணும் குறிகளுக்குக் கீழ்க்காணும் பொருள்கள் அமையும்.

M= நாணயப் புழக்கத்தின் அளவு (quantity of money in circulation).

V= பேரவகை நாணயப் புழக்க வேகம் (transactions velocity of money)) இது ஆண்டுக்குப் பல முறைகள் அல்லது குறிப்பிட்ட ஒரு காலத்தில் வெளிப்படுத்தப் படுகிறது.

Pt= எல்லா பேரவகைகளின் சராசரி விலை மட்டங்கள் (the average price level of all transactions).

T= ஒரு குறிப்பிட்ட காலத்தில் நடைபெறும் அல்லது ஓர் ஆண்டில் நடக்கும் பேரவகைகளின் அளவு (V அளிக்கப்படும் காலம்) இதற்கும் அளிக்கப்பட்டிருக்கிறது.

C= வருமானம் அல்லது சுற்றுப் புழக்கவேகம் ஒரு காலத்தில் எத்தனை முறை என்று குறிக்கிறோம்.

y= நாட்டு ஆக்கத்தின் பண அளவு (அல்லது) வருமானம்.

$P_0$= இறுதி ஆக்கத்தின் சராசரி விலை மட்டம்

y= இறுதி உற்பத்தியின் அளவு.

m= பேரத்திற்காகத் தேவைப்படும் பண அளவு. இதனைக் குறித்த ஒரு காலத்தில், பேரத்தின் பண அளவின் பின்னமாகக் (fraction) குறிக்கிறோம்.

l= பேரத் தேவை. இதனைப் பண வருமானத்தின் பின்னமாகக் (fraction) குறிக்கிறோம்.

எனவே, $V \equiv \frac{1}{m}$, $C \equiv \frac{1}{l}$ என்பவை தெளிவு.

முதல் சமன்பாட்டை இப்பொழுது கவனிப்போம். மக்கள் பயனில்லாக் கையிருப்புகளை வைப்பதில்லை; தேவையான கொடுக்கல்கள் செய்யும்வரை பணம் கையிருப்புகளாக இருக்கிறது; இந்தக் குறைந்தபட்ச காலத்தைத் தக்க நிறுவன காரணிகள் நிர்ணயிக்கின்றன. இவைபோன்ற எடுகோள்களைக் கொண்டால் V மாறுமலிருக்கும்; MV என்பது Mக்கு விகிதமாக அமையும்; விலைகள் இணக்கமானவைகளானால், T என்பது தொழில் நுட்ப ஆராய்ச்சி, அல்லது வேலை செய்யும் மனநிலை ஆகியவைகளால் நிர்ணயிக்கப்பட்டு அது உச்சத்திலிருக்கும். குறிப்பிட்ட காலத்தில்

இந்த மட்டம் மாறுத் தன்மையது. எனவே, Pt என்பது Mக்கு விகிதமாக அமையும். M–ன் அளவு அதிகமானால் அல்லது குறைந்தால் அதற்கு விலையின் மாற்றங்கள் விகிதங்களாக அமையும்.

இரண்டாவது சமன்பாட்டைச் சற்றுக் கவனிப்போம். V என்பது மாறுமல் இருக்கத் தூண்டும் காரணிகள் C என்பதையும் மாறுமல் இருக்கச் செய்கின்றன. இவைகளுடன் மற்றொரு எடுகோளைச் சேர்க்கவேண்டும். அது குறிப்பிட்ட ஒரு காலத்தில் முடிந்த பொருள்களின் (final product) அளவு, பேர அளவின் மாறுத பின்னம் என்பதாகும். கையிருப்புகள் தேவைப்பட்ட காலம் வரையில்தான் வைக்கப்படுகின்றன. ஒரு சராசரி டாலர் ஒரு முழு சுற்றை முடிப்பதற்காகச் செல்லவேண்டிய கையிருப்புகளும் கொடுக்கப்பட்டால், C என்பது Vயைவிட உறுதியாகக் குறைந்து காணும். அங்காடியில் போட்டி இருப்பது என்றும், அவைகளின் இணக்கமான விலைகள் இருப்பதாகவும் வைத்துக் கொண்டால், y என்பது உச்ச நிலை மட்டத்தில் இருக்கும்; $P_o$ என்பது Mக்கு விகிதமாக அமையும்.

மூன்ருவது நான்காவது சமன்பாடுகள், சமன்பாடுகள் ஒன்று இரண்டு ஆகியவைகள் வேறு விகிதமாகக் குறிப்பிடப்பட்டு இருக்கின்றன. புழக்க வேகம் (ஓர் ஆண்டுக்கு இத்தனை முறை சுழல் புரள்வு (turn over) செய்கின்றது என்பதற்குப் பதிலாக அவைகள் 'பணத்தின் தேவை' (demand for money) என்ற கருத்தைப் பயன்படுத்துகின்றன. இதனை லேவாதேவிகளின் பண மதிப்பினைக்கொண்டு அல்லது அவர்களது வருமானத்தை ரொக்கமாக வைக்க விருப்பப்படும் பின்னத்தைக் குறிக்கிருர்கள். வேகத்தை எடுகோளாகக் கொண்ட சமன்பாடு மேற்கொண்ட தொழில் நுணுக்க ஆய்வு சம்பந்தமான அல்லது நடத்தை (behaviour) பற்றிய எடுகோள்களை இச் சமன்பாடு கொண்டுள்ளது. இவைகள் எல்லாவற்றைவிட நுகர்வோர் அல்லது தொழில்துறையோர் ஆகியவர்கள் பயனில்லா ரொக்கத்தை விரும்பமாட்டார்கள் என்ற அடிப்படையை இச் சமன்பாடுகள் வலியுறுத்துகின்றன. அவர்கள் ஓரளவு ரொக்கம் வைத்திருக்கிருர்கள் (இதனுல் புழக்க வேகத்தின் வீதம் குறைக்கப்படுகிறது). ஏனெனில், தனக்குக் கிடைக்கும் வருமானங்களின் காலமும், தான் கொடுக்கவேண்டிய தொகைகளின் காலமும் ஒன்ருக இல்லாமையால் ரொக்க மீதம் வைத்திருக்கிருர்கள்.

எனவே, மக்கள் ரொக்க மீதம் தேவைக்காக வைத்திருக்கிருர்கள். ஆனல், அதன் அளவு மிகவும் சிறியது, அதனைச் சிறிது காலத்திற்குத்தான் வைத்திருப்பார்கள்.

இக் கருத்திற்கு மற்றும் ஓர் அடிப்படையிருக்கிறது. அது இணக்கமான விலைகளையும் போட்டி விலைகளையும் கொண்டுள்ளதாகும். அதிக ரொக்கம் விலைகளை அதிகமாக்கும். அதிக ரொக்கத் தேவை உற்பத்தியின் அளவையோ அல்லது பேரங்களின் அளவையோ அதிகமாக்காது. அதற்குக் காரணம் அவை ஏற்கெனவே உச்ச நிலையில் இருப்பதால் அவைகள் மாருமலிருக்கும். உற்பத்தியின் அளவும், பேரங்களின் அளவும் உச்ச நிலையில் இருக்கும் என்று எப்படிச் சொல்லமுடியும்? அவ்வாறு இல்லை என்ருல் தான் விற்க விரும்பும் பொருள் அனைத்தையும் விற்க முடியாத காரணத்தால், அப் பொருள்கள் குறைந்த விலைக்கு அளிக்கப்படுகின்றன. எனவே, விலைகள் குறைந்திருக்கும். உற்பத்தியின் அளவு உச்ச நிலையை அடையும்வரை பெருகியிருக்கும்.

மேற்சொன்ன கருத்தை மிகவும் விரிவுபடுத்த வேண்டியிருக்கிறது. குறிப்பாக, மக்கள் தமது பணிகளைத் தொழில்துறைக்கு விற்கிருர்கள். அதன்வழி தொழில்துறை உற்பத்திசெய்து பண்டங்களை விற்கிறது என்பது அமைப்புக்கு எவ்வாறு பொருந்தும் என்று விளக்குதல் வேண்டும்.

பண அளவைக் கோட்பாட்டினை விறைப்பான விலை நிலை என்ற எடுகோள் கொண்டு உற்பத்தி கோட்பாடாக மாற்றியமைக்கலாம். இதனைச் சற்று விளக்குவோம்.

## விறைப்பான விலைகளும் பண அளவுக் கோட்பாடும்
## (The Quantity Theory with Rigid Prices)

மற்ற எடுகோள்களுடன், உற்பத்தி பெருக முடியாத அளவிற்கு விலைகள் விறைப்பாக இருக்குமாளுல், பண அளவின் அதிகரிப்பு உற்பத்தியைப் பெருக்குமேயல்லாமல் விலைகளைப் பெருக்காது என்பது தெளிவான கருத்து. அதேபோல், பண அளவின் குறைப்பு, விறைப்பான விலை நிலையில், விலைகளைக் குறைக்காமல், வேலையின்மையை உண்டாக்கும். ஆளுல், உண்மை உலகில், விலைகள் மிகவும் விறைப்பானவை அல்ல என்பது எல்லோருக்கும் தெரிந்த உண்மை. (குறிப்பாக, விலை இறக்கங்கள் விறைப்பானவையல்ல) என்பது இக் கோட்பாட்டின் எடுகோள். ஆகையால், வேலையையும், உற்பத்தியையும் நிலைபெறச் செய்ய, பணக் கொள்கை (Monetary Policy) கையாளப்படுகிறது. வேலையின்மை உண்டாளுல், அது மாருத்தன்மையுடைய விலைகளிளுலும் கூலிகளிளுலும் என்பது (இக் கோட்பாட்டின் வாயிலாக) அறியப்படும் உண்மை. விலைகளையும், கூலிகளையும் இறக்க முடியாமலிருந்தாலும், அல்லது அவைகள் இறங்கக் காலமாகும் என்ருலும், பண

அளிப்பின் அளவை அதிகப்படுத்தி வேலையின்மையைச் சரிக் கட்டலாம்.

கூலிகளும், விலைகளும் மாருத்தன்மை உடையன என்பதனுல் வேலையின்மை உண்டாகிறது என்றும், பண அளவின் பெருக்கம் அதனைச் சரிக்கட்டாது என்றும் சிலர் கருதுகிருர்கள். பண அளவு (M) பெருகினுல் பண வீக்கம்தான் ஏற்படும் என்பது அவர்கள் கருத்துப்போலும். இது ஒரு தவருன தர்க்கம். விலைகள் இறங் கும்போது விறைப்பானவை என்பதனுலும், ஆனுல், உற்பத்தி குறைந்த பட்சமானபோதிலும், அவை மேல்நோக்கிச் செல்லும் போது இணக்கமானவை என்பதனுலும் இது தவருன தர்க்க மாகும். உற்பத்தி குறைந்தபட்ச அளவில் இருக்கும்போது விலைகள் எத்திசைச் செல்லினும் விறைப்பானவை. ஆனுல், வேலை நிறைவு (full employment) நிலையிலிருக்கும்போது, அவை மேல் நோக்கிச் செல்லும்போது இணக்கமானவை எனக் கூறுவது ஒரு விதத்தில் பொருத்தமான தர்க்கமாகும்.

சிறப்பு வாய்ந்த இந்த நிலைகளை நன்ருக ஆராய வேண்டு மானுல், விலை, கூலி கோட்பாடுகளை நன்ருக ஆராயவேண்டும். இவை கிளாசிக்கல் பொருளாதாரக் கருத்தினர் ஆளும் கோட்பாடு வேறு விதத்தில் சிறந்த கோட்பாடு இல்லாமையால் இவற்றை நவீனக் கோட்பாடு மேற்கொண்டுள்ளது. இப்பணியை ஆரும் அதி காரம் மேற்கொண்டுள்ளது. ஏழாம் அதிகாரத்தில், சேமிப்பு முதலீடு ஆகியவைகளினுல் ஏற்படும் சிக்கல்களை விளக்குவோம்.

## சேவின் விதி பண அளவைக் கோட்பாட்டுக்குப் பொருந்துமா?[1]
## (Say's Law inconsistent with the Quantity Theory)

1942–ஆம் ஆண்டு துவக்கத்திலிருந்து பல பொருளியல் வல்லு நர்கள், குறிப்பாக டான் பாடின்கின் (Don Patinkin) என்பவர் சேவின் விதி பண அளவைக் கோட்பாட்டினுக்கு முரண்பட்டது என்றும் அவ்விரண்டைச் சேர்த்து ஆராயும் பொருளியல் மாதிரி கள் மாசுடையவை என்றும் பொருளியல் பத்திரிக்கை வாயிலா கவும், கட்டுரை வாயிலாகவும் வெளியிட்டிருக்கின்றனர். இவ் விரண்டையும் ஒன்று சேர்த்து விளக்கும் கிளாசிக்கல் கோட்பாடு மாசுடையதாகும்.[2]

1 கொள்கைச் சார்புடைக் கருத்து மாறுபாடுடையவர்கள், இப் பகுதியை விட்டு விடலாம். (This section can easily be omitted by the reader not interested in purely doctrinal controversies).

2 இக் கருத்து மாறுபாட்டினுக்குத் தேவையான விளக்கவுரைகளை எஸ். வால வானிஸ் கைகோல்ஸ் (1955) பக்கங்கள் 351.68-ல் காண்க. இவரது கட்டுரை டான் பாடின்கினது கட்டுரையை மிகவும் கூர்மையாக ஆராய்கிறது. (For an excellent annotated bibliography of this controversy, see S. Valavanis, Kyklos (1955) p.p. 351-68. Valavanis, article provides a penetrating critique of the Patinkin Position).

பாடின்கின் (Patinkin) அவர்களது வாதத்தின் பெரும் பங்கு மிகவும் எளிமைவாய்ந்ததும், மிகவும் கணக்கியல் அடங்கியது மாகும். ஆயினும் அவரது வாதத்தின் சாரம் மிகவும் எளிதான்து. உற்பத்திப் பண்டங்கள் யாவும் பிற பண்டங்களுக்கு மாற்றுவதற்காக உற்பத்தி செய்யப்படுகின்றன என்பது சே.விதியின் முக்கியக் கருத்து. உற்பத்தி செய்த பொருள் ஒன்றை மற்றப் பொருள் களுக்கு மாற்றுகையில், அம் மாற்றுப் பொருளை எவ்வளவு பெற முடியும் என்பது உற்பத்தியைத் தூண்டுகிறது. அதாவது ஒரு பண்டத்தின் அளிப்பும் தேவையும் அப் பொருளின் தராதர விலையையே ஒட்டியதாகும்.—ஒரு பண்டத்தை மற்ெருரு பண்டத்திற்கு மாற்றுகையில், அம் மாற்றுப் பண்டத்தை எவ்வளவு பெறமுடியும்-என்பதை ஒட்டியிருக்கும். (பொருள்களின் அளிப்பு, தேவை இவைகளைக் குறிக்கும் சமன்பாடுகள் ஒரே தன்மை யானவை (homogeneous) அதாவது அதன் விலைகள் 'O' என்ற மதிப்பினைப் பெறும் என்பது கணக்கியல் மொழி; எல்லா நிர்ணய (absolute) விலைகளையும் இரட்டிக்கலாம், பாதியாக்கலாம்; அல்லது 990 அல்லது ·001 என்ற எண்களாலும் பெருக்கலாம். அவ்வாறு செய்தாலும் விற்பவர், வாங்குபவர் ஆகியவர்கள், ஆக்கம் அல்லது நுகர்ச்சி ஆகியவைகளுக்கான நடவடிக்கைகள் மாருமல் இருக்கும்).

ஆனால், பண்டங்களைப் பணத்திற்காக விற்ருல் ஒவ்வொரு பொருளின் அளிப்புப் பட்டியல், பணத்திற்கான தேவைப் பட்டிய லாகும். அதுபோல, ஒவ்வொரு பொருளின் தேவைப் பட்டியல் பணத்திற்கான அளிப்புப் பட்டியல் ஆகும். ஏதேனும் ஒரு பொருளின் ஒரு குறித்த (தராதர) விலையில், அதற்குத் தேவை அளிப்பைவிட மிஞ்சலாம், அல்லது அளிப்புத் தேவையைவிட மிஞ்சலாம், அல்லது ஒரு குறிப்பிட்ட தராதர விலையில் அளிப்பும் தேவையும் சமமாகலாம். ஒரு குறித்த தராதர விலையில் பணத்திற் கான நிகரத்தேவை அல்லது அதற்கான நிகர அளிப்பு, அல்லது ஒரு குறிப்பிட்ட விலையில் இரண்டும் இல்லாமல் இருக்கலாம். பணத்திற்கான நிகர அளிப்புப் பட்டியல்களை நிகரத் தேவைப் பட்டியல்களை—அதாவது ஒரு பண்டத்திற்கான அளிப்பு, தேவை பட்டியல்களை—ஒன்றுகூட்டி ஒருமொத்த நிகரப் பணத்தேவை பட்டியலைப் பெறலாம். (ஒவ்வொரு நிகர அளிப்பும் நிகரத் தேவையின் பிரதிபலிப்பு எனக் கொண்டால்) சே.விதி உண்மை யாகில், ஒரு பொருளின் தேவை, அளிப்பு ஆகிய இரு பட்டியல் களும் விலைகளை ஒட்டாமலும் இருக்கும். (தராதர விலைகளை மட்டும் ஒட்டியிருக்கும்). ஆகவே, ஒரு பொருளின் அதிகப்படி அளிப்புப் பட்டியலும், தேவைப் பட்டியலும் அத்தன்மையது;

இவைகளில் இருந்து கிட்டும் மொத்த நிகரத் தேவைப் பட்டியலும் கூட அத்தன்மையதாகும். பணத்தின் மொத்த நிகரத் தேவைப் பட்டியல் (aggregate net demand for money) தராதர விலைகளை மட்டும் ஒட்டியதாகும். அது நிர்ணய (absolute) விலைகளை ஒட்டியதல்ல.

ஆனால், பண அளவைக் கோட்பாட்டு நிர்ணய (absolute) விலைகள் தொடர்புடைய இரண்டாவது பணத் தேவைப் பட்டியலைத் தருகிறது. இவ்விரண்டும் முன்னுக்குப்பின் முரணாக உள்ளவை என்பது தெளிவு.

ஒவ்வொரு தனித்தனி பண்டத்தின் தேவை, அளிப்புப் பட்டியல்கள் இவைகளால் ஆனா பணத்தின் தேவைப்பட்டியல் என்பதில் ஒரு பொருளின் அளிப்பு, தேவை ஆகியவைகள் ஓட்டங்களாகக் கருதப்படுகின்றன; ஆனால், பண அளவைக் கோட்பாட்டில் அவை இருப்புகளாகக் கருதப்படுகின்றன. தமது தர்க்கத்தைக் கீழ்க் காணுமாறு மாற்றியமைத்தால் பல சிக்கல்களைத் தவிர்க்கலாம். ஒரு தனிப்பொருள் அல்லது பணி ஆகியவைகளுக்கான தேவை அளிப்புப் பட்டியல்களிலிருந்து உண்டாக்கிய பணத்தின் நிகரத் தேவைப்பட்டியல், குறிப்பிட்ட தராதர விலைகளின் ஒவ்வொரு பொருளின் தேவை அளிப்பு ஆகியவைகள் 'O' என்ற மதிப்பைப் பெறுகின்றன. (அத்தகைய நிலைமை அல்லது நிலைமைகள் உள்ளனவா என்பது வேறு பிரச்சினை). நிகரப் பண அளவைக் கோட்பாடு பணத்தேவை (கையிருப்புகளுடன் சேர்ப்பதற்காக) நிர்ணய (absolute) விலைகளில் 'O' என்ற மதிப்பைப் பெறும். எனவே, ரொக்க நிகரத் தேவை 'O' என்ற மதிப்பைப்பெற இரண்டு விதிகள் தேவை.

பணத்திற்கான நிகர 'O' தேவை இருப்பதற்கு மேற்கூறிய நிபந்தனைகளில் ஒன்றுமட்டும், அதாவது முதற்கண் குறிப்பிட்ட நிபந்தனை மட்டும் போதுமானது. ஆயினும், அது போதுமான நிபந்தனையில்லை என்பது ஒரு நிமிட ஆராய்ச்சியினால் தெரியப்படும் உண்மை. எல்லா அங்காடிகளும் சமநிலையில் உள்ளன—அதாவது அளிப்பு, தேவைக்குச் சமமாக இருக்கும் தராதர விலைகள் அங்காடியில் உள்ளன—என்று வைத்துக் கொள்வோம். அப்படியாகில் விற்பவர், வாங்குபவர் எவரும் மனநிறைவற்ற நிலையில் இல்லை. ஆதலால், ரொக்கத்திற்கான நிகரத்தேவை இல்லை. மேற்குறிப்பிட்ட முதல் நிபந்தனை கணக்கில் அடங்காத நிர்ணய விலைகள் (absolute) இருப்பின் செயற்படும். அவைகள் அதே நிலையான தராதர விலைகளை வெளிப்படுத்தும். ஆனால், பணத்தைப் பயன்

படுத்தும் ஓர் அமைப்பில், இத்தகைய நிர்ணயிக்கப்பட்ட விலை நிலைகள் கிட்டுவது அரிது. இதனால் மேற்கூறிய இரண்டாம் நிபந்தனை தேவைப்படுகிறது. புழக்க வேகத்திற்கான நிறுவனம் அல்லது அமைப்புத் தொடர்புடைய வரம்புகளை வரையறுத்தபின், ஒரு குறிப்பிட்ட நிர்ணய விலை நிலைகள் மட்டுமே கிட்டும். அவை களின் அளவு O' என்ற குறைந்தபட்ச அளவில் தொடங்கி, புழக் கத்திலிருக்கும் பண அளவைத் தாங்கக்கூடிய அளவுக்கான உச்ச நிலை வரையில் அமையும்.

சேவின் விதிக்கு மிகவும் நெருங்கிய தொடர்புடைய மற்றொரு எடுகோள் தேவைப்படுகிறது. அதாவது, பணம் என்ற பொருள், மற்றப் பொருள்களைப்போல் அல்லாமல், தனக்கெனப் பயன் படாத ஒரு பொருளாகும் என்பது. அதற்கென அது தேவைப் படாத ஒரு பொருள். இருப்பினும், அதனை மக்கள் ஏன் வைத் திருக்கிறார்கள்? அதனைத் தமக்கெனப் பயன்படுத்தாது, மற்றப் பொருள்களுக்காக மாற்றப் பயன்படும் மத்தியமாகப் (medium) பயன்படுத்த மக்கள் அதனை வைத்திருக்கிறார்கள். அதன் புழக்க வேகத்திற்கு ஒரு உச்சநிலை வரம்புண்டு. இந்த வரம்பும், பண அளவும் நிர்ணய விலை நிலையைத் தேர்ந்தெடுக்கின்றன. அது தான் முன் குறித்த எல்லா விலைகளையும்விட அதிகமான விலை நிலையாகும்.

பணத்தின் பணிகளான கணக்கியல் அலகு (unit of a/c), மாற்றும் மதியம் (medium of exchange) ஆகியவற்றை வேறு படுத்த பாடின்கின் (Patinkin) தவறிவிட்டார். கிணக்கியல் அல காகப் பயன்படுகையில், நிர்ணய விலைகள், சே. விதி புழங்கும் அமைப்புடன் தொடர்பற்றவை. விலைகள் இரட்டித்தாலும், அல்லது அவைகள் முன்பைவிடப் பத்தில் ஒன்பது பங்கு குறைந்தா லும், பண்டங்களுக்கான தேவை, அளிப்பு ஆகியவைகளுக்கான எவரது நடவடிக்கையும் மாறவேண்டிய அவசியமில்லை. தராதர விலைகள் மட்டுமே முக்கியமானவைகள். ஆனால், பணம் மற்றப் பணிகளையும் புரிகின்றது. எனவே, அவைகளைப் பணத்தால் தவிர்க்க முடியாது. ஏனெனில், வருமானம் குவித்து வைப்பதற் காகப் பயன்படவில்லை. ஆனால், அது உடனடியாகவும், தொடர்ச்சி யாகவும் செலவிடப் பயன்படுகிறது. அதற்கெனப் பணத்தை விரும்பிக் குவிக்க எவருக்கும் விருப்பமிருக்காது. (இதனை அவர் களது சம்பள தேதிக்கு முந்திய நாளில் அவர்களிடம் உள்ள குறைந்தபட்ச ரொக்கக் கையிருப்பு குறிக்கிறது). ஆயினும், அவர் கள் பணத்தை (அதாவது அதன் தேவை) இரு சம்பள தேதிகளுக் குள்ள இடைக்காலத்தில் பயன்படுத்த வைத்திருக்கிறார்கள். அந்

நிலையில், அதன் தேவை, அவர்களது வருமானத்தில் பாதியாகும். (இது மிகவும் எளிதான நிலைமை) ஆகவே, அவர்களது நடத்தை ஒரு பொழுதும் முன்னுக்குப்பின் முரணானது அல்ல!

பணம் என்பது கணக்கியல் அலகாக மட்டும் பயன்படுமே யானால், அது சுற்ற வேண்டிய அவசியமில்லை. அந் நிலையில், பண அளவை எப்படியாயினும் கவலையில்லை. அப்படியாகில், உலகத்தின் எல்லா விலைகளும் ஒரு டாலரில் (அல்லது வேறு எந்த அளவிலும்–அதன் அளவு (Quantity) என்ற சொல்லுக்கே பொருள் இல்லாமல் போகும். ஆயினும் பணம் புழக்கத்தில் இருக்க வேண்டும் என்றால் (அதன் அமைப்பு, மற்றும் நிறுவனம் பற்றிய வரம்புகள் கொடுக்கப்பட்டிருந்தால்), அதன் அளவு விலை மட்டங்களுடன் தொடர்புடையது என்று சொல்லவேண்டும். இவ்வாறு சொன்னால் அது பணம் தனக்காக விரும்பாத ஒரு பொருள் என்ற எடுகோளை மீறியதாகும் எனப் பொருளில்லை.

சுருங்கச் சொல்லின், சேவின் விதி அதற்கென எடுத்துக் கொண்டால் (taken by itself) அது நிர்ணய விலைகளுடன் மிகவும் நெருங்கிய தொடர்புடையது. பண அளவைக் கோட்பாடு எந்த நிர்ணய விலை மட்டம் நிலவும் என நிர்ணயிக்கும். இது (பணத்தின் அளவையும், அதன் புழக்க வேகத்தையும் நிர்ணயிக்கும். நிறுவன மற்றும் அமைப்புத் தொடர்புடைய வரம்புகள் தொடர்புடையன). ஒவ்வொரு பொருளியல் செயலிகளும் (agents) குறைந்தபட்ச 'O' அளவு கையிருப்பைப் பெற்றிருக்கும்வரை சேவின் விதி மேற்கொள்ளும் எடுகோள்களும், பண அளவைக் கோட்பாட்டின் எடுகோள்களும் முன்னுக்குப்பின் முரணானவைகள் அல்ல. இந்த எடுகோளை, பண அளவைக் கோட்பாடு, சேவின் விதி ஆகிய இரண்டும் பகிர்ந்து கொள்கின்றன. ஒன்றுக்கொன்று முரணான எடுகோளாக அமையாமல், அவை இரண்டும் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புடையதாயும், நிரப்புதலுடையதாயும் அமைந்துள்ளன.

# 6. கூலிகள், விலைகள், வேலையும், ஆக்கமும்

## (Wages, Prices, Employment & Production)

### கிளாசிக்கல் வேலை நிறைவு சமநிலை
### (The Classical Full Employment Equilibrium)

ஒரு குறித்த காலத்தில், ஒரு குறித்த பண இருப்புடன், மொத்த விலைகள் அளவைப் பெருக்கிக் கிட்டும் தொகை மாறிலி (constant) என்பதைப் பண அளவைக் கோட்பாட்டின் எல்லா வாய் பாடுகளும் (formulations) வெளிப்படுத்தின. விலைகள் விகிதாசார மாகக் (proportionately) குறைந்தால், அதிகப் பொருள்களை விற்க முடியும். விலைகள் இணக்கமானவைகளானால், (flexible), சோம்பி யிருக்கும் சாதனங்கள் (idle resources) உள்ளவரை, அவை குறை யும். இக் குறைப்புகள் உருவப் பொருள் வெளிப்பாடுகளைத் தன் னியக்கமாகப் பெருக்கியும், அல்லது அதன் பெருக்கத்தைத் தொடர்ந்தும் அமையும். பணத்திற்காகப் பணி செய்யும் மக்க ளடங்கிய அமைப்பில், விலை இணக்கங்கள் எவ்வாறு வேலை நிறைவைப் பெருக்குகின்றன என்ற குறிப்பான கருத்தை ஆராய்வோம்.

கிளாசிக்கல் விலைக்கோட்பாடு (பணவியல் கோட்பாடுக்கு எதிரானது) என்பது, வேலை அளவும், வெளிப்பாடும், விலைமட்டங் களால் அன்றி அவைகளின் அகவிலை அமைப்புகளால் முதற்கண் முடிவாக்கப்படுகிறது. குறிப்பாக, உற்பத்தியாளர்களின் வெளிப் பாடு, வேலை பற்றிய முடிவுகள், அவர்தம் செலவுகள், வாங்கு வோர் விலை, ஆகியவற்றின் தொடர்பைச் சார்ந்தவையாகும். பகுப்பாய்வினைச் சார்ந்த இந்தப் பகுதியை மட்டும் (1) தொழில் துறைகளிடையே நிறைவுப் போட்டி இருக்கிறது என்றும்

(2) தொழில்துறைகள் எல்லாம் செங்குத்து இணைப்புத் தன்மை யனஎன்றும்; தொழில் ஒன்றையே அது கூலி கொடுத்து (குறித்த நிலை முதல் சரக்கு, இயற்கை வள) ஆதாரப் பொருள் பெற்று இறுதி ஆக்கத்தை வெளிப்படுத்துகிறது என்றும் அவை இடைநிலைப் பொருள்களை வெளிப்படுத்தா என்ற எடுகோள்களைக் கொண்டு சுருக்கலாம். இவ்வெடுகோள்களை விலக்கினாலும், முடிவுகள் பெருமளவுக்கு மாறாதவை; ஆயினும், அவை பகுப்பாய்வினைச் சுருக்கும் பணியைச் செவ்வனே செய்கின்றன. விற்பவர்கள் அதிக பட்ச இலாபத்தை எதிர்பார்க்கிறார்கள் என்ற மற்றொரு எடு கோள் அவசியம்.

போட்டியுள்ள தொழில்துறையில், விலையும் இறுதி நிலைச் செலவுகளும் (marginal cost) சமமாக இருந்தால், தங்களுக்கு அதிகபட்ச இலாபம் கிடைக்கும் என்பதை ஒவ்வொரு உற்பத்தி யாளரும் உணர்வார். ஒவ்வொரு விற்பனையாளரும் தனது (அதிகமாகும்) வரம்புச் செலவுகள், (தனக்குக் கிட்டும்) விலைக்குச் சமமாக்கும் வரை உற்பத்தியைப் பெருக்குவார். கூலி வீதங்களும், வரம்புச் செலவுகளும் எத்தன்மைத் தொடர்புடையன? தொழில் மட்டும் மாறும் தன்மையுடைய உள்ளீடு (input), அதாவது இறுதி நிலைச் செலவு,—அதிகப்படி ஆக்கத்திற்கான அதிகப்படிச் செலவு என்பது கூலி வீதத்தை இறுதிநிலை உருவப் பொருள் ஆக்கம் (marginal physical product) என்பதனால் வகுத்துக் கிடைக்கும் தொகைக்குச் சமமாகும் .இறுதி வேலையாள் மொத்த ஆக்கத்திற்கு 10 அலகுகள் சேர்த்தால், அவ்வாக்கத்தின் இறுதி நிலைச் செலவு அவரது கூலியில் பத்தில் ஒரு பங்காகும். ஆக்கத்தின் விலை ஒரு அலகுக்கு 5 டாலர்கள் என்றும், கூலி வீதம் 30 டாலர்கள் என்றும் வைத்துக் கொள்வோம். இந்நிலையில் இறுதி வேலையாள் ஆக்கத்திற்கு 6 அலகுகள் உற்பத்தியைச் சேர்க்கும் வரை ஆக்கத் தைப் பெருக்கலாம். விலை, இறுதிச் செலவு, ஆகியவைகளைச் சமமாக்கும்வரை ஆக்கம் பெருகலாம் என்றால், உள்ளீடுகள் (inputs) அவைகளுக்கான கூலி வீதத்தையும், அவை வழி இறுதி நிலை உருவப் பொருள் ஆக்கத்தின் மதிப்பையும் சமமாக்கும் வரை, பெருக்கலாம் என்பது நாம் கொண்டுள்ள எடுகோள் உள்ள அமைப்புக்குப் பொருந்தும். இலாப உச்சப்பாடு கொள்கையின் வாய்பாடு என்பது (algebraic) மறு அமைப்பாகும். நமது உதா ரணத்தைத் தொடர்வோமேயானால், விலை (5 டாலர்) இறுதிச் செலவுக்குச் (marginal cost) (30—6 அலகுகள்) சமம் என்ற நிலை, கூலி (30 டாலர்) இறுதி ஆக்கத்திற்கு (அலகுக்கு 5 டாலர் வீதம் 6 அலகுகள்) சமம். இதனைக் கீழ்க்காணும் விதம் கூறலாம் :

$$P = MC \text{ என்றிருந்தால்}$$

$$MC = \frac{W}{MPL} \text{ என்றால்}$$

பிறகு $$W = P \cdot MPL$$

இங்கு P என்பது உற்பத்தியின் அலகு விலை; W என்பது கூலி வீதம் ; MC என்பது உற்பத்தியின் இறுதிநிலைச் செலவு, MPL என்பது தொழிலினால் கிடைத்த இறுதி நிலை உருவப் பொருள் ஆக்கம், P· MPL என்பதன் தொகுதி இறுதிநிலை ஆக்கத்தின் மதிப்பு. இதனை வேறு வழியில் மாற்றியமைக்கலாம். அதாவது

$$MPL = \frac{W}{P}$$

இச் சமன்பாட்டு வெளியீடு (அல்லது உள்ளீடு) என்பது இறுதிநிலை ஆக்கம் உண்மைக் கூலி ('real wage')—அதாவது பணக்கூலி, ஆக்கத்தின் விலை மட்டத்தைக் கொண்டு சுருக்கப்பட்டது (deflated) வரை பெருகலாம் எனக் கூறுகிறது.

கூலிகளுக்கும் விலைகளுக்குமுள்ள தொடர்புகள்தாம் ஆக்கத்தையும் வாடகைகளையும் நிர்ணயிக்கின்றன என்பது இவ்வாய்பாடுகளின் வாயிலாகத் தெரியும் உண்மைகள். எனவே, கூலிகளும் விலைகளும் ஒரே விகிதத்தில் அதிகமானால், குறைந்தால், நிறுவனங்கள் வாடகைகளைக் கூட்டக் குறைக்க அல்லது வேறு உற்பத்தியைப் பெருக்க முற்படா.

ஏதேனும் (கொடுக்கப்பட்ட முதல், இயற்கை வளமுள்ள) ஒரு தொழில் நிறுவனத்தின் வெளிப்பாடு (Output) அதிகரித்துக் கொண்டு போனால் அதன் இறுதிநிலைச் செலவுகள் (MC) அதிகரிக்கும். (அதே சமயத்தில் இறுதிநிலை ஆக்கம் குறையும்) எனக் கற்பனை செய்யலாம். மொத்த வெளிப்பாடு என்பது எல்லா நிறுவனங்களின் வெளிப்பாடுகளின் கூட்டுத் தொகை என்பதால், குறைந்து செல் விளைவு விதி (Law of DR) மொத்தத்தில் எல்லா நிறுவனங்களுக்குச் செல்லுபடியாகும் என்பதையும் கற்பனை செய்யலாம்; அதிகப்படி வேலையாட்களை ஓர் அமைப்பில் வாடகைக்குச் சேர்த்தால், மொத்த உற்பத்தி பெருகும்; ஆனால், வெளிப்பாடு, உள்ளீடுக்கு ஏற்றவாறு அமையாமல் சற்றுக் குறைந்து காணும்.

இந்தக் கோட்பாடு முழுமைப்பெற இன்னுமொரு கருத்துத் தேவைப்படுகிறது. அது தொழிலுக்கான அளிப்பு வளைகோடு என்பது உண்மைக் கூலியின் சார்புத் தொடர்புடையது என்பதாகும். இவ் வளைகோடு இடப்பக்கம் மேல்நோக்கிச் செல்லும்.

ஆயினும், அது சில சமயங்களில் செங்குத்தாகவும் அல்லது பின் நோக்கி வளையும் தன்மையது (அதாவது அதிகப்படி உண்மைக் கூலி வீதம், சில வேலையாட்களை ஓய்வு எடுத்துக் கொள்ளத் தூண்டும்).

ஒரு கொடுக்கப்பட்ட பணக்கூலி வீதங்களிலும், விலைநிலை களிலும், வேலை கொடுப்போர் குறைந்த அளவு வேலையாட்களை அமர்த்த முற்படுவார்கள் என்று வைத்துக் கொள்வோம். நிறைவுப் போட்டி யிருக்குமாகில், வேலையில்லாமல் இருக்கும் தொழிலாளிகள் சோம்பித் திரிவதைவிட, குறைந்த கூலிக்கு வேலை செய்ய முற்படுவார்கள். இதனால் அதிகப்படி வேலை, ஆக்கம் இவ்விரண்டும் அதிகமாகும் என்பது விலைகளை ஒட்டி யிருக்கும். விலைகளும் பணக்கூலி வீதம் குறைவுகளுக்கு விகிதா சாரமாக அமைந்தால், வேலை கொடுப்பவர்கட்கு வேலையைப் பெருக்கவோ அல்லது உற்பத்தியைப் பெருக்கவோ தூண்டுதல்கள் இல்லை. கூலிகள் குறையாமலிருந்தாலும் அல்லது அவைகள் பணவிலை வீதத்தைவிடக் குறைந்த விகிதாசாரத்தில் அமைந் தாலும், வேலை வழங்குவோர், வேலையில்லாதவர் சிலரைச் சேர்த் துக் கொள்வார்கள்.

வேலை, வட்டி, பணம், பொதுக் கோட்பாடு என்ற தமது நூலில் (General Theory of Employment, Interest, Money) பொதுக் கூலிக் குறைப்பு நிகழுமாகில், விற்கும் விலைகள் என்ன வாகும் என்பதற்குக் கிளாசிக்கல் கோட்பாடு பொருத்தமான விளக்கத்தைத் தரவில்லை என்று ஜான் மேனர்ட் கீன்ஸ் (John Maynard Keynes) கருத்துத் தெரிவித்திருக்கிறார்.[1] ஒரு தனி நிறுவனம் அல்லது தொழிற்சாலைக்குப் பயன்படும், எடுகோள் ஒன்றை—அதாவது கூலி விகிதத்திற்கும், பண்டங்களுக்கான பணத்தேவைக்கும், தொடர்பில்லையாதலால், கூலிகள் குறையு மானால், விலைகள் மாறாமலிருக்கும் என்பதை—முழு அமைப் புக்கும் பொருத்துவது கிளாசிக்கல் ஆசிரியர்கள் செய்த பெரும் தவறாகும். அதைவிடக் கூலிகள் குறையும் விகிதத்தில், விலை களும் குறைந்தால், கிளாசிக்கல் கருத்தினரது தர்க்கம் நன்கு பொருந்தும் என்பது கீன்ஸ் கருத்து. வேலையின்மை, இணக்கமான கூலிகள் ஆகியவைகள் இருக்குமானால், கூலிகளும் விலைகளும் பொதுவாகச் சுருங்குமென எதிர்பார்க்கலாம். இந்த நிலை கால வரம்பற்று, தொடர்ந்து நிலைக்கும். ஏனெனில், இதனால் வேலை

1 ஜே. எம். கீன்ஸ் : வேலை, வட்டி, பணம் பொதுக் கோட்பாடு: அதிகாரம் இரண்டு: 'கிளாசிக்கல் பொருளாதார முற்கோள்கள்' காண்க.
(See Chap. 2: 'Postulates of the Classical Economics')

அதிகப்படியாகாது; ஆனால், வேலையில்லாதவர் மிகுந்து காணப்படுவதால், பணக் கூலிகளை மீண்டும் சுருக்க ஏதுவாகும்.

கீன்சின் கருத்து, கிளாசிக்கல் பகுப்பாராய்வினரது மற்றொரு சிறந்த பிரச்சினையை ஒதுக்கியது. அது நாம் முன்னமே ஆராய்ந்த ஒரு கருத்து—அதாவது பண அளவைக் கோட்பாடு (The Quantity Theory). உற்பத்தி பெருகாமல், கூலிகள் குறையும் அளவிற்கு, அதே வேகத்தில் விலைகள் குறையுமானால், மக்களிடத்தில், தொழில் நிறுவனங்களிடத்தில், ஆளா இருப்புகள் (idle balences) அதிகமாகும். ஆனால், அறிவுள்ள மாந்தர் எவரும் ஆளா இருப்புகளைக் குவிக்க வெறுப்பர். விலைகள் குறைந்தால் உண்மைச் செலவு அதிகமாகும். இது விலைகளும் கூலிகளும் மீண்டும் குறைவதைத் தடுக்கும்.

குறிப்பிட்ட ஒரு பண அளவும், அதன் புழக்கச் சுற்று வேகமும் (velocity) கொடுக்கப் பட்டிருந்தால், அதிகப்படி ஆக்கத்தை விற்க வேண்டுமேயானால், விலைகள் குறைந்தாக வேண்டும் என மேற்கூறிய கருத்தை மற்றொரு வகையில் தெரிவிக்கலாம். ஆனால், விலைகளுக்கு ஏற்பக் கூலிகள் குறைந்தால், ஆக்கம் பெருகுவதற்கு அவை தூண்டுதல்களாகும். அதாவது கூலிகள் விலைகளைவிட அதிகமான விகிதத்தில் குறைய வேண்டும். கூலி வீதங்கள் இணக்கமானவைகள் ஆனால், பணக்கூலிகள் குறைந்தாக வேண்டும். ஆனால், அக் குறைப்பு உச்சநிலைப் பொருள்களை இலாபத்திற்கு விற்கக்கூடிய விலைமட்டத்திற்குக் கீழ்ப் போகலாம், எந்த அளவுக்கும் குறையலாம்.

மேற்கூறிய கருத்துகளைக் கீழ்க்காணுமாறு வரிசைப்படுத்தலாம்: வேலையின்மை பணக் கூலியைக் குறைக்கிறது; விலைகள் கொடுக்கப்பட்டிருந்தால், இது வேலை, ஆக்கம் இவ்விரண்டையும் மிகுவிக்க உற்பத்தியாளர்களைத் தூண்டுகிறது: ஆனால், பண அளவு கொடுக்கப்பட்டிருந்தால் பணச்சுற்று வேகம் (velocity) மாறிலியானால் அதிகப்படி ஆக்கம் குறைந்த விலைக்குத்தான் விற்க முடியும். ஆனால், பணக்கூலிக் குறைவுகளைவிடத் தாழ்ந்த நிலையில் விலைகளும் குறைகின்றன. விலைகுறைவுகள் ஆக்க அதிகரிப்புத் தூண்டுதலைக் குறைக்கும், ஆயினும் அதனை முழுவதும் குறைக்காது. கூலிகள் குறைந்த அளவிற்கு விலைகள் குறையுமேயானால், உற்பத்தியைப் பெருக்க, ஊக்குவிப்புகள் கிடைக்காமல் போவதால், விலைகள் மீண்டும் குறைய வழியில்லை. மேலும் விலைகள் குறைந்து, உற்பத்தியும் குறைந்து காணப்படுவதால், ஆளாயிருப்புகள் மிகவும் அவசியமானவைகள் ஆகின்றன. ஆனால், கூலிகளைவிட விலைகள் குறைந்தால், உற்பத்தியைப் பெருக்க

ஊக்குவிப்பு, அதிகப்படி ஆக்கத்தை விற்க அங்காடி ஆகிய இரட்டை வசதிகள் கிட்டும்.

பணக்கூலிக் குறைப்பு (குறைந்த அளவு விலைக்குறைப்புடன் தொடர்ந்த) வேலையின்மையைத் தவிர்க்கப் போதாது என்றால், பணக்கூலிகள் மீண்டும் குறையும், விலைகள் மீண்டும் குறையும் (மீண்டும் கூலிகளைவிடக் குறைந்த நிலையில்) இவை வேலை நிறைவு (full employment) உச்ச ஆக்கம் (max. output) இவைகள் கிட்டும் வரை திரும்பத் திரும்ப நிகழ்பவை. வேலை நிறைவு, உச்ச ஆக்கம் ஆகியவை கிட்டிய பின்னர் கூலிகள், விலைகள், வேலை, ஆக்கம் இவை யாவும் நிலைபெறுகின்றன.

இதனை ஓர் எண்வழிச் சான்றுகொண்டு விளக்கலாம். பண அளவு 50 டாலர்கள் என்றும், அதன் சுற்று வேகம் (circular velocity) என்பது 2 என்றும் வைத்துக்கொள்வோம். இதனால் பண வருமானம் (money income) என்பது 100 டாலர்கள் என்ற வீதத்தில் அமையும் என்பது பொருள். இந்த வீதம் இதை விடக் கூடவோ அல்லது குறையவோ செய்யாது. இது விலைகளை, அளவைகளைப் பலவழிகளில் கூட்டியமைக்கும். இவைகளைக் கீழ்க் காணும் அட்டவணை 6–1 விளக்கும்.

அட்டவணை 6–1.

P, Y கொடுக்கப்பட்ட M உடன் கொள்ளும் கூட்டமைப்புகள்

(Possible Combinations of P & Y with Given M)

| | P | Y | | P·Y |
|---|---|---|---|---|
| டாலர் | 2 | 50·0 | டாலர்கள் | 100 |
| | 1·2 | 83·3 | | 100 |
| | 1·0 | 100·0 | | 100 |
| | ·93 | 107·5 | | 100 |
| | ·833 | 120·0 | | 100 |
| | ·667 | 150·0 | | 100 |
| | ·5 | 200.0 | | 100 |

மேற்காணும் அட்டவணையில் ஒவ்வோர் உற்பத்தி ஒரு குறிப்பிட்ட அளவு தொழிலை உள்ளீடாகப் பெறுகிறது. அதனைக் கீழ்க்காணும் அட்டவணை 6-2 காட்டுகிறது.

அட்டவணை 6–2.

மொத்த உற்பத்திச் சார்புத் தொடர்பு
(Aggrecate Production Function)

| Y | N | MPL (தொழில் இறுதிநிலை ஆக்கம்) |
|---|---|---|
| 50 | 18·5 | 2·7 |
| 83·3 | 32·4 | 2·4 |
| 100 | 40 | 2·2 |
| 107·5 | 43·5 | 2·15 |
| 120 | 50 | 2 0 |
| 150 | 67·6 | 1·7 |
| 200 | 107·6 | 1·25 |

தொடக்க விலை 1 டாலர் என்றும், தொடக்கக் கூலி மட்டம் 2.20 டாலர்கள் என்றும் வைத்துக் கொள்வோம். இவைகளினுல் உண்மைக்கூலி 2.2 டாலர்கள் ஆகும். அட்டவணை 6–2ல் இருந்து மிகவும் இலாபகரமான வெளிப்பாடு 100 அலகுகள் என்பது புலனுகும். இந்த உற்பத்திக்கு 40 அலகு தொழில் உள்ளீடு தேவைப்படுகிறது. (N என்ற குறியீடு) அட்டவணை 6–1ல் இருந்து இந்த 100 அலகு வெளிப்பாட்டினை 1 டாலருக்கு விற்கலாம் என்பது புலனுகும். பண அளிப்பும் சுற்று வேகமும் கொடுக்கப்பட்டிருந்தால், மேற்கூறிய 100 அலகுகளை 1 டாலருக்கு விற்கலாம். W, P, Y, & N ஆகிய குறிகளின் கூட்டு மேற்கூறிய இலாப உச்சப்பாடு, பண அளவைக் கோட்பாடு ஆகிய இரண்டு நிபந்தனைகளையும் சரி செய்கிறது.

40 அலகுகள் தொழிலுக்கு மேற்பட்ட தொழில் வேலைக்குத் தயாராக இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அவர்களிடையே ஏற்படும் போட்டி காரணமாக பணக்கூலி வீதம் 2 டாலராகக் குறைகிறது. விலைகள் குறையாமலிருந்தால், உண்மைக் கூலி (real wage) வீதமாக 2.0 டாலர்கள் ஆகக் குறையும். இதனுல், 50 அலகு தொழில் உள்ளீடு கொண்டு உற்பத்தி செய்த 120 அலகுகள் வெளிப்பாட்டை விற்றுல் இலாப உச்சப்பாடு கிட்டும். (இதனை அட்டவணை 6-2ல் காண்க). ஆனுல், இது சாத்தியமாகாது. அதிகப்படி வெளிப்பாட்டு அலகுகளை முன்பிருந்த அதே விலைக்கு விற்க முடியாது. ஆகவே, வெளிப்பாடு விரிந்தால் விலை குறைந்தாக வேண்டும். எனவே, வெளிப்பாட்டை

100–ல் இருந்து 120 அலகுகளாகப் பெருக்க முடியாது. அதை விட 2 டாலர் கூலி மட்டத்தில், விலைகள் ·93 டாலர்களாகக் குறைந்து 107.5 அலகுகளை விற்கக் கூடிய நிலை ஏற்படுவதை அட்டவணை 6–2ன் வாயிலாக அறியலாம். இப்பொழுது உண்மைக் கூலி வீதம் 2·15 டாலராகும். இது 43·5 அலகுகள் தொழிலை அமர்த்தி, 107·5 அலகுகள் உற்பத்தியைப் பெருக்கத் தூண்டும்(அட்டவணை 6–1 காண்க) இந்த வெளிப்பாடு ·93 டாலர்களுக்கு விற்க முடியும். இந்தக் கூட்டும் இலாப உச்சப்பாடு, பண அளவைக் கோட்பாடு ஆகியவைகளுக்கான நிபந்தனைகளைப் பூர்த்தி செய்கிறது.

43.5 தொழில் அலகுகளுக்கும் அதிகமான தொழில் அலகுகள் வேலைக்கு இருக்கின்றன என்று வைத்துக் கொண்டால் கூலிகள் மீண்டும் குறையும். தொழில் அளிப்பு வளைகோடு கீழ்க்காணும் அட்டவணையில் (6-3) காணுமாறு இருக்கிறது என உதாரணமாக வைத்துக் கொள்வோம்.

அட்டவணை 6-3

தொழில் அளிப்பு
(Supply of Labour)

| உண்மைக் கூலிகள் (Real wages) | தொழில் அளிப்பு (Supply of Labour) |
|---|---|
| 2·4 | 56 |
| 2·2 | 53 |
| 2·15 | 52 |
| 2·0 | 50 |
| 1·7 | 46 |
| 1·25 | 40 |

இதனையும், அட்டவணை 6-2யும் ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து 'வேலை நிறைவு'க்கு (full employments) 120 அலகுகள் வெளிப்பாடு தேவைப்படுகிறது என்பது புலனாகும். இந்த வெளிப்பாட்டு மட்டத்தைத் தவிர மற்ற எந்த மட்டத்திலும் தொழிலுக்கான தேவை, அளிப்பு ஆகிய இரண்டும், 2·0 டாலர் உண்மைக் கூலி நிலையில், சமமாக இருக்காது. இந்தச் சமன்பாடு கிட்ட கூலி எந்த அளவுக்குக் குறைய வேண்டும் என்பதை அட்டவணை 6-1ல் இருந்து கணக்கிடலாம். 120 அலகுகள் உற்பத்தியை ·833 டாலர்கள் என்ற விலை ஒன்றைத் தவிர

எந்த மற்ற விலையிலும் விற்க முடியாது. (பண அளவும் (M); சுற்று வேகமும் (C) கொடுக்கப் பட்டிருந்தால்), இந்த அளவு உற்பத்தியை விளைவிக்க, உண்மைக் கூலி 2 டாலராக இருந்தால் பணக்கூலி 1·667 டாலராகக் குறைய வேண்டும் (2×·833) வேலையாளர்களிடையே உள்ள போட்டி கூலிகளை இந்த அளவிற்குக் குறைத்தால், வேலையின்மை தவிர்க்கப்படும். W, P, Y, N ஆகியவைகள் இந்த அளவுகளைப் பெற்றால் இலாப உச்சப்பாடு, பண அளவைக் கோட்பாடு ஆகியவைகளின் நிபந்தனையுடன் பணக் கூலியும் நிலைபெறும். இந்த நிலையில் எந்த அளவிற்கு, வேலை தேடுபவர்கள் இருக்கிறார்களோ அந்த அளவிற்கு வேலைகளும் இருக்கும். உண்மைக்கூலி 9 சதவீதம் குறைவதற்குப் பணக் கூலிகள் ·533 டாலர்களாக அதாவது 25 சதவீதம் குறைய வேண்டும் என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வதிகாரத்தின் தொடக்கத்தில் கேட்ட வினாவிற்குக் கீழ்க் காணும் விதம் விடையளிக்கலாம். வேலை அளவு, ஆக்கம் இவ்விரண்டும் விலைநிலைகளின் அமைப்பையன்றி விலை நிலைகளை ஒட்டியவையாகா. அவைகள் உண்மைக் கூலியை அதாவது கூலிக்கும் விலைக்கும் உள்ள விகிதத்தை ஒட்டியவை. ஆனால், விலைக்கும் கூலிக்கும் உள்ள இடைவெளியை விரிவடைய—அதாவது உண்மைக்கூலி விகிதத்தை—பணக்கூலி மட்டத்தைக் குறைக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. வேலை விரும்புவோர் இடையே உள்ள போட்டி பணக்கூலிகளை முதற்கண் குறைக்கிறது. இதனால் உண்மைக்கூலி, விலை மட்டம் இரண்டுமே குறைகின்றன.

இந்தக் கோட்பாட்டமைப்பைக் கீழ்க்காணும் சார்புத் தொடர்பு அமைப்பின் வாயிலாக வெளிப்படுத்தலாம்.

$$y = y(N) \qquad (1)$$

$$\frac{dy}{dN} > O,$$ ஆனால் N அதிகமாக இது குறையும்

$$\frac{dy}{dN} = \frac{w}{p} \qquad (2)$$

$$N = N\left(\frac{w}{p}\right) \qquad (3)$$

$$\frac{dN}{d\frac{w}{p}} > O$$

$$M = l\,py \qquad (4)$$

y = வெளிப்பாடு

N = வேலை (employment)

w = பணக்கூலி வீதம்

p = விலை மட்டம்

M = பண அளவு

l = பேரங்களுக்கான பணத்தேவை. இது வருமானத்தின் ரொக்க இருப்பைக் குறிக்கும் பின்னம்.

சமன்பாடு (1) அமைப்பின் மொத்த ஆக்கத்தின் சார்புத் தொடர்பு வெளிப்பாடு அதிகமாகும். ஆனால், அதன் மிகைத் தொழில் உள்ளீட்டின் அதிகரிப்பின் விகிதத்தைவிடக் குறைந்த வடிவம் உடையது. சமன்பாடு (2) உச்ச இலாப நிலையை உணர்த்துகிறது. அதாவது உண்மைக் கூலித் தொழிலின் இறுதிநிலை ஆக்கத்திற்குச் சமம் என்பது. சமன்பாடு (3) தொழில் அளிப்பு வளை கோட்டை உணர்த்துகிறது. சமன்பாடு (4) பண அளவைக் கோட்பாடு.

## கிளாசிக்கல் மாதிரியின் வரிப்பட விளக்கம்
## (Grabhical Representation of classical Model)

கிளாசிக்கல் மாதிரியைக் கீழ்க்காணும் வரிப்படம் (6–1) வாயிலாக விளக்கலாம். கீழ்க்காணும் படத்தின் A பகுதி குறைந்து செல் விளைவு விதிக்கு (Law of Deminishing Returns) உட்பட்ட வழக்கமான ஆக்கத் தொடர்பை விளக்குகிறது. ஒவ்வொரு தொழில் உள்ளீட்டுக்கு ஏற்ற வெளிப்பாடு அமையும். B பகுதி தொழில் அளிப்பு வளைகோடு தேவை வளைகோட்டை வெட்டும் இடத்தைக் குறிக்கிறது. தேவை வளைகோடு, அதாவது, தொழில் இறுதிநிலை ஆக்கம் (marginal product of labour) என்பது A பகுதியில் காணும் ஆக்கச் சார்புத் தொடர்பின் சரிவாகும். வேலை அதிகமாக அதன் சரிவு குறையும் தன்மை உடையது; ஏனெனில், ஆக்கச் சார்புத் தொடர்பு கீழ்நோக்கிச் செல்கையில் உட்குழியும் (concave) தன்மையானது. அதாவது சார்புத் தொடர்பின் சரிவு குறைந்து செல்கிறது. ஒவ்வொரு ஆக்கச் சார்பினுக்குத் தக்கவாறு ஒரே ஒரு இறுதிநிலை ஆக்க வளை கோடு இருக்கும் (margina! Product curve) ஆக்கச் சார்புத் தொடர்பின் சரிவு மாறாமல் அதன் உயரம் (height) மட்டும் மாறு மேயானால் இறுதிநிலை ஆக்க வளைகோடு (marginal Product curve) மாறாமலிருக்கும். (இது உழைப்பின் சராசரி ஆக்க அதிகரிப்பே யல்லாமல், அதன் இறுதிநிலை ஆக்க அதிகரிப்பல்ல). ஆனால், ஆக்கச்

சார்புத் தொடர்பின் சரிவு மாறுமேயானல், இறுதிநிலை ஆக்க வளை கோடு மாறும்.













A. ஆக்கச்சார்பு
(Production Function)

B. தொழில் அங்காடிச் சமநிலை
(Labour Market Equilibrium)

C. பண அளவைக் கோட்பாடு
(Quantity Theory)

D. பணக்கூலி சரிக்கட்டு
(Money Wage Adjuestment)

படம் 6.1

உழைப்பின் தேவை அளிப்பு வளைகோடுகள் வெட்டும் இடம் வேலை நிறைவைக் (full employment) குறிக்கிறது. அந்த நிலையில்

வேலை நிறைவு $N_0$ என்பதும் உண்மைக்கூலி $(W/P)_0$ என்பதும் புலனுகின்றன. இவை இரண்டும் வேலை நிறைவுக்கு மிகவும் அவசியமானவைகள். உண்மைக்கூலி இதைவிட அதிகமானுல், உழைப்பின் அளிப்பு அதன் தேவையை மிஞ்சும். அதேபோல் உண்மைக் கூலி இதைவிடக் குறைந்தால், உழைப்புப் பற்ருக்குறை நிலை ஏற்படும். உழைப்பு அங்காடி (labour market) நிறைவுப் போட்டி (Perfect competition) உடையது எனக் கொண்டால், முன் நிபந்தனைப் பணக்கூலியைக் குறைக்கும்; பின் நிபந்தனைப் பணக் கூலியை (money wage) அதிகமாக்கும். பணக்கூலி நிலைபேறு (stablity of money wages) என்பது சமன்பாடு நிலைமையை உணர்த்துகிறது; ஆகவே சமநிலை நிலை $\left(\frac{W}{P}\right)_0$ என்ற உண்மைக் கூலித்தேவை என்பது தெளிவு.

C பகுதியில் விலை மட்டத்தின் சமன்பாட்டைப் பார்க்கிருேம். இதில் காணும் மூலைக் குறுக்குக்கோடு (diagonal) lpy (அதன் சரிவு 1/1) ஒவ்வொரு பண வருவாய் மட்டத்திற்கு ஏற்ற பண அளவை அதாவது ஒவ்வொரு பண அளவைத் தாங்கக் கூடிய வருவாய் மட்டத்தை வெளிப்படுத்துகிறது. அமைப்பில் உள்ள மொத்தப் பணச் சரக்கு $M_0$ செங்குத்து வரியில் குறிப்பிட்டவாறு அமைந்தால், பண வருமானம் $(Py)_0$ என்ற மட்டத்தை மிஞ்சாது. $y_0$ என்பது நமக்கு முன்பே (A பகுதியிலிருந்து) தெரிந்தமையால் சமநிலை விலைமட்டத்தை $P_0$ எளிதில் கணிக்கலாம்.

D பகுதி தேவையான பணக்கூலி மட்டத்தைக் காணப்பயன் படுகிறது. B பகுதியில் கண்ட சமநிலை உண்மைக் கூலியை இந்தப் பகுதியில் மூலைக் குறுக்குக் கோடாக வரைந்திருக்கிருேம். ஏதேனும் ஒரு உண்மைக்கூலி, விலைக்கும் பணக்கூலிக்கும் உள்ள விகிதமாகும். எனவே, ஒவ்வொரு உண்மைக் கூலிக்குத்தக்கவாறு P என்பதும் W என்பதும் பலவித கூட்டுத் தொடர்புகளை மேற் கொள்ளும். இவையெல்லாம் வழி செல்லும் நேர்கோட்டில் அமைந்தவை; இது உண்மைக் கூலியை அளவிடுகிறது. சமநிலை உண்மைக்கூலி, சமநிலை விலைமட்டம் ஆகியவை கொடுக்கப்பட்டிருந்தால், இவைகளுக்கு ஏற்ற பணக்கூலி நிலை ஒன்றுதான் இருக்க முடியும். இதனை சமநிலை விலை $P_0$ என்பதையும், உண்மைககூலி கோணம் (B பகுதியில் காணப்படுவது) இவைகளை வெட்டுமிடத்திறன் செங்குத்து ஆயத்தொலை (coordinate) குறிப் பிடுகிறது. (இதனை D-பகுதியில் காணலாம்.)

பல மாறுதன்மைகளின் மதிப்புகள் மாறுவதாலும், முழுமைத் தொகுதியின் அளவைகளின் (parameters) மாறுவதாலும், சமநிலைக்கு ஏற்படும் விளைவுகளை ஆய்வதின் வழி, மேற்கூறிய மாதிரியையும், விளக்கப் படத்தையும் இன்னும் சற்று விரிவாக விளக்கலாம். எடுத்துக்காட்டாக, பண அளவு (M) மாறுவதால், அல்லது ஆக்கச் சார்புத் தொடர்பு (production function) மாறுவதால், அல்லது உழைப்பு அளிப்பு அட்டவணை மாறுவதால், ஏற்படும் விளைவுகளைப்பற்றி ஆராய்வோம்.













படம் 6-2.

பணஅளவு அதிகமானால் ஆக்கத்தின் அளவும் அதிகமாகும். அதாவது P, y ஆகியவைகள் படம் 6-2-ன் C-பகுதியில் கண்டவாறு இதற்கு முந்திய ஆக்கம் $y_0$ இப்பொழுது அதிக விலைக்கு விற்கப்படுகிறது. அதாவது விலை $P_1$ என்ற நிலை. பணக்கூலிகள் அதிகமாகாமல் இருப்பின் உற்பத்தியாளர்கள் ஆக்கத்தை அதிகரிக்க முனைவார்கள். இதற்குத் தேவையான தொழிலுக்கு அவர்கள் அரை கூவுவார்கள். இதைவிட அதிகமான தொழிலாளர்கள் கிடைக்கமாட்டார்கள் ஆதலால், (உண்மையில் குறைவானவர்களே கிடைப்பார்கள்) அதிகப்படித் தேவையை அழிக்கப் பணக்கூலி இன்னும் சற்று மிகுந்து காணவேண்டும். (பழைய கூலி, புதுக்கூலி நிலைகளுக்கான தேவை, அளிப்பு வளைகோடுகளின் இடைவெளி இதனை உணர்த்துகிறது என்பதைப் படம் 6-2 B பகுதியில் காண்க). பழைய உண்மைக்கூலி வீதத்தைப் பணக்கூலி விகிதாசாரப்படி உயர்த்தி பழைய உண்மைக்கூலி வீதத்தை மீண்டும் பெறச் செய்கிறது. இப் புதுப் பணக்கூலி வீதம் எது? என்பதைப் படத்தின் D-பகுதி விளக்குகிறது.

பணத்தின் அளவு அதிகரிப்பு, கூலிகள், விலைகள் ஆகிய இரண்டினையும் சம விகிதத்தில் உயர்த்துகிறது. அதே சமயத்தில் ஆக்கம், உண்மைக்கூலி, வேலை ஆகியவைகளை அது ஒன்றும் செய்வதில்லை. பணத்தின் அளவு குறைவுபட்டால் நேரும் விளைவுகளையும் மேற்கூறியவாறு விளக்கலாம்.

ஆக்கச் சார்புத்தொடர்பு மாறுமானால் நேரிடும் விளைவுகளைப் பற்றி அடுத்து ஆராய்வோம். இம் மாறுதல்களைப் படம் 6–3 விளக்குகிறது. இதில் சராசரி, இறுதிநிலை தொழில் ஆக்கம் (average & marginal product of labour) இரண்டையும் புகுத்தி உள்ளோம்.

புது ஆக்கச் சார்புத்தொடர்பு y' என்பது புதியதொரு இறுதிநிலை ஆக்கத்தைக் (MPL') கொடுக்கிறது. உண்மைக்கூலி சமநிலை $\left(\frac{W}{P}\right)_0$ யிருந்து $\left(\frac{W}{P}\right)_1$ ஆக உயர்கிறது. அதேபோல் சமநிலை வேலை அளவும் $N_0$-ல் இருந்து $N_1$-க்கு உயர்கிறது. வெளிப்பாடும் y ஆக உயர்கிறது. இது உயர்ந்த ஆக்கச் சார்புத் தொடர்பினாலும், அதிகப்படி வேலையினாலும் உயர்கிறது. M, l ஆகியவைகள் [அதாவது பணஅளவு (M) ரொக்க இருப்புப் பின்னம் (l)] ஆகியவை மாறாதவரை. அதிகப்படி வெளிப்பாடு குறைந்த விலைக்குத்தான் அதாவது $P_1$–க்குத்தான் விற்கமுடியும். விலை குறைந்தாலும், பணக்கூலி (இந்த எடுத்துக்காட்டில் $W_1$ ஆக உயர்கிறது

(புதுப் பணக்கூலி உயருமா அல்லது குறையுமா என்பது வளை கோட்டின் சரிவை ஒட்டியதாகும். ஆனால், உண்மைக்கூலி கண்டிப் பாக உயர்வாக இருக்கும்—ஏனெனில், விலைகள், கூலிகளைவிட அதிக மாகக் குறையும்).




படம் 6.3

தொழில் அளிப்பு அதிகமானல் அதன் விளைவுகளைக் கீழ்க் காணுமாறு சுருக்கிக் கூறலாம். குறைந்த உண்மைக்கூலி, அதிக வேலை, குறைந்த விலை மட்டம், பிறகு குறைந்த பணக்கூலி. இவை களில் நாட்டமுள்ள மாணவன் இவ் விளைவுகளைத் தானே உரு வாக்கிய விளக்கப்படங்களின் வாயிலாகச் சரி பார்க்கலாம்.

மேற்காணும் பகுப்பாய்வினை 'உண்மைப்' ('real') பகுதி பணத்தொடர்புடைய (monetary) பகுதி என இரு கூறுக்கலாம். உண்மைக்கூலி, வேலை மட்டங்கள், வெளிப்பாடு ஆகியவைகள் 'உண்மை'க் ('real') காரணிகளினுல் (factors) மட்டுமே நிர்ணயிக்கப்படுகின்றன. [அதாவது தொழில் இறுதிநிலை ஆக்கம், இறுதி நிலைப் பயனிலி (marginal disutility) அல்லது தொழில் அளிப்பிற்கு அடிப்படையான வேறுபல 'உண்மை'க் ('real') காரணிகளால் நிர்ணயிக்கப்படுகின்றன]. பணக்கூலிகள், விலைகள் ஆகியவைகள் பணத்தொடர்புடைய காரணிகளால் மட்டுமே நிர்ணயிக்கப்படுகின்றன. 'உண்மை'க் காரணிகள் மாறுவதால் விலைகள், கூலிகள் பாதிக்கப்படுகின்றன. ஆனுல், பணத்தொடர்புடையவைகள் மாறினுல் 'உண்மை' அளவுகளைப் பாதிப்பதில்லை. இதனுல்தான்போலும் கிளாசிக்கல் மரபினர் வெளிப்பாடு, வேலை, ஆகியவைகளின் கோட்பாடுகளை 'உண்மை'க் காரணிகளால் (சேவின் விதி) விளக்குகின்றனர். நிர்ணய விலை நிலைகளை நூலின் இறுதியில் அல்லது தனிப்பட்ட பணத்தொடர்புக் கோட்பாட்டின் வாயிலாக விளக்குகிறுர்கள்.

## விறைப்பான கூலிகளின் விளைவுகள்
## (The Effect of Rigid Wages)

தொழில் அங்காடியில் நிறைவுப் போட்டி இல்லை என்று வைத்துக் கொள்வோம். அதனுல் விளையும் பயன்களை இவண் ஆராய்வோம். அதாவது, தொழில் அங்காடியில், வேலையில்லாதவர்கள் மிகுந்து காணுமிடத்தும், பணக் கூலிகள் குறைவதற்கான சூழ்நிலை அல்லது போக்கு ஆகியவை இல்லை என்று வைத்துக் கொள்வோம். இத்தகைய நிறைவு போட்டியின்மை தொழிலாளர் நிறுவனங்கள் வேலையின்மை அதிகமாகுமிடத்துக் குறைந்த பணக் கூலியைப் பெற மறுப்பதால் விளைகிறது. அல்லது அந் நிறுவனங்கள், உழைப்பின் அளிப்பு, அதன் தேவையை மிஞ்சி இருக்கும் நிலையிலும், பணக் கூலிகளை உயர்த்த முயல்கின்றன என்பதனுலும், விளைகிறது. அல்லது பழக்கம், சட்டம், அரசு கூலிக் கொள்கை இவைகளினுலும் விளைகிறது. (உதாரணம்—ஜனுதிபதி ஹெர்பர்ட் கூவர் (President Herbert Hoover) *1931*, *1932* ஆண்டுகளில் வேலை அளிப்போரைக் கூலிகளைக் குறைக்க வேண்டாம் என்று மன்ருடினுர்.) அல்லது வேலை அளிப்போர், வேலையாளர்களின் மீது காட்டிய (தவருன) சமூகப் பரிவும் காரணமாகும். பணக்கூலிகள் மாருமலிருந்தாலும் அல்லது அவை அதிகமானுலும், இவைகளில் ஏதேனும் ஒன்று வேலையின்மையை உண்டாக்கலாம்.

விளக்கப் படம் 6-4ல் கொடுக்கப்பட்டிருக்கும் நிலையைச் சற்றுக் கவனிப்போம். இங்குப் பணக்கூலி சமநிலை, ($W_0$) வேலை நிறைவுக்கு ஏற்ப அமைந்திருக்கிறது. ஆனால், கூலிகள் செயற்கையாக $W_1$ என்ற நிலையில் பொருத்தப் பட்டிருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். இதனைச் சற்றுச் சுருக்கி, கூலிகள் தொடக்கத்தில் $W_0$ என்ற நிலையிலிருந்து $W_1$ என்ற நிலைக்குத் தள்ளப்பட்டது என்று வைத்துக் கொள்வோம். இதனால் $P_1 N_1 y_1$ W/p ஆகியவைகளின் புது மட்டங்கள் யாவை?




படம் 6.4

விலைகள் உயர வேண்டும் என்பதை நாம் முதற்கண் கவனிக்க வேண்டும். அவ்வாறு விலைகள் உயராவிட்டால் உண்மைக் கூலி முன்பைவிட அதிகமாகும்; அதனால் வேலை அளிப்போர் குறைந்த அளவில் உற்பத்தி செய்வார்கள்; குறைந்த வெளிப்பாடு, விலைகள் உயராமலிருந்தால், மாறிலிகளான M, l ஆகியவைகளுடன் பொருந்தாது. எனவே, விலைகள் உயர்ந்தாக வேண்டும். இரண்டாவதாக, கூலிகள் உயர்ந்த அளவிற்கு விலைகள் உயரா. அவ்வாறு கூலிகள் உயர்ந்த அளவிற்கு விலை உயர்ந்தால், உண்மைக் கூலி மாறாமலிருக்கும். வேலை அளிப்போர் முன்பு உற்பத்தி செய்த அளவிற்கு இப்பொழுது உற்பத்தி செய்ய மாட்டார். அவர்களுக்கும், அதே அளவு பண்டங்களை உயர்ந்த விலைக்கு விற்கும் ஆற்றல், M, l, ஆகிய இரண்டுடன் ஒவ்வாது. எனவே, புது Py என்பது முன்பு இருந்த நிலையிலேதான் இருக்கும். ஆகவே, P (விலை) உயர வேண்டும் y, (வருமானம்) குறைய வேண்டும்.

மற்ற மாறும் தன்மையுடையவைகளின் சமநிலைகளை ஆராய இவ் விளக்கப் படம் அமையவில்லை. ஆயினும் தொடர்ந்த தோராயங்களினால் செப்பனிடலாம். ஆயினும் புதிய சமநிலை முன்பைவிட உயர்ந்த விலை, உயர்ந்த உண்மைக் கூலி ஆகிய இரண்டையும் உள்ளடக்கியதாக அமையவேண்டும். விளக்கப் படம் 6-4ல் கண்ட விளக்கம் தெளிவானதாயும், நமது மாதிரிக்கு வேண்டிய தேவைகள் எல்லாவற்றையும் பெற்றிருப்பதையும் காணலாம்.

பணக்கூலி தான் தோன்றிய வழிகளில் உயர்ந்ததால் (அதாவது $W_0$-ல் இருந்து $W_1$க்கு மாறியதால்) விளையும் பயன்கள்: உயர்ந்த விலைகள், உயர்ந்த உண்மைக்கூலி, குறைந்த வேலை, குறைந்த வெளிப்பாடு, $N_1$ $N_2$ என்ற அளவுடைய வேலையின்மை ஆகியவை (புதுவேலை அளவு, வேலையின்மையின் அளவு ஆகிய இவ்விரண்டின் கூட்டுத் தொகை முன்பிருந்த வேலையளவைவிட அதிகமாக இருப்பதை அறிக.) தற்பொழுது வேலையில் உள்ளவர்கள், வேலையில்லாதவர்களைவிட நல்ல நிலையில் இருக்கிறார்கள்.

## பணவாக்கக் கொள்கையும் வேலை நிறைவும்
## (Monetary Policy & Full Employment)

மிகவும் உயர்ந்து காணும் பணக் கூலியின் விளைவுகளைத் தவிர்க்கப் பணக்கொள்கையை ஆளலாம். உழைப்பின் சராசரி ஆக்கம் பெருகுவதன் காரணமாகப் பணக் கூலி குறைய மறுப்பதால் வேலைக் குறைவு ஏற்படுகிறது. இதைத் தவிர்க்கவும்,

வேலை நிறைவு நிலையைச் சரிக்கட்டவும் பணவிரிப்புப் பயன் படுகிறது. இந்தக் குறிப்பிட்ட ஒரு நிலையில் பண அளவு விரி வடைந்தால், அது பணவீக்க நிலையை உண்டாக்கும் எனப் பொருள்படாது. வெளிப்பாடு மிகுந்து காணுவதனுல், விலைகள் குறையாமலிருப்பதைத் தடுக்க வேண்டும். பணக் கூலிகள் செயற்கை முறையில் உயர்த்தப்பட்டால், பண நிர்வாகிகள் பண வீக்கத்தை ஆமோதிக்க வேண்டியநிலை, வேலையின்மை ஓங்கத் தேவையானநிலை ஆகிய இவ்விரு இக்கட்டான நிலைகளைத் தேர்த் தெடுக்க வேண்டிய கட்டத்தை அடைகிறுர்கள். பணவீக்கநிலை, வேலையாளர்களை மீண்டும் முயலத் தூண்டும், வேலையின்மையினுல் கடைப்பிடிக்கும் ஒழுங்குமுறை அவர்களை நல்ல பழக்கங்களைச் கடைப்பிடிக்கத் தூண்டும் எனக்கொண்டால், மேற் கூறிய தேர்வு அவ்வளவு கடினமானதல்ல.

பணக் கொள்கையின் நீண்டகால நோக்கங்கள் எப்படி அமைய வேண்டும் என்ற கொள்கைப் பிரச்சினையை மேற்கூறிய ஆய்வுத்துணைக் கருவிகள் கொண்டு ஆராயலாம். இதுவும் ஒரு சிறந்த பிரச்சினையாகும். இதற்குக் கூலிகள் இணக்கமானவை என்ற எடுகோள் தேவை. பொருளியல் முன்னேற்றத்தின் பயன் களை (அதாவது அதிக ஆக்கத்தினுல் ஏற்படும் நன்மைகளை) கீழ்க் காணும் வகையில் பிறர்க்கு வழங்கலாம் (a) பண அளவை (M) மாறிலியாக அமைத்துக் குறையும் கூலிகள், குறையும் விலை கள், விலைகளை மீண்டும் (b) பண அளவைச் (M) சுமாராக உயர்த்தி, பணக் கூலிகளை மாறிலியாகவும், மெல்லக் குறையும் விலை மட்டத்தைக் கொண்டு வழங்கலாம்; (c) பண அளவை (M) அதிக மாக்கி, விலை மட்டத்தை மாறிலியாக்கி கூலி விகிதத்தை (W) உயர்த்தியும் வழங்கலாம். இவைகளில் எது பயனுடையது எனத் தேர்ந்தெடுப்பதற்கு, சமுதாயத்தில் ஆக்க வேலையில் ஈடு படாத மக்களுக்கு வழங்கப்படும் நியாயம் நாட்டில் கிட்டிய வளத்தை, விலை மட்ட மாற்றங்களால் நல்ல முறையில் பங்கீடு செய்யும் வழியை, மாற்றங்களினுல் தொழிலாளர்களுக்கு ஏற்படும் உளவியல் பயன்களை ஒட்டி, ஏற்படும் விளைவுகளைப் பயன் படுத்த வேண்டும்.

இவைகளைப் பற்றி நாம் இங்கு ஆராய வேண்டிய அவசிய மில்லை. ஏனெனில், கிளாசிக்கல் பகுப்பாய்வின் துணைக் கருவிகள் பொதுக் கொள்கைக்குப் பயன் படுத்தக் கூடியஅளவிற்கு முழுமை பெறுமை காரணமாகும். ஆனுல், தர்க்கவழி முழுமை, ஒற்றுமை ஆகியவைகளில் கிளாசிக்கல் கருத்துகள் நிகர் அற்றவை என்பதில் சிறிதும் ஐயமில்லை. இவ்வாறு மாற்றி அமைக்கப் பெற்ற 'கிளாசிக்கல் கோட்' பாட்டினை எடுகோள் இழுக்கு என்ற தலைப்பில்

மட்டுமே குறைகாணலாமே தவிர மற்ற எந்த வழியிலும் அது குறையுள்ளது எனச்சொல்வதற்கில்லை. தர்க்க வழியில் முழுமையானதல்ல அல்லது அது முன்னுக்குபின் முரணானது எனக் கீன்ஸ் குறை காணுவது தவறு. ஆயினும் கிளாசிக்கல் இலக்கியத்தின் மற்றும் ஒரு பகுதி இன்னும் ஆராயப்படாமல் இருக்கிறது. வேலை, ஆக்கம், விலை மட்டம், ஆகிய இவைகளுடன் சேமிப்பு, முதலீடு, ஆகியவைகளின் தொடர்பின் அமைப்பாகும். இதனை அதிகாரம் எட்டில் (Chap. 8) ஆராய்வோம்.

# 7. சேமிப்பு, முதலீடு, வட்டிவீதம்

(Saving, Investment & the Rate of Interest)

## பண அளவைக் கோட்பாட்டைத் தேவைக் கோட்பாடாகக் கொள்ளல்

(The Quantity Theory as a Theory of Demand)

ஐந்தாம் அதிகாரத்தில் கண்ட எளிய பண அளவைக் கோட்பாடு, விலைகள் இணக்கமானவைகளானல் உச்சநிலை ஆக்க மட்டம் கிடைக்கப் பெறும் என்பதை வெளிப்படுத்தியது. முந்திய அதிகாரத்தில் இந்தக் கருத்தைத் தனிப்படுத்த முயன்று அதனை ஆராய்ந்தோம். அவ்வதிகாரத்தில், விலைக்குறைப்பு ஏற்பட்டால், அது வேலை வழங்குவோர்களை அதிகப்படி வேலை தேவையைப் பெருக்க ஊக்குவிப்புக்கள் தந்து, அதனல் அவர்களது செலவைப் பெருகச்செய்த அமைப்பைச் சற்று விரிவாக ஆராய்ந்தோம். மேலும் விலைகள் குறைந்தால், அவை வேலையை அதிகரிப்பதோடு, ஆக்கத்தையும் அதிகரிக்கிறது என்பதையும் கண்டோம். நிர்ணய விலைகளும் (obsolute prices) விலைகளின் அமைப்பும் (அதாவது கூலி/விலை விகிதம்) ஆகியவை, வேலை நிறைவினுக்குத் தேவையானவை என்பதையும் கண்டோம்.

தடைகள் ஏதுமில்லாத ஓர் அமைப்பு, (free economy) வேலை நிறைவு நிலையைப் பெறவேண்டுமானல், வேலை வழங்குவோர், அவர்களுக்குத் தேவையான உழைப்பை வாடகைக்குப் பெறவும், அதிகப்படி உற்பத்தியைப் பெருக்கவும் போதிய ஊக்குவிப்புகள் தேவை. இந்த நிலை விற்பனையாளர் தரப்பின் பிரச்சினை. இதனை ஆரும் அதிகாரத்தில் கவனித்தோம். ஆனல், உற்பத்தி செய்யும் பொருள்கள் அனைத்தையும் பணம் தந்து வாங்குபவர்கள் தேவை.

முந்திய அதிகாரத்தில் இந்தப் பிரச்சினையை நாம் சிறிதேனும் சிந்திக்கவில்லை. எளிய நடையுடைய பண அளவைக் கோட்பாட்டினை, மொத்த அல்லது கூட்டுத் தேவைக் கோட்பாட்டினை விளக்கும் ஒரு கருவியாக நாம் அதைக் கண்டோம். பொருளை வாங்குபவர் எத்தகைய நடவடிக்கையை மேற்கொள்வார் என்பதையும்; அத்தகைய நடவடிக்கை சாதாரணமாக எதிர்பார்க்கக் கூடிய நடவடிக்கைதான் என்பதையும் நாம் ஆராயவில்லை. இவ் வதிகாரம், கிளாசிக்கல் கோட்பாட்டினைத் தொடர்ந்து ஆராய்கிறது. ஆனால், குறிப்பாகத் தேவைபற்றிய கருத்துகளைத் தொடர்ந்து ஆராய்கிறது.

பண அளவைக் கோட்பாட்டின் வாய்பாடு, மக்கள் பணத்தை அதற்கென விரும்பமாட்டார்கள் என்பதை எடுகோளாக்கியது. ஆகவே, தங்கள் தேவைக்கு அதிகமாகப் பணத்தை அவர்கள் வைத்திருக்க விரும்பமாட்டார்கள். ஆயினும், சிறிது பணத்தை அவர்கள் வைத்திருப்பார்கள் என்பது உறுதி.—அதாவது ஒரு டாலர் பணத்தைச் சிறிது காலம் வைத்திருப்பார்கள்—ஏனெனில், பேரங்களை எல்லாம் மொத்தமாகச் செய்ய வேண்டியிருப்பதால், சிறிது தொகையை வைத்திருப்பார்கள். பணம் மற்றப் பண்டங்களுக்கு மாற்ற வசதியுள்ள நடுத்தர அளவு (meduim) ஆயினும், மாற்றுதல்களைச் செயற்படுத்துவதற்காக அதனைச் சிறிது காலம் வைத்திருக்கவேண்டும். பேரங்களைச் செயற்படுத்தும் வரை பணங்களை வைத்திருப்பார்கள். அதற்குமேல் அவர்கள் பணத்தை வைத்திருக்கமாட்டார்கள் என்பது தெளிவு. ஏதேனும் ஒரு காரணத்தால், அவர்கள் அதிகப்படி பணத்தை வைத்திருந்தால், அதனை எளிதில் விடுவிக்க முற்படுவார்கள். தன் தேவைக்கு மீறிய பணத்தை ஒருவன் வைத்திருந்தால், வேறு பொருள்களை வாங்கி அதனை விடுவித்துக் கொள்வான். ஆனால், அமைப்பு முழுவதும் அதனிடத்தில் உள்ள ரொக்கத்தை இந்த வழியில் விடுவித்துக் கொள்ள முடியாது. ஒரு தனி மனிதன் ரொக்கத்தை விடுவித்தால், அது வேறு ஒருவரது ரொக்க இருப்புகளை அதிகமாக்கும். எனவே, பயனில்லாப் பணம்—அதாவது பேரங்களுக்கு அதிகமான பணம்—எப்படி வெளியேறுகிறது? பேரங்களின் தேவைகளை அதிகப்படுத்துவதின்வழி அதிகப்படி பணம் வெளியேறுகிறது. பயனில்லாப் பணத்தைச் செலவு செய்வதால், ஆக்கம் அதிகரிக்கிறது; ஒருவேளை ஆக்கம் உச்சநிலையை அடைந்திருந்தால், பயனில்லாப் பணச்செலவு விலைகளை உயர்த்தும். வேலையின்மை இருப்பதாக வைத்துக்கொள்வோம்; இதனால் கூலிகள் குறையும், விலைகளும் குறையும், ஆக்கம் அதிகமாகாவிட்டால் பயனில்லாச் பண இருப்புகளை உண்டாக்கும்; ஆனால், பயனில்லாப் பணம்

விரும்பப்படாமையால், ஆக்கம் விரிவடைகிறது; விலைகள் மீண்டும் குறைந்து செல்கின்றன.

மேல் கூறியவைகள் கூட்டுத்தேவைக் (aggregate demand) கோட்பாட்டை உள்ளடக்கியவை. மக்கள் தமக்குக் கிடைக்கும் ரொக்கம் அனைத்தையும் பொருள்களுக்காகச் செலவிடுகிறார்கள். பணம் மக்களது சட்டைப் பைகளை எப்பொழுதும் துளைத்துக் கொண்டே இருக்கிறது. அவர்களிடம் பணம் இருந்தால், அதனைச் செலவு செய்கிறார்கள். முன்பே நிர்ணயிக்கப்பட்ட வேகத்தில், தன்னிச்சையாகப் பணம் மற்றப் பண்டங்களுக்கு மாற்றப்படுகிறது.

மேற்கூறிய கருத்து, ஹான்சன் (Hansen)[1] என்பவர் பண அளவைக் கோட்பாட்டை 'எளிமை நலமுடைய கூற்று' எனத் தெரிவித்த கருத்துக்கு ஒத்துள்ளது. பண அளவைக் கோட்பாட்டிற்குத் தூய்மை கெட்ட கூற்றும் உள்ளது என அவர் கருத்துத் தெரிவித்திருக்கிறார். இவ்வதிகாரம் தூய்மை கெட்ட கூற்றின் உள்ளடங்கியவை யாவை? அவைகளை எவ்வாறு வெளிப்படுத்துவது என்பன போன்ற பிரச்சனைகளை ஆராயும்.

மேற்கூறியவைகளைவிட உண்மைநிலை கெட்ட பண அளவைக் கோட்பாட்டுக் கூற்று உள்ளது என்பதை முதற்கண் அறிதல் வேண்டும். இக்கூற்று விலைகளைப் பண அளவைக்கொண்டு விளக்குகின்றது. செலவு, அல்லது பணத்தை வைத்திருத்தல் போன்ற மற்றப் பிரச்சனைகளை இக்கூற்று விளக்கவில்லை. விலைகள் என்பவை வெறும் விகிதங்கள்—அதாவது ஓர் அளவு ரொக்கம், ஓர் அளவு பண்டங்கள் இவைகளுக்கிடையே உள்ள விகிதமாகும். இவைகளில் ஏதேனும் ஒன்று மாறினால் மற்றது தன்னிச்சையாக மாறும். ரொக்க அளவு விகிதம் மாறினால், (விலை மட்டம் என்ற) விகிதம் தன்னிச்சையாக மாறும். இத்தகைய விளக்கம் சிறிது கவனத்துக்குரியது.

ஸ்வீடனைச் சேர்ந்த பொருளியல் மேதை விக்செல் (Wicksell) என்பவர், தேவை, அளிப்பு ஆகியவைகளைக்கொண்டு தனிவிலைகள் நிர்ணயிக்கப்படுகின்றன என்றும், அதனைப் பொருளியல் வல்லுநர்கள் ஒப்புக்கொள்ள வேண்டும் என்றும் வலியுறுத்தியவர்களில்

[1] ஆல்வின். எச். ஹான்சன் பணக்கோட்பாடும் வரவாய் கொள்கையும் (மெக்கிராஹில் 1949) அதிகாரம் மூன்று என்பதை இவ்வதிகாரத்துடன் சேர்த்துப் படித்தல் பயனுடையது.

(Alvin) H. Hansen Monetary theory & Fiscal Policy (MeGraw-Hill 1949 Chapter 3 of this work can profitably read along with the present chapter).

முதலிடம் பெறுகிறுர். பொருளியல் மேதைகள் பொது விலைகளை (general price) (இவை தனி விலைகளின் சராசரி) நிர்ணயிக்கப் பண அளவைக் கோட்பாட்டைப் பயன்படுத்திஞல், பண அளவு (M) என்பது பண்டங்களின் தேவை அல்லது அளிப்பு இவைகளில் ஏதேனும் ஒன்றை நிர்ணயிருக்கிறது என்பதை விளக்கவேண்டும். இத்தகைய கூற்றுகளால், விக்செல் (Wicksell) என்பவர் நமது நவீனக் கோட்பாடுகளின் முன்னேடியாக விளங்கினுர். பண அளவை, பண்டங்களின் தேவையை நிர்ணயித்து அதன்வழி விலைகளை எவ்வாறு பாதிக்கிறது என்பதை நன்கு விளக்குகிறுர். இதன்வழி வந்த முடிவுகள் அசைக்க முடியாத உண்மைகள் ஆயின. இப் பணியில் ஈடுபடுகையில், 'கூட்டுத் தேவை' (aggregate demand) என்ற கருத்தினை வெளிப்படுத்தினுர். இக் கருத்தை நவீன கருத்துகளுடன் எளிதில் இணைத்துவிடலாம்.

## 'சேமிப்பும் முதலீடும்
## Saving & Investment)

எளிமை நலமுடைய (sophisticated) பண அளவைக் கோட்பாட்டுக்கூற்று, ஓர் இன்னலுக்குள்ளாகிறது. அதாவது அக் கூற்று, சேமிப்பு முறையைப்பற்றிச் சிறிதும் சிந்திக்கவில்லை. மக்கள் அனைவரும் தம்மிடம் இருக்கும் பணம் அனைத்தையும் பண்டங்களுக்காகச் செலவு செய்யவதில்லை. இது அவர்களது பண்பு. நம்மில் பலர் சிறிது தொகையைச் சேமித்து வைக்கிறேம். நாம் சேமிப்பதனுல்—அதாவது வருமானத்தைவிட நுகர்ச்சிச் செலவு குறைந்தால்—ரொக்கத்தை அதிகம் குவிக்கிறேம் என்று பொருளல்ல. சேமிப்பாளர்கள் அனைவரும், தம் சேமிப்பைக்கொண்டு முதற் கருவிப் பொருள்களை நேரடியாக வாங்குவதுமில்லை. நமது சேமிப்புகள் ஆயுள் இன்சூரன்ஸ் பாலிசிகளாகவும், ஆவணங்களாகவும் (securities), பாங்கு சேமிப்பு வைப்புகளாகவும், சேமிப்பு, கடன் நிதிகளின் பங்குகளாகவும் (shares) அடைமானத்திற்கு மறுசெலுத்துகளாகவும், அல்லது கடன்தொகை செலுத்துகளாகவும்-மாறுகின்றன. நாம் சேமிக்கிறேம் என்ற காரணத்தினுல் நமக்கு அதிக ரொக்கம் தேவையில்லை; நாம் கருமிகளாக இல்லாவிட்டால் ரொக்கம் அதிகம் தேவையில்லை. நமது சேமிப்புகளை விளைவு தரும் உருவங்களில் வைக்க முடியுமானுல், நாம் ஏன் அவற்றை ரொக்கங்களாக வைத்திருக்க வேண்டும்? இத்தகைய ரொக்கமில்லாத் தன்மையுடையவைகளாக நமது சேமிப்புகளை மாற்றினுல் பண்டங்களுக்கான ரொக்கம் இடையூறு இல்லாமல் ஓடுகின்றது என்பது என்ன உறுதி. நம் சேமிப்பில் ஓர் ஆவணம் (security) வாங்குவதாக வைத்துக்கொள்வோம். அவ்வாவணம், ஆக்கம்

அல்ல; அது புதிய ஆவணமும் அல்ல; அது புதிய ஆவணமாகில், அதற்காக ஆக்கம் வளர முதலீடு செலவு செய்யப்படும். ஆனால், வழக்கில் நாம் பிறரிடம் உள்ள ஆவணங்களை வாங்குகிறோம். (குறிப்பிட்ட ஒரு வாரம் அல்லது ஆண்டில் மொத்த ஆவணங் களில் சிறிய பகுதியே புதிய ஆவணங்களாகும்).

இத்தனை இடர்ப்பாடுகளுக்கிடையே மக்கள் தாமாகப் பய னில்லா ரொக்கத்தை வைத்திருந்தால், புதிய ஆக்கத்திற்குச் செலவு செய்யும் மொத்தச் செலவு, உள்ள ரொக்கத்தின் அளவை யாகும் என்பது எப்படி உறுதியாகும்? ஆயினும், கிளாசிக்கல் கருத்தின் ஒரு பகுதி இவ் வினாவிற்கு 'ஆம்' என்ற விடையை அளிக் கிறது.

பழைய ஆவணங்கள் விற்பதற்கான அங்காடிகள் இல்லை என்று முதற்கண் வைத்துக்கொள்வோம். ஆவணங்களை வாங்குபவர் கள் அவைகளோடு 'பிணைக்கப்படுகிறார்கள்' (married) என்று வைத் துக்கொள்வோம். அவைகளை மறுவிற்பனை செய்ய வாய்ப்புகள் இல்லை என்பது பொருள். (இந்த எடுகோளை உடனடியாக நீக்கி விடுவோம்; கிளாசிக்கல் கோட்பாடு இதனை நீக்கினால் பெரிய இன்னல் ஒன்றுமில்லை எனக் கருதியது. ஆனால், நவீனக் கோட் பாடு, இதனை நீக்கினால் இன்னல்கள் பல விளையும் எனக் கருதியது). இடைநிலைப் பண நிறுவனங்கள்-ஆயுள் இன்சூரன்ஸ் கம்பெனிகள் சேமிப்பு பாங்குகள், சேமிப்பு, கடன் நிறுவனங்கள், முதலீடு டிரஸ்டுகள் போன்றவை—இல்லை என்று வைத்துக்கொள்வோம். ஆவணங்கள் எல்லாம் சேமிப்பாளர்களுக்கு நேரடியாக விற்கப் படுகின்றன. ஒரே ஒரு விதமான ஆவணம்—அதாவது கால வரம் பில்லா ஆவணம் (perpetual bond)—ஒன்றுதான் உள்ளது எனக் கொண்டு சுருக்குவோம். பங்குகள் விற்கப்படுவதில்லை—தொழில் முயல்வோர்கள் (entrepreneurs) தங்களுக்குத் தேவைப்படும் நிதி யைக் கடனாகப் பெற்றும் அல்லது தங்கள் சொந்த நிதியைப் பயன் படுத்தினால் அதனைச் சொத்துகள் போன்றவைகளில் முதலீடு செய்தும் திரட்டுகிறார்கள். மேலும் வணிக பாங்குகள் (commercial banks) இல்லை என்றும் வைத்துக்கொள்வோம்.

இந்நிலையில், தனது வருமானம், நுகர்ச்சிச் செலவு இவை களுக்கு இடையே மிஞ்சிய தொகையை மூன்று வழிகளால் பயன் படுத்தலாம். அவரது ரொக்க இருப்புகளுடன் அதனைச் சேர்க்க லாம்—அல்லது தொழில் முயல்வோரானால்—முதற் கருவிப் பொருள்களை (capital goods) நேரடியாக வாங்கலாம். அல்லது தொழில் முயல்வோர் புதிதாக விற்கும் பத்திரங்களை (bonds)

வாங்கலாம். அறிவுடை மாந்தர் எவரும் முதல் வழியைப் பின் பற்ற மாட்டார்கள் என்பது நமது எடுகோள். ரொக்க வகையில் சேர்க்கப்படும் செல்வம் பயனளிக்காதது. மற்றச் செல்வங்கள் நேர்கணிய (positive) பயனை அளிக்கும். எனவே, அவைகள் விரும் பப்படுகின்றன. இரண்டாவது வழியைச் சில சேமிப்பாளர்களே பின்பற்றுவர். சேமிப்பாளரில் பெரும் தொகையினர் மூன்ருவது வழியையே பின்பற்றுகின்றனர்.

ரொக்கத்தைவிட பயன் அளிக்கும் கையிருப்புகளை மக்கள் ஏன் விரும்புகிருர்கள் என்பதைப்பற்றிப் பின்னர் ஆராய்வோம். ஆயினும், கிளாசிக்கல் மாதிரி கூற்றுகளில் இது ஒரு தனி இடம் பெறுகிறது. தங்கள் சேமிப்புகளுக்கு விளைவுகள் (return) கிடைக் கும் எனக் கருதி மக்கள் சேமிப்பதில்லை; அல்லது விளைவுகள் அதிக மாகவோ அல்லது குறைவாகவோ இருக்குமாளுல், சேமிப்புகளின் வீதம் அதற்கேற்றவாறு அமையும் எனக் கொள்வதற்கில்லை. சேமிப்புகளுக்கு விளைவுகள் கிட்ட வாய்ப்புகள் இருக்குமாளுல், அவை விளைவுகள் இல்லாததைவிட விரும்பப்படும் என்பது இவ் வெடுகோளின் பொருளாகும்—கிளாசிக்கல் வழி எழுத்தாளர்கள், சேமிப்பு வட்டி வீதத்தின் மிகுந்து செல் சார்புத்தொடர்பு என நினைத்தனர் என்பது உண்மை. ஆளுல், அது தனிப்பட்ட வேருெரு செய்தி.

சேமிப்போர் வாங்குவதற்கெனப் பத்திரங்களை வழங்குபவர் தொழில் முயல்வோர்கள் ஆவர். அவர்கள் தம்மிடம் உள்ள சேமிப்புகள் முதற்கருவிப் பொருள்களை வாங்கும் வீதத்தைவிட அதிகப்படி வீதத்தில் வாங்க விரும்புவர். முதற்கருவிப் பொருள் களை விற்பதின் வழி அதிகப்படி விளைவு கிட்டும் வாய்ப்பு உண்டு என எதிர்பார்த்து வட்டி கொடுக்கிருர்கள். முடிவில் அவர்கட்குக் கிட்டும் விளைவு தங்கள் செலவுகளை வட்டிச் செலவு உள்பட எல்லாச் செவுகளையும் மிஞ்சிச் சிறிது உபரி கிடைக்கும்.

பத்திரங்கள் அங்காடி (bond market) என்பது,, சேமிப்பா ளர்கள் செலவு செய்யாமல் சேர்த்து வைத்திருப்பதைத் தொழில் முயல்வோர் (entrepreneurs) அவர்களது வருமானத்தைவி அதிக மாகச் செலவு செய்ய வசதியுள்ள ஓர் அமைப்பாகும். குறிப்பிட்ட சில தலையிடுதல்களைத் தவிர, பத்திர அங்காடி மற்ற அங்காடிகளைப் போலச் செயல்படுகிறது. அவ்வங்காடி, பணம் கொடுப்பதற்கு முயல்வோர் அல்லது பத்திரங்கள் வாங்க முயல்வோர் (இவர்களது செய்கை சேமிப்புக்குச் சமம் எனக் கொள்ளப்படுகிறது). பணம் கடன் வாங்குவோர் அல்லது பத்திரங்கள் விற்பவர் (இவர்களது

செய்கை முதலீட்டுக்குச் சமம் எனக் கொள்ளப்படுகிறது), இவ்விரு செய்கைகளைச் சமமாக்குகிறது. பயன் ஒன்றுமில்லாமல் இருப்பதைவிட, நேர்கணிய பயன் நல்லது என அறிவுடை நுகர்வோர் விரும்புவர். இவ் விருப்பம் சேமிப்பையும் பணத்தைக் கடனாக வழங்குவதையும் சமமாக்குகிறது. சேமிப்பும், முதலீடும் சமமாக இருப்பதற்கு மற்றொரு காரணமும் உண்டு. தொழில் முயல்வோர் தாம் கடனாகப் பெறும் நிதிகள் பயன் அளிக்காவிடில், அவர்கள் தாம் கடனாகப் பெற்ற பணத்திற்கு வட்டி வழங்க முற்படமாட்டார்கள். பயனில்லா ரொக்கத்தை வைத்திருக்கும் தனி மதிப்புக்காக (privilege) அவர்கள் வட்டி கொடுக்கமாட்டார்கள். கடன் வழங்குதல், கடன் பெறுதல், இவ்விரண்டையும் அங்காடி வட்டி வீதங்களின் மாற்றங்கள் சமமாக்குகின்றன.[1]

கடன் வழங்குதல், கடன் வாங்குதல் இவ்விரண்டையும் அங்காடி வட்டி வீதம் சமமாக்க—அதாவது சேமிப்பு, முதலீடு இரண்டையும் சமமாக்க—அங்காடியின் இரு பக்கத்திலும் (வாங்குபவர், விற்பவர்) போட்டி இருப்பது அவசியம். மேலும், (a) அதிகப்படி வட்டி விகிதம் இருக்குமாயின் சேமிப்பாளர்கள் அதிகம் சேமிப்பார்கள். வட்டி வீதம் குறைந்தால் குறைத்துச் சேமிப்பார்கள், அல்லது முதலீடு செய்ய விரும்புவோர் வட்டி வீதம் குறைந்திருந்தால் அதிக முதலீடு செய்வார்கள். வட்டி வீதம் அதிகமாகில், முதலீடு செய்யக் குறைந்த அளவில் கடன் வாங்குவார்கள், (b) பூஜ்யம் (0) வட்டி வீதத்தைவிட உயர்ந்த வட்டி வீதம், சேமிப்பு முதலீடு இரண்டையும் சமமாக்க அங்காடியில் உள்ளது என்பன போன்ற எடுகோள்கள் தேவை. சேமிப்பு, முதலீடு ஆகிய இரண்டும் வட்டி-நெகிழும் (Interest-elastic) தன்மையுடையவை என்ற எடுகோள் அமைந்தமையால், நிபந்தனை (b) செயல்படாது என்பதைப் பொருளியல் வல்லுநர்கள் உணரவில்லை. இடுமுதல் செயற் களத்தின் (capital market) வழக்கமான அமைப்புக் கீழ்க்காணும் படத்தில் 7–1ல் உள்ளவாறு அமைகிறது.

தனிப்பட்ட பொருளியல் மேதைகள், ஏதேனும் ஒரு வளைகோடு வட்டி-நெகிழும் (Interest-elastic) தன்மையதாய் மற்ற வளைகோடுகள் வட்டி நெகிழாத் (interest unelastic) தன்மையதாயினும், (அதாவது படத்தில் அது செங்குத்து நேர்கோடாய் அமையலாம்) என்று வலியுறுத்தி இருக்கிறார்கள். ஆயினும், இரு அட்டவணை

[1] சேமிப்பும் முதலீடும் சமமாக இருப்பதற்கான தகவல்களை இந் நூலின் 105-109, 320-326 பக்கங்களில் காண்க.

(In connection with this equality of Saving & Investment see above P. P. 105-109 & below P. P. 320-326.




படம் 7-1.

களும், வட்டி-நெகிழும் தன்மையதாய் அமையப் போதிய செம்மையான காரணங்கள் உள்ளன. அவைகளில் ஏதேனும் ஒன்று போதிய அளவு வட்டி-நெகிழும் தன்மையதானால், நிபந்தனை (b) (நேர்கணிய நாற்கூறில் வெட்டும்) நிலை என்பது உறுதி. இரண்டு அட்டவணைகளைச் சுருக்கமாக விளக்கும் பணிக்குச் சற்றுத் திரும்புவோம். கடன் வாங்கும் (முதலீடு) அட்டவணையை முதற்கண் ஆராய்வோம்.

கடன் வாங்குதலின் ஓர் அளவை நுகர்ச்சியாளர்கள்-தங்களது வருமானத்தை மீறிய செலவுகளை நிதி மயமாக்க-ஓர் அளவு கடன்களை வாங்குகிறார்கள் என்றாலும், அதனால் ஒரு முரணில்லாத் தொடர்ச்சியுள்ள வட்டிக் கோட்பாட்டினை வழங்க முடிந்தாலும், கடன்களின் பெரும்பகுதி முதலீடுகளுக்காகவே பயன்படுகின்றது; அதனைக்கொண்டு, கடன் வாங்குபவர் தங்கள் முதலினை அதாவது இயந்திரங்கள், கட்டடங்கள் போன்றவைகளை மிகுதிப்படுத்திக் கொள்கிறார்கள். நுகர்வோரின் கடன்களை மொத்தச் சேமிப்பில் கழித்ததொகை என ஒதுக்கிவிடலாம். ஆனால், சேமிப்பு ஷெடியூல் நுகர்வோர், சேமிப்பாளர், சேமிக்காதவர் உள்பட மொத்தத்தில் ஒவ்வொரு வட்டி வீதத்திற்கு ஏற்ற நிகர சேமிப்பைக் (net saving) குறிக்கிறது. கடன் வாங்குவது முதலீடு செய்வதற்கே.

(பின் அறிவிக்கும்வரை அரசு கடன் வாங்குவதேயில்லை என்ற எடுகோள் தேவை).

கடன் வாங்கும் ஷெடியூல் (borrowing schedule) என்பது அதி கப்படி முதலீடு ஆக்கம் தருவது அல்லது 'முதலின் இறுதிநிலை ஆக்கம்' (marginal productivity of capital) என்ற அடிப்படைக் காரணியால் அமைக்கப்பட்டது. தொழிலுக்கான கடன்களின் விளைவு, முதற்கருவிப் பொருள்கள் (capital goods). இம் முதற் கருவிப் பொருள்கள் எதிர்கால மொத்த ஆக்கத்தை மிகைப் படுத்துகின்றன. இதற்குக் காரணம் ஆக்கம் 'சுற்று வழி' (round about) உற்பத்தி முறையைப் பின்பற்றுகிறது—அதாவது நேர் முறையைவிட முதலினைப் பயன்படுத்தும் முறைகள் நிறைய ஆக்க வளமுள்ளவை என்பது. மற்ற முறைகள் அவ்வளவு ஆக்க வள முள்ளவையல்ல. சுற்றுவழி முறைவழி ஆக்கம், குறைந்த சுற்று வழி முறை ஆக்கத்தைவிட அதிக ஆக்க வளமுள்ளது. அதிக முதற்கருவிப் பொருள்களைப் பயன்படுத்தினால், அவைகளின் எதிர் கால பயன் ஆக்கத்தின் அதிகரிப்பைக் குறிக்கும் என்பதை 'குறைந்து செல் இறுதிநிலை விளைவுகள் விதியின்' (Law of Diminishing Marginal Returns) வாயிலாக அறிவோம். ஆனால், முதலை அதிக மாகப் பயன்படுத்தினால் அதன் இறுதிநிலை ஆக்கம் குறையும்.

கடன் வாங்கும் ஷெடியூல் என்ற கருத்துப் பகுப்பாய்வுத் தொடர்புடைய இன்னல்கள் பல வற்றைப் பிரதிபலிக்கிறது. இவைகளை அடுத்த அதிகாரத்தில் காண்போம். முதலீடு செய்ப வர்களுக்குக் கிட்டும் விளைவு, அவர்களின் மொத்த முதலீடு அதிக மாயின் குறையும். இக் கருத்து இப்போதைக்கு ஒப்புக்கொள்ளக் கூடிய நல்லதொரு கருத்தாகும். கடன்களுக்கான வட்டியைத் தமக்குக் கிட்டும் விளைவுகளில் இருந்து வழங்கவேண்டி இருப்ப தால், அதிக முதலீடு குறைந்த வட்டியை—வழங்கத் தூண்டும். கடன் வாங்குபவர்களும், முதலீடு அதிகமானால் குறைந்த வட்டியையே கொடுக்க முற்படுவார். கடன் வாங்குபவர் அனை வரும் குறைந்த வட்டிக்கே கடன் வாங்க முற்படுவார் என்பது திண்ணம்—பூஜ்யம் (0) வட்டிக்குக்கூட அவர்கள் கடன் வாங்க முயல்வார்கள். ஆனால், கிடைக்கப்பெறும் நிதிகள் குறைவுபட்டுக் காண்பதால், அவைகளின் போட்டி முதலீடு செய்பவர்களைத் தேவைப்படும் வட்டியை வழங்கத் தூண்டுகிறது. இதனால் வட்டி வீதத்தைவிட அதிகப்படி விளைவைப் பெறமுடியாத நிலைவரை முதலீட்டைச் செய்வார்கள்.

சேமிப்பு ஷெடியூல் வட்டி-நெகிழும் தன்மையுடையது என்ற எடுகோளில் அமைந்தது என்பதைப் பலவாறாகக் கூறியுள்ளனர்.

அவற்றில், அது சேமிப்பாளர்கள் கால விருப்பெச்சத்தைப் பிரதி பலிக்கிறது என்பது ஒருவகை. (reflecting time preferences) அல்லது அது சேமிப்போரின் 'பொறுமை யின்மை'யைக் impatience) குறிக்கிறது என்று ஒரு சாரர் கருத்துத் தெரிவிக் கிறார்கள். அல்லது அது துய்ப்புத் தவிர்ப்பின் வளர்ந்து செல்லும் இறுதிநிலைப் பயன்கேட்டைக் (increasing marginal disutility of abstinence) குறிக்கிறது எனச் சிலர் கூறுவர். இக் கருத்து களில் சில நேர்கணிய சேமிப்பு அளவு, நுகர்வோரின் தியாக அளவு என்ற நோக்கத்தைப் பிரதிபலிக்கின்றன. எனவே, மக்கள் தியா கத்தைச் செய்து அதனால் சேமிப்பைத் திரட்ட, நேர்கணிய வட்டி வீதம் அவசியம் தேவை. வளரும் வட்டி வீதங்கள் அதிகப்படி தியாகத்தைச் செய்வதற்கு மிகவும் அவசியம். சேமிப்பு ஷெடியூல் செங்குத்து அச்சை (vertical axis) வெட்டுகிறது என்பதைச் சிலர் மறுக்கலாம். அவர்கள் வலப்புறம் செல்லும் மேல் நோக்கிய வளைகோடுடைய ஷெடியூலை அவர்கள் மனத்தில் கொண்டுள்ளார் கள். சேமிப்பு (அதாவது சொத்துக் குவிப்பு) உளவியல் சார்பான விளைவுகளை (psychological returns) வெளிப்படுத்துகிறது. அவை நிகழ்கால நுகர்ச்சியுடன் சூன்னிய வட்டி வீதம் இருப்பினும் போட்டியிடுகின்றன. ஆயினும், அதிகப்படி வருமானம் நுகர்ச்சி யில் இருந்து சேமிப்புக்கு மாற்றப்பட்டால், அதிகப்படி சேமிப்பின் இறுதிநிலைப் பயன் குறைவு, குறைந்த நுகர்ச்சியினால் ஏற்படும் அதிகப்படி இறுதிநிலைப் பயனோடு போட்டியிடுகிறது. இறுதி நிலைகள் சமமாகும் சேமிப்பு மட்டம் என்பது, சேமிப்புக்குப் பரிசாகக் கிடைக்கும் அதிகப்படி வட்டியைப் பொறுத்திருக்கிறது.

வட்டி மட்டுமல்லாமல் வேறு சில நோக்கங்களும், அவை களின் மாறுதல்களும், சேமிப்பைப் பாதிக்கிறது என்பது சில பொருளியல் மேதைகளின் இன்றைய கருத்து. இம் மாறுதல்கள் வட்டி வீத மாறுதல்களால் ஏற்படும் விளைவுகளை உறிஞ்சி விடுகின் றன. எனவே, சேமிப்பு வட்டி–நெகிழும் தன்மை சூன்னிய நிலையை அடைகிறதுஎனப் பலர் கருதுகிறார்கள். சேமிப்புப் பின் நோக்குச் சரிவுத் தன்மையைக்கூடப் பெறமுடியும் என்ற காரண காரிய விளக்கத்தைத் தரலாம். ஆனால், இவ் விளக்கம் நம் கோட் பாடிற்கு ஏற்ற ஒரு பிரச்சினை இல்லை என்பதனால். இதனைச் சற்றுப் பொறுத்து ஆராய்வோம். சேமிப்பு, வட்டி வீத மாறுதலுக்கு எதிர் விளைவை (response) விளைவிக்கக் கூடியதாகில், நாம் கூறிய கருத்துக்கும், பின்வரும் கருத்துகளுக்கும் நிறைய வேறுபாடுகள் உண்டு. சேமிப்புப் பட்டியல் வழக்கமாக, செங்குத்தான மேல் நோக்குத் தன்மையுடையது எனக் கொள்வோம். ஆனால், பகுப் பாய்வு வசதிக்கென அதனைச் செங்குத்துச் சேமிப்பு பட்டியல்

எனக்கொள்ளுதல் முறை. அத்தகைய சமயங்களில் (அடிக் குறிப்புகள் வாயிலாக) வட்டி-நெகிழ்வுத்திறன் எந்த அளவிற்குப் பயன்களைச் செம்மைப் படுத்துகிறது என்பதை வெளிப் படுத்துகிறோம்.

அளிப்பு, தேவை இவைகளின் ஆற்றல்கள் கொடுக்கப் பட்டவைகளானால் (அவைகள் வெட்டுமிடம் கொடுக்கப்பட்டிருந்தாலும்) வட்டி வீதம் தடையில்லாமல் நெளியக் கூடியவை ஆனால்,—அது சேமிப்பு, முதலீடு ஆகிய இரண்டும் சமமாக இருக்கும் நிலையை எப்படி அடைகிறது என்பது தெளிவாகும். வட்டி வீதம் இதைவிட உயர்ந்த நிலையில் இருந்தால், சேமிப்பு, கடன் அளிப்பு இவை இரண்டும், கடன் வாங்குதல் முதலீடு இவை இரண்டையும் மிஞ்சும். தங்கள் சேமிப்புக்களைக் கடன் வாங்க விரும்பாதவர்கள் இருப்பதாலும், அல்லது தங்கள் சேமிப்புகளுக்குக் குறைந்த பயன்கிட்டினாலும் போதும் என்று உள்ளவர்கள் இருப்பதாலும், சேமிப்பாளர்கள் வட்டி வீதத்தைக் குறைக்க முற்படுவார்கள். ஆனால், வட்டி வீதம் சமநிலையைவிட குறைவானதானால், முதலீடு செய்பவர்கள், சேமிப்பாளர்கள் வழங்கும் நிதியைவிட தங்கள் நிதித் தேவையை அதிகப்படுத்துவார்கள். கடன் வாங்குபவர்களிடையே நிகழும் போட்டி, வட்டி வீதத்தை அதிகப்படுத்தும்.

சமநிலை வட்டி மட்டம் (Equilibrium in rate) என்பது, சேமிப்பு, முதலீடு ஆகியவைகளின் சரிவையும் அவ்விரண்டு அட்டவணைகளின் தராதர நிலைமைகளையும் ஒட்டி அமையும். மற்றவை மாறாமலிருப்பின், முதலில் இறுதிநிலை ஆக்கம் அதிகமானால், வட்டி வீதம் உயரும். சமநிலையில், வட்டி வீதம், முதலின் இறுதி நிலை ஆக்கம், (mar. productivity of capital) கால விருப்பெச்சத்தின் இறுதி நிலை வீதத்தையும் (mar. rate of time preference) அல்லது சேமிப்பின் இறுதிநிலை பயன்கேடு (Marginal disutility of saving) இவை இரண்டையும் சமமாக்கும். மேற்கூறியவற்றைச் சேமிப்புப் பட்டியலின் சரிவை விளக்கப் பயன்படும் வேறு இறுதி நிலைகளைக் கருத்துகளைக் கொண்டு விளக்கலாம்).

சேமிப்பு முதலீடு இவ்விரண்டையும் சமப்படுத்தும் நிலைக்கு வட்டி வீதம் நெளிந்து அமையுமேயானால், மொத்தத் தேவை என்ற கருத்துடன் அமைந்த பண அளவைக் கோட்பாட்டின் தொடர்பு சேமிக்கும் செயலுக்குத் தேவையில்லை. மக்கள் தமக்குக் கிட்டும் பணம் அத்தனையும் செலவிடுகிறார்கள். அவர்கள் (சேமிப்பாளர்களாக இருந்தால்) பணத்தைத் தமக்கெனச் செலவு செய்யமாட்டார்கள். ஆயினும், சேமிப்போர் தங்கள் சேமிப்பை நேர்கணிய பயன்

அளிக்கும் வகையில் வைத்திருக்க விரும்புவதாலும், அந்தச் சேமிப்பை அதாவது தனக்கெனச் செலவு செய்யாமல் சேமித்து வைத்து இருக்கும் சேமிப்போர் சேர்த்த அந்த அளவு பணத்தை முதலீடுசெய்ய ஒருவர் (முதலீட்டாளர்) விரும்புவதாலும், இவ்விரண்டு விருப்பங்களை வட்டி வீதம் சரிக்கட்டிவிடுகிறது. பண்டங்களுக்காக மாற்றப்படும் பணம் ஓட்டத்திற்குத் தடை எதுவுமில்லை. பண்டங்களுக்கான மொத்தச் செலவு அதாவது பண்ட அளவையும் விலையையும் பெருக்கிக் கிடைத்த தொகை பண அளவு எண் மடங்கு மாறிலி (multiple) ஆகும். எனவே வேலை நிறைவு இருக்கக் கூடிய விலைமட்டம் சாத்தியமாகும்.

## பத்திரங்கள் மறு விற்பனை அங்காடிகள்
## (A Resale Market for Bonds)

இதுவரை நடத்திய வாதம், விறைப்பான பல எடுகோள்கள் அடங்கியது. அதனைக் கீழ்க்காணும் எடுகோள்களால் சற்று இணக்கமாக்குவோம். முதலில், பல கடன் வாங்குவோர்கள் உடன்படிக்கைப்படி வட்டித் தொகையைக் கட்டத் தவறும் ஆபத்துகளுக்கு எவ்வாறு வட்டி வீதங்களை வழங்குகிறார்கள் என்பதை எடுகோளாக வைத்துக்கொள்வோம்.[1] ஆபத்துகள் எதுவுமில்லாதத் தொழில்துறை வழங்கும் வட்டி வீதத்தைத் 'தூய்மையான' (pure) வட்டி வீதம் எனக் குறிப்பிடலாம். (அத்தகைய தொழில்துறை நடைமுறையில் இருக்கும் அல்லது இல்லாமலும் போகலாம்). ஏதேனும் ஒரு குறிப்பிட்ட தொழில் நிறுவனம் கொடுக்கும் வட்டி 'தூய்மை' வட்டியுடன் ஆபத்து (risk) மதிப்பெச்சத் (premium) தொகையைக் கூட்டி வழங்கும்–இம் மதிப்பெச்சம் கடன் வாங்குவோர் பணத்தைத் திருப்பிக் கொடுக்க மாட்டார் என்ற ஆபத்தைக் கடன் வழங்குவோர் நினைப்பதால், அது அதனை ஈடு செய்கிறது. கடனைத் திருப்பித் தராமல் போகும் ஆபத்து, கொடுக்கப்பட்டிருந்தால், அங்காடி வட்டி வீதங்கள் என்ற முழுக் குடும்பம் ஒன்றாகவே மாறும். இம்மாறுதல்கள் சிக்கன முறை நிலைமை, அல்லது ஆக்கம் அதிகமான நிலைமையாலும் ஏற்படும் 'தூய்மை' வட்டி வீத மாற்றங்களைப் பிரதிபலிக்கின்றன.

பல காலங்களில் திருப்பிக் கொடுக்க வேண்டிய காலவரம்புகள் மாறுவதால், வட்டி வீதம் மாறுகின்றன என்ற எடுகோளை நாம் இங்குப் புகுத்தலாம். ஆயினும் எளிமை கருதி, தொடர்ச்சியான

[1] தொடர்ச்சியான அல்லது காலவரம்பற்ற கடன்களை நாம் எடுகோளாகக் கொண்டிருப்பதால் அசல் தொகையைச் செலுத்த மீறும் ஆபத்து இல்லை.

அதாவது காலவரம்பில்லாத கடன்கள் மட்டும் உள்ளன என்ற எடுகோளை மட்டும் வைத்துக் கொள்வோம். ஆனால், உண்மை மிகுந்து காணும் பொருட்டுப் பத்திரங்களை மறு விற்பனை செய்வதற்கான மறு விற்பனை அங்காடி உள்ளது என்று கூறுவோம். இந்தக் கருவியின் வாயிலாகக் குறித்த தவணைக் கடன்களைப் பெற முடியாது. தனது கடன் பொறுப்பைக் குறைக்க விரும்பும் கடன் வாங்குபவர் தனது கடன் சீட்டுகளை மறுபடி வாங்குதல் செய்து பொறுப்பைக் குறைத்துக் கொள்கிறார்கள்.

மறு விற்பனை அங்காடியினைச் சற்று விரிவாக விளக்குவதற்கு இன்னும் சில சாதனைகள் தேவை. அவைகளில், பல எல்லோருக்கும் தெரிந்தவைகள். ஆயினும், அவைகளை இங்கே எடுத்துக்கூறல் ஏற்புடையது. 100 டாலர்கள் மதிப்புள்ள பத்திரத்தை (bond) வழங்கினால், அதன் மறு விற்பனைக்கு ஒரு சாதனைத் தேவை. அதாவது, அவன் வழங்கும் வட்டி வீதம், அந்தப் பத்திரத்தின் விலை அதாவது 100 டாலரையும், அங்காடி வட்டி விகிதத்தையும் பெருக்கிக் கிட்டும் தொகைக்குச் சமமாக வேண்டும் என்பது. பத்திரம் வழங்குபவர் ஆண்டுக்கு 3 டாலர் வட்டி வழங்குகிறார் என்றும், அங்காடி வட்டி 6 சத வீதம் என்றுமிருந்தால், அந்தப் பத்திரத்தை 100 டாலர்களுக்கு விற்க எதிர் பார்க்க முடியாது; ஆனால், அதனை 50 டாலர்களுக்குமேல் விற்க முடியும். ஆனால், அங்காடி வட்டிவீதத்திற்குச் சமமாக இல்லாத விலைக்குப் பத்திரத்தை வாங்க யாரும் முற்பட மாட்டார்கள். ஆனால், அங்காடி வட்டி வீதம் என்பது என்ன? பல பத்திரங்களின் வாக்குறுதி ஒப்பந்த வீதங்களை அவைகள் அங்காடி மதிப்புகளைக் கொண்டுவகுத்துக் கிடைக்கும்தொகை, அங்காடி வட்டிவீதமாகும். (தராதர ஆபத்துகளைத் தவிர்த்து) பார்க்குமிடத்து ஆண்டுக்கு 4 டாலர் வழங்கும் பத்திரங்கள் 100 டாலர் வீதமும், ஆண்டுக்கு 5 டாலர் வழங்கும் பத்திரங்கள் 125 டாலர் வீதமும், ஆண்டுக்கு 6 டாலர் வழங்கும் பத்திரங்கள் 150 டாலர் வீதமும் விற்குமேயானால், அங்காடி வட்டி 4 சதவீதமாகும் புதிய பத்திரங்கள் இதைவிட அதிகமான அல்லது குறைவான விளைவுகளைக் கொடுக்க மாட்டா. பத்திரங்களின் விலைகள் மாறினால்தான் அங்காடி வட்டி வீதம் மாறும். 100 டாலர்களுக்கு விற்ற பத்திரங்கள் 120 டாலர்களாகவும், 125 டாலர்களுக்கு விற்ற பத்திரங்கள் 150 டாலராகவும், 150 டாலர்களுக்கு விற்றவை 180 டாலராகவும் மாறிக் கொண்டு போனால் அங்காடி வட்டி வீதம் $3\frac{1}{3}$ சதவீதமாகக் குறைந்தது எனக் கூறலாம். பத்திரங்களின் விலை மட்டம், அங்காடி வட்டி வீதம் ஆகிய இவை ஒரே தகவலை இரண்டு வகைப்படுத்திக் கூறு

கின்றன. பல சந்தர்ப்பங்களில், பத்திரங்களின் விலை மாற்றங்களை ஒட்டிக் கோட்பாட்டை மிக எளிதாக விளக்கலாம். ஆனால், இதனை வட்டி வீத மாற்றங்களை ஒட்டி அவ்வளவு எளிதில் விளக்க முடியாது. ஆனால், ஒன்றை ஒட்டிய விளக்கம் மற்றொன்றைச் சார்ந்ததாகும் என்பதில் ஐயமில்லை.

புதிதாக வழங்கப்படும் பத்திரங்கள், பழைய பத்திரங்கள் ஆகிய இவைகளை விற்கவும் வாங்கவும் வசதியுண்டு என்றால், வட்டி வீதக் கோட்பாட்டைச் சற்று மாற்றியமைக்க வேண்டியிருக்கிறது. பத்திரங்களின் விலை மட்டம் என்பது பத்திரங்களின் மொத்த அளிப்பு, மொத்தத் தேவை இரண்டையும் ஒட்டி உள்ளது. பத்திரங்களின் மொத்த அளிப்பு என்பது பத்திரங்களை முன்பு வாங்கி இப்பொழுது மறு விற்பனை செய்ய விரும்புவோர் வழங்கும் அளிப்பு, முதலீடுகளுக்குத் (investment) தேவைப்படும் நிதியைப் பத்திரங்களின் வழி திரட்டும் பொருட்டு வழங்கும் அளிப்பு இவை இரண்டையும் குறிக்கிறது. அதுபோல் பத்திரங்களின் தேவை என்பது இப்பொழுது சேமித்து அதன் வழி பத்திரங்களை வாங்க விரும்புவோர் தேவை, மற்றும் பலர் பத்திரம் வாங்க விரும்பும் தேவை இவ்விரண்டையும் குறிக்கிறது. கிளாசிக்கல் பொருளியல் நிபுணர்கள் இத்தகைய மறு வாய்பாடு தேவையில்லை எனக் கருதுகின்றனர். அவ்வாறு கருதுவதற்குக் காரணங்கள் என்னவென்று ஆராய்வோம்.

பத்திரங்களின் நடப்பு அளிப்பு என்பது முதலீடுகளை நிதிமயமாக்க வழங்கப்படும் புதிய பத்திரங்கள், முன்பே வழங்கப்பட்ட பத்திரங்களின் விற்பனை ஆகிய இரண்டு வகையின் கூட்டாகும். பத்திரங்களை விற்பவர்கள் அநேகமாய் நுகர்ச்சியாளர்கள். அவர்கள் சேமிக்க இயலாதவர்கள். அதனை நிதிமயமாக்க அவர்கள் தங்கள் பத்திரங்களை விற்க முற்படுகிறார்கள். (அவர்கள் சேமிக்க இயலாதவர்கள் ஆகையால், ஒரு குறித்த காலத்தில் பத்திரங்களைக் குறைந்த அளவில் வாங்குகிறார்கள்; ஆனால், அவற்றில் எதையும் விற்க முற்படமாட்டார்கள்) சேமிக்க இயலாதவர்கள் ஏதேனும் ஒரு அவசர நிலைமையைச் சமாளிக்கவும்; அல்லது புதிய பண்டங்களை வாங்கவும் அதனைப் பயன்படுத்துகிறார்கள். சேமிக்க இயலாதவர்கள் விற்கும் பத்திரங்கள் மற்ற நுகர்வோரது சேமிப்புகளைத் தன்பால் இழுக்கிறது. நிகரச் சேமிப்புகளின் அளவு குறைந்தால் பத்திரங்களின் விலை குறையும் (அதன் விளைவு வட்டி வீதங்கள் அதிகரிக்கும்)-பழைய பத்திரங்களை அங்காடிகளில் குவிப்பதால்—சேமிப்புகளின் நேர்நிலை அளவு அதிகரிக்கும். ஆனால், மக்களிடையே சேமிப்பின்மை அதிகரிக்கிறது என்பது அங்காடியில்

சேமிப்பு, முதலீடு இவை இரண்டும் சமநிலையில் உள்ளது என்று துடன் தலையிடுவதில்லை. நிகரச் சேமிப்பு, (நேர் நிலைச் சேமிப்பு, அல்லது சேமிப்பின்மை குறைகிறது என்றாலும்) வட்டி வீத மாறு தல்களினால், முதலீட்டுடன் சமயாக ஆகிவிடுகிறது.

பத்திரங்களை விற்க முற்படும் மற்றொரு பகுதி தொழில் நிறு வனங்கள். இத் தொழில் நிறுவனங்கள் பத்திரங்களை இதுகாறும் விற்காமல் வைத்திருப்பின் இதற்கும் பலகாரணங்கள் காட்டலாம். பத்திரங்களை வருவாய் அளிக்கும் நிதி ஒதுக்கீடுகளாக வைத்திருக் கலாம்; ஆனால், தற்சமயம் அவர்களுக்குப் பணம் தேவைப்படுகிற காரணத்தால் அவைகளை விற்க முற்படுகிறார்கள். தனது சம்பளப் பட்டியல்கள் அதிகமாவதாலும், பழுதடைந்த இயந்திரங்களைப் புதுப்பிக்கவும், அவைகளின் பணத்தேவை அதிகமாகிறது. எனவே, பத்திரங்களின் பெரும் பகுதியை விற்க முற்படுகிறார்கள்; எனவே, பத்திரங்களின் விற்பனை முதலீடுகளை நிதிமயமாக்குகிறது. (அதாவது முடிவுற்ற பண்டங்களின் அளவு அல்லது கச்சாப் பொருள்களின் அளவு ஆகியவற்றை நிதிமயமாக்க) இவை பயன் படுகின்றன. இவைகளின் பணியும், புதிய பத்திரங்களின் விற்பனைவழி கிடைக்கும் நிதியின் பணியும் ஒன்றாகும். ஒரு சில தொழில் நிறுவனங்கள் பத்திரங்களை விற்றுத் தமது ஒதுக்கீடு பணத்தைத் திரும்பப் பெறுகின்றன. அதேபோல் வேறு பல தொழில் நிறுவனங்கள் பத்திரங்களை வாங்கி ஒதுக்கீடு நிதியை அதிகமாக்குகின்றன. இப் பத்திரங்களை அவை தமது நடப்புச் சேமிப்புகளிலிருந்து பெறுவதில்லை. ஆனால், நிலை முதல் சரக்குகள் போன்றவைகளில் முதலீடு செய்யாமல் மிஞ்சும் பணத்திலிருந்து பத்திரங்களை வாங்குகின்றன. இவைகள் நம் கவனத்திற்குரியன. எனவே, சேமிப்புகள் மட்டும் நிகரானவை என்று கொள்ளாமல் முதலீடும் நிகரானது (net) என்பதையும் கொள்ள வேண்டும். மேலும் நெளியும் தன்மையுடைய பத்திரவிலைகள் (வட்டிவீதங்கள்) நிகர சேமிப்பு, நிகர முதலீடு இரண்டையும் சமமாக்கும் என்பதில் ஐயமில்லை.

பழைய பத்திரங்களை வாங்கி, விற்கும், பணியில் ஒரு பெரு மளவு மக்கள், தொழில் நிறுவனங்கள் ஆகிய இருபாலார்களை யும் சாரும். மக்கள் அல்லது தொழில் நிறுவனங்கள் ஆபத்து மதிப்பெச்சம் (risk premium) பத்திரங்களின் ஆபத்து மதிப் பெச்சத்தைக் கணக்கிடுதல் அங்காடிக் கணக்கீடுகளைவிட மாறும் தன்மை ஆனதால், அவைகள் பத்திரங்களை விற்கவோ அல்லது வாங்கவோ முற்படுகின்றன. என்னிடம் உள்ள ஒரு பத்திரத்தை, அங்காடி அதிமாக மதிப்பிடுகிறது என்று வைத்துக்

கொள்வோம். (அதிக விலை என்றால் பத்திரத்திற்குக் குறைந்த ஆபத்து மதிப்பெச்சம் என்பது பொருள்) ஆனால், அதனை அதிக ஆபத்தானது என்று நான் மதிப்பிடுகிறேன். வேறு ஒரு பத்திரம் மலிவானது என்று நான் மதிப்பிட்டால் என்கையில் உள்ள ஆபத்து நிறைந்த பத்திரத்தை விற்று, இந்த மலிவான பத்திரத்தை நான் வாங்குவேன். இத்தகைய பேரங்கள் அதிகரிக்கும். ஏனெனில், தனிமனிதர்களின் மதிப்பீடு, அங்காடியின் மதிப்பீடு இவ்விரண்டும் வேறானவை. எனவே, அங்காடிகள் அதிகப்படி மதிப்பீடு வழங்கிய பத்திரங்களை விடுத்து, அங்காடிகள் குறைந்தப்படி மதிப்பீடு வழங்கிய பத்திரங்களை வாங்கத்தனியார் முற்படுவார்கள். ஆகவே, இத்தகைய பேரங்களின் அளவு அதிகரிக்கும். ஆனால், இத்தகைய பேரங்கள் பத்திரங்களின் பொது விலை மட்டத்தைப் பாதிக்காது. (ஆயினும் பத்திரங்களின் விலை அமைப்பைப் பாதிக்கும்). நான் வைத்திருக்கும் ஒரு பத்திரத்தை 'அங்காடி' அதிக மதிப்பீடு செய்கிறது என்றால், நான் அப் பத்திரத்திற்கு வழங்கும் விலையைவிட அதிக விலை வழங்குவதற்கு அங்காடியில் பலர் இருக்கிறார்கள் என்பது பொருள். அப் பலரில் சிலர் சேமிப்பாளர்கள் என்று வைத்துக்கொள்வோம். ஆனால், அவர்களின் சேமிப்பு முதலீட்டிற்குப் பயன் படாமல் வேறு வழியில் பயன்பட அதனைத் திருப்பிவிட்டேன். ஆனால், அங்காடி குறைந்த மதிப்பீடு தந்த பத்திரத்தை நான் வாங்கி உள்ளேன். இப் பத்திரம் புதிதாக வழங்கப்பட்ட ஒரு பத்திரமனாதால் நான் சேமிப்பை மறுபடியும் முதலீட்டுக்குத் திருப்பி விட்டேன். அப்படி நான் வாங்கிய பத்திரம் பழையது எனக் கொண்டால், அதனை விற்றவன், அதன் மதிப்புப் பெருக்கப்பட்டது என நினைத்திருக்க வேண்டும், அல்லது புதிய பத்திரங்களை வாங்க அவனிடத்தில் போதிய பண வசதியுள்ளது, அல்லது தனது பணத்தை வேறு ஒருவனுக்கு அளித்து அதன்வழி, அவன் புது பத்திரங்களை வாங்கத் தூண்டுவது எனப் பல பொருள்படும். பத்திரங்களை வாங்கும் ஒவ்வொருவரும், பயனில்லா ரொக்கத்தை விரும்பாதவரை பத்திரங்களுக்கான மொத்தச் செலவு இருந்துகொண்டே இருக்கும். சொத்துள்ள அறிவுடைய மாந்தர் எவரும் பயனில்லா ரொக்கத்தை விரும்ப மாட்டார் என்பதனாலும், அவர்கள் பயனையே கருதுவார்கள் என்பதனாலும், பழைய பத்திரங்களின் விற்பனை பெரிய தொரு பிரச்சினையைக் கிளப்பாது. இதற்கு விளக்கம் கூறலாம். பழைய பத்திரங்கள் என்பது பத்திரங்களின் மொத்த வழங்குதலின் ஒரு சிறிய அளவேயாம். புதிய சேமிப்பு, புதிய முதலீடு ஆகிய இரண்டும் சுன்னம் என்ற அளவைப் பெற்றாலும், நடப்புப் பத்திரங்களுக்கான பேரங்களின் அளவு அதிகரிக்கும். மக்களிடையே மாற்றி

அமைத்தல் அதிகமாக நேரிடுவதால் இவைகளின் பேரம் அதிகரிக்கிறது.

பத்திரங்களுக்கான தேவை, அளிப்பு இவ்விரண்டிற்கும் வேறு பல வழிகளும் உண்டு. ஆனால், இவைகளின் விளைவுகள் எல்லாம் ஒரேதன்மையன. பயனில்லா ரொக்கத்தைவிட வருமானம் விளைவிக்கும் சொத்தை விரும்பும்வரை, பழைய பத்திரங்களின் அங்காடிக்கு ஒருவிதமான தகுதியும் தேவையில்லை; ஏனெனில், இது சேமிப்புச் செய்யும் பணியைச் செய்கிறது. எனவே, மொத்தத் தேவைக் கோட்பாட்டினை விளக்கும் பண அளவைக் கோட்பாட்டிற்கும், தகுதிகள் எவையும் தேவையில்லை. புழக்கத்தில் உள்ள பணம் அனைத்தும், முன்னறிவிக்கக்கூடிய அளவிற்கு நடமாடுகிறது. பண இருப்பையும் அதன் வேகத்தையும் பெருக்கிக் கிட்டும் தொகைக்கு, மொத்தத் தேவையின் அளவு சமமாகிறது.[1]

மக்கள் தொகையின் சிக்கனம் அதிகமானால் அதாவது நடப்பு நுகர்ச்சிப் பொருள்களுக்கான வருமானச் செலவு குறையுமானால், அதனால் ஏற்படும் வட்டி வீதக் குறைப்புச் சேமிப்பைக் குறைக்கவும், அதிகப்படி முதலீட்டை ஈர்க்கவும் செய்யும். இந்த வட்டி வீதக் குறைப்பு முந்தைய தேவை அளவைச் சரிப்படுத்தும் அளவிற்குக் குறையும். புதிய முதலீட்டிற்கான செலவு குறைவு பட்டால், புதிய பத்திரங்களின் வழங்குதல் குறையும்; அதனால் வட்டி வீதம் குறையும்; இக் குறைப்பு, செலவைச் சரிக்கட்டும் வரை குறையும். இவைகள் எல்லாம், பயனில்லா ரொக்கத்தைக் குவிக்கும் எண்ணம் எவரிடத்தும், எப்பொழுதும் இல்லை என்று ஏற்பட்டால், கைகூடும்.

[1]பழைய பத்திரங்களின் பேர அளவு அதிகமானால், அதற்கான பண அளவும் அதிகமாகும். நிதி நிலை பேரங்களை அதிகமாக்க, பணம் அதிகம் தேவைப்படுகிறது என்பது இதன் பொருள். இதனால் வட்டி வீதம் அதிகரிக்கிறது. சேமிப்புடன் தொடர்பு கொண்ட முதலீட்டின் அளவு குறைகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இரண்டாவது பத்தாண்டின் பிற்பகுதி, மூன்றாவது பத்தாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த பணக்கோட்பாட்டினரில் பெரும்பகுதியினர் இப்பிரச்சினையினால் பாதிக்கப்பட்டார்கள். ஆயினும், நிதிமய அங்காடிகளின் அமைப்பு (organisation) பத்திரங்களின் பேர அளவை அதிகப்படுத்தியது என்பது தெளிவு. அதாவது நிதிநிலைச் சுற்றுப் புழக்கவேகம் (velocity of financial circulation) மிகுந்த உயர்ந்த நிலையிலிருந்தது எனப் பொருள்படும். எனவே, பத்திர அங்காடிகள் ரொக்கத்தின் ஒரு சிறிய அளவையே உறிஞ்சின. இவ் வழியில் ரொக்கம் உறிஞ்சப் பெறுமல் போனாலும், பிரச்சினை எதுவும் எழாது; ஆனால், பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின் விலைகள் (கீழ்நோக்கிய வழியில்) இணக்கமானவைகளாக இருக்கவேண்டும்.

## பண அளவைக் கோட்பாட்டுடன் தொடர்புடைய சேமிப்பும் முதலீடும்

## (Savings & Investment in relation to the Quantity Theory)

எளிமை நலமுடைய கோட்பாட்டின் விளைவுகளும் மேற்கூறியவற்றின் விளைவுகளும் ஒன்றுனவை என்றாலும், இவ்விரண்டின் கருத்துகளும் வேறுனவை. எடுகோளாகப் பண அளவு அதிகரிப்பின் விளைவுகளைக் கவனிக்கலாம்— பணத்தின் தேவை, பண வருவாயின் மாருத பின்னம்—அதாவது வருவாய் புழக்க வேகம் மாறிலி என்ருல்-M அதிகரித்தால் மொத்த விலைகளால், பண அளவைப் பெருக்கிக்கிட்டும் தொகை ஒரே விகிதத்தில் அதிக மானால்தான் சமநிலை ஏற்படும். இச் சமநிலை விலைகள் உயர்வதால் கிட்டும் (அதாவது இணக்கமான பணக் கூலிகள் அல்லது முன்பு உள்ள வேலை நிறைவு சமநிலை ஆகியவைகள் எடுகோள்கள் தேவை.) ஆயினும் மக்களது நேரடிச் செலவுகளைச் சுட்டாமல், இரு முதல் செயற்களத்தின்வழி ஏற்படும் மாற்றங்களைப் பண அளவைக் கோட்பாட்டின் இக் கூற்று சுட்டிக் காட்டிப் பண அளவை (M) மாற்றங்களை விளக்குகிறது.

ஆனல், பண அளிப்பின் மாற்றங்கள் எவ்வாறு நிகழ்கின்றன? தொழில்களுக்கு வங்கிகள் அளிக்கும் பணக் கடன்கள் பண அளிப்பை ஒரு வகையில் மாற்றுகின்றன. வங்கிகளிடத்தே சோம்பிக் கிடக்கும் வளங்கள் உள்ளன. ஆகவே, அவைகள் தொழில் நிறுவனங்களுக்குப் புதுப் பணத்தை (new money) கடனுக அளிக்க முடியும் என வைத்துக்கொள்வோம். இத் தொழில் நிறுவனங்கள் (முதலீடுகளை நிதிமயமாக்க) சேமிப்பாளர்களின் முழுச்சேமிப்பைக் கடனுகப் பெறுவதோடு அல்லாமல், வங்கிகள் வழங்கும் புதுப் பணத்தையும் கடனுகப் பெறுவதால், பண்டங்களுக்கான தேவை (பண்டங்களை உற்பத்தி செய்ய வேண்டிய வளங்களின் தேவை) ஆகிய மொத்தத் தேவைகள், பண்டங்களின் அளிப்பை மிஞ்சி விடுகிறது. நுகர்ச்சிப் பண்டங்கள், முதற்கருவிப் பொருள்கள் ஆகிய இரண்டு வகைப் பண்டங்களை உற்பத்தி செய்ய, முந்தைய வளங்கள் எல்லாம் நிறைவாகப் பயன்பட்டன. இதனுடன் சேமிப்பு அதிகமாகாமல் இருக்கும் போது ஏற்படும் புது முதலீட்டுக்கான தேவையையும் சேர்த்தால், சேமிப்பு அதிகரிக்காமல் (அதாவது நுகர்ச்சித் தேவை குறையாமல்) ஏற்படும் புது முதலீட்டுக்கான தேவையை இதனுடன் சேர்த்தால், பண்டங்களுக்கான மொத்தத் தேவை, ஆக்கக் கூறுகளுக்கான மொத்தத் தேவை ஆகிய இவை இரண்டும்

அவைகளின் அளிப்பை மிஞ்சும். இதனால் பண்டங்களின் விலை ஏறும். இதனால்தான் பண அளவின் மாற்றம் விலைகளை மாறச் செய்கிறது. இக் கருத்தை விக்செல் (Wicksell) என்ற பேராசிரியர் தெரிவித்திருக்கிறார். அவர் பண அளவை மாற்றங்கள், பண்டங்களின் தேவை அளவின் மாற்றங்கள் இவ்விரண்டையும் ஒன்று சேர்ந்து விளக்கம் தந்திருக்கிறார்.[1]

விக்செல் அவர்களின் பகுப்பாய்வினைக் கீழ்க்காணும் விளக்கப் படத்தின் (7–2) வாயிலாகச் சுருக்கமாக வெளியிடலாம்.




படம் 7-2.

இந்தப் படத்தில் S என்பது சேமிப்பின் அளிப்பு வளைகோடு i என்பது முதலீடு அட்டவணையை விளக்குகிறது. $r_0$ என்ற இடத்தில், சேமிப்பு, முதலீடு செய்த தொகை இவை இரண்டும் சமமாக இருக்கின்றன. இப்பொழுது முதலீடு அட்டவணை i' என்ற இடத்திற்குப் பிறழ்கிறது என்று வைத்துக்கொள்வோம். இதனால் சமநிலை வீதம் (equilibrium rate) [இதனை இயற்கை வீதம் (natural rate) என்று விக்செல் கூறுகிறார்.] என்பது $r_1$ என்ற இடத்திற்கும் பிறழ்கிறது. நிதிகளுக்கான இந்த அதிகப்படித் தேவையை வங்கிகள் பழைய அங்காடி வீதத்திற்கே அதாவது $r_0$ என்ற வீதத்திற்கே வழங்குகின்றன என்று வைத்துக்கொள்வோம்; அல்லது ஓரளவிற்கு உயர்ந்த வீதத்திற்கே வழங்குகின்றன என்று வைத்துக்கொள்வோம். இத்தகைய நிலை வெகு எளிதில் உண்டாகும். ஏனெனில், வங்கிகள் குறிப்பாக ஓர் அமைப்பில்

[1] கே. விக்செல் : 'அரசின் பொருளியல் சொற்பொழிவுகள்' இரண்டாம் பாகம் குறிப்பாகப் பக்கங்கள் (159-208) என்ற நூலைக் காண்க. இதனை (எல். இராபின்ஸ் மொழி பெயர்த்திருக்கிறார். ரௌட்லெட்ஜும், கெகன்பாலும் 1955)

See K. Wicksell : Lectures on Political Economy ; L. Robbins trans (Routledge & Kegan Paul 1955) Vol. II esp. p. p. 159-208

உள்ள தனி வங்கிகள்-இயற்கை வீதம் (natural rate) என்பதை எளிதில் அறிய முடியாத நிலையில் உள்ளன. இதனால் பண அளவு MN என்ற வீதத்தில் உயர்கிறது.[1] முதலீட்டுக்கான தேவை அதிகமாகிறது (கடன் வாங்குபவர்கள் புதுப்பணத்தைச் செலவு செய்கிறார்கள்) இது பண்டங்களுக்கான தேவை கூடுதலைக் (increment) குறிக்கிறது. இதற்குச் சமமான நுகர்ச்சித் தேவை குறைபடவில்லை (அதாவது சேமிப்பு) அளிப்பைவிட இந்த வகையில் மிஞ்சும் தேவை விலைகளை உயர்த்துகிறது.

விலை அதிகரிப்பு எவ்வளவு தூரம் செல்லும்? அல்லது எவ்வளவு காலம் நீடிக்கும்? அங்காடி வீதம், இயற்கை வீதத்தை விடக் குறைவாக இருந்தால், பண்டங்களின் மொத்தத் தேவை, அவைகளின் மொத்த அளிப்பைத் தொடர்ந்து மிஞ்சும். அதனால், விலைகள் அதிகமாகும். வங்கி வழங்குதல்,பண உற்பத்தி (money section) இவை இரண்டும் ஓய்ந்தால் (அதாவது தங்களது உபரி ஒதுக்கீடு குறைவு படுவதால்) இந்தப் பண வீக்கம் ஓயும். அவ்வாறு ஆனால், அங்காடி வீதம் இயற்கை வீதத்தைச் சமமாக்கப் பிறழும்; முதலீட்டுச் சேமிப்பை இது (சேமிப்பு அதிகமாவதாலும் அதாவது சேமிப்பு வட்டி வீதத்திற்கு நல்ல முறையில் எதிர் செயல் விளைவிப்பதாலும் அல்லது முதலீடின் வீதத்தை நல்ல முறையில் சரிக்கட்டுவதாலும்) மறுதலிக்கும்.

எவ்வளவு தூரம் விலை உயர்வு செல்லும்? இதற்கு விடை பின்வருமாறு :–பண அளிப்பு எந்த அளவிற்கு உயர்ந்திருக்கிறதோ அந்த அளவிற்கு விலைகள் உயரும். அவ்வாறு இல்லையேல், சோம்பும் இருப்புகள் மிஞ்சும்; இவைகளை மக்கள் குவிக்க விரும்ப மாட்டார்கள்; ஆனால், இவைகள் வட்டி வீதத்தை இயற்கை வீதத்திற்குக் கீழ்க் குறைத்துவிடும் தன்மையன; இதனால் பண வீக்கம் தொடரக்கூடிய சூழ்நிலை உருவாகும்.

பணக்கூலிகள்கூட இந்த வீதத்தில் உயர்ந்ததாக வேண்டும். கூலிகள், விலைகளுக்குச் சரியாக உயராவிட்டால், வேலை அளிப் போர் அதிக வேலை வழங்க ஊக்குவிப்புகளை அளிக்கும். ஆனால், வேலையில் அமர்த்த அதிகப்படி ஆட்கள் இல்லாத காரணத்தால். வேலைக்கான அதிகத்தேவை, வெகுவிரைவில் கூலிகளை உயர்த்த

[1] ஒரே ஒரு வகைப் பத்திரங்கள் உள்ளது என்ற எடுகோள் தேவை இவைகளை வங்கிகள் MN என்ற வீதத்தில் வாங்குகின்றன. இவை சேமிப்பாளர்கள் LM என்ற வீதத்தில் வாங்கியவைகளுடன் சேர்க்கவேண்டும். வங்கிகள் பத்திரங்களை வாங்கா விட்டால், பத்திரங்களின் அளிப்பு அதிகமாகும், எனவே, அவைகளின் விலை குறையும் (வட்டி வீதங்கள் அதிகமாகும்). அதனால் $r_1$-க்குச் சமமாகும். S, I ஆகிய வைகள் ஓட்டங்கள். MN என்பது பண அளிப்பின் அதிகரிப்பு; எனவே, இதனை ஓட்டமாகவே கருதலாம்.

முற்படும். கூலிகளின் அதிகரிப்பு, விலைகள் அதிகரிப்பின் வீதத்தில் அமையும். இந்நிலையில், விலைகள் கூலிகள் எல்லாம் பண அளிப்பு உயர்ந்த வீதத்தில் அமையும். (முதலீடு அட்டவணை குறையும் இடத்து ஏற்படும் விளைவுகளை மாணவர்கள் ஒழுங்கான முறையில் சொல்லத் துணியவேண்டும்).

மேல் காட்டிய எடுகோளில், பண வீக்கத்திற்கான ஊக்கு விப்பு வங்கிகளின் வழியாக வரவில்லை. ஆனால், இயற்கை வட்டி வீதம் உயர்ந்திருப்பதால் பண வீக்கம் ஏற்பட்டிருக்கும். தொழில் நுட்பங்களில் ஏற்படும் பலவித புதிய சாதனைகளையும், அல்லது முதற் பொருள்களின் இறுதி நிலை ஆக்கம் அதிகமாக இருப்பதையும் இது பிரதிபலிக்கிறது. வங்கிகள் மந்தமான முறையில் எதிர் செயல் புரிந்தன. விக்செலின் கருத்தில் இது சாதாரணமாக ஏற்படுகிற நிலை. ஆயினும், வங்கிகள் பண வீக்கத்தை ஏற்படுத்த சில வேலைகளில் முனைகின்றன. அங்காடி வட்டி வீதம், இயற்கை வட்டி வீதம் இவ்விரண்டும் சமமாக உள்ளனவென்றும், முதலீடு, சேமிப்பு அட்டவணைகளில் ஒருவித மாறுதலுமில்லை என்றும் வைத்துக் கொள்வோம். ஆயினும், வங்கிகள் அதிகப்படி ஒதுக்கீடுகளைப் (reserves) பெற்றுள்ளன. பத்திர அங்காடியில் அவைகள் பத்திரங்களை வாங்கும் பணியில் ஈடுபடுகின்றன என்றும், இதனால் பத்திரங்களின் தேவை அளவு உயருகிறது என்றும் வைத்துக்கொள்வோம். அவைகள் அங்காடியில் வாங்குவர்களாக இருக்கும்வரை பத்திரங்களின் விலை செயற்கை முறையில், சமநிலை மட்டத்தைவிட உயர்ந்த நிலையில் அமையும் (அல்லது அங்காடி வீதம் இயற்கை வீதத்தை விடக் கீழ் மட்டத்தில் இருக்கும்). இந்த நிலையில் பண்டங்கள், பணிகள் ஆகிய இவற்றின் மொத்தத் தேவை அவைகளின் அளிப்பைவிட மிஞ்சும், கூலிகள், விலைகள் இவை இரண்டும் உயரும். வங்கிகள் பத்திரங்களின் தேவை அளவை அதிகரிக்க முடியாமல் போனால், விலைகளின் உயர்வு தடுக்கப்படும். வட்டி வீதம் மீண்டும் சமநிலை வீதத்திற்குச் சமமாகும்.

பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின் அதிகப்படி தேவை மிஞ்சினால் அதனால் ஏற்படும் விலைகள் உயர்வு அதிகப்படி தேவையைத் தவிர்ப்பதில்லை. இக் குழப்பம் பொதுவாக எல்லோருக்கும் ஏற்படக்கூடிய ஒரு குழப்பம். இதனை விக்செல் நன்கு உணர்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. வேலை நிறைவு சமநிலையில் இருந்து தொடங்குவோமானால், தொழில் முயல்வோர்கள் தம்மிடம் உள்ள புதுப் பணத்தைக்கொண்டு இயந்திரங்கள் மற்றும் பல சாதனைகளில் முதலீடு செய்ய முற்படுவார்கள். இதனால் பண்டங்கள் (அல்லது அவைகளை உற்பத்தி செய்யத்

தேவைப்படும் வளங்கள்) ஆகியவைகள் மற்றப் பயன்களிலிருந்து இந்தத் துறைக்கு, அதிக விலை கொடுத்துத் திருப்பப்படுகின்றன. கால இடைவேளைகளுக்கான (lags) எடுகோள்களைக் கொண்டால், முதலீடு செய்வர்கள் நுகர்வோர்க்குத் தேவைப்படும் வளங்களைத் தம்மால் இழுத்துவிடுவார்கள். ஏனெனில், நுகர்வோர்கள் தங்களிடத்து அப்போது உள்ள வருமானம் மாறாமல் இருப்பதால் அவைகளுக்கான உயர்ந்த விலைகளை வழங்க மாட்டார்கள், வழங்க முற்படவும் மாட்டார்கள். எனவே, அங்காடியில் உள்ள அத்தனை வளங்களையும் பயன்படுத்தி விடுகிறது. அதாவது வளங்களை நுகர்ச்சித் தன்மையிலிருந்து பிரித்து முதலீட்டுக்குத் திருப்பிவிடுகிறது. இதனைக் 'கட்டாயச் சேமிப்பு' (forced saving) எனக் கூறலாம். ஏனெனில், நுகர்வோர் உயர்ந்த விலைகளை வழங்கக் கட்டாயப் படுத்தப்படுகிறார்கள். அவர்களிடம் உள்ள வருமானம் அதிகமாகாமல் இருப்பதால் நுகர்வோர் உயர்ந்த விலைகளை வழங்கக் கட்டாயப்படுத்தப்படுகிறார்கள். ஆனால், விக்செல் அவர்களின் கருத்தில் இது ஒரு தாற்காலிக மாற்றம் என்று பொருள்படுகிறது. பண்டங்களும் வளங்களும் உயர்ந்த விலைகளுக்கு விற்கப்படுவதால், அமைப்பில் அதிகப்படி பணம் புழக்கத்தில் உள்ளது. இந்த அதிகப் பணம் விலை ஏற்றம் அளவை ஒத்ததாகும். ஆனால், அவர்களின் உண்மைநிலை மாறவில்லை. முன்பு அவர்கள் நுகர்ந்த பண்டங்களையே மீண்டும் பெறுகிறார்கள். ஆனால், அவர்களது வருமானம் அதிகமாகியிருப்பதால் அவர்கள் அப் பண்டங்களை உயர்ந்த விலைக்கு வாங்க முடிகிறது. எனவே, நுகர்வோர் தங்களிடத்துள்ள வருமானம் மொத்தமாக உயர்ந்திருப்பதால், பண்டங்களை உயர்ந்த விலைக்கே வாங்க அவர்கள் மீண்டும் அங்காடிக்குத் திரும்ப வருவார்கள். எனவே, தொடக்க விலையேற்றம், அதிகப்படி தேவையைத் தவிர்க்கவில்லை; இது கால இடைவேளையில்மட்டும் தவிர்க்கப்படுகிறது. அதாவது அதிக விலைகள் வழங்கவும் அதனால் வழங்கப்படும் அதிகப்படி வருமானம் பெறும்வரை உள்ள கால இடைவேளையில் மட்டும் தவிர்க்கப்படுகிறது. இத்தகைய அதிகப்படித் தேவை தவிர்க்கப்படாதவரை (உதாரணமாக வட்டி வீதம் தனது இயற்கை மட்டத்திற்கு உயரும்வரை,—இதனால் நுகர்ச்சித் தேவை, முதலீட்டுத் தேவை ஆகிய இரண்டும் குறைபடும். இல்லையேல் விலையேற்றம் கால வரம்பில்லாமல் உயர்ந்துகொண்டே போகும்.) (பணவீக்கச் சுழல் (inflationary spiral) என்பது தன்னைத் தானே கவனிக்கும் சக்தியுடையது; அதாவது அதிகப்படி வருமானம், அதிகப்படி விலை இவை ஒன்றை ஒன்று சுற்றித் திரிகிறது. இக் கருத்துப் பணவீக்கப் பகுப்பாய்வில் சிறந்ததோர் கருத்தாகும்).

விக்செல் இதன் எதிர்தன்மையையும் நன்கு உணர்ந்தவர். அதாவது சேமிப்பைவிட முதலீடு குறைவுபட்டிருப்பதாலும், மொத்தத் தேவை (aggregate demand) குறைவுபடுவதாலும், அத்தகைய குறை வட்டி வீதக் குறைப்பால் சரிக்கட்ட முடியா விட்டால், கூலிகள் விலைகள் குறைவுபடும். இத்தகைய குறைப்பு தேவைக் குறைவைச் சரிக்கட்டாது. ஆனல், தாற்காலிகமாகப் பண வருமானங்கள், பண்ட விலைகள், கூலிச் செலவுகள் ஆகியவை விகிதாசாரமாகக் குறையும். ஆயினும், தேவைக் குறைப்பு நீடித் திருக்கும். ஏனெனில். நுகர்ச்சி, முதலீடு ஆகியவைகளின் உண்மைத் தேவை குறைந்தபாடில்லை என்பதால் தேவைக்குறை சரிக்கட்டப் படவில்லை. இது நிறைவேற (அதாவது சேமிப்பு, முதலீடு அட்ட வணைகள் கொடுக்கப்பட்டிருந்தால்) வங்கிகள் அதிகப்படி நிதிகளை உறிஞ்சாமலிருக்க வேண்டும். அதாவது அங்காடி வட்டி வீதத்தை இயற்கை வீதத்தைவிட உயர்த்தி வைத்திருக்காமல் இருத்தல் தேவை.

விக்செல் அவர்களின் கருத்தை விளக்கும் படத்தில், சேமிப்பு முதலீடு அட்டவணைகள் இரண்டும் உண்மைச் சேமிப்பு, உண்மை முதலீட்டைக் குறிப்பதாக விளக்கப்பட்டிருக்கின்றன. படம் 7-2 ல் முதலீடு அட்டவணையில் இருந்து i'க்குப் பெயர்ச்சி (அதாவது $r_0$ வட்டி வீதம் அல்லது அதைவிடக் குறைந்த வீதத்தில் அதாவது $r_1$ க்குக் கீழ்) உள்ளது பண்டங்களின் அங்காடியில் ஒரு பணவீக்க இடைவெளியை (inflationary gap) உண்டாக்குகிறது. இதனல் ஏற்படும் விலை உயர்வு இந்த இடைவெளியைத் தவிர்ப்பதில்லை. ஏனெனில், s, i ஆகிய இரு அட்டவணைகளும் மாறுமல் இருக் கின்றன. $i_0$, $i_1$, ஆகிய அதிகப்படி முதலீடு என்பது வளங்களைத் தன்பால் இழுக்கும் சக்திவாய்ந்தவைகள் ஆனல், உள்ளபடியான சேமிப்பு (அது முதலீட்டுக்குச் சமம்) உறுதியாக உயரும். (இதனைக் கட்டாயச் சேமிப்பு (forced saving) அல்லது நுகர்ச்சித் தியாகம் என்று முன்னமே குறிப்பிட்டுள்ளோம்). ஆனல், தேவைப்படும் சேமிப்பு என்பது அட்டவணையில் கண்டவாறு அமையும்.

கணக்கியல் முற்றொருமை, (accounting identities) சமநிலைக்குத் தேவைப்படும் நிபந்தனைகள் இவைகளிடையே ஏற்படும் வேறுபாடு களுக்கு மேலே குறிப்பிட்ட எடுத்துக்காட்டு ஏற்புடையதாகும். சேமிப்பும் முதலீடும் எப்பொழுதும் சமமாக இருக்கும் என்று இரண்டாம் அதிகாரத்தின் வாயிலாக உணர்ந்தோம். இந்த முற்றொருமைக்காகவே சேமிப்பு என்பதை வருமானத்தில் இருந்து கழிக்கப்பட்ட தொகை என விளக்கினேம். ஆனல், தேவைப்படும் சேமிப்பு (desired saving) என்று மேலே குறிப்பிட்டுள்ளது,

தனிப்பிரிவைச்சாரும். இச் சேமிப்பு வட்டி வீதத்துடன் சார்புத் தொடர்புடையது எனவே, இது முதலீட்டினுக்கு வேறுபட்டதாகும். இச் சேமிப்பு உள்ளபடி கிட்டும் சேமிப்புக்குத் தேவைப் படும் சேமிப்பிற்கு வேறுபட்டது. அந்த வித்தியாசத்தைச் சேமிப் போர் சரிக்கட்டுகிறார்கள். உள்ளபடி கிட்டும் சேமிப்பு, தேவைப் படும் சேமிப்பு இவ்விரண்டும் சமமானால், அதன் விளைவாகக் கிடைக்கும் நிலை சமநிலையாகும். விக்செலின் எடுகோள்களில் இந்நிலை, அங்காடி, இயற்கை ஆகிய இரு வட்டி விகிதங்களும் சமமானால் - அதாவது வங்கிகள் பணத்தை உற்பத்தி அல்லது அழிவு இவைகளில் எதையும் செய்யாதிருந்தால், கிட்டும்.

விச்செல்லும், அவர் காலத்து வாழ்ந்த பொருளியல் வல்லுநர்களும், அவர்க்குப்பின் வந்தவர்களும், உள்ளபடி கிட்டும் சேமிப்பு (actual saving) தேவைப்படும் சேமிப்பு (desired saving) இவ்விரண்டிற்கும் உள்ள வேறுபாட்டை நன்கு உணர்ந்தவர்கள். ஆனால், அவைகளை வெவ்வேறு வகைகளில் விளக்குதல் ஒரு வழியில் நன்மை தரக்கூடியது. அதுபோல் அவைகளை விளக்கிய வழி சமமாக இல்லாவிட்டால் ஏற்படும் சமனறு நிலைகளைப் பற்றி ஆராய்வதும் நன்மையைப் பயக்கும். ஆயினும் உள்ளபடி கிட்டும் சேமிப்பு, அதன் முதலீடு இவ்விரண்டும் உண்மையாக வேறானவை என மனத்தில் இருத்திக்கொள்ளுதல் நன்று. ஆனால், இத்தகைய பாகுபாட்டைச் சில பொருளியல் வல்லுநர்கள் அறவே வெறுத்தனர். அவர்களுக்கு s, i ஆகிய இவை வேறுபட்டவை என்ற கருத்து அருவருப்பானது. அதனைக் காலப்போக்கில் குவித்துக் கூறுதல் ஒரு தவறான கருத்து எனப்பட்டது. s என்பது i-யை விட அதிகமானால், இந்த அதிகப்படி சேமிப்புக் குவிக்கப்படுகிறது எனப் பொருள்படும். இறுதியாக இச் சேமிப்புக் குவியல் முதலீட்டைத் தேடத் தூண்டுகிறது. வர்த்தகச் சுழல் (business cycle) கோட்பாடுகள் பல இக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு விளக்கப் படுகின்றன ஆனால், இவ்வேறுபாடு பெருங் குழப்பத்தை விளைவிக்கும் என்பதில் ஐயமில்லை. தேவைப்படும் சேமிப்பு (desired saving) முதலீட்டுக்குச் சமமாக இல்லாவிட்டால், அதன் வேறுபாடு சிலருக்கு ஏமாற்றத்தையும் பலருக்கு அதிசயத்தையும் தரக் கூடியது. அதனை டக்கான் பாரன்வோஸ்கி (Tugan–Baronowsky) ஸ்பைதாப் (Spiethoff) என்பவர்களும், மற்றும் பலரும் கூறுகிற 'ரொக்க இருப்பு' (cash balance) அல்லது 'உருப்பெரு முதல்' (a free capital) நிதி, அல்லது 'முதலீடு செய்ய முடியாத சேமிப்புத் தேக்கங்கள்' (pool of uninvested saving) என்பவைகள் ஆகா. இச் சந்தர்ப்பங்களில் கணக்கியல் முற்றொருமைகளின் சிறப்புத்தலை தூக்கி நிற்கிறது.

## சேமிப்பும் பதுக்குதலும்
## (Savings & Hoarding)

பண அளவைக் கோட்பாட்டின் தூய்மை கெட்ட கூற்றின் விளைவு 'பதுக்குதல்' (hoarding), 'பதுக்குதல் இன்மை' (dishoarding) இவைகளை விளக்குதல். எல்லா மக்களுக்கும் தங்களுக்குக் கிட்டும் வருமானத்தைச் செலவிட அதாவது பண்டங்களின் மீது செலவிட- அல்லது ஆளா ரொக்கமாக (idle cash) வைக்க உரிமையுண்டு என்பதும், ஆயினும் அறிவுடை மாந்தர் எவரும் செலவையே விரும்புவார் அல்லாமல், தங்களது ரொக்க இருப்புகளை அதி கரிக்க விரும்பமாட்டார்கள் என்பதும், சூதறியாத பண அளவைக் கோட்பாட்டின் கூற்றுகள். பதுக்குதல், செலவின்மை ஆகிய இரண்டும் ஒரே பொருள் தரும் சொற்கள்; பதுக்குதலும் செலவிடு தலும் முரணானவை. தூய்மை கெட்ட நோக்கு, மக்கள், தங்களது பத்திரங்களின் அளவை அதிகரித்தும், ரொக்க இருப்புகளை அதிகரித்தும் சேமிப்பைப் பெருக்கலாம் என்பதை தூய்மை கெட்ட கூற்று ஏற்றுக்கொள்கிறது. மக்கள் ஆளா இருப்பை மேற் கொள்ள விரும்பவில்லை என்றால், அவர்கள் செலவு செய்யும் தூண்டு கையைக் கட்டுப்படுத்த முடியாதவர்கள் ஆகிறார்கள் என்று பொருளல்ல; ஆனால், சேமிக்கவேண்டும் என்ற முடிவுக்கு வந்த பின்னர் பயனற்ற சொத்தைவிட ஏதேனும் வருமானத்தை ஈர்க்கும் சொத்தாகக் கொள்ள விரும்புகிறார்கள் எனப் பொருள்படும். ஆயினும், சொத்துச் சேர்க்க விரும்புவோர் பதுக்கவேண்டும் என்ற ஆர்வம் உடையவர்கள் என்று வைத்துக்கொள்வோம். (இத்தகைய ஆர்வம் அறிவற்ற செயலாகும்). அதாவது தங்கள் சொத்து முழு வதையும் ரொக்கமாகவே வைத்திருக்க விரும்புகிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். இந்த நிலையில் அவர்கள் தங்களது சேமிப்புகளைக் கொண்டு புதிய பத்திரங்களை வாங்க மறுப்பதோடு அல்லாமல், தாங்கள் முன்பு வைத்திருந்த சேமிப்புகளைக் கொண்டு வாங்கிய பத்திரங்களை அங்காடியில் குவியலாகப் போட்டுவிடு கிறார்கள். இச் செய்கை தாற்காலிகப் பத்திரத் தேவையைக் குறைப்பதோடு அல்லாமல் (அதாவது புதிய சேமிப்புகள் பத்திர அங்காடிக்குச் செல்வதில்லை. அங்காடியில் உள்ள பத்திர அளிப்பு களை அதிகமாக்குகிறது. எனவே, பத்திர விலைகள் குறைகின்றன. முதலீடு குறைகிறது ஆனால், அது சேமிப்பைக் குறைப்பதில்லை. (அதாவது தேவைப்படும், அல்லது வேண்டுமென்று செய்த சேமிப்பு, முதலீடு ஆகியவை என்ற பொருளில் அமையும்). பண்டங்களுக்கான மொத்தத் தேவை குறைகிறது. இது வேலை யின்மையைக் கிளப்பிவிடுகிறது. இதனால் பணக்கூலிகள், விலைகள் சுருங்கிப்போகின்றன. இத்தகைய பணச் சுருக்கம் (deflation)

பதுக்குதல் உள்ளவரை நீடிக்கும். பதுக்குதல் நின்றவுடன் விலைகள் குறைந்திருக்கும் ஆனால், அந்தக் குறைப்பு வேக வீழ்ச்சியின் விகிதாசாரத்தில் அமையும். விலைகள் குறைந்த மட்டத்தில் இருக்கும்; அதற்கு ஏற்றவாறு பண வருவாய்க் கூறும் சரிக்கட்டப் படும்.

ஏதேனும் அறிவற்ற காரணத்தால் மக்கள் பதுக்குதல் இன்மையைப் பின்பற்றுகிறார்கள் எனக் கொண்டால், இந்த முறை திருப்பப்படும். இப்பொழுது பத்திரங்களின் தேவை என்பது சேமிப்புகளாக மட்டுமல்லாமல், பயனில்லா ரொக்கங்களாகவும் அமையும். இந்த ஆளா ரொக்கத்தை அதன் உரிமையாளர்கள் ஏதேனும் வட்டி ஈர்க்கும் வகையுள்ள சொத்தாக மாற்ற முற்படுவார்கள். இதனால் அங்காடி வட்டி வீதம் இயற்கை வட்டி வீதத்திற்குக் குறைந்த நிலையில் அமையும். இதே நிலைமையை மொத்தத் தேவை அதிகமாகும் நிலையில் கண்டோம். இதன் விளைவு கூலிகள், விலைகள் ஆகியவைகளைக் கூட்டும் பதுக்கல் இன்மை நின்றவுடன் வட்டி வீதம் இயற்கை வீத மட்டத்திற்கு மீண்டும் வந்துவிடும்; விலைகள் உயராமல் நின்றுவிடும்; ஆனால், முன்பு அடைந்த உயர்ந்த நிலையில் நின்றுவிடும். மீண்டும் பங்கு வாணிபச் செயற்களம், வட்டி வீதம் ஆகியவைகளின்வழி பதுக்குதல், பதுக்குதல்–இன்மை ஆகியவை விலைமட்டங்களைப் பாதிக்கும்.

பதுக்குதல், பதுக்குதல் இன்மை ஆகிய கருத்துகள், இவைகளின் பங்கு இவைகள் இத்தகைய மாறுதல்கள் ஏன் ஏற்படுகின்றன என்பதை விளக்க முடியவில்லை. ஆனால், பின்வரும் அதிகாரத்தில் காணும் விளக்கத்திற்கு இப் பிரச்சினை பெரியதொரு கருவியாகப் பயன்படுகிறது.

எளிமை நடை பொருந்திய கோட்பாடு ஒன்று எனக்கொண்ட முடிவை, இக் கூற்று இரண்டாகப் பிரிக்கிறது. எளிமை நடை பொருந்திய பண அளவைக் கோட்பாடு, மக்கள் தங்களுக்குக் கிட்டிய வருமானத்தைச் செலவு செய்வதா அல்லது ரொக்கக் குவியலாக்குவதா என்ற பிரச்சினைகளில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்தார்கள் எனக் கூறியது. ஆனால், அதன் தூய்மை கெட்ட கூற்று இரண்டு முடிவுகளை வலியுறுத்துகிறது. $_1$ நான் செலவு செய்யவா அல்லது சேமிக்கவா? $_2$சேமித்த பணத்தை எந்த வகையில் வைத்திருப்பது–ரொக்கமாகவா அல்லது ஆவணங்களாகவா? (securities)—அதாவது எனது மொத்தச் சேமிப்புக் குவியலாகவா? (நான் இப்பொழுது சேமிக்கும் தொகை; எனது கடந்த கால சேமிப்பு முடிவுகள் ஆகியவைகளின் குவியலாகவா?)

இவை இரண்டும் ஒன்றுக்கொன்று தொடர்பற்றவையல்ல. நான் சேமிக்கவில்லை என்றால், எனது சேமிப்புக் குவியலைச் செலவு செய்கிறேன்; அதே நேரத்தில் அந்தக் குவியலைப் பதுக்காமல் இருக்கிறேன் என்று பொருள். மேலும் சில காரணிகள் மாறுவதால் (உதாரணமாக எனது பயம், அல்லது எதிர்கால நிகழ்ச்சிகளில் உறுதியின்மை) போன்றவைகள் எனது இரண்டு முடிவுகளை ஓரே காலத்தில் பாதிக்கலாம். அதாவது நான் அதிக சேமிப்புச் செய்வதை அல்லது கடந்தகால நிகழ்கால சேமிப்புகளைப் பத்திரங்களிலிருந்து ரொக்கமாக மாற்றுவதை). அதேபோல் தனது சேமிப்புகளை ரொக்கமாக வைத்திருப்பவர்கள், சேமிப்பின்மையைப் பின்பற்ற முற்படுவார்கள். அவர்கள் தம்மிடத்தில் உள்ள ஆவணங்களை ரொக்கமாக்கத் தேவைப்படும், காலம், உழைப்பு ஆகியவைகளைத் தவிர்க்க முற்படுவார்கள். ஆயினும், சேமிப்பு, பதுக்குதல் இவை இரண்டிற்கும் ஒருவிதமான சிறப்புத் தொடர்பு எதுவுமில்லை. நான் பதுக்காமலே சேமிக்கலாம்; சேமித்துப் பதுக்கலின்மை செய்யலாம்; அதேபோல் பதுக்கலாம் ஆனால், சேமிப்பின்மையைப் பின்பற்றலாம். ஆகையினால், சேமிப்புக்கான முடிவுகள், பதுக்கலுக்கான முடிவுகள் இவை இரண்டையும் தனிப்படுத்தி அவற்றைத் தனித்தனியே ஆராய்வது சிறந்ததொரு முறையாகும். பண அளவைக் கோட்பாட்டின் தூய்மை கெட்ட கூற்று இதனையே செய்யத் தூண்டுகிறது.

விக்செலின் பகுப்பாய்வு இப் பாகுபாட்டை வலியுறுத்தியதோடு அல்லாமல், பண்டங்களின் மொத்தத் தேவைக்கான சிறந்ததொரு எளிய கோட்பாட்டையும் அளித்தது. பண்டங்களுக்கான மொத்தத் தேவை, நுகர்ச்சியாளர் தேவை, முதலீட்டாளர் தேவை என இருவகைப்படும். இதில் ஒவ்வொன்றும் வட்டி-நெகிழ்வு தன்மையுடையது (interest-elastic) எனக் கருதுதல் வேண்டும்; வட்டி வீதம் குறைந்தால், முதலீட்டின் தேவை அதிகமாகும்; இதனால் பயனீட்டாளர் தேவையும் மிகும். (பின்னர் கூறிய கருத்து, சேமிப்பு வட்டி வீதத்திற்கு எதிர்மாறானது என்பதன் மறு கூற்று). பயனீட்டாளர் செலவு முடிகள், முதலீட்டின் பருமன் ஆகிய இரண்டும் வெவ்வேறு காரணிகளால் நிர்ணயிக்கபடுகின்றன. மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கம் (Marginal productivity of capital) என்ற கருத்தின் சுருக்கத்தில் அடங்கிய காரணிகள் அனைத்தும் முதலீட்டின் பருமனை நிர்ணயிக்கின்றன; அதுபோல் மக்கள் தொகையின் சிக்கனத்தை நிர்ணயிக்கும் சமூகக் காரணிகள், நிறுவனக் காரணிகள் ஆகியவை பயனீட்டாளர் செலவு முடிவுகளை நிர்ணயிக்கின்றன. ஆனால், இவை இரண்டையும் ஒன்றாகப் பிணைத்து அவைகளைச் சமமாக்க ஒரு காரணியுண்டு.

அதுதான் தன்னிச்சையாக நெளியும் தன்மையுடைய வட்டி வீதம். இவைகளின் ஏதேனும் ஒன்றின் தேவை அதிகமானல், வட்டி வீதம் அதிகமாகும்; இது உடனே மொத்தத் தேவை அதிகரிப்பைத் தடுத்து நிறுத்திவிடுகிறது. இதனை இரண்டு தேவைகளின் மூலகங்களை வெட்டும் பணியில்பயன் அதிகமாகும் எனக் கருதி வளங்களின் தேவையை அதிகமாக்கும் துறையிலிருந்து அது குறைந்த பயனுள்ள துறைக்குத் திருப்பிவிடுகிறது. இவைகளின் தேவையளவு குறைவுபட்டால், உடனடியாக நிகழும் வட்டி வீதக் குறைப்பு இரண்டு தேவைகளையும் ஊக்குவித்து வளங்களை மாற்றவும் முற்படும்.

ஏதேனும் ஒரு காரணத்தால் குறிப்பாக வங்கிகள் செய்யும் பண அளிப்புக் குறைப்பு அல்லது அதிகரிப்பு இவைகளினுல்) வட்டி வீதம் இந்தச் சரிக்கட்டும் பணியைச் செவ்வனே செய்ய முடியாமற் போகுமாயின், மொத்தத் தேவை அதாவது நுகர்ச்சி, முதலீடு ஆகிய இரண்டின் கூட்டு மாறும்; இதனுல் பணவீக்கம் அல்லது பணச் சுருக்கம் (deflation) ஏற்படலாம்.

## சேமிப்பும், முதலீடும், வேலையும்
## (Saving, Investment & Employment)

அதிகாரங்கள் 5, 6 இவைகளின் வாயிலாக, கூலிகள் இணக்க மற்றவைகளானுல், பணஅளவு கொடுக்கப்பட்டிருந்தால், அவற்றை வேலை நிறைவு மட்டத்தைவிட உயர்ந்த மட்டத்திற்கு வைக்க முடியும் என்பதைக் கண்டோம். அந்த நிலையில் பண அளவைக் கோட்பாடு, விலைக்கோட்பாடாக அமையாமல், ஆக்கக் கோட்பாடாக அமையும். குறைந்த அளவு பண அளிப்பு, வேலையின்மை, குறைந்த ஆக்கம் இவைகளை விளைவிக்கும்; அதுபோல், வேலையின்மை (unemployment) அதிகமானுல் பண அளிப்பு அதிகரிப்பு அதிக ஆக்கத்தை விளைவிக்குமேயல்லாமல் உயர்ந்த விலை நிலைகளை விளைவிக்காது.

இணக்கமற்ற கூலிகளை விக்செல் முறையில் புகுத்தினுல் அவரது விலைக்கான சேமிப்பு-முதலீட்டுக் கோட்பாடு (Saving-Investment Theory) ஆக்கத்திற்கான சேமிப்பு-முதலீட்டுக் கோட்பாடாக மாறி அமையும். வேலை நிறைவு (full employment) சம நிலையிலிருந்து தொடங்குவோம். இந்த நிலையில் முதலீட்டு வாய்ப்புகள் குறைந்திருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். அங்காடி வட்டி வீதம் (அதாவது பத்திர விலையேற்றம்) குன்றி, இயற்கை வட்டிவீத மட்டத்திற்கு வீழ்ந்தால்; மொத்தத் தேவை

மாறுமல் இருக்கும். ஆனால், சேமிப்புக் குறையும் (அதாவது நுகர்ச்சி அதிகரிக்கும்); குறைந்த வட்டி வீதம் முதலீட்டைத் தூண்டும். ஆனால், வங்கிகள் பத்திரங்களை முன்கண்ட விலைக்கு விற்கத் தயாராக இருப்பதால் பத்திர விலைகள் ஏறுமல் தடுத்து நிறுத்தப்படுகின்றன. இதனால் முதலீடும் குன்றிப்போகிறது. எனவே, நுகர்ச்சி, முதலீடு ஆகியவைகளின் மொத்தச் செலவு குன்றிப்போகிறது.

இணக்கமான கூலிகள், விலைகள் ஆகியவைகளை விக்செல் (Wicksell) தமது பகுப்பாய்வில் எடுகோளாகக் கொண்டமையால், தாற்காலிக வேலையின்மையல்லாமல் நிரந்தர வேலையின்மை ஏற்படவில்லை. பணத்தேவை விழுகின்ற அளவிற்கு விலைகளும் விழுந்தன. முதலீட்டின் வீழ்ச்சி, 'செயற்கை நுகர்ச்சி' (forced consmuption) என்ற ஓர் உருவகத்தால் தடுத்து நிறுத்திச் சரிக்கட்ட முடிந்தது. ஏனெனில், விலைகளின் வீழ்ச்சி பண வருவாய்களின் வீழ்ச்சியை முந்திக்கொண்டமையால் சரிக்கட்ட முடிந்தது. ஆனால், தேவைப்படும் அல்லது செயற்கை முறை (intended) சேமிப்பு அட்டவணை இடப்புறம் இடம் பெயராவரை, முதலீட்டைவிட சேமிப்பு மிஞ்சும்; பணச்சுருக்க நிலை மறையாது (அதாவது வட்டி வீதம் தனது குறைந்த இயற்கை மட்டத்திற்கு விழாதவரை). பணச்சுருக்க நிலை மாறுது; மறையாது.

ஆனால், கூலிகள், விலைகள் ஆகியவை குறையக்கூடாது. அப்பொழுது மொத்தப் பணத் தேவைக் குறைப்பு என்பது மொத்த உண்மைத் தேவைக் குறைப்பும் கூட எனப் பொருள்படும். உழைப்பாளிகளும் வேலை இல்லாதவர்களாகின்றனர். அவர்களது பண வருமானம், உண்மை வருமானம் (real income) ஆகிய இரண்டும் வெட்டப்படுகிறது. எனவே, இந்த நிலையில் தொடர்ச்சியான கீழ்நோக்கிச் செல்லும் சுழல் (spiral) ஏற்படுகிறதா? இம்முறை அது விலை, பணம் என்று அமையாமல், ஆக்கம், வேலை என்று அமையும். விக்செலின் விலைச்சுழல்கள் (price spirals) ஒட்டும் கூலிகளால் (sticky wages) வேலை, உண்மை வருமானச் சுழல்களாக மாறுகின்றனவா?

விக்செலும் மற்றக் கிளாசிகல் ஆசிரியர்களும் இந்த வினாவிற்கு விடையளிக்கவில்லை. கூலிகளும் விலைகளும் இணக்கமானவைகள் என்பதை அவர்கள் நம்பவில்லை போலும். ஆனால், அதே நேரத்தில், கூலிகள் குன்றுமலிருந்தால் விளையும் பயன்களைத் தெளிவாகவும், குறிப்பாகவும் அவர்கள் ஆராயவில்லை. விக்செல் காட்டிய மொத்தத் தேவை பகுப்பாய்வின்வழி இவற்றை ஆராய்ந்

திருந்தால், அவர்கள் பல ஊக்கம் தரும் கண்டுபிடிப்புகளைத் தந்திருக்கலாம். அவைகளில் முதன்மையானது 'கீன்சியன்' (Keynesian) நுகர்ச்சிச் சார்புத் தொடர்பாகும். (consumption function).

இதுபோன்ற பல பிரச்சினைகளுக்கு முடிவு காண விக்செலின் பகுப்பாய்வுக் கருவிகள் பயன்பட்டிருக்கும். அப்படிப் பயன்படுத்திஞல் சில 'நவீன' கருத்துகளை வெளிப்படுத்தியிருக்க முடியும். ஆஞல், அவ்வாறு அவை பயன்படவில்லை; அவைகளைக் கொண்டு ஒருவரும் ஒன்றும் செய்யவில்லை. கீன்சு (Keynes) என்பவர் வேலையின்மைக் கோட்பாட்டை (unemployment theory) ஆராய ஒரு புது வழி அல்லது தனி வழியைக் கையாண்டார். இவ் வழி ஒரு வகையில் விக்செல் காட்டிய வழியைப் பின்பற்றியதாகும். இவையெல்லாம் நமது கதையின் தொடர்ச்சியை மாசுறச் செய்பவை.

அடுத்த அதிகாரத்தில், கிளாசிக்கல் கருத்துகளின் சுருக்கத்தைத் தந்துள்ளோம். இச் சுருக்கம் இந்த அதிகாரம், இதற்கு முந்திய மூன்று அதிகாரங்களில் கண்ட உண்மைகளின் சுருக்கங்களாகும்.

# 8. கிளாசிக்கல் கோட்பாட்டின் சுருக்கம்
## (Summary of the Classical Theory)

ஆறும் அதிகாரத்தில், கிளாசிக்கல் கோட்பாட்டின் பொதுப் படைச் சார்புத் தொடர்புகளைக் கண்டோம். அவைகள் சேமிப்பு, முதலீடு, வட்டி வீதம் ஆகியவைகளைப்பற்றிச் சிறிதும் சிந்திக்க வில்லை. அச் சார்புத் தொடர்புகள் கீழ்க்காணுமாறு அமைந்தன:

| | | | |
|---|---|---|---|
| $y=y(N)$ — | உற்பத்தி சார்புத் தொடர்பு (production function) | — | (1) |
| $\frac{dy}{dN}=\frac{W}{P}$ — | இலாப உச்சப்பாடு (profit maximization) | — | (2) |
| $N=N\left(\frac{W}{P}\right)$ — | உழைப்பின் அளிப்பு (supply of labour) | — | (3) |
| $M=lpy$ — | பண அளவைக் கோட்பாடு (quantity theory) | — | (4) |

இந்நான்கு சமன்பாட்டமைப்பை வரி வடிவங்களால் விளக்கினோம்.

இவற்றுடன் சேமிப்பு - முதலீடு பகுப்பாய்வைச் சேர்ப்போமாகில், இச் சமன்பாடுகளில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்படாது. கீழ்க்காணும் சமன்பாடுகளையும் சேர்ப்போம்.

| | | | |
|---|---|---|---|
| $s = s(r)$ — | சேமிப்புச் சார்புத் தொடர்பு (saving function) | — | (5) |
| $i = i(r)$ — | முதலீட்டுச் சார்புத் தொடர்பு (investment function) | — | (6) |
| $s = i$ — | இடுமுதல் செயற்களத்தின் சம நிலை (equilibrium in capital market) | — | (7) |

இவைகளில் 's' என்பது சேமிப்பைக் குறிக்கிறது. 'i' என்பது முதலீட்டைக் குறிக்கிறது (இவை இரண்டும் 'உண்மை' (real) நிலையைக் குறிக்கின்றன); r' என்பது வட்டி வீதத்தைக் குறிக்கிறது. இவைகளுடன் முற்றொருமையான அல்லது இவை களுடன் நெருங்கிய தொடர்புடைய சமன்பாடுகளைக் 'கிளாசிக்கல்' (classical) முறை ஆளுகிறது. இது 'கீன்சின்' (keynesian) அமைப்புக்கு முரணானது. 's', 'i', 'r' ஆகிய மாறுதன்மையுள்ள சமன்பாடுகள் (5), (6), (7) ஆகியவைகளில், இவைகளுக்கு முந்திய சமன்பாடுகளில் காணப் பெறுமையால், நாம் இரண்டு தனிப்பட்ட சமன்பாட்டு முறைகளை ஆளுகிறோம். அதாவது முந்தைய அமைப்பில் சமன்பாடுகள் 1-ல் இருந்து 4 வரை ஒரு அமைப்பும்; 5 முதல் 7 வரை மற்றொரு புதிய முறைச் சமன்பாடுகள் மற்றொரு அமைப்புமாகும். ஒவ்வோர் அமைப்பையும் தனித்தனியே தீர்க்க (solve) முடியும். இதற்கு முந்திய வரிவடிவப் பகுப்பாய்வுடன் நமது சேமிப்பு-முதலீடு பகுப்பாய்வு விளக்கப் படங்களை உடன் சேர்க்கிறோம். சேமிப்பு, முதலீடு ஆகியவைகளை விளக்கும் படங்கள், மற்றப் படங்களுடன் தொடர்பு கொள்ளாமல் தனித்து இயங்கும் விளக்கப் படங்களாகும். வட்டி வீதம், நாட்டு வளத்தை நுகர்ச்சி, முதலீடு ஆகியவைகளிடையே பாகுபாடு செய்யப் பயன்படும் காரணிகள், நாட்டு வளத்தையும், பண அளவையும், கூலி மட்டங்களையும் விலைகளையும் நிர்ணயிக்கும் காரணிகள், இவை இரண்டும் ஒன்றுக்கொன்று தொடர்பற்றவை. அவை தனித்தனியே இயங்குவன என்று மற்றும் ஒரு வகையில் வெளிப் படுத்தலாம். வட்டி வீதம் மட்டும், ஆக்கம், சிக்கனம் ஆகிய காரணிகளைத் தழுவி உள்ளது என ஒரு வகையில் கூறலாம். பொருளியல் கோட்பாட்டை மூன்று வகைகளாகக் கூறு போட லாம். வேலைக்கோட்பாடும், உண்மைக் கூலியும் (Employment theory & real wage). [இவைகள் சமன்பாடுகள் 1-3 ஆகியவைகளில் அடங்கியுள்ளன]; விலை மட்டம் (price level) [இது சமன்பாடு 4-ல் அடங்கியுள்ளது]; வட்டி வீதமும், சேமிப்பு, முதலீடு ஆகியவை களின் பருமன் (volume) [இவைகள் சமன்பாடுகள் 5-7-ல் காணலாம்.[1]

## 'விக்செல்லின்' வாய்பாடு
## (Wicksell's Formulation)

ஆனல், மேற்கூறிய வாய்பாடு, விக்செல்லின் பணியைப் புறக்கணித்தது. விக்செல்லின் பணி, பணம், வட்டி வீதம், விலை

[1] முன் உரைத்த இரண்டு வகைகளும் ஒன்றுக்கொன்று தொடர்பற்ற வகைகள் எனச் சொல்லுவதற்கில்லை; இதை நாம் முன்பே குறிப்பிட்டோம். வேலை அளவு மாற்றங்களும், ஆக்கமும் விலைகளைப் பாதிக்கலாம்; ஆனல், பண அளிப்பின் மாற்றங்கள் வேலையை அல்லது ஆக்கம் இவைகளைப் பாதிக்காது.

மட்டம் ஆகியவைகளின் தொடர்புகளை நன்கு விளக்கியது. ஆனால், 'தூய்மை கெட்ட' (sophisticated) பண அளவைக் கோட்பாட்டு வட்டி வீதம்வழி விலை மட்டத்தைப் பாதிக்கும் பணக் காரணிகளை விளக்குகிறது.

இதனால் சமன்பாடு (4), பண அளவைக் கோட்பாட்டுக் கருத்து இவைகளைச் சமன்பாடுகள் (5), (6), (7) இவைகளுடன் ஏதேனும் ஒரு வகையில் இணைக்க வேண்டியிருக்கிறது. அவ்வாறு இணைத்தால், இவை, நிலை முதற் செயற்களம் (capital market), வட்டி வீத நிர்ணயம் ஆகியவைகளுடன் கொண்ட தொடர்பை நன்கு விளக்கலாம். சமன்பாடுகள் (4) (7) ஆகியவைகளை நீக்கி, அவற்றை மற்றொரு சமன்பாட்டின் வாயிலாக வெளிப்படுத்துதல் ஒரு சிறந்த வழியாகும். அச் சமன்பாடு கீழ்க்காணுமாறு அமையும்.

$$S + DH + \triangle M = i \qquad — \qquad (8)$$

இதில் $\triangle M$ என்பது பண அளிப்பின் கூட்டு வீதத்தை வெளிப்படுத்துகிறது. DH என்பது பதுக்குதல் இன்மையைக் குறிக்கிறது.—அதாவது பத்திரங்கள் வாங்குவதற்காகப் பயன்படுத்தும் ரொக்க இருப்பின் வீதத்தைக் குறிக்கிறது. ($\triangle M$ என்பது எதிர் நிலையானால், அது பண இருப்புக் குறைந்திருக்கிறது என்பதைக் குறிக்கின்றது. DH என்பது எதிர் நிலையானால், அது பதுக்குதலைக் (hoarding) குறிக்கிறது; அதாவது ரொக்க இருப்புகள் அதிகமாவதைக் குறிக்கிறது). சமன்பாடு 8-ன் பொருள் பின்வருமாறு:- பண அங்காடிக்கு (money market) வரும் நிதி அளிப்பு (அல்லது பத்திரங்களின் தேவை) என்பது மூன்று வகைப்படும். நடப்பு சேமிப்பு (curent savings) (s); பதுக்குதலின்மை (dishoarding) (DH); பண அளிப்பின் அதிகரிப்பு ($\triangle M$) என்ற குறி விளக்குகிறது. இம் மூன்று வழிகளில் வரும் நிதிகளின் கூட்டு (அதாவது பத்திரங்களின் தேவை) i என்பதைச் சமப்படுத்தும், பத்திரங்களின் தேவை (அதாவது பத்திரங்களின் அளிப்பாகும்). வட்டி வீதம் பணச் சந்தையைக் காலி செய்வதற்காகச் சரிக்கட்டவேண்டும்-அதாவது பத்திரங்களின் விலை அவைகளின் தேவை, அளிப்பு இரண்டும் சமமாகும்வரை சரிக்கட்டிக்கொண்டேயிருக்கும். 's', 'i' ஆகியவை ஓட்ட மாறும் தன்மைகள் ஆனமையால், $\triangle M$ DH ஆகியவைகள்கூட ஓட்ட மாறும் தன்மைகள் எனக் கொள்ளல் வேண்டும். 's', 'i' ஆகியவைகளின் நடப்பு ஓட்டப் பருமனம், ஆண்டு வீதங்களில் குறிக்கப்பட்டால், $\triangle M$, DH ஆகியவைகள்கூட நடப்பு ஓட்டங்கள்; எனவே, அவற்றை ஆண்டு வீதங்களால் குறிக்கவேண்டும்.

பயனில்லா இருப்புகளை மக்கள் பதுக்கி வைக்கமாட்டார்கள் என்று பண அளவைக் கோட்பாடு ஆணித்தரமாகக் கூறுகிறது. அதாவது தங்களது பேரத் தேவைகளுக்குமேல் தேவைப்படும் இருப்புகளைப் பதுக்கமாட்டார்கள் என்று கூறுகிறது. எனவே, தங்களது பேரத் தேவைக்கு (lpy) மேற்பட்ட ரொக்க இருப்புகளைப் (M) பதுக்குதலின்மை செய்கிறார்கள். அதனால்,

$$DH = M - lPy \qquad — \qquad (9)$$

என்ற சமன்பாடு கிடைக்கிறது. சமன்பாடு 9-ன் விளக்கம் பின் வருமாறு:- இந்தச் சமன்பாட்டின்படி பதுக்குதல் (hoarding) ஏற்படுகிறது என்றால், பேரத் தேவைகள் (lpy) ரொக்க இருப்புகளை மிஞ்சுகிறது. எனவே, பணச் சந்தையில் நிதிகளின் தேவைகளை மக்கள் அதிகமாக்குகிறார்கள். அதாவது பணச் சந்தையில் மக்கள் பணத்தைக் கடனாகப் பெற முயல்கிறார்கள். ஆனால், இப் பணத்தை முதலீடு செய்யப் பயன்படுத்தமாட்டார்கள். தங்களிடத்தில் உள்ள பத்திரங்களை விற்க முயல்வார்கள்; அல்லது தங்கள் நடப்புச் சேமிப்பைத் தம்பால் இருத்திக்கொள்வார்கள் (அதாவது தங்கள் நடப்புச் சேமிப்பைக் கடனாக வழங்க மறுப்பார்கள்). ரொக்கத்தைத் தம்பால் இருத்திக்கொள்ளத் தூண்டும், நோக்கங்களை விளக்க வேறு கோட்பாடு உண்டாகில், (அதாவது ரொக்கத்தைப் பதுக்குதல், பதுக்குதல் இன்மை இவைகளை விடுத்து, ரொக்கத்தைக் கடனாக வழங்க) அதனைச் சமன்பாடு 9-க்குப் பதிலீடு செய்யலாம். அத்தகைய கோட்பாடு ஒன்றை அடுத்த அதிகாரத்தில் காண்போம்.

சமன்பாடு (9) பல சிக்கலான 'தரக்கோல், (seale) பிரச்சினைகளை எழுப்பினாலும், அவைகள் இந்தச் சூழ்நிலைக்குத் தகுதி வாய்ந்தவைகள் அல்ல. எனவே, அடுத்த அதிகாரத்தில் அவற்றின் சிறப்பு மிகுந்து காண்பதால், அவற்றை அடுத்த அதிகாரத்திற்குத் தள்ளிப் போட்டுக் கவனிப்போம்.

சமன்பாடு (8) உடன் (5), (6), (9) [அல்லது அதன் மற்றொரு வாய்பாடு] இவைகள் எல்லாம், வட்டிக் கோட்பாட்டுக்கான கடன் தரும் நிதிகள் கோட்பாட்டினை (loanable funds theory) என்பதை விளக்குகிறது. கடன் தரும் நிதிகள் கோட்பாட்டு முறை மற்ற முறைகளைவிடக் குழப்பமான முறையாகும். எனவே, இது பொருளியல் கோட்பாட்டின் மற்ற எல்லாப் பிரச்சினைகளையும் விட மிகவும் குழப்பமானதாகும். இக் குழப்பம் அனுவசியமானது. ஏனெனில், இக் கோட்பாட்டின் வளர்ச்சி மிகவும் எளிமையானது; ஆயினும் இருப்பு, ஓட்டம் ஆகிய இவ்விரண்டையும் இக் கோட்பாடு சரியான முறையில் விளக்காததால் குழப்பம் நேரிடுகிறது.

இக் குழப்பங்களை அடுத்து வரும் அதிகாரத்தில் காணும் அநுபந்தத்தில் விளக்கி இருக்கிறோம்.

சமன்பாடுகள் (1), (2), (3) (5), (6), (8), (9) ஆகியவைகள் அடங்கிய மாற்றியமைத்த மாதிரியை மீண்டும் ஒரு முறை நோக்குங்கால், (பக்கம் 131-ல்) கண்ட தொடர்புகளை மீண்டும் காண்கிறோம். அப் பக்கத்தில் தொடர்புகள் (1), (2), (3) ஆகியவை, ஆக்க மட்டத்தை (y) நிர்ணயிக்கின்றன; வேலை மட்டத்தை (N) நிர்ணயிக்கின்றன; உண்மைக் கூலியை (W/P) நிர்ணயிக்கின்றன. இவை நீங்கலாக மற்றத் தொடர்புகள் நிர்ணய விலை, கூலி மட்டங்களை (அதாவது W, P ஆகியவைகளை), செமிப்பு, முதலீடு ஆகியவைகளின் தொகைகளை (s, i), பதுக்குதல் இன்மை செய்த தொகையை (DH), வட்டி வீதம் (r) ஆகியவைகளை நிர்ணயிக்கின்றன. இப்போதைக்குப் பண இருப்பின் மாற்றங்கள் ($\Delta$M), பண அளவு (M) ஆகியவைகள் தனிப்பட்ட முறையில் நிர்ணயிக்கப் பட்டன என்று கொள்ளவேண்டும்.

சமன்பாடுகள் (1), (2), (3) ஆகியவைகள் நிர்ணயித்த ஆக்க மட்டத்தைச் சமன்பாடு 9-ல் பதிலீடு செய்தால், அல்லது பண இருப்புத் (M) தெரிந்தாலும், விலை மட்டம் (P), பதுக்குதல் இன்மை (DH) இவைகளிடையே உள்ள தொடர்பை விளக்கலாம். P-ன் ஒவ்வொரு மதிப்புக்கு ஏற்றவாறு DH-ன் மதிப்பு அமையும். அதேபோல் DH-ன் ஒவ்வொரு மதிப்புக்கு ஏற்றவாறு P-ன் மதிப்பு அமையும். சமன்பாடு (5), (6), (8) ஆகியவைகளின் வாயிலாக வட்டி வீதத்தை நிர்ணயிக்கலாம்; ஆனால், அதற்கு $\Delta$M, DH ஆகியவைகளின் மதிப்புகள் தெரிய வேண்டும். முந்தையது ($\Delta$M) தன்னாலேயே தன்னை நிர்ணயித்துக் கொள்ளும் ஆற்றல் உடையது; ஆனால், DH என்பது P-ன் மதிப்பைத் தழுவி நிற்கிறது. ஆனால், P-ன் மதிப்பு இன்னும் நிர்ணயிக்கப்படவில்லை. ஆகவே, r, P அல்லது DH ஆகியவைகளின் மதிப்புகளைத் தீர்க்க முடியாது. ஆனால், இவைகளின் பல கலவைகள் (combinations) சாத்தியம்; P-ன் மதிப்புத் தெரிந்தால் பின் DH-ன் மதிப்புத் தெரியும்; இவைகளிலிருந்து 'r'-ன் மதிப்பைத் தீர்க்கலாம். அல்லது 'r'-ன் மதிப்புத் தெரிந்தால், DH-ன் மதிப்பு இதுவாகத்தான் இருக்கும் என்று நமக்குத் தெரியும். ஆதலால், P-ன் மதிப்பைத் தீர்க்கலாம். ஆனால், இந்த அமைப்பில் உள்ள எல்லாவற்றின் மதிப்புகளும் நிர்மானிக்கப்படவில்லை. அதற்கென ஒரு சிறந்த தீர்ப்பு இல்லை; விலை மட்டங்கள், வட்டி வீதங்கள் ஆகிய இவைகளின் மதிப்புகள் மட்டும் தீர்மானிக்கப்பட்டவை. (மதிப்புகள் தீர்மானிக்கப்பட்ட y, N, W/P ஆகியவைகளுடன் அவைகள் தொடர்புடையதால் அவைகளின் மதிப்பு நிர்ணயிக்கப்பட்டது.)

இதையே வேறு வகையில் கூறுவோமேயானால், ஏழு சமன்பாடுகள் கொண்ட ஓர் அமைப்பும் ஆனால், அதில் y, N, W, P, R, s, i, DH ஆகிய எட்டு வகை தெரியாதவைகள் (unknowns) உள்ளன என்று அமையும்.

இந்த அமைப்பு சமநிலை அமைப்பு இல்லை என்பது தெளிவு. s என்பது i-க்குச் சமமில்லை என்பதைச் சமன்பாடு (8) விளக்குகிறது. அப்படி s என்பதும் i என்பதும் சமமாக இல்லாவிட்டால் சில சேமிப்பாளர்களும், முதலீட்டாளரும், மனநிறைவு பெறாதவர்களாகவும், வியப்படைந்தவர்களாகவும் ஆவார்கள். 2-ன்படி கிட்டும் சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்க வேண்டுமென்பது நமக்கு நன்குதெரிந்த ஓர் உண்மை. எனவே, தேவைப்படும் சேமிப்பு அல்லது வேண்டுமென்று சேமித்த சேமிப்பு, முதலீடு ஆகியவை சமமாக இல்லாவிட்டால், சில தேவைகள், சில நோக்கங்கள் எல்லாம் ஏமாற்றமடைந்து விடுகின்றன. i என்பது s-யை மிஞ்சினால் 'கட்டாயச் சேமிப்பு' (forced saving) உருப் பெறுகிறது என்பது விக்செலின் விளக்கத்தின் வாயிலாக அறியும் உண்மை இதனால் நுகர்வோர் தங்கள் நுகர்ச்சியைப் பெருக்குவார்கள். இதனால் எல்லை இல்லா மாற்றங்கள் விளையும்.

இந்த அமைப்பை ஒரு வரையறையுள்ளதாகச் செய்ய இரண்டு வகைப் பணிகள் செய்ய வேண்டும். ஒன்று மற்றொரு சமன்பாட்டைச் சேர்த்து இந்த அமைப்பின் சமநிலை இயல்பைத் திரும்பப் பெறச் செய்தல். அச் சமன்பாடு சமநிலை இயல்பை நன்கு வரையறுக்கும். இதனைச் சமன்பாடு 7ஐ மீண்டும் சேர்த்துவிடல்வழி முடிவடையும். அதாவது

$$s = i \qquad — \quad (7)$$

சமன்பாடுகள் (7), (8) என்பவை $\triangle M + DH = O$ என்ற சமநிலைத் தன்மையை நிலை நாட்டும். அதாவது அதிகப்படிப் பணம் உற்பத்தியானால், அதனைப் பதுக்குதல்வழி சரிக்கட்ட வேண்டும் என்பது பொருள். இந்தச் சமன்பாட்டின் நிகர் மொத்தம் மட்டும் சுன்னம் (0) என்ற அளவைப் பெறாமல், இதில் உள்ள எல்லாக் குறிகளும் சுன்னம் (0) என்ற அளவைப் பெற்றிருத்தல் வேண்டும். $\triangle M = O$ என்றில்லை ஆனால், M என்பது எப்பொழுதும் மாறிக்கொண்டே இருக்கும். இதனால் (சமன்பாடு 9ஐக் காண்க): அது DH என்ற மதிப்பை அல்லது Py என்ற அளவையாகிலும் பெறவேண்டும். சமன்நிலை ஏற்படுவதற்கு $\triangle M = O$ என்ற நிலைத் தேவை $\triangle M + DH$ என்பவைகளின் கூட்டு 'O' மதிப்பைப் பெறுகிறது என்றால், $DH = O$ இருக்கவேண்டும். எனவே, சமன்பாடு 9-ம், $M = lPy$ என்ற சமன்பாடு 4-ம்

ஒன்றுகும். சமன்பாடு 4 என்பது பணஅளவைக் கோட்பாட்டைக் குறிக்கிறது என்பது நினைவிருக்கலாம்.

ஆகவே, (பக்கம் 157 மூல நூல்) அதில் கண்ட சமன்பாடு களின் அமைப்புக்கே மீண்டும் திரும்புகிறோம். எளிய நடை பொருந்திய பண அளவைக் கோட்பாடும், தூய்மை கெட்ட பண அளவைக் கோட்பாடும் ஒரே பயனை விளைவிக்கிறது. அதாவது சமநிலையை உணர்த்துகின்றன.

இத்தகைய விளைவு நமக்கு வியப்பூட்டாது. ஏனெனில், விக்செல் அவர்களின் பகுப்பாய்வு, எளிய பண அளவைக் கோட்பாட்டினுக்கு மாறுபட்டது. அது எப்படி என்றால், விக்செல்லின் பகுப்பாய்வில் பயன்களை விளைவிக்கும் முறைகள் மாறுபட்டவை, ஆனால், முறைகள் இவ்விரண்டு கோட்பாடுகளுக்கும் ஒன்றேயாகும். சமநிலையில் பண அளிப்பும், விலைகளும் விகிதாசாரமாக அமைந்தவை. ஒரு குறிப்பிட்ட காலத்தில் அவை மாறிலிகள். சமநிலையில் பயனில்லா இருப்புகள் மூலதன அங்காடிக்குப் போகவுமில்லை; அவைகள் மீண்டும் ரொக்க இருப்புகளாக மாறி மிகப் பெரிய அளவுடைய பண பேரங்களை நிதி மயமாக்கப் பயன்படவுமில்லை.

ஆயினும், நமது அமைப்பை நிலையியல் ஆகவோ (static) அல்லது சமநிலை அமைப்பாக மாற்றவோ—இந்தத் தீர்வு பயனற்றது; ஏனெனில், விக்செல் அவர்களின் மிக உயர்ந்த நோக்கங்களைப் புறக்கணிக்கிறது. இதற்கு வேறு வழி ஏதாகிலும் உண்டா? என்பதைக் கவனிப்போம்.

இதற்கான மாறு வழி மிகவும் கடினமானது. அவ் வழி ஓர் இயக்கநிலை (dynamic) மாதிரியை அமைப்பதாகும். இதை அமைக்கச் சேமிப்பாளர், முதலீட்டாளர், உற்பத்தியாளர், வேலையாளர் ஆகியவர்களின் நடத்தை சமனறு நிலை பற்றிய எடுகோள்கள் பலவற்றைக் கொள்ளவேண்டும். இவற்றைச் சமன்பாடுகளாக அமைப்பது மிகவும் கடினமான வேலையாகும். அத்தகைய மாதிரி சமனறு நிலை புறக்கணிக்கப்பட்டால் ஏற்படும் விளைவுகளை மட்டும் குறிக்காமல், அது ஏற்படும் வழியைக்கூட வெளிப்படுத்தும். அந்நிலை ஏற்படுவதற்கு எவ்வளவு காலமாகும், என்பதையும், அதில் உள்ள மாறும் தன்மையுள்ளவை இடைக் காலத்தில் எத்தகைய படிவத்தைப் பெறுகின்றன என்பதையும், இது போன்ற வேறு பல உண்மைகளையும் விளக்கும். இத்தகைய இயக்க நிலை மாதிரிகள் பல இருக்கின்றன என்பதை நாம் உணர்தல் வேண்டும்; இவையெல்லாம் ஒரு சமநிலைத்தீர்வை உணர்த்துகின்றன. ஆனால், அவைகள் பல படிவங்களைப் பெறு

கின்றன; பல காலத் தொடர்ச்சிகளைக் கொண்டனவாகின்றன; உழைப்பாளர், வேலை வழங்குவோர், நுகர்ச்சியாளர், வங்கிகள் இவைகளின் சமனறு நிலை நடத்தையைப் பற்றிய பல தகவல்களைக் கொண்டனவாய் அமைகின்றன. பண வீக்க நிலை, பணச் சுருக்க நிலை ஆகியவைகளை விளக்கும், விக்செல்லின் விளக்கத்தின் உள் அடங்கிய இயக்க நிலை (dynamic) மாதிரி மிகவும் சிக்கலான மாதிரியாகும். அதனைக் கருத்தாகக் கொண்டு ஓர் இயக்கநிலை மாதிரியை அமைக்கலாம். ஆனால், அதனை நாம் இங்கு மேற்கொள்ளத் தேவையில்லை[1].

வட்டியை விளக்கப் பயன்படும் கடன் தரும்நிதிகள் (loanable funds theory) என்பது தன்பால்கொண்ட அலகுகளை விளக்காத காரணத்தால், அது ஒரு விளக்க மற்ற கோட்பாடு என்று ஓரிடத்தில் குறிப்பிட்டோம். இதனுடன் நெருங்கிய தொடர்புடைய மற்றொரு குழப்பம் கடன் தரும் நிதிகளிடம் தொடர்புடைய வட்டி வீதங்களைப்பற்றி விளக்கம் தருவது. ஏனெனில், அது சமநிலைச்சிறப்பை உணராத ஒரு இயக்க நிலைக்கோட்பாடு என்பதை நாம் உணராததாலும், அல்லது இந்தக் கோட்பாட்டுக்குத் தேவையான வேறு பல இயக்கஇயல் எடுகோள்கள் மிகவும் விறைப்பானவைகள் என்பதாலும், கடன் தரும் நிதிகள் கோட்பாட்டு வட்டி வீதம் நிர்ணயத்தைப் பற்றி ஒரு விதமான பொருள் அமைந்த கருத்தை வெளியிடப் பயன் படவில்லை. பேராசிரியர் விக்செல் எழுதியவைகளைப் பரிவுடன் படித்தால் அவர் இந்தக் குழப்பத்திற்கு ஆளாகவில்லை என்பது தெளிவு. ஆனால், வேறு பல விரிவுரையாளர்கள் இக் குழப்பத்திற்கு ஆளானார்கள்.

## கூலிகள், விறைப்பானவை என்றில்லாதிருந்தால் வேலை நிறைவு

## (Full Employment Unless Wages Rigid)

நாம் இதுவரை விளக்கி வந்த கிளாசிக்கல் மாதிரி வேலை நிறைவு மாதிரி என்பதை இங்கு மீண்டும் வலியுறுத்தத் தேவையில்லை. ஒரு குறிப்பிட்ட உண்மை கூலி அளவில், வேலைக்கு வர விரும்புபவரின் எண்ணிக்கை, அக் கூலி நிலையில் வேலை வழங்குபவரின் எண்ணிக்கை இவை இரண்டும் மாறுபட்டிருந்தால், சரிக்கட்டுதல்கள் ஏற்படுகின்ற காரணத்தால் இப்பேதம் மறை

1 பண வீக்க வழியை உணர்த்தும் ஒரு 'போலி விக்செலின்' (Quasi-Wicksellian) மாதிரியைக் கீழ் உள்ள அதிகாரம் 16 பக்கங்கள் 431 - 434 இவைகளில் காண்க.

கிறது. அதாவது உண்மைக் கூலிகளை மாற்றி அமைப்பதால் இப் பேதம் மறைகிறது. பணக் கூலி வீதங்கள் விறைப்பானவைகளாகவும் ஒட்டும் தன்மையுள்ளவைகளாகவும் அமையாமல் இருந்தால் சரிக்கட்டுதல்கள் நன்கு அமையும். அளிப்பை விடத் தேவை கூடுதலானால், பணக் கூலி வீதங்கள் உடனடியாக உயரும்; அதுபோல் தேவையைவிட அளிப்புக் கூடுதலானல் அவைகள் உடனடியாக விழும்.

பணக் கூலி வீதச் சரிக்கட்டுதல்கள் எப்படி வேலை நிறைவை ஏற்படுத்துகின்றன என்பதைக் கிளாசிக்கல் ஆசிரியர்கள் மிகவும் கவனக் குறைவாக வெளிப்படுத்தினார்கள். ஆகவே, அவர்களது பல வாய்பாடுகளின் (formulations) பொருள் இன்றும் திறனாயப் படுகின்றது. பணக் கூலி வீதம் மற்றப் பொருள்களின் விலைகளுடன் தொடர்புடையது என்பதைச் சில ஆசிரியர்கள் மறந்து விட்டார்கள் போலும். அவர்கள் தேவை விதியை அதாவது விலை குறைய, தேவை அதிகப்படும்—என்பதைக் குறிப்பிட்டார்கள். உழைப்பு உபரி இருக்குமாகில், கூலிகள் குறைய வேண்டியது தான். உடனே உபரி மறையும் என்று அவர்கள் எண்ணினார்கள். ஆனால், 'தேவை விதி' (Law of Demand) நிர்ணய விலைகளைப் பற்றிப் பேசுவதாகத் தோன்றினாலும், அது உண்மையில் தொடர்பு விலைகளையே குறிக்கின்றன. ஒரு பொருளின் விலை குறைந்தால், அப் பொருள் அதிகமாகத் தேவைப்படுகிறது. இதற்குக் காரணம் பதிலீட்டுப் பயன் (substitution effect), வருமான விளைவு (income effect) இவை இரண்டும் ஏற்படுவது. $P_b$, $P_c$ ஆகியவைகள் மாறாமலிருக்க $P_a$, வீழ்ந்தால், B, C ஆகிய பண்டங்களுக்கு A என்ற பண்டத்தைப் பதிலீடு செய்கிறார்கள். ஆனால், பண வருவாயை நிர்ணயிக்கும் விலைகள் மாறாமல் $P_a$ என்பது மட்டும் வீழ்ந்தால், A என்ற பண்டத்தையும் மற்றப் பண்டங்களையும் மக்கள் அதிகமாக வாங்குவார்கள். ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் விலை $P_a$ என்று குறைந்தது என்றால், அவ் விலைக் குறைப்பு மற்ற விலைகள் குறைப்பு, பண வருமானக் குறைப்பு இவைகளுடன் தொடர்பு கொண்ட விலைக்குறைப்பு என்ற எடுகோளாகக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். ஒரு குறிப்பிட்ட குழாமிற்கு வழங்கும் கூலிக்கும் இது உண்மையாகும். பொதுக் கூலி வீதங்களைக் குறிப்பிடுமிடத்து இந்த எடுகோள் பொருந்தாது.

கிளாசிக்கல் ஆசிரியர்கள் எல்லாக் கூலிகளும், அல்லது உண்மைக் கூலிகள் மட்டும் குறிப்பிடத் தக்கவை. அதனால் எல்லா விலைகளும் மாறாமலிருக்கும் என்று அவர்கள் கொண்ட எடுகோள் தவறான எடுகோளாகும்.

ஆனால், கிளாசிக்கல் வாதத்தை முழுமையான தர்க்க முறையான கூற்றாகக் கொள்ள முடியும் என்பதை நாம் முன்னமே கண்டோம். பணக் கூலிக் குறைப்பு, உண்மைக் கூலிக் குறைப்புக்கு ஏதுவாகும்; ஆயினும் அது உண்மைக் கூலிக்குறைப்பை மிகவும் குறைந்த அளவில் பாதிக்கும். இதனால் உழைப்பை அதிகமாக வாடகைக்கு அமர்த்துவார்கள்; அதனால் ஆக்க அளவு அதிகமாகும். ஆயினும், இத்தகைய முடிவு பண அளவைக் கோட்பாட்டின் எடுகோளாகிய - பணம் பரிவர்த்தனை சாதனமாகப் பயன்படுகிறது என்ற எடுகோள் - என்பதை ஒட்டி இருக்கிறது. எனவே, பணத்தை மற்றப் பண்டங்களுக்கு மாற்றப் பயன்படும் அளவிற்குத்தான் வைத்திருப்பார்கள்.

மிக உயர்ந்த அளவில் பொருத்தப்பட்டிருக்கும் கூலி, குறைய மறுத்தால், வேலையின்மை ஏற்படும். இந்த ஒரு காரணம்தான் வேலையின்மைக்கு ஏற்ற காரணம் என்று கிளாசிக்கல் ஆசிரியர்கள் கருதினார்கள்.

இதைத்தவிர வேறு பல சங்கடங்களும் நேரிடலாம். வங்கிகள் குறைந்த அளவிற்குப் பணத்தைக் கடன் வழங்குவதால் ஏற்படும் பண அளிப்பின் குறைவு, (அதாவது வங்கிக் கடன்கள், முதலீடுகள் ஆகிய இவைகளின் மொத்தம் குறைந்து காண்பதால்) பணச் சுருக்கத்தை ஏற்படுத்தும். ஆனால், கூலிகள் இணக்கமானவைகள் ஆனால், அவைகளும் குறையும். இதனால் ஏற்படும் புதுச்சமநிலை உண்மைக் கூலி, ஆக்கம், வேலை, ஆகிய இவைகளைப் பாதிக்காமலிருக்கும்.

பயத்தினால் ஏற்படும் பதுக்குத்தல் சில சமயங்களில் பண வாட்டத்தை விளைவிக்கலாம். இது ஓர் அறிவற்ற செயலானாலும், சில சமயங்களில் ஏற்படும் நிகழ்ச்சிகளில் ஒன்று. கூலிகள் விறைப்பானவைகளாக இல்லாவிடில் இது வேலையின்மையை ஏற்படுத்தாது.

சேமித்தலுக்கு ஏற்படும் நாட்டம் மாறினாலும், முதலீடு மாறினாலும் சங்கடங்கள் பல ஏற்படுகின்றன? உதாரணமாக, மக்களிடையே சிக்கனம் அதிகமானால், நுகர்ச்சிப் பொருள்களுக்கான தேவை குறையும்; இந்த நிலைமையை உடனே வட்டி வீதத்தைக் குறைத்துச் சமாளிக்க வேண்டியிருக்கிறது. இவ்வாறு வட்டி வீதம் குறைந்தால், முதலீடு தூண்டப்படும், சேமிப்பு அதிகரிப்புக் கட்டுப்படுத்தப்படும். முதலீடு வாய்ப்புகள் குறைந்து காணப்பட்டால் மேற்கூறியவைகளுக்கு எதிரான நிலை ஏற்படும்.

இணக்கமான வட்டி வீதங்கள் என்ற சாதனம் பயனற்றதால், மற்றொரு சாதனம் ஆளப்படும். ஆவணங்களின் விலைகள் அதிகமானால், அவற்றை விற்கும் ஒரு நிகர விற்பனையாளராக வங்கி அமைப்பு இருந்தால் வட்டி வீதம் பயனற்றதாகும். இவ்வாறு வங்கிகள் செய்வதால், தகுதியாக ஏற்படும் வட்டி வீதக் குறைப்பைத் தடுத்து நிறுத்த முடிகிறது. (வங்கிகள் ஆவணங்களை விற்பதால் பொதுமக்களிடத்தே புழங்கும் பண அளிப்பைக் குறைக்கிறது). வட்டி வீதம் தகுந்த அளவு குறையாததால், மொத்த நுகர்ச்சி, முதலீட்டுத் தேவைகள் குறைகின்றன. வேலைகள் போகக்கூடிய நிலைமை பயமுறுத்தும். ஆனால், பணக் கூலிகள் இணக்கமானவைகளானால், அவைகள் குறையும். அதனால் விலைகளும் குறையும்; எனவே, இந்த நிலைமையைத் தவிர்த்துவிடலாம். போதுமான அளவிற்குக் கூலிகளும், விலைகளும் குறைந்தால் வேலை நிறைவு நிலைமையை நிலைநாட்ட முடியும். எனவே, நம்மிடம் இருவகை சாதனங்கள் இருக்கின்றன: (1) வட்டி வீதங்கள், அவை தவறினால் (2) கூலிகள், விலைகள் ஆகியவை. விறைப்பான கூலிகள், – வட்டி வீதங்களின் குறைப்பு, வங்கிகள் (சரிக்கெட்ட) நடவடிக்கையுடன் கூட்டுக்கொண்டமையால் வேலையின்மையை ஏற்படுத்துகிறது.[1] எந்த அளவு வேலையின்மை செயற்கை முறையால் நிலைநாட்டிய கூலிகளின் விளைவால் ஏற்படும் என்பதை கிளாசிக்கல் ஆசிரியர்கள் இன்னும் சரியாக விளக்கவில்லை.

[1] இதற்கு முன் உள்ள பத்தியில் கண்ட கருத்தியல் இன்னல்களைக் குறித்துக் கொள்ளவும். பண அளிப்பை வங்கிகள் குறைக்குமிடத்து (அதாவது $\triangle M$ என்பது எதிர்மறை (negative) என்று இருக்குமிடத்து, குறையும் விலைகள் கூலிகள் ஆகிய இவைகளினால் மட்டுமே வேலை நிறைவை நிலைநாட்ட முடியும். ஆனால்,* இது ஒரு சமனறு நிலையாகும். பண அளிப்பின் கழிப்பை வங்கிகள் நிறுத்த முற்பட்டவுடன் பொதுமக்களின் பண இருப்புகளின் மொத்தக் குவியல் குறையும். இதனால் ஏற்படும் புதிய சமநிலை, நிலையான, குறைந்த கூலி. விலைமட்டம் ஆகியவைகளைக் கொண்டதாகும். M என்பது குறைந்த சதவிகிதத்தில் குறைந்து காணப்படும். இயற்கை மட்டத்திற்கும் உயர்ந்த மட்டத்திற்கு வட்டி வீதத்தை நிலை நிறுத்த முயற்சி செய்வது வங்கிகள் பண அளிப்பைக் குறைக்கும் முறையில் ஈடுபட்டிருக்கும் வரையில்தான் முடியும் (அதாவது பொதுமக்கள் வழங்கும் பண அளிப்பிற்கு ஏற்றவாறு பத்திரங்களை விற்கும் வரையில்தான் முடியும். வங்கிகள் ஆவணங்களை விற்கும் நிகர விற்பனையாளர்கள் என்ற நிலையிலிருந்து பின்வாங்கிவிட்டார்களானால், வட்டி வீதம் மீண்டும் தனது புதிய இயற்கை மட்டத்திற்கு வீழ்ந்துவிடும். அங்காடி வட்டிவீதம் இயற்கை வட்டி வீதத்தைவிட உயர்ந்த நிலையில் இருப்பதால் சேமிப்பு முதலீட்டைவிட மிஞ்சும் என்பதும், பண அளிப்பின் குறைப்பு முறை என்பதும் சமனறு நிலையை விளக்கும் மாற்று விளக்கங்களாகும். (நிலைக்கூலிகள் இணக்கமானவை என்பதாலும்) விழுகின்ற கூலிகள், விலைகள் இவைகளாலும் ஏற்படும் சமனறு நிலையை உணர்த்துகிறது. பண வாட்ட நிலையிருக்குமிடத்து, வேலை நிறைவை நிலைநாட்டக் கூலிக் குறைப்புப் போதுமானதாக இல்லாவிட்டாலும் குற்றமில்லை. ஆனால், பண அளிப்பு நிலையுள்ளது. ஆனால், (அதாவது அங்காடி வீதம் இயற்கை வீதத்திற்கு விழுமானால்) பணக் கூலிகளும் விலைகளும், வேலை நிறைவு சமநிலை மீண்டும் வரும்வரை வீழ்ந்துகொண்டே போகலாம்.

## கிளாசிக்கல் பொருளாதாரத்தில் பண வாக்கக் கைக்கோளும் வருவாய்க்குரிய கொள்கையும்
## (Monetary & Fiscal Policy in Classical Economics)

கூலிகளின் விறைப்புத்தன்மை ஒன்றுதான் வேலையின்மையை ஏற்படுத்தும் என்பது கிளாசிக்கல் அமைப்பின் கருத்து ஆகும் என்பது பொருத்தமானது. வேலை நிறைவை நிலைநாட்டப் பணக்கூலிகளைக் குறைத்தல் வேண்டும். கூலிக் குறைப்புகளின் தேவை பணத் துறையின் அதாவது பதுக்குதல் அல்லது பணக் குறைப்பு ஆகியவைகளின் வழியாக ஏற்பட்டாலும், அல்லது சுருசுருப்பற்ற வங்கி அமைப்புடன் சேர்ந்த சேமிப்பு, முதலீடு, இவைகள் மாறுபடுவதால் ஏற்பட்டாலும், பணக் கூலிகளின் இணக்கத்தன்மை, தன்னியக்கமுள்ள முழுமையான சரிக்கட்டி (corrective) என்பதில் ஐயமில்லை.

வேலை நிறைவு ஏற்பட, பணக் கூலிச் சரிக்கட்டுதல்களையே நம்பியிருத்தல் நடைமுறைக்கு ஏற்றதொரு முறையாகாது. அவ்வாறு நடைமுறையில் அது சிறந்ததொரு கருத்து எனக் கொண்டால், பணக் கூலிக் குறைப்பின் அவசியத்தைக் .குறைக்கலாம். அதனைச், சேமிப்பு - முதலீடு முறையில் வங்கிகள் தலையிடுவதைத் தடுத்து நிறுத்திச் செயல் புரியலாம். வங்கிகளின் ஒதுக்கு நிதி நூற்றுக்கு நூறு ஒதுக்குதல் அமைப்பு முறையைப் பின்பற்றிச் (அதாவது பின்ன ஒதுக்குதல் முறையைத் தவிர்த்து) செயல் புரியலாம். அல்லது வணிக பாங்குகளின் கூட்டுச் செயல்களைத் தவிர்க்க, மைய வங்கிகள் மேற்கொள்ளும் நடவடிக்கைகளை வலுப்படுத்துவதாலும் செயல் புரியலாம். பண அளவை (M) நிலையானதாக வைத்துக்கொண்டால், இது சேமிப்பு நாட்டங்களின் (Saving propensities) பிறழ்ச்சிகளைத் தடுக்கலாம்; அல்லது முதலீட்டு வாய்ப்புகளும் தவிர்க்கப்படும். எனவே கூலி, விலைகள் இவைகளின் மாற்றங்கள் ஏற்படா. அதனால் வட்டி வீதம் ஒன்றுமட்டுமே அந்தச் சூழ்நிலையில் சமநிலையை நிலைநாட்டும். ஆயினும், பண இருப்புகளின் கட்டுப்படுத்தப்பட்ட மாற்றங்கள் அவசியம். உழைப்பின் அளிப்புப் பிறழ்வதாலும், அல்லது அதன் உற்பத்தி, அல்லது அறிவற்ற பதுக்குதல் அல்லது பதுக்குதல்-இன்மை அல்லது 'வேகத்தைத் தீர்மானிக்கும் பொருள்பற்றிய தீர்மானிகள்' (objective determinants of velocity) இவைகளினால், பொதுமக்களின் பணத் தேவை மாற்றங்கள், இவைகளால் கூலிகள்; மாறலாம்; எனவே, கூலிகள், விலைகள் நிலையுள்ளனவாய் அமைக்க இவைத் தேவைப்படுகின்றன.

கூலிகள், விலைகள் ஆகியவைகளின் ஏற்ற இறக்கங்களைத் தவிர்ப்பதற்கு-அதாவது அலகு மதிப்பை மாறும் சூழ்நிலையிலிருந்து நிலைநாட்டுவதற்குப்-பணவாக்கக்கைக்கோள் மிகவும் சிறந்ததொரு கருவியாகப் பயன்படுகிறது. அவ்வாறு இல்லையேல், மாற்றங்களுக்கான வெளிச்சூழ்நிலைகள் விலை மட்டங்களின் வீக்கத்தை அல்லது வாட்டத்தை ஏற்படுத்தும். (இது குறிப்பாக பின்ன (fractional) ஒதுக்க வங்கி முறையுள்ள அமைப்புக்கு ஏற்றதாகும்). பணவாட்டம் (deflation) வேலையின்மையை ஏற்படுத்தும். இது கூலிச்சரிக்கட்டுகள் மெல்ல செல்பவைகளாகவும், கீழ் நோக்கிய தன்மையுடையவைகளாகவும் உள்ள காரணத்தால், வேலையின்மை ஏற்படும். இந்த இன்னல்கள் எல்லாம் சிறந்த பணத்தியல் கொள்கையினுல் தவிர்க்க முடியும்.

பண வாக்கக் கைக்கோளுக்கான கருவிகள் பல உள்ளன. அவைகளை இங்கு ஆராய்வதற்கில்லை. ஆயினும், பணத்தியல் கொள்கை. வருவாய்க்குரிய கொள்கை இவைகளிடையே உள்ள வேற்றுமைகளை விளக்க, இவைகளுக்கான சில குறிப்புகள் அவசியம். வாணிக பாங்குகளை நேரடியாகத் தாக்கும் பணத்தியல் கருவிகள் பல உள்ளன. உதாரணமாக, குறைந்தபட்ச ஒதுக்குத் தேவைகளின் (minimum reserve requirements) மாற்றங்களைக் குறிப்பிடலாம். குறைந்தபட்ச ஒத்துக்குதல் தேவைகளின் ஏற்றம், வங்கிகளின் முந்தைய ஒதுக்கங்களைக் குறைக்கத் தூண்டும். இதனைத் தாம் வழங்கும் கடன்களையும், தாம் செய்யும் முதலீடுகளையும் குறைத்து, அல்லது புதிய ஆவணங்களை வாங்குவதைக் குறைத்து, தம்மிடம் உள்ள ஆவணங்களை அதிகமாக விற்று பொதுமக்களிடையே புழங்கும் வங்கிப் பணத்தைக் குறைக்கிறது. குறைந்தபட்ச ஒதுக்குதல் தேவையின் தாழ்வு, வங்கிகள் தாம் வழங்கும் கடன்களை அதிகரிக்கவும், முதலீடுகளை அதிகரிக்கவும், இவைகளால் பொதுமக்களிடையே புழங்கும் வங்கிப் பணம் அதிகரிக்கவும் முடிகிறது. (ஆனுல் இவைகளைக் கட்டாயமாகக் கடைப் பிடிக்கத் தூண்டுவதில்லை. வங்கிகளின் ஒதுக்குதல்களை பாதிக்கவும், அதனுல் வங்கிகள் கடன் வழங்குதலையும், கடனைத் திருப்பிப் பெறுவதையும் கூட்டவோ அல்லது குறைக்கவோ பயன் படும் வேறு பல கருவிகளும் உள்ளன. வங்கிகளே இல்லாத அமைப்பிற்கும், அல்லது தங்கள் வைப்புகளை 100க்கு 100 நீர்மைத் தன்மையுள்ள வங்கிகள் உள்ள அமைப்பிற்கும் இவைகள் பயன் படும். இத்தகைய பணவாக்கக் கைக்கோளுக்குக் குறிப்பான எடுத்துக்காட்டு வெளிச் சந்தையில் ஆவணங்களை விற்பதும் வாங்குவதுமாகும்; குறிப்பாக வெளிச் சந்தை நடவடிக்கை மைய பாங்காக [அல்லது கசாலு (treasury) பணி புரியும் போது],

வெளிச் சந்தையில் (open market) ஆவணங்களை வாங்குகிறது. இவைகளை வங்கி தொடர்பற்றவைகளிடமிருந்து அல்லது பொது மக்களிடமிருந்து வாங்குகிறது. இதனால் நிதிகளை அளிக்கும் அமைப்புகளாகவும், பொது மக்களிடம் உள்ள ரொக்கத்தை மிகுவிக்கவும் பயன்படுகிறது. அல்லது ஆவணங்களை மற்ற வங்கிகளிலிருந்து வாங்கினால், அவ் வங்கிகளின் ஒதுக்குதல்கள் (reserves) அதிகரிக்கின்றன; இதனால், அவைகள் அதிகப்படி கடன்களை வழங்கவும், முதலீடுகளைச் செய்யவும் தூண்டப்படுகின்றன. இதனால், பண அளிப்பு அதிகரிக்கிறது. மைய பாங்குகள் வெளிச் சந்தையில் ஆவணங்களை விற்குமேயானால், அவைகளைப் பொது மக்களுக்கு விற்க வேண்டும். அவ்வாறு பொது மக்களுக்கு விற்றால் அவர்களிடமுள்ள ரொக்கத்தை மைய பாங்கு உறிஞ்சுகிறது; அதனால், பண அளிப்பு மறைகிறது. அல்லது அவற்றை வங்கிகளுக்கு விற்கும். அவ்வாறு செய்தால், வங்கிகளின் ஒதுக்குதல்களை உறிஞ்சுகிறது; இதனால் வங்கிகள் அளிக்கும் கடன்களை அல்லது முதலீடுகளைக் குறைக்கத் தூண்டுகிறது.

வருவாய்க் கொள்கை என்பது பண்டங்களுக்கு அல்லது பணிகளுக்கான செலவுகளின் மாற்றங்கள், அல்லது வரி வீத மட்டங்களின் மாற்றங்கள் ஆகியவைகளைக் கொண்ட ஒரு கொள்கையாகும். பணவாக்கக் கொள்கையைப்போல் அல்லாமல், வருவாய்க் கொள்கை; அரசைப் பண்டங்கள், பணிகள் ஆகியவைகளின் அங்காடிகளில் நேரடியாக நுழைய (அதாவது செலவுகள் என்ற நிலையிருந்தால்) தூண்டுகிறது; அல்லது தேவையை நேரடியாகத் தாக்கப் (அதாவது வரிகள் என்ற நிலையிருந்தால்) பயன்படுகிறது. பணவாக்கக் கைக்கோளின் நேரடித் தாக்கு அவ்வளவு சிறந்தது அல்ல. பணவாக்கக் கைக்கோள் வட்டி வீதத்தைப் பாதிக்கின்றது; அதனால், மக்களது சேமிப்பு (நுகர்ச்சி) அல்லது முதலீடு இவைகளின் அளவைப் பாதிக்கப்படுகின்றன. நேரடி முறையாக இருப்பினும், வருவாய்க் கொள்கை விலைகள், கூலிகள் ஆகியவைகளை நிலை நாட்டும் கருவிகளின் படைக்களத்தில் இது இடம் பெறவில்லை; ஆயினும், பணவாக்கக் கொள்கையைச் சரியான முறையில் பணி புரிய உதவும் கருவியாகக் கருதப்படுகிறது.

இதனை உதாரணம் காட்டி விளக்கலாம். சேமிப்பு நாட்டம் மிகுந்து காண்பதால், வேலையின்மை உண்டாகிறது என்று வைத்துக்கொள்வோம். இதனைத் தவிர்க்க வங்கிகளில் தங்களது ஆவணங்களின் நிகர விற்பனை ஏற்படுகிறது என்று வைத்துக் கொண்டால், வட்டி வீதக் குறைப்பு மிகவும் சிறிதாவதால், பணக்

கூலிகளின் குறைப்பு முடியாமல் போகிறது. வேலைகளை அதிகரிப்பதற்கு அரசு செலவை அதிகரிக்கத் தேவைப்படும் திட்டங்கள் உருவாக்கப்படவேண்டும். இதற்கான செலவை உயர்ந்த வரிகள் விதித்து அவைகளின் வழி கிடைக்கும் பொருள் கொண்டு நிதிமயமாக்கினால், அரசின் செலவு எந்த அளவிற்கு உயர்கிறதோ அந்த அளவிற்குப் பொதுமக்களின் செலவுகள் குறைகின்றன. (இது ஒரு எடுகோள்). இதனை ஆவணங்களை விற்று அதன்வழி கிடைக்கும் பொருள் கொண்டு நிதிமயமாக்கினால்; இது வட்டி வீதத்தை உயர்த்தி, முதலீட்டுச் செலவைக் குறைத்தும் (அல்லது சேமிப்பை அதிகரித்தும்) பணி புரிகிறது. இந்த நிலையில் அரசாங்கப் பத்திரங்கள், தனியார் வழங்கும் பத்திரங்கள் ஆகியவைகளால் கிடைக்கும் சேமிப்புடன் போட்டியிடும் நிலைமை ஏற்படும். இதனால், பத்திரங்களின் விலை குறையும் (அதாவது வட்டி வீதம் ஏறும்) இதன் விளைவாகத் தேவையின் நிகர அதிகரிப்புத் தவிர்க்கப் படுகிறது.[1]

அரசின் அதிகப்படிச் செலவு புதுப்பணத்தால் (பணம் அச்சடித்து வழங்குதல் அல்லது வங்கிகளிலிருந்து கடன் வாங்குதல்) போன்றவைகளால் நிதிமயமாக்கப்பட்டால், தேவை நிகர அதிகரிப்பு உடனடியாக ஏற்படும். ஆனால், இந்த முறை பணவாக்கக் கைக்கோள் கொள்கையாகவும், அதனைக்கொண்டு பண அளிப்பை அதிகப்படுத்தவும் பயன்படுகிறது. ஆயினும் இது தேவையில்லாத அல்லது ஓர் ஒழுங்கற்ற முறையாகும். இதே பயனை, மைய பாங்குகள் வழக்கமாக ஆளப்படும் கருவிகளில் – ஒன்றான வெளிச் சந்தை நடவடிக்கைகள் (open market operations) விளைவிக்கும். இக் கருவியின் வாயிலாகப் பண அளிப்பை அதிகரிக்கலாம். ஆனால், பொதுத்துறையிலிருந்து, தனித்துறைக்கு அப் பணத்தைத் திருப்ப முடியாது.

இங்கிலாந்தில் ஏற்பட்ட வேலையின்மையைத் தவிர்க்கப் பொதுப்பணியின் (Public works) செலவுகளை அதிகமாக்கும் சில திட்டங்களைப்பற்றி ஹாட்ரி (R. G. Hawtrey) என்பவர் 1925-ஆம் ஆண்டில் கீழ்க்காணுமாறு கருத்துத் தெரிவித்தார். இத் திட்டத்தின் உண்மைச் சிறப்பு இதில் உள்ளது. புதிய [பொதுப்] பணிகள்

[1]இதில் உண்மையாக, முன்னுக்குப்பின் முரணான நிலையுள்ளது. வங்கிகள் இன்னல்கள் விளைவிப்பதானால், அவைகள் பத்திரங்களை, முந்தைய பத்திர விலை மட்டங்களை விட உயர்ந்த மட்டத்தில், பத்திரங்களை விற்க முற்படும்போது, அவைகளை முந்தைய பத்திர விலை மட்டத்தைவிட குறைந்த விலை மட்டத்திற்குப் பத்திரங்களை வாங்கவும் தயாராக இருத்தல்வேண்டும். எனவே, வங்கிகள் அரசு வழங்கும் புதிய ஆவணங்களை வாங்குவதனால் வட்டி வீதங்கள் அதிகப்படி உயராது. இந்த நிலையில் அரசின் புதிய இந்தச் செலவு, அதற்கீடான தனியார் செலவைப் பாதிக்காமல் அமையும், இங்கும் வருவாய்க்குரிய கருவி பணவாக்கக்கைக்கோளுக்குத் துணைக் கருவியாக மட்டும்தான் பயன்படுகிறது.

எல்லாம் வங்கிச் செலாவணி உற்பத்தியைக் கொண்டு நிதிமய மாக்கிஞல் அவைகள் அதிகப்படி வேலையை வழங்கும்......ஆஞல், அதே வாதம், செலாவணி உற்பத்தி, பொதுப்பணிச் செலவுகளை ஒட்டியவைகளாக அமையாவிட்டாலும், அவைகள் வேலையை வழங்கும் என்பதையும் வெளிப்படுத்துகிறது. பொதுப் பணிகள் என்பவை (ritual), அவரவர் ஏதேனும் ஒரு செய்கையில் ஈடுபடு கின்றனர் என்பதை உணர்த்த இது பயன்படும். அப்படியில்லையேல் இது சம்பந்தமற்ற ஒரு கருவியாகிவிடும். செலாவணியை விரிவு படுத்தத் தூண்டுவது மிகவும் எளிதானது. செலவுமிகுந்த பொதுப் பணிகளை உற்பத்தி செய்வது, 'பன்றியை வறுப்பதற்காக வீட்டையே கொளுத்துவது போலாகும்'.[1]

பணவாக்கக் கைக்கோள், வருவாய்க்கொள்கை இவை இரண்டிற்கு முன்பு வழங்கப்பட்ட அங்கங்களை மாற்றி அமைத்த பெரும்பணி பேரியல் பொருளியல் கோட்பாட்டைச் (Macro economic Thought) சாரும். இன்று பணக்கைக்கோளின் விளைவு களை மக்கள் நன்கு அறிந்துள்ளனர்; ஆஞல், பொருளாதார நிலை பேறு கிட்ட நிதித் தொடர்புடைய கருவிகளைப் பயன்படுத்து கிருர்கள். பண அளவையை நேரடியாகவோ அல்லது எதிர்முக மாகவோ பாதிக்காமல்போஞல்கூட நிதித் தொடர்புடைய கருவிகளைப் பயன்படுத்துகிருர்கள்.

1 'பொதுச்செலவும், உழைப்பின் தேவையும்' என்ற கட்டுரை. இதனை எகஞமே மிக்கா V (மார்ச்சு 1925) பக்கங்கள் 43-44-ல் காண்க.

# 9. வேலை நிறைவுக்கான சில தடைகள்

## (Some obstacles of Full Employment)

### நீர்மை விருப்பமும், ஊக வாணிபப் பணத் தேவையும்

கீன்சு என்ற மேதை தமது 'பணம், வட்டி, வேலை இவைகளுக்கான பொதுக் கோட்பாடு' (General Theory of Employment, Interest and Money)[1] என்ற நூலில், கிளாசிக்கல் மாதிரியைச் செப்பனிடுவதற்காகச் சில தகுதிகளை வழங்கியுள்ளார். அவைகளை இவ்வதிகாரத்தில் காண்போம். இவைகளில் 'நீர்மை விருப்பம்' (liquidity preference) அல்லது 'ஊக வாணிபத்திற்கான பணத் தேவை' (Speculative demand for money) என்பது முதலிடம் பெறுகிறது. இத் தகுதியைக் கிளாசிக்கல் மாதிரியில் வேலை நிறைவு (full employment) என்ற கருத்துகள் கெடாமல், வெகு எளிதில் புகுத்தலாம். ஆனால், அதற்குக் கூலிகள் இணக்கமானவை என்ற எடுகோள் அவசியம். ஆயினும், ஒரு குறிப்பிட்ட நிலையில் 'நீர்மை வலை' (liquidity trap) என்ற இவ்வெடுகோள், கூலிகள், விலைகள், ஆகியவை இணக்கமானவைகளானாலும், வேலை நிறைவு என்பதை எளிதில் அடைய முடியாது.

கிளாசிக்கல் மாதிரியைச் செம்மைப்படுத்துவதற்கான இரண்டாவது தகுதி மிகவும் கடுமையானது. இது சேமிப்பு, முதலீடு ஆகியவை சில நேரங்களில் ஒன்றுக்கொன்று முரணாக அமையக் கூடிய சூழ்நிலையை உணர்த்துகிறது. இந்த நிலை நீடிக்குமேயானால்,

[1] பொதுக் கோட்பாடு அதிகாரங்கள் 13, 15 ஆகியவைகளைக் காண்க.

பின் கிளாசிக்கல் மாதிரி வழங்கும் திருத்தங்கள் (கூலிகள் இணக்கமானவைகளாலும்) வேலை நிறைவை ஏற்படுத்தாது.[2]

இறுதியாக, விலை–கூலி இணக்கத்தன்மையின் கெடுதிகளை ஆராய்வோம். ஆனால், இவை கீன்சு வழங்கிய கிளாசிக்கல் விளக்கத்திற்கு மிகவும் தேவை.

வேலை நிறைவுக்கான மேற்கூறிய தடைகள் எல்லாம், தன்னிச்சையான எதிருணர்வு உள்ள பொருளியல் அமைப்பு, வேலையின்மையைத் தவிர்க்க முடியும். அல்லது, வேலையின்மை ஏற்பட்டால் அதைத் திருத்தவும் முடியும், என்ற கருத்துகளை அடியோடு அழித்துவிடுகின்றன, என்று கூறி இவ்வதிகாரத்தை முடிப்போம். கிளாசிக்கல் கோட்பாடு, வேலை நிறைவுக்குக் குறைவாக உள்ள நிலையை ஏற்க மறுப்பதால், அத்தகைய நிலைக்கு ஏற்ற சில கோட்பாட்டியல்பான கருவிகளைச் செப்பனிடுதல் வேண்டும். இந்தப் புதுக்கோட்பாடு, வேலை மட்டங்களையும் வெளிப்பாட்டையும் முதன்மையான மாறிகளாகக் கொள்ள வேண்டும்.

பணவீக்க நிலைகளைவிட, வேலையின்மையைப் பயமுறுத்தும் நிலைகளை மட்டும் நாம் இவ்வதிகாரத்தில், உன்னிப்பாகக் கவனிப்போம். இதற்கான விவரங்களைச் சமச்சீர்மையாகக் (asymmety) கவனித்தல், வேண்டுமென்றே செய்யப்பட்டிருக்கிறது. மேலும், இது பின்வரும் அதிகாரங்களை நல்ல முறையில் விளக்கப் பயன்படுகிறது. வேலையின்மையைவிட, பணவீக்கம் ஏற்றதா என்பதைச் சீர்தூக்கிப் பார்த்து அவ்வமைப்பு ஒரு முடிவுக்கு வருவதை நாம் குறிப்பிடவில்லை. பணவீக்கத்திற்கான விளக்கத்தைப் பின்னர் ஓர் அதிகாரத்தில் காண்போம். ஆயினும், மேற்கூறிய புதிய பகுப்பாய்வுக் கருவிகள் பணவீக்கத்தையின்றி வேலையின்மையை விளைவிக்கப் பயன்படுகின்றன என்பது உண்மை. இவ்வதிகாரத்தில் கண்டுள்ள நிலைக்கு எதிரான நிலைகளில்-அதாவது மொத்தத் தேவையளவு மிகுந்து காணப்படுகிற நிலைக்குத் தேவையான-வாதத்தை மாற்றியமைத்துப் பயன்படுத்துவதை, நல்லதொரு பயிற்சியாக ஒவ்வொரு மாணவனும் உணர்வான்.

[2] ஒரு பொருளாதார அமைப்பில், 'நீர்மைவலை' அல்லது முரண்பாடுகளால் ஏற்படும் வேலையின்மையைத் தவிர்க்கக்கூடிய தொடர்பைக் கிளாசிக்கல் மாதிரி உள்ளடக்கியுள்ளது என்பது சில பொருளாதார மேதைகளின் கருத்து. ஆனால், அவ்வமைப்பில் கூலிகளும், விலைகளும் இணக்கமானவைகளாக அமையவேண்டும். இது நுகர்வோர் சொத்து, அவர்கள் செய்யும் செலவினம் ஆகியவைகளுக்கிடையே உள்ள தொடர்பாகும். இதனைப் 'பிகு விளைவு' (Pigou Effect) எனக் கூறலாம். இதனைக் கிளாசிக்கல் மாதிரியின் ஒரு பகுதியாக நாம் கருதவில்லை (இது கிளாசிக்கல் மாதிரிக்குத் தேவையற்றது). இதனை இவ்வதிகாரத்தில் விளக்கவில்லை; ஆனால், 12-ஆம் அதிகாரத்தில் விளக்கியுள்ளோம்.

## நீர்மை விருப்பம் ஊக வாணிபத்திற்கான பணத்தேவை

## (Liquidity Preference ; The Speculative Demand)

பத்திரங்களுக்கான மறு விற்பனை அங்காடியை ஏற்றுக்கொண்டதால், கிளாசிக்கல் கோட்பாடு பொய்யாகிவிடவில்லை என்பதை ஏழாம் அதிகாரத்தில் கண்டோம். பத்திரங்களின் அளிப்பு, தேவை ஆகியவை, அவைகளின் விற்பனைகள், வாங்குதல்கள் ஆகியவைகளை உள்ளடக்கியது என்ற உண்மையைக் குறிப்பிட்டோம். மேலும், அவை நட்பு முதலீடு, சேமிப்பு ஆகியவைகளைக் குறிப்பன அல்ல என்பதையும் குறிப்பிட்டோம். தமதுசொத்துக்களைத் தொழில்கள், நுகர்வோர் ஆகிய இருபாலாரும் செய்யும் மறு ஒழுங்குபாட்டை, பல விற்பனைகளும், வாங்குதல்களும் குறிப்பிடுகின்றன என்பது தெளிவு. தம்மிடத்தில் உள்ள ஒரு பழைய ஆவணத்தை விற்றுக் கிடைத்த பணத்தை ரொக்கமாக வைத்திருக்க எவரும் விரும்பாத வரை, மறு ஒழுங்குபாடு எவ்வாறு அமைந்திருப்பினும், வட்டி வீதம் சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் உள்ள சமத்தன்மையை உணர்த்தும். அல்லது மொத்தத் தேவையின் மட்டம் மாறிலியாக அமைகிறது. வங்கி அமைப்பு ஆவணங்களை நிகர வாங்குபவர்களாகவும், அல்லது விற்பவர்களாகவும் அமைந்தால் (அதாவது ரொக்கத்திற்கான நிகர ரொக்கத்தின் மூலமாக அமைந்துள்ளதாயும், அல்லது ரொக்கத்தை உறிஞ்சும் நிகர அமைப்பாகவும்), சேமிப்பு, முதலீடு இவைகளின் சமதன்மை மாறுபடுகிறது. இதனால் பொது விலைகள் அல்லது கூலி மட்டங்களின் பணவீக்க நிலை, அல்லது பணச்சுருக்க நிலை ஏற்படுகின்றன.

வங்கி நிறுவனங்கள் அல்லாத தனித்துறை முதலீட்டாளர்கள் சில சமயங்களில் நிகர ரொக்கத்தை உறிஞ்சுபவர்களாகவும், அல்லது ரொக்கத்தை வழங்குபவர்ளாகவும், அமைந்து ஆவண அங்காடியின் செயலை நிலைகுலையச் செய்வார்கள் என்று கீன்சு கருத்து வழங்கியுள்ளார். வங்கிகள் அத்தகைய பணிகளைப் புரியாவிட்டாலும், பண அளிப்பு மாறிலியாக அமைந்தாலும், நிலைகுலைவு ஏற்படலாம்.

பொதுமக்களின் பணத்தேவை, தன்னிச்சையாக, அல்லது தானாக மாறும் தன்மையுடையது என்பது கீன்சின் கருத்து. இந்தக் கருத்தைப் பல கிளாசிக்கல் பொருளாதார மேதைகள் ஒப்புக்கொண்டு உள்ளார்கள். வேலையின்மையைத் தவிர்க்க வேண்டுமானால், விலைகளைச் சுருக்குதல் வேண்டும். இது பதுக்குதல் காரணமாக ஏற்படுகிறது. ஆனால், பதுக்குதல் அறிவற்ற முறை என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. ஆனால், இந்தப் பொருளில்-

அமைந்த பதுக்குதல் என்பது, தன்னிச்சையாக ஒழுங்கற்ற பங்கை மேற்கொள்கிறது. இவை ஆண்டவன் செயல் அல்லது வானிலை ஆகியவை வழங்கும் ஒழுங்கற்ற செயல்களை ஒக்கும். காலங்கள் மாறுவதாலும், அல்லது எதிர்கால நிலைகள் உறுதியானவைகள் அல்ல என்பதாலும், பதுக்குதல் ஏற்படுகிறது. இதனால் ஒருவகையில் பழுதடைந்த அமைப்பு மீண்டும் பழுதடைய ஏதுவாகிறது. இந்தப் பொருளிலும் பதுக்குதல் என்பது கடினமான-காலங்களை ஏற்படுத்துவதற்குக் காரணமாக அமையவில்லை; வேறு பல காரணங்களால் கடினமான போக்கு ஏற்பட்டால் அதனை வலுப்படுத்த இது ஒரு காரணியாக அமைகிறது. ஒரு பொருளாதார அமைப்பை ஒழுங்கான முறையில் நிலைகுலையச் செய்வதற்குப் பதுக்குதல், பதுக்குதலின்மை போன்ற போக்குகள் நிலவ காரணமாகலாம் என்று கீன்சு கருத்துத் தெரிவித்தார்.

கிளாசிக்கல் வாதத்தை மீண்டுமொரு முறை விளக்குவோம். வட்டிவீத ஏற்றத் தாழ்வுகள் சேமிப்பு அல்லது முதலீடு அட்டவணைகளில் ஏற்படும் உடனடி மாற்றங்களைப் பிரதிபலிக்கின்றன, என்பதை முதல் அங்காடிகளின் பணி விளக்குகிறது என்பது கிளாசிக்கல் ஆசிரியர்களின் கருத்தாகும்.




படம் 9.1.

இதில் r = வட்டி வீதம்

s, i = சேமிப்பு, முதலீடு

i = வட்டிவீத வளைகோடு

s = சேமிப்பு வளைகோடு

இப் படத்தில், உதாரணமாகச் சிக்கனம் அதிகமானால், சேமிப்பு அட்டவணை s' s' என்று இடம் பெயர்கிறது. இதனால் வட்டி வீதம் $r_0$வில் இருந்து $r_1$, ஆகக் குறைகிறது. $r_0$ என்ற வட்டி வீதத்தை நீடிக்கச் செய்தால், ஆக்கிய சேமிப்பு (intended saving) OC என்பது OA என்ற அளவு முதலீட்டை மிஞ்சிய தாகும். வட்டி வீதம் $r_1$ என்ற நிலைக்கு வீழ்ந்ததால், சேமிப்பு OB என்ற அளவிற்குக் குறைகிறது. இதனால் முதலீட்டின் அளவு OB ஆக அமைகிறது தொடக்க நிலையுடன் இந் நிலையை ஒப்பிட்டால், சேமிப்பு உயர்ந்து காணப்படுகிறது (அதாவது நுகர்ச்சி குறை கிறது). AB என்ற அளவு உயர்ந்து காணப்படுகிறது என்று பொருள்படும். முதலீட்டின் உயர்வும் AB ஆக அமைகிறது. இது நுகர்ச்சிக் குறைவைச் சரிக்கட்டி விடுகிறது.

மேற்கூறிய சூழ்நிலையில், வங்கி அமைப்பு, நிதிகளை உறிஞ்சும் அமைப்பாக இருக்கும் என்பதை விக்செல் (Wicksell) என்ற மேதை குறிப்பிட்டார். இப் பணியை, வங்கிகள், பத்திரங்களை அவை களின் விலைகள் உயர ஆரம்பித்தால் விற்றுச் செயல் புரிகின்றன. இதனால் பத்திரங்களின் விலைகள் மீண்டும் உயர்வதைத் தடுக் கலாம். (அல்லது தங்கள் கடன் வட்டி வீதத்தை மாற்றாமல் வைத்திருந்து ; அந்த வட்டி வீதத்தில் தேவைப்படும் தொகையை மட்டும் கடனாக வழங்கி வங்கிகள் பணிபுரிகின்றன). விக்செல் வங்கிகளுக்கு அளித்த பொருளில் அவை செய்யும் பணியைச் சாதாரண தனித்துறைச் சொத்துடையோர் செய்கின்றனர் என்ப தைக் கீன்சு கண்டார். அவ்வாறு இருப்பின், பண அளவை மாறிலி யாக வைத்தால், சேமிப்பு முதலீடு ஆகியவைகளுக்கு ஏற்படும் விளைவுகளைத் தவிர்க்க முடியாது. பின்வரும் விளக்கங்கள் எல்லாவற்றிலும் பண அளவை (M) என்பது மாறிலி என்ற எடுகோளை அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு அமைத் துக் கொண்டால், வங்கிகள் அல்லாத மற்றக் கடன் வழங்குவோர் பங்கை நன்கு ஆராய முடியும்.

கீன்சு விளக்கிய கருத்து மிகவும் எளிதானது. மக்களிடையே சிக்கனம் பெருகினால் அல்லது முதலீடு வாய்ப்புகள் குறைந்தால், வட்டி வீதம் இயற்கையாகக் குறையும். அதாவது அது பத்திரங் களின் விலைகளை உயர்த்த முற்படும். பத்திரங்களை விற்பதற்கான மறு விற்பனை அங்காடிகள் இல்லையேல், ஒரு பிரச்சினையும் கிளம் பாது. ஆனால், பத்திரங்களை விற்பனை செய்யும் மறு விற்பனை அங்காடிகள் உண்டு என்பதையும், விற்பனை செய்யாமல் கிடக்கும் பத்திரங்களின் அளவு மிகுந்து காணப்படுகிறது என்பதையும் புகுத்தினால், தம்மிடத்தில் பத்திரத்தைப் பெற்றிருப்பவர் அப்

பத்திரங்களின் விலை உயருமிடத்து எப்படி நடப்பார் என்பதை எளிதில் விளக்க முடியாது. தம்மிடத்தில் உள்ள சொத்தின் மதிப்பு உயர்ந்திருக்கிறது என்று இயற்கையாகப் பெருமிதம் கொள்வார். தம்மிடத்தில் உள்ள பத்திரங்களின் விலை உயர்வு நிரந்தரமானது என்று அவர் நம்பினுல், அப் பத்திரத்தை வேறு வழியில் பயன்படுத்த முற்படமாட்டார். ஆயினும், கடந்த காலத்தில் பத்திரங்களின் விலை ஏற்றத்தாழ்வை அவர் கண்டார் என்று வைத்துக்கொள்வோம். ஆனுல், அவைகளின் விலை மட்டங்களில் யாதொரு வகையான நிரந்தர போக்கும் காணப்படவில்லை என்று வைத்துக்கொள்வோம்: மேலும், பத்திரங்களின் விலை எதிர் காலத்தில் உயரப் போகும் என்பதற்கான அறிகுறி ஏதும் இன்றைய நிலையில் காணப்படவில்லை என்றும் வைத்துக் கொள்வோம். இந்த நிலையில், பத்திரங்களின் தற்போதைய விலை உயர்வு தாற்காலிகமானது; அது மீண்டும் பழைய நிலைக்குத் திரும்பவும் வரக் கூடியது என்றும் அவர் கருதுவார். பத்திர விலை நிலைகளுக்கான இவரது எதிர்பார்ப்பு (expectation) இத்தன்மையதாகில், அவர் தம்மிடத்தில் உள்ள பத்திரங்களை இன்று உள்ள, இயல்பான விலையைவிட உயர்ந்த விலைக்கு விற்று, பின் அவர் எதிர்பார்த்ததுபோல் பத்திரங்களின் விலை குறைந்தால் அப்பொழுது வாங்குவதால் நன்மை அடைகிறுர். அவரது விற்பனை, (ஒரு நடப்புச் சேமிப்பாளருக்கு) ஏற்ற அளவு முதலீடு செய்யாத சேமிப்பைக் குறிக்கிறது.[1] மேலும் நடப்புச் சேமிப்பாளர்களும், பத்திரங்களின் விலையேற்றம் தாற்காலிகமானது என்பதை உணர்வார்; எனவே, தங்கள் நடப்புச் சேமிப்புகளைக் கொண்டு பத்திரங்களை வாங்குவதற்குப் பதிலாகச் சேமிப்பை ரொக்கமாக வைத்திருந்து பின்னர் பத்திரங்களின் விலை குறையுமிடத்து அவைகளை மீண்டும் வாங்குவார்கள்.

பத்திரத்தைவிட பணத்தை வைத்திருப்பதால், வட்டி விளைவை விட்டுக் கொடுக்க வேண்டியிருக்கும் என்பது உறுதி. கிடைக்கும் விளைவை விட்டுக்கொடுப்பது ஒரு அறிவற்ற செயல் என்பதால் அதனை எவரும் விரும்ப மாட்டார், அதனைச் செய்யவும் மாட்டார் என்பது கிளாசிக்கல் ஆசிரியர்களின் கருத்து. ஆனுல், வட்டி வீதங்கள் மிகவும் உயரும் என்று எதிர்பார்க்குமிடத்து (அதாவது பத்திர விலைகள் குறையும் இடத்து) இச் செய்கை அறிவற்றதாகாது. எதிர்பார்த்த வட்டி விகித உயர்வு தன்னைத்

[1] படத்தில் s, i ஆகியவை குறிப்பிடும் ஆக்கப்பட்ட சேமிப்பு (intended saving) அல்லது விரும்பிய சேமிப்பு (desired saving) இவைகளைக் குறிக்கும் என்ற பொருளில் அமைகிறது. இயல்பான s, i ஆகியவை எப்பொழுதும் சமமாக அமையும்.

தானே இரண்டு முறை பெருக்கிக் கொண்ட தொகை, பத்திரங்களை வைத்திருப்பதால் எதிர்பார்க்கப்படும் ஆதாயத்தைச் சரிக்கட்டி விடும் என்று கீன்சு குறிப்பிட்டார். ஒவ்வொரு சீட்டுக்கும் ஆண்டுக்கு 5 டாலர்கள் வழங்கும் ஒரு பத்திரம் இப்பொழுது விற்கும் விலையான 100 டாலர்களிலிருந்து ஓர் ஆண்டில் 95 டாலர்களாகக் குறைந்தது என்றால், அதனால் ஏற்பட்ட முதல் இழப்பாகிய 5 டாலர்கள், அதற்கான 5 சதவீத வட்டியைச் சரிக்கட்டி விடுகிறது. இதைவிட உயர்ந்த சதவீதத்தில் விழுமாகில், பயனில்லா ரொக்கத்தை வைத்துக் கொள்வதில் நிகர வசதிகள் பல உள்ளன. இதைத்தான் 'ஊக வாணிபத்திற்கான பணத் தேவை' (Speculative demand for money) என்று கீன்சு (Keynes) குறிப்பிட்டார்.

ஊக வாணிகத் தொடர்புடைய என்ற பெயரடை (adjective) குறிப்பிடத் தக்கது. வழக்கில் உள்ள ஒரு பொது நிகழ்ச்சியையும், பொருளாதார மேதைகள் அனைவரும் உணர்ந்த அதன் விளைவுகளையும் இந்தப் பெயரடையால் கீன்சு (Keynes) குறிப்பிடுகிறார். நெடுபயன் சரக்குகள், (durable goods), தரப்படுத்திய பண்டங்கள் (standardised) விற்கும் அங்காடிகளில், இவைகளின் இருப்புகள் நடப்புப் புதிய அளிப்பைவிட உயர்ந்து காணப்படுகின்றமையால், இவ்வங்காடிகளில் ஊக வாணிபம் நடப்பதில் வியப்பு இல்லை. ஊக வாணிபத்தின் பங்கு இயல்பான சூழ்நிலையில் பல நன்மைகளை விளைவிக்கும். அங்காடிகளில் ஏற்படும் தாற்காலிகமான விலை ஏற்றத் தாழ்வுகளைச் சரிக்கட்டுதல் ஊக வாணிபத்தின் பணியாகும். ஒரு பண்டத்தின் விலை, அதன் இயல்பான விலைக்குக் குறைந்த விலையில் அமைந்தால், அப்பண்டத்தை வாங்க ஊக வாணிகர்கள் முற்படுவார்கள். அதுபோல் அதன் விலை இயல்பான விலையை விட உயர்ந்து காணப்பட்டால் அதனை விற்க முற்படுவார். இதனால், விலை ஏற்றத் தாழ்வுகளின் வீச்சைக் (amplitude) குறைக்கிறார்கள்.

கோதுமை அங்காடியை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். இதில் வரும் ஆண்டுக்கான கோதுமையின் அளிப்பு, அறுவடை காலத்தில் வருகிறது. ஆனால், இதனை இறுதியாக நுகர்வோரின்—தேவை பருவ கால படிவத்தை ஒட்டி அமைவதில்லை. ஆனால், அதன் விலை அறுவடை காலத்தில் சுன்னம் என்ற மதிப்பிற்குப் போவதில்லை—ஆனால், அங்காடியுள்ள கோதுமை இருப்புகள் அவ்வளவும் விற்கப்படவேண்டுமானால், விலை சுன்னம் என்ற அளவிற்குப் போகவேண்டும். அதுபோல் அறுவடை காலத்திற்குப் பின், யாதொரு அளிப்பையும் பெறாத நிலையில்,

தேவை அதிகமாகிற காரணத்தால் அதன் விலை மிக உயர்ந்த நிலைக்குப் போவதில்லை. எனவே, பருவகால விலை ஏற்றத் தாழ்வுகளை ஊக வாணிகர்கள் மிகவும் செம்மைப்படுத்தி விடுகிறார்கள். விளைச்சல் மிகுதியுறும் காலங்களில் அவற்றை இயல்பான விலைக்குக் குறைந்த விலையில் வாங்கி, பின்னர், விலைகள் இயல்பான சராசரி விலையை விட உயர்கையில் அவற்றைத் (தமது இருப்புகளிலிருந்து) விற்பதால், விலை ஏற்றத் தாழ்வுகளைச் செப்பனிடுகின்றனர். இச் செய்கையினால், கோதுமை விலையின் பருவ கால படிவம் செம்மையாக்கப்படுகிறது. இறுதியில் குறைந்த விலை, உயர்ந்த விலை ஆகியவைகளின் இடைவெளி, இருப்புப் பட்டியலில் கோதுமையைச் சேர்க்கச் செலவிடும் தொகையையும், வட்டித் தொகையையும் ஒத்திருக்கிறது.

கோதுமை அங்காடியின் ஊக வாணிபம் விலை ஏற்றத்தாழ்வுகளையும், நுகர்ச்சியையும் ஓர் ஆண்டு கால அளவில் மட்டும் செம்மைப் படுத்தாமல், நீண்ட கால ஏற்றத்தாழ்வுகளையும் செப்பனிடுகிறது. நல்ல பருவகாலம் காரணமாக ஓராண்டில் கிடைக்கும் அதிகப்படி கோதுமை, விலை இறக்கத்தை உறுதியாக உண்டாக்கும். இதனால் பின்னர் கோதுமையின் விலை உயரும் என்று ஊகம் செய்யும் ஊக வாணிகர்கள், கோதுமையை வாங்குவதால், விலை குறைவு மிகுந்ததாகக் காணப்படாது. ஓர் ஆண்டில் குறைந்த அளவு விளைச்சல் ஏற்பட்ட காரணத்தால், விலை உயரலாம்; ஆனால், இருப்புகள் தம்பால் உள்ள வரை, விலையேற்றத்தைக் குறைக்க ஊக வாணிகர்கள் முற்படுவார்கள். இதனை அவர்கள் எளிதில் செயல் புரிகிறார்கள். தம்மிடத்தில் உள்ள இருப்புகளை விற்பதால் இயல்பான விலையைவிட உயர்ந்த விலையினால் ஏற்படும் விளைவை ஊக வாணிகர்கள் பெறுகிறார்கள்.[1]

கோதுமை உதாரணம் நினைவுறுத்துவதுபோல் சில சமயங்களில் ஊக வணிகர்கள், எதிர்கால விலைகளை மதிப்பிடுகையில் தவறலாம். தேவை, அளிப்பு ஆகியவை இறுதியாக நிர்ணயிக்கும் விலைகளைவிட உயர்ந்த (அல்லது குறைந்த) எதிர்கால விலைகளை ஊக வாணிகர்கள் எதிர்பார்க்கலாம். இதற்கு எதிர்வினை செய்ததுபோல் அவர்கள் தற்போதைய விலையை உயர்த்தவும் (அல்லது குறைக்கவும் செய்யலாம். கோதுமையை இருப்புப்

1 கோதுமை ஊக வாணிகர் மற்றவைகள் மீதும் நாட்டமுடையவர் என்பதை வாசகர்களுக்கு நினைவுப்படுத்தத் தேவையில்லை. அவர் ஒரு விவசாயியாகவும், விற்பனையாளராகவும், மாவு மில் உரிமையாளராகவும் இருக்கலாம். இதற்காகவும் அவர் கோதுமை இருப்புகளைக் கொள்ளலாம். ஆனால், இருப்புகளின் அளவை ஊக வாணிபத் தேவைக்கு ஏற்றவாறு மாற்றி அமைக்கலாம்.

பட்டியலுடன் உறிஞ்சியும் (அல்லது இருப்புகளிலிருந்து விற்றும்) இதனைச் செயல் புரிகின்றனர்.




படம் 9-2.

இப்படத்தில் SS, DD ஆகியவை கோதுமையின் நெடுங்காலத் தேவை, அளிப்பு ஆகியவைகளின் நிலைகளை உணர்த்துகின்றன. $P_n$ என்ற சராசரி விலை உற்பத்தியையும் நுகர்ச்சியையும் சமப் படுத்துகிறது. ஆயினும், ஊக வாணிகர்கள் அளிப்பு, தேவை இவைகளில் தவருன கருத்துகளைக் கொண்டிருப்பதால் (அதாவது எதிர்காலத் தேவையை உயர்த்தியும் அல்லது எதிர்கால அளிப்பைக் குறைத்தும் கணக்கிடலாம்), கோதுமையின் விலை $P_s$ என்ற நிலையை அடையும்படி செய்கிருர்கள். இவ் விலையில், நடப்புச்சராசரி உபரிகளை அவர்களது இருப்புகளோடு இணைக்கக் கோதுமையை உறிஞ்சி விடுகிருர்கள். நுகர்ச்சியைவிட உற்பத்தி AB என்ற உபரி அளவைப் பெற்று இருக்கிறது. நெடுங்கால இயல்பான விலை $P_s$ என்ற விலை நிலைத்திருக்குமாகில், ஊக வணிகர்கள் தங்கள் இருப்புகளை உயர்த்துவதோடு அல்லாமல் விலையை நுகர்ச்சி, உற்பத்தி இவை இரண்டும் சரிக்கட்டும் மட்டத்தைவிட உயர்ந்த மட்டத்தில் பொருத்துவார்கள்.

இந்தத் தவருன கருத்து வெகுவிரைவில் மாறும். அப்போது விலைகள் குறையும். தமது இருப்புகளுடன் தொடர்ச்சியாகக் கோதுமையை இணைத்த ஊக வணிகர்கள், நடப்பு விலை மிகவும் உயர்ந்து காணப்படுவதால் அவற்றை விற்க முற்படுவார்கள். அவ்வாறு விற்க முற்படுகையில், விலைகள் $P_n$ என்ற நிலைக்குச் சில காலம்குறையும். அதாவது முன் சேர்த்த குவியல்களை விற்கும்

வரையில் $P_n$ என்ற நிலையில் நீடித்திருக்கும். (ஊக வணிகர்கள் இருப்புகளை விற்பதால்; விலைகளைக் குறைந்த நிலையில் வைத்திருந்தால், இருப்புகளின் அளவு குறைகின்ற காரணத்தால் அவர்களது கொள்கை தவறு என்பதை அறிவார்கள். அவர்களுக்குத் தேவைப்படும் இருப்புகளை மீண்டும் சேகரிப்பதால், கோதுமையின் விலை தாற்காலிகமாக $P_n$ என்ற நிலையைவிட உயர்ந்த விலையில் அமையும்.)

இத்தகைய தவறான எண்ணங்கள், ஊக வணிகர்கள் ஒரு பண்டத்தின் இயல்பான விலை மட்டங்களைப் பற்றிச் செய்யும் மாற்றிய எதிர்பார்ப்புகளால், சாதாரணமாக ஏற்படுவதில்லை. ஆனால், பண்டத்தின் இயல்பான விலை மட்டும் அடிக்கடி மாறுகிறது: எனவே, ஊக வணிகர்கள் பண்டத்தின் தேவை, அளிப்பு ஆகியவைகளின் அடிப்படை மாற்றங்களைச் சற்றும் கவனியாமல், இயல்பான விலைக்கு இப்பொழுதுள்ள பழமையான கருத்துடன் தொடர்பு கொள்ளுகிறார்கள். எனவே, விலை மட்டங்களுக்கான உயர்வதை அல்லது குறைவதை—மறுசரிக்கட்டுகளைச் சற்றுத் தாமதித்துச் செயல்படுத்த முற்படுகிறார்கள். இதனை இயல்பான விலை என்று முன்பு கருதிய விலைக்கு இருப்புகளிலிருந்து விற்றும், இருப்புகளுடன் இணைப்பதற்கு வாங்கியும் செயல் புரிகிறார்கள்.

பத்திரங்களுக்கான அங்காடி மேற்கூறிய ஊக வாணிப நிலைக்குப் பொருத்தமான ஒரு எடுத்துக் காட்டு என்று கீன்சு வலியுறுத்துகிறார். இவ்வங்காடி உள்ளடக்கிய 'பண்டம்' நெடும்பயன் பண்டமாகும். அப் பண்டத்தின் இப்போதைய இருப்பு, முதலீடு, சேமிப்பு ஆகியவைகளின் புது ஓட்டங்களைவிட ஓரளவு மிகுந்து காணப்படுகிறது. அதாவது பத்திரங்களின் புது அளிப்புகள், தேவைகள் ஆகியவை, இதற்கான அங்காடி, நிறைவுப் போட்டி அங்காடியை ஒத்ததாகும். இவ்வங்காடியில் பத்திரங்களுக்கு ஒரு நிரந்தரமான அளவுள்ள விலை உள்ளது; அதில் ஒவ்வொருவரும் தங்களிடம் உள்ள பண வசதிகளைக் கொண்டு அங்காடியில் உள்ள விலையை மாற்ற முற்படாமல், எவ்வளவு வேண்டுமானாலும் வாங்கலாம். வட்டி வீதம் பொதுவாக ஒரு நிலையில் உள்ளது என்பதை மக்கள் உணர்வார்கள். ஆயினும், கடந்த காலத்தில் அது குறுகிய ஓரளவிற்கு ஏற்றத் தாழ்வை உருவாக்கியது என்பதையும் உணர்வார்கள். ஆனால், இவ்வேற்றத்தாழ்வுகள் நீண்ட காலங்களுக்குப் பயனற்ற அல்லது சிறப்பியலமைப்பு அற்ற போக்கைக் கொண்டவை என்பதும் தெரிந்ததே. எனவே, இயல்பான விலை என்ற கருத்தை உருவாக்க இயற்கையாக முற்படுகிறார்கள். அதோடு மட்டுமல்லாமல் அந்த இயல்பான விலை ஏற்றத்தாழ்வு

களைத் தவிர்க்கத் தக்க நடத்தை உடையது என்பதையும் இயற்கையாக உருவாக்குகிறார்கள்.

ஊக வாணிபத்தின் இந்தச் செய்கையை, வங்கிகள் அல்லாத மற்ற நிறுவனங்கள் வழங்கும் கடன்களை விளக்க கீன்சு (keynes) பயன்படுத்தினார். விக்செல் (Wicksell) விளக்கிய வங்கிகள் அளிக்கும் கடன்பணிகளை நன்கு அறியத் தேவைப்படும் தொடர்ச்சியான ஆராய்ச்சியைக் கீன்சின் இந்த விளக்கம் தந்து உதவுகிறது. வங்கிகள் தமது இருப்புகளில் உள்ள பத்திரங்களை, வட்டி விகிதம் குறைய முற்படுகையில் ஏன் விற்கின்றன? அதுபோல், வட்டிவீதம் உயர முற்படுகையில் அவை ஏன் வாங்குகின்றன? (இதனால் ஒவ்வொரு நிலையிலும், வட்டிவீதக் குறைப்பு அல்லது உயர்வு வரையறுக்கப்படுகிறது) ஏனெனில், வங்கிகளும் முதலுக்கு ஏற்படும் இழப்பைத் தவிர்க்கவும், முதலுக்கு ஆதாயத்தைத் தேடுவதிலும் முனைந்து நிற்கின்றன. அவைகள்கூட இயல்பான வட்டி வீதம் என்ற கருத்தை உருவாக்கியதோடு அல்லாமல், அக் கருத்துகளுக்கு ஏற்ற முறையில் அறிவாற்றலுடன் செயல்புரிகின்றன. எனவே, விக்செல் அவர்களின் கோட்பாட்டை உள்ளடக்கக்கூடிய அளவிற்குக் கீன்சு (Keynes) அவர்களின் கோட்பாடு விரிந்து கிடக்கிறது. (ஆயினும் இதற்கான குறிப்பை அவர் ஓர் இடத்திலும் சொல்லவில்லை)[1]

## ஊக வாணிபத்தை ஏற்றுக் கொண்ட பண அளிப்பும் தேவையும்

## (The Supply and & Demand for Money recognising speculation)

சொத்து உள்ளவர்கள், பதுக்குதல் அல்லது பதுக்குதல் இன்மை ஆகியவைகளுக்கான கோட்பாட்டை மேல்கண்ட பத்திகளில் குறிப்பிட்டோம். வட்டி வீதங்கள் இயல்பாக உள்ள நிலை என்று கருதப்பட்ட நிலைக்குக்கீழ் அமைந்திருந்தால் (அதாவது பத்திரங்களின் விலை அவைகளின் இயல்பான விலைக்கு மேல்

[1] வங்கிகளின் செயல் பண ஆக்கம் அல்லது பண அழிவு ஆகியவைகளை உள்ளடக்கியது. ஆனால், வங்கிகள் அல்லாத நிறுவனங்கள் பணம் வழங்குவோரின் செயல் செய்கை (activeness) செய்கையின்மை (inactiveness) ஆகியவைகளை உள்ளடக்கியது. இந்த அளவிற்கு அவ்விரு நிறுவனங்களின் செய்கைகளில் வேறுபாடு உள்ளன. ஆயினும், இவ் வேறுபாடு குறிப்பிடத் தக்க வகையில் அமையவில்லை. வங்கிகளின் இருப்புகளையும், வங்கிகளின் நோட்டு என்ற பணத்தைப் 'பணமாக'க் கருதுவதற்குமுன், அவைகள் அளவு மாற்றங்களை, பணம் சுற்றும் வேகத்தின் மாற்றங்கள் என்று குறிப்பிட்டார்களேயன்றி, அவைகளைப் பண அளவின் மாற்றங்கள் எனக்குறிப்பிடவில்லை. (அதாவது ஒதுக்கப்பட்ட பணம் உதாரணமாகத் தங்கம் எனக் கருதவில்லை.)

இருந்தால்) தங்களிடம் உள்ள பத்திர இருப்புகளிலிருந்து மக்கள் அவைகளை விற்க முற்படுவர்; இதனால் பயனில்லா ரொக்கத்தைக் குவிப்பார்கள்; அவர்கள் ரொக்கத்தைப் பதுக்குவார்கள்; பத்திரங்களின் விலை அவைகளின் இயல்பான விலைக்குக் குறைந்த விலையில் இருந்தால், தங்களிடம் உள்ள பயனில்லா ரொக்கத்தைக் கொண்டு, பத்திரங்களை வாங்க முற்படுவார்கள்; அவர்கள் ரொக்கத்தைப் பதுக்கலின்மை செய்வார்கள். இவ்வதிகாரத்தின் பின் இணைப்பில், குறிப்பாகப் பதுக்குதல், பதுக்குதல் இன்மை ஆகியவைகளுக்கான நடத்தைகளை அடிப்படையாகக் கொண்ட வட்டிக் கோட்பாட்டின் வாய்பாட்டை வழங்கியுள்ளோம். அதாவது 'கடன் நிதிகள்' (loanable) என்பதை அடிப்படையாகக் கொண்ட வாய்பாட்டை வழங்கியுள்ளோம். வட்டிக் கோட்பாட்டை, கீன்சு வழங்கிய முறையில் இவ்வதிகாரத்தின் அமைப்பில் வழங்கியுள்ளோம். அதாவது கடன் நிதிகளின் அளிப்பையும் தேவையையும் அடிப்படையாகக் கொண்ட கோட்பாட்டை வழங்கியுள்ளோம்

பத்திரங்களின் 'இயல்பான விலை' என்ற கருத்திற்கு வழக்கில் உள்ள பொருளை நாம் முதலில் எடுகோளாகக் கொண்டுள்ளோம். அதாவது பத்திரங்களின் விலைகள் கொடுக்கப் பட்டவை என்ற எடுகோளைக் கொண்டுள்ளோம். இத்தகைய 'இயல்பான' வட்டி வீதக் கருத்துகள் மக்கள் தன்மைகளின் சிறப்பியல்புகளாலும், அல்லது சமூக அமைப்பினாலும் நிர்ணயிக்கப் படுவதில்லை (ஆயினும் இயல்பான வீதங்கள் என்ற கருத்துக்குப் பலதரப்பட்ட மக்கள் அளிக்கும் பொருள் பொருந்துதல் அல்லது வேறுபடுதல், மேற்கூறிய நிலையான காரணிகளால் பாதிக்கப் படுகின்றன). இயல்பான வீதம் என்ற கருத்திற்கான குறிப்பிட்ட சில பொருள்கள் ஒரு குறிப்பிட்ட காலத்தில், நிகழ்கால, இறந்தகால அனுபவங்களைப் பிரதிபலிக்கின்றன. இது தகவல், ஆராய்ச்சி போன்றவைகளைக் கொண்டு எதிர்காலநிலை இறந்தகால நிலையைவிட வேறுபாடுடையது என்பதை உணரப் பயன்படுகிறது.

நடப்பு அங்காடி வீதத்தின் மாற்றம், எதிர்கால வீதங்கள் எவ்வாறு அமையும் என்ற கருத்தின் பொருளை மாற்றியமைக்க மக்களைச் சில வேளைகளில் தூண்டும். கீன்சின் கருத்து உண்மையாக இருக்க வேண்டுமானால், நிகழ்கால வட்டி வீதங்களின் மாற்றங்கள் எதிர்காலத்தில் எதிர்பார்க்கப்படும். வட்டிவீத மாற்றத்திற்குச் சமமாக அமையாது என்ற எடுகோளைக் கையாள வேண்டும்; இந்த எடுகோள் மிகவும் சிறந்ததொரு எடுகோளாக அமைந்துள்ளது. அவ்வாறு ஒரு வேளை சமமாக அமைந்தால்,

இயல்பான வீதம் என்ற கருத்திற்கு ஒரு பொருளுமில்லை; இதனால் ஊக வாணிபத்திற்கான பணத்தேவை ஏற்படாது.

இயல்பான வீதத்திற்கான ஒவ்வொரு சொத்து உரிமையாளர்களின் கருத்துகள் கொடுக்கப்பட்டிருந்தாலும், அவர்களிடம் உள்ள வளங்களின் அளவுகள் கொடுக்கப்பட்டிருந்தாலும், ஒவ்வொரு நடப்பு வீத மட்டத்தில் விரும்பிக் குவிக்கப்படும் ரொக்க இருப்புகளின் அளவையையும், பத்திரங்களின் இருப்புகளின் அளவையையும் கொண்ட ஒரு அட்டவணையை அமைப்பதாக நாம் கருதலாம். இப்போதைய 'உயர்ந்த' வட்டி வீதங்களில் ரொக்கத்திற்கான விருப்பம் குறைவு பட்டுக் காணலாம். அதுபோல் பத்திரங்களைக் குவிக்கும் விருப்பம் உயரலாம். அதாவது பத்திரங்கள் மலிவானவைகளாகக் காணப்படுகின்றன; இதனால் பயனை அளிக்கும் அதே நேரத்தில் விலைகள் கூடும் சொத்தை அடைய அல்லது குவிக்க ஒவ்வொருவரும் விரும்புவர். பத்திரங்களின் விலை மற்றவர்களின் விருப்பப்படி மிகவும் குறைந்த நிலையில் உள்ளது என்றும், அது மீண்டும் விழும் தன்மையுடையது என்றும் அதனால் அதன் பயன் அழிக்கப்பட்டுவிடும் என்றும் கருதும் ஒரு சிலரே ரொக்கத்தைக் குவிக்க விரும்புவார்கள். மற்றொரு புறத்தில், வட்டி வீதங்கள் மிகவும் 'குறைந்த' நிலையில் இருந்தால், அவைகளின் விலைகள் மீண்டும் விழும் தன்மை உடையன எனக் கருதி ரொக்கத்தைக் குவிக்க முற்படுவார். ஒவ்வொரு இடைநிலை வீதங்களிலும், பத்திரங்கள், ரொக்கம் ஆகியவைகளின் ஓரளவு குவியலை நாம் காண முடியும்.[1]

ஒவ்வொரு சொத்து உரிமையாளரும், தங்கள் சொத்தை விரும்பிய சொத்தாக (preferred asset) அமைக்க விரும்புவார்கள் என்பது இதுவரை கண்ட கருத்தியலான ஆராய்ச்சி வெளிப்படுத்

1 எதிர்காலப் பத்திர விலைகளுக்கான ஒருமுக மதிப்பிட்ட எதிர்பார்ப்பை ஒவ்வொரு சொத்து உடையவரும் கருதுகின்றார் என்ற எடுகோளை அமைத்துக் கொள்வோம். அதாவது அவரது எதிர்பார்ப்புச் சரியாக அமைந்து விட்டால், தங்களிடம் உள்ள வளத்தை ஒரே வரிசையாக அதாவது ரொக்கமாக அல்லது பத்திரங்களாக (bonds) வைக்க விரும்புவார். அதற்குப் பதிலாக ஒவ்வொருவரும் எதிர்கால வீதங்களின் வீச்சைப் (rang) பற்றிய கருத்தை உடையவர் என்ற எடுகோளை அமைப்போம். இந்த வீச்சில் காணப்படும் ஒவ்வொரு வட்டிவீதமும், ஒவ்வொரு உறுதிப்பாட்டை உடையது என்று கொண்டால் அவர்களது சொத்து எல்லாம பத்திரங்களின் குவியல் அல்லது ரொக்கக் குவியலாக மட்டும் காணாமல், பத்திரங்கள் ரொக்கம் இவைகளின் கலவையைக் காண்போம். அவைகளின் விகிதம், எதிர்பார்த்த வீதங்களின் பங்கீடு உடன் நடப்பு அங்காடி வீதம் எந்நிலையில் உள்ளது என்பதையும், அங்காடி வட்டிவீதம் எப்படியுள்ளது என்பதையும் ஒட்டி அமையும். இக்கோட்பாட்டை உறுதியின்மை (uncertainity) என்பதை அடிப்படையாகக் கொண்டு மறுவாய்பாடு செய்தல் சிறந்தது. ஆயினும், ஒருமுக மதிப்புடைய எதிர்பார்ப்பை அடிப்படையாகக் கொண்ட கோட்பாட்டின் வாய்பாடு எளிதானது (பகுப்பாய்வின் இந்த நிலையில்) அது குறிப்பிடத்தக்க வேறுபாட்டை விளைவிக்காது.

தியது. இதனை ஒவ்வொரு வட்டி வீதத்தில் காணப்படும் 'பத்திரங்களுக்கான தேவை' (demand for bonds) அல்லது 'ரொக்கத்திற்கான தேவை' (demand for cash) அல்லது 'விரும்பிய சொத்து விகிதம்' (preferred asset ratio) (அல்லது வேறு பல வழிகளில்) என்ற அட்டவணையில் சுருக்கலாம். இந்தத் தகவல் அமைப்பை வேறு பல வழிகளில் சுருக்கி அமைக்கலாம். ஆனால், கீன்சு என்பவர் 'ரொகத்திற்கான தேவை' (demand for cash) என்ற வகையைப் பயன்படுத்தினார். இவ் வட்டவணைக்கான வளைகோடு விளக்கப்படம் கீழ்க்காணும் படம் 9-3ல் அமைந்தவாறு காணப்படும்.




படம் 9.3.

இப் படத்தில் காணப்படும் வளைகோடு மேல் நோக்கிச் செல்லும் உட்குழியான (concave upward) அமைப்பைப் பெற்றுள்ளது. இயல்பான வீதம் என்ற கருத்தின் பங்கீடு, நடப்பு வீத மட்டத்தில் குவிக்கப்பட்டுள்ளது என்ற எடுகோளை இவ் வளைகோடு உள்ளடக்கியது. ஆனால், இந்த வீச்சின் இரு பக்கங்களில் காணப்படும் வீதங்களுக்கான கருத்துகளை ஒருசிலர் கொண்டுள்ளார்கள் என்பது நினைவிருக்கலாம்.[1]

சொத்து உரிமையாளர்களின் இயல்பான வீத கருத்துகள் ஒரே தன்மையனவாக இருந்தால், இந்த வளைகோடு மிகவும் தட்டையாக (flat) அமையும்; வட்டி வீதங்களின் எதிர்காலப் போக்குக்கான அவர்களது எதிர்பார்ப்புகள் வேறுபட்டு அமைந்தால், இந்த வளைகோடு செங்குத்தாக (steeper) அமையும்.

[1] கோட்பாட்டளவில் இந்த எடுகோள் வளைகோட்டை 'S' என்ற எழுத்தின் வடிவத்தைப் பெற்றதாக்க வேண்டும். வலக் கைப் பக்கத்திற்கு வெகு தூரத்தில் உள்ள நிலையில் இது கீழ்நோக்கிய உட்குழித் தன்மையைப் (concave downward) பெற்றிருக்க வேண்டும். அல்லது செங்குத்தாகவும் அமையலாம். இவைகளை அடிப்படையாகக் கொண்ட வளைகோட்டின் பகுதி நமது கருத்துடன் தொடர்புடையதாக அமையாது.




படம் 9.4.

குத் தேவையான பணத்தேவை என்பது மாறாதுஉள்ளது. இத னுடன் ஊக வாணிபத்திற்கான பணத்தேவையும் கூடியுள்ளது. புழக்கத்தில் உள்ள மொத்தப் பண அளிப்பு (M) கொடுக்கப்பட்டிருந் தால், ஒரே ஒரு வட்டி வீதம் ($r_0$) என்பதுதான் இருக்க முடியும். இந்த வட்டி வீதத்தில் மொத்த அளிப்பும், மொத்தத் தேவையும் சமமாக அமைகிறது.

படத்தின் B பகுதியில் பேரங்களுக்குத் தேவையான பணத்தை ($M_t$) என்பதைப் பணத்தின் மொத்த அளிப்பிலிருந்து (M) கழித் துள்ளோம். இதில் $r_0$ என்ற வட்டி வீதம், பயனில்லா இருப்பு களின் தேவையையும் ($M_t$) பயனில்லா இருப்புகளின் அளிப்பையும் ($M-M_t$) சமப்படுத்துகிறது.

இறுதியாகப் படத்தின் C பகுதியில் ஊக வாணிபத்திற்குத் தேவையான பணத்தை, ($M_s$) பணத்தின் மொத்த அளிப்பிலி ருந்து (M) கழித்துள்ளோம். இதனால் ($M-M_s$) என்ற வளைகோடு பேரங்களுக்கான இருப்புகளின் அளிப்பைக் குறிக்கிறது. $r_0$ என்ற ஒரே ஒரு வட்டி வீதத்தில் பேரங்களுக்குத் தேவைப்படும் பண அளிப்பும், அதற்கான பணத் தேவையும் ($M_s$) சமமாக அமை கிறது. இவை ஒரே அமைப்புள்ள விவரங்களை மூன்று வழிகளால் வெளிப்படுத்துகின்றன என்பது தெளிவு. இவைகளில் எதைப் பயன்படுத்துவது என்பது, விளக்கப்போகும் பிரச்சினையைப் பொறுத்துள்ளது.

இப்பொழுது பேரங்களுக்கான பணத் தேவையை மாறாதது என்று வைத்துக் கொண்டு, பண அளிப்பு (M) மாற்றங்களின் விளைவுகளைக் கவனிப்போம். இந்தச் சூழ்நிலையில், சமநிலையை

ஏற்படுத்த வட்டி வீதம் மாறவேண்டும் என்பதை நாம் காண்கிறோம். உதாரணமாகப் பண அளிப்பு (M') ஆகக் குறைந்து காணப்படுகிறது என்று வைத்துக் கொள்வோம். இதனுல் சமநிலை வட்டி வீதம்—பேரங்களுக்கான பணத் தேவை கொடுக்கப்பட்டிருந்தால்—$r_1$ என்ற மட்டத்திற்கு உயரும்.

தமது பொதுக் கோட்பாட்டின் சில இடங்களில் பண அளிப்பு மாற்றங்கள், பேரங்களுக்கான பணத் தேவையை நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ பாதிப்பதில்லை என்பதை எடுகோளாகக் கீன்சு அமைத்துக் கொள்வதுபோல் தோன்றும். அவ்வாருனுல், அவரது பகுப்பாய்வு நாம் சுருக்கி அமைத்த கருத்துகளுடன் நின்று விடுகிறது. இதனுல் வட்டி வீதம் என்பது 'முழுமையாகப் பணத் தொடர்புடைய நிகழ்ச்சியாகும்' (purely monetory phenomenon) என்ற கருத்தைச் சிலர் மேற்கொள்கிருர்கள் க் கருத்தில் வட்டி வீதம் பண அளிப்பின் அளவையும் எதிர்கால வட்டி வீதங்களுக்கான எதிர்பார்ப்புகளையும் ஒட்டியுள்ளது எனப் பொருள்படும். ஆனுல், உண்மையில் கீன்சின் முழுப் பகுப்பாய்வை இரக்கத்துடன் ஆராய்ந்தால், அவர் இந்தக் கருத்திற்கு விருப்பம் தெரிவித்தார் என்று சொல்வதற்கில்லை. நாமும் பேரங்களுக்கான பணத்தேவை ($M_1$) கொடுக்கப்பட்டிருக்கிறது என்ற எடுகோளைத் தளர்த்த வேண்டும். பணத் தேவைக்கான வட்டி—நெகிழ்ச்சித் திறனை முதற்கண் ஆராய்வோம்.

## பணத் தேவைக்கான வட்டி—நெகிழ்ச்சியுடைய மற்ருெரு மூலம்

(Another Source of an Interest–Elastic Demand for Money)

ஊக வாணிபத்தைப் பணத் தேவைக்கான வட்டி-நெகிழ்ச்சியுடைய மூலம் எதுவுமில்லை என்பதைச் சில பொருளாதார மேதைகள் தள்ளி விடுகிருர்கள். நம்மைப் (மூலநூல் ஆசிரியரைப்) பொறுத்தவரை இது தவறுன கருத்து. பயனில்லா இருப்புகளுக்கான தேவை வட்டி வீதத்துடன் எதிர் உணர்வு செய்வதற்கான காரணங்கள் பலவற்றை இதற்குப் பதிலீடு செய்கிருர்கள். ஒவ்வொரு சொத்து உரிமையாளரும் வட்டி வீதம் அதன் இயல்பான நிலையிலிருந்து மாருது என்று எதிர் பார்க்கிருர்கள் என வைத்துக் கொள்வோம். (அல்லது அது மாறும் என்பதற்கான எவ்வித எதிர்பார்ப்பும் செய்வதில்லை என்றும், அல்லது மேல் நோக்கிய திசைக்கு மாறும் என்றும், இதனுல் வட்டித் தொகையைத் தவிர்ப்பதில் யாதொரு நட்டமுமில்லை என்றும் வைத்துக் கொள்வோம்.)

இருப்பினும், பத்திரங்களை வைத்திருப்பதைவிடப் பயனில்லா இருப்புகளை வைத்திருப்பது பயனை அளிக்கும். ஏனெனில், சில சமயங்களில் பத்திரங்களை வைத்திருப்பது பற்றாத விளைவை அளிக்கும். அவ்விளைவு பத்திரங்களை வைப்பதற்கான தொல்லைகளையும், மற்றச் செலவுகளையும் (அதாவது தரகர் செலவு போன்ற) செலவுகளை ஈடு செய்வதில்லை. எதிர் காலப் பங்குத் தொகைகளை (dividends) வழங்கவும் அல்லது வரிகளைச் செலுத்தவும் ஒரு தொழில் நிறுவனம் நிதியைக் குவிக்க வேண்டிய நிலையில் உள்ளது என்று வைத்துக் கொள்வோம். நிதிகளுக்கான விளைவு குறைவுபட்டுக் காண்பதாலும், அல்லது நிதிகளைக் குவிக்கும் கால அளவு குறைந்து இருப்பதாலும், அந் நிதிகள் மொத்தம் மிகக் குறைந்து காண்பதாலும், பத்திரங்களை வாங்கும் அடக்கவிலை மிகுந்து காணப்படுகிறது. அதோடுமட்டுமல்லாமல் மிகக்குறுகிய காலத்தில் அவற்றை மீண்டும் விற்க வேண்டியதாகிறது. பத்திரங்களின் விலை உயர்ந்து காணப்பட்டால் இந்தச் செலவையும், சிரமத்தையும் (inconvenience) மிகைச் சமப்படுத்த (over balance) அந் நிறுவனத்தால் முடியும். (உண்மைச் சரக்குகள் அல்லாத உருவத்தில் நுகர்வோரது, அல்லது தொழில் நிறுவனங்களின் மொத்தச் சொத்து இருப்புகள், தனித்தனி சொத்து உரிமையாளர்களின் மிகப்பெரிய அல்லது மிகச்சிறிய சொத்து சேர்க்கைகளைக் கொண்டு அமைந்துள்ளது என்பதை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். அதுபோல் பொறுப்புகளைக் கழிக்கத் தேவைப்படும் எதிர்காலத்திலிருந்து மிகத்தொலைவில் அவை அமைந்துள்ளன என்பதையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். நிதிகளுக்கான செலவுகள், சிரமம் ஆகியவை அந் நிதிகளின் அளவையும், அல்லது அவை முதலீடு செய்யப்படும் கால அளவைச்சாராமல் இருக்கின்றன இந்நிலையில் வட்டிவீதம் உயர்ந்தால், இந்நிதிகளை வட்டி வழங்கும் தன்மையுடைய உருவத்தில் மாற்றியமைக்க, அவைகளின் உரிமையாளர்களுக்கு அதிக ஊதியம் வழங்க வேண்டி வரும். ஆனால், அவைகளுக்கான விளைவு குறைவுபட்டுக் காணுமிடத்து, குறைந்த அளவு நிதிகளை முதலீடு செய்தால் போதும்; இதனால் விரும்பும் ரொக்க இருப்புகளின் அளவு உயரும். சில அறிவுடைய மாந்தர் பயனில்லா ரொக்கத்தை வைப்பதற்கான காரணங்களில் இதுவும் ஒன்று. இத்தகைய ரொக்கங்களின் மொத்தத் தொகை வட்டி வீதத்துடன் எதிர் விகிதத் தொடர்புடையது.

இதற்கான இரண்டாவது காரணமும் உண்டு. இது கீன்சின் கருத்துடன் நெருங்கிய தொடர்புடையது. தனிப்பட்ட சொத்து உரிமையாளர்கள், வட்டிவீதம் ஏதேனும் ஒரு திசையில் மாறும்

என்று கொள்ளாமல், ஆனால், அது மாறும் என்று மட்டும் எதிர் பார்க்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். இதனால் பயனில்லை. இருப்புகளை அவர்கள் வைத்திருப்பதால், வட்டிவீதம் எவ்வகையில் மாறினாலும் அவர்களுக்கு ஆதாயமோ அல்லது இழப்போ நேரிடாது. ஆனால், பத்திரங்களை வைத்திருந்தால் அவர்கள் ஆதாயத்தையோ அல்லது இழப்பையோ எதிர்பார்க்கலாம். ஏனெனில், அவர்கள் ஆபத்தை (risk) மேற்கொள்கிறார்கள். ஆபத்தை மக்கள் பெரும்பாலும் வெறுக்கிறார்கள். ஒரு டாலர் பணம் 'உறுதியாகக்' (for sure) கிடைப்பதை விரும்புவர். ஆனால், 100க்கு 55 சதவீதம் $·50 அல்லது $ 1·50 வருமானம் எதிர்பார்க்காத வகையில் கிடைப்பதை வெறுக்கிறார்கள். இந்த ஆபத்தான மாற்றுப் பயனுடைய கணக்கியல் மதிப்பும், உறுதியாகக் கிடைக்கும் பயனுடைய மதிப்பும் ஒன்றுதான். ஆயினும், பின்கூறிய வகையை மக்கள் அதிகமாக விரும்புவார்கள்.

ஆயினும், மாறும் விலைகளுடைய பத்திரங்களை வைத்திருப்பது ஆபத்தை மட்டும் உள்ளடக்காமல், விளைவையும் உள்ளடக்கியதாகும். விளைவுகள் அதிகமாகக் கிடைக்கும் என்று மக்கள் கருதினால், அத்தகைய விளைவுகள் அபத்தை மேற்கொள்ள ஊக்கமளிக்கிறது. அதேபோல் தமது சொத்தின் பெரும்பகுதியை ரொக்கமாக வைத்திருப்பதைவிட ஆபத்தான வழிகளில் செலவிட முற்படுபவர்களுக்கும் இது ஊக்கமளிக்கிறது. சொத்தாக வைத்திருக்கப் பயன்படும் ரொக்கத்தின் தேவை—அதாவது பயனில்லாச் சொத்தின் தேவை—வட்டி வீதத்துடன் எதிர்விகிதத் தொடர்புடையது என்பது மீண்டும் தெளிவாகிறது.

இவ்விரண்டு காரணங்களையும் அல்லது இவைகளில் ஏதேனும் ஒன்றை வட்டி நெகிழ்வுடைய பணத்தேவையை, கீன்சின் ஊக வாணிபத் தேவைக்குப் பதிலீடு செய்யலாம். இதனால் பின்வரும் பகுப்பாய்வு அமைப்பளவில் ஒருவித மாறுதலையும் அடையாது.

ஆனால், ஊக வாணிபத் தன்மையை விலக்கியது சில பயன்களை விளைவிக்கிறது. நீர்மை விருப்ப அட்டவணை ஒரு நிலையுள்ள அட்டவணை என்பதை முதற்கண் படமாக்கிக் கொள்ள வேண்டும். அது காலப்போக்கில் மிகவும் குறைவாக மாறும் தன்மையுள்ளது என்பதையும் உணர்தல் வேண்டும். ஏனெனில், அதன் சரிவு இந்தக் கருத்தில் பொருளாதார அமைப்பின் ஓரளவு நிலையுள்ள இயல்புகளை மட்டும் தழுவி அமைகிறது (உதாரணமாகத் தனி மனிதர்களின் சொத்து இருப்புகளின் அளவைப் பங்கீடு, பத்திரங்களை வாங்கவும் விற்கவும் செலவிடும் தொகை ஆகியவைகளைச் சார்ந்து

உள்ளது) அல்லது சில அடிப்படைப் போக்குகளைத் தழுவி அமைகிறது (உதாரணமாக ஆபத்தை வெறுக்கும் அளவு போன்றது.)

கீன்சின் ஊகவாணிபத் தேவைக்கு, இத்தகைய நிலையுள்ள (stable) அட்டவணை தேவையில்லை. வட்டிவீத அமைப்புப் பொதுவாக 8 முதல் 15 சதவீத வீச்சில் அமைந்தால், அட்டவணை மட்டமும் இதையே பிரதிபலிக்கிறது ; ஆனால், அது 15 முதல் 5 சதவீத வீச்சில் அமைந்தால் அட்டவணையின் மட்டம் மிகவும் குறைவுபட்டுக் காணப்படும். இதனால் வட்டிவீத எதிர்கால மாற்று வீச்சுகளுக்கான தனித்தனி சொத்து உடையோர்களது எதிர்பார்ப்புகள் வேறுபட்டவைகளாக அமையும். ஆனால், அட்டவணையின் நெகிழ்ச்சித்திறன் ஏறக்குறைய ஒரே தன்மையதாய் அமையும். கடந்தகால மாற்றங்கள் 8 முதல் 15 சதவீத வீச்சில் அமைந்தால் குறுங்காலத்திலும் வட்டிவீத மாற்றங்களின் வீச்சு இந்த வரையறைக்குள் அமைந்தாக வேண்டும். ஏனெனில், ஊகவாணிகர்களின் கூட்டு எதிர்பார்ப்புகள், அட்டவணையை இந்த வீச்சுக்குள் அமைக்கிறது. இந்த நிலையில் அட்டவணை 8 சதவீத அளவில் முடிவிலியான நெகிழ்ச்சியை உடையதாகக் கொண்டு அமைந்து விடும் ஆனால், மேற்குறிப்பிட்ட மற்றொரு நிலையில் அது 1·5 சதவீத மட்டத்தில் மட்டும் மிக நெகிழ்வுடையதாக அமையும்.

ஊக வாணிபத்தின் சிறப்புத்தன்மை, முந்தைய வட்டி வீதங்களின் வீச்சை அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பது கீன்சின் கருத்தல்ல. குறிப்பிட்ட ஒரு காலத்தில் சொத்து உடைமையாளர்கள் எதிர்காலத்தில் வட்டி வீதங்களின் எதிர்பார்ப்புகளுக்கான கருத்துகளை ஓரளவிற்கு முன்னமே அமைத்துக் கொள்வார்கள் என்பது கீன்சின் கருத்தாகும். இந்த எதிர்பார்ப்புகள், செவ்வியல் பொருளாதார மேதைகள் கருதியவாறு செயல்படுத்துவதைத் தடுக்கின்றன. அதாவது பண்டங்களுக்கான மொத்தத் தேவையை நிலையாக இருக்கச் செய்யும் அளவுகள் முதற்கண் தன்னிச்சையாகச் சரிக்கட்டுவதில்லை. சேமிப்பு, முதலீடு ஆகியவைச் சமப்படுத்துவதற்காக, வட்டி வீதங்கள் தன்னிச்சையாகவும், கட்டுப்பாடில்லாமலும் மாறினால், சேமிப்பு முதலீடு ஆகியவைகளின் அட்டவணைகளின் இடப்பெயர்ச்சிகள், வட்டி வீதத்தை மாற்றும், அல்லது, கொடுக்கப்பட்ட ஓரளவு வெளிப்பாட்டை முதலீடு, நுகர்வு இவைகளுக்குச் சரிசமமாகப் பங்கிடும் விளைவுகளைத் தவிர மற்ற எந்த விளைவையும் வெளிப்படுத்த மாட்டா. ஆனால், வட்டிவீதச் சரிக்கட்டுகள், ஊக வாணிபத்தால் வரையறுக்கப்பட்டால், சேமிப்பு, முதலீடு ஆகியவைகளின் இடப்பெயர்ச்சிகள் பண்டங்களின் மொத்தத் தேவையைத் தாக்கும். இதனால், கூலிகளும்

விலைகளும் இணக்கமானவைகளானல், பணவீக்கம் அல்லது பணச் சுருக்கநிலை ஏற்படும். அப்படியில்லாமல், விலைகளும் கூலிகளும் விறைப்பானவைகளானல், வெளிப்பாடு, வேலை ஆகியவைகளை உயர்த்தும் அல்லது குறைக்கும்.

## கிளாசிக்கல் மாதிரியுடன் ஊக வாணிபத்திற்கான பணத்தேவையை உடன் சேர்த்தல் :

## (Speculative Demand for Money added to the Classical Model)

சமன்பாடு ஏதேனும் ஒன்றில் அமைந்துள்ள மாறி ஒன்றை உள்ளடக்குதல் பொருத்தமானது என்று முன்பு குறித்தோம். ஆனல், உள்ளடக்கப்பட்ட மாறியின் மதிப்பு, கொடுக்கப்பட்ட தொடர்பை விளக்கப் பயன்படுத்துகையில் மட்டும், இது சிறப்புடையது ஆகிறது. 'மற்றவை மாருதிருப்ப (Ceteris paribus) பண அளவை அதிகமானல், வட்டிவீதம் குறையும்' எனக் கூறலாம். ஆனல், நமது பகுப்பாய்வுப் பணிச்சட்டத்தில் வெளிப்பாடும் விலைகளும் கொடுக்கப்பட்டவை என்று கொண்டால் இக் கூற்று உண்மையாகும் கீன்சின் சொந்தக் கூற்றிலும் அல்லது, நாம் இங்கு விளக்கும் கிளாசிக்கல் மாதிரியின் மாற்றியமைக்கப்பட்ட கூற்றிலும், M, r ஆகியவை மாறும்போது P, y ஆகியவை கொடுக்கப்பட்டுள்ளன என்ற எடுகோளை அமைக்க முடியாது. எனவே, Py என்பதைச் சார்ந்த பேரங்களுக்கான தேவை கொடுக்கப்பட்டுள்ளது என்பதைத் தாற்காலிகமாக மட்டும் எடுகோளாக அமைக்கலாம். அவைகள் கட்டுப்பாடில்லாமல் மாறுகையில் என்ன நேரிடுகிறது என்பதை ஆராய்வோம்.

r, Py ஆகியவைகளின் பல கலவைகள் பண அளிப்பையும், தேவையையும் சமப்படுத்துவதற்குப் பெரிதும் பயன்பட்டன என்பதை மேலே குறிப்பிட்டோம். ஆனல், பணவியல் பகுப்பாய்வைக் கிளாசிக்கல் மாதிரியின் சில பகுதிகளுக்குக் கூட்டி அமைக்கையில் சமநிலையில், Py, r ஆகியவைகளின் கலவைகளில் ஒன்று மட்டும் பயனுள்ளதாகிறது y-ன் மட்டம், வேலை நிறைவு மட்டத்திற்குச் சமமாக உள்ள மட்டத்தைவிடக் குறைந்து அமையாது அவ்வாறு அமைந்தால், பணக்கூலிகளும், விலைமட்டங்களும் விழும் தன்மையனவாகின்றன ஓர் அமைப்பின் முழுமைச் சமநிலைக்குப் பணக் கூலிகளும், விலைகளும் மாறுவதற்கான போக்கை வெளிக்காட்டக் கூடாது என்பது மிகவும் அவசியமாதலால், முழுச்சமநிலை என்பது, வேலை நிறைவு நிலையாக அமைகிறது. எனவே, வேலை நிறைவுக்கும், N, y, ஆகியவைகளின் சமநிலை மட்டங்களுக்கும், ஒத்ததொரு நிலையில் w/p என்ற உண்மைக்

கூலி மட்டத்தின் சமநிலை அமையும். ஆனால், P, w, ஆகியவைகளின் அமைப்பு மட்டங்களை எவை நிர்ணயிக்கின்றன? கிளாசிக்கல் மாதிரியில் P என்பதன் மட்டத்தைப் பண அளிப்பு நிர்ணயித்தது. ஆயினும் இப்பொழுது, பேரங்களுக்கான பணத்தேவை என்பது மொத்தத் தேவையின் ஒரு பகுதியாகும்; எனவே, 'P' என்பதை நிர்ணயிப்பதற்கு முன்பு 'r' என்பதை நிர்ணயிக்க வேண்டும்; (அல்லது 'r' 'p' ஆகிய இரண்டையும் உடனுக்குடன் நிர்ணயிக்க வேண்டும்) இதற்கான விடையை மற்றொரு தொடர்பு வழங்குகிறது. சேமிப்பு, முதலீடுகளின் அட்டவணைகள் கொடுக்கப்பட்டிருந்தால், உண்மையாக விரும்பிய சேமிப்பையும் முதலீட்டையும் சமப்படுத்துவதற்கு ஒரே ஒரு வட்டி வீதத்தின்—'r'-ன் மட்டம் உள்ளது. 'r'-ன் மற்ற எந்த மட்டத்திலும், சேமிப்பாளர்கள், அல்லது முதலீட்டாளர்கள் அல்லது இருபாலாரும் திகைப்படைவார்கள். இதனால் 'r' ன் சமநிலை மட்டத்தை நாம் அறிய முடிவதோடு அல்லாமல், ஊக வாணிப இருப்புகளின் அளவையும் நிர்ணயிக்க முடிகிறது என்ற பொருளையும் அளிக்கிறது — அதாவது r என்ற சமநிலை மட்டத்திற்குச் சொத்து உரிமையாளர்கள் தங்களது ரொக்க அளவைப், பயனில்லா இருப்புகளாக வைக்க விரும்புவார்கள். இதை மொத்தப்பண அளவிலிருந்து அதாவது Mலிருந்து கழித்து விட்டால், மிஞ்சியுள்ளது பேரங்களுக்கான இருப்புகளின் அளவாகும். $M_1$, y ஆகியவைகளின் சமநிலை தெரிந்தால், பின்னர் P-ன் மதிப்பை நிர்ணயிக்கலாம். w என்பதில் உள்ள பகுதியை, மேல் உள்ள வாக்கியத்தின் இறுதியில் உள்ள P உடன் சேர்த்துக் கொண்டால், வேலை அளிப்போர், வேலை தேடுபவர்களுக்கு ஏற்ற அளவு வேலையை, வழங்க முற்படுவார்.

மாறிகள் எல்லாவற்றின் சமநிலை மட்டங்களைக் காணவேண்டுமென்று கருதினாலும், அல்லது சமநிலை மட்டங்களை உடனுக்குடனாக உள்ள சமன்பாடுகளுக்கு விடை காணப் பயன்படுத்தக் கருதினாலும் இச் சமன்பாடுகளைக் கீழ்க்காணும் அமைப்பைக் கொண்ட ஒரு மாதிரியாகப் (model) பொருத்தலாம்.

(1) $y = y(N)$

(2) $\frac{dy}{dN} = \frac{w}{P}$

(3) $N = N\left(\frac{w}{P}\right)$

(4a) $M = lPy + L(r)$

(5) $s = s(r)$

(6) $i = i(r)$

(7) $s = i$

இவைகளில் எல்லாக் குறிகளும் முன்பு விளக்கிய பொருளையே இங்கும் பெற்றுள்ளன. இங்கு M என்பது தன்னிச்சையாக இயங்குவது; l என்பதைப் பொருளாதார அமைப்பு நிர்ணயிக்கிறது.

மூல நூலின் 157ம் பக்கத்தில் காணப்படும் கிளாசிக்கல் சமன்பாடுகள் அமைப்பிற்கும், மேற்காணும் அமைப்பிற்கும் ஒரு வேறுபாடு உள்ளது. மேல் காணும் சமன்பாடு 4aவின் வலக் கைப் புறத்தில் காணும் பணத்திற்கான தேவை என்பது, பேரங்களுக்கான பணத் தேவையை (LPY) மட்டும் குறிக்காமல், ஊக வாணிபத்திற்கான பணத் தேவையையும் குறிக்கிறது. இந்த ஊக வாணிபத் தேவையை [L = (r)] என்ற சார்புத் தொடர்பு கொண்டு நிர்ணயித்தோம்.

முன்புபோல் இப்பொழுதும் சமன்பாடுகள் (1) (2), (3) ஆகியவைகளுக்கு உடனுக்குடன் விடை காண முடியும். இதனால் y, N, w/P ஆகியவைகளின் சம நிலைகளை எளிதில் காண முடியும். சமன்பாடுகள் (5) (6), (7) ஆகியவைகளின் உடனுக்குடனான விடைகளால் சமநிலை வட்டி வீதத்தை 'r' என்பதை உணர முடியும். தன்னிச்சையாகக் கொடுக்கப்பட்டுள்ள M என்பதை முதல் அமைப்புச் சமன்பாடுகளில் உள்ள yன் மட்டத்தை; இறுதிச் சமன்பாட்டு அமைப்பில் உள்ள rன் மட்டத்தைச் சமன்பாடு (4a)வில் புகுத்தினால், P என்பதற்கான சமநிலை விடையைக் காண முடியும். பின் P, w/P ஆகியவைகளின் மதிப்புத் தெரிந்திருப்பதால், w என்பதன் மதிப்பை எளிதில் காணலாம்.

சமன்பாடு அமைப்பில் உள்ள எல்லா மாறிகளுக்கும் வியக்கத்தக்க சமநிலை மதிப்பு உண்டு என்பதை உணர்தால் மட்டும் போதாது. இம் மாறிகளின் சமநிலை மதிப்புகள், முழுமைத் தொகுதி அளவுகள் மாறுவதால், எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்று உணர்தல் இதைவிடச் சாலச் சிறந்தது. உதாரணமாக, உற்பத்திச் சார்புத் தொடர்பின் இடப் பெயர்ச்சி, அல்லது பண அளவை மாற்றம் ஆகியவைகள், சமன்பாடுகளை எவ்வகையில் பாதிக்கின்றன என்பதை உணர்தல் வேண்டும். மேல்காணும் சமன்பாடுகள் ஒவ்வொன்றுக்கும் குறிப்பிட்ட எண்கள் அடங்கிய முழுமைத் தொகுதி அளவைகளை (parameters) வழங்கியும், சமன்

பாடுகளில் காணும் மாறிகளின் குறிப்பிட்ட எண்ணும் முழுமைத் தொகுதிகளுக்கான மதிப்பைக் கண்டு பிடித்தும் பின்னர் முழுமைத் தொகுதி அளவைகளை மாற்றியும், இதனைச் செயற்படுத்தலாம். பொதுவாக (derivatives) இவைகளின் குறியை வெளிப்படுத்தியும் (differential calculus) பயன்படுத்தியும் விடை காணலாம். அதற்குப் பதிலாக வரிகோடு விளக்கப் படங்களைப் பயன்படுத்தியுள்ளோம். இதனால் இந்தப் பிரச்சினையின் ஒவ்வொரு விளக்கத்தையும் எளிதில் உணரலாம். இதற்காக விளக்கப் படம்




படம் 9.5.

9-5சை அமைத்துள்ளோம். இப்படத்தில் ஆறும் அதிகாரத்தில் கண்ட விளக்கப் படக் கருவிகளை மாற்றி அமைத்தும், விரிவடையவும் செய்துள்ளோம்.

படங்களின் B, C, E, F ஆகிய பகுதிகள் ஆறும் அதிகாரத்தில் பயன்படுத்திய விளக்கப் படங்களின் சிலபகுதிகளாகும். படத்தின் E பகுதி பேரங்களுக்கான பணத் தேவை என்பதைக் குறிக்கிறது. பேரங்களுக்கான பணத் தேவை என்பது மொத்தப் பணத் தேவையின் ஒரு பகுதி என்பது இப்பொழுது ஏற்றுக்கொள்ளப்படுகிறது. படத்தின் A பகுதி சேமிப்பு—முதலீடு விளக்கப் படம்; படத்தின் D பகுதி இவ்வதிகாரத்தின் இரண்டாம் பத்தியில் கண்டுள்ள பணி அளிப்புத் தேவைப் பகுப்பாய்வின் ஓர் அமைப்பின் விளக்கப் படமாகும்.

விளக்கப் படத்தின் B, C ஆகிய பகுதிகளிலிருந்து முன்பு போல் உண்மைக் கூலி, வேலை, வெளிப்பாடு ஆகியவைகளின் சமநிலையைக் கண்டு கொள்ளலாம். படத்தின் A பகுதி $r_0$ என்ற வட்டி வீதத்திற்குத் தேவையான சேமிப்பு முதலீடு ஆகியவைகளின் சமநிலையைக் குறிக்கிறது. ஊக வாணிபத்தின் பணத் தேவை கொடுக்கப்பட்டிருந்தால், இந்த வட்டி வீதத்தில் $Ms_0$ என்ற தொகையை ஊக வாணிப இருப்புகளாக வைப்பார்கள் எனப் பொருள்படும் பண அளிப்பு $M_0$ கொடுக்கப்பட்டிருந்தால் இந்த வைப்புகள் பேரங்களுக்கான தேவையை ஒட்டி அமையும் என்பதைப் படத்தின் D பகுதி விளக்குகிறது. இது (படத்தின் E பகுதியல் உள்ள) $(Py_0)$ என்பதன் Py என்ற அளவுடன் ஒத்து அமைகிறது: $y_0$ என்பது கொடுக்கப்பட்டிருந்தால் (படத்தின் B பகுதியில் காண்பதுபோல்) சமநிலை விலை மட்டம் $P_0$ ஆக அமையும் என்பது பொருள். இதனைப் படத்தின் F பகுதி விளக்குகிறது. இந்தச் சமநிலை விலை மட்டத்தைப் பெறப் படத்தின் C பகுதியில் காணும் $\left(\frac{W}{P}\right)_0$ என்றதுடன் ஒத்த $W_0$ என்ற கூலி மட்டம் தேவை.

முழுமைத் தொகுதி அளவை ஏதேனும் இடம் பெயர்ந்தால் அதனால் ஏற்படும் விளைவை ஒப்பீட்டுநிலையியல் (comparative statics) முறைப்படி விளக்க இந்தக் கருவி பயன்படுகிறது. உதாரணமாக மக்களிடையே சிக்கனம் பெருகுகிறது என்று வைத்துக் கொள்வோம். படம் 9–6ல் கனமான கோடுகள் தொடக்கச் சமநிலையை உணர்த்துகின்றன. இடைவெளிவிட்ட கோடுகள் புதுச் சமநிலையை




படம் 9 6.

உணர்த்துகின்றன. இந்த நேர்க் கோடுகள் சேமிப்பு அட்டவணை sல் இருந்து s' என்ற இடத்திற்கு இடம் பெயர்ந்ததால் புதுச் சமநிலை ஏற்பட்டது. (இதனைப் படத்தின் A பகுதியில் காணலாம்.) ஆனால், ஒப்பீட்டு நிலையியல் முறையைக் கையாண்டால், இதன் விளைவு வேறுபட்டுக் காண்கிறது. அதாவது பண அளவை மாறாமலிருந்தும் வட்டி வீதம் குறைவதோடு அல்லாமல், (கிளாசிக்கல் மாதிரிகளின் விளக்கத்திற்கு இது மட்டும் தேவைப்பட்டது) விலையும் குறைவு பட்டுக் காண்கின்றது. மேலும் கூலி மட்டமும்

குறைவு பட்டுக் காண்கின்றது. இதற்கான காரணத்தைக் கூற லாம். குறைந்த சமநிலை வட்டி வீதம், அதாவது $r_1$ என்பது ஊக வாணிப இருப்புகளின் அதிகப்பட்ட தேவையுடன் தொடர்பு கொண்டுள்ளது. இந்த நிலை குறைந்த விலை மட்டம் ஒன்றுல்தான் பண அளவை மாருதிருக்கும் வரை நிலைநாட்ட முடியும்.

மாணவர்கள் அனைவரும் இவ் விளக்கப் படங்களை நன்கு ஆராய்ந்த பின்னர், இவைகளில் அடங்கியுள்ள கருத்துகளைச் சொற்களால் நல்ல முறையில் விளக்க முயல வேண்டும். பின்னர் அவர் வேலை முழுமைத் தொகுதி அளவை மாற்றத்தினுல் ஏற்படும் விளைவையும் ஆராய வேண்டும். உதாரணமாக, பண அளவை அதிகமானுல், அல்லது முதலீடுகளின் இலாப வீதம் உயர்வதால் (அதாவது ii அட்டவணை மேல் நோக்கிச் செல்லுமானுல்) ஏற்படும் விளைவுகளை வெளிப்படுத்த வேண்டும். அட்டவணை 9-1 இந்த மாதிரியின் மூன்று நிலைகளுக்கான ஒப்பீட்டு நிலையியலின் கூற்று களைச் சுருக்கியுள்ளது. அட்டவணையில் aவில் இருந்து தொடங்கி c வரையுள்ளவற்றின் விளைவுகளை நன்கு உணர்ந்தபின், அட்ட வணையில் d முதல் g வரையுள்ள காலியிடங்களைப் பூர்த்தி செய்ய வேண்டும. இவ் விளைவுகளின் முக்கியத்துவத்திற்கான கூற்றுகளைப் பின்வரும் பத்தியில் வெளியிட்டுள்ளோம்.

**அட்டவணை 9-1**

**விரிந்து காணப்படும் கிளாசிக்கல் மாதிரியில் முழுமைத் தொகுதி அளவை பெயர்ச்சிகளின் விளைவுகள்**

(Effects of Parameter shifts in Expanded classical Model)

| முழுமைத் தொகுதி அளவைப் பெயர்ச்சி (Parameter shift) | சமநிலை மதிப்புகளின் மாற்றம் (Change in the equilibrium Values of) y | N | $\frac{W}{P}$ | $M_s$ | $M_t$ | P | W | s | i |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| (a) சேமிப்பு அட்டவணை வலப் புறம் இடப் பெயர்ச்சி | — | — | — ↓ | ↑ | ↓ | ↓ | ↓ | ↑ | ↑ |
| (b) பண அளவை உயர்தல் | — | — | — | — — | ↑ | ↑ | ↑ | — | — |
| (c) L அட்டவணையின் S வலப் புறப் இடப் பெயர்ச்சி (S of L Schedule shifts to right) | ↑ | ↑ | ↓ | — — | — | ↓ | ↓ | — | — |

(d) முதலீட்டின் அட்டவணை
வலப்புறம் இடப் பெயர்ச்சி.

(e) I உயர்கிறது—அதாவது
I அட்டவணை கீழ்நோக்கிச்
செல்கிறது.

(f) உற்பத்திச் சார்புத் தொடர்பு
(function) மேல்நோக்கி
இடம் பெயர்கிறது (அதா
வது உற்பத்தி மட்டம், உற்
பத்தி வளைகோட்டின் சரிவு
ஆகிய இரண்டும் உயர்ந்து
செல்கிறது)

(g) $M_s$ என்பதன் அட்டவணை
மேல்நோக்கிச் செல்கிறது.
(அதாவது ஒவ்வொரு வட்டி
வீதத்தில் r அதிகப்படி $M_s$
விரும்பப்படுகிறது.)

குறிப்பு:

இதில் y = வெளிப்பாட்டைக் குறிக்கிறது.
N = வேலையைக் குறிக்கிறது.
$\frac{W}{P}$ = உண்மைக் கூலி
r = வட்டி வீதம்
$M_s$ = ஊக வாணிபத்திற்கான பணத் தேவை
$M_t$ = பேரங்களுக்கான பணத் தேவை
P = விலைகள்
W = பணக்கூலி வீதம்
s = சேமிப்பு
i = முதலீடு

விளக்கப் படங்கள் ஒப்பீட்டு நிலையியல் விளைவுகளை நன்றாக அறியப் பயன்படுகின்றன;—அதாவது புதுச் சமநிலைக்குத் தேவையான மாறிகளின் மாற்றங்களை விளக்கப் பயன்படுகின்றன. ஆனால், இந்த விளைவுகள் எப்படி ஏற்படுகின்றன என்பதற்கான விளக்கமும் தேவைப்படுகிறது. விளக்கப் படம் 9-6ல் கண்டவாறு புதுச் சமநிலையை அடைய வட்டி வீதங்களும், விலைகளும் குறைந்து சென்

கின்றன என்பதை எப்படி உறுதியாகக் கூற முடியும்? இதற்கான விடையை மாதிரியின் இயக்கயியல் ஆராய்ச்சி அளிக்கிறது. மிகவும் விறைப்பான விளக்கத்தைக் கூறாமல், பலவகைப்பட்ட சமனறு நிலை நடத்தைகளை நம்மால் எடுத்துக் காட்ட முடியும்.

விளக்கப் படம் 9-6ல், வெளிப்பாடு, வட்டி வீதம், அல்லது விலை மட்டம் இவைகளில் எதுவும் உடனடியாக வீழாமல், தாற்காலிகமாக $y_0$, $P_0$, $i_0$, என்ற நிலைகளில் உள்ளன என்று வைத்துக் கொள்வோம். இதனால் அவைகளை விழவைக்கத்தக்க விசைகள் ஏற்படும் என்பதை உறுதியாகக் கூற முடியுமா? இதற்கான விடை பின்வருமாறு. பணத்தின் தேவை, அளிப்பு ஆகியவை இந்த நிலையிலும் சமமாக அமையும். ஏனெனில், தேவை (py அல்லது r) ஆகியவைகளைச் சார்ந்து நிற்பதால், அது மாறாது. ஆனால், சேமிப்பு ($S_x$) முதலீட்டைவிட அதிகமாகும். ($i_0$) இதனால் என்ன விளைவுகள் நேரிடும் என்பதற்கான ஒரு விளக்கம் [விக்செலின் (Wicksell) கருத்தை ஒட்டி] அமைவது பின்வருமாறு: நடப்பு வெளிப்பாட்டுக்கான நுகர்ச்சித் தேவை (சேமிப்பின் உயர்வு) விழுந்து முதலீட்டுக்கான தேவை உயராமலும் வெளிப்பாட்டின் அளிப்பு குறைந்து அமையாமலுமிருந்தால், விற்பனையாகாத பண்டங்களின் குவியல் உயரும். பண்டங்களின் தேவையைவிட உயர்ந்த அளவில் விற்பனைக்காகப் பண்டங்கள் அளிக்கப்படுவதால், அப் பண்டங்களின் விலை குறையத் தொடங்கும். எனவே, பணக் கூலிகள் மாறாமலிருந்தால், உண்மைக் கூலி உயர்ந்து காணும் என்ற பொருள் அமையும். இதனால் உழைப்பின் தேவை பற்றாக்குறை ஏற்படும். வேலையின்மையைத் தவிர்க்க வேண்டுமானால், கூலிகள் குறைக்கப்பட வேண்டும்; உடனே W/P உயர்வைத் தடுக்க முடியும். இதோடு வேலை வெளிப்பாடு ஆகியவைகளின் குறைப்புகளையும் தவிர்க்கலாம். ஆனால், கூலிகளின், விலைகளின் வீழ்ச்சி பேரங்களுக்கான பணத் தேவையைக் குறைவுபடுத்துகிறது. இதனால் தொடக்க நிலை வட்டி வீதத்தில் மக்கள் ஊக வாணிபத்திற்காக அதிகப்படி இருப்புகளை வைத்துக்கொள்ள விரும்புவார்கள். P, W, r என்பவை முறையே $P_1$, $W_1$, $r_1$ ஆகிய நிலைகளுக்கு விழாதவரை, எல்லாப்பண்டங்கள், உழைப்பு, அல்லது பணச்சந்தை ஆகியவைகளில் ஏதேனும் ஒன்று அல்லது எல்லாம் சமனறு நிலையில் அமையும். இந்த நிலைகள் ஒவ்வொன்றிலும், சமனறு நிலை, அதன் நிலையைத் தவிர்க்கத்தக்க இயக்கத்தைத் தக்க திசையில் இயங்கச் செய்யும்.

வேலை வழங்குபவர், பண்டங்களின் தேவை (நுகர்ச்சி+முதலீடு) விழும் வேகத்திற்கு ஏற்ற வேகத்தில் வெளிப்பாட்டைக்

குறைக்கவும் செய்வார்கள் என்ற எடுகோள் சற்று மாறுபட்ட விளைவுகளை ஈர்க்கும். உயர்ந்து காணப்படும் சேமிப்பு (நுகர்ச்சிப் பண்டங்களுக்கான தேவைக் குறைப்பு) வெளிப்பாட்டைக் குறைக்கத் தூண்டும். இதனால் உழைப்பாளிகள் வேலையில்லாமல் போவார்கள். உதாரணமாக r என்பது விழாமலிருந்தால், $(s_x - i_0)$ ஆகியவைகளின் வேறுபட்ட தொகையளவுக்கு ஏற்ற வாறு வெளிப்பாடு குறைக்கப்படும். இதனை விளக்கப் படம் 9–6 B பகுதியில் காண்க. வேலை அளவு $W_x$ என்ற மட்டத்திற்கு வீழ்வதால், வேலையின்மை உருவாகிறது. இதனால் பேரங்களுக்கான பணத் தேவையும் குறைகிறது. (P விழாமலிருந்தும், y விழுந்தது.) இதனால் உருவாகும் பயனில்லா இருப்புகள் மூலதன அங்காடிக்குத் திருப்பப்படுவதால், வட்டி வீதம் குறைகிறது. வேலையின்மைக் காரணத்தால், பணக் கூலிகள் குறைவது, அடக்க விலைகளை உடனடியாகக் குறைக்கும்; பின் அங்காடியில் காணும் போட்டி விலைகளைக் குறைக்க வேலை வழங்குவோரைத் தூண்டும். புதுச் சமநிலையில், வெளிப்பாடு, வேலை, உண்மைக் கூலி ஆகியவை அவைகளின் தொடக்க மதிப்புகளுக்கு மீண்டும் செல்லும்; ஆனால், பணக் கூலிகள், விலைகள், வட்டி வீதங்கள் இவையெல்லாம் குறைந்து காணப்படும்.

வேறு பல விளைவுகளையும் எண்ணலாம். பலவகைச் சரிக்கட்டுகளின் தராதர வேகத்திற்கான எடுகோள்களால்–விளைவால் இவை சற்று மாறுபட்டுக் காணப்படுகின்றன. எனவே, சமனுறு நிலை முறையிலும் அவை வேறுபாட்டைப் புகுத்துகின்றன. வேலை வழங்குபவர் தங்கள் வெளிப்பாட்டைக் குறைக்கப் பின்னிட்டால், அப் பண்டங்களின் விற்பனை விலைகள் அவைகளின் அடக்க விலையை விட வேகமாக விழத்தொடங்குகின்றன. இதனால் அவர்களுக்குக் கிடைக்கும் ஆதாயம் இழப்புகளாக மாறுகின்றன. தங்கள் வருமானத்தைவிட, விலைகள் வேகமாக விழுந்தால், நுகர்வோர் பயனைப் பெறுகிறார்கள். ஆனால், வெளிப்பாட்டை வேகமாக விழச் செய்தால், கூலிகள் பின்தங்கினாலும், இலாப வரையறைகள் காப்பாற்றப்படுகின்றன. ஆனால், உழைப்பாளிகள் தாற்காலிகமாக வேலையில்லாமல் போய்விடுவார்கள். ஆயினும், இயக்க இயல் பாதையை முறையாகவும் விறைப்பாகவும் ஆராய்ச்சி செய்யுமளவிற்கு நாம் இன்னும் பக்குவம் அடையவில்லை.

## ஊக வாணிகத்தின் சிறப்பு
## (The Significance of Speculation)

கிளாசிக்கல் மாதிரியில், கீன்சின் ஊக வாணிகத்திற்கான பணத்தேவை என்ற ஒரு கருத்தை மட்டும் சேர்க்கும்வரை,

கிளாசிக்கல் முடிவுகளை மாற்ற வேண்டிய அவசியமில்லை. பணக்கூலி களும், விலைகளும் இணக்கமானவைகள் என்று இருக்கும் வரை கீழ்க்காண்பவை சமநிலையில் உண்மையாக அமையும்.

(a) வேலை நிறைவு உறுதியாக்கப்படுகிறது.

(b) பண அளவையின் மாற்றங்கள், விலைகளையும் கூலிகளையும் ஒரே திசையிலும் ஒரே விகிதத்திலும் மாற்றியமைக்கும்.

(c) சேமிப்பு, முதலீடு ஆகியவைகளுக்கான அட்டவணைகள் பெயர்ந்தால்தான் வட்டிவீதம் மாறும்.

விலை, கூலி மட்டங்கள் ஆகியவைகளின் நிலையுள்ள தன்மை மட்டுமே மாறியுள்ளது. உண்மையான கிளாசிக்கல் மாதிரியில் பண அளவை மாறாமலிருந்தால் விலைகள் (கூலிகள்) ஆகியவை (a) உழைப்பின் அளிப்பு அல்லது ஆக்கத்திறன் ஆகியவைகள் மாறும்; (a) புழக்க வேக மாற்றங்களுக்கும்—அதாவது பேரங்களைச் செய்ய ரொக்கமாக வைக்க வேண்டிய பணவருமானத்தின் பின்னம் (fraction) மாறுவதால்— எதிர் உணர்வு செய்கின்றன. உழைப்பின் அளிப்பு மாற்றங்களும், சமூகத்தின் மொத்த உற்பத்தி சார்புத் தொடர்பின் மாற்றங்களும் மெதுவாகவும் முன்னறிவிக்கக் கூடிய அளவிலும் செயற்படும் என்று ஓரளவு எதிர்ப்பார்க்கலாம். அவைகளின் மாற்றங்கள் தீங்கை விளைவிக்கா. விலைகளை (அல்லது பணக் கூலிகளை) இத்தகைய பெயர்ச்சிகளுக்கிடையே நிலையுள்ளன வாகச் செய்ய விரும்பினால், பணக்கொள்கை (monetary policy) இந்தப் பணியைச் செவ்வனே செய்து முடிக்கும் பணப்புழக்க வேகத்தின் 'கொள்கைத் தீர்மானிகளின்' (objective determinants) மாற்றங்களும் இதே தன்மையனவாய் அமைந்தால், - அதாவது மென்மையும், தூய்மையும் உடையனவாய் அமைந்தால், பணக் கொள்கை சாதிக்க முடியாதது ஒன்றுமில்லை. பணத்தேவையின் ஒழுங்கற்ற மாற்றங்களைப் பிரதிபலிக்கும் புழக்க வேகத்தின் மாற்றங்கள் மட்டுமே எதிர்பாராத தீமைகளை விளைவிக்கும். இதைச் சிலர் வேறு வழியில் வாதிக்கிறார்கள் (a) மக்கள் ஒழுங்கான முறையில் நடப்பதால் மேற்கூறிய நிலை ஏற்படாது,—அதாவது பயனில்லா ரொக்கத்தை வைக்க எவரும் விரும்ப மாட்டார். (அவைகளை வைக்க விரும்பாததால், அவைகளைச் செலவிட மாட்டார்); அல்லது (b) பதுக்குதல் அல்லது பதுக்குதலின்மை நடைபெறுவதால் மேற்கூறிய நிலைமை ஏற்படாது. ஆனால், மேற்கூறிய மாற்றங்கள் நிலையின்மையால் ஏற்படுகின்றன; இவை களுக்குக் காரணம் வேறு ஒரு மூலத்தில் அமைந்துள்ளது. (உதாரணம் ஒழுங்கற்ற முறையில் இயங்கும் வங்கி அமைப்பு).

சேமிப்புத் திறமைகளின் மாற்றங்களை அல்லது முதலீடுகளுக்கான ஊக்குவிப்புகளின் மாற்றங்களைத் தக்கதொரு பணவியல் அமைப்பை எடுகோளாகக் கொண்ட உண்மையான கிளாசிக்கல் மாதிரியில் உள்ள வட்டி வீதம் மட்டும் நன்கு உணர்ந்துள்ளது என்பதை வலியுறுத்த வேண்டும்.

வங்கிகள் தொல்லை கொடுக்காதவரை பொருளாதார அமைப்பு நல்ல முறையில் பணிபுரியும் என உறுதியாகக் கூறலாம். ஆனால், அவை நல்ல முறையில் பணிபுரியாவிடில் விலை மட்டங்களின் நிலையின்மையாகிய மிகப் பெரிய தொல்லை உருவாகிறது. ஆனால், விலைகளின் நிலையின்மை பொதுவாக விரும்பத்தகாத ஒரு விளைவாகும் என்பதை எல்லோரும் உணர்வார்கள். அத்தகைய நிலையின்மைக் கீழ்நோக்கிச் செல்லும் தன்மையதாய் அமைந்தால், பணக் கூலிகள் ஒரே இடத்தில் ஒட்டும் தன்மையுடையவைகள் ஆதலால், வேலையின்மை ஏற்படலாம்.

ஊக வாணிகத்திற்கான பணத்தேவைக் குறிப்பிடத்தக்க எவ்வகை மாற்றத்தை விளைவிக்கும்? பின் வருவதை அது வெகு எளிதில் செயற்படுத்தும். பண அளவை நிலையுள்ளதாக ஆக்கப் பட்டாலும், முதலீடு, சேமிப்பு ஆகியவைகளின் திறன் மாற்றங்கள், விலை, கூலி ஆகியவைகளை மாறச் செய்யும். இது மிகவும் முக்கிய மானது. ஏனெனில், முதலீடு (இல்லையேல் சேமிப்பு) இவைகளுக் கான ஊக்குவிப்புகளின் நிலைபேறின்மை வெகுகாலமாக ஏற்றுக் கொள்ளப் பட்டது. முதலீடு குறிப்பாகத் தள்ளிப் போடக் கூடியது; வரப்போகும் பல வருடங்களுக்கான எதிர்காலத் தேவையின் நிலையில்லா மதிப்பைச் சார்ந்துள்ளது; அது மற்ற 'வெளிப்புற' (external) காரணிகளின் தொழில் நுட்ப மாற்றங் களால் (technological changes) பாதிக்கப்படுகிறது. சேமிப்பு-முதலீடு பிரச்சினைகளை வட்டிவீதம் நல்ல முறையில் தீர்க்க முடியாது என்பதால் இந்தப் பிரச்சினையைத் தீர்க்க, கூலி-விலை அமைப்பு, வேலையின்மையைத் தவிர்க்க பெரும் பங்கை வகித்தாக வேண்டும். கூலி—விலை மாற்றங்களின் தேவையைப் பணவாக்கக் கொள்கை ஓரளவு தவிர்க்கும் என்பது உறுதி; ஆனால், இதைச் செயல் படுத்த பணவாக்கக் கொள்கையால் முடியாது; ஏனெனில், சேமிப்பு-முதலீடு ஆகியவைகளின் போக்கை முன்னறிதல் கடினம் என்பதால், செயல்படுத்துவது பணவாக்கக் கொள்கைக்கு உற்பத்தி மாற்றங்கள் அல்லது புழக்க வேகத்தின் அமைப்புத் தீர்மானிகள் வழங்கும் பிரச்சினையைவிடப் பெரியதொரு பிரச்சினையைத் தருகிறது. எனவே, ஊக வாணிகத்திற்கான பணத்தேவை வட்டிவீத அமைப்பின் இழுக்குகளை வெளிப்படுத்து

வதால், ஒரு பொருளாதார அமைப்பு மற்ற வகைகளில், தன்னைத் தானே திருத்திக் கொள்ளும் பணியைக் குறைவுபடச் செய்கிறது.

## நீர்மை வலை
## (Liquidity Trap)

மேற்கூறியது மிகவும் ஒழுங்கற்றது அல்ல. ஊக வாணிகத்திற்கான பணத்தேவை, தன்னிச்சையாக இயங்கும் வேலை நிறைவை கூலிகளும்—விலைகளும் இணக்கமானவைகளாலும் பெரு என்பதைக் கீன்சு மேலும் குறிப்பிட்டார். இதற்கு 'நீர்மை வலை' (Liquidity trap) என்ற பெயரை எவரோ வழங்கினர். சில வேளைகளில், ஊக வாணிகத்திற்கான பணத்தேவையின் அட்டவணை முடிவிலியான நெகிழ்ச்சியை அதற்கு ஒத்த அளவு நெகிழ்ச்சி உடையது என்று கீன்சு வாதம் செய்தார். ஊக வாணிகத்திற்கான பணத் தேவை இரண்டு சதவீதத்தில் முடிவிலியான நெகிழ்ச்சித் திறனைப் பெற்றுள்ளது என்று வைத்துக் கொள்வோம். இரண்டு சதவீத விளைவைப் பிரதிபலிக்கும் மட்டத்திற்கு உயர்ந்த விலையில் பத்திரங்களின் விலை அமைந்தால், அவைகளைக் கொள்ளுதல் மிகவும் கடினமானது என்று ஒவ்வொரு சொத்து உரிமையாளரும் கருதுவார் என இது பொருள்படும். ஆகவே, இதைவிட உயர்ந்த விலை மட்டத்தில் (ரொக்கத்திற்குப் பதிலாக) பத்திரங்களைக் கொள்ள விரும்பமாட்டார். இந்த மட்டத்தில் சொத்து உடைமையாளர்களின் பெரும்பகுதி, ரொக்கத்தைக் கொள்வதா, பத்திரங்களைக் கொள்வதா என்பதன் இறுதிநிலையில் உள்ளது. ஆனால், இப்பொழுது உள்ள விலை மட்டத்திற்கு உயர்ந்த மட்டத்தில் அவர்கள் பத்திரங்களை வாங்க விரும்ப மாட்டார்கள்; ஆனால், விற்க முற்படுவார்கள். தற்போதைய முதலீட்டுக்கான சூழ்நிலை, 2 சதவீத விளைவில் முதலீடு செய்ய விரும்புவோரின் நிதிகளின் தேவை, அந்த விளைவு மட்டத்தில் வழங்கப்படும் சேமிப்பின் அளவைவிடக் குறைவுபட்டுக் காண்கிறது என மேலும் வைத்துக் கொள்வோம். இது, 2 சதவீத விளைவு, வேலை நிறைவிற்கு மிக உயர்ந்த ஒரு விளைவு மட்டமாக அமைந்துள்ளது எனப் பொருள்படும். மொத்தத் தேவையின் பற்றுக்குறை, வேலையின்மை, குறைந்து செல் கூலிகள், விலைகள் ஆகியவைகளை விளைவிக்கும் என்பது பொருள். இதனால் வட்டிவீதத்தைக் குறைத்து, வேலை நிறைவை மீண்டும் நிலைநிறுத்தப் பயன்படும் பேரங்களுக்கான இருப்புகள் செலவிடப்படுகின்றன. ஆனால், சொத்து உடைமையாளர்களின் வட்டி வீதங்களுக்கான எதிர்ப்பார்ப்புகள் இந்த விளைவையும் பெறமுடியாமல் செய்கின்றன. பணச் சுருக்கத்தையும் அல்லது பேரங்களுக்கான இருப்புகளைச் செலவிடுதலையும் எந்த

அளவிற்கு ஆளப்பட்டாலும், வட்டி வீதம் 2 சதவீதத்திற்குக் கீழ் அமையாது ; ஆனால், 2 சதவீதம் என்பது நிறை வேலைக்கு மிகவும் உயர்ந்த மட்டம் என்பதில் ஐயமில்லை. (அதே நேரத்தில் இந்த நிலையில் பணவாக்கக் கொள்கையும் கூடப் பயனற்றதாகி விடுகிறது). விளக்கப் படம் 9–7 இந்த நிலையை உணரப் பயன் படுகிறது.




படம் 9-7.

படத்தின் A,D ஆகிய பகுதிகளில் காணும் கனத்த கோடுடைய அட்டவணை முன்பு குறிப்பிட்ட நிலைகளையே இப்பொழுது குறிப்பிடுகிறது என எடுகோள் அமைத்துக் கொண்டால், நிறைவேலை என்பதைச் சுன்னம் (zero) என்ற உபகுறிப்புகள் பல மாறிகளுக்கு வழங்கும் மட்டத்தில் பெறலாம். இப்பொழுது இதற்குப் பதிலாக நீர்மை விருப்ப அட்டவணை படத்தின் D பகுதியில் காணும் இடைவெளியுடைய (broken lines) கோடுகளால் குறிக்கப்படுகிறது என்று வைத்துக் கொள்வோம். (A பகுதியில் காணும் இடைவெளியுடைய கோட்டைப் புறக்கணிக்கவும்). இதனால், நிறைவேலைக்கு $r_0$ என்ற வட்டி வீதம் தேவைப்படுகிறது. ஆனால், அந்த வட்டிவீதம், கூலி, விலைமட்டம் (எனவே பேரங்களுக்கான தேவை) சுன்னம் (zero) என்ற மதிப்பை நெருங்கினாலும், அந்த வட்டி வீதத்தை அடைய முடியாது. என்ன நடக்கும் என்பதை வெளிக்காட்டமுடியாது. ஆனால், நிறை வேலை சமநிலையை எய்த முடியாது என்பதை நாம் அறிவோம்.

மேலே விளக்கிய நிலை வழக்கிற்கு மிகவும் முரணாக அமைந்த நிலையின் விளக்கம். ஆனாலும், ஊக வாணிகத்திற்கான பணத் தேவைப் பிரச்சினையை நன்கு விளக்குகிறது. ஊக வாணிகத் தேவை அட்டவணை முடிவிலியான நெகிழ்வுத்திறனை அடையாதது என்றும்; ஆனால், அந்த மட்டத்திற்கு ஒத்த நெகிழ்வுத்திறனை மட்டும் பெற்றுள்ளது என்றும் வைத்துக் கொள்வோம். இந்தச் சூழ்நிலையில் நிறைவேலை என்பது கோட்பாட்டளவில் சாத்தியமாகும். ஆனால், இதை விலைச்சுருக்கத்தின் வாயிலாக அடையலாம். இது செயல்பெற விலைச்சுருக்கத்தைப் பேரங்களுக்கான இருப்புகளைச் செலவிடத் தூண்டவேண்டும். அவ்வாறு தூண்டினால், வட்டி வீதம் குறைந்து சென்று நிறைவேலையை மீண்டும் நிலை நிறுத்தும். இதனால், விலைகளை மீண்டும் சுருக்கத் தேவையில்லை. ஊகவாணிகத்தேவை மிகவும் நெகிழ்ச்சியுடையதானல், விலை—கூலி சரிக்கட்டுகளின் பொறுப்பு உயர்கிறது. நெகிழ்ச்சித்திறன் உயர்ந்து கொண்டே செல்கையில், எந்த அளவு விலைச்சுருக்கமும், போதிய அளவுச் சரிக்கட்டுகளை விளைவிக்க முடியாத ஒரு வழக்கத்திற்கு முரண்பட்ட நிலையை அடைகிறோம்.[1]

[1] 'பிகு விளைவு' (Pigou Effect) என்ற கருத்தை நாம் புறக்கணிக்கிறோம் என்பதை வாசகர்கள் நினைவுபடுத்திக்கொள்ளவேண்டும். 'பிகுவிளைவு' (Pigou Effect) என்பதை 12-ம் அதிகாரத்தில் விளக்கியுள்ளோம்.

## முன்னுக்குப்பின் முரணுடைய சேமிப்பும் முதலீடும்
### (An 'Inconsistency' of saving & Investment)

முன் பத்தியில் கண்ட நிலையை, வேறுபக்கத்தில் சற்று நீட்டிப் பார்ப்போம். ஊக வாணிகத்தேவை மிகுந்த நெகிழ்வுத்திறனைப் பெறவில்லை என்று வைத்துக் கொள்வோம்—போதுமான அளவு விலைச் சுருக்கம் செய்தும், அல்லது, வட்டி வீதத்தைச் சுன்னம் (zero) என்ற மட்டத்தை அடைய தேவைப்படும் அளவிற்கு M என்பதை உயர்த்தியும் இதனைச் செயல் படுத்தலாம். ஆயினும் விலைச்சுருக்கலாலும், அல்லது பணவாக்கக் கொள்கையின் கருவிகளைக் கொண்டும், வட்டி வீதத்தைச் சுன்னம் (zero) என்ற மட்டத்திற்குக் கொண்டுவர முடியாது என்பது தெளிவாகும். ஏனெனில், சுன்ன (zero) விளைவைத் தரும் ரொக்கத்திற்குப் பதிலாக எதிர்நிலை (negative) விளைவைத் தரும் பத்திரங்களை வைக்கத்தக்க திறனைப் பொது மக்கள் பெறும்படி செய்கிறது. எனவே, சுன்ன வட்டிவீத மட்டத்திற்குமேல் பணத்திற்கான தேவை நெகிழ்வுத்திறனைப் பெறுவிட்டாலும், சுன்ன மட்டத்தில், முடிவிலியான நெகிழ்வுத் திறனை அது உறுதியாகப் பெற்றுள்ளது. இதன் சிறப்பு யாது? சுன்ன வட்டிவீத மட்டத்திலும், சில சமயங்களில் சேமிப்பு முதலீட்டை மிஞ்சலாம் என்ற எளிய கருத்தை இது விளக்குகிறது. அதாவது சேமிப்பு, முதலீடு ஆகியவைகளின் அட்டவணைகள் இரண்டும், நெகிழ்வுத்திறனற்றவைகள் ஆனாலும், நேர்நிலை நாற்கூறில் (positive quadrant) ஒன்றை ஒன்று வெட்டாது என்பது பொருள். சுன்ன வட்டி மட்டத்திலும் சில சேமிப்பாளர்கள், முதலீடு செய்பவர்களுக்குத் தேவைப்படும் அளவிற்கும் உயர்ந்த அளவில் சேமிப்பார்கள். இந்த நிலையில், ஊக வாணிகத்திற்கான தேவை அதிகமானாலும் நிறைவேலை நிலையை எய்த முடியாது. சிக்கனம், உற்பத்தித்திறன் ஆகிய இவைகளுடன் முரண்பாடான, எதிர்கால வட்டிவீத எதிர்பார்ப்புகள் நிறைவேலை நிலையைத் தவிர்க்க முடியாது. (நேர்நிலை) வட்டிவீத மட்டத்தில் ஏற்படும் சேமிப்பு, முதலீடு இவைகளுக்கிடையே உள்ள முரண்பாட்டை நிறைவேலை குறிக்கிறது. இதற்கான விளக்கப்பட ஆராய்ச்சியை, விளக்கப்படம் 9-7-ல் காணலாம். இங்குப் படத்தின் A பகுதியில் முதலீட்டைக் குறிக்கும் கனத்த கோட்டிற்குப் பதிலாக இடைவெளி விட்ட கோட்டைப் பயன்படுத்தியுள்ளோம். அதே நேரத்தில் படத்தின் D பகுதியில் காணும் இடைவெளிவிட்ட அட்டவணையைப் புறக்கணித்துள்ளோம்.

வழக்கத்திற்கு மாறான நிலைகளுக்கான மேற்கூறிய விளக்கங்களை மீண்டும் ஒரு முறை விளக்கச் சிரமப்பட வேண்டியதில்லை;

மேற்கூறிய கருத்து, சேமிப்பு, முதலீடு ஆகியவைகளின் அட்டவணையின் தராதர வட்டி நெகிழ்வுத்திறனற்ற நிலையை வற்புறுத்துகிறது. இவை இரண்டும் நெகிழ்வுத் திறனற்றவைகளானல், பின் இவைகளில் ஏதேனும் ஒன்றின் சுமாரான (moderate) இடப்பெயர்ச்சிகள், s, i ஆகியவைகளைச் சமப்படுத்தக்கூடிய அளவிற்கு வட்டி வீத மாற்றங்களைத் தரும். (இந்த வட்டி வீதத்தை 'இயற்கை வீதம்' (natural rate) என்று விக்செல் (Wicksell) என்பவர் கூறினர்). சேமிப்பு, முதலீடு அட்டவணைகள் நெகிழ்ச்சியுடையவைகளானல் விளையும் பலனை விடப் பெரிய அளவு பலனைக் கூலி, விலையின் சரிக்கட்டுகளுக்கு வழங்குகிறது எனப் பொருள்படும். ஊக வாணிகம் கருதும் 'இயல்பான' (normal) வீதம் என்ற கருத்துக்கு ஏற்றவாறு, பெருமளவில் வட்டிவீத மாற்றங்கள் ஏற்பட வேண்டுமானல், பேரங்களுக்கான பணத் தேவையின் அளவுகள் பெருமளவிற்கு மாற வேண்டும். இம் மாற்றங்களுக்கு மிகப் பெரிய அளவு விலை மட்டத்தின் வீக்கம் அல்லது சுருக்கம் தேவைப்படுகிறது. எனவே, நிறைவேலை நிலைமையை நிலை நாட்டுவதற்கான வட்டி வீதக் குறைப்புகள், சில சந்தர்ப்பங்களில் முடியாமல் போகின்றன.

சேமிப்பு, முதலீடு ஆகியவைகள் உயர்ந்த அளவு நெகிழ்ச்சித் திறனற்றவைகள் என்ற கருத்துப் புலவழி அல்லது அநுபவ வழித் (empirical) தீர்ப்பாகும். சில சமயங்களில் அது தவருன தீர்ப்பாகவும் இருக்கலாம். ஆயினும் சேமிப்பு அட்டவணை நெகிழ்வுத் திறனுடையது என்ற கருத்திற்குப் பல ஆண்டுகளாக ஆதரவு இருந்தது. ஆனல், முதலீட்டுக்கான அத்தகைய ஆதரவு—மிகவும் குறுகியுள்ளதால் அதனை விளக்க முடியாது—எனவே, முதலீடு குறைந்த அல்லது உயர்ந்த வட்டி நெகிழ்ச்சியுடன் ஒன்றுபட்டு அமைந்துள்ளது எனச் சொல்வதற்கில்லை. முதலீடு அட்டவணை நெகிழ்வுத் திறனுடையது ஆயினும், முடிவிலியான நெகிழ்வுத் திறனைப் பெறவில்லை.—சுன்ன வட்டி மட்டத்திலும், முதலீடு முடிவிலியாக அமையாமல், வரையறுக்கப்பட்டதாய் அமைகிறது. எனவே, முதலீடு அட்டவணை சுன்ன வட்டி வீதத்தில் பெறும் சேமிப்பு மட்டத்திற்குக் குறைந்த மட்டத்தில் அமையும் என்பது குறிப்பாகக் கீன்சின் அநுபவ வழித் (empirical) தீர்ப்பாகும். முதலீடு அட்டவணை மிக உயர்ந்த நெகிழ்வுத் திறனைப் பெற்ற ஒரு அட்டவணை எனப் பொருளாதார ஆசிரியர்கள் பெரும்பாலோர் குறிப்பிடுவது, காரண காரிய முறைவழி (a Priori) வந்த வாதங்களை அடிப்படையாகக் கொண்டது; இவைகளில் சில வியக்கத்தக்க வாதங்களாகும். சேமிப்பு அல்லது முதலீடு அட்டவணைகள் மிகுந்த நெகிழ்வுத் திறனைப் பெற்றவை எனச் சிலர் கூறு

வார். இக் கூற்று அநுபவ வழித் தீர்ப்புகளைக் கொண்டு அமை கின்றன. எனவே, சில சமயங்களில் அவை தவறான கருத்துகளா கவும் அமையலாம் என்பது உறுதி.

## தானே இயங்கும் நிறைவேலை சாத்தியமா?
## (Automatic Full Employment?)

கிளாசிக்கல் துறையினர் கருதிய தன்னைத் தானே சரிக்கட்டும் நிறைவேலை அமைப்பின் சிக்கல்கள் சிலவற்றை இந்த அதிகாரத்தில் குறிப்பிட்டோம். அவை பின்வருமாறு:—

(1) முதலீடு, சேமிப்பு அட்டவணைகள் மிக உயர்ந்த நெகிழ்வுத் திறனற்றவைகளால் ஒருவேளை (சில சமயங்களில்) அமைந்து நேர் நிலை வெட்டுதலைப் பெறுமலிருக்கலாம். இது எவ்வாறாயினும், வட்டி வீதங்களின் மீது பெரும் பாரத்தை இது சுமத்துகிறது. இதனால் மொத்தத் தேவையின் பெருமளவு மாற்றங்களைத் தவிர்க்க வேண்டுமானால், வட்டி வீதம் பெருமளவிற்கு மாறுவது அவசியம்.

(2) எதிர்காலப் பத்திரங்களின் விலைகளைப் பற்றிச் சொத்து உரிமையாளர்கள் செய்யும் இயல்பான ஊகப் போக்கு என்பது, வட்டி வீதம் முதற்கண் மாறும் என எதிர் பார்ப்பதற்கில்லை எனப் பொருள்படும். மொத்தத் தேவையை நிலையுள்ளதாகச் செய்வதற்கு மிகச் சிறிய அளவு வட்டி வீத மாற்றங்களே தேவைப்படுகின்றன என மேலும் பொருள்படும். மேற்கூறிய குறிப்பு (1) மிகப் பெரிய அளவு மாற்றங்கள் தேவைப்படுகின்றன என்பதைக் கூறுகிறது.

(3) மொத்தத் தேவையை நிலைப்படுத்த வட்டி வீதங்கள் முதற்கண் தவறினால், பணவீக்கம் அல்லது பணச் சுருக்கம் ஏற்பட லாம். ஏனெனில், முதற்கண் ஏற்படாமலிருந்த வட்டிவீத மாற்றங் களைப் பேரங்களுக்கான பணத் தேவையின்வழி மாற்ற ஊக்கு விப்புகளை அளிக்கப் பணவீக்கம் அல்லது பணச்சுருக்கம் ஏற்படு கிறது. தேவைப்படும் வட்டிவீத மாற்றங்கள் மிகையாகக் காணப்பட்டால் (குறிப்பு 1ல் கண்டவாறு) அல்லது ஊகவாணிகத் தேவை மிகுந்த நெகிழ்வுத் திறனையுடையதானால், அதிகப்படி கூலி விலை மாற்றங்கள் தேவைப்படுகின்றன. சேமிப்பு முதலீடு அட்ட வணைகள் நேர்நிலை வெட்டுதலைப் பெறுமலிருப்பினும், அல்லது ஊகவாணிகத் தேவை அட்டவணை, மிக உயர்ந்த வீதத்தில் முடிவிலியான நெகிழ்வுத் திறனைப் பெற்றிருந்தால், பணச்சுருக்கம் நிறைவேலை நிலையை ஏற்படுத்தாது.

வழக்கத்திற்கு மாறான சில நிலைகளைக் கவனியாமல் இருப்பினும், கூலி—விலை இணக்கத்தன்மை (நிலை பேறின்மை), முன்னேறும் பொருளாதார அமைப்பு ஒன்றில் வருமானத்தையும் வெளிப்பாட்டையும் (நிறைவேலை மட்டத்தில்) நிலை பெறச் செய்யும் ஆற்றலைப் பெற்றுள்ளதா என ஐயுறுவதில் தவறில்லை. விலை-கூலி இணக்கத்தன்மை, நிறுவன சிறப்பியல்புகளைக் கொண்ட தொழில் மயமான முன்னேற்றப் பொருளாதார அமைப்புகளுக்கும் பொருந்தாத ஒரு வாதம் என்பதற்குத் தனிப்பட்ட வலியுறுத்தல் தேவையில்லை. மற்ற விவரங்களை விளக்காமல், தொழிலாளர் சங்கங்களையும் (Trade Union), குறைந்தபட்சக் கூலி விதிகளையும் (minimum wage laws) (தொழில் துறைப் பண்டங்களின் விலை விறைப்புத் தன்மைகளையும்) மட்டும் இங்குச் சிறப்பாகக் குறிப்பிடலாம். கூலிக் குறைப்புக்கு ஒழுங்கு அமைப்புள்ள நிறுவன எதிர்ப்புகளுடன் சமூக வெறுப்பையும் கூட்டிச் சொல்லலாம். வேலை வழங்குவோர், பொது மக்கள் ஆகியவர்கள் பொதுவாகக் கூலிக் குறைப்புகளை மன்னித்து விடுகிறார்கள். கூலிகளைக் குறைக்காததால், தாற்காலிகமாக வேலையின்மை ஏற்பட்டாலும் கூலிக் குறைப்புகளைப் பொதுவாக மன்னித்து விடுகிறார்கள். இதற்கான கோட்பாடு மயமான வாதம் வெகு எளிதில் ஒப்புக்கொள்ளப் படுவதில்லை.

பணக் கூலிக் குறைப்பு விலைக் குறைப்புகளைப் பின்பற்றி அமையும். அதனால் உண்மைக் கூலிக் குறையும். இதனால் கூலிக் குறைப்புகள் அறிவற்ற செய்கை எனப் புறக்கணிக்கலாம் என்ற வாதம் குறைவுபட்டுக் காணும். இதில் உள்ள குறை கூலிக்கான பேரங்கள் வேலை வழங்குபவர் ஒருவருக்கும் உழைப்பாளிகளின் பிரதிநிதி இவர்களிடையே மட்டும் செய்யப்படுவதில்லை. உண்மையில் கூலி பற்றிய பேச்சு வார்த்தைகள் பல ஆயிரக்கணக்கான உழைப்பாளிகள் வேலை வழங்குவோர்களுக்கிடையே ஏற்படுகின்றன. இவைகளில் ஒன்றுக்கொன்று தொடர்பற்றவைகளாக அமையலாம். உண்மைக்கூலி நிலைக்கு ஏற்றவாறு பணக் கூலிக் குறைப்புக்கான பேச்சு வார்த்தைகளை நடத்த, உழைப்பாளிகள் அடங்கிய குழாம் மிகப் பெரிதாக அமையவில்லை. பணக்கூலி உபசதவீதம் குறைந்தது என்றால், உண்மைக் கூலியும் 20 சதவீதமாகக் குறைந்தது எனப் பொருள்படும். ஏனெனில், விலைகளுக்கு ஏற்படவிருக்கும் மாற்றங்கள் எவ்வகையிலும் நிகழ்ந்தே தீரும். மற்றக் கூலிகளும் அல்லது விலைகளும் பொதுவாகக் குறையும் என்று எந்தக் குழுவும் உறுதியாகச் சொல்லாது. எனவே, கூலிக் குறைப்புகளை எதிர்ப்பது அல்லது கூலிக் குறைப்புகளைத் தாமதித்துச் செயல்படுத்துவது உழைப்பாளிகளின் கூட்டத்தைப் பொறுத்தவரை அறிவற்ற செயலாகும்.

தொழிலாளர் சங்கங்கள் இல்லாவிட்டாலும், கூலி ஒப்பந்தங்கள் இல்லா விட்டாலும், கூலித்தரக் கோல்களை அடிக்கடி மாற்றியமைக்க முடியாது. கூலி வீதங்களை ஓராண்டு காலத்திற்குச் சங்க ஒப்பந்தங்கள் நிர்ணயிக்கின்றன. எனவே, பணக் கூலி வீதங்களை எந்தத் திசையிலும்—மாற்றியமைக்கக் காலமாகிறது. கூலி ஒப்பந்தங்கள் பல தேதிகளில் காலாவதி ஆகின்றன. எனவே. ஒரு குறிப்பிட்ட காலத்தில் மாற்றியமைக்கவிருக்கும் ஒப்பந்தங்களை உடைய உழைப்பாளிகள், பிற உழைப்பாளிகளின் கூலிகள் குறைக்கப்படாத வரை தங்கள் கூலிகளைக் குறைத்து அமைக்க முற்பட்டார்.

இதனால், பலத்த தொழிலாளர் சங்கங்கள் இல்லையேல், கூலி இணக்கத்தன்மை இப்பொழுது இருப்பதைவிட உயர்ந்த அளவில் இருக்கும் என்று சொல்வதற்கில்லை. தேவையை நிலை பெறச் செய்ய அல்லது நிறைவேலையைப்பெற, கூலி இணக்கத்தன்மை ஒன்று மட்டும் சிறந்த வழி எனக் கருதினால், தொழிலாளர் சங்கங்கள் பொருளாதார வகையில், அல்லது அரசியல் வகையில் உறுதியுள்ளவைகளாகக் காணப்பட்டாலும், அவைகளின் செய்கைகளை வெறுப்பதில் தவறு ஏதுமில்லை. ஆனால், (1) சங்கங்கள் இல்லாமலே, கோட்பாடு கருதுமளவிற்குக் கூலிகள் இணக்கமானவைகளா (2) பொருளாதார நிலைபேற்றைப் பெற கூலி இணக்கத்தன்மை இன்றியமையாத ஒரு கருவியாகுமா (3) பொருளாதார நிலைபேற்றை அடைய அதைவிடச் சிறந்த கருவி உளதா என்பன போன்ற ஐயப்பாடுகள் சில பொருளாதார மேதைகளை அரிக்கின்றன.

கீழ்நோக்கிச் செல்லும் கூலிச் சரிக்கட்டுகளின் ஒட்டும்தன்மை அல்லது மெல்லப் போகும் தன்மைக்கு மற்றொரு விளக்கம் தேவை. கூலி—விலை மாற்றங்கள் மெல்ல ஊர்வதால், கீழ்நோக்கிச் செல்லும் கூலிச் சரிக்கட்டுகள் அவைகளின் வளங்களைவிட குறைந்தவைகளாகக் காணப்படுகின்றன வேலையின்மை ஏற்படும் என்ற பயமுறுத்தலுக்கு எதிர் உணர்வு செய்வதற்காகக் கூலிகளும் விலைகளும் இன்றைக்கு வீழ்ந்தால், அவைகளின் வீழ்ச்சி இனி வரப்போகும் வீழ்ச்சிகளின் அளவுக்கு அவை வீழ்ந்திருக்க முடியாது. தள்ளிப் போடத்தக்க ஒரு செலவை ஒரு நுகர்வோர் மனத்தில் நினைத்திருந்தால் (அதாவது நெடும்பயன் பண்டத்தை வாங்குதல், பொறித் தளவாடங்களில் செய்யும் முதலீடுகள் போன்றவை), மேலும் ஏற்படும் விலை மாற்றங்களுக்காகக் காத்திருந்து, அவைகளினால் பயனடைவார். இதனால் நுகர்ச்சி முதலீடு இவை குறைவதோடு மட்டுமல்லாமல், விலைச் சுருக்கத்திற்கான சூழ்நிலை உருவாகிறது. எனவே, மிகப் பெரிய அளவில் கூலி—விலை

இணக்கத்தன்மை நிலைபேற்றை நிலை நாட்டும் என இதுவரை கருதிய அளவிற்கு அது திறமையற்றதாகிறது.

கிளாசிக்கல் துறையின் நல்ல நம்பிக்கையில் மிஞ்சியுள்ளது எது? அது மிகச் சிறிது. எனவே, இப் பத்திக்கு என்ன முடிவு கூற லாம். தன்னியக்கமுள்ள நிறைவேலை இப்பொழுதுள்ள நிறுவனங் களினால்—இயலாதது. இப்பொழுதுள்ள நிறுவனங்களை நல்ல முறையில் சீர்திருத்தம் செய்து அமைத்தாலும் (வங்கிகளில் 100க்கு 100 ஒதுக்கீடுகளைப் பெற்றிருக்க வேண்டும். உழைப்பு, பண்டங்கள் ஆகியவைகளில் சர்வாதீனங்கள் இருக்ககூடாது என்பன போன்ற) நிறைவேலையை எதிர்பார்க்க முடியாது. ஆகவே, நிறைவேலைக்குக் குறைந்த வேலை நிலைக்கான கோட் பாட்டை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். இந்தக் கோட் பாட்டைக் கிளாசிக்கல் ஆசிரியர்கள் செப்பனிடவில்லை. இதன் வளர்ச்சியை இந் நூலில் மிஞ்சிய பகுதிகளில் காணலாம். அக் கோட்பாட்டின் வளர்ச்சிக்காக நாம் இதுவரை ஆண்டுவந்த பகுப்பாய்வுக் கருவிகள், கருத்துகள் ஆகியவைகளுடன் சில புதுக் கருத்துகளையும் கருவிகளையும் ஆண்டுள்ளோம். இந்தக் கோட் பாடு மிகவும் பொதுவானது என்ற காரணத்தாலும், மிகவும் உண்மைத்தன்மை பொருந்தியுள்ள காரணத்தாலும், இதனைப் பயன்படுத்துகையில், நாம் இதுவரையில் ஆண்டுவந்த கருவிகள் சிலவற்றைச் செப்பனிட வேண்டியிருக்கிறது. குறிப்பாக முதலீட்டு அட்டவணை என்ற கருவியைத் திருத்தியமைக்க வேண்டும். மேலும் கிளாசிக்கல் ஆசிரியர்கள் செய்ததைவிட ஓரளவு விறைப்பான வகையிலும், விரிந்த அளவிலும், இதற்கான இயக்க இயல் பகுப் பாய்வையும் விளக்கியுள்ளோம்.

## பணவாக்க நிர்வாகமும் வட்டி வீதமும்

## (Monetary Management and the Rate of Interest)

பணத்தின் அளிப்புக் கொடுக்கப்பட்டுள்ளது என்ற எடு கோளை நமது பகுப்பாய்வில் இதுவரை ஆண்டு வந்தோம். அந்தப் பணத்தின் இருப்புகள் ஒருமுக இடப் பெயர்ச்சியைக் கொண்டு அமைந்தன என்று ஆங்காங்கே குறித்து வந்தோம். அதாவது மாறுத அமைப்புள்ள பண அளிப்பிற்கு எதிர் உணர்வு செய்யும் வகையில் தனித்துறைப் பொருளாதார அமைப்பில் ஏற்படும் வட்டிவீத மாற்றங்களை மட்டும்நாம்இதுவரை கவனித்துவந்தோம். ஆயினும் எல்லா நவீனப் பொருளாதார அமைப்புகளிலும், மைய பாங்கு (central bank) அமைந்துள்ளது; அது பொருளாதார நிலை பேற்றை அடைவதற்கான குறிக்கோள்கள் அமைந்த பணவாக்கக்

கொள்கையை ஆண்டு வருகிறது என்பதை உணர வேண்டும். அத்தகைய பாங்குகள் நாளுக்கு நாள் நடைபெறும் பொருளாதார முன்னேற்றங்களைக் கவனித்து வருகின்றன. அவைகள் அறியாமல் சில இயக்கங்கள் நிகழுமேயானால், அவற்றைச் சரிக்கட்டவும் அல்லது அவற்றைப் பலப்படுத்தவும் தேவையான பண அளிப்பு மாற்றங்களைச் செய்கின்றன. உதாரணமாக வேலையின்மைத் தலை தூக்க ஆரம்பிக்கிறது என்று வைத்துக் கொள்வோம். இதைத் தடுக்கத் தேவையான பொருளாதாரச் செய்கைகளுக்காக அவை, காத்திருக்க மாட்டா. அதாவது குறைவுபட்ட பொருளாதாரச் செய்கைகள், பேரங்களுக்கான தேவையைக் குறைக்கத் தேவைப்படும் கூலி, விலை சுருக்கங்கள், சேமிப்பைக் குறைத்து முதலீட்டை அதிகப்படுத்தத் தேவையான வட்டிக் குறைப்பு போன்றவைகளுக்கு அவை காத்திருக்க மாட்டா. அதைவிட அங்காடி விசைகள் செயற்படுத்த முடியாத வகையில் வட்டி வீதம் உடனடியாகவும் விரைவாகவும் விழுவதற்கு ஏதுவான பண அளிப்பை உடனடியாக அது அதிகப்படுத்தும். அல்லது பணவீக்க நிலையை அடக்க வேண்டும் என்பது கொள்கையானல், பேரங்களுக்கான தேவைகளை அதிகப்படுத்துவது, வட்டி வீதத்தை உயர்த்துவது, ஆகியவைகளுடன் பண அளவை உடனடியாகக் குறைக்கத் தேவைப்படும் முறைகளைக் கையாளும்.

மைய பாங்குகள் செய்யும் தலையிடுதல்களை ஆராய நாம் முன்பு ஆண்ட கருவிகளையே இப்பவும் பயன்படுத்தலாம். இவ்வாறு செய்தால் நமது பகுப்பாய்வு முறையில் உள்ள சிறந்த சில பகுதிகளை நாம் புறக்கணிக்க நேரிடும். நாம் முன்பு பயன்படுத்திய கருவிகளைக் கொண்டு M என்பது உயர்ந்தால் (அல்லது குறைந்தால்) வட்டி வீதம் விழும் (அல்லது உயரும்) எனக் கூறினேம். அதாவது கொடுக்கப்பட்ட சொத்திற்கான பணத்தேவை அட்டவணையில் (asset—demand—for-money schedule) ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நகர்ந்தால் ஏற்படும் விளைவுகளைக் கூறினேம். மைய பாங்குகள் பண அளிப்பை உயர்த்துவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்கின்றன என்று வைத்துக்கொள்வோம். அதாவது வெளிச்சந்தையில் (open market) பத்திரங்களை மைய பாங்குகள் பெறுகின்றன என்று வைத்துக் கொள்வோம். இதனல் உற்பத்தி செய்த புதுப் பணத்தைப் 'புழக்கத்தில் புகுத்துவதால்', (into criculation) பத்திரங்களின் விலை உயர்கிறது. இதனல் பத்திர உடைமையாளர்கள் மைய பாங்குக்குத் தங்கள் பத்திரங்களை முன்பு இருந்த விலையைவிட உயர்ந்த விலைக்கு விற்கிறார்கள் என்பது பத்திரங்களை முன்பு பெற்றிருந்தவர்கள் ரொக்கத்தை விரும்புகிறார்கள் எனப் பொருள்படும்.

ஆனல், மைய பாங்குகள் வட்டி வீதக் குறைப்புக்குப் (அல்லது உயர்வுக்கு) பணவாக்கச் செய்கைகளை மேற்கொள்கின்றன என்று தெரிந்தால், ஒரே ஒரு வகைப்பட்ட பத்திரங்களை விற்கவோ (அல்லது வாங்கவோ) மைய பாங்குகள் முற்படத் தேவையில்லை. வட்டி வீதங்களைக் குறைக்க (அல்லது உயர்த்த) மைய பாங்குகள் முற்படுகின்றன என்பது 'நிதிமய சமூகத்திற்கு'த் (financial community) தெரிந்து விட்டால் நீர்மை விருப்ப அட்டவணை முழுதும் உறுதியாக இடம் பெயரும். அப் பெயர்ச்சி பாங்குகளுக்குச் சிறிதளவு சிரமத்தையும் கொடுக்காமல், விரும்பிய வட்டிவீத மாற்றங்களைச் செயற் படுத்துகிறது.




படம் 9-8.

படம் 9–8-ல் காணும் நிலையில் பொது மக்கள் வைத்திருக்கும் தொடக்க இருப்பை $M_0$ குறிப்பிடுகிறது $r_0$ வட்டி வீதத்தைக் குறிப்பிடுகிறது என்று வைத்துக் கொள்வோம். $r_0$ நிலையில் உள்ள சில சொத்து உடைமையாளர்கள், ரொக்க உடைமையாளர்கள். ஏனெனில், வட்டிவீதம் உயரக்கூடும் என்ற பீதி அவர்களை வாட்டுகிறது. மற்றவர்கள் பத்திரங்களைப்பெற விருப்பமுள்ளவர்கள். சொத்து உடைமையாளர்கள் எல்லாருடைய எதிர்பார்ப்புகள் மாறுமலிருப்பின், வட்டி வீதத்தை $r_1$ என்ற மட்டத்திற்குக் குறைப்பதற்காகப் பயனில்லாச் சொத்தின் இருப்புகள் $M_1$ என்ற நிலைக்கு உயர்ந்து செல்லும். இதனல் பத்திரங்களின் தற்போதைய விலை மட்டங்கள் அபாயமானவை; மேலும் அவை நீண்ட காலத்திற்கு நீடிக்க முடியாத அளவிற்கு உயர்ந்து உள்ளன என்று சொத்து உடைமையாளர்கள் கருதுவார்கள்.

ஆனால், மைய பாங்குகள் வட்டி வீதத்தை $r_1$ என்ற மட்டத்திற்குத் தள்ளத்தக்க திறமை உடையவை. மேலும் அதை நீண்ட காலத்திற்கு அந்த நிலையில் வைத்திருக்கத்தக்க ஆற்றலைப் பெற்றுள்ளன என்பதைச் சொத்துடைமையாளர்கள் எல்லோரும் உணர்ந்தால், நீர்மை விருப்ப அட்டவணை முழுமையாகக் கீழ் நோக்கிச் சென்று $M'_s$ என்ற நிலையை அடையும். இதனால் M என்பதை உயர்த்தாமல் வட்டிவீதம் $r_1$ என்ற நிலைக்கு விழும். பத்திரங்களை வாங்குதல், விற்றல் போன்றவைகளைவிட வேறுபட்ட பல வழிகளில் மைய பாங்குகளின் எண்ணங்கள் அங்காடிக்குத் தெரிவதால், $M_s$ என்ற வளைகோடு குறிப்பிடும் அட்டவணையில் காணப்படும். இத்தகைய பெயர்ச்சிகள் பணவாக்கக் கொள்கை வழி வெளிப்படுத்தப்பட்டன என எதிர் பார்க்கலாம். இத்தகைய பெயர்ச்சிகளை 'இறுகிய பணவாக்கக் கொள்கை'யிலிருந்து (tight money) 'தளர்த்திய கொள்கை' (moderate ease) அல்லது 'தளர்த்திய செயற்படு கொள்கைக்குப்' (active ease) பெயர்ந்து எனப் பல வழிகளில் கூறலாம். பயனில்லா இருப்புகளின் அட்டவணைப் படத்தில் விளக்கிய அளவிற்கு இடம் பெயராததற்குப் பல காரணங்கள் காட்டலாம். முதலாவதாக எந்த அளவிற்குச் செய்கையில் ஈடுபடும் என்பதைப் பாங்கு வெளிப்படுத்தாதது ஒரு காரணமாகும். (எப்பொழுது தன் கொள்கையை மாற்றும், எந்த அளவிற்குக் கொள்கையைப் பின்பற்றிச் செல்லும்; அல்லது கொள்கை எவ்வளவு காலத்திற்குத் தேவைப்படுகிறது என்பன போன்றவைகளை வங்கிகள் வெளிப்படுத்தமாட்டா. சில சமயங்களில் தன் குறிக்கோள்களை வேண்டும் என்றே வங்கிகள் மறைத்து வைக்கும்). இரண்டாவதாக, ஊக வாணிகர்கள் பணவாக்கக் கொள்கையின் எதிர்கால மாற்றங்களை ஏற்றுக் கொள்வதால், வங்கிகள் தமது கொள்கையைத் திருப்பி அமைக்க நேரிடுகிறது.—அதாவது பொருளாதாரக் கொள்கைகளுக்கான (சேமிப்பு, முதலீடு இவைகளுக்கான) எதிர்கால மாற்றங்களுக்காகக் கொள்கையைத் திருப்பி அமைக்க வேண்டும். எனவே, M என்பது மாறுதிருப்பின், பொருளாதார நிலைகள் வட்டிவீத மாற்றங்களுக்கு ஈர்க்கும் விளைவுகளைச் சாராமல், ஐக்கிய ஒதுக்கீட்டுக் கொள்கையைச் சார்ந்து ஊக வாணிகம் அமைகிறது.

ஆயினும், மைய பாங்குகள் தங்களது குறிக்கோள்களை அங்காடிகளுக்குத் தெரிவிக்காமல், அவைகளை முழுமையாக மறைத்தாலும் $M_s$ என்ற வளைகோடு குறிக்கும் அட்டவணையில் இடப்பெயர்ச்சிகள் ஏற்படும் என்று எதிர்பார்க்கலாம். எதிர்கால வட்டி வீதத்திற்கான எதிர்பார்ப்புகள் தொடக்கத்தில் மாறாமல் அமைந்துள்ளனவென்றும், வெளிச்சந்தை நடவடிக்கைகளால்,

மைய பாங்கு பண அளவை $M_0$லிருந்து $M_1$க்கு மெல்ல உயர்த்தி வட்டி விதத்தை $r_0$ என்ற நிலையிலிருந்து $r_1$ என்ற நிலைக்குத் தள்ளிப் பின்னர் பண அளிப்பின் அளவை நிலையானதாகச் செய்கிறது என்று எடுத்துக்காட்டாக வைத்துக் கொள்வோம். இவ்வாறு வட்டி விதத்தை $r_0$ என்ற மட்டத்திலிருந்து $r_1$ என்ற மட்டத்திற்குக் கீழ்நோக்கித் தள்ளியதால், பத்திரங்களின் விலைகள் உயர்ந்தன. இதனால் பல சொத்து உடைமையாளர்கள் பத்திரங்களை விடுத்து ரொக்கத்தை விரும்பினர். ஏனெனில், பத்திரங்களுக்கான இந்தப் புதுவிலை மட்டம் மிகவும் அபாயகரமானது என அவர்கள் கருதினார்கள். ஆனால் வட்டி விதம் $r_1$ என்ற மட்டத்தில் நிலையுள்ளதாய் சிறிது காலம் இருப்பதால் புதிய நீர்மைத் தன்மையுடைய பத்திரங்களின் உடைமையாளர்கள் அவைகளின் புதிய உயர்ந்த விலை மட்டத்தினால் ஏற்பட்ட பயத்தை ஓரளவு போக்கிக் கொள்வார்கள். வட்டி விதம் $r_1$ என்ற மட்டத்தில் சிறிது காலம் நிலைபெற்றிருந்தால், தங்களுக்குக் கிடைக்கும் உயர்ந்த விளைவை அனுவசியமாகத் தியாகம் செய்கிறார்கள். இப்பொழுது பத்திரங்களைத் திரும்பவும் பெற அவர்கள் விரும்புவார்கள். இந்நிலையில் மைய பாங்கு, புதிய உயர்ந்து காணும் பத்திரங்களின் விலை மட்டத்தில், பத்திரங்களை விற்க முற்படும். இதனால் பயனில்லா ரொக்கங்களின் இருப்புகள் மெதுவாக $M_0$ என்ற மட்டத்திற்குத் திரும்பிச் செல்லும். அதாவது மைய பாங்கு, வட்டி வீதத்தைக் குறைப்பதற்காக அது வாங்குதலை மேற்கொள்கிறது. ஆனால், வட்டி வீதத்தைக் குறைப்பதற்கு, எதிர்பார்ப்புகள் புதிய நிலைக்கு ஏற்றவாறு அமைந்துவிட்டால், பண இருப்பை நிரந்தரமாகப் பெருக்க வேண்டிய அவசியமில்லை.

பணவாக்கக் கொள்கையின் மாற்றங்களை உள்ளடக்கிய, கொடுக்கப்பட்ட நீர்மை விருப்ப அட்டவணை என்ற எடுகோளைக் கொண்டு பொருளாதார மாற்றங்களை ஆராய்வது, தவறானது என்பது மேற்கூறியவைகளின் கருத்தாகும். உண்மையில், பணவாக்கக் கொள்கை எப்படி அமையும் என்பதற்கான பொது மக்களின் எதிர்பார்ப்புகள், நீர்மை விருப்ப அட்டவணையின் முக்கியத் தீர்மானியாகும்.

குறிப்பான சில சமயங்களில் மட்டும், அல்லது ஏதோ ஒரு நேரத்தில் தங்களது தலையிடுதல் வட்டி வீதத்தைப் பெருமளவிற்கு மாற்ற வேண்டும் என்ற நிலையில் தாங்கள் தலையிடுவதாயும், மற்ற நேரங்களில் தாங்கள் எந்தவித பங்கையும் ஏற்பதில்லை என்று மைய பாங்குகள் (கடந்த சில ஆண்டுகளாக) பொருளற்ற

வார்த்தைகளைப் பேசின. ஆனால், மைய பாங்குகள் இருப்பதே வட்டி வீதங்களுக்குப் பெருத்த முக்கியத்துவத்தை அளிக்கிறது என்பது எல்லோருக்கும் தெரிந்த உண்மை. வட்டி வீதத்தைத் தக்க விரிந்த வரையறைக்குள் எவ்வகையிலும் அமைக்கத்தக்க திறன் மைய பாங்குகளுக்கு உண்டு என்பதை எல்லோரும் அறிவார். மேலும் தேசியப் பொருளாதாரக் கொள்கையின் குறிக்கோள்களைத் தான் கருதியவாறு அமைக்க அது பாடுபடும். குறுகிய வரையறைகளுக்குள் வட்டி வீத மட்டம் பணவாக்கக் கொள்கையினால் நிர்ணயிக்கப்படுகிறது என்பது இதன் பொருள். (இதனால் மைய பாங்குகள் பின்பற்றும் கொள்கை மிகவும் சிறந்த கொள்கை எனச் சொல்ல முடியாது; ஆனால், மைய பாங்குகள் ஒரு வித பங்கையும் வகிக்காது என்ற கருத்துப் பொருளற்ற கருத்தாகும் எனக் கூறலாம்).

இதுவரை கூறிய கருத்து மிகவும் சிறந்தது என்று வலியுறுத்தி வந்தோம். ஆனால், இனி வரும் விளக்கங்களில் இக் கருத்தைப் புறக்கணிப்போம். பாங்குகள் பணவாக்கங்களில் தலையிடா விட்டால் என்ன நேரிடும் என்பதை ஆராய்வதற்காக இக் கருத்தைப் புறக்கணித்துள்ளோம். பாங்குகளின் தலையிடுதல்கள் தேவையுள்ளனவா, அல்லது அத் தலையிடுதல்களின் விளைவுகளை எத் தன்மையன என்பதைப்பற்றிய முன்னறிவிப்புகளை ஆராய்வதற்குத் தலையிடுதல் இல்லையெனில், என்ன விளைவுகள் நேரிடும் என்பதை நாம் முதற்கண் முன்னறிவிப்புச் செய்தல் வேண்டும். பணவாக்கக் கொள்கை உண்மையெனக் கொண்ட இக் கருத்து எல்லாப் பேரினப் பொருளியல் கொள்கைகளுக்கும் வருவாய்க் கொள்கைக்கும் (fiscal policy) பொருந்தும். மையபாங்குகளின் தலையிடுதல்கள் நல்ல முறையில் செயல்பட்டால், நிலை பேறின்மையைப் பூண்டோடு அழிக்கலாம். ஆயினும், நிலை பேறின்மைக்கான போக்குகள் ஒரு பொருளாதார அமைப்பில் உள்ளன என்பது உண்மை. ஆனால், மைய பாங்குகளின் தலையிடுதல்களை நல்ல முறையில் செயற்படுத்த இப் போக்குகளை அறிதல் நன்று.

ஊக வாணிகம் அல்லது வட்டி நெகிழ்வுடைய பணத் தேவைக்கான மூலத்தைப் பற்றிய பின் குறிப்பை நமது விளக்கத்தில் இப்பொழுது புகுத்துவோம். இவைகள் மட்டும் வட்டி நெகிழ்ச்சியுடைய பணத் தேவையின் தலைசிறந்த மூலங்களாக அமைந்தால் நீர்மை விருப்ப அட்டவணை, முன்பு குறித்ததுபோல், ஓரளவிற்கு நிலையுள்ள அட்டவணையாக அமையும்; அது மிகவும் மெல்ல இடம் பிறழும் தன்மையைக் கொண்டதாகும். இத்

தகைய பிறழ்ச்சி, தனிச் சொத்துடைமையாளரின் சொத்தின் அளவைப் பங்கிடையும்; பத்திரங்களை விற்பது, வாங்குவதற்கான செலவு, சொத்து உடைமையாளர்களின் ஆபத்திற்கான வெறுப்பு ஆகியவைகளினிடையும் எதிர் உணர்வு செய்யும் வகையில் அமைகிறது. பணவாக்கக் கொள்கையின் மாற்றங்களால் விளையும், நாம் அங்காடியில் சாதாரணமாகக் காணும் வட்டி வீத மாற்றங்களின் விளக்கத்திற்கு இத்தகைய பகுப்பாய்வு பயன்படாது.

## பின் சேர்க்கை

## (Appendix)

## கடன் நிதிகள் பகுப்பாய்வில் பதுக்குதல், பதுக்குதலின்மை

## (Hoarding and Dishoarding in a 'Loanable Funds' Analysis)

ஊக வாணிகத்திற்கான பணத்தேவை என்ற கீன்சின் புதுமையை,(innovation) கடன்நிதிகள் பகுப்பாய்வுப் பணிச்சட்டத்துடன் இணைக்கப் பல பொருளாதார வல்லுநர்கள் முயன்றார்கள். ஊக வாணிகத்திற்கான பதுக்குதல், பதுக்குதலின்மை ஆகியவைகளின் ஓட்டங்களை வட்டி வீத நிர்ணய பகுப்பாய்வுடன் இணைக்க முயன்றார்கள். இதனுடன் சேமிப்பு, முதலீடு, பண உற்பத்தி ஆகியவைகளின் (ஓட்டங்களையும்)இணைக்க முயன்றார்கள் என வேறு வகைப்படுத்திக் கூறலாம். கீன்சின் பகுப்பாய்வு பயன்படுத்தும் இருப்பு கருத்துகளுக்குப் பண அளிப்பு, பணத் தேவை-என்பவைகளுக்குப் பதிலாக வட்டி வீத நிர்ணயத்திற்கான ஓட்டக் கருத்துப் பகுப்பாய்வைப் பதிலீடு செய்தார்கள். இவ் வகை வாய்பாட்டின் உள்ளடங்கிய பிரச்சினைகள் யாவை என்பதைச் சுருக்கமாகக் காண்போம். கடன் நிதிகள் பகுப்பாய்வுப் பணிச் சட்டத்தைப் பயன்படுத்தும் கீன்சின் முறை எளிதானது. ஆனால், உண்மையில் அது அவ்வளவு எளிதானது அல்ல.

விளக்கப் படம் 9—9ல், கடன் நிதிகள் கோட்பாட்டுக்கான ஊக வாணிகத் தேவை என்ற கீன்சின் கருத்தை இணைத்த—வரிக் கோட்டு விளக்கம் தரப்பட்டுள்ளது. படத்தின் A பகுதியும் விளக்கப் படம் 9—4ல் உள்ள B பகுதியும் ஒன்றாகும். படத்தின் A பகுதி பயனில்லா ரொக்கத்திற்கான அளிப்புத் தேவைக் கோடுகளைக் (பேரங்களுக்கான பணத் தேவை கொடுக்கப்பட்டிருந்தால்) கீன்சு கண்டவாறு விளக்குகிறது. $r_1$ என்ற வட்டி வீதத்தில் பயனில்லா இருப்புகளுக்கான தேவை அவைகளின் அளிப்பைவிட BC என்ற அளவு குறைந்து அமைகிறது.




படம் 9-9.

இதனால்தான் இந்த நிலை சமநிலை எனக் கூறுவதற்கில்லை. மக்கள் உண்மையாக AC என்ற அளவு பயனில்லா ரொக்கத்தை வைத்திருப்பார்கள்; ஆனால், AB என்ற அளவை மட்டும் வைத்திருக்க விரும்புவார்கள். இத்தகைய மிகக்குறைந்த அளவுப் பத்திரங்களின் விலை நிலையில், மிகச் சிலரே பயனில்லா ரொக்கத்தை வைத்திருப்பார்கள். இது போல் $r_0$ என்ற வட்டி வீதத்திலும் சமநிலை இல்லை. ஏனெனில், விரும்பிய வைத்திருப்புகள் AD என்பது, உள்ளபடி இருக்கும் வைத்திருப்புகள் AC என்பதைப் படத்தில் கண்டவாறு CD என்ற அளவிற்கு மிஞ்சுகிறது. ஏனெனில், இப்பொழுதுள்ள பத்திரங்களின் மிக உயர்ந்த விலை தாற்காலிகமானது எனப் பலர் அஞ்சுகிறார்கள்.

$r_0$ என்ற நிலையைத் தவிர மற்ற எல்லா வட்டி வீதங்களிலும்—அதாவது உண்மையான பயனில்லா ரொக்க இருப்புகள்; விரும்பிய இருப்புகளிலிருந்து வேறுபட்டுக் காணும் எல்லா வட்டி வீதங்களிலும்—பத்திரங்களை விற்க அல்லது வாங்க மக்கள் எதிர் உணர்வு செய்வார்கள். இதனால் பயனில்லா ரொக்கத்தின் உண்மையான இருப்புகளும், விரும்பிய இருப்புகளும் சமமாகும்; அது போல் பத்திரங்களின் உண்மையான வைத்திருப்பும், பத்திரங்கள்

விரும்பிய வைத்திருப்புகளும் சமமாகும் என்பதை எடுகோளாக அமைத்துக் கொண்டால், பதுக்குதல், பதுக்குதலின்மை ஆகியவை களுக்கான வளைகோட்டை, விளக்கப் படத்தின் B பகுதியில் கண்டவாறு அமைக்கலாம். படத்தின் இப் பகுதியில், பதுக்குத லின்மையை வலப்பக்கத்தில் சுன்னம் (zero) என்ற மட்டத்தில் தொடங்கி, படத்தின் மையம்வரை உள்ள இடைவெளி அளவிடு கிறது. அதுபோல் பதுக்குதல் (எதிர்நிலைப் பதுக்குதலின்மை) இடப் பக்கத்தில் அளவிடப்படுகிறது. $r_1$ என்ற வட்டி வீதத்தில், BC அளவிற்குப் பதுக்குதலின்மை ஏற்படுகிறது. ஏனெனில், மக்கள் இந்தப் பயனில்லா இருப்புகளைக்கொண்டு 'மலிவான பத் திரங்களைப்' பெறப் பயன்படுத்தினர்கள். $r_2$ என்ற வட்டிவீதத்தில் CD என்ற அளவிற்குப் பதுக்குதல் ஏற்படும். ஏனெனில், மக்க ளிடத்தில் உள்ள ரொக்க உண்மை இருப்புகள் (பத்திரங்களின் வைத்திருப்புகள் மிகுந்தும்) தாம் அந்த மிக உயர்ந்த பத்திரங் களின் விலை நிலையில் வைத்திருக்கும் விரும்பிய ரொக்கங்களைவிட, உண்மை இருப்புகள் குறைவுபட்டுக் காணும். எனவே, பத்திரங் களை ரொக்கத்திற்காக அங்காடியில் மாற்ற முற்படுவார்.[1]

விளக்கப் படத்தின் C பகுதியில் பதுக்குதல், பதுக்குதலின்மை பகுப்பாய்வுடன், கடன் நிதிகளின் தேவை அளிப்புக்கான மற்ற மூலங்களையும் உடன் சேர்த்து விளக்கியுள்ளோம். கடன் நிதி களின் அளிப்பு, சேமிப்பு அட்டவணையை உள்ளடக்கியதாகும். இதனை s என்ற கோட்டினுல் குறிப்பிட்டுள்ளோம். இது வட்டி வீதத்துடனும், புதிய பணம், $\triangle$ M (இங்கு தன்னிச்சையானது எனக் கொள்ளப்பட்டிருக்கிறது) இவைகளுடனும் எதிர் உணர்வு செய்யும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. இவை இரண்டின் மொத்தத்தையும் s + $\triangle$ M என்ற கோடு உணர்த்துகிறது. இக் கோடு s என்ற கோட்டிற்கு வலப்புறம் அமைந்திருப்பதோடு அல்லாமல் இணை தொலைவுக் கோடாகவும் (parallel) அமைந் துள்ளது. கடன் நிதிகளுக்கான மொத்த அளிப்பு, பதுக்குதலின் மையையும் உள்ளடக்கியதாகும். இது சில வட்டி வீதங்களில்

1 மேல் காணும் விவாதத்திலும் விளக்கப் படத்திலும் பதுக்கலின்மையை M—Mt என்பதன் வேறுபாடு எனக் குறிப்பித்தோம். முந்திய பகுப்பாய்வில் (மூல நூல் பக்கம் (159) பதுக்கலின்மையை (DH) M, l Py ஆகியவைகளின் வேறுபாடு அதாவது M—Mt என்பதன் வேறுபாடு எனக் குறித்தோம்; இதனல் M, Mt ஆகிய வைகளின் இடையே உள்ள வேறுபாடு அவ்வளவும் கடன் அங்காடிக்கு வருவ தில்லை என்பதை ஏற்றுக்கொள்ளுகிறேம். அதுபோல் ஒவ்வொரு வட்டி வீதமும் கொடுக்கப்பட்டிருந்தால், M, Mt ஆகியவைகளின் வேறுபாட்டின் ஒரு பகுதி பய னில்லா ரொக்கங்களாக வைக்கப்படுகின்றன என்பதையும் ஏற்றுக்கொள்ளுகிறேம். சுருக்கமாக, பதுக்குதலின்மையைக் கீழ்க்காணும் வகையில் குறிக்கிறேம்.

$$DH = M - l\,Py - M_s$$

இதில் $M_s = L(r)$

நேர்நிலைத் தொகையாக அமைந்து மற்ற மூலங்களுடன் சேர்க்கப் படுகிறது. $r_1$ என்ற வட்டி வீதத்தில் கடன் நிதிகளின் இந்த அதிகப்படித் தொகையை BC என்ற அளவு குறிக்கிறது. $r_0$ என்ற வட்டி வீதத்தில், பதுக்குதல் அல்லது பதுக்குதலின்மை எதுவும் நடைபெறுததால்; நிதிகளின் மொத்த அளிப்பு $s+\triangle M$ என்ற அளவில் அமைந்துள்ளது. $r_0$ என்ற வீதங்களுக்குக் கீழ்ப்பட்ட வீதங்களில் பதுக்குதல் ஏற்படும். (அதாவது எதிர்நிலைப் பதுக்குதலின்மை ஏற்படும்). இந்தத் தொகையை மொத்தக் கடன் நிதிகளிலிருந்து கழிக்க வேண்டும். (அல்லது தேவையுடன் சேர்க்கப் பட்ட தொகை என்று மாற்று வழியில் குறிப்பிடலாம்). $r_2$ என்ற வீதத்தில் இதை CD என்ற அளவு குறிப்பிடுகிறது. கடன் நிதிகளின் மொத்த அளிப்பை $s+\triangle M+DH$ என்ற வலப்பக்கம் மேல்நோக்கிச் செல்லும் கனத்த கோடு குறிப்பிடுகிறது. இந்த அளிப்பு (முதலீடுக்கான) தேவையுடன் சமமாக அமைந்துள்ளது; இதனால் rm என்ற அங்காடி வட்டி வீதம் கிட்டும்.

இதன் விளைவு மிகவும் எளிதானதாக அமைந்திருந்தாலும் இது தவறானது அல்லது பிழையுள்ளது என்பது மூல நூல் ஆசிரியரின் வாதமாகும். சில குறைபாடுகளை இவண் ஆராய்வோம்.

(1) முன் அதிகாரத்தில் குறித்த 'அளவுப் பிரச்சினை' (Scale problem) முதலிடம் பெறுகிறது. இந்தப் பிரச்சினைக்கான விளக்கத்தை முன் அதிகாரத்தில் தள்ளிப்போட்டு இங்குத் தந்துள்ளோம். விளக்கப்படம் 9—9-ல் சுருக்கியமைத்துள்ள பகுப்பாய்வு இருப்புகளை ஒட்டிய பகுப்பாய்வாகும். இவ் விளக்கப் படம் பண இருப்பையும், அந்த இருப்புகளுக்கான தேவையையும் குறிக்கிறது—அதாவது உள்ளபடி அமைந்துள்ள, அல்லது விரும்பி அமைந்துள்ள இருப்புகளை உணர்த்துகிறது. விளக்கப் படத்தின் B பகுதி இவ்விரண்டு வகை இருப்புகளின் வேறுபாட்டை ஓட்டக் கருத்தாக மாற்றியமைக்கிறது. விரும்பிய இருப்புகளுக்கான கோட்பாடு வழங்கும் தகவலைவிட அதிகப்படித் தகவல்கள் கிடைக்கப்பெறுவிட்டால், இதனைச் செயல்படுத்த முடியாது. உதாரணமாக $r_1$ என்ற வட்டி வீதத்தில் (பேரங்களுக்கான தேவை கொடுக்கப்பட்டிருந்தால்), பொது மக்கள் விரும்பியதைவிட உண்மையில் அதிகப்படி ரொக்கத்தை வைத்திருப்பார்கள்—அதாவது BC என்ற அளவுடைய அதிகப்படி ரொக்கத்தை வைத்திருப்பார்கள். இது இருப்புகளை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது. இதை ஓட்டக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு அமைத்து வெளிப்படுத்த மேலும் ஒரு தகவல் தேவைப்படுகிறது. அதாவது விரும்பிய இருப்புகளைவிட, உண்மையான இருப்புகள் அதிகமாக

உள்ளன என்பது கொடுக்கப்பட்டிருந்தால், சொத்து உடைமையாளர்கள் எவ்வளவு வேகத்தில் இந்த அதிகப்படித் தொகையைச் செலவிடுவார்கள் என்ற தகவல் தேவைப்படுகிறது. மக்களின் விரும்பிய ரொக்க வைத்திருப்புக்கும், உண்மை வைத்திருப்புக்கும் உள்ள வேறுபாடு 500 மிலியன் டாலர்கள் என்று வைத்துக் கொள்வோம். இந்தத் தேவையில்லா ரொக்கத்தைப் பத்திரங்களைப் பெற, நாள் ஒன்றுக்கு 50 மிலியன் வீதம் 10 நாட்களுக்குச் செலவு செய்வார்களா, அல்லது நாள் ஒன்றுக்கு 5 மிலியன் வீதம் 100 நாட்களுக்குச் செலவு செய்வார்களா, அல்லது நாள் ஒன்றுக்கு 500 மிலியன் வீதம் ஒரு நாளையிலே செலவு செய்வார்களா அல்லது நாள் ஒன்றுக்கு 1 பிலியன் வீதம், இந்த அதிகப்படி ரொக்கத்தை அரை நாளில் செலவு செய்வார்களா?[1] இந்த வினவிற்கான விடை, பதுக்கலின்மை ஓட்டத்தின் அளவை நிர்ணயிக்கிறது. கடன் நிதிகளின் மொத்தத் தொகையை நிர்ணயிக்கும் போது இவ்வோட்டத்தை, சேமிப்பு, பண உற்பத்தி ஆகிய ஓட்டங்களுடன் சேர்த்து அமைக்க வேண்டும்.

உண்மையில் நமது பிரச்சினை நடத்தை மட்டம், நுணுக்க மட்டம் ஆகிய இரண்டு மட்டங்களையும் தழுவி அமைந்துள்ளது. சேமிப்பு, பண உற்பத்தி ஆகியவைகளின் ஓட்டத்திற்கான எண்ணல் அளவை, இவ் வோட்டங்களை வெளிப்படுத்தும் கால அலகை ஒட்டி அமைந்துள்ளது. நாள் ஒன்றுக்கு 50 மிலியன் அல்லது வாரத்திற்கு 350 மிலியன் அல்லது மாதத்திற்கு 1500 மிலியன் ஓட்டங்கள் என்ற அளவைகள் எல்லாம் முற்றொருமையானவை. இந்த ஓட்டத்துடன் (பல வகையிலும், ஒழுங்கற்ற முறையிலும் அதாவது 50, 350, அல்லது 1,500 அல்லது வேறு எந்த எண்ணைக் கொண்டாவது) வெளியிடும் சேமிப்பை இதனுடன் சேர்த்தால் உண்மையான பயனில்லா இருப்புகளுக்கும், விரும்பிய இருப்புகளுக்குமிடையே உள்ள வித்தியாசம் 500 ஆக அமைகிறது. இதனால் கிட்டும் மொத்தத் தொகையில் உள்ள பதுக்கலின்மையைக் குறிக்கும் இனங்கள் சேமிப்பு ஓட்டத்தை ஏதோ ஒரு அலகைக் கொண்டு வெளியிடும் வகையை

[1] மேல் கூறிய குறிப்பிட்ட வீதங்களில் மக்கள் அதிகப்படி ரொக்கத்தைச் செலவிடுகிறார்கள் என்றால், ரொக்கம் முழுவதையும் செலவு செய்து, மேல் கண்ட 10, 100, 1, ½ நாட்களில் அதிகப்படி ரொக்கமில்லாமல் செய்கிறார்கள் என்று வாசகர்கள் கருதக்கூடாது. வட்டி வீதம் (அல்லது வேறு ஒரு மாறி) மாறினால்தான், அதிகப்படி ரொக்கம் மாறாமலிருக்கும். நான் என்னிடம் உள்ள பயனில்லா ரொக்கத்தைக் கொண்டு பத்திரங்களைப் பெற்றால், வேறு ஒருவருக்கு ரொக்கம் போய்ச் சேர்கிறது. வங்கிகள் அல்லா பொதுமக்கள் தங்களிடம் உள்ள ரொக்கத்தை மாற்றியமைக்க முடியாது. ஆயினும், இந்தத் தொகையை மாற்ற மேற்கொள்ளும் முயற்சி, வட்டி வீதங்கள், விலைகள் அல்லது வேறு மாறிகளை மாறும்படி செய்கிறது. இதனால் இப்பொழுது விரும்பும் ரொக்க அளவையும் முன்பிருந்த அளவையும், மற்ற மாறிகளின் மதிப்புக் கொடுக்கப்பட்டிருந்தால் சமமாக அமையும்.

மிகைப்படுத்துவதுபோல் அமைகிறது. இத்தகைய ஒழுங்கற்ற விளைவைத் தடுக்க (1) பயனில்லா இருப்புகளைச் செலவிடும் வேகத்தைக் குறிப்பிட வேண்டும் (இது நடத்தையை ஒட்டி அமையும் கருத்து); (2) பயனில்லா இருப்பு ஓட்டங்களைச் சேமிப்பு, புதுப் பண உற்பத்தி ஓட்ட வேகங்களை அளவிடப் பயன்படும் அதே அலகைக் கொண்டு வெளிப்படுத்த வேண்டும். (இது நுணுக்கத்தை ஒட்டி அமையும் கருத்தாகும்.)

இந்தத் தகுதிகளால் என்ன வேறுபாடு நேரிடும்? இவைகளினால் மிகுந்த வேறுபாட்டை நாம் பெறுவோம். பயனில்லா இருப்புகளின் செலவீட்டு வேகம் மிகவும் விரைவாக அமைந்தால் (அதாவது உண்மையான இருப்புகளுக்கும் விரும்பிய இருப்புகளுக்கும் உள்ள வேறுபாட்டைக் குறிக்கும் ரொக்கம் முழுவதும் ஒரே நாளில் அங்காடியில் குவிக்கப்பட்டால்) பின் விளக்கப்படம் 9–9 C பகுதியில் காணும் s, i, $\triangle M$ ஆகியவை குறைந்த தொகையுள்ளனவாய்க் குறிக்கப்பட வேண்டும்—அதாவது இவைகளின் வளைகோடுகள் செங்குத்து அச்சுடன் நெருங்கி அமையும். இது $r_m$ என்ற வட்டி வீதத்தை நிர்ணயிக்கும்; ஆனால், இது வளைகோட்டின் DH என்ற பகுதியின் சரிவால் மட்டும் சிறப்பாக நிர்ணயிக்கப்படும். பயனில்லா இருப்புகளின் செலவீட்டு வேகம் குறைவுபட்டால், பதுக்கலின்மையின் முக்கியத்துவம் குறைகிறது. இதனால் வட்டி வீதம், சேமிப்பு முதலீடு (புதுப்பண உற்பத்தி) ஆகியவைகளுக்கான வளைகோடுகளின் சரிவுகளால் நிர்ணயிக்கப்படுகிறது. எனவே, இப் பிரச்சினையைக் கீழ்க்காணும் வகையில் சுருக்கி அமைக்கலாம். அது மக்களது பதுக்குதல் அல்லது பதுக்குதலின்மைத் திறமையை ஒட்டி வட்டி வீதம் குறுங் காலத்தில் அமைகிறதா அல்லது அவர்களது சேமிப்பு, முதலீட்டுத் திறன்களை ஒட்டி அமைகிறதா என்பதாகும்.

(2) சமனுறு நிலைகளின் சிறப்பியல்புகள் இப் பகுப்பாய்வின் இரண்டாவது குறையாக அமைகின்றன. இப் பகுப்பாய்வு சமனுறு நிலையை உணர்த்துகிறது என்பது பேரங்களுக்கான பணத் தேவை கொடுக்கப்பட்டது என்ற எடுகோளின் விளைவு. பேரங்களுக்கான பணத்தேவை $P_y$ என்பதைச் சார்ந்திருப்பது விலைகளும் —வெளிப்பாடும் கொடுக்கப்பட்டவை என்ற எடுகோள் அமையும் எனப் பொருள்படும். ஆனால், $r_0$ என்ற நிலை இல்லாமல் மற்ற எந்த வட்டி வீத நிலையிலும், சேமிப்பும், முதலீடும் சமமாக இரா. இதனால் சில சேமிப்பாளர்கள், முதலீட்டாளர்கள், அதிர்ச்சி அடைவார்கள், அல்லது வியப்படைவார்கள். ஆகவே, அவர்கள் தங்கள் நடத்தையை மாற்றிக் கொள்வதோடு

அல்லாமல் பண்டங்களுக்கான மொத்தத் தேவையையும் மாற்றி அமைப்பார்கள்.

இத்தகைய சமனுறு நிலைப் பகுப்பாய்வை எவரும் குறைகூற முடியாது. இயக்க இயல் பகுப்பாய்வில் இத்தகைய சமனுறு நிலைகள் ஏற்படுவது இயற்கை. ஆனால், சில பிரச்சினைகளுக்கு இயக்க இயல் பகுப்பாய்வு இன்றியமையாதது என நாம் முன்பே குறிப்பிட்டோம். ஆயினும்,

(a) சமனுறு நிலைப் பகுப்பாய்வு கட்டாயமாக மாறக்கூடிய நிலைகளை விளக்குவதற்கான தாற்காலிகமான கருவி என்பதை இயக்க இயல் பகுப்பாய்வைப் பயன்படுத்துபவர் உணரவேண்டும். இந்த முறையைப் பயன்படுத்தும் பலர் இதனை உணராமலிருக்கின்றனர்.

(b) சமனுறு நிலைப் பகுப்பாய்வு முறை (process) பற்றிய பகுப்பாய்வை உணர்த்தினால், அது பயனுள்ளதாகும், அதாவது சமனுறு நிலைப் பகுப்பாய்வு, அடுத்து என்ன நடக்கும் என்பதை விளக்கினால் பயனுள்ளதாகும். நாம் இதுவரை ஆராய்ந்து வந்ததிலும் இது பயனுள்ளதாகிறது. உதாரணமாக இன்றைய வட்டி வீதம் $r_m$ என்ற நிலையில் இருந்தால், நாளைக்கு அதன் நிலை என்னவாகும்? பாதிக்கப்பட்டவர் யாவர்? வியப்படைந்தவர் யாவர்? இதனால் அவர்கள் என்ன செய்வார்கள்? இது எதிர்கால வட்டி வீதங்களை எவ்வகையில் பாதிக்கும்? என்பன போன்ற பல வினாக்களுக்கான விடைகளை நாம் அறிய வேண்டும்.

(3) இப் பகுப்பாய்வின் மூன்றாவது குறை, எடுகோள்களின் உண்மைத் தத்துவத்தை ஒட்டி அமைந்துள்ளது. வட்டி வீதம் வெகு விரைவாகச் சரிக்கட்டி விடுகிறது; ஆனால், வருமானம், வெளிப்பாடு, விலைகள் (பேரங்களுக்கான பணத் தேவையின் தீர்மானிகள்) பின்னீடு உடன் மாறுகின்றன என்பதை எடுகோளாக நாம் அமைத்துள்ளோம். இவ்வாறு நாம் எடுகோள் அமைக்கா விட்டால், M என்பது கொடுக்கப்பட்டு உள்ளது என்பதையும் வட்டி வீதம் சரிக்கட்டப்படுகிறது என்பதையும் உறுதியாகச் சொல்ல முடியாது. வருமானம், வெளிப்பாடு, பொது விலை மட்டம் (தனித்தனி விலைகள் அல்ல) மிகவும் மெல்ல மாறுகின்றன என்பது மட்டும் ஓரளவிற்கு உண்மையான கூற்றாகும். ஆனால், நமது பகுப்பாய்வைக் குறுங்காலத்திற்கு வரையறை செய்துகொண்டால், அதாவது குறுங்காலத்தில் வருமானம், வெளிப்பாடு விலைகள் ஆகியவை கொடுக்கப்பட்டவைகள் எனக் கொண்டால், பின், சேமிப்பாளர்கள், முதலீட்டாளர்கள் ஆகியவர்களின் நடத்தை எடுகோளை நன்றாக

ஆராய வேண்டும். சேமிப்பைக் குறிக்கும் வளைகோட்டை மேல் நோக்கிய சரிவுடன் கொண்டதாக அமைத்ததால், வட்டி வீத மாற்றங்களுக்குச் சேமிப்பாளர்கள் உடனடியாக எதிர் உணர்வு செய்கிறார்கள் என்ற எடுகோளை அமைத்தவர்கள் ஆகிறோம். அவர்கள் வருமான மாற்றங்களுக்குப் பின்னீடுடன் எதிர் உணர்வு செய்கிறார்கள் என்றும் கொண்டுள்ளோம். ஆயினும், சேமிப்பு வட்டி வீதத்திற்கு எதிர் உணர்வு செய்தல், வருவாய் மாற்றங் களுக்கான சரிக்கட்டுகள் நிகழும் வேகத்தை ஒத்து அமைகிறது எனக் கூறலாம். அதுபோல் வட்டி வீத மாற்றங்களுடன் முதலீடு செய்யும் எதிர் உணர்வும் பின்னீடுடன் அமைகிறது எனவும் கூறலாம். வேறுபல தகவல்களை வெளியிடாமல் மாற்று எடுகோள் ஏற்படுத்தும் வேறு பாட்டையும் உணர்த்தாமல் இருந் தாலும், இந்த இயக்க இயல் எடுகோள்கள் உண்மைக்கு முரணானவை என்பது மூல நூல் ஆசிரியரின் கருத்தாகும்.[1]

கடன் நிதிகள் என்ற வகையில் அமையும் சமனறு நிலைகளின் பொருள் அடங்கிய உண்மைப் பகுப்பாய்வு சரியான முறையில் செய்யப்பட்டால் மிகவும் பயனுள்ளதாக அமைகிறது. குறிப்பாக அது முறை பற்றிய பகுப்பாய்வைச் சார்ந்து அமைந்தால் மிகவும் பயனுள்ளதாகும். ஆனல், விளக்கப்படம் 9-9ல் உள்ள பகுப் பாய்வு பயங்கரமானது, உண்மைக்குப் புறம்பானது; மேலும் அது என்ன செய்கிறோம் என்பதை உணராமல் செயற்படுகிறது. முன் அதிகாரத்தில் கூறியதுபோல் இயக்க இயல் பகுப்பாய்வு மிகவும் கடினமானது; அதைப் பயன்படுத்த நாம் இன்னும் பக்குவம் அடைய வில்லை என முடிவு கூறுவோம்.




படம் 9-10.

[1] 'அமெரிக்கன் பொருளாதார மறு விளக்கம்' (American Economic Review XLVII (Sept. 1957) என்ற நூலில் ஜி. ஆக்லே அவர்கள் எழுதிய வட்டிக்கான நீர்மை விருப்பமும் கடன் நிதிகள் கோட்பாடுகளும் (Liquidity Preference & Loanable Funds theories of Indix) என்ற கட்டுரையைக் காண்க.

பின் இதற்கான மாறு வழி என்ன? சமநிலைகளை ஆராய்வதைத் தவிர வேறுவழி இருப்பதாகத் தெரியவில்லை. விளக்கப் படம் 9–9 சமநிலையில் எப்படி அமையும், முன்பு நாம் குறிப்பிட்ட நம்பத்தகாத எடுகோள்களை மீண்டும் ஒப்புக்கொண்டால்[1] விளக்கப்படம் 9–10 என்பது இந்த மாதிரியின் சமநிலையை வெளிப்படுத்துகிறது. இப்படத்தின் விளக்கம் பின்வறுமாறு: சமநிலை ஏற்படுவதற்கு விரும்பிய s, i ஆகியவை சமமாக அமைய வேண்டும் $\triangle M + DH$ ஆகியவைகளின் கூட்டுத் தொகை சுன்னம் (zero) என்ற மதிப்பைப் பெறும் என்பது இதன் பொருளாகும். $\triangle M, DH$ ஆகியவை தனித்தனியே சுன்னம் என்ற மதிப்பைப் பெறும் என்று இது மேலும் பொருள்படும். அதாவது (a) வங்கிகளுக்குத் தம்மிடமுள்ள இருப்புகள் அவைகளுக்கு மன நிறைவைத் தருகின்றன; அதனுல் M என்பதை உயர்த்தவும் குறைக்கவும் முற்படா. (b) வங்கிகள் அல்லாத சொத்து உடைமையாளர்க்குத் தங்களது இருப்புகள் மன நிறைவைத் தருகின்றன. எனவே, அவர்கள் ரொக்கத்தைப் பதுக்கவோ, அல்லது பதுக்காமல் இருக்கவோ மாட்டார்கள். வேலை நிறைவு என்ற கிளாசிக்கல் எடுகோளும் அமைய வேண்டும்; இல்லையேல் பணக் கூலிகளும் விலைகளும் சமநிலையில் அமையா.

விளக்கப் படம் 9–10க்குச் சமமான மற்றொரு படத்திலிருந்து சமநிலைத் தன்மைக்கான சில தவறுன முடிவுகளை நாம் தவிர்க்க வேண்டும். சமநிலைத் தன்மை r என்பது s, i ஆகியவைகளைச் சமமாக்கும் மதிப்பைப் பெற வேண்டும் (அதாவது பதுக்கலின்மையும் $\triangle$ Mம் சுன்னம் என்ற மதிப்பிற்குச் சமமாக இருக்க வேண்டும்). இது, கீன்சின் ஊக வாணிகத்திற்கான பணத்தேவை (பதுக்குதல், பதுக்குதலின்மை) பகுப்பாய்வு குறிப்பாக ஒன்றையும் வழங்காததால் அதனைத் தவிர்ப்பதில் தவறு ஒன்றுமில்லை எனப் பொருள்படும். இது முதல் தவறுன முடிவு. அடுத்தது பின்வருமாறு. s, i ஆகியவை சமநிலையில் சமமாக அமையும். (இல்லாவிடில் பண வருமானம் மாறும்). இதனுல் வட்டி வீதம், தூய்மையான பணவாக்க நிகழ்ச்சியாகும் என்பது பொருள். பின் வட்டி வீதம் பதுக்கலின்மை எந்த மட்டத்திலும் சுன்னம் (zero) என்ற மதிப்பைப் பெறச் செய்யும். அதாவது 'இயல்பான' வட்டி வீதங்கள் எவ்வாறு அமைந்திருந்தாலும், சொத்து உடைமையாளர்களுக்குத் தங்களது இருப்புகள் மன நிறைவைத் தரும். இவ்விரண்டில் முதல் கூற்று இரண்டாவதைவிட இப்பொழுதுள்ள

1 பகுப்பாய்வைச் சமநிலைப் பகுப்பாய்வாக மாற்றி அமைத்த பின்னர் அவ்வெடுகோள்களின் நம்பத்தகாத தன்மைகள் மறைந்து போகின்றன.

கிளாசிக்கல் மாதிரியில் சிறிது பழுதுள்ளதாக அமைகிறது.[1] ஆனால், ஒவ்வொன்றும் தவறானது. வட்டி வீதத்தைப் பேரின மாதிரி முழுமையின் ஒரு பகுதியாக ஆராய்ந்து வந்துள்ளோம். இத்தகைய பகுப்பாய்வு வட்டிவீத விளக்கத்திற்கான நல்லதொரு விளக்கமாக அமையும். இந்த மாதிரியில், வட்டி வீதத்துடன் சார்ந்து அமையும் நடத்தை மூன்று வகையாகும்: (a) சேமிப்பாளரின் நடத்தை; (b) முதலீட்டாளரின் நடத்தை (c) சொத்து உடைமையாளர்களின் இருப்புகள் பற்றிய நடத்தை, சமநிலையை அடைய வட்டி வீதத்திற்கு மூன்று வகைச் செய்கைகள் தேவை; (a) தாம் சேமித்து வைப்பதில் சேமிப்பாளர்களுக்கு மனநிறைவு ஏற்பட வேண்டும்; (b) தாம் செய்யும் முதலீடுகளில் முதலீட்டாளர்களுக்கு மனநிறைவு ஏற்பட வேண்டும்; (c) சொத்து உடைமையாளர்கள், தமது இருப்புகளை ரொக்கம், அல்லது பத்திரங்கள் ஆகியவைகளிடையே மனநிறைவுடன் பங்கீடு செய்ய வேண்டும். இவைகளில் இரண்டுடன் ஒத்து மூன்றாவதுடன் ஒத்து அமையாத வட்டி வீதம், சமநிலை வட்டி வீதமாக அமையாது. எனவே, வட்டி வீதம், அல்லது விலை மட்டம்; அல்லது வேறு சில மாறிகள், மேற்கூறிய மூன்று நிலைகளைப் பெறும் வரை மாறி அமைய வேண்டும். இவைகளில் ஏதேனும் ஒன்றுக்கு மற்றவைகளைவிட முதன்மை வழங்குவதில் பொருளில்லை. மேலும் இந்த மாதிரி மாறிகள் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புடையவைகள் ஆதலால், சேமிப்பு முதலீடு அல்லது சொத்தை வைத்திருப்பது ஆகியவைகளைச் சமமாக்குவதற்கு விலை மட்டம் அல்லது உண்மைக்கூலி அல்லது உழைப்பின் அளிப்பு ஆகியவைகளைவிட வட்டி வீதம் உயர்ந்த காரணி எனச் சொல்வதற்கில்லை. வட்டி வீதத்திற்கான கடன் நிதி கோட்பாட்டின் முதன்மையான குற்றம் என்னவென்றால் ஒரு பொருளாதார மாதிரியின் முழுமைத் தொடர்பு நிலைகளை நிர்ணயிக்கும் பேரினப் பொருளியல் மாறிகளைத் தவிர்த்து வட்டி வீதத்தை மட்டும் உள்ளடக்கி அமைவதாகும். அதற்குப் பின்னீடுகள் உள்ளன என்ற எடுகோளை அமைத்தாலும், மிகக்

1 முடிவுகளைப் பற்றியவரை இந்தக் கூற்று தவறானது. ஆராய்ச்சி முறையைப் பற்றிய வரையில் ஒவ்வொன்றும் தவறானது. கிளாசிக்கல் எடுகோள்களை (உதாரணமாக கூலி, விலை இணக்கமானவை) கைவிட்டால், முதலில் கூறிய கூற்று முடிவைப் பற்றியவரை தவறானதாகும்.

குறுகிய காலத்தில் சரிக்கட்டுதலின் பளு வட்டி வீதத்தின் மீது சுமத்தப்பட்டாலும், முழுமையான பகுப்பாய்வுக்கு வட்டி வீதம், விலை மட்டம், வருமான மட்டம் மற்றவைகளின் தொடர்பைச் சார்ந்து அமைகிறது.[1]

[1] மேற்கூறிய குறைபாடுகளுக்குக் கடன் நிதிகள் கோட்பாடு சிறந்ததா அல்லது நீர்மை விருப்பம் கோட்பாடு சிறந்ததா என்பதற்கான முழு விளக்கத்தைப் 'பொருளாதாரம், புள்ளியியல் இவைகளுக்கான கருத்துரை செய்தி இதழில்' (Review of Economic & Statistics XL (Feb. 1958) p.p. 15-21 நூலில் டப்ளியூ. எல். சிமித் (W.L. Smith) என்பவர் எழுதிய 'வட்டி வீதங்களுக்கான பணவாக்கக் கோட்பாடுகள்' (Montary Theories of the Rate of Interest) என்ற கட்டுரையைக் காண்க.

# 10. நுகர்ச்சிச் சார்புத் தொடர்பு

## (The Consumption Function)

கிளாசிக்கல் பேரினப் பொருளியல் பகுப்பாய்வின் நம்பிக்கை, இரண்டு அடிப்படைக் கருத்துகளைத் தழுவி அமைந்துள்ளது என்று இதற்கு முந்திய அதிகாரங்கள் திரும்பத் திரும்ப வலியுறுத்தின. அவைகளில், சேமிப்பு—முதலீடுகளால் ஏற்படும் தீமைகளைச் சரிக் கட்டுவதற்காக அமைந்துள்ள வட்டி வீதம் முதல் அடிப்படைக் கருத்து. வேறு எந்த வகையிலும் வேலைநிறைவிற்கு (வட்டி வீதம் பயன்படாத நிலைமையிலும் கூட) தடை ஏற்படாத வண்ணம் இருக்க இணக்கமான கூலி—விலை மட்டங்கள் இரண்டாவது அடிப்படைக் கருத்தாகும். ஆயினும், நிலைபேற்றை நிலை நாட்டும் பணியைக் கிளாசிக்கல் ஆசிரியர்கள் எதிர்பார்த்த வகையில் வட்டி வீதம் திறம்பட செயலாற்றுவதற்குச் சில வரையறைகள் உள்ளன என்பதை முன் அதிகாரத்தில் குறிப்பிட்டோம். கூலி—விலை இணக்கமானவை என்பதில் நாம் முழு நம்பிக்கை வைப்பதற்கில்லை என்பதற்கான காரணங்களையும் குறிப்பிட்டோம். மேலும், கூலி—விலை இணக்கத் தன்மையின் சிறப்பியல்புகளில் சில சிக்கலானவை என்ற காரணத்தால், கூலி—விலை ஆகியவை எவ்வளவு இணக்கமானவைகளானாலும், வேலை நிறைவை ஏற்படுத்த முடியாது. எனவே, வேலையின்மை நிலைகளை மட்டும் நமது பகுப்பாய்வு கவர்ந்தது என அவ்வதிகாரங்களை முடித்தோம்.

நமது பகுப்பாய்வைச் சுருக்கி அமைப்பதற்கும், சில புதிய கருத்துகளை நம் பகுப்பாய்வில் புகுத்துவதற்கும், கிளாசிக்கல் சரிக்கட்டுகள் செயலற்றவைகள் என்ற எடுகோளைத் தாற்காலிகமாக ஏற்றுக் கொள்ளுவோம். அதாவது, வட்டி வீதம் முழுமையாக இணக்கமற்றது என்ற எடுகோளை மேற்கொள்வோம். வட்டி வீதம் இணக்கமற்றது என்ற எடுகோளுக்குச் சில காரணங்கள் காட்டலாம். நடைமுறையில் உள்ள வட்டி வீதத்தில், ஊக வாணி

கத்திற்கான பணத் தேவை முடிவிலியான நெகிழ்ச்சித் திறனைப் பெற்றுள்ளது என்பது முதல் காரணம். அல்லது வட்டி வீதத்தை முறையற்ற பணவாக்கக் கொள்கையினால் (monetary policy) நிலைபெறச் செய்தமை இரண்டாவது காரணமாகும். பணக் கூலி களும், விலைகளும் மிகவும் விறைப்பானவைகள் என்ற எடுகோளை மேலும் அமைத்துக்கொள்வோம். வேலையின்மையின் அளவு எப்படி அமைந்திருந்தாலும், அவை விழுவதற்கான போக்கை வெளிக் காட்ட மாட்டா. தவிர, நாம் வேலை நிறைவு மட்டத்திற்குக் குறைந்த நிலைகளை மட்டும் கவனிப்பதால், உயரும் தன்மையுடைய கூலிகள் அல்லது விலைகள் உள்ளன என்பதைப் புறக்கணித் துள்ளோம்.

மேற்கூறிய சுருக்கமான எடுகோள்கள் ஒவ்வொன்றையும் 14ஆம் அதிகாரத்தில் அகற்றுவோம்.

## நுகர்ச்சிச் சார்புத் தொடர்புக்கான கருத்தியல்
## (The Consumption Function Hypothesis)

ஏழாம் அதிகாரத்தில், விக்செல் என்ற ஆசிரியரின் கருத்து களை ஆராயுமிடத்து எழுப்பிய வினாவின் வாயிலாக நமது கருத் தைப் புகுத்துவோம். முதலீடு குறைவு பட்டுக் காணுமிடத்து, வட்டி வீதம் விழாமலிருந்தால், பண்டங்களுக்கான மொத்தத் தேவை குறைந்து காணும். இதனால் கூலிகளும், விலைகளும் ஒன்றை ஒன்று கீழ்நோக்கிச் சுற்றிச் செல்லும். வட்டி வீதம் தனது புதிய குறைந்து காணும் 'இயற்கை' மட்டத்திற்குச் சரிக் கட்டத் தவறினால், இந்நிலை வரையறையில்லாமல் தொடர்ந்து செல்லும். பணக் கூலிகள் விறைப்பானவைகளா யிருந்தால் என்ன நேரிடும் என்ற வினாவை அப்பொழுது எழுப்பினோம். பண்டங்களுக்கான மொத்தத் தேவையின் வீழ்ச்சி, உண்மைத் தேவையின் வீழ்ச்சியையும் உள்ளடக்கியதாகும். உழைப்பாளிகள் வேலையில்லாமல் போவார்கள், வெளிப்பாடும் விழும்; அதோடு மட்டுமல்லாமல், வெளிப்பாட்டின் மட்டத்தை ஒட்டி அமைந்த வருமானங்கள் எல்லாம் விழும். வட்டி வீதம் விழத்தவறினால், மொத்தத் தேவையின் பற்றுக்குறை தொடர்ந்து நீடிக்கும். ஆனால், வெளிப்பாடும் வேலையும் வரையறை இல்லாமல் விழுமா?

இருக்கவேண்டிய சேமிப்பு, முதலீட்டைவிட உயர்ந்து காணப தால் தேவைப் பற்றுக்குறை ஏற்படுகிறது. நுகர்வோரும், முதலீட் டாளரும் வாங்க விரும்பிய பண்டங்களின் கூட்டுத்தொகை குறைந்து காணுகிறது. எனவே, விலைகளின் வீழ்ச்சிமட்டும், பண்டங்

களுக்கும் பணிகளுக்கும் உள்ள மொத்தத் தேவையை மாற்றியமைக்காது என்பதை விக்செல் (Wicksell) என்பவர் தெளிவாகக் கண்டார். ஏனெனில், பணவருவாயின் மட்டம் மொத்தத் தேவை மாற்றத்தின் விகிதத்தில் அமைந்துள்ளதால் 'உண்மை' அளவுகளில் எல்லோருடைய நிலைமைகளும் மாரு. உண்மை வருமானம் மாருத வரையில் நுகர்வோர் தங்களது சேமிப்பைக் குறைக்கவும், முதலீட்டாளர் முன்பைவிட தங்கள் முதலீட்டை உயர்த்தவும் முற்படார். ஆயினும், உண்மை வருமானம், பணவருமானம் ஆகிய இரண்டும் விழும் நிலையை நாம் இங்கு, இப்பொழுது, கவனித்து வருகிருேம். இந்த நிலையில், முன்பைவிடச் சேமிப்பு முதலீட்டைவிட உயர்ந்து காண்கிறது என்பது அறிவுள்ள வாதமாகுமா? அல்லது உண்மையான வாதமாகுமா? அது அறிவுள்ள அல்லது பயனுள்ள வாதமாக அமையாது என்பதை ஒரு கணம் சிந்தித்தால் புலனுகும். மொத்த வருமானம் வீழ்ந்து, சேமிப்பு நிலையானதாக அமைந்தால், வருமானம் மாறிய அளவிற்கு உண்மை நுகர்ச்சிச்செலவு விழுந்தாக வேண்டும். இதே நேரத்தில் வருமானத்தைவிட, சேமிப்புக்கு அதிக கவனம் செலுத்தப்படுகிறது. வருமானம் விழுகின்றபோது, சேமிப்பு, நுகர்ச்சி ஆகிய இரண்டும் விழும் என்பது, அறிவுள்ள அநுபவ வழி எடுகோளாக அமைகிறது. எனவே, விழும் தன்மையுடைய வருமானம் முதலீட்டைவிட சேமிப்பு மிஞ்சுவதைக் குறைக்கும். எனவே, வருமானமும், வேலையும் போதுமளவிற்குக் குறையுமாளுல், முதலீட்டைவிடச் சேமிப்பு மிஞ்சுவதை அகற்றுமா? இதனுல், வருமானம், நேர் நிலை மட்டத்தில் ஆனுல், குறைந்த மட்டத்தில் வருமானத்தை நிலை பெறச் செய்யுமா?

இது வெகு எளிதில் சித்தியாகும் நிலை என்பதை நன்கு விளக்கலாம். மேல் காட்டிய நிலைமை ஏற்படுவதற்குத் தேவைப்படும் வருமானக் குறைப்பு, அக் குறைப்பை எந்த அளவிற்குச் சேமிப்பும் நுகர்ச்சியும் பகிர்ந்து கொள்ளும் என்பதை ஒட்டி அமைகிறது.

நுகர்ச்சி, சேமிப்பு இவைகளுக்கிடையே உள்ள விகிதத் தொடர்பு வருமானம் எந்த மட்டத்தில் அமைந்தாலும், 4/5 பாகம் நுகர்ச்சிக்காகவும், 1/5 பாகம் சேமிப்புக்காகவும் அமைந்துள்ளது என்று வைத்துக்கொள்வோம். அட்டவணை 10–1 இந்த எடுகோளை உள்ளடக்கிய பல வருமான மட்டங்களில் ஏற்படும் சேமிப்பு, நுகர்ச்சி மட்டங்களை விளக்குகிறது. அந்த அட்டவணை கீழ்க்காணும் வகையில் அமைந்துள்ளது.

அட்டவணை 10-1

கருத்தியலான நுகர்ச்சிச் சார்புத் தொடர்பு

(Hypothetical Consumption Function)

| உண்மை வருமானம் இந்த வீதத்தில் அமைந்தால் | உண்மை நுகர்ச்சி இந்த வீதத்தில் அமையும் | சேமிப்பு இந்த வீதத்தில் அமையும் |
|---|---|---|
| 200 | 160 | 40 |
| 160 | 128 | 32 |
| 120 | 96 | 24 |
| 80 | 64 | 16 |
| 40 | 32 | 8 |
| 0 | 0 | 0 |

முதலீடும், சேமிப்பும் தொடக்கத்தில் 40 என்ற வீதத்தில் சமமாக அமைந்துள்ளது என்று வைத்துக்கொள்வோம். இந்த மட்டத்தில் வருமானம் 200 ஆக அமைந்துள்ளது. முதலீடு 32-க்கு விழுகிறது. இதனால், முதலீட்டைவிடச் சேமிப்பு மிஞ்சுவதைத் தடுக்க வருமானம் 160 என்ற மட்டத்திற்கு விழவேண்டும். முதலீடு மீண்டும் 24 என்ற மட்டத்திற்கு விழுமானால் வருமானம் மீண்டும் 120 என்ற மட்டத்திற்கு விழுந்தாக வேண்டும். ஆனால், முதலீடு சுன்னம் (zero) என்ற மட்டத்திற்கு வீழ்ந்தால்தான், வருமானத்தின் கீழ் நோக்கிச் செல்லும் சுழல் (downward spiral) வட்டி வீதம் விழ மறுத்தாலும், வரையறை உள்ளதாக அமையும். முதலீட்டைவிட - இருக்க 'வேண்டிய சேமிப்பு மிஞ்சுவதைத் தவிர்க்க வட்டி வீதம் விழ மறுத்தாலும், (அல்லது போதுமான அளவு விழ மறுத்தாலும்), வட்டி வீதம் செய்யவேண்டிய பணியை, அதற்குப் பதிலாக உண்மை வருமானத்தின் வீழ்ச்சி செயல்படுத்தி விடும். ஏனெனில், சேமிப்பை (நுகர்ச்சி) வட்டி வீதத்துடன் தொடர்புடையதாக அமைக்காமல், உண்மை வருமானத்துடன் தொடர்புடையதாக அமைத்துள்ளோம். எனவே, முதலீடுகளின் வீழ்ச்சிகளுடன் மட்டும் தொடர்புடையதாக நமது மாதிரியை அமைக்க வேண்டியதில்லை. முதலீடு உயர்ந்தால். உண்மை வருமானம் (வட்டி வீதம் உயராவிட்டாலும் அல்லது போதுமளவு உயராவிட்டாலும்) உயரும். இதனால் உயர்ந்த வருமானத்திலிருந்து பெற்ற உயர்ந்த சேமிப்பைக் கொண்டு, சேமிப்பு, முதலீடு இவைகளுக்கிடையே உள்ள இடை வெளியைத் தவிர்க்கிறோம்.

மேல் காட்டிய எண்ணல் உதாரணத்தைக் கணக்கியல் முறையில் கீழ்க்காணும் வகையில் உணர்த்தலாம்.

$$(1)\quad s = \cdot 2y$$
$$(2)\quad s = i$$

இவைகளில் s, y ஆகியவை முறையே உண்மைச் சேமிப்பு, உண்மை வருமானம் ஆகியவைகளைக் குறிக்கின்றன ; i என்பது உண்மை முதலீட்டின் அளவைக் குறிக்கிறது. s, i என்ற குறிகள் விரும்பிய சேமிப்பு முதலீடு அல்லது இருக்கவேண்டிய சேமிப்பு முதலீட்டைக் குறிக்கிறது.[1] சார்பு தொடர்பு (1)ஐ (சேமிப்பு அட்டவணையை) சார்புத் தொடர்பு (2)-ல் (சமநிலை வருமானத்திற்கான காரணி) பதிலீடு செய்தால் கீழ்க்காணும் சார்பு தொடர்புகள் கிட்டும்.

$$\cdot 2\,y = i$$

அல்லது $$y = 5\,i$$

இதில் i=40, y=200 என்றிருந்தால், i=24, y=120 என்றிருந்தால் மேல் காணுமாறு அமையும் அட்டவணையில் காணப்படாத மற்ற முதலீடு மட்டங்களையும் (சேமிப்புகளையும்) விளக்குவதற்கு இந்தக் கணக்கியல் சார்புத் தொடர்பு பயன்படுகிறது. உதாரணமாக i=27·5 என்றிருந்தால், y=137·5 என்று அமையும்.

சேமிப்பு மட்டங்களைவிட நுகர்ச்சி மட்டங்களைப் பயன்படுத்தி, இதே கருத்தை வேறு வழியில் வெளிப்படுத்தலாம். முதலீடு மட்டம் கொடுக்கப்பட்டிருந்தால், அதன் விளைவால் ஏற்படும் நுகர்ச்சி வருவாயின் மட்டத்தில் மட்டத்தைக் கொடுக்கப்பட்ட முதலீட்டு மட்டத்துடன் கூட்டி அமைத்தால், முன்கூறிய வருமான மட்டம் கிட்டும் என்பதை முதற்கண் நிர்ணயம் செய்ய வேண்டும். உதாரணமாக முதலீடு, 16 என்ற வீதத்தில் அமைந்தால், வருமானம் 120 ஆக இருக்காது. ஏனெனில், 120 என்ற மட்டத்தில் உள்ள வருமானத்திற்கு, நுகர்ச்சி 96 ஆக அமையும். மொத்தச் செலவு c+i என்பது 112 ஆக அமையும் என்பது பொருள்; எனவே, மொத்த வருமானம் 112 ஆக அமைகிறது. ஆனல், நுகர்ச்சிச் செலவுகள் 96 என்ற மட்டத்தில் இருப்பதற்கு வருமானம் 120 என்ற மட்டத்தில் அமையாமல் 112 என்ற மட்டத்தில் அமையும். ஆனல், வருமானம் 112 என்ற மட்டத்திலும் இருப்பதற்கில்லை. ஏனெனில், அந்த வருமான மட்டத்தில் நுகர்ச்சி 89·6 (112-ல் 4/5 பங்கு) உள்ளது ; இதனுடன் 16 என்ற

[1] இந்தப் பயன்பாட்டு முறை உள்ளடக்கிய பிரச்சினையின் சிறப்பு விளக்கத்தை அதிகாரம் 14ல் பக்கங்கள் 320-326 வரை காண்க.

மட்டத்தில் உள்ள முதலீட்டைக் கூட்டினால், கிட்டும் மொத்த வருமானம் 105·6 என்ற மட்டத்தில் மட்டும்தான் அமையும். வருமானம் மட்டம் 80 என்பதில் மட்டுமிருந்தால், நுகர்ச்சி (64) முதலீடு (16) இவை இரண்டையும் கூட்டினால், அந்த மட்டத்தை யுடைய நுகர்ச்சிக் கேற்ற வருமானம் உருவாகும்.

கணக்கியல் வகையில்

$$(1a) \qquad c = \cdot 8y$$

$$(2a) \qquad y = c + i$$

இங்கு c என்பது உண்மை நுகர்ச்சியைக் குறிக்கிறது. இங்கு இதை விரும்பிய நுகர்ச்சி அல்லது இருக்கவேண்டிய நுகர்ச்சி என்ற பொருள்களில் பயன் படுத்தியுள்ளோம்.[1] சமன்பாடு (1a) என்பதை (2a) என்ற சமன்பாட்டிற்குப் பதிலீடு செய்தால்,

$$y = \cdot 8y + i$$

$$\cdot 2y = i$$

$$y = 5i$$

என்பவை முன்புபோல் இப்பொழுதும் கிட்டும். இது நமது முந்திய மாதிரியின் மறு வாய்பாடு என்பதைக் கீழ்க்காணும்

$$(3) \qquad s = y - c$$

சமன்பாட்டின் வாயிலாக அறியலாம். சமன்பாடு (1a) என்பதைச் சமன்பாடு (3) என்பதற்குப் பதிலீடு செய்தால்,

$s = y - \cdot 8y = \cdot 2y$ என்ற சமன்பாடு கிட்டும். இது சமன்பாடு (1) என்பது புலனாகும். சமன்பாடு (2a) என்பதைச் சமன்பாடு (3) என்பதற்குப் பதிலீடு செய்தால்,

$$s = c + i - c = i$$

என்ற சமன்பாடு கிட்டும். இதுவும் சமன்பாடு (2)-ம் ஒன்றுதான் என்பது புலனாகும்.

இந்தப் பொருளியல் மாதிரியை வரிக்கோடு விளக்கப்படம் வாயிலாக வெளிப்படுத்தலாம். விளக்கப் படம் 10—1 பகுதிகள் A, B ஆகியவை இந்தப் பொருளியல் மாதிரியை விளக்குகின்றன.

[1] இதனால் சமன்பாடு (2a) என்பது வருமானத்திற்கு இலக்கணம் கூறாமல், வருமானத்தின் சமநிலையை உணர்த்துகிறது. உண்மை நுகர்ச்சி, ஈர்க்கப்பட்ட நுகர்ச்சி, முதலீடு ஆகியவை வருமானத்துடன் முற்றொருமையானவை. விரும்பிய அல்லது இருக்க வேண்டிய செலவுகள் இலக்கண ரீதியில் சமமாக்காமல் வருமானத்தைச் சமநிலைக் கருத்தில் சமமாக்குகிறது. மூல நூலின் பக்கங்கள் 320-326 காண்க.




படம் 10.1.

விளக்கப் படத்தின் A பகுதியில்; சேமிப்புச் சார்புத் தொடர்பை, மூலத்தின் வழியாகச் செல்லும் மேல் நோக்கிச் சாய்ந்து செல்லும் கோடாகக் குறிப்பிட்டுள்ளோம். (செங்குத்தாக அளவிடப்படும்) சேமிப்பு, (படுகிடக்கையாக அளவிடப்பட்ட) வருமானத்துடன் விகிதாசார முறையாக அமைந்துள்ளது. முதலீடு $i_0$ என்பதைப் படுக்கிடையான கோட்டின் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளோம். ஏனெனில், முதலீடு இங்கு வருமானத்துடன் தொடர்பில்லாமல் தனித்து இயங்குவதாகக் குறித்துள்ளோம். (இருப்பினும், முதலீடு r என்பதைச் சார்ந்து அமைகிறது என்றாலும்; r என்பது மாறாமலிருக்கிறது என்ற எடுகோளை நாம் அமைத்துள்ளோம். இதே காரணத்திற்காக, ஒவ்வொரு தனித்தனி r மட்டத்துடன் தொடர்புடைய பல சேமிப்பு அட்டவணைகளைக் கொண்ட குடும்பத்தை உணர்த்தாமல் ஒரே ஒரு சேமிப்பு அட்டவணையை மட்டும் குறித்துள்ளோம்.) வருவாய் $y_0$ என்ற மட்டத்தில்தான் அமையும். ஏனெனில், அந்த மட்டத்தில் சேமிப்பு, முதலீடு ஆகிய இரண்டும் சமமாக உள்ளன. முதலீடு $i_1$ என்ற மட்டத்திற்கு விழுந்தால், வருமானம் $y_1$ என்ற மட்டத்திற்குக் குறையும்.

படத்தின் B பகுதி ஓரளவிற்குச் சிக்கலுடையது. சமன்பாடுகள் (1a), (2a) இவைகளுக்கு ஏற்ற மாதிரியை அமைத்துள்ளது.

இதில், நுகர்ச்சி, வருமானத்துடன் சார்பு தொடர்புடையது என்பதைக் குறித்துள்ளோம். இதனை 'c' என்று குறியிட்ட, மூலத்தின் வழியாகச் செல்லும் சாய்வுக் கோட்டைக் கொண்டு குறித்துள்ளோம். இடை வெளிவிட்ட (diagonal line) மூலத்தி லிருந்து 45° அளவில் அமைந்துள்ள, மூலத்தின் வழியாகச் செல் லும் இடைவெளியுடைய சாய்வுக்கோடு அமைப்புக் (construction) கோடாகும். 45° கோண அளவுள்ள கோடு, (இரண்டு அச்சு களிலும் சமமான அலகுகள் குறிப்பிடப் பட்டுள்ளவை என்ற எடு கோளமைந்த) செங்குத்து அச்சுப் படுக்கிடையாக உள்ள அச்சு இரண்டிலுமிருந்து சம அளவு தூரத்தில் அமைந்துள்ள எல்லாக் குறிகளையும் ஒன்று சேர்க்கிறது. செங்குத்து அச்சு செல வினத்தை (c, i) அளப்பதாலும், படுக்கிடை அச்சு வருமானத்தை அளவிடுவதாலும், இந்த 45° கோண அளவைக்கொண்ட கோடு, அந்த நாற் சதுரத்தில், வருமானத்துடன் சமமாக உள்ள செல வினத்தைக் குறிக்கும் எல்லாக் குறிகளையும் ஒன்று சேர்க்கிறது. : சார்புக் தொடர்பு 100 சதவீத வருமானம் முழுவதையும் நுகர்ந்தால், 'c' சார்பு தொடர்பு இந்தக் கோட்டுடன் பொருந்தி அமைந்து (coincide) இருப்பதைக் காணலாம். அவ்வாறு ஒருங்கே பொருந்தி அமையாவிட்டால், 45° கோண அளவுள்ள கோட்டிற்கும், 'c' சார்பு தொடர்புக் கோட்டிற்கும் இடையே உள்ள தூரம் சேமிப்பைக் குறிக்கும். இதைப் பகுதி A மிகத் தெளிவாகக் காட்டுகிறது. 'c' சார்பு தொடர்புக் கோட்டுக்கு மேல், அதற்குச் சமதூரத்தில் (paralled) வேறு ஒரு கனத்த கோடு $c+i_0$ என்ற குறியுடன் அமைந்துள்ளது. முதலீடு $i_0$ என்ற மட்டத்தில் கொடுக்கப்பட்டிருந்தால் (அதாவது மாறிலி யாக) இக்கோடு அதற்கேற்ற வருமான மட்டங்களைக் குறிக்கிறது) வருமான சமநிலைக்குத் [சமன்பாடு (2a)] தேவைப்படுகிறது. அதாவது $c+i=y$ என்ற சமன்பாடு தேவைப்படுகிறது. இந்த நிலை $i=i_0$ என்ற ஒரே ஒரு நிலையில் உள்ள வருமான மட்டத்தில் பொருந்தி அமைந்துள்ளது. இதை $c+i_0$ என்ற கோடு, 45° கோண அளவுள்ள அமைப்புக் கோட்டை வெட்டுமிடம் குறிப்பிடு கிறது. ஏனெனில், இந்தக் கோடு செங்குத்து அச்சு அளவைக் கொண்டு $(c+i)$ அளவிடும் தூரத்திற்கும் படுக்கிடைக் கோடு (y) அளவிடும் தூரத்திற்கும் சமமாக உள்ள எல்லாக் குறிகளையும் ஒன்று சேர்க்கிறது. இதைவிடக் குறைந்த முதலீடு மட்டத்தில் $i_1$ என்ற மட்டத்தில், வருமானச் சமநிலை, குறைந்த வருமான மட்டம் அதாவது $y_1$ தேவைப்படுகிறது.

விளக்கப் படத்தின் A, B ஆகிய இரு பகுதிகளின் தொடர்பு களைத் தெளிவாகக் குறிப்பிடலாம். இவ்விரண்டு பகுதிகளும்

முற்றொருமையான விவர அமைப்புகளை மாற்று வழிகளில் வெளிப்படுத்துகின்றன. இவ் வாதத்திற்கு இவ் விளக்கப் படங்கள் தேவையற்றவை எனினும், வளைகோடு அமைப்புடைய கோடு சார்பு தொடர்புகளைப் பயன்படுத்துகையில், இவை மிக வசதி யுள்ள, எளிய முறைகளாகும்.

எனவே, நுகர்ச்சிச் சார்பு தொடர்பை விளக்க வரிக்கோடு விளக்கப் படம், வாய்பாடு இவைகளுக்கிடையே உள்ள தொடர்பு என்ன?

ஒரு நேர்க்கோடு இரண்டு குணங்களைக் கொண்டு விளக்கலாம்: ஒன்று அதன் சரிவு, மற்றொன்று அதன் வெட்டும் நிலைகள். (பழக்கமாக செங்குத்து வெட்டும் நிலைகள்)

முடிவிலியான வகை நேர்க்கோடுகள் ஒரே விதமான சரிவைப் பெற்றுள்ளது. (அதாவது அவை சரி ஒத்த தூரத்தில் அமைகிறது); அதேபோல் முடிவிலியான வகை நேர்க்கோடு, ஒரு வெட்டும் நிலைக் குறிப்பின் வழியாகச் செல்லும்; ஆனால், அவைகளில் ஒன்றே ஒன்று கொடுக்கப்பட்ட சரிவையும் வெட்டும் நிலையையும் கொண்டதாக அமையும். நமது நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் சரிவின் மதிப்பு 8 அதாவது வருமானம் 10 அலகுகள் உயர்ந்தால் (படுக்கிடைதூரம்) நுகர்ச்சி (செங்குத்துதூரம்) 8 அலகுகளாக உயரும். கணக்கியல் முறையில் இதனை $\triangle c/\triangle y$ அல்லது $dc/dy$ என்ற வகையில் குறிப்பிடுகிறோம். இச் சரிவுக்கு இறுதி நிலை நுகர்ச்சித்திறன் (marginal propensity to consume) என்று கீன்சு அழைக்கிறார். இறுதி நிலைச் சேமிப்புத்திறன் அல்லது சேமிப்பு சார்பு தொடர்பின் சரிவு; ·2 என்ற மதிப்பைப் பெறுகிறது. (வருமானம் ஒரு அளவிற்கு உயர்ந்தால், அந்த உயர்ந்த அளவு வருமானத்தின் ஒரு பகுதி நுகராமையால், அதனைச் சேமித்தாக வேண்டும் என்பதால் $\triangle c/\triangle y + \triangle s/\triangle y$ என்பவை ஒன்றுக்குச் சமமான மதிப்பைப் பெறும்.

நுகர்ச்சி, சேமிப்பு சார்பு தொடர்புகளின் வெட்டு நிலைகள் இங்கு மூலத்தின் வழியாகச் செல்வதால், சுன்னம் என்ற மதிப்பைப் பெறுகின்றன.

மேற்காட்டியவாறு அமைந்துள்ள எளிய நடை பொருந்திய சேமிப்ப, நுகர்ச்சிச் சார்பு தொடர்புகளைப் பயன்படுத்தத் தேவையில்லை. நுகர்ச்சிச் சார்பு தொடர்புக்குக் கீழ்க்காணும் வாய்பாடு அமைந்துள்ளது என்று வைத்துக்கொள்ளோம்.

$$c = 10 + \cdot 75\,y$$

இவைகளில் சிலவற்றின் மதிப்பை அட்டவணை 10–2-ல் தந்துள்ளோம்.

அட்டவணை 10–2.

கருத்தியலான மாற்று நுகர்ச்சிச் சார்பு தொடர்பு
(An Alternative Hypothetical Consumption Function)

| வருமானம் | நுகர்ச்சி | சேமிப்பு |
|---|---|---|
| 200 | 160 | 40 |
| 160 | 130 | 30 |
| 120 | 100 | 20 |
| 80 | 70 | 10 |
| 40 | 40 | 0 |
| 0 | 10 | —10 |

மேல் காட்டிய வாய்பாட்டைச் சமன்பாட்டில் காணும் c என்பதற்குப் பதிலீடு செய்கையில்,

$$y = c + i$$

என்பது

$$y = 10 + \cdot 75y + i$$
$$\cdot 25y = 10 + i$$
$$y = 40 + 4i$$

இந்த விளைவுகளைத் தருகின்றது.

ஆக முதலீடு 10 என்றிருந்தால், வருமானம் 80 என்று அமையும்; முதலீடு 30 என்றிருந்தால், வருமானம் 160 ஆக அமையும்; முதலீடு 23.5 என்று அமைந்தால், வருமானம் 134 என்றிருக்கும். இவ் விளைவுகளில் முதல் இரண்டு விளைவுகளை அட்டவணைக் குறிப்புகள் கொண்டு உறுதிப்படுத்தலாம். நுகர்ச்சிச் சார்பு தொடர்புக்குப் பதில் பயன்படுத்தும் சேமிப்புச் சார்பு தொடர்பு இவ்வாறு அமையும்.

$$s = y - c$$
$$s = y - (10 + \cdot 75\,y)$$
$$s = -10 + \cdot 25\,y$$

இவ்வமைப்பைக் கொண்ட நுகர்ச்சிச் (சேமிப்பு) சார்பு தொடர்புக்கான வரிக்கோட்டு விளக்கப் படத்தை 10-2-ல் காணலாம்.




படம் 10-2.

இதில் நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் சரிவு அல்லது இறுதிநிலை நுகர்ச்சித்திறன் ·75 என்ற மதிப்பைப் பெறும். இறுதிநிலைச் சேமிப்புத்திறன் ·25 என்ற மதிப்பைப் பெற்றுள்ளது. நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் இடைப்பிடிப்பின் (intercept) மதிப்பு 10 (கணக்கியல் முறையில், நுகர்ச்சிச் சார்பு தொடர்பில் காணப் படும் y என்பதற்குச் சுன்னம் என்ற மதிப்பைப் பதிலீடு செய்து வெட்டு நிலையின் (intercept) மதிப்பைப் பெறலாம்) சேமிப்பு அட்டவணையின் இடைப்பிடிப்பு (intercept),—10 என்ற மதிப்பைப் பெறுகிறது.

சராசரி நுகர்ச்சித் திறன் (Average propensity to consume) என்ற கருத்தையும் நாம் இங்குப் புகுத்தலாம். அதுபோல சராசரி சேமிப்புத்திறன் (Average propensity to save) என்ற கருத்தையும் புகுத்தலாம். இக்கருத்துகள் உயர்வுகளைக் (increments) கூர்ந்து கவனியாமல், மொத்த வருமானத்தின் நுகர்வு, சேமிப்பு ஆகியவைகளின் விகிதங்களின்மேல் கவனம் செலுத்துகின்றன. அவைகளை c/y, s/y எனக் குறிப்பிடுகிறோம். நுகர்ச்சிச் சார்பு தொடர்பை முதலாவதாக எடுத்துக் கொண்டால், அது

$$c = .8y$$

என்று அமையும்.

பிறகு $$\frac{c}{y} = \frac{\cdot 8y}{y} = \cdot 8$$

நமது இரண்டாவது நுகர்ச்சிச் சார்பு தொடர்பில்

$$\frac{c}{y} = \frac{10 + \cdot 75y}{y} = \frac{10}{y} + \cdot 75$$

முதல் நிலையில் சராசரித் திறன் மாறிலியாக அமைந்ததோடு அல்லாமல், அது இறுதிநிலை திறனுக்குச் சமமாக உள்ளது. இரண்டாவது நிலையில் சராசரித் திறன் மாறிலியாக அமையவில்லை; ஆனால், வருமானம் உயர்ந்து செல்லும்போது அது குறைந்து செல்கிறது; இறுதிநிலை நுகர்ச்சித் திறனின் ·75 என்ற மதிப்பை ஒரு வரையறையாக்கி அதை அணுக முற்படுகிறது.

சராசரி சேமிப்புத் திறனை ·2 என்ற மதிப்பைப்பெறும் அளவிற்கு முதல் நிலையில் கணக்கிடலாம். அதுபோல $-\frac{10}{y} + \cdot 25$ என்ற மதிப்பைப் பெறுவதற்குக் கணக்கிடலாம்.

இறுதிநிலை, சராசரி அளவுகளின் தொடர்பை விளக்கப் பொருளியலில் காணப்படும் பொது விதிகளில் மூன்றை, இந் நிலைகள் விளக்குகின்றன; (a) இறுதிநிலைச் சராசரியை மிஞ்சினால், சராசரி உயர்ந்து செல்லும்; (b) இறுதிநிலை சராசரியைவிடக் குறைந்தால் சராசரி குறைந்து செல்லும்; (இத் தொடர்புகள், இறுதிநிலை உயர்ந்து சென்றாலும், குறைந்து சென்றாலும் அல்லது மாறிலியாக அமைந்தாலும், பொருந்தும்); (c) இறுதிநிலை மாறிலியாகவும் சராசரிக்குச் சமமாகவும் இருந்தால் சராசரியும் அதேபோல் மாறிலியாக அமையும். (d) இறுதிநிலை உயர்ந்து சென்றாலும் அல்லது குறைந்து சென்றாலும், ஏதோ ஒரு நிலையில் சராசரியுடன் சமமாக அமைந்தால், அந்த நிலையில் சராசரி அதிகபட்ச (maximum) மட்டத்தை அல்லது குறைந்தபட்ச (minimum) மட்டத்தைப் பெறும்.

ஒரு குறிப்பிட்ட நிலையில் சராசரி நுகர்ச்சித் திறனை எளிதில் அளவிடலாம். இதை நுகர்ச்சிச் சார்பு தொடர்பில்உள்ள குறியை மூலத்திலிருந்து வரும் கோடு இணைக்கிறது. இக் கோட்டின் சரிவு சராசரி நுகர்ச்சித் திறனை அளவிடுகிறது என வரிக்கோட்டுப்பட விளக்கம் அமைகிறது. சராசரிச் சேமிப்புத் திறனையும் அதேபோல் அளவிடலாம்.

நமது முதல் உதாரணத்தில் இதற்கான விடையைக் கீழ்க் காணும் வகையில் கண்டோம்.

$$y = 5i$$

அதுபோல் இரண்டாவது உதாரணத்தில் இதற்கான விடை பின்வருமாறு :

$$y = 10 + 4i$$

5, 4 என்ற எண்களைப் 'பெருக்கிகள்' (multipliers) எனக் குறிப்பிடலாம். ஏனெனில், முதலீட்டின் மாற்றம், வருமானத்தை 5 மடங்கு அல்லது 4 மடங்காகப் பெருக்குகிறது என்பதை மேல் குறிப்பிட்ட வாய்பாடுகளின் வாயிலாக அறியலாம்.

பெருக்கிகளின் பருமனை எவை நிர்ணயிக்கின்றன என்பதை எளிதில் காணலாம். நுகர்ச்சிச் சார்பு தொடர்பைப் பொதுக்குறிகளால் பின்வருமாறு அமைக்கலாம்.

$$c = a + by$$

இதில் a, b, ஆகியவைகள் மாறிலிகள் ($a = 0$, $b = \cdot 8$ என்பது முதல் கூறிய நுகர்ச்சிச் சார்புத் தொடர்பைக் குறிக்கின்றது; $a = 10$, $b = \cdot 75$ என்பது இரண்டாவது தொடர்பைக் குறிக்கிறது. மேல்காணும் $c = a + by$, என்ற பொதுச் சமன்பாட்டை, வருமான சமநிலைக்கான சமன்பாட்டில் காணும் c என்பதற்குப் பதிலீடு செய்தால் நமக்குக் கிடைப்பது :

$$y = a + by + i$$

$$\text{அல்லது, } y\,(1 - b) = a + i$$

$$y = \frac{a}{1-b} + \frac{1}{1-b}\,(i)$$

$\frac{1}{1-b}$ என்ற 'பெருக்கி' (multiplier) b–என்பதன் மதிப்பை ஒட்டி அமைந்துள்ளது. bன் மதிப்பு என்பது நுகர்ச்சிச் சார்பு தொடர்பு அல்லது இறுதிநிலை நுகர்ச்சித் திறனின் சரிவை உணர்த்துகிறது.

$$\text{எனவே 'பெருக்கிகளை'} \quad \left(\frac{1}{1 - \text{இறுதிநிலை நுகர்ச்சிதிறன்}}\right) \left(\frac{1}{1 - MPc}\right) \text{அல்லது}$$

(1– இறுதிநிலை நுகர்ச்சித்திறன்) (MPc) அதாவது (1–MPc) எனக் குறிப்பிடலாம். (1-MPc) என்பது இறுதிநிலைச் சேமிப்புத் திறனுக்குச் சமமாதலால், பெருக்கி என்பது இறுதிநிலைச் சேமிப்புத் திறனின் முறைமாருக (reciprocal) அமைந்துள்ளது.

மிகச் சிக்கலான நுகர்ச்சிச் சார்பு தொடர்புகளுக்கான கணக்கியல் முறை கடினமாகக் காணப்படுவதால், இறுதிநிலை நுகர்ச்சித் திறன் (MPc), சராசரி நுகர்ச்சித்திறன் (APc) இறுதிநிலைச் சேமிப்புத் திறன் (MPs) சராசரி சேமிப்புத்திறன் (APs) பெருக்கி (multiplier) இவைகளிடையே நிலவும் தொடர்புகள் மாறுதவை. விளக்கப்படம் 10-3 மேலும் சிலவகை நுகர்ச்சிச் சார்புத் தொடர்புகளை விளக்குகிறது.




படம் 10-3.

சார்பு தொடர்பு A என்பது ஒன்று என்ற மதிப்பைப்பெற்ற மாறிலியான இறுதிநிலை நுகர்ச்சித் திறனைக்கொண்டது. இதன் சராசரி நுகர்ச்சித்திறன் (APc)$<1$ என்ற மதிப்பைப் பெற்றுள்ளது. இது படத்தின் (எதிர்நிலை மதிப்பைக்கொண்ட இடத்தில் இருந்து) சுன்னம் என்ற மதிப்பிற்கு உயர்ந்து சென்று (அதாவது X என்று குறியிட்ட இடத்தில்) இறுதியாக 1 என்ற மதிப்பை அணுகுகிறது.[1]

B என்ற சார்பு தொடர்பைக் குறிக்கும் இறுதிநிலை நுகர்ச்சித் திறனின் மதிப்பு ஒன்றுக்கு மேம்பட்ட மதிப்பிலிருந்து படிப்படியாகக் குறைந்து ஒன்று என்ற மதிப்பை இறுதியாகப் பெறுகிறது. (அதாவது X என்ற இடத்தில் அம் மதிப்பைப் பெறுகிறது); அதற்குப் பிறகு தொடர்ச்சியாகக் குறைந்த மதிப்பைப்பெற்று வருகிறது. சராசரி நுகர்ச்சித்திறன் 'ஒன்றை'விட உயர்ந்த மதிப்பிலிருந்து 'ஒன்றுக்'குச் சமமான மதிப்பைப் பெறும்வரை

[1] C என்பதன் எதிர்நிலை மட்டங்களுக்குப் பொருள் ஒன்றும் வழங்க முடியாது. அட்டவணை A என்பதைக் குறிக்கும் கோடு X என்ற இடத்திலிருந்து ஒரு வேளை புறப்படலாம்.

குறைந்து செல்கிறது. (இது Z என்ற குறியில் நிகழ்கிறது) அதற்குப் பின் மதிப்புக் குறைந்து செல்கிறது.

C என்ற சார்பு தொடர்பு உயர்ந்த மதிப்பைப்பெற்று வருகிறது. ஆயினும் கொடுக்கப்பட்ட வரையறைகளுக்குள் அது '1'க்குக் குறைந்த மதிப்பைப் பெறுகிறது. சராசரி நுகர்ச்சித் திறன் ∞ (infinity) (முடிவிலி) என்ற மதிப்பிலிருந்து (அதாவது வெட்டுமிடத்திலிருந்து இடைப்பிடிப்பு (intercept) என்ற மதிப்பிற்குக் குறைந்து செல்கிறது. (அதாவது W என்ற குறி உள்ள இடத்தில்); அதற்குப்பின் 'V' என்ற குறியுள்ள இடம்வரை தொடர்ந்து குறைந்து செல்கிறது. அவ்விடத்தில் சராசரி நுகர்ச்சித்திறன், இறுதிநிலை நுகர்ச்சித்திறன் இரண்டும் சமமாக அமைகிறது. V என்ற இடத்திற்கு அப்பால் இறுதிநிலை நுகர்ச்சித்திறன் சராசரி நுகர்ச்சித்திறனை மிஞ்சுகிறது; சராசரி நுகர்ச்சித்திறன் உயர்ந்து செல்கிறது.

இந் நோக்குகள் ஒவ்வொன்றையும் மாணவர்கள் உதாரணங்களால் உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். பின்னர் இங்குக் காணப்படும் நுகர்ச்சிச் சார்பு தொடர்புகள் ஒவ்வொன்றுக்கும் ஏற்றவாறு அமைந்துள்ள சேமிப்பு சார்பு தொடர்புகளை வரைந்த பின்னர் இச் சார்பு தொடர்புகளைக் கொண்டு இறுதிநிலைச் சேமிப்புத்திறன் (MPs), சராசரி சேமிப்புத்திறன் (APs) ஆகியவைகளின் தொடர்புகளை விளக்கவேண்டும்.

நுகர்ச்சிச் சார்பு தொடர்பு வளைவு கோட்டுத் தன்மையைப் பெற்றிருப்பதால், இறுதிநிலை நுகர்ச்சித் திறன் (MPC) அல்லது இறுதி நிலைச் சேமிப்புத் திறன் (MPS) எப்பொழுதும் மாறிக் கொண்டேயிருப்பதால், 'பெருக்கியின்' மதிப்பும் மாறிக்கொண்டேயிருக்கிறது. எனவே, குறிப்பிடத்தக்க வகையில் முதலீடு உயர்ந்தால், இதனால் வருமானத்திற்கு ஏற்படும் விளைவை, முந்தைய வருமானத்துடன் இணைக்கும் பெருக்கிகளைக் கொண்டு மதிப்பிட முடியாது. ஆனால், ஒரு குறிப்பிட்ட வருமான வீச்சின் இறுதிநிலை மாற்றங்களை ஏற்றுக் கொள்ளும் 'சராசரிப் பெருக்கியைக்' (average multiplier) கொண்டு அளவிடலாம். ஆனால், நுகர்ச்சி சார்புத் தொடர்பு உண்மையாக கோடுடைய வடிவத்தினின்று வேறுபட்ட வடிவத்தைப் பெற்றால், 'பெருக்கி' கருத்துப் (multiplier concept) பயன்படாது.

## நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் காரண காரியப் பகுப்பாய்வு

## (A Priori Analysis of the Consumption Function)

நுகர்ச்சி ஒரு நிலைத் தன்மையான சார்பு தொடர்பு என்ற கருத்தைக் கீன்சு என்பவர் தமது வேலை, வட்டி, பணம் இவைகளுக்கான பொதுக் 'கோட்பாட்டில்' (General theory of Employment Interest and Money)[1] என்ற நூலில் மிகத் தெளிவாக முதலில் வெளிப்படுத்தினார். ஆயினும் இதே கருத்தை இவர்க்கு முன் வெளியிட்ட பல ஆசிரியர்களைக் குறிப்பிடுவது கடினமல்ல.

ஆல்ப்ரெட் மார்ஷல் (Alfred Marshall) என்பவர் மொத்த வருமானம், சேமிப்பு ஆகிய இவைகளுக்கிடையே நெடுங்காலத்திற்கு ஏற்ற தொடர்பு ஒன்று அமைந்துள்ளது என்றும், அத்தொடர்பு குறுங்காலத்தில் காணப்படாது என்றும் ஏற்றுக்கொண்டதை, ஏ.சி பிகு[2] (Pigou) என்பவர் குறிப்பிட்டுள்ளார். வேறு பல ஆசிரியர்கள் மொத்த வருமானத்திற்கும் சேமிப்புக்கும் குறுங்காலத் தொடர்புண்டு என்பதை ஏற்றுக் கொண்டார்களே ஒழிய அதன் முக்கியத்துவத்தைக் குறிப்பிடத் தவறி விட்டார்கள். ஆயினும், இக் கருத்துகள் வருமான நெளிவுகளுடன் தொடர்புடையது என்று மட்டும் கூறுமல் அவைகளின் முக்கியத்துவத்தையும் ஜெ.எம். கிளார்க் (J.M- Clark)[3] என்பவர் தமது 'வியாபாரச் சகடங்களில் மிகச் சிறந்த காரணிகள்' (Strategic Foctors in Business cycles) என்ற நூலில் குறித்துள்ளார். ஆயினும் 'நுகர்ச்சிச் சார்புத் தொடர்பு' (consumption function) என்ற கருத்து கீன்சு அவர்களின் புத்தாக்கம் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஏனெனில், அக் கருத்து அவரது கோட்பாட்டமைப்பில் முதலிடம் பெற்றுள்ளது.

கீன்சுக்கு முந்திய பொருளாதார வல்லுநர்களிடம் உண்மை வருமானம் மாறுமிடத்து நுகர்ச்சிச் செலவுகள் எவ்வகை நடத்தைக் கொண்டுள்ளது என்று கேட்டால், அவர்கள் எல்லோரும்

[1] 'பொதுக் கோட்பாடு' அதிகாரங்கள் 8, 9, 10, இவைகளைக் காண்க. மேல் காணும் எளிய வருமான மாதிரிக்கு ஆன கீன்சின் விளக்கத்தை அவரது நூலில் அதிகாரங்கள் 1, 3. 5, இவைகளைக் காண்க.

[2] ஏ. சி. பிகு. 'வேலையும் சமநிலையும்' 2-ஆம் திருத்திய பதிப்பு மாக் மில்லன் 1952 பக்கம் 100.

[3] பொருளாதார ஆராய்ச்சிக்கான தேசியக் கழக வெளியீடு (1934) குறிப்பாகப் பக்கங்கள் 80-85; பக்கங்கள் 48-49; 167-168, 188, 202-203 ஆகியவைகளைக் காண்க.

கீன்சின் விடையை ஒத்த விடையையே அளிப்பார்கள். ஆனால், குறுங்காலத்தில், மொத்த வருமானம் மாறியாக அமையாமல் ஆயினும் இதில் அவர்கள் நாட்டமுடையவர்கள் அல்லர். ஒரு பொருளாதார அமைப்பின் ஆக்கத்திறனை ஒட்டி இணக்கமான வட்டி வீதங்களும், கூலி வீதங்களும் உண்மை வருமானத்தை மாறிலியாக அமைக்கும். பொருளியல் அமைப்பின் ஆக்கத்திறன் உயருமாகில், நெடுங்கால அமைப்பில் மொத்த வருமானமும், தலா வருமானமும் உயரும். ஆனால், நெடுங்காலத்தில் பலதரப் பட்ட காரணிகள் செயல் படுவதால், நுகர்ச்சியும் வருமானமும் கொண்டுள்ள தொடர்பை மட்டும் தனிப்படுத்தி ஆராய்வது முறையாகாது. எனவே, நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் புதுமை வினாவில் மட்டும் அமையாமல், விடையிலும் அமைந்துள்ளது.

தனியார் மட்டத்திலும் (மொத்த மட்டத்திலும்) நுகர்ச்சி, வருமானம் இவைகளின் தொடர்புக்கான கீன்சின் வாய்பாடுகள் பல கருத்துகளைக் கொண்டுள்ளன. அவைகள் பல தரப்பட்ட உறுதிப்பாட்டைக் கொண்டமையால், அவைகளை மிகச் சிறந் தவை என்று சொல்வதற்கில்லை. அவற்றில் இரண்டு குறிப்புகள் மிகவும் உறுதியானவை மட்டுமல்லாமல் மிகவும் அவசியமானவை களும் கூட:

(1) நுகர்ச்சிக்கான உண்மைச் செலவுகள், உண்மை வருமானத்தின் நிலையான சார்புத் தொடர்புகள்.

(2) இறுதிநிலை நுகர்ச்சித் திறன் நேர்நிலை மதிப்பைப் பெற்றுள்ளது. ஆனாலும் ஒன்றுக்குக் குறைந்த மதிப்பைப் பெற்றுள்ளது.

மேற்கூறிய வாதத்திற்குத் தொடர்பில்லாமல் அமைந்துள்ள சில கருத்துகளைக் கீழே வழங்கியுள்ளோம்.

(3) சராசரி நுகர்ச்சித் திறனைவிட இறுதிநிலை நுகர்ச்சித் திறன் குறைந்து அமைந்துள்ளது. (அதாவது வருமானம் உயரும் போது சராசரி நுகர்ச்சித் திறன் குறைந்து செல்கிறது).

(4) வருமானம் உயரும்போது இறுதிநிலை நுகர்ச்சித் திறன் குறைந்து செல்கிறது.

தனது வாதத்தில் கீன்சு ஆங்காங்கே சில புள்ளியியல் சான்று களைத் தந்தாலும், அவரது வாதத்தைப் பார்க்கும்போது அவரது நுகர்ச்சிக்கான கருதுகோள்கள், உள் ஆராய்ச்சிகளாலும்,

சாதாரண நோக்குகளாலும் அமைந்துள்ளன என முடிவு கூறலாம். அவரது 'அடிப்படை உளவியல் விதி' (fundamental psychological law) என்பதையும் நிலையில்லாக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு வெளியிட்டார். கீன்சின் நுகர்ச்சிச் சார்புத் தொடர்பு உள்நோக்குகளைக் (intution) கொண்டு அமைந்த, கொடுக்கப்பட்ட விருப்பங்களிடையே நுகர்வோரின் 'அறிவுடை' நடத்தையைக் கொண்டு அமைந்துள்ளது. ஆயினும் பல பொருளியல் வல்லுநர்கள் அமைத்த உளவியல் எடுகோள்களை அடிப்படையாகக் கொண்டு விளையும் மக்கள் நடத்தைக்கான காரண காரிய (a priori) தொடர்புகளைக் கீன்சு விளக்கத் தவறிவிட்டார். ஆயினும், நுகர்ச்சி, வருமானம் ஆகியவைகளின் தொடர்புகளை, நுகர்வோரின் விருப்பங்களின் பொதுப் பகுப்பாய்வுடன் பொருத்தி அமைக்கவும், அல்லது அவைகள் வழிவருவதற்குமான பணியைப் பின்வந்த பொருளியல் வல்லுநர்கள் செய்தார்கள். இப் பணி சிற்றினப் பொருளியல் பகுப்பாய்வில் சிறந்ததொரு பணியாக அமைந்து உள்ளது.

ஒரு குறிப்பிட்ட பண்டத்தின் பயன் அதன் இருப்பு உயரும் போது குறைகிறது என்று உணர்த்தும், குறைந்து செல் பயன் பாட்டு விதியைப் பயன்படுத்தி, எல்லாப் பண்டங்களின் பயனும், குறைந்து செல் பயன்பாட்டு விதியுடன் தொடர்புடையதால் அவைகளின் பயனும் குறைகிறது என்று சிலர் வாதிக்கிறார்கள். வருமானம் குறைந்து செல் பயன்பாட்டு விதியுடன் தொடர்பு டையது என்ற வாய்பாட்டை மார்ஷெல் என்பவரும் வேறு பல மேதைகளும் வழங்கினார்கள். ஆயினும் வருமானம் உயர்வுகள் எல்லாவற்றையும், நுகராது ஒரு பகுதியை மட்டும் நுகர்வார் என்ற கருத்திற்கு மார்ஷெலின் வாய்பாடு ஆதரவு அளிப்ப தில்லை. இதற்காக அக் கருத்துடன் குறைந்து செல் (ஆனல்) நேர்நிலை மதிப்பைப் பெற்ற) சேமிப்பின் இறுதி நிலைப் பயன்பாடு என்ற வேறு ஒரு கருத்தை உடன் சேர்க்க வேண்டும். வருமானத்தை நுகரவேண்டும் அல்லது சேமிக்க வேண்டும்; இதற்காக உத்தமப்பாகுபாடு, நுகர்ச்சி, சேமிப்பு ஆகியவைகளின் இறுதி நிலைப் பயன்பாடுகளை ஒட்டி அமைகிறது. வருமானம் உயர்ந்தால் நுகர்ச்சி, சேமிப்பு இரண்டும் மீண்டும் சமமாகும் வரை பாகுபாடு செய்வார்கள். ஆனல், இப்பொழுது வருமானத்தின் பாகுபாடு இறுதி நிலைப் பயன் பாட்டின் குறைந்த மட்டத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளது. சேமிப்பின் இறுதிநிலைப் பயன் குறைந்து செல்வதற்குப் பல விளக் கங்கள் இருப்பினும், நுகர்ச்சி, சேமிப்பு இவை இரண்டும் பயன் என்ற கருத்தின் அடிப்படை என்பதைக் கிளாசிக்கல் வட்டி வீத

ஆராய்ச்சிகள் உள்ளடக்கியது என்பது தெளிவு. மேலும் இக் கருத்து வட்டி வீதம் பெயர்ந்தால், நுகர்ச்சி, சேமிப்பு இவைகளின் இறுதிநிலைகளும் இடம் பெயரும். பயன் உச்சப்பாட்டிற்கான ஒருமுக வாய்பாடு, வட்டி நெகிழ்வுத்திறன், சேமிப்புக்கான வருமான நெகிழ்வுத்திறன் இவைகள் இரண்டின்வழி வரும் நிலைகளை உள்ளடக்கியவைகளாக அமையவேண்டும்.[1]

கீன்சின் சார்பு தொடர்புக்கு ஆதரவு அளிக்கும் காரணகாரிய வாதத்திற்கு அதிக கவனம் செலுத்தாமைக்குக் காரணம்கூறலாம். நடப்பு வட்டி வீதம் 'r' என்பதற்கு எதிர் உணர்வு செய்யும் வகையில் 'c' என்பது மாறுகிறது என்ற கருத்துக்கு அவரது நுகர்ச்சிச் சார்பு தொடர்பு ஆதரவு அளிக்கிறது. ஆயினும் இந்தத் தொடர்பு மிகவும் சிறந்த தொரு தொடர்பு என்று இன்று ஒருவரும் கருதுவதாகத் தெரியவில்லை. ஆயினும் ஒரு குறிப்பிட்ட தொடர்பு பல காரண காரிய தேற்றங்களைக் (Theorems) கொண்ட அமைப்புடன் பொருந்தி அமைந்துள்ளது என அறிவது பயனுள்ளதாகும். ஆனால், காரண காரிய வாதங்கள், தொடர்புகளின் அளவை (Quantitative) அடிப்படையாகக் கொண்ட பரிமாணங்களைப் (dimensions) பற்றியும், அல்லது தொடர்புகளின் நிலை பேற்றைப் (Stability) பற்றியும், ஒன்றும் கூறுவதில்லை. நுகர்ச்சிச் சார்புத் தொடர்பு (வெளிப்படையாக) நிலைபேறு உடைய தொடர்பை விளக்குகிறது என்பதையும், அது மொத்தச் செலவுகளின் நெளிவுகளை விளக்குகின்றது என்பதையும் வெளிப்படுத்துகிறது என உணர்தல் மிகவும் அவசியம்.(இறுதிநிலைச் சேமிப்புத்திறன் ·005 அல்லது ·05 என்ற மதிப்புகளுக்கிடையே அமைந்திருந்தால் அத் தொடர்புகளைப் பற்றி நாம் அதிகம் சிந்திக்க வேண்டியதில்லை). நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் நிலைபேற்றையும் அதன் தரத்தைப் (Qualitative) பற்றிப் பரிமாணத்தையும், புலவழி (empirical) சான்றுகளைக் கொண்டு விளக்கலாம்.

வேறோர் இடத்தில், 'காரண காரியத் தொடர்பு வாதத்தைச் சுருக்கமாக விளக்குவோம். இவைகளுக்கு வேறு எவ்விதப் பயனுமில்லை. இதே காரணத்தால், சராசரி நுகர்ச்சித் திறன் (APc) இறுதிநிலை நுகர்ச்சித் திறன் (MPc) ஆகியவைகளின் தொடர்பைக் காரண காரிய வாதங்கள் அடங்கிய கருத்துகளால் விளக்கப் போவதில்லை. இது ஒரு சிக்கலான பிரச்சினை; ஆயினும் காரண காரியப் பகுப்பாய்வு பயனற்றது. இருப்பினும் புலவழி வாதத்திற்கும், காரண காரிய வாதத்திற்கும் (குறிப்பாக) பிராய்ட்மென்

[1] இதற்கான விளக்கத்தை இவ் வதிகாரத்தின் பின் சேர்க்கையில் (Appendise) காண்க.

(Friedman), டூசென் பெரி (Duesenberry) ஆகியவர் ஆதரவு காட்டுகிறார்கள். நுகர்ச்சி, வருமானம் ஆகியவைகளின் நெடுங்காலத் தொடர்பு விகிதாசாரத் தொடர்பு என்பது அவர்களது அடிப்படைக் கருத்து. (சராசரி நுகர்ச்சித் திறன் இறுதிநிலை நுகர்ச்சித் திறனுக்குச் சமம் என்பது). அவர்களது 'குறுங்கால' (short-run) அல்லது 'தாற்காலிக' (temprary) நுகர்ச்சிச் சார்புத் தொடர்புகள் அமைப்பளவில் மாறுபட்டு இருப்பதுபோல் அவர்களது வாதங்களும் மாறுபட்டிருக்கின்றன. ஆயினும், இறுதிநிலை நுகர்ச்சித் திறன் 'அடிப்படையாக' (basic) அல்லது 'நெடுங்காலத்தில் (long-run), சராசரி நுகர்ச்சித் திறனைவிட (APc) குறைந்து அமைந்துள்ளது என்ற கருதுகோளை, வேறு மாற்றுக் காரண காரிய அமைப்புக் கொண்டு விளக்கலாம்.

காரண காரியப் பகுப்பாய்வு பல எடுகோள்களைக் கொண்டது என்பது குறிப்பிடத் தக்கது. அவைகளில் சிலவற்றை இங்குக் குறிப்பிடுவோம். நுகர்வோரின் விருப்பங்கள் கொடுக்கப் பட்டவை என்பது ஒன்று; அவர்கள் கற்பதுமில்லை; முன்னேறுவதுமில்லை; அவர்கள் எப்பொழுதும் மாறிக் கொண்டிருக்கும், புதுப் பண்டங்களை வழங்கும், நுகர்ச்சிக்கான புதிய போக்குகளை வழங்கும் உலகத்தினின்று தனித்து இயங்க முற்படுகிறார்கள். நுகர்வதனால் ஏற்படும் மனநிறைவுகளைப் புதிய தரங்களைக் கொண்டு மதிப்பிடவும் வழங்குகிறது. குறைந்த பட்ச உளவியல் எடுகோள்களைப் பயன்படுத்தி, கால வரம்பில்லாத அறிவுடை மாந்தரின் நடத்தையைக் காரண காரியப் பகுப்பாய்வு விளக்குகிறது. ஆகவே, காரண காரியப் பகுப்பாய்வு கருதுகோள்களை வழங்குமே தவிர, நடத்தையைப் பற்றிய 'விதிகளை' (laws) வழங்காது. இக் கருதுகோள்கள் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டும் பயன்படும்; இவைகளைக் கொண்டு, மாறும் உலகில் கால ஓட்டத்தில் ஏற்படும் விளைவுகளுக்கான பொதுக் கருத்துரைகளை முன்னறிவிக்க முடியாது.

## நுகர்ச்சிச் சார்பு தொடர்பு கருதுகோளுக்கான புலவழி சான்றுகள்: வரவு செலவுத் திட்டங்களின் ஆராய்ச்சி

## (Empirical support for the Consumption Function Hypothesis Budget Studies)

கீன்சின் சார்பு தொடர்பு கருதுகோள் காரண காரிய முற்கோள் (postulates) வழிவந்த வாதத்தை ஒட்டி அல்லது புள்ளியியல் ஆராய்ச்சியை ஒட்டி அமையவில்லை என்பதை நாம் முன்பே குறிப்பிட்டோம். தொகுத்தறி முறைவாதம் (inductive

method of reasoning) அல்லது பகுத்தறி முறைவாதம் (deductive method of reasoning) ஆகிய முறைகளுக்குக் கீன்சின் வாதம் நல்ல எடுத்துக்காட்டாக அமையவில்லை. இருப்பினும், சில புள்ளியியல் விவரங்கள் கீன்சுக்குக் கிடைத்தன (இவைகளைப் பற்றி அவர் அறிவார் ஆயினும், அவற்றை அவர் குறிக்க வில்லை). அவ்விவரங்கள் அவரது கருதுகோளுடன் பொருந்தி அமைந்துள்ளனவாகக் காணப்படுகின்றன.

கடந்த 100 ஆண்டு காலத்தில் பல காலங்களிலும், பல நாடுகளிலும், குடும்ப வரவு செலவுத் திட்டங்களின் ஒப்பீட்டு ஆராய்ச்சி நடைபெற்று வந்தது. குடும்பங்களின் பல தொகுதிகளின், அல்லது அக் குடும்பங்களின் முழுநிறை மாதிரிகளின் (cross-section) வருமானத்தின் பருமன், அவ் வருமானங்களை எவ்வழியில் பயன்படுத்துகிறார்கள் என்பவைகளுக்கான விவரங்கள் சேர்க்கப்பட்டன. இவ் விவரங்கள், வழக்கில் உள்ள 'என்ஜெல்ஸ் விதி' (Engel's law) என்ற புலவழி கருதுகோளுக்கு ஆதரவு காட்டின. 'என்ஜெலின் விதி' பல வருமான மட்டங்களில், அவை எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றன என்பதற்கான விளக்கத்தைத் தருகிறது. (வருமானம் உயர்ந்தால், உணவு, வீடு இவைகளுக்கான செலவின் சதவீதம் குறைகிறது; உடை, குடும்ப நிர்வாகச் செலவு ஆகியவைகளின் சதவீதம் மாறிலியாக அமைகிறது; கல்வி, சுகாதாரம், பொழுதுபோக்குச் செலவுகள் ஆகியவைகளின் சதவீதம் உயர்கிறது.)[1] இவ் வாராய்ச்சி கவர்ந்த எல்லாக் குடும்பங்களின் பண்டங்களுக்கான எல்லா மொத்தச் செலவையும் (அல்லது சேமிப்புகளையும்) இவ் விவரங்கள் வெளிப்படுத்துகின்றன. கீன்சு பொருளாதார அமைப்பு முழுமைக்கும் வழங்கிய முற்றுக்கோளுக்கு ஏற்றவாறு குடும்ப வருமானத்திற்கும், குடும்பத்தின் மொத்த நுகர்ச்சிக்கும் தொடர்பு அமைந்துள்ளது என்று குடும்ப வரவு செலவுத் திட்டங்

1 ஏர்னெஸ்ட் என்ஜெல் (Ernst Engel) (1821-1896) என்பவர் ஜெர்மனியைச் சேர்ந்த புள்ளியியல் வல்லுநர். அவரது முடிவுகள் 1895-ம் ஆண்டில் Bulletin de l' Institut international de Statisque என்ற நூலில் வெளியிடப்பட்டது. அந் நூல் அவரது விதியை விளக்குகிறது. ஆயினும் உணவு, வீடு ஆகியவைகளின் செலவுகள் மிக முக்கியமானவை என்பதை அவருக்குப் பின் வந்த ஆராய்ச்சியாளர்களின் கருத்து வெளியிட்டுள்ளது. 'இகனாமிட்ரிக்கா', 25 (அக்டோபர் 1957) என்ற நூலில் 'எச். எஸ். அவுட்டேக்கர்' (H. S. Houthakker) என்பவர் எழுதிய 'என்ஜெல்ஸ் விதியின் நூறுவது பிறந்த தின விழாவை ஒட்டி செய்யப்பட்ட குடும்ப செலவு தோரணைகளுக்கானப் பன்னாட்டு ஒப்பீடுகள்' என்ற கட்டுரையில் பக்கங்கள் 532-51, 1857 என்ஜெல்ஸ் வெளியிட்ட விதியின் சுருக்கிய கூற்றைக் குறிக்கிறது. அதில் உணவுக்கான செலவுகள் மட்டும் குறிக்கப்பட்டுள்ளன. 'அவுட்டேக்கர்' (Houthakker) என்பவர் 30 நாடுகளின் 40 அறிக்கைகளைச் சுருக்கியுள்ளார். இவைகள் அனைத்தும் விதியின் குறுகிய கூற்றுடன் தொடர்புடையவை.

களின் ஆராய்ச்சி வெளிப்படுத்துகிறது; குறைந்த வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள் சேமிப்பின்மையைப் பின்பற்றுகின்றன; மிகுந்த வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள், வருமானத்தை விடக் குறைந்த அளவைச் செலவிடுகின்றன. குறைந்த வருமானத்திலிருந்து தொடங்கி, உயர்ந்த வருமானம் வரையுள்ள வருமானப் பங்கீட்டை நோக்குமிடத்து, சராசரி நுகர்ச்சி உயர்கிறது; ஆனால், வருமானத்தை விடக் குறைந்த வேகத்தில் உயர்கிறது என்பது புலனாகும். அதுபோல், வருமானம் உயர்ந்துகொண்டே போனால், அடுத்து வரும் வருமான உயர்வுகளில், குறைந்த அளவே நுகர்ச்சிக்காகப் பயன்படுகிறது. எனவே, இறுதிநிலை நுகர்ச்சித் திறன் (MPC) நேர்நிலை மதிப்பைப் பெற்றதோடு அல்லாமல், ஒன்றுக்குக் கீழ்ப் பட்ட மதிப்புடன், வருமானம் உயருமிடத்து, குறைந்து செல்லும் மதிப்பையும் பெற்றுள்ளது.

அண்மையில் நடந்த குடும்ப வரவு செலவுத் திட்டத்தின் ஆராய்சசி விவரங்களை விளக்கப் படம் 10–4 குறிக்கிறது.




படம் 10.4.

இப் படத்தில் காணப்படும் விவரங்கள் 1950-ஆம் ஆண்டு ஐக்கிய அரசுகளின் 12,500 நகர்ப்புறக் குடும்பங்களின் மாதிரிகளை விளக்குகின்றன.[1] செங்குத்து அச்சில் காணப்படும் வருமானத்தைப் பெற்றுள்ள குடும்பங்களின் சராசரி வருமானத்தையும், சராசரி நுகர்ச்சியையும், படத்தில் காணும் ஒவ்வொரு புள்ளியும் குறிப்பிடுகிறது. இப் புள்ளிகளை இணைக்கும் வளைகோடு நுகர்ச்சிக்கும் வருமானத்திற்குமுள்ள சராசரித் தொடர்பை விளக்குகிறது. எல்லா வரவு செலவுத் திட்ட ஆராய்ச்சிகளின் முடிவுகளை விளக்கும் வளைகோடுகள் படத்தில் காணும் தோரணையில் அமைந்திருக்கும்.

சராசரிகளைப் பொறுத்தமட்டில், நுகர்ச்சி நடத்தை ஒழுங்காக அமைந்துள்ளது; ஆனல், தனிப்பட்ட பலகுடும்பங்களைப் பொறுத்த மட்டில் அது ஒழுங்கற்ற முறையில் அமைந்துள்ளது என்பது படம் விளக்கத் தவறியது; ஆயினும் இது மிகவும் முக்கியமான உண்மை. உதாரணமாக 4,000 முதல் 5,000 டாலர்கள் வரையுள்ள வருமான மட்டத்தில் சராசரி வருமானம் $ 4,462 என்றும், சராசரி நுகர்ச்சிச் செலவு $ 4,450 என்றும் காணப்படுகிறது. ஆனல், தனி நபரின் நுகர்ச்சிச் செலவுகள் இந்தச் சராசரியின் வீச்சை நெருங்கி அமைந்துள்ளன. இவ் வருமான மட்டத்தில் உள்ள சில குடும்பங்கள் $ 1,500 டாலர்களுக்கும் குறைந்த அளவில் செலவு செய்திருக்கலாம்; சில குடும்பங்கள் $ 8,000-க்கு மேலும் செலவு செய்திருக்கலாம். வருமானம் என்பது ஒரு தொகுதியின் சராசரி நுகர்ச்சியை 'விளக்குகிறது'. ஆனல், அத் தொகுதியில் உள்ள பல குடும்பங்கள் செய்யும் செலவுகளை வேறு பல காரணிகள் வளப்படுத்துகின்றன. இருப்பினும், சராசரி அல்லது மொத்த நடத்தையில் மட்டும் நாம் நாட்டமுடையவர்களாகிறோம். அதனல் தனியார்களின் பல்வேறு நடத்தைகள் நமது ஆராய்ச்சியைக் கலைக்காது என்று சிலர் வாதம் செய்கிறார்கள். (ஆயினும் தனி நபர்களின் இத்தகைய பல் வேறுபட்ட நடத்தைகளைச் சில ஆசிரியர்கள் தங்கள் பகுப்பாய்வுகளின் அடிப்படைக் கருத்துகளாக அமைத்துள்ளனர்).

[1] இவ்வாராய்ச்சியை உழைப்புப் புள்ளியியல் கழகம், (Bureau of Labour Statistics) பென்சில்வேனிய பல்கலைக் கழகத்தின் நிதித் துறை, வாணிபத்துறைகளுக்கான வார்ட்டன் பள்ளி, (Wharton School of Finance Commerce of the University of Pennsylvania) என்ற நிர்வாகங்கள் மேற்கொண்டன. நுகர்வோரின் செலவுகள், வருமானங்கள், சேமிப்புகள்-இவைகளின் ஆராய்ச்சி (Study of Consumer Expenditures Incomes, and Savings) என்ற பெயரில் பின் கூறிய கழகம் வெளியிட்ட நூலில் காண்க. Vol. XVII (1957) என்பதிலிருந்து விவரங்கள் தரப்பட்டுள்ளன.

வரவு செலவுத் திட்டங்களின் ஆராய்ச்சி அனைத்தும் கீன்சின் எடுகோளுடன் பொருந்தி அமைந்து இருப்பதால், அதன் மீது நமக்கு நம்பிக்கைக்குக் காரணம் காட்ட வேண்டிய அவசியமில்லை. நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் எண்ணிக்கைப் பருமன்களை மதிப்பிடுவதற்கான சாதனத்தை, அத்தகைய ஆராய்ச்சிகள் நமக்கு வழங்குகின்றன. இறுதி நிலைச் சேமிப்புத் திறனை மதிப்பிடுவதற்கு இவ் வாராய்ச்சி பயன்படுகிறது என்று சொன்னால், அதன் பணியைக் குறைத்துக் கூறுவதாக அமையும் என்று சிலர் வாதிக்கிறார்கள். ஐக்கிய அரசுகளின் வருமான–நுகர்ச்சி கோட்டின் சரிவு .6 முதல் .8 என்ற மதிப்பு வீச்சில் அமைந்திருப்பதை வரவு செலவுத் திட்டங்களின் எல்லா ஆராய்ச்சிகளும் வெளிப்படுத்துகின்றன. சில சமயங்களில் அக் கோடு நெளிவுகளைப் (curvature) பெற்று அமையலாம்; ஆனால், பொதுவாக அக் கோட்டின் சரிவுப் பரிமாணம் நாம் மேல் குறிப்பிட்ட வீச்சுக்குள் அமையும்.

வரவு செலவுத் திட்டங்களின் ஆராய்ச்சியை, விவரங்களைப் பயன் படுத்தக் கிடைத்த மதிப்பீடுகளைக் கீன்சு நாட்டம் கொண்ட மொத்த நுகர்ச்சிச் சார்பு தொடர்புக்கு மாற்றியமைப்பது முறையானதாகுமா என்று சிலர் ஐயுறுகிறார்கள். இது வாதிக்கத் தக்க முறையாகும். நாம் இதுவரை விவாதித்த விவரங்கள் முழு நிறை மாதிரிகளின் பகுப்பாய்வின் விளைவுகளாகும். பலவகை வருமான மட்டங்களைக் கொண்ட குடும்பங்களிடையே, வருமானம் வேறுபட்டால் நுகர்ச்சி அப்படி வேறுபடுகிறது என்பதை அவ் விவரங்கள் வெளிக் காட்டின. ஆனால், குடும்ப மட்டத்தைத் தவிர்த்து, மொத்த அளவில் வருமானங்கள் மாறினால், நுகர்ச்சி எப்படி மாறுகிறது என்பதில் கீன்சின் எடுகோள் நாட்ட முடையதாகிறது. தனிநபர் நிலையில் இருந்து மொத்த நிலை மட்டங்களுக்குப் போக வேண்டுமானால் சில எடுகோள்கள் தேவை. ஆனால், அத்தகைய எடுகோள்களை நாம் மேற்கொள்ளத் தேவையில்லை.

மொத்த அளவை என்பது முதல் பிரச்சினை. வரவு செலவுத் திட்ட ஆராய்ச்சி விவரங்களைப் பயன் படுத்த வேண்டுமானால், மொத்த வருமானம் உயருமிடத்து, யாருடைய வருமானம் உயர்ந்தது என்பதை முதற்கண் அறியவேண்டும். இவ் வருமான உயர்வின் பெரும்பகுதி உயர் வருமானக் குடும்பங்கள் பெற்றனவா? அல்லது குறை-வருமானக் குடும்பங்கள் பெற்றனவா? என்பதை அறியவேண்டும். இறுதிநிலை நுகர்ச்சித் திறனை மட்டும் மதிப்பிடுவதில் நாம் நாட்ட முடையவர்கள் ஆதலால், வருமானம், நுகர்ச்சி ஆகியவைகளின் தொடர்பு நெளிவுகள் (curvature) மிகச்

சிறியவையாதலாலும் (அதாவது இறுதிநிலை நுகர்ச்சித் திறன்கள் ஒன்றானவை) மொத்த அளவை என்ற பிரச்சினையை நாம் தவிர்ப்பதில் தவறில்லை. அல்லது, மொத்த வருமானம் மாறுமிடத்து, பலதரப்பட்ட வருமான மட்டங்களையுடைய குடும்பங்களுக்கு, மொத்தப் பங்கீட்டில் அவ் வருமான மட்டங்கள் கொண்டுள்ள விகிதத்தில் அம் மாற்றம் பங்கிடப் படுகிறது என்ற எடுகோளை நாம் கொள்ளவேண்டும். பின் இறுதிநிலைத் திறனை (சரிவை) மட்டும் மதிப்பிடாமல், மொத்த சார்பு தொடர்பின் மட்டத்தையும் மதிப்பிட முடியும்.

மொத்த அளவைப் பிரச்சினை ஏற்படவில்லை என்றாலும், வருமானம் வேறுபாடுகளுக்கான விவரங்களை, வருமான மாற்றங்களின் நிலைகளுக்கு மாற்றுவது சாத்தியமா? முன்பு 5,000 டாலர்கள் வருமானத்தைப் பெற்று இப்பொழுது 6,000 டாலர்களைப் பெற்ற 100 குடும்பங்களின் சராசரி நுகர்ச்சியை முன்னறிவிக்கும் பணியில் ஈடுபட்டால், அக் குடும்பங்களின் நுகர்ச்சிக்கான நடத்தை, 6000 டாலர்களைப் பெற்ற குடும்பங்களின் சராசரி நுகர்ச்சிக்கான நடத்தையை ஒத்து அமையும் என்று முன்னறிவிக்கலாம். இந்நிலை சரிக்கட்டுவதற்கான காலத்தின் சில பகுதி வரை நீடிக்கும். ஆனால், வருமானப் பங்கீடு முழுவதும் ஒரே காலத்தில் மேல் நோக்கி அமைந்துள்ளது என்று வைத்துக்கொள்வோம். 5,000 டாலர்களை வருமானமாகப் பெற்ற குடும்பங்கள் இப்பொழுது 6,000 டாலர்களை வருமானமாகப் பெற்ற குடும்பங்களாக மாறி அமைகிறது: அதுபோல் 6,000 டாலர்களை வருமானமாகப் பெற்ற குடும்பங்கள் இப்பொழுது 7,200 டாலர்களைப் பெற்ற குடும்பங்களாக மாறுகிறது; 7,200 டாலர்களைப் பெற்றவை 10,000 டாலர்களைப் பெற்றவைகளாகவும்; 10,000 டாலர்களைப் பெற்றவை, 12,000 டாலர்களை வருமானமாகப் பெற்ற குடும்பங்களாக மாறுகின்றன. இதைக் கொண்டு புதிய \$ 6,000, \$ 7,200, \$ 12,000 வருமானங்களைப் பெற்ற குடும்பங்கள் முந்திய \$ 6,000, \$ 7,000, \$ 12,000 வருமானங்களைப் பெற்ற குடும்பங்கள் முன்பு நடந்ததைப் போல் இப்பொழுதும் நுகர்ச்சிக்கு அதே நடத்தையைப் பெறும் என நம்மால் உறுதியாக முன்னறிவிக்க முடியுமா? அமைப்பு வருமானத்தைப் பயன்படுத்தினால் குடும்பங்கள் (சராசரியில்) அவர்கள் விருப்பம்போல் நுகர்வதற்கான காரணத்தை எளிதில் விளக்கலாம். முன் கண்ட படத்தில் கண்டவாறு 4000 டாலர்கள் வருமானத்தைக் கொண்ட குடும்பம், அதன் முழு வருமானத்தையும் செலவு செய்து விட்டது; ஆனால், 6,500 டாலர்கள் வருமானத்தைப் பெற்ற குடும்பம் 500 டாலர்களைச் சேமித்தது. இதனால் இரு குடும்பங்களுக்கும் உண்ண,

உடுக்க, கல்வி கற்க, 4000 டாலர்கள் வருமானம் தேவைப்படுகிறது என்று சொல்ல முடியுமா? 6,500 டாலர்களை வருமானமாகப் பெற்ற குடும்பம் 500 டாலர்கள் சேமிக்க வேண்டுமானுல், வருமானம் இந்த மட்டத்தைவிட உயர்ந்த மட்டத்தில் அமைய வேண்டுமா? எது எவ்வாறு அமைந்தாலும், இக் குடும்ப நிர்வாகத்திற்கு 4000 டாலர்கள் வருமானம் போதாது என்பது தெளிவு. இத்தகைய பங்கீட்டைப் பெற்ற, குறைந்த வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள், குறைந்த அளவு வருமானத்தில் குடும்பத்தை நிர்வாகம் செய்து வந்தன. இன்றைக் குடும்பங்கள் பெறும் உண்மை வருமானத்தைவிட மிகக் குறைந்த உண்மை வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள் அதிகம் சேமித்து வைத்தன என்பதைக் கடந்த தலைமுறையில் சில குடுபங்களில் காணலாம். பல ஆண்டுகளில் உள்ள குடும்ப வரவு செலவுத் திட்டங்களை அடுத்தடுத்துக் கவனிக்குமிடத்து, வருமானத்திற்கு ஏற்ற நிலைகுலைவு நிலை (breakeven point), அக் குடும்பத்தின் சராசரி வருமானம் உயர்ந்து செல்லுமிடத்து. உயர்ந்து சென்றது என்பது தெளிவாக விளங்கும். சராசரி நுகர்ச்சித் திறனைவிட இறுதிநிலை நுகர்ச்சித்திறன் குறைவுபட்டிருப்பது என்பதைக் குடும்ப வரவு செலவுத் திட்டங்களின் ஆராய்ச்சி பிரதிபலிக்கிறது. ஆயினும் குடும்ப வரவு செலவுத் திட்டங்களின் ஆராய்ச்சி அமைந்துள்ள எல்லாக் குடும்பங்களின் சராசரி நுகர்ச்சித்திறன், சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த குடும்பங்களின் சராசரி நுகர்ச்சித் திறனை ஒத்து அமைந்தது. ஆயினும் இரண்டு குடும்பங்களின் வருமானம் இவ்விரண்டு கால வாம்பிற்குள் வருமானங்கள் இரண்டு அல்லது மூன்று மடங்கு உயர்ந்து அமைந்தன.

குடும்பத்தின் நுகர்ச்சிச் செலவுகளை நிர்ணயிப்பதற்கு, அமைப்பு வருமானத்தைவிட, (absolute income) தராதர வருமானம் (relative income) மிகச் சிறந்தது என இத் தகவல்களைக் கொண்டு சில பொருளாதார மேதைகள் (குறிப்பாக டூசென்பெரி (Duesenberry) என்பவர் வெளிப்படையாகக் குறிப்பிட்டார்). வாதிக்கிறுர்கள். வருமானப் பங்கீட்டினுல் ஏற்படும் சராசரி வருமானங்கள் எவ்வாறு அமைந்திருந்தாலும், குறிப்பாகக் குறைந்த வருமானங்களைப் பெற்ற குடும்பங்கள் சேமிப்பின்மையை மேற்கொள்கின்றன. அதுபோல் அதிக வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள் முறையாகச் சேமித்து வைக்கின்றன. டூசென்பெரி (Duesenberry) அவர்களது தராதர வருமான எடுகோளுக்குப் பல

பொருளாதார மேதைகள் ஆதரவு காட்டுகிருர்கள்.[1] முழுநிறை மாதிரி (cross-section) விவரங்களைக் கொண்டு, மொத்த வருமானம் அல்லது மொத்த நுகர்ச்சி ஆகிய இவைகளின் விளைவுகளை விளக்கத் தராதர வருமானம், அல்லது உண்மை வருமானம் அல்லது இரண்டும் சேர்ந்த ஒரு கலவை, பயன்படுமா என்பதற்கான எடுகோள்களை அமைக்க வேண்டும் என முடிவு செய்தால், தராதர வருமானக் கருதுகோளை நாம் ஏற்கவோ, அல்லது தவிர்க்கவோ தேவையில்லை. தராதர வருமானம் குடும்பநுகர்ச்சியை ஓரளவு நிர்ணயிக்கிறது எனக் கொண்டால், வருமானப் பங்கீட்டை மாற்ருத, மொத்த வருமான மாற்றத்தின் விளைவுகளை முழுநிறை மாதிரி (cross-section) விவரங்கள் ஒன்றும் கூறுவதில்லை.

நுகர்ச்சி ஆராய்ச்சிக்கு, வரவு செலவுத் திட்டங்களின் ஆராய்ச்சி இன்றியமையாத சாதனமாய், விளங்குகிறது. ஆனுல், மொத்த நுகர்ச்சி, மொத்த வருமானம் ஆகியவற்றின் தொடர்புகளை விளக்கத் தேவைப்படும் சான்றுகளை நேரடியாக வழங்குவதில்லை.

## காலத் தொடர் வரிசையின் (Time Series Data): 1929-41-விவரங்களிலிருந்து கிட்டும் புலவழி ஆதரவு
## (Empirical Support from Time Series Data 1929-41.)

வரவு செலவுத் திட்டங்களின் ஆராய்ச்சி விவரங்களை மொத்த வருமானத்துடன் தொடர்புடைய விவரங்களுடன் பொருத்தி அமைக்க வேண்டிய கடினமான பணி கீன்சின் கருதுகோளுக்குத் தேவையில்லை. நுகர்ச்சி, வருமானம் ஆகியவைகளுக்கான மொத்த விவரங்களை நமது நாட்டு வருமானம் அல்லது நாட்டு ஆக்கக் கணக்குகளிலிருந்து பெறலாம். அத்தகைய மதிப்பீடுகள் 1942-ஆம் ஆண்டில் ஐக்கிய அரசுகளுக்கு மிகப் பரந்த அளவை அடிப்படையாகக் கொண்டு கிடைத்தன.[2] கீன்சின் நுகர்ச்சித் தொடர்பின் விளக்கத்தையும் அதன் நிலைபேற்றையும் விளக்க இவ் விவரங்கள் முதல் முதலாகப் பயன்பட்டன.

1 ஜெ. எஸ். டூசென்பெரி அவர்களின் சேமிப்பும், நுகர்வோர் நடத்தை பற்றிய கோட்பாடு (ஹார்வர்ட் பல்கலைக்கழக அச்சகம் 1949). இதற்கான மாறுன கருத்தை, பணம், வாணிகம், பொருளாதார வளர்ச்சி (மாக்மெலன் 1951) என்ற பத்திரிகையில், ஜெ. டாபின் (J. Tobin) அவர்கள் எழுதிய தராதர வருமானமும், அமைப்பு வருமானமும், சேமிப்பும் என்ற கட்டுரையில் பக்கங்கள் 135-36 பார்க்கவும் எம். பிராய்ட்மென் (Friedman) அவர்களது நுகர்ச்சிச் சார்பு தொடர்புக்கான கோட்பாடு (பிரின்ஸ்டன் 1957 Princeton) நூலில் குறிப்பாகப் பக்கங்கள் 167-82 பார்க்க.

2 1929-ஆம் ஆண்டும் அதற்குப்பின் தொடர்ந்த பல ஆண்டுகளுக்கான நாட்டு வருமான மதிப்பீடுகள் 1931 தொடக்கத்தில் துவக்கப்பட்டன. ஆனுல், நாட்டு ஆக்க மதிப்பீடுகள் (நுகர்ச்சி செலவு உள்பட) போர்க் காலத்தில், போருக்காகச் செலவு செய்த எல்லா நிருவாகங்களின் கணக்குகளை நாட்டுக் கணக்கு முறையில் ஒருங்கமைப்பதற்காகச் செய்த முயற்சிகளின் விளைவுகள்,

1929 முதல் 1941 வரையுள்ள ஆண்டுகளுக்கான விவரங்களை விளக்கப்படம் 10-5-ல் குறித்துள்ளோம். படத்தில் காணும்




படம் 10-5.

டாலர் எண்கள், விலை மாற்றங்களுக்குத் திருத்தியமைக்கப்பெற்று 1954-ஆம் ஆண்டு விலைகளில் குறிக்கப்பட்டுள்ளன. போருக்கு முந்திய ஆண்டுகள் சிலவற்றில் காணும் செலவுக்குரிய மொத்த வருமானத்தையும், மொத்த நுகர்ச்சிச் செலவையும் சேர்ந்த கலவையைப் படத்தில் காணும் ஒவ்வொரு புள்ளியும் விளக்குகிறது. செலவுக்குரிய மொத்த வருமானத்திற்கும், மொத்த நுகர்ச்சிச் செலவுக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது என்பது தெளிவாக விளங்குகிறது. எனவே, இவ் விவரங்கள் கீன்சின் கருத்துகோள்களுக்கு மிகுந்த ஆதரவு காட்டுவதில் வியப்பில்லை. (படத்தில் காணப்படும் விவரங்கள் அனைத்தும் மிக அண்மையில் திருத்தி அமைக்கப் பெற்ற மதிப்பீடுகள். அவை போர் நிகழ்ந்த ஆண்டுகளுக்கு அல்லது போர் முடிந்த ஆண்டுகளுக்கான மதிப்பீடுகளைக் குறிப்பன அல்ல. ஆயினும் முதலில் கிடைத்த மதிப்பீடுகளை வெளிப்படுத்தும் படத்தினின்று இப் படம் சிறிது வேறுபட்டு அமைந்துள்ளது). வருமானத்தைப் பின் தொடரும் போக்கு

நுகர்ச்சிக்கு உண்டு என்பதைக் கீன்சு சரியாக ஊகம் செய்ததோடு அல்லாமல், இவை இரண்டும் மிக நெருங்கிய தொடர்புடையதாகவும் அமைந்துள்ளது. வேறு பல காரணிகள் நுகர்ச்சியை வளப்படுத்தினாலும் அவைகளின் மொத்த ஆதரவு மிகவும் குன்றியதாக அமைகிறது.

படத்தில் காணும் கோடு விவரங்களைக் குறைந்த வர்க்க முறையைப் (method of lesat squares) பயன் படுத்திப் பொருத்தியுள்ளது.[1] அதன் சமன்பாடு பின்வருமாறு:

$$C = 26.5 + .75\,di$$

நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் (இறுதிநிலைச் சேமிப்புத்திறன்) சரிவு .75 என்ற மதிப்புள்ளது என்பது இச் சமன்பாட்டின் பொருள் நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் உயரத்தை மாறிலியான அலகு குறிப்பிடுகிறது. இத் தொடர்பைப் பின்நோக்கி இழுத்துச் சென்று சுன்னம் (zero) வருமானம் (zero income என்ற மதிப்பிற்குப் பொருத்தினால் (இத்தகைய நிலைகளில் அத் தொடர்பிற்கு மதிப்புண்டு என்று எவரும் வாதித்ததில்லை) நுகர்ச்சி, 1954 விலைகளில் ஆண்டுக்கு $ 26·5 பிலியன் டாலர்களாக அமையும். நுகர்வோரின் வருடத்திற்கான நுகர்ச்சிச் செலவுகளை இரு கூறுக்கலாம். ஒன்று ($ 26·5 பிலியன்கள்) வருமானத்துடன் தொடர்பற்றது; மற்றது செலவுக்குரிய வருமானத்தில் மூன்றின் ஒரு பங்கு நுகர்ச்சிக்குடைய வருமானம் சராசரி மாறும் பொழுது நுகர்ச்சித்திறன் குறைந்து செல்கிறது என்பதை இவ் விவரங்கள் விளக்குகின்றன. 1954-ஆம் ஆண்டு விலைகளைக் கொண்டு அளவிடப்பட்ட அலகுகளில் $ 106 பிலியன் என்ற நிலையில், சராசரி நுகர்ச்சித்திறன் ஒன்று என்ற மதிப்பைப் பெறுகிறது.

கணக்கிடப்பட்ட நுகர்ச்சிச் சார்புத் தொடர்பைக் குறிக்கும் கோட்டிற்கு அப்பால் வெகு தூரத்தில் ஒரு புள்ளியும் அமையவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. தனக்குக் கிட்டும் வருமானம் தெரிந்திருந்தால் அவ் வருமானத்துடன் தொடர்புடைய நுகர்சசி எந்த ஆண்டிலும் 2·5 சதவீதத்திற்குமேல் அமையாது என்பது

[1] படத்தில் காணும் வரி, மற்ற எல்லா வரிகளையும்விட பின்வரும் சிறப்பைப் பெற்றுள்ளது. ஒவ்வோர் ஆண்டின் உண்மை நுகர்ச்சியை அளவிற்கும் அக் கோடு மதிப்பிடும் அவ்வாண்டின் வருமானததின் நுகர்ச்சி அளவிற்கும் உள்ள ஒவ்வொரு விலக்கத்தையும் (deviation) தற்பெருக்கம் (Squere) செய்தால், தற்பெருக்கம் செய்யபட்ட விலக்கங்களின் மொத்தத் தொகை சிறுமமாக அமைகிறது.

உறுதி. மேல் கொடுக்கப்பட்டுள்ள 13 ஆண்டுகளில் 8 ஆண்டுகளில் மட்டும், நுகர்ச்சி 1 சதவீதத்திற்குள் அமைந்தது.[1]

ஆக, மேல் கண்ட விவரங்கள் அனைத்தும் கீன்சின் ஊகங்களுடன் (guesses) பொருந்தி அமைந்துள்ளது. ஆனால், இதற்கும் ஒரு தவிர்ப்பு உண்டு இத் தொடர்பு நிலையானதாகக் காண்கிறது; இறுதிநிலைச் சேமிப்புத்திறன் 1க்குக் கீழ்ப்பட்ட (அதாவது மூன்றில் ஒரு பங்கு) மதிப்பைப் பெற்றுள்ளது. சராசரி நுகர்ச்சித் திறனைவிட இறுதிநிலை நுகர்ச்சித்திறன் குறைந்துள்ளது. (அது 1933ல் 1·015 என்ற மதிப்பையும்; 1941-ல்.86 என்ற மதிப்பையும் பெற்றுள்ளது). ஆனால், வருமானம் உயரும்போது இறுதிநிலை நுகர்ச்சித்திறன் குறைந்து செல்கிறது என்பதற்கான குறிப்புகள் காணப்படவில்லை.

கீன்சின் கருத்துகள் உண்மையாக, நிலையுள்ள, முன்னறிவிக்கக் கூடிய பொருளியல் தொடர்புகளுடன் பொருந்தி அமைந்ததோடு அல்லாமல், அன்னாரின் கருத்துகள் பொருளாதாரக் கொள்கைக்கு மிகவும் பயனுள்ள கருத்துகளாக அமைந்தன என்பது போருக்குப்பின் உள்ள ஆண்டுகளின் விவரங்களை ஆராய்ந்த ஐக்கிய அரசுப் பொருளாதார நிபுணர்களின் முடிவாகும். வேலை நிறைவுக்குத் தேவைபடும் முதலீடுகள் (அதாவது அரசு செலவுகள்) எவ்வளவு ஆகும் என்பதைக் கீன்சின் கருத்துகளைக்கொண்டு தெரியலாம். வேலை நிறைவு வருமானத்தை மதிப்பிட்டபின், அந்த வருமான மட்டத்தில் நுகர்ச்சி எப்படி அமையும் என்பதைக் கணக்கிட்டால், இவ்விரண்டு தொகைகளின் வேற்றுமை நுகர்ச்சிக்கு அல்லாமல் செலவு செய்த தொகையைக் குறிக்கும். அரசின் செலவுகளை ஒரு மட்டத்தில் நிறுத்திவிட்டால், பின் வேலை நிறைவை நிலைநாட்ட முடியும். பிறகு நிலைபேறின்மை, வளங்களை வீணாக்குதல் போன்ற தீமைகளை எக் காலத்திலும் தவிர்க்க முடியும்.

இந்தக் கருத்து மிக உண்மையான கருத்து. ஆனால், பல நிகழ்ச்சிகள் ஏற்பட்டமையாலும், சில புதிய கற்பனைகள் உருவானமையாலும் இக் கருத்துக்கான ஆதரவு குன்றியது. எனவே, கீன்சின் கருத்துகளைப் பின்பற்றிப் போருக்குப் பிந்திய ஆண்டுகளின் நிகழ்ச்சிகளை வலுவுடன் பார்க்க முடியாமல் போயிற்று.

[1] இந்த மாறிகளின் தொடர் போக்குக்கான உடன் தொடர்பு கெழுவின் (r) மதிப்பு .9917 1·0 என்ற மதிப்புடைய கெழுவாக அமைந்தால் இங்கு உடன் தொடர்பு நிறைவு பெற்றுள்ளது எனப் பொருள்படும். (அதாவது எல்லாப் புள்ளிகளும் கோட்டின் மேல் உள்ளன என்பது பொருள்.) 1941-ஆம் ஆண்டிற்கான விவரங்களைப் போர்க்கால அமித நிலைகளால் ஏற்பட்டவை என நீக்கி விட்டால் இச் சமன்பாடு $C = 18{\cdot}66 + 8{\cdot}16di$ என்று அமையும். இதன் உடன் தொடர்பு கெழுன் (r) மதிப்பு ·9943 என்று அமையும்.

குறிப்பிட்ட இப் பிரச்சினைகளை ஆராய்வதற்குமுன், படம் குறிப்பிடும் தொடர்பின் அமைப்பைச் சற்று விளக்குவோம். நுகர்ச்சிச் செலவுகளைச் செலவுக்குரிய வருமானத்தைக்கொண்டு குறிப்பிட்டோமேயல்லாமல், நாட்டு வருமானத்தை, அல்லது நாட்டின் மொத்த ஆக்கத்தைக்கொண்டு குறிப்பிடவில்லை என்பதை வாசகர்கள் குறிக்கவும். படத்தில் காணப்படும் விவரங்கள், விலை மாற்றங்களைக்கொண்டு திருத்தி அமைக்கப் பெற்றவை என்பதை வாசகர்கள் மேலும் குறித்துக் கொள்ளவேண்டும். அதாவது விவரங்களை உண்மை அலகுகளைக்கொண்டு குறிப்பிட்டுள்ளோம். இம் முடிவுகளில் தொக்கியுள்ள கருத்துகளையும், மேலும் பல பிரச்சினைகளையும் கீழே ஆராய்வோம்.

## சில புள்ளியியல் பிரச்சினைகள்
## (Some Statistical Problems)

### உண்மை வருமானமா? அல்லது பண வருமானமா?
### (Real or Money Income)

கீன்சின் கூற்றுகள் குறிப்பாக உண்மை வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு உணர்த்தப் பட்டன. சில்லறை விலைகள் 50 சதவீதம் உயர்ந்து வருமானம் மாறுமலிருந்தால், ஒருவரது நுகர்ச்சி (அதாவது வாங்கும் பொருள்களின் உண்மை அளவுகள்) பாதிக்கப்படுகிறது. இவ் விளைவும், வருமானம் மூன்றில் ஒருபங்கு குறைந்து, விலைகள் மாறுமலிருந்தால், ஏற்படும் விளைவிற்கு ஒத்த வகையில் அமையும். ஆனல், வருமானம் மூன்றில் ஒருபங்கு உயர்ந்தால், அது உண்மை நுகர்ச்சியையும், நுகர்ச்சியின் பண மதிப்பையும் பல்வேறு வகையில் பாதிக்கும். இவ் விளைவு விலைகள் மாறினவா இல்லையா என்பதை ஒட்டி அமையும். இதை விளக்க, அடிப்படைத் தொடர்பு பின்வருமாறு உள்ளது என்று வைத்துக் கொள்வோம்.

$$(1)\ \frac{C}{P} = 50 + \cdot 6\frac{y}{P}$$

இங்கு y, c ஆகியவை பண வருமானத்தையும், நுகர்ச்சிச் செலவுகளின் பண மதிப்பையும் உணர்த்துகின்றன. P என்பது விலை மட்டத்தைக் குறிக்கிறது. இருபுறங்களையும் P என்பதால் பெருக்கினல்

$$(2)\quad C = 50 + \cdot 6y$$

என்று அமையும். ஆகவே, நுகர்ச்சியின் பண மதிப்பு, உண்மை வருமானம், அல்லது பண வருமானம் இவைகளின் சார்பு தொடர்பாக அமையாமல், பண வருமானம், விலை மட்டம் ஆகியவைகளின் சார்பு தொடர்பாகவும் அமைகிறது.

பின்வரும் அட்டவணையில் காணும் கருத்தியல் நோக்குகள், மேல்காட்டிய நுகர்ச்சிச் சார்புத் தொடர்புடன் பொருந்தி அமைந்திருப்பதைக் காணலாம்.

| நோக்குகள் | Y | P | C | $\frac{y}{p}$ | $\frac{c}{P}$ |
|---|---|---|---|---|---|
| a | 100 | 1 | 110 | 100 | 110 |
| b | 200 | 1 | 170 | 200 | 170 |
| c | 200 | 1.5 | 195 | 133·3 | 130 |
| d | 350 | 1.5 | 285 | 233.3 | 190 |
| e | 350 | 2.0 | 310 | 175 | 155 |
| f | 400 | 4 | 440 | 100 | 110 |
| g | 400 | 1 | 290 | 400 | 290 |

இந் நோக்குகளை (கடைசி இரண்டு பத்திகளில் காணும் நோக்குகளை)ஒரு நாற்கூற்றில் (quadrant) C/P, Y/P என்பவை மேல்கூறிய பத்திகளை முறையே குறிக்கின்றன. இதன் விளைவாக வரும் நேர்க்கோடு நுகர்ச்சிச் சார்பு தொடர்பைக் குறிக்கிறது. படம் 10-6 A-பகுதியில் இதைக் காணலாம்.




A பகுதி




B பகுதி

படம் 10-6.

(பத்திகள் ஒன்று, மூன்று) ஆகியவைகளில் காணப்படும் நோக்கு களைப் படத்தில் B–பகுதியில் கண்டவாறு பொருத்தி அமைக்க லாம். இதன் c, y ஆகிய அச்சுகள் ஒன்று, மூன்று ஆகிய பத்தி களைக் குறிக்கின்றன. இதனால் விளையும் கோட்டின் அமைப்பு ஒழுங்கற்ற முறையில் அமைகிறது. அடிப்படைத் தொடர்பை உண்மை அலகுகளைக்கொண்டு வெளிப்படுத்தினால், பண அலகுகள் குறிப்பிடும் விவரங்களை, உண்மை அலகுகொண்டு குறிப்பிடப் பட்ட விவரங்கள் வெளிக்காட்டா.

மக்கள் பணத்தின் போலித் தோற்றத்திற்கு அடிமைகள் அல்ல என்பதைக் கீன்சு வலியுறுத்தினார். அவர்கள் பணத்திரை யைக் (Veil of Money) கிழித்து, அதன் வழியாகப் பணத்திற்குள் அடங்கிய உண்மைப் பருமாணங்களைப் பார்க்க முடியும், ஏன் உண்மையில் பார்க்கிறார்கள். இவ்வுண்மையை உறுதியாகக் கூறுவது ஒருவகையில் தவறாக இருக்கலாம். ஆயினும் மக்கள் அனைவரும் பணத்தின் போலித் தோற்றத்திற்கு அடிமைகள் என்பதை நாம் உணராமல் இல்லை. உதாரணமாக A என்பவர் இரண்டாம் உலகப் போரின் விளைவாகத் தமது வருமானம் 20 சத விதம் உயர்ந்திருப்பதைக் கண்டார். (ஆனால், அக் காலத்தில் விலை களும் அதே அளவிற்கு உயர்ந்து காணப்பட்டன.) எனவேதான், முன்பைவிட இப்பொழுது உயர்ந்த நிலையில் இருப்பதால், எல்லா வருமானத்தையும் செலவிடாமல் சிறிது தொகையைச் சேமிக்க வேண்டும் என்று கருதினார். இதேபோல்தான் திருமதி B என்ற அம்மையாரின் நிலையும். அவ்வம்மையார், விலைகள் மிக உயர்ந்து காணப் படுவதால், தம் குடும்பம் எப்பொழுதும் கடனில் மூழ்கி யுள்ளது என்று முணுமுணுத்தார். ஆனால், விலைகள் உயர்ந்த அளவிற்கு, கணவனது வருமானம் உயர்ந்திருப்பதை அவர் சட்டை செய்ய வில்லை. இவ்விரண்டு வகை விளைவுகளும் சாத்திய மானவை. ஒரு நிலையில் A என்பவர் தமது வருமானம் எண் அளவில் உயர்ந்திருப்பதைக் கண்டு மகிழ்கிறார்; ஆனால், விலைவாசி களின் உயர்ந்த எண்ணிக்கையைப் புறக்கணித்தார். மற்ற நிலையில் இதற்கு எதிர்மாறான உணர்ச்சியைக் காண்கிறோம். இரண்டுவகை உணர்ச்சிகளும் குறுங்காலத்தில் வழக்கில் உள்ளன; ஆனால், சில சமயங்களில் ஏதேனும் ஒருவகை உணர்ச்சி தலைதூக்கி நிற்கிறது. ஆயினும், இவ்வுணர்ச்சிகளின் விளைவுக்குப் பொருத்த மான கோட்பாட்டை எவரும் வழங்கவில்லை. மேலும் புள்ளி யியல் ஆராய்ச்சிகளில் பெரும்பாலனவைகள், 'சுருக்கப்பட்ட' (deflated) விவரங்களைப் பயன்படுத்தின. அதாவது வருமானம், நுகர்ச்சி இவைகளுக்கான விவரங்கள் விலை மாற்றங்களுக்குத்

திருத்தி அமைக்கப்பெற்ற விவரங்களைக் கொண்டு அமைக்கப் பெற்றவை.[1]

படம் 10-5-ல் அமைந்த போருக்கு முந்திய ஆண்டுகளின் விவரங்கள் நுகர்ச்சிச் சார்பு தொடர்புடன் பொருந்தி அமைந் துள்ளனவா, இல்லையா என்பதற்கு உண்மையில் மிகச் சிறிய ஆதரவைத் தருகிறது. இவ் விவரங்கள் சுருக்கி அமைத்த விவரங் களாக இருப்பதால் அல்லது பெருக்கி அமைத்த விவரங்களாக இருப்பதால், மிகப் பெரிய வேறுபாடு ஒன்றும் நிகழாது. இந்த வெளிப்படையாகத் தோற்றமளிக்கும் முரணுரைக்கு இரண்டு காரணங்கள் காட்டலாம். அவைகளில் ஏதேனும் ஒன்று அல்லது இரண்டும் இம் முரணுரையை விளக்குகின்றன.

(1) உண்மை நுகர்ச்சிச் சார்பு தொடர்பு விகிதாசாரத் துடன் மிக நெருங்கி அமைந்துள்ளவரை-அதாவது அத் தொடர்பை விளக்கும் வரிக்கோடு மூலத்தின் வழியாகச் செல்லும்வரை- எவ்வித விவரத்தை அதாவது கச்சா விவரத்தை அல்லது சுருக்கிய விவரத்தைப் பயன் படுத்துவதால் விளையும் வேறுபாடு குறை வாகும். மேல் காணும் கருத்தியலான எடுத்துக் காட்டுக் குறை பட்ட இறுதி நிலைத் திறனை (·6), ·725, 1·1 ஆகிய மதிப்புகளைப் பெற்ற சராசரித் திறனையும் பயன்படுத்தியது. ஆனால், சராசரி, இறுதிநிலைத் திறன்கள் இரண்டும் ஒரே தன்மையதாய் அமைந் தால், விலை மாற்றங்கள் பெருத்த வேற்றுமையை ஏற்படுத்த மாட்டா. (நுகர்ச்சி என்பது உண்மை வருமானத்தின் மாறிலி யான சதவீதம்; உண்மை நுகர்ச்சி, உண்மை வருமானம் இவ் விரண்டையும் விலை மட்டத்தால் பெருக்கிக் கிட்டிய தொகை எதுவாக இருந்தாலும், சராசரி இறுதி நிலைத் திறன்களின் அளவுகள் பாதிக்கப் படுவதில்லை.) நமது கருத்தியலான அட்டவணை எடுகோளாகக் கொண்ட இறுதி நிலைத் திறனைவிட உயர்ந்த அளவுத் திறனை ஐக்கிய அரசுகளின் விவரங்கள் உள்ளடக் கியவை. ஆகவே, நடுத்தர விலை நெளிவுகள், இத் தொடர்பைச் சிறிய அளவே பாதிக்கும். 1929 முதல் 1941 வரை உள்ள கால அளவில் விலை நெளிவுகள் நடுத்தர விகிதாசார முடையவைகளாக அமைந்தன.

[1] மிக உணர்ச்சியுள்ள பகுப்பாய்வையும், இவைகளின் வேறுபாட்டுக்கான (ஆனால், உண்மை நடத்தைக்கான கருதுகோள்களை அமைக்காமல்) விளக்கத்தை, அமெரிக்கன் பொருளியல் விமர்சனம் என்ற பத்திரிகையில் (XL March 1950) ஈ.காரி பிரௌன் (E. Cary Brown) அவர்கள் எழுதிய 'வருமானப் பங்கீட்டுக் கோட் பாட்டுடன் தொடர்புடைய நுகர்ச்சி வரிகளின் பகுப்பாய்வு' (Analysis of consumption taxes in terms fo the Theory of Income Determintion) பக்கங்கள் 74-89 காண்க.

(2) விலை மட்டங்கள் உண்மை வருமானத்துடன் ஒழுங்கான தொடர்புடையனவாய் அமையும்வரை, இறுதிநிலை அல்லது சராசரித் திறன்களில் பெருத்த வேறுபாடுகள் ஏற்பட்டாலும், அவைகளின் முறையான பண மதிப்புகளிடையே ஏற்படும் தொடர்பு நிலையுள்ளதாகும். உண்மை வருமானம் உயரும்போது விலை மட்டங்களும் உயர்கின்றன என்றும், உண்மை வருமானம் குறையும்போது விலை மட்டங்களும் குறைகின்றன என்றும் வைத்துக்கொள்வோம். அதே நேரத்தில் அம் மாற்றங்கள் முறையானவைகளாகவும், நேர்க்கோட்டமைப்பு உடையவைகளாகவும், உள்ளன என்று வைத்துக்கொள்வோம். இந்த நிலையில், பண வருமானம் நுகர்ச்சியின் பண மதிப்பு ஆகியவைகளின் தொடர்பு, நேர்க்கோட்டு வகையில் அமையாது; ஆனால், உண்மை நுகர்ச்சி, விலை மட்டங்கள் ஆகியவை, உண்மை வருமானத்துடன் நிலையான தொடர்பைப் பெற்றவரை பண வருமானம், நுகர்ச்சியின் பண மதிப்பு ஆகியவைகளின் தொடர்பு நிலையானதாக அமையும். போருக்கு முந்திய ஆண்டுகளில், விலை மட்டத்திற்கும், வெளிப்பாட்டு மட்டத்திற்கும் உறுதியான (ஆயினும் நிறைவற்ற) தொடர்பு அமைந்தது—தொழில் தேக்கக் (depression) காலங்களில் வருமானம் குறைந்து செல்லும்போது விலைகளும் குறைந்து சென்றன. அதுபோல் 'மீட்சி' (recovery) காலங்களில் வருமானம் உயர்ந்தபோது விலைகளும் உயர்ந்தன. இதே நிலை போர் தொடங்கிய காலங்களிலும் அமைந்திருந்தது. சுருக்கப் பட்ட விவரங்களைப் பயன் படுத்தாமையால், போருக்கு முந்திய ஆண்டுகளில் இத் தொடர்பு பாதிக்கப் பட்டமைக்கு இதுவும் ஒரு காரணமாக அமைந்தது.

போருக்குப் பிந்திய ஆண்டுகளின் தொடக்க காலத்தில் (இது நமது விவாதத்திற்கு அப்பால் பட்டது) நுகர்ச்சியின் பண மதிப்புகள், பண வருமானம் ஆகியவைகளின் உடன் தொடர்பு, அவைகளிடையே நிலவும் உண்மை மதிப்புகளுடன் மிக நெருங்கிய தொடர்புடையவைகளாக அமைந்தது வியக்கத் தக்கது. இது எப்படி நிகழ்ந்தது என்பதற்குப் பின்வரும் கருத்தியலான எடுத்துக்காட்டு விளக்கம் தருகிறது. உண்மை வருமானம் மிகக் குறுகிய நெளிவுகளைக் கொண்டு அமைந்தது என்ற எடுகோள் தேவை. ஆயினும் வருமானம் அல்லாத மற்றக் காரணிகளால், ஆண்டுக் காண்டு உண்மை நுகர்ச்சியில் ஒழுங்கற்ற மாற்றங்கள் ஏற்படுகின்றன என்று வைத்துக்கொள்வோம். உண்மை நுகர்ச்சி, உண்மை வருமானம் ஆகியவை இல்லாமல் செய்யும் அளவிற்குச் சதவீத அளவில், இந் நெளிவுகள் மிகப்

பெரியவைகளாக இருக்கத் தேவையில்லை. இவ் விவரங்களை விளக்கப் படம் 10-7-ன் A பகுதி விளக்குகிறது.




படம் 10 7.

மேல் குறிப்பிட்ட இக் காலத்தில் விலைகள் பெருத்த மாற்றங்களை உடையனவாய் காணப்படுகின்றன என்று வைத்துக் கொள்வோம். இதனுல் நுகர்ச்சியின் பண மதிப்புகளும் வருமானமும் வெகுவாகச் சிதறும் என்பதைப் படத்தின் B பகுதி விளக்குகிறது. (உயர்ந்த விலைகள் c, y ஆகிய இரண்டின் பணப் பருமன்களை மூலத்திலிருந்து வெளியே தள்ளும். அல்லது குறைந்த விலைகள் பணப் பருமன்களை மூலத்திற்கும் இழுக்கும் திறமையுள்ளவை ; இதனுல் உடன் தொடர்பு கெழுவின் மதிப்புகளைப் போலியான வகையில் உயர்த்தும். இத்தகைய நிலைமை போருக்குப் பிந்திய ஆண்டுகளில் ஐக்கிய அரசுகளில் ஏற்பட்டது. நுகர்ச்சி, வருமானம் ஆகியவைகளின் உண்மை உடன் தொடர்பு மதிப்புகளைவிட உயர்ந்த அளவு மதிப்பை அக் காலத்தில் ஏற்பட்ட பண வீக்க நிலை உண்டாக்கியது.

இதனுல் விளையும் நிலை மிகவும் வியக்கத் தக்க நிலையாகும். போருக்குப் பிந்திய ஆண்டுகளில் நுகர்ச்சியின் பண மதிப்பு, பண வருமானம் ஆகியவைகளின் உடன் தொடர்பு பண அளவை விட உண்மை அளவில் மிகவும் திருப்திகரமாக அமைந்தது எனச் சொல்வதற்கில்லை. ஆனுல், போருக்குப் பிந்திய ஆண்டுகளில் பண அளவில் அவைகளின் உடன் தொடர்பு நன்ருக அமைந்துள்ளது. நுகர்ச்சியின் பண மதிப்பு, வருமானத்தின் பண மதிப்பை ஒட்டி அமைந்துள்ளது என்பதற்கான கோட்பாட்டியல் அடிப்படை இல்லை. வருமானம் நுகர்ச்சியை நிர்ணயிக்கிறது என்ருல் அது உண்மை வருமானம் உண்மை நுகர்ச்சியை நிர்ணயிக்கிறது என்று பொருள்படும்.

## மொத்த வருமானமா? அல்லது செலவுக்குரிய வருமானமா?

## (Total or Disposable Income)

வருமானம் மாறுமிடத்து மனிதனின் நடத்தை எவ்வாறு மாறி அமைகிறது என்பதைக் கீன்சின் 'உளவியல்விதி' (Psychological law) விளக்கியது. ஆனால், வருமானம் என்ற கருத்து எவ்வகை வருமானத்தைக் குறிப்பிடுகிறது? வருமானம் என்பது நுகர்வோரின் செலவுக்குரிய வருமானத்தைக் குறிக்கிறதா? அல்லது அவரது மொத்த சம்பாத்தியத்தைக் குறிக்கிறதா? அதாவது வரிகள் விதிக்கப் படுவதற்குமுன் உள்ள மொத்த வருமானம்; அல்லது (கூட்டமைப்பு அல்லது கூட்டமைப்பு இல்லாத) தொழில் நிறுவனத்தின் பங்கீடு செய்யப்படாத இலாப பங்கைத்தான் முழு உரிமையாளர் அல்லது பகுதி உரிமையாளர் என்ற வகையில் பெற்ற மொத்த வருமானத்தைக் குறிக்குமா? நுகர்ச்சி நடத்தை உண்மை வருமானத்தை ஒட்டி அமைந்துள்ளது என்பதற்குப் பொருள் பின் வருமாறு: ஒருவரது வருமானம் வரிகளால் குறைக்கப் பட்டால், அவரது நுகர்ச்சி பாதிக்கப்படும். இதுவும், வரிகள் விதிப்பதற்கு முன் உயர்ந்த வருமானம் பெற்றிருந்த காரணத்தால், வரிகளுக்குப்பின் உள்ள உயர்ந்த வருமானத்தின் நுகர்ச்சி பாதிக்கப் படுவதற்குச் சமமாக அமைந்துள்ளது. சில குறிப்பிட்ட நிலைகளிலும், சில குறிப்பிட்ட நபர்களுக்கும் இப் பொதுக் கூற்று, பொருந்தாமல் போயினும், வரி விதிப்புகளைப் பொறுத்தவரை இப் பொதுக் கூற்றுப் பொருத்தமானதாக அமைந்து இருக்கிறது. ஆனால், பங்கீடு செய்யாத இலாபங்களைப் பொறுத்தவரை சிக்கல் மிகப் பெரியதாக அமைகிறது. (ஐக்கிய அரசுகளின் அதிகாரப்பூர்வ புள்ளியியல் விவரங்களில்) செலவுக்குரிய வருமானம் என்பது தனி உரிமையாளர் அல்லது பங்குதாரர்கள் தங்கள் நிறுவனங்களிலிருந்து திரும்பப் பெறும் தொகைகளை மட்டும் குறிக்காமல், அந் நிறுவனங்களிலிருந்து அவர்கள் பெறும் மொத்த சம்பாத்தியங்களையும் உள்ளடக்கியவை. இவ்வகை வருமானத்துடன் நுகர்ச்சி தொடர்புடையது என்றால், அவ் வருமானம் கூட்டமைப்பில்லா நிறுவனங்களின் சேமிப்பு 'மக்கள்சார் சேமிப்பு' (Personal saving) என்ற இனத்தை ஒழுங்கற்ற முறையில் உள்ளடக்கியது என்பது பொருள். இரண்டு ஆண்டுகள் ஒவ்வொன்றிலும் ஒரு விவசாயியின் வருமானம் ஒரே அளவாக இருந்தது என்றும்; ஆனால், அவனது வருமானத்தில் ஒரு பாதி, தன் தொழிலுக்கு வேண்டிய புதிய பொறித்தளவாடங்களை

வாங்கப் பயன் பட்டது என்றும் மறுபாதி தனது குடும்பச் செல விற்குப் பயன் பட்டது என்றும் வைத்துக்கொள்வோம். ஆனால், ஐக்கிய அரசுகளது செலவுக்குரிய வருமானம் என்ற கருத்தின்படி, அவ் விவசாயி ஒவ்வோர் ஆண்டும் தனது வருமானம் முழு வதையும் நுகர்ச்சிச் செலவுக்காகப் பயன்படுத்தினர் என்ற பொருளில் அமையும்.

இக் குறிப்புக்கு ஏற்ற ஒரே ஒரு புள்ளியியல் சான்று கிளீன் (Klien) அவர்களும் மார்கோலிஸ் (Margolis) அவர்களும் வழங்கிய முழுநிறை மாதிரி (Cross-section) பகுப்பாய்வாகும்.[1] கூட்ட மைப்பில்லாத தொழில்களின் உரிமையாளர்களது மொத்த வருமானங்கள், மொத்த சேமிப்புகள் (தொழில், மக்கள்சார்) ஆகியவைகளின் முழுநிறை மாதிரித் தொடர்புகளை இவ்வாசிரி யர்கள் வழங்கியுள்ளார்கள். இத் தொடர்புகளை அட்டவணைகள் வாயிலாகவும், வரிப் படங்கள் வாயிலாகவும் விளக்கியுள்ளார்கள். இத் தொகுதியில் காணப்படும் தொடர்புகள், மற்ற எல்லாத் தொகுதிகளில் காணப்படும் தொடர்புகளிலிருந்து மாறுபட்டு அமைந்துள்ளது; ஒவ்வொரு வருமான மட்டத்திலும், இத் தொழில் முனைவோர் தொகுதியின் மொத்தச் சேமிப்பு (தொழில்துறை, மக்கள்சார்) மிக உயர்ந்த நிலையில் அமைந்துள்ளன. ஆனால், மக்கள்சார் சேமிப்புகளை மட்டும், தொழிலிலிருந்து திரும்பப்பெறும் தொகைகளுக்கு எதிராகக் குறியிட்டு உணர்த்திப் பார்க்கையில், இத் தொடர்பு கூட்ட மைப்புத் தொழில் நிறுவனங்கள் அல்லது சம்பளம் பெறும் நிர்வாகிகள் ஆகியவர்களின் வருமான-சேமிப்புத் தொடர்பை ஒத்து அமைந்துள்ளது. தொழில் முனைவோர் தொகுதியில் உள்ள வர்களின் நுகர்ச்சிச் செலவுகள், அவர்களது மொத்த சம்பாத்தி யத்தைச் சாராமல், தொழில்களிலிருந்து தாங்கள் திரும்பப் பெறுந் தொகையைச் சார்ந்து அமைகிறது, என்ற கருத்து இவ்வாராய்ச்சியினல் புலனாகிறது.

ஆனல், கூட்டமைப்பு நிறுவனங்களின் சேமிப்புகளைக் கருது மிடத்து, செலவுக்குரிய வருமானம் என்ற கருத்தைப் பயன்படுத் தினல், இதுவரை கண்ட முடிவிற்கு நேர் மாறான முடிவை நாம் பெறுவோம். இரண்டு ஆண்டுகள் ஒவ்வொன்றிலும், கூட்டமைப்பு நிர்வாகத்தின் இலாப பங்கீடு (dividend rate) வீதம் ஒரே தன்மையதாய் உள்ளது என்று வைத்துக்கொள்வோம். ஆனல், இரண்டாம் ஆண்டில் அந் நிறுவனம், ஆதாயம் பெறவில்லை

[1] எல்.இரா. கிளீனும், ஜெ. 'மார்கோலிசும் கூட்டமைப்பில்லாத் தொழில்களின் புள்ளியியல் ஆராய்ச்சிகள்' பொருளாதாரம் புள்ளியியல் விமர்சனம் பாகம் 36 (பிப்ரவரி 1954) பக்கங்கள் 33-46.

என்பதால், முன்பு குவித்து வைத்திருந்த சேமிப்புகளிலிருந்து இலாப பங்கீட்டை வழங்கியது. ஆனால், ஐக்கிய அரசுகளின் செலவுக்குரிய வருமானம் என்ற கருத்துப்படி, இரண்டு ஆண்டுகளில் பங்குதாரர்கள் ஒரே தொகையை நுகர்ச்சிக்காகச் செலவிட்டார்கள் என்று பொருள்படும். தனியார்துறை நிறுவனத்தில் முக்கியப் பங்குதார் ஒருவருக்கு மட்டும் இந்நிலைப் பொருந்துமென ஐயுறலாம். ஆயினும் அத் தனித்துறை நிறுவனத்தின் எல்லாப் பங்குதாரர்களின் நிலையும், நிறுவனத்தின் நிர்வாகத்தில் சற்றும் தலையிடாத பங்குதாரர்களுக்கும் இந்நிலை ஓரளவு பொருந்தும்.[1] இவ் விளக்கத்திற்கு ஒரு விதப் புள்ளியியல் ஆதாரமுமில்லை.

## மொத்த வருமானமா? அல்லது தலா வருமானமா?
## (Aggregate or Per capita?)

விளக்கப் படம் 10-5ல் காணும் விவரங்கள் மக்கள் தொகை மாற்றங்களுக்குத் திருத்தி அமைக்கப் படவில்லை. ஆயினும் அத் தகவல்கள் மக்கள் தொகை மாற்றங்களுக்குத் திருத்தி அமைத்திருக்க வேண்டும் என்று சிலர் வாதிக்கிறார்கள். நுகர்வோரின் நுகர்ச்சித் திறன் மட்டம் மாறுவதால், மொத்த வருமான உயர்வு ஈர்க்கும் பயன்களில் மட்டும் கீன்சு நாட்ட முடையவரானார் என்று சிலர் இதற்கு ஆதாரம் காட்டுகிறார்கள். மக்கள் தொகை ஒரு நிலையுள்ளதாய் அமைந்தால் அதனால் ஏற்படும் மொத்த வருமான உயர்வின்பயன், மிகுந்த மக்கள் தொகை அடங்கிய அமைப்பின் வருமானம் உயர்ந்து ஆனால், தலா வருமானம் ஒரே நிலையில் அமைந்து இருப்பின் ஏற்படும் பயனைவிட வேறுபட்டு இருக்கும். எனவே, ஒப்பிடுகை செய்யும் கால அளவைகள் மிகுந்து காணப்பட்டாலும், அல்லது மக்கள் தொகை பெருகிக் கொண்டு போனாலும், வருமானம், நுகர்ச்சி ஆகியவைகளைத் தலா அளவை அடிப்படையாகக் கொண்டு அளவிடுமிடத்து நிலையுள்ளது எனக் கருதும் ஒவ்வொரு குறிப்பிட்ட தொடர்புகளை நல்ல வகையில் மதிப்பிட முடியும். எனவே, நுகர்ச்சிச் சார்பு தொடர்பைப் பயிலும் மாணவர் ஒவ்வொருவரும் இத் திருத்தத்தைப் பொருத்துகிறார்கள். (இத் தகவல்களை விளக்கப் படம் 10–5ல் பொருத்தினால் அதன் தோற்றம் ஒருவகையிலும் மாறாது. அலகுகள் வேறுபட்டு இருப்பினும், மாறிகளின் தொடர்பு போக்கைக் குறிக்கும் கோட்டின் சரிவு, இக் கோட்டைச் சுற்றியுள்ள சிதறல் தோரணி இவைகளின் தோற்றம் ஒரே தன்மையதாய் அமையும்). சில மாண

[1] இப் பிரச்சனைக்கு அதிக கவனம் செலுத்தும் ஒரே ஆசிரியர் இரா. எப் ஹராட் (R.F. Harrod) அவரது இயக்க இயல் பொருளாதார போக்கில், (லண்டன் மாக்மிலன் 1949) நூலின் பக்கங்கள் 47-48 காண்க.

வர்கள் ஒவ்வொரு குடும்பத்தைக் கொண்டு திருத்தி அமைத்துள்ளார்கள். ஏனெனில், குடும்பம் என்பது ஒரு நுகர்ச்சி அலகு என்று நாம் சாதாரணமாக அமைத்துக் கொள்கிறோம்.[2]

## காரணம் எத்திசையில் அமைந்துள்ளது ?

## (Which Direction of causation)

நாட்டு வருமானக் கணக்குகளில் காணப்படும் நுகர்ச்சி, வருமானம் இவைகளிடையே உள்ள மிக உயர்ந்த உடன் தொடர்பு மதிப்பை மிகுந்த கவனத்துடன் விளக்க வேண்டும். குறிப்பாக நுகர்ச்சி, செலவு, வருமானம் இவைகளிடையே இரு முகத் தொடர்பு உள்ளது என்பதை நினைவூட்ட வேண்டும். ஒன்று, நுகர்ச்சி, வருமானம் இவைகளிடையே உள்ள தொடர்பு; அதாவது நுகர்ச்சி உயர்ந்து அல்லது தாழ்ந்து, அல்லது உயர்ந்து செல்கிறது. அல்லது குறைந்து செல்கிறது என்பதற்குக் காரணம் வருமானம் உயர்ந்து அல்லது தாழ்ந்து இருப்பது; அல்லது வருமானம் உயர்ந்து செல்வது அல்லது குறைந்து செல்வதாகும். ஆனால், இவைகளிடையே வேறு ஒரு தொடர்பும் உள்ளது. மொத்த வெளிப்பாட்டின் மூன்றில் இரண்டு பங்கை நுகர்ச்சி உள்ளடக்கியிருப்பதால், நுகர்ச்சி, வருமானத்தை நிர்ணயிக்கும் முக்கியக் காரணியாக அமைகிறது. நுகர்ச்சி உயர்ந்து அல்லது குறைந்து காணப்பட்டாலும், அது உயர்ந்து அல்லது குறைந்து சென்றாலும், வருமானம் உடனடியாக அதற்கு ஏற்றவாறும் மாறி அமையும். வருமானம், நுகர்ச்சி, செலவு ஆகியவைகள் இடையே காணப்பெறும் மிக உயர்ந்த உடன் தொடர்பின் மதிப்பிற்குப் பின் கூறிய தொடர்பை நாம் மறக்கலாகாது. எனவே, மொத்த வருமானத்திற்கும், வெளிப்பாட்டின் மொத்தத்தின் முக்கியப் பங்கை நிர்ணயிக்கும் ஏதோ ஒன்றுக்கும் மிக உயர்ந்த உடன் தொடர்புண்டு என்பது தெளிவாகிறது. நுகர்ச்சி மாற்றம் வருமான மாற்றங்களுடன் தொடர்பில்லாத வகையில் அமைந்தால், உடன் தொடர்பு நல்ல முறையில் அமையும்.

இவ் விளக்கத்தை வளப்படுத்த வேண்டுமானால், பின் வரும் சோதனையை நடத்தவேண்டும். 'மிகப் பெரிய' அளவைக் கொண்ட—அதாவது 800 முதல் 1200 வரை உள்ள வீச்சமைந்த—காகிதத்

[2] செலவுக்குரிய தலா வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்ட தலா நுகர்ச்சிக்கான மாறிகளின் தொடர்போக்குக்கான சமன்பாடு $C = 171 \cdot 6 + \cdot 79\ di$ என்று அமையும். தலா நுகர்ச்சி, செலவுக்குரிய தலா வருமானம் ஆகியவைகளை 1954 ஆண்டு விலைகளில் 1929.40 ஆண்டுகளுக்கானவை. இதன் உடன் தொடர்பு கெழுவின் மதிப்பு .9946 (இவ்விவகாரத்தின் மூல நூலின் அடிக்குறிப்பு 13ஐப் பார்க்க.

துண்டுகள் ஒவ்வொன்றின்மீது ஒவ்வொரு தொப்பியை வைக்கவும். அதுபோல் மிகச் 'சிறிய அளவை'க் கொண்ட—அதாவது 160 முதல் 240 வரையுள்ள வீச்சமைந்த—மற்ெருரு காகிதத் துண்டுகளின்மீது இரண்டாவது தொப்பியை வைக்கவும். ஒன்றன்பின் ஒன்ருக இரண்டு குவியல்களிலிருந்து சோடியாக இரண்டு தொப்பிகளை எடுக்கவும். இச் சோடிகளை ஒன்று சேர்த்துக் கூட்டவும்; அவைகளின் மிகப் பெரிய தொகையை 'நுகர்ச்சி' என்று குறிப்பிடவும். இரண்டு தொப்பிகளின் மொத்தக் கூட்டுத் தொகையை 'வருமானம்' என்று குறிப்பிடவும். நமது நுகர்ச்சியை வருமானம் 'நிர்ணயிப்பதில்லை' ஆனுல், 'ராண்டம்' (Random) சோடிகளை நுகர்ச்சி சார்ந்து அமைகிறது என்பதை நமது பரிசோதனை தெளிவு படுத்துகிறது. இருப்பினும் நுகர்ச்சிக்கும் வருமானத்திற்குமிடையே நல்லதொரு உடன் தொடர்பு இருக்கத் தான் செய்கிறது; ஏனெனில், நுகர்ச்சியின் அளவு வருமானத்தின் அளவைவிட மேம்பட்டதாகக் காண்கிறது. நுகர்ச்சிக்கு மிக உயர்ந்த மதிப்பைக் கொடுத்தால், மற்ற எண்கள் குறைந்த மதிப்பைப் பெற்றிருப்பினும், வருமானம் தராதர உயர்ந்த மதிப்பைப் பெறும். ஏனெனில், ஒரு மொத்தத் தொகையை அதனுடைய மிகப் பெரிய உள்ளீடுடன் தொடர்பு செய்யப் படுகிறது.

நமது சோதனையில் கண்ட உடன் தொடர்பு 'நுகர்ச்சிச் சார்பு தொடர்பு' ஒன்று உண்டு என்பதையும்; அது உள்ளது என்பதையும் விளக்க ஏன் தவறியது. அதாவது, வருமானம் நுகர்ச்சியை நிர்ணயிப்பதில்லை; ஆனுல், நுகர்ச்சி வருமானத்தை நிர்ணயிக்கிறது? என்பதை நமது பரிசோதனை விளக்க ஏன் தவறியது? ஒரு கண நேரம் சிந்தித்தால் இதற்கான விடையைக் காண முடியும். காரணம் ஒருமுகத் தன்மையதானுல் (அதாவது நுகர்ச்சி வருமானத்தை நிர்ணயிக்கிறது; ஆனுல், வருமானம் நுகர்ச்சியை நிர்ணயிப்பதில்லை என்று இருந்தால்)—மிகப் பெரிய 'ராண்டம்' (Random) எண்கள் குறிப்பிடும் 'நுகர்ச்சிக்கும்' மிகச் சிறிய எண்கள் குறிப்பிடும் 'சேமிப்புக்கும்' (அல்லது முதலீட்டுக்கும்) உடன் தொடர்பு இராது என்று நாம் எதிர்பார்க்கலாம். தொப்பி தொகுதி ஒன்றிலிருந்து எடுக்கப் பட்ட தொப்பியின் மிகப் பெரிய எண்கள், மற்ெருரு தொகுதியிலிருந்து எடுக்கப்பட்ட மற்ெருரு மிகப்பெரிய எண்களுடன் எவ்வாறு தொடர்பு கொள்ள முடியும். தொப்பிகள் தொகுதியிலிருந்து எடுக்கப் பட்ட தொப்பிகளின் சோடி மதிப்புகளின் சிதறல் விளக்கப் படம் 10-8 A பகுதியில் காணுமாறு அமையும். நுகர்ச்சி, வருமானத்தைச் சார்ந்தும் அமையும் எனக் கொண்டால், அதற்கான சிதறல் விளக்கப் படம் B பகுதியில் உள்ளவாறு அமையும். B பகுதியில் உடன் தொடர்பு

நிறைவு பெற்றதாக (அதாவது கோட்டை ஒட்டி) அமைந்துள்ளது. ஏனெனில், நுகர்ச்சி, வருமானத்தைச் சார்ந்து அமைவது மிகப் பொருத்தமாக உள்ளது. மேலும் அத்தகைய சார்பு மிகவும் நிறைந்து காண்கிறது.




படம் 10-8.

நுகர்ச்சி-வருமானத் தொடர்பு (இதனால் சேமிப்பு — வருமானத் தொடர்பு) நுகர்ச்சி–சேமிப்புத் தொடர்பை உள்ளடக்கியது ஆகும். இதைக் கீழ்க்காணும் வகையில் விளக்க லாம்.

$$C = a + by$$

சேமிப்பு (s) என்பதை (y–c) என்று இலக்கணம் கூறினால்,

$$\text{பின்},\ C = a + b\,(c + s)$$

$$c\,(1-b) = a + bs$$

$$C = \frac{1}{1-b}\,(a+bs)$$

அல்லது $C = A + Bs.$

இதில் $A = \dfrac{a}{1-b}$

$B = \dfrac{b}{1-b}$ என்று அமையும்.

எனவே, நுகர்ச்சிச் சார்பு தொடர்பு உண்டு என்பதையும் அது நிலையானது என்பதை (இதற்கு மாறான நிலையுடன் தொடர்பில்லாமல் அமைந்தால்), c, s ஆகியவைகளின் தொடர்புகளை விளக்கும் விவரங்களைக் கொண்டு மதிப்பிடலாம். விளக்கப்படம் 10—9-ல் 1929-41 ஆகிய ஆண்டுகளுக்கான விவரங்களை உணர்த்தியுள்ளோம். இதே விவரங்களை முன் ஓர் இடத்தில் விளக்கப் படம் 10-5-ல் குறித்தோம். ஆனால், இங்குக் குறிக்கப்பட்டுள்ள விவரங்கள் புது அமைப்பைப் பெற்றுள்ளன. நுகர்ச்சி, சேமிப்பு

இவைகளுக்கிடையே ஒரு தொடர்புள்ளது என்றும், இதனுல், வருமானம் நுகர்ச்சியுடன் தொடர்பில்லாத வகையில் நுகர்ச்சிக் கும் வருமானத்திற்கும் ஒரு தொடர்பு உள்ளது என்றும் தெளிவாக விளங்குகிறது.




படம் 10.9.

படம் 10-9-ல் காணும் மாறிகளின் தொடர் போக்குக் கோட்டிற்கான சமன்பாடு பின் வருமாறு அமையும்:

$$C = 108.86 + 2.51s$$

இக் கெழுக்களிலிருந்து (Coefficients) முறையாக நுகர்ச்சிச் சார்பு தொடர்புக்கான சமன்பாட்டை வருவிக்கமுடியும். A யின் மதிப்பு.

$$A = \frac{a}{1-b} = 108 \cdot 86.$$

அது போல் Bயின் மதிப்பு

$$B = \frac{b}{1-b} = 2 \cdot 51s.$$

இரண்டாவது சமன்பாட்டிலிருந்து பெறுவது.

$$b = 2 \cdot 51 - 2 \cdot 51b$$

$$3 \cdot 51b = 2.51$$

$$b = \cdot 7151$$

இம் மதிப்பைச் சமன்பாடு (1) க்குப் பதிலீடு செய்கையில் கிடைப்பது.

$$108 \cdot 86 = \frac{a}{1 - \cdot 7151}$$

$$a = 31 \cdot 0$$

ஆக எதிர்மறை முறையில் கவனிக்கப்பட நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் மதிப்பு $C = 31.0 + \cdot 715di$. இம் மதிப்பு முன் நேரடியாகக் கணிக்கப்பட்டுப் பெற்ற மதிப்பிற்கு ஒத்து அமைந் துள்ளது. நுகர்ச்சித் தொடர்பின் முந்திய நேரடி மதிப்பு $C = 26 \cdot 5 + \cdot 75di$ என்று இருந்தது. இப்பொழுதுள்ள புதிய மாறிலியின் மதிப்பு முந்தைய மதிப்பைவிடச் சற்று உயர்ந்து காண்கிறது. அதுபோல் இப்போதைய புதிய சரிவு சற்றுக் குறைந்து காண்கிறது. இப் படத்தில் காணும் மாறிகளுக்கான தொடர்போக்குக் கோட்டை, விளக்கப் படம் 10-5-ல் பொருந் தினுல், இதற்கும், முன்பு வெளியிட்ட கோட்டிற்கும் எவ்வகை வேறுபாடும் தெரியாது. இப்போதைய மதிப்பு 'அடிப்படை யற்ற' (unbiased) மதிப்புடன் ஒத்து அமைகிறது; ஆனுல், முந்தைய மதிப்புடன் பொருந்தி அமையவில்லை.[1]

## நெடுங்கால நுகர்ச்சிச் சார்பு தொடர்பு

## (Long Period Consumption Function).

நுகர்ச்சி—வருமானத் தொடர்பு ஒரு சிக்கலான பிரச்சினை யாகும். அச் சிக்கல் அதன் அமைப்பைப் பற்றியதாகும். அத்

[1] டி. ஹாவெல்மோ. (T. Haavelmo) என்பவர் வழங்கிய அடிப்படை முறையைப் பற்றி இப் பத்திகள் அமைக்கப்பெற்றுள்ளன. அவர் அமெரிக்காவின் புள்ளியியல் கழகம் வெளியிடும் நூலில் 'இறுதிநிலை நுகர்ச்சித்திறனை அளவிடும் முறைகள்' என்ற பொருள் பற்றி ஒரு கட்டுரை வடித்துள்ளார். அந் நூலில் 42-ம் பக்கத்தில் (மார்ச்சு 1947) பக்கங்கள் 105-22 காண்க. நாம் இங்குக் குறித்துள்ள முறையும் ஹாவெல்மோ குறித்துள்ள முறையும் வேறுபாடானது. அவர் ஆராய்ச்சியை எகனுமெட்ரிக்ஸ் (Econometrics) முறையை அறியாதவர் புரிந்து கொள்வது கடினம். நாம் இங்கு அடிப்படை (bias) என்ற கருத்தை அவர் முறைப்படி வெளியிட்டிருப்பது குறிப்பிடத்தக்கதல்ல. ஆனுல், நுகர்ச்சிக்கான முன் கணிப்புகளின் தரப்பிழையை (Standard error) மதிப்பிடுவதற்கு இது நல்லதொரு முறையாக அமைந்துள்ளது. வருமானத்தை அடிப்படையாகக் கொண்ட நமது நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் மாறிகளின் தொடர்போக்கின் மதிப்பு 1·682. இது மூன்றில் இரண்டு வாய்ப்புகளைக் (Chances) கொண்டதாகும் எனப் பொருள்படும். இதனுல் 'உண்மை' நுகர்ச்சி என்பது $ 1.682. பிலியன்களுக்குள் அமையும். இம் மதிப்பை அதற்கான தொடர்போக்குச் சமன்பாடு தந்தது. சேமிப்பை அடிப்படையாகக் கொண்ட நமது நுகர்ச்சிச் சார்பு தொடர்பு மாறிகளின் தொடர்போக்கு $ 6·264 என்ற தரப்பிழை மதிப்பைப் பெற்றுள்ளது. இது ஹாவெல்மோவின் மதிப்பை விட நான்கு மடங்கு உயர்ந்ததாகும்.

தொடர்பு விகிதசம அளவை (Proportonality) அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளதா, அல்லது கீன்சு கூறியபடி அல்லது விவரங்கள் வெளிப்படுத்துவதுபோல், நுகர்ச்சியின் விகித வருமானம் உயருமிடத்துக் குறைந்து செல்லும் தன்மை யுடையதா என்பது விவாதத்திற்குரிய கருத்தாகும். ஆனால், வளர்ச்சி பெறும் அமைப்புகளின் நெடுங்காலத் தகவல்களுடன் இப் பிரச்சினை இணைந்துள்ளது. 20 அல்லது 25 ஆண்டுகளில் நமது பொருளாதார அமைப்பு அதன் ஆக்கத்திறனை இரண்டு மடங்கு பெருகச்செய்தால், நுகர்ச்சியும் அதே விகிதத்தில் மாறும் என்று உறுதியாகக் கூறமுடியுமா ? அதாவது அவ்வமைப்பில் நிறை வேலை உள்ளது என்ற எடுகோளுடன் நுகர்ச்சி இரட்டிப்புப் பொருந்தி அமையுமா ? அவ்வாறு நுகர்ச்சி இரட்டிப்பு மடங்கு பெருகி அமைந்தால், மொத்தத் தேவையை நிர்ணயிக்கும் மற்றக் காரணிகளின் (அதாவது முதலீடு, அரசு ஆகியவைகளின்) தேவை யும், வேலை நிறைவைக் காத்துப்பேண அதே விகிதத்தில் மாறி அமையும் எனப் பொருள்படும். நுகர்வோரின் தேவை குறைந்த விதத்தில் அமைந்தால், வேலை நிறைவைப் பேணிக்காப்பதற்காக, தேவையின் மற்றக் காரணிகள் வருமானத்தைவிட மிகுந்த விகிதத்தில் உயர்தல் வேண்டும். எனவே, பொதுச் செலவுகள் தராதர வகையில் அல்லது அமைப்பு வகையில் மிகுந்து காண வேண்டும் என்பது இதன் பொருளாகும். இத்தகைய போக்குச் சிலருக்குப் பிடிக்காத போக்காகும்; அல்லது முதலீட்டை வளப்படுத்தும் மொத்த வெளிப்பாட்டின் பங்கு உயரவேண்டும். இறுதித் தேவைகளைப் பூர்த்தி செய்யும் பண்டங்களை உற்பத்தி செய்வது முதலீட்டின் பணியாதலால், மொத்தத் தேவையுடன் தொடர்புடைய முதலீடு உயர்வதால் பல பிரச்சினைகள் உரு வாகும் என்பது சில பொருளாதார மேதைகளின் கருத்தாகும். அவ்வாறு முதலீடு உயர்ந்தால், இறுதியில் முதலீட்டை நிர்ணயிக் கும் பல காரணிகள் இதைவிட மிகுந்த அளவில் உயரவேண்டும் என்று இது பொருள்படும். அட்டவணை 10-3. இத் தொடர்புகளை வெளிப்படுத்துகிறது.

அட்டவணை 10-3

விகிதசம, விகிதசமமற்ற நுகர்ச்சி முன்னேற்றத்திற்கான விளக்கத் தொடர்ச்சிகள்

(Illustrative Sequences of Proportional and Non Proportional Development of Consumption)

| | இப்போது | இரட்டிப்பு வெளிப்பாட்டுடன் |
|---|---|---|
| A. விகித தசம அமைப்பு | | |
| மொத்த வெளிப்பாடு y | 100 | 200 |
| நுகர்ச்சி (c) | 70 | 140 |
| முதலீடு (i) | 15 | 30 |
| அரசு (g) | 15 | 30 |
| விகிதங்கள் | | |
| c to y | .7 | .7 |
| i to y | .15 | .15 |
| g to y | .15 | .15 |
| i to (c+g) | .176 | .176 |
| B. விகிதசமமற்றவை | | |
| y | 100 | 200 |
| c | 70 | 110 |
| i | 15 | 60 |
| g | 15 | 30 |
| விகிதங்கள் | | |
| c to y | .7 | .55 |
| i to y | .15 | .3 |
| g to y | .15 | .15 |
| i to (c+g) | .176 | .429 |

அறிவுடை நடத்தைகளுக்கான எளிய கருதுகோள்களிலிருந்து (axioms) வரும் புலவழி பகுப்பாய்வைக் கொண்டு இப் பிரச்சினையை அதிகம் விளக்க முடியாது. ஆனால், அநுபவவழி விவரங்களைக் கொண்டு இப் பிரச்சினையின் சில பகுதிகளை விளக்கலாம். நீண்ட காலங்களில் நுகர்ச்சிச் சார்பு தொடர்பு நிலையானது என்று எடுத்துக்கொண்ட பின்னர், அத் தொடர்பு

நேர் கோடாக அமைந்துள்ளது அல்லது விகிதசமமற்ற போக்கைக் கொண்டது என்ற கருத்துகள் அனைத்தும் குறிப்பாகப் பொருளற்ற உட்கருத்துகளைக் கொண்டவை என்பதை எளிதில் பார்க்கலாம். எடுத்துக்காட்டாக அட்டவணை 10-3ல் B பகுதியில் காணும் சார்பு தொடர்பு என்பது C = 30 + Ay என்றுள்ளது என வைத்துக்கொள்வோம். (இத் தொடர்பு அட்டவணையில் காணும் இரண்டு புள்ளிகளிலும் செல்லுகிறது) இந்தத் தொடர்பு 'இப்பொழுது' நிலையான தொடர்பு என்பது உறுதியானது. மக்கள் போக்கையும், சமூக நிறுவனங்களின் அமைப்புகளையும் இத் தொடர்பு பிரதிபலிப்பதால், (வேறுவகை விளக்கம் கிடைக்காத வரையில்) முந்தைய இருபது இருபத்தைந்து ஆண்டுகளில் இருந்த உற்பத்தித்திறனைவிட இருமடங்காகப் பெற்றுள்ள 20, 25 ஆண்டுகளுக்கு நிலையாக இருக்கும் என்று கூறலாம்.

மேற்கூறிய பத்தியின் இறுதியில் உள்ள தொடர்நிலை ஒழுங்கற்ற பொருளைக் கொண்டதாக அமைகிறது. நேர்கோடுடைய விகித சமமற்ற நுகர்ச்சிச் சார்பு தொடர்பு நீண்ட காலங்களில் உள்ள முன்னேக்கிச் செல்லும் வருமான மாற்றங்களின் முன்னறிவிப்புகளுக்குப் பொருத்தமாக அமைந்தால், பின் நோக்கிச் செல்லும் முன்னறிவிப்புகளுக்கும் அது பொருந்தி அமைய வேண்டும். 20 அல்லது 25 ஆண்டுகளுக்கு முன் மொத்த உற்பத்தி (வேலை நிறைவு நிலையில்) இரு மடங்காக அமைந்தது என்றால் அது இன்றைக்கு உள்ள உற்பத்தியின் பாதி அளவைக் குறிப்பிடும். அதாவது 50 என்ற அளவைப் பெறும். 50 என்ற மட்டத்தில் உள்ள வருமானம் C = B30 + Ay = 50 அதாவது மொத்த உற்பத்தி நுகர்ந்ததாகிவிடும். அதனால், அரசு அல்லது முதலீடு பயன்படுத்துவதற்கு எதுவும் மிஞ்சாது எனப் பொருள்படும். இன்னும் 25 ஆண்டுகள் பின்னேக்கிச் சென்றால், நுகர்ச்சி வருமானத்தை மிஞ்சியதாக அமையும்.

எனவே, முன்னேற்றம்அடையும் பொருளாதார அமைப்பில், நுகர்ச்சிச் சார்பு தொடர்புநேர் கோடாகவும், விகிதசமமாகவும் அமையமுடியாது என்று புள்ளியியல் விவரங்கள் எதையும் பார்க்காமல் தகவல் தெரிவிக்கலாம். ஆயினும் இந்த முடிவு பொருளாதார மேதைகள் எல்லோருக்கும் விளங்காத கருத்தாக அமைந்தது. ஆனால், புதிய விவரங்கள் அவர்களை இம் முடிவுக்கு இழுத்துச் சென்றன.

ஐக்கிய அரசுகளின் நாட்டு வருமான, நாட்டு ஆக்கக் கணக்குகளுக்கான மதிப்பீடுகளை, 1869 முதல் 1938 வரையுள்ள பத்தாண்டு கால விவரங்களை ஒன்றன்மேல் ஒன்றை அமைத்து,

சைமன் குச்னெட்ஸ் (Simon Kuznets) என்பவர் 1946-ஆம் ஆண்டில் வெளியிட்டார். அவரது மதிப்பீடுகளை அட்டவணை 10-4ல் காட்டியுள்ளோம். அவ் விவரங்களை விளக்கப்படம் 10-10ல் வரைந்துள்ளோம்.

அட்டவணை 10-4.

நாட்டு வருமான நுகர்ச்சிச் செலவுகள் 1896-1938
1929 ஆண்டு விலைகளில்

(National Income & Consumption Expenditure in 1929 prices, 1896-1938)

| பத்து ஆண்டுகள் | நாட்டு வருமானம் (பிலியன் டாலர்களில்) (1) | நுகர்ச்சிச் செலவுகள் (பிலியன் டாலர்களில்) (2) | 'சராசரி நுகர்ச்சித் திறன் (3) | தலா நாட்டு வருமானம் (டாலர்களில்) (4) |
|---|---|---|---|---|
| 1869-78 | 9.3 | 8.1 | .86 | 215 |
| 1874-83 | 13.6 | 11.6 | .86 | 278 |
| 1879-88 | 17.9 | 15.3 | .85 | 326 |
| 1884-93 | 21.0 | 17.7 | .84 | 344 |
| 1889-98 | 24.2 | 20.2 | .84 | 357 |
| 1894-1903 | 29.8 | 25.4 | .85 | 401 |
| 1899-1908 | 37.3 | 32.3 | .86 | 458 |
| 1904-13 | 45.0 | 39.1 | .87 | 502 |
| 1909-18 | 50.6 | 44.0 | .87 | 517 |
| 1914-23 | 57.3 | 50.7 | .89 | 546 |
| 1919-28 | 69.0 | 62.0 | .89 | 612 |
| 1924-33 | 73.3 | 68.9 | .94 | 607 |
| 1929-38 | 72.0 | 71.0 | .99 | 572 |

மூலம்: (Source) பத்திகள் (1) (2) ஆகியவைகளில் காணப்படும் விவரங்கள் சை. குச்னெட்ஸ்: 'நாட்டு ஆக்கம் 1869 முதல்' பக்கம் 119 பத்திகள் (3) (4) அதிலேயே (idem) 'நாட்டு வருமானம் முடிவுகளின் சுருக்கம்' (தேசியப் பொருளாதார ஆராய்ச்சிக் கழகம் 1946) பக்கங்கள் 53, 32.

சராசரி நுகர்ச்சித் திறன், வருமானம் (தலா வருமானம் உள்பட) உயர்ந்து சென்ற போதெல்லாம், ஒரே நிலையுள்ளதாய் (அதாவது '84, '89 ஆகிய மதிப்புகளை உடையதாய் அமைந்துள்ளது




படம் 10-10.

என்பதை அட்டவணையின் பத்தி(3) விளக்குகிறது. இரண்டு இறுதிப் பத்தாண்டுகளில் தலா வருமானம் விழுந்த போதுதான் சராசரி நுகர்ச்சித் திறன் உயர்ந்தது. அப்போது அது ·89 என்ற மதிப்புக்கு உயர்ந்த மதிப்பைப் பெற்றது. 1929–41 பத்தாண்டு காலத்திற்குக் கிட்டிய தொடர்பைக் குறிக்கும் விவரங்கள் 1869–78 ஆகிய பத்தாண்டுகளில் அமைந்திருந்தால், 1869-78 பத்தாண்டில் அமைந்த தலா, நுகர்ச்சி $ 395 என்ற மதிப்பைப் பெற்றதாகும்.[1] இது அப்பத்தாண்டின் தலா நாட்டு வருமானத்தைவிட இரு மடங்காக அமைந்திருக்கும். நுகர்ச்சிச் சார்பு தொடர்பு நிலையுள்ள தொடர்பு, அதன் இறுதிநிலை நுகர்ச்சித் திறன் ஒன்றுக்குக் கீழ்ப்பட்ட மதிப்பைப் பெற்றுள்ளது (அம் மதிப்புச் சராசரி நுகர்ச்சித் திறனுக்குச் சமமானது) என்ற விவரங்களுடன் குச்னெட்சின் (Kuznet's) புதிய விவரங்கள் பொருந்தி அமைந்துள்ளது. ஆனல், இரண்டாம் உலகப் போருக்கு முந்தைய வருடாந்தர விவரங்களில் வழிவந்த நுகர்ச்சிச் சாரபு தொடர்புடன் அதுபொருந்தி அமைய

[1] இவ் வெண்கள் பின்வருமாறு அமைக்கப்பெற்றன ; தலா நுகர்ச்சிக்கும், தலா நாட்டு வருமானத்திற்குமான (செலவுக்குரிய வருமானமல்ல) மாறிகளின் தொடர் போக்கு இரண்டும் 1929-ன் விலைகளைக் கொணடு 1929-41க்குப் பொருத்தப் பட்டது. இத் தொடர்பில் $ 215 என்ற மதிப்பைப் பெற்ற தலா வருமானத்தை நுழைக்கும் போது கிட்டிய நுகர்ச்சி மதிப்பீடு $ 395 இதற்கான மாறிகளின் தொடர் போக்குச் சமன்பாடு $C = \$ 289{\cdot}57 + 49\ ni$

வில்லை. இவ்விரண்டு வகை விவரங்களை ஒருங்கே பொருத்தி அமைக்க வேண்டியது மிக அவசியம் என்பது தெளிவு. விகித-சமத் தொடர்புடைய 'நீண்டகால' நுகர்ச்சிச் சார்பு தொடர்பும், இறுதிநிலை நுகர்ச்சித் திறன், சராசரி நுகர்ச்சித் திறனை விடக் குறைந்த அளவைப் பெற்ற 'குறுங்கால' நுகர்ச்சிச் சார்பு தொடர்பும் ஒருவேளை இருந்திருக்கலாம். ஆனால், இவை இரண்டும் எவ்வகையில், எத்தகைய தொடர்பைப் பெற்றன? என்பது புரியாத புதிராக உள்ளது.

இவ்விரண்டு தொடர்புகளை ஒருங்கே பொருத்தி அமைக்கும் பணியை முதல் முதலாக ஆர்தர் சிமித்தீஸ் (Arthur Smithies)[1] என்பவர் வழங்கினர். நுகர்ச்சிச் சார்பு தொடர்பு—அதாவது வருமான நெளிவுகளுடன் விகித சமமற்ற எதிர் உணர்வைக் கொண்ட நுகர்ச்சி—அந்தப் பத்தாண்டு காலத்தில் மேல் நோக்கிச் சென்றிருக்கலாம் என்று அவர் வாதித்தார். இதனால் வருமானம் உயரும்போது சராசரி நுகர்ச்சித் திறன் குறைவதைச் சரிக்கட்டலாம். இதனை விளக்கப் படம் 10-11 காட்டுகிறது.




படம் 10-11.

[1] 'போருக்குப் பிந்திய ஆண்டுகளின் தேவை I என்பதை முன்னறிவித்தல்' என்ற கட்டுரை எகனமெட்ரிக்கா, பாகம் 13, சனவரி 1945, பக்கங்கள் 1—14.

இப் படத்தில் 1866-78 பத்தாண்டுகளுக்கான அடிப்படை நுகர்ச்சிச் சார்புத்திறன் $CF_1$ என்ற கோட்டினுல் குறிக்கப் படுகிறது. அப் பத்தாண்டில் சராசரி வருட வருமானம் $y_1$ ஆகும்; இவ் வருமானம் $C_1$ என்ற வருடசராசரி நுகர்ச்சியைக் குறிக்கிறது. ஆனுல், இச் சார்பு தொடர்பு எப்பொழுதும் மேல் நோக்கி அமைந்தது. 1889-98 என்ற பத்தாண்டு காலத்தில் அது $CF_2$ என்ற நிலேக்குச் சென்று விட்டது. வருமானம் $y_1$ என்ற நிலேயில் அமைந் தால் (இத்தகைய நிலேமை கடுமையான தொழில் மந்த காலங் களில் அமையும்) நுகர்ச்சி $C_1$ என்ற நிலேயில் அமையாது. ஆனுல், $C_1$ என்ற நிலேயில் அமையும். ஆனுல், பொருளாதார வளர்ச்சி காரணமாக, இந்தப் பத்தாண்டில், சராசரி வருமான மட்டம் $y_5$ என்ற நிலேக்குமாறி, அதனுல் சராசரி நுகர்ச்சி $C_5$ என்றுஅமையும். நுகர்ச்சிச் சார்பு தொடர்பு மேல் நோக்கிச் செல்லாமல் இருந் தால், $y_5$ என்ற வருமானம், $C_5$ என்ற நுகர்ச்சி மட்டத்திற்குப் பதில் $C'_6$ என்ற நுகர்ச்சி மட்டத்தை உருவாக்கும். 1924 முதல் 1933 முடிய உள்ள பத்தாண்டுகளில் நுகர்ச்சிச் சார்புத் தொடர்பு $CF_{12}$ என்ற நிலேக்கு இடம் பெயர்ந்து அமையும். இதற்கு ஒத்தவாறு இப் பத்தாண்டு காலத்தில், சராசரி வருமானம் $y_{12}$ என்ற மட்டத் திற்கு வளர்ந்து சென்றது; இதனுல் விளேந்த சராசரி நுகர்ச்சி மட்டம் $y_{12}$ என்ற மட்டத்தை ஒட்டி அமையும். குச்னெட்ஸ் (kuznets) மதிப்பிட்ட விவரங்கள் $c_1$ $y$, $c_5$ $y_5$, $c_{12}$ $y_{12}$ என்ற நிலே களேப் பெற்றன. இந் நிலேகள் அத்தனேயும் இடை வெளியிட்ட கோட்டில் எதேச்சையாக அமைந்துள்ளன. இதற்கான சமன் பாடு $C = \cdot 9y$ என்று தோராயமாகக் கூறலாம். நுகர்ச்சிச் சார்பு தொடர்பு மேல் நோக்கிச் சென்று, வருமான உயர்வால் ஏற்படும் சராசரி நுகர்ச்சித் திறன் குறைப்பைச் சரிக்கட்டியது. எதேச் சையாக ஒத்து அமைந்தது என்று ஸ்மித்தீஸ் (Smithies) கருதினுர். அத்தகைய மேல் நோக்கிச் செல்லும் இடப் பெயர்ச்சியை ஏற்படுத் தாமல், வருமானம் உயர்ந்திருக்கலாம். அல்லது வருமானம் வளராமல், நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் மேல் நோக்கிச் செல்லும் இடப் பெயர்ச்சி ஏற்படலாம்.

நுகர்ச்சிச் சார்பு தொடர்பு மேல் நோக்கி இடம் பெயர்வதற் கான பல காரணங்களே விளக்கலாம். அமெரிக்காவின் மக்கள் தொகை, கிராமப் புறங்களே விட்டு நகர்ப் புறங்களுக்கு இடம் பெயர்ந்ததை ஒரு காரணமாகக் காட்டுகிருர் 'ஸ்மித்தீஸ்' (Smithies) என்பவர். எந்த வருமான மட்டத்திலும் கிராமப்புற விவசாயிகள் அவ் வருமானத்தின் சிறிது அளவை நுகர்ச்சிக்காகப் பயன்படுத்தி, பெரிய அளவுத் தொகையைச் சேமித்து வைப்பார்கள் என்று எல்லா முழுநிறை மாதிரி (cross-section)

விவரங்கள் வெளிப் படுத்துகின்றமையால், இம் மக்கள் தொகை நகர்ப்புறங்களுக்கு இடம் பெயர்வதால், மொத்த நுகர்ச்சிச் சார்பு தொடர்பை உயர்த்தும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. நுகர்ச்சிச் சார்பு தொடர்பு மேல்நோக்கிச் செல்வதற்கு மற்றொரு காரணம் காட்டலாம். (ஆயினும் இதனை ஸ்மித்தீஸ் என்பவர் கூறவில்லை) வயதை அடிப்படையாகக் கொண்ட மக்கள் தொகைப் பங்கீடு இப் பத்தாண்டு காலத்தில் மாறியது. மக்கள் தொகை மொத்த சத வீதத்தின் பெரும்பங்கு முதியோர் தொகுதியில் காணப் படுவதால், வருமானத்துடன் தொடர்புடைய மொத்த நுகர்ச்சியை, அவை களுக்கான நிறை கொண்டு உயர்த்தல் வேண்டும். நுகர்ச்சிச் சார்பு தொடர்பு மேல் நோக்கி அமைந்தமைக்கு 'ஸ்மித்தீஸ்' (Smithies) வேறொரு காரணம் காட்டுகிறார். அதாவது இப் பத்தாண்டு காலத்தில் புதிய பண்டங்களைத் தொடர்ச்சியாகப் புகுத்தியதோடு அல்லாமல், அவற்றைச் சாதாரண வாழ்க்கைத் தரத்துடன் இணைத்தும் விடப்பட்டது. இதற்கு முன் கூறிய இரண்டு காரணிகளைப்போல் இதுவும் வருமான வளர்ச்சியை ஒட்டி அமைந்துள்ளது. நுகர்ச்சிப் பண்டங்களின் வகைகள் ஒரே நிலையுள்ளனவாய் அமைந்திருந்தால் விளையும் நுகர்ச்சி மட்டத் திற்கு மேல், இக் காரணி, வருமானத்தை விடத் தராதர நுகர்ச் சியை, ஸ்மித்தீஸ் (Smithies) எதிர் பார்த்த அளவிற்கு உயர்த்த வில்லை.

அவரது கருத்தியலான எடுகோளைச் சோதிப்பதற்கு, ஸ்மித்தீஸ் (Smithies) என்பவர் பின்வருமாறு செய்தார். 1923-40 ஆண்டுகளுக்கான (நுகர்ச்சி, வருமானம் ஆகிய இரண்டும், விலை, மக்கள் தொகை மாற்றங்களுக்குத் திருத்தி அமைத்த) ஆண்டுக் கான விவரங்களை அடிப்படையாகக் கொண்டு, கீழ்க்காணும் அமைப்புடைய சமன்பாடு ஒன்றை அவர் பொருத்தினர்.

$$C = ay + by + dt$$

இச் சமன் பாட்டில் t என்பது காலத்தைக் குறிக்கிறது. நுகர்ச்சிச் சார்பு தொடர்பு மேல் நோக்கி இடம் பெயரும் தன்மையதாய் அமைந்தால் d என்ற கெழு நேர்நிலை மதிப்பைப் (positive) பெறும்; கீழ்நோக்கி இடம் பெயரும் போக்கில் இருந்தால் அக் கெழு எதிர் நிலை மதிப்பைப் (negative) பெறும்; எவ்விதப் போக்கையும் பெறுமல் இருந்தால் கெழு சுன்னம் (zero) என்ற மதிப்பைப் பெறும். இதனுல் அவர் கண்ட மாறிகளின் தொடர் போக்குச் சமன்பாடு

$$C = 76{\cdot}58 + {\cdot}76\ di + 1{\cdot}15\ (t - 1922)$$

என்பதாகும். இச் சமன்பாட்டின் வாயிலாக இறுதிநிலை நுகர்ச்சித் திறனது மதிப்பு ·76 என உணரலாம்; அதுபோல், மாறிலிகளான

விலைகளில், நுகர்ச்சி ஆண்டுக்கு $ 1·15 வீதம் உயர்ந்தது என்பதை யும் காணலாம். இவ்வுயர்வு வருமான மாற்றங்களுடன் தொடர் பற்ற முறையில் அமைந்தது. 1922 ஆம் ஆண்டில் தலா நுகர்ச்சி வீதம் (1929 விலைகளில்) $ 76·58 டாலர்களாக அமைந் துள்ளது. இதில் 76 சத வீதம் மட்டும் தலா செலவுக்குரிய வருமானத்தை உணர்த்துகிறது. 1872 ஆம் ஆண்டில் (t=—50) நுகர்ச்சி $ 76·58+·76di+ ($1·150×—50) அல்லது $ 19·08+ ·76di என்று அமையும். அதுபோல் 1952 ஆம் ஆண்டில் நுகர்ச்சி $ 76·58+·76di + ($ 1·15×30) அல்லது $ 111·08 +·76 di என்று அமையும்.

முந்திய பத்தாண்டுகளின் வருமான மட்டங்களைக் குச்னெட்ஸ் (Kuznets) மதிப்பிட்ட தொகையைத் தனது சமன்பாட்டில் பதிலீடு செய்து, இப் பத்தாண்டுகளுக்குப் பொருத்தமான மதிப்பை t என்பதற்கு வழங்கினால், குச்னெட்சின் (kuznets') சொந்த நேரடி மதிப்புகளை மிகவும் நெருங்கியுள்ள கருத் தியலான நுகர்ச்சிச் சார்பு தொடர் கிட்டுவதை ஸ்மித்தீஸ் (Smithies) கண்டார். அண்மை விவரங்களுடன் பொருத்தி அமைத்த இச் சார்பு தொடர்பு, இதற்கு முந்திய விவரங் களையும் 'விளக்கியது'. இந்த 'ஒருங்கிணைக்கும்' பணி செவ்வனே முடிந்தது.

ஸ்மித்தீஸின் (Smithies) மாணவன் டூசென்பெரி (Duesen berry)[1] விகிதசமமற்ற அடிப்படை நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் விளக்கத்தில் மனநிறைவு காணவில்லை. ஸ்மித்தீஸ் (Smithies) அவர்களின் கருத்தியல் எடுகோள்களாகிய குடியிருப்பு, வயதை அடிப்படையாகக் கொண்ட மக்கள் தொகை பங்கீடு இரண்டும் நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் மேல் நோக்கிச் செல்லும் இடப் பெயர்ச்சித் தேவையற்றது என்பதை விளக்கியபின்னர், வருமா னம், நுகர்ச்சி இவைகளின் அடிப்படைத்தொடர்பு, மேல் நோக்கிச் செல்லும் தன்மைக்கு ஏற்ற எடுகோள் என்று டூசென்பெரி (Duesenberry) விளக்கினார். இந்த வாதம் காரண காரிய (a priori) கோட்பாட்டுடன்பொருந்தி (Sociopsychological Theory) அமைந்ததோடு மட்டுமல்லாமல், சமூக உளவியல் கோட்பாடு காரணமாகப் பெறும் கடன்களுக்கும் பொருந்தி அமைந்துள்ளது என்று குறிப்பிட்டார். பின், வெளிப்படையாக இல்லாத விகிதசம மற்ற தொடர்பைக் குறுங்காலத்தில் நாம் காண்பதன் பொருள் என்ன?

[1] அன்னாரது 'வருமானம், சேமிப்பு, நுகர்வோர் நடத்தைக்கான கோட்பாடு' (ஹார்வெர்ட் பல்கலைக் கழக அச்சகம் 1949) என்ற நூலைக் காண்க.

குறுங்கால பின்னீட்டு நெளிவுகளை இத் தொடர்பு பிரதிபலிக்கின்றது என்று காரணம் காட்டலாம். விளக்கப் படம் 10-12 சற்றுக் கவனிப்போம். பட்டையானவரி y குறிப்பிடுவதுபோல்




படம் 10-12.

வருமானம் ஒரு நிலையாக வளர்ந்து சென்றால், நுகர்ச்சியும் அதே விகிதத்தில் வளர்ந்து செல்லும். இதைப் பட்டையான கோடு C என்பது உணர்த்துகிறது. C என்பது y என்பதன் மாறிலியான பின்னம் என்பதைக் குறிப்பிடவேண்டும்). ஆனல், வருமான வளர்ச்சி நிலையற்றதாக அமைந்தால், அது மேடு, பள்ளம் அமைப்பைக் கொண்டதாக அமையும். இதனை இடைவெளி விட்டக் கோடு y' என்பது உணர்த்துகிறது. இதற்கு ஏற்றவாறு நுகர்ச்சியும் c' என்ற கோடு உணர்த்துவதுபோல் ஒழுங்கற்ற முறையில் எதிர் உணர்வு செய்கிறது. நுகர்ச்சி வருமானத்துடன் விகிதாசார முறையில் நெளிகிறது என்பது இந்த வரலாற்றின் முடிவு. ஒரு முகட்டான 'சுழலே' (cycle) உள்ளடக்கிய வரலாற்றை நோக்குங்கால், நாம் நெடுங்கால விகிதசம அமைப்பைக் கவனியாது நுகர்ச்சி, வருமானம் ஆகியவைகளின் தொடர்பு விகிதசமமற்ற தொடர்பு எனத் தவறன முடிவை அடைகிறோம்.

ஒரு முகட்டான (மிக உன்னதமான) 'சுழலில்' (cycle) c', y' ஆகியவைகளின் நடத்தையை விளக்கப் படம் 10-13 காட்டுகிறது.

தொழில் தேக்க காலங்களில் (business depression) y-ன் மதிப்புக்குக் கீழான மதிப்பை C பெறுவதற்கு டூஸென்பெரி (Duesenberry) ஒரு விளக்கம் தருகிருர். நுகர்வோர் தங்கள் நுகர்ச்சியை நடப்பு வருமானத்துடன் மட்டும் சரிக்கட்டாமல்

முந்திய வருமானத்துடனும், குறிப்பாக முந்திய உச்ச நிலையில் கிட்டிய வருமானத்துடனும் சரிக்கட்டுவதால் c-ன் மதிப்பு y-ன் மதிப்பைவிட குறைந்து காணப்படுகிறது என்று அவர் வாதித்தார். தொழில் தேக்க காலங்களில், வருமானம் குறைந்து




படம் 10.13.

செல்லும்போது, நுகர்வோர் அனைவரும், பூரிப்புக் காலங்களில் பெற்ற நுகர்ச்சித் தரத்தைக் காப்பதில் மிகுந்த கவனத்தைச் செலுத்துகிறார்கள். வருமானம் விழும்போது தங்கள் நுகர்ச்சியை மிகக் குறைந்த அளவிற்குக் குறைத்துக் கொள்கிறார்கள் (எனவே, சேமிப்பு மிகக் கூர்மையாகக் குறைகிறது). இதற்குப் பின் ஏற்படும் மீட்சி (recovery) காலத்தில், முந்திய உச்ச நிலைக்கு வருமானம் உயர்ந்து செல்லும்போது, அவர்களது நுகர்ச்சியும் உயர்ந்து செல்கிறது. இதனால் முந்திய அளவு சேமிப்பு வீதத்தை மீண்டும் பெறுகிறார்கள் : வருமானம் புதிய தொரு உயர் நிலைக்குச் செல்லும்போது மட்டும்தான், நடப்பு வருமானத்துடன், நுகர்ச்சி மிகவிரைவாகப் பதிலுணர்வு செய்கிறது. ஆக ஏதோ ஒருவகை ‘பிடிப்புப் பயன்’ (ratchet effect) விளைகிறது. நுகர்வோர் தங்கள் நுகர்ச்சியைத் தாழ்த்துவதைவிட, உயர்த்துவது எளிதானதாக உள்ளது என்பதை உணர்கிறார்கள். இப் பிடிப்பை விளக்கப் படம் 10–12ல் வெகு தெளிவாகக் காணலாம். நுகர்ச்சி படிமுறை அமைப்பில் உயர்ந்து செல்வதைப் படத்தில் நன்கு காணலாம்.

வழக்கத்திற்கு மாறான கீழ்க்காணும் அமைப்பை டூசென்பெரி (Duesenberry) நுகர்ச்சிச் சார்பு தொடர்பிற்கு வழங்கியுள்ளார்.

$$\frac{s_t}{y_t} = a\frac{y_t}{y_0} + b$$

இதில் S, y என்பவை முறையே, சேமிப்பு, வருமானம் இவைகளைக் குறிக்கின்றன. அவைகளுடன் சேர்ந்த t என்ற குறி நடப்புக் காலத்தைக் குறிக்கிறது. ‘o’ என்பது முந்திய உச்ச நிலையைக் குறிக்கிறது. இச் சமன்பாட்டின் வாயிலாகக் கிட்டும் (st/yt) என்ற சராசரி சேமிப்புத் திறன், நடப்பு உச்சநிலை வருமானம், முந்திய உச்சநிலை, வருமானம் ஆகியவைகளின் விகிதத்தின் சார்பு பயனுகும். இவ் விகிதம் மாறிலியாக இருந்தால், (உதாரணமாக ஒவ்வோர் ஆண்டிலும் வருமானம் 3 சதவீதம் உயர்ந்துகொண்டு போனுல் yt/yo என்பதன் மதிப்பு எப்பொழுதும் 1·03 என்றமையும்). அவ்வாறு அமைந்தால், பின் சராசரி நுகர்ச்சித் திறனின் மதிப்பு மாறிலியாக அமையும். ஆனுல், முந்திய உச்சநிலையை விடக் குறைந்த மட்டத்திற்கு வருமானம் விழுந்தால், சராசரி நுகர்ச்சித் திறன் விழுகின்றது. 1926-ஆம் ஆண்டு முதல் 1940 முடிய உள்ள விவரங்களுக்குப் பொருத்தி அமைத்த டுசென் பெரியின் மதிப்பிடப் பட்ட சமன்பாடு பின் வருமாறு.

$$\frac{s_t}{y_t} = \cdot 25\, \frac{y_t}{y_0} - \cdot 196$$

டுசென் பெரியின் சமன்பாட்டை நடைமுறையில் உள்ள சமன்பாட்டு அமைப்பிற்கு மாற்றுகையில் பின்வருமாறு அமைகிறது.

$$\frac{s_t}{y_t} = 1 - \frac{c_t}{y_t} = \cdot 25 \frac{y_t}{y_0} - \cdot 196$$

$$\frac{c_t}{y_t} = - \cdot 25\, \frac{y_t}{y_0} + 1 \cdot 196$$

$$c_t = 1 \cdot 196\, y_t - \cdot 25\, \frac{(y_t)^2}{y_0}$$

நுகர்ச்சி, வருமானம் ஆகியவைகளின் தொடர்புக்கான அடிப்படை அமைப்பை வேறொரு வகையிலும் பொருத்தி அமைக்கலாம்: இதனை மில்டன் பிராய்ட்மென்[1] (Milton Friedman) என்பவர் செயற்படுத்தினுர். நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் நடைமுறை அமைப்பு, விகிதசமமான அமைப்பு என்று அவர் வாதித்தார். ‘நிரந்தரமான’ நுகர்ச்சி (Permanent consumption) ‘நிரந்தரமான’ வருமானத்துடன் (Permanent income) விகித

1 ‘நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் கோட்பாடு’ (பிரின்ஸ்டன் பல்கலைக் கழக அச்சகம் 1957).

சமமாக அமைகிறது. ஆனால், ஒரு தனி நபரின் அல்லது ஒரு பொருளாதார அமைப்பின் ஒரு காலத்தில் உள்ள உண்மையான நோக்கக்கூடிய, 'அளவிடப்பட்ட' (measured) வருமானம் நிரந்தர மான வருமானத்தின் தொகையையும், நிலை மாற்றங்களைக் கொண்ட வருமானத்தின் தொகையையும் உள்ளடக்கியதாகும். அதுபோல் உண்மையான, 'அளவிடப் பட்ட' நுகர்ச்சி என்பது அதன் நிரந்தரமான அடிப்படை வருமானத் தொகையையும் ராண்டெம் (Random) முறைப்படி அளவிட்ட நிலைமாற்றங்களைக் கொண்ட (transitory) வருமானத்தையும் உள்ளடக்கிய தாகும். நிலை மாற்றங்களைக் கொண்ட வருமான, நுகர்ச்சித் தொகைகள் அவைகளின் நிரந்தர உள்ளீடுகளுடன் தொடர்பற்ற முறையில் அமைந்ததோடு அல்லாமல், அவைகள் ஒன்றுக்கொன்று தொடர் பற்றவைகளாக அமைந்துள்ளன என்று பிராய்ட்மென் (Friedman) எடுகோள் அமைத்துள்ளார். (இவ்வெடுகோளுக்கு ஆதாரம் எதுவு மில்லை என்று சிலர் வாதிக்கிறார்கள்).




படம் 10-14.

விளக்கப் படம் 10–14 மக்கள் தொகை முழுநிறை மாதிரி யைக் குறிக்கிறது. இப் படம் (எடுகோளாகக் கொள்ளப் பட்ட குடும்பங்களின் சில மாதிரிகளுக்கான) அடிப்படை நுகர்ச்சி சார்பு தொடர்பைக் குறிக்கிறது. இதில் காணப்படும் OC என்ற கோடு மூலத்தின் வழியாகச் செல்கிறது. இதனால் நிரந்தரமான நுகர்ச்சி, நிரந்தரமான வருமானத்திற்கு ஏற்றவாறு அமைந் துள்ளது என்பது புலனாகிறது. OD சமூக முழுமையின் அளவிடப் பட்ட சராசரி வருமானத்தைக் குறிக்கிறது. இச் சராசரி வருமா

ணத்தில், சுன்னம் (o) என்ற மதிப்பைப் பெற்ற சராசரி நிலை மாற்றங்களுடைய சராசரி வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள் உள்ளன; சில குடும்பங்கள் நிரந்தரமாக உயர்ந்த வருமானத்தையும், எதிர்நிலை மதிப்புடைய நிலை மாற்றங்களைப் பெற்ற வருமானத்தையும் பெற்றுள்ளன; மற்றும் பல குடும்பங்கள் நிரந்தரமாகக் குறைந்த வருமானத்தையும், நேர்நிலை மதிப்புடைய நிலை மாற்றங்களைப் பெற்ற வருமானத்தையும் கொண்டுள்ளன. ஆயினும் அத்தகைய குடும்பங்களின் சராசரி நிரந்தர வருமானம் OD என்று அமையும்; இது அக் குடும்பங்களின் அளவிடப் பட்ட சராசரி வருமானத்திற்குச் சமமாக உள்ளது. இக் குடும்பங்கள் OH என்ற மதிப்புள்ள நிரந்தரமான சராசரி வருமானத்தைப் பெற்றுள்ளவை. இவ் வருமானங்கள் நிலைமாற்றங்களை உடைய வருமானத் தொகைகளைக் கொண்டதாயும், சராசரியில் சுன்னம் (zero) என்ற மதிப்பையுடைய ராண்டெம் பங்கிடுகளையும் பெற்றுள்ளதாயும் அமைந்திருப்பதால், இது அவர்களுடைய அளவிடப் பட்ட சராசரி நுகர்ச்சியைக் குறிக்கிறது.

ஆனல், அளவிடப்பட்ட, சராசரி வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள் இருந்தால் அவை உதாரணமாக OA என்ற அளவுள்ள அளவிடப் பட்ட வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள் —எதிர்நிலை மாற்றங்களை உடைய நிலை மாற்றங்களைப் பெற்ற, சராசரியை விட உயர்ந்த விகித வருமானத்தைக் கொண்ட குடும்பங்களையும் உள்ளடக்கியுள்ளன. உயர்ந்த வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள் பல தாற்காலிகமாய் எதிர்பாராது வரக் கூடிய இலாபங்களைப் பெற்ற பல குடும்பங்களை உள்ளடக்கியது போல், குறைந்த வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள் தாற்காலிகக் காலப் போக்குக் கோளாறுகளால் அல்லலுறும் அகதிகள் அடங்கிய பல குடும்பங்களை உள்ளடக்கியவை. OA என்பது குறிப்பிடும், அளவிடப் பட்ட குடும்பங்களின் நிரந்தர வருமானத்தை OB என்பது குறிப்பிடுகிறது. ஆனல், அது நமக்கு எப்படித் தெரியும்? OB என்ற அளவுடைய வருமானம் OG என்ற அளவுடைய நிரந்தர நுகர்ச்சியை (அதாவது அளவிடப் பட்ட சராசரி நுகர்ச்சிக்குச் சமமான) விளைவிக்கத் தேவைப் படும் நிரந்தர வருமானமாக அமைகிறது. அளவிடப் பட்ட நுகர்ச்சியை அளவிடப் பட்ட வருமானத்துடன் தொடர்படையும்படி பொருத்தினல் OG என்ற நுகர்ச்சியை OA என்ற வருமானத்துடன் தவருகப் பொருத்தியதாகப் பொருள்படும். அதேபோல் OF என்பது குறிப்பிடும் அளவிடப் பட்ட வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள், OE என்ற அளவுள்ள சராசரி நிரந்தர வருமானத்தைப் பெற்ற குடும்பங்கள். இதனல் விளையும் நிரந்தர சராசரி

(அளவிடப் பட்ட சராசரிக்குச் சமமான) நுகர்ச்சி OI என்ற அளவைப் பெறுகிறது. இதனுல் வெளிப்படையாக அமையும் C'C' என்ற நுகர்ச்சிச்சார்பு தொடர்பு, சராசரி நுகர்ச்சித் திறனது மதிப்புக்கும் கீழ்ப்பட்ட மதிப்புடைய இறுதி நிலை நுகர்ச்சித் திறனைப் பெற்றதாக உள்ளது.

காலத் தொடர் வரிசைகளின் (time service) விவரங்களுடன் தனது கருத்தியல் எடுகோளைப் பொருத்தி அமைக்க பிராய்ட்மென் (Friedman) மீண்டும் முயன்ருர். ஏதேனும் ஓர் ஆண்டின் 'நிரந்தர' வருமானத்தை முந்திய அளவிடப்பட்ட வருமானங்களுக்கு வெளியே வைக்கப்பட்டது (extrapolation) என்று தோராயமாக மதிப்பிட்டார். பின், நடப்பு ஆண்டின் வருமானம் .33 என்ற குறியீடு உள்ளது என்றும், முந்திய ஆண்டின் வருமானம் ·22 என்ற குறியீடு உள்ளது என்றும் முந்திய 15 ஆண்டுகளின் வருமானக் குறியீடுகள் குறைந்து சென்றன என்றும் வைத்து இவ் வருமானத்திற்கு விகிதாசார முறையில் அமைந்த நுகர்ச்சியை மதிப்பிட்டார். போர் நிகழாத 1950–51 ஆண்டுகளின் உண்மை நுகர்ச்சி விவரங்களுடன் நல்ல வகையில் இது பொருந்தி அமைந்தது என்பதை வெளிட்டார். இருப்பினும், நடைமுறையில் மூன்ருண்டுகால வரையறை நிரந்தர வருமானத்தைத் தோராயமாக மதிப்பிடுவதற்கு நல்ல தொரு கருவியாகும் என்று வேறு ஓர் இடத்தில் அவர் வாதித்துள்ளார். ஆனுல், இது அநுபவ வழிவந்த விளைவு. இது காரண காரிய வழிவந்த அல்லது புலச் சார்பற்ற (a priori) முறைகளில் ஆராயக் கூடிய கருத்தன்று.[1]

[1] பிராய்ட்மென் (Friedman) என்பவரின் கருத்தியல் எடுகோள்கள் மிகவும் நுட்பமானவை என்பதற்கான இலக்கியத திறன் ஆய்வு விளக்கங்கள் பல உள. 'நிரந்தரமான' (Permanent) நிலை மாற்றங்கள் உடைய (transitory) வருமானங்கள் என்ற கருத்துகள் தொடர்பற்றவை என்பதற்கான திறன் ஆய்வுகளைச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும். அதுபோல் அவரது 'நிலைமாற்றங்களுடைய நுகர்ச்சி (Transitory Consumption) 'நிலைமாற்றங்களுடைய வருமானத்துடன் (Transitory income) தொடர்பற்றவை என்பதற்கான குறை காண்பவைகளும் குறிப்பிடத் தக்கவை. பலவகை மூலங்களில் பின் வருபவை சிறந்தவை : ஆக்ஸ்போர்ட் (Oxford பல்கலைக்கழகப்புள்ளியியல் நிறுவனப்பத்திரிகையில் 'ஆகஸ்டு1957 சேமிப்பு நடத்தைகளின் ஆராய்ச்சி' என்று எம்.இரா. ஃபிஷர் எழுதிய கட்டுரையில் பக்கங்கள் 201-77 காண்க. 1957 மே மாதம் வெளிவந்த பதிப்பில் ஃபிஷரின் கருத்துகளை விவாதித்த கருத்தரங்கின் முடிவுகளையும் காண்க); ஐ. பிரண்ட் (I. Frend) ஐ. பி. கார்வே (I.B. Karve) நுகர்ச்சித் தோரணியும் நிரந்தர வருமானமும்! அமெரிக்கன் பொருளியல் விமர்சனம் XLVII (மே மாதம் 1957) பக்கங்கள் 536-555; எச். எஸ். அவுட்டேக்கர் (H.S.Houthakker) நிரந்தர வருமானக்கருத்தியல் எடுகோள் (மேல்கூறியபத்திரிகை ஜூன் மாதம் 1958) பக்கங்கள் 396 404; இரா.ஐச்னர் (R.Eisner) நிரந்தர வருமானக் கருத்தியல் எடுகோள் திறன் ஆய்வு; பிராய்ட்மென் (Friedman) 'திறன் ஆய்வு' எச். அவுட்டேக்கர் (Houthakker) 'பதில்' இதுவும் அது. (டிசம்பர் 1958) பக்கங்கள் 972-993 எச் டபிள்யூ வாட்ஸ் (H.W.Watts) 'நெடுங்கால வருமானமும் எதிர்பார்ப்புகளும் நுகர்வோரின் சேமிப்பும்' 'குடும்பப் பொருளாதார நடத்தை' என்ற பத்திரிகை. இராசெட்டும் வாட்சும் (Rosett & Watts) (yale) ஏலின் பொருளாதார ஆராய்ச்சி பாகம் 9 ஏல்(yale) பல்கலைக்கழக அச்சகம் 1958; நுகர்வோர் நடத்தை: நுகர்வோரின் எதிர் உணர்வு பற்றிய ஆராய்ச்சி லிங்கன் (Lincoln) கிலார்க்(Clark) பதப்பித்தவை. (ஹார்ப்பர் சகோதரர்கள் 1958; எம். பிராய்ட்மென் அவர்களது ஆராய்ச்சிக் கட்டுரை; ஜெ. டாபின் (J.Tobin) ஜெ. மார்கன் (J.Morgan) ஐ. பிரண்ட் (I.Frind) ஜி. அவுர்கட் (G. Ourcott) ஆகியவர்களின் திறன் ஆய்வு எம். பிராய்ட்மென் (M.Friedman) அவர்களின் பதில் ஆகியவைகளையும் காண்க.

பிராங்கோ மோடிகிலானி (Franco Modigilani) என்பவரும் ரிச்சர்ட் பிரம்பெர்க் (Richard Burmberg) ஆகியவர்கள் கண்ட ஆராய்ச்சியும் குறிப்பிடத் தக்கது. இவர்களது ஆராய்ச்சி நுகர்வோரின் நடத்தையைப் பற்றி அமைந்துள்ளது. இவ்வாராய்ச்சி மற்றவைகளுடன் ஒத்தமைந்துள்ளதாயினும், அவைகளுடன் தொடர்பற்றதாய் அமைந்துள்ளது. இவர்களது ஆராய்ச்சி சேமித்த வருமானத்தின் விகிதம் ஆயுள்கால சராசரி வருமானத்தை ஒட்டியும், சேமிப்பு நடப்பு வருமானத்துடன் நெகிழ்வற்றது என்பதையும் விளக்குகிறது.[1] இவர்களது வாதத்தை விளக்குவதற்கு இந் நூலில் இடம் இல்லை.

நுகர்ச்சிக்கும் வருமானத்திற்கும் உள்ள நீண்டகாலத் தொடர்பை விளக்கக் கூடிய 'உண்மையான' (true) விளக்கத்தை விவரிக்கவோ, இது காறும் கூறிய விளக்கங்களிலிருந்து தேர்ந்தெடுக்கவோ அல்லது வேறு விளக்கத்தைப் புகுத்தவோ செய்யப் போவதில்லை. நுகர்ச்சிக்கான கோட்பாட்டைப் பற்றி இதுவரை ஒப்புக் கொள்ளப் பட்ட முடிவு ஏற்படவில்லை என்றும், (இல்லையேல் குழப்பம் ஏற்படுகிறது என்றும்) வெளிப்படுத்துவதற்காக நீண்டகாலத் தொடர்புக்கான 'உண்மை' விளக்கங்களின் சில எடுத்துக் காட்டுகளை நாம் இங்குத் தந்துள்ளோம். ஆனல், மொத்தத் தேவையை எது, எப்படி, ஏன் நிர்ணயிக்கிறது என்பதற்கான எதிர்கால நம்பிக்கையுடைய கீன்சியன்கள் 1946-ல் கொண்ட கருத்திற்கு இது எதிர்மாருக அமைந்துள்ளது என்பதை மட்டும் எடுத்துக்காட்டுதல் ஏற்புடையதாகும்.

## போர்க் காலத்திலும், போருக்குப் பிந்திய காலத்திலும் அமைந்த நுகர்ச்சி நடத்தை :

## (War and postwar consumption behaviour)

குறுங்கால, நெடுங்கால கருத்துகளை ஒருங்கமைக்கும் பிரச்சினையை ஏற்றுக் கொண்ட பின்னர், கீன்சின் நுகர்ச்சிச்சார்பு தொடர்பு நிலையுள்ளது என்ற நம்பிக்கைக்குத் தாழ்வு ஏற்படத் துவங்கியது. மேலும், போருக்குப் பிந்திய ஆண்டுகளில் கண்ட நுகர்வோரின், நுகர்ச்சிச் செலவுகளின் ஒழுங்கற்ற போக்கு

[1] 'பயன்பாட்டின் பகுப்பாய்வும், நுகர்ச்சிச் சார்பு தொடர்பும்: விளக்கம், முழுநிறை மாதிரி விவரங்கள்' கீன்சின் பிந்திய ஆண்டுகளின் பொருளாதாரம், கென்னத் குரிஹாரா ; (Renneth Kurihara) பதிப்பித்தது. இரட்கெர்ஸ் பல்கலைக் கழகம் அச்சகம் (Rutgers University Press) 1 54 இவ்விரண்டு வகை விவரங்களையும் ஒருங்கமைக்கக் கூடிய மற்ரெரு கருத்தியல் எடுகோளை ஜி. ஆக்லே: 'சொத்துச் சேமிப்புத் தொடர்பு' அரசியல் பொருளாதார ஜர்னெல் பாகம் LIX ஏப்ரல் 1951 பக்கங்கள் 154-61 குறிப்பாகப் பக்கங்கள் 156-8 காண்க.

மேலும் ஓர் அதிர்ச்சியைத் தந்தது. விளக்கப் படம் 10-15, போர்க் காலத்திலும், போருக்குப் பிந்திய ஆண்டுகளிலும் அமைந்த நுகர்ச்சித் தோரணியின் அடிப்படைத் தகவல்களை விளக்குகிறது. நமது ஆராய்ச்சிக் கவரும் கால அளவை விரிந்து காணப்படுவதால் இவ் விவரங்களைத் 'தலா' அடிப்படையில் வெளியிடுதல் சாலச் சிறந்தது. ஆனால், அவைகள் மாறிலிகளான விலைகளில் வெளியிடப் பட்டுள்ளன.




படம் 10-15.

போர்க் காலங்களில் நுகர்வோரின் செலவுகள் உயர்ந்து காணப்படினும், (போர்க் காலத்தில் நுகர்வோர் அதிகமான

இழப்பைப் பெறவில்லை) போருக்கு முந்திய காலத்தில் இருந்த நுகர்ச்சி வருமானத் தொடர்புகளை அடிப்படையாகக் கொண்டு ஆராயுமிடத்து, போர்க் காலத்தில் நுகர்வோரின் செலவு குறைவு பட்டு இருந்தது. ஆயினும், இதை எளிதில் விளக்க முடியாது. பங்கீட்டு முறை (Rationing) விலைக் கட்டுப்பாடுகள், நுகர்ச்சிப் பண்டங்கள் உற்பத்திக் குறைப்பு, நாட்டுப்பற்று அறிக்கைகள் ஆகியவை உயர்ந்த வருமானம் படைத்தவர்கள் தங்களது வருமானத்தைக் கொண்டு வாங்க விரும்பிய பொருள்கள் அனைத்தையும் வாங்க முடியாமல் செய்தன. அவர்கள் வாங்க விரும்பிய பொருள்களைப் போருக்கு முந்திய ஆண்டுகளுக்கான மாறிகளின் தொடர்போக்குக் கோடு உணர்த்துகிறது. வாங்க விரும்பிய பொருள்களுக்கும், உண்மையாக வாங்கிய பொருள்களுக்கு மிடையே உள்ள வேறுபாட்டை நுகர்வோர் துறை 'பணவீக்க இடைவெளி' (Infilationary gap) உணர்த்துகிறது. இந்த இடை வெளி விலை மட்டங்களின் மீது செலுத்தும் ஆதிக்கத்தை இது காறும் உள்ளடக்கி வைத்துள்ளது.

போர்க் காலங்களின் நுகர்ச்சியைப்பற்றி அதிகம் அறிய முடியு மாறுலும், போருக்குப் பிந்திய ஆண்டுகளின் அநுபவத்திற்கு நேரடி யாகச் செல்வோம். 1946-ஆம் ஆண்டு முழுமையான போருக்குப் பிந்திய ஆண்டாகும். அவ்வாண்டில் நுகர்வோர் செலவுகள் ஏற்கெனவே உயர்ந்து அமைந்துள்ளது என்பது குறிப்பிடத் தக்கது. இப் போக்கைப் போருக்கு முந்திய ஆண்டு தோரணியின் நீடிப்பு என்று ஏற்கெனவே எதிர்பார்த்தது. ஆயினும், நீள் பயன் பண்டங்களின் உற்பத்தி அளவு பெருகவில்லை. ஆகவே, நீள் பயனற்ற பண்டங்களுக்கான செலவுகள் தராதர வருமானத்தை விட உயர்ந்து காணப்பட்டது.

1947, 1948 ஆண்டுகளில் நீள் பயனற்ற பண்டங்களின் செலவுகள் 'அபரிமிதமாக' உயர்ந்து காணப்பட்டன. இதனுடன் நீள் பயன் பண்டங்களின் உற்பத்திப் பெருக்கும், வாங்குபவை களும் சேர்ந்தன. எனவே, போருக்கு முந்திய ஆண்டுகளில் உள்ள நுகர்ச்சி வருமானத் தொடர்புகளை அடிப்படையாகக் கொண்டு வெளியிட முடியாத அளவிற்கு நீள் பயனற்ற பண்டங்களின் செலவு காணப்பட்டது. போருக்குப் பிந்திய ஆண்டுகளில் நுகர்ச்சிச் செலவு தாற்காலிகமாக 'மிகுந்து' காணப்பட்டமையின் காரணங்களைச் சிலர் ஊகிக்கத் தொடங்கினர். சில நுகர்வோர் போர்க்காலங்களில் நீள் பயன் சரக்குகள் கிடைக்காதபோது செய்ய வேண்டிய நீள் பயன் சரக்குகளின் பதிலீடுகளை இப்பொழுது செய்யத் தொடங்கினர். நீள் பயனற்ற பண்டங்

களின் (கடந்த தரங்களைப் பயன் படுத்திப் பார்க்கையில்) செலவு தராதர வருமானத்தை விட உயர்ந்து காணப்பட்டது என்பது இவ் விளக்கத்தை முழுமையற்றதாக்கி விட்டது. போருக்கு முந்திய ஆண்டுகளின் விவரங்கள் விளக்க முடியாத அளவிற்கு வருமானத்தை விடத் தராதர நுகர்ச்சி நிரந்தரமாக உயர்ந்து காணப்பட்டது. இதைத் தாற்காலிகமாக 'விளையாட்டுப் போக்கில் செய்யும் செலவுகள்' (spending spree) அத்தகைய அறிகுறிகள் காணப்படினும்) எனக் கொள்வதற்கில்லை.

1929-40; 1946–58 ஆகிய ஆண்டுகளுக்கு ஒரு தனிச் சார்பு தொடர்பைப் பொருத்தலாம். இச் சார்பு தொடர்புக்கான சமன்பாடு $C = 104 \cdot 9 + \cdot 86$ di இச் சார்பு தொடர்பு, 1929–40 ஆண்டுகளுக்குத் தலா விவரங்களுடன் அமைக்கப் பட்ட சார்பு தொடர்புடன் பொருந்தி அமைந்துள்ளது. 1929–40 ஆண்டு களின் தலா விவரங்களைக் கொண்டு அமைக்கப் பெற்ற சமன்பாடு $C = 171 \cdot 6 + \cdot 79$ di என்று அமைந்தது.

இச் சமன்பாட்டுகளுக்கான வளைகோட்டின் சரிவு உயர்ந்து காணப்படுவதற்குக் காரணம் எளிதில் கூறலாம். இரண்டு காலங் களிலும், நுகர்ச்சியை வருமானத்துடன் விகிதாசாரமாக அமைப் பதற்கான சார்பு தொடர்புகளை இவ் வளைகோடு உள்ளடக்கிய தாகும். இச் சார்பு தொடர்பு போருக்கு முந்திய, போருக்குப் பிந்திய ஆண்டுகளின் நடத்தைகளை உள்ளடக்கியது. நாம் கண்ணுற்ற நுகர்ச்சி மாற்றங்களுக்கான விளக்கத்தை இது தருகிறது. இம் மாறிகளின் தொடர் போக்குக்கான உடன் தொடர்பு கெழு ·9978 என்ற மதிப்பைப் பெற்றது. இதன் பொருள் பின் வருமாறு: அதாவது இவ்வாண்டுகளுக்கான நுகர் வோர் செவுகள் தோராயமாக 100 சதவீதம் (குறிப்பாக 99·55 சதவீதம்) என அமைந்தன. இம் மாற்றங்களை இவ் வாண்டுகளில் ஏற்பட்ட வருமான மாற்றங்களைக் கொண்டு 'விளக்கலாம்'. பின் 0·5 சதவீதத்திற்கும் குறைவான நுகர்ச்சிச் செலவுகளை, வேறு வகையில் செயல் புரிந்த பல காரணிகளைக் கொண்டு விளக்கலாம்.

1929-40, 1946-58 ஆகிய ஆண்டுகளுக்கான மாறிகளின் தொடர்போக்குக்கோடு மதிப்பிட்ட நுகர்ச்சியின்று, அமைப்பள விலும் சதவீத அளவிலும் உண்மை நுகர்ச்சி மாறி அமைந்துள்ளது என்பது விளக்கப் படம் 10-15ன் வாயிலாகத் தெளிவாகிறது. 25 ஆண்டுகளில் 4 ஆண்டுகளில் மட்டும், மதிப்பிடப்பட்ட செலவுகள் 2 சதவீதம் மாறி அமைந்தன; 10 ஆண்டுகளில் செலவு களின் மாற்றம் 1 சதவீதத்திற்கும் குறைவாக அமைந்தது. இம்

மாற்றங்களை மதிப்பிடுவதற்கு இரு-முகட்டு தொடர்பு கொண்ட வருமான நுகர்ச்சி முறையைப் பயன் படுத்தி உள்ளோம் என்பது குறிப்பிடத்தக்கது; நுகர்ச்சிச் செலவுகளை வருமானம் வளப் படுத்துகிறது; 'அபரிமிதமான' உயர்ந்த அல்லது குறைந்த நுகர்ச்சி, வருமானம் அபரிமிதமாக உயர அல்லது குறைவதற்கான போக்கை உருவாக்குகிறது. இதனால் நுகர்ச்சியின் அமித அளவு களின் பருமன் குறைக்கப்படுகிறது.

இத்துணை ஆராய்ச்சிகளுக்குப் பின்னும், கீன்சின் எடுகோள் மிகவும் நிலையானது. அவர் கண்ட தொடர்பு நிலையானது என்பதில் எல்லோருக்கும் மன நிறைவு ஏற்படுகிறது. மொத்த நுகர்ச்சி, செலவுக்குரிய மொத்த வருமானம் ஆகிய இவைகளுக் கிடையே ஒழுங்கான, நிலையுள்ள தொடர்பு அமைந்துள்ளது. இவைகளைத் துருவி ஆராயுமிடத்து, விளக்கத்திற்குரிய பிரச் சினைகள், அவைகளை நன்கு அறிதல் போன்றவைகள் தலை தூக்க ஆரம்பிக்கின்றன. அடுத்த அதிகாரத்தில் நுகர்வோரின் குறுங்கால நடத்தை பற்றிய பிரச்சினையை விளக்கியுள்ளோம். அதோடு மட்டுமல்லாமல், அதற்கான கருத்தியல் எடுகோளை அவ்வதி காரத்தில் வழங்கியுள்ளோம். நுகர்ச்சிச் சார்பு தொடர்பு பகுப் பாய்வில் நாட்டமில்லாதவர் இவ் வதிகாரத்தைத் தவிர்ப்பதில் தவறில்லை. நுகர்ச்சிச் செலவுகளை வளப்படுத்தும் வேறு பல காரணிகளின் பகுப்பாய்வை 12-ஆம் அதிகாரத்தில் தந்துள்ளோம்.

## பின் சேர்க்கை
## (Appendix)

### நுகர்ச்சியும் பயன் உச்சப் பாடும்
### (Consumption & Maximisation of Utility)

மூலநூல் பக்கம் 219-ல் அறிவுடை நுகர்வோர் தங்களது பயன் பாட்டைக் காலத்தால் உச்சப்பாடு படுத்துவதினின்று நுகர்ச்சிச் சார்பு தொடர்பை வருவிக்கலாம் எனக் கூறினோம். இப் பின் சேர்க்கை அப்படி வருவிப்பதை விளக்குகிறது.

நடப்பு நுகர்ச்சியிலும், எதிர்பார்த்த எதிர்கால நுகர்ச்சி களிலும் நுகர்வோர் பயனைப் பெறுகிறார்கள் என்று சுருக்கமாகக் கூறலாம். நடப்புச் சொத்துக்களைப் (அவை தரும் கௌரவத்திற் காகவும், அவை பிற்காலச் சந்ததிக்குப் பயன்படும் என்பதற் காகவும், பாதுகாப்பு அளிக்கும் என்பதற்காகவும்) பெற்று அடையும் பயன்; சொத்துகளுக்கான எதிர்கால எதிர் பார்ப்புகள் நடப்பு வருமான வரவுகள்; எதிர்கால வருமானத்தின் வரவு எதிர்

பார்புகள் (நுகர்ச்சி, சேமிப்பு இவைகளைத் தவிர, அச் சொத்து வழங்கும் கௌரவம், தைரியம், செல்வாக்கு) ஆகியவைகளின் பயன்; இவைகளைவிட நடப்பு நுகர்ச்சியிலும், எதிர்பாராத எதிர் கால நுகர்ச்சிகளிலும் நுகர்வோர் பயனடைகிறார்கள். எதிர்கால நுகர்ச்சி எதிர் பார்ப்புகளுடன், நிகழ்கால நுகர்ச்சி இரு முகட்டு இணைப்பைக்கொண்டு, அமைகிறது. நிகழ்கால நுகர்ச்சியின் குறைப்பு, எதிர்கால நுகர்ச்சி எதிர்பார்ப்பைக் கீழ்வரும் காரணங் களால் அதிகப்படுத்துகிறது. (a) எதிர்காலத்தில் சேமிப்பின்மை யைக் குறைப்பதாலும், (b) அதிகப்படி சொத்து எதிர்காலத்தில் உயர்ந்த வருமானத்தைச் சம்பாதிப்பதாலும் (அதனால் நுகர்ச்சி அதிகமாகும்) மேற்கூறிய எதிர்பார்த்தல் நிகழ்கிறது. மேலும் நிகழ்கால நுகர்ச்சிக் குறைப்பு, எதிர்காலத்தில் அதிக சொத் தையும் வருமானத்தையும் தருதலாலும் அச் சொத்தை வைத் திருத்தலும் அதனால் வரும் வருமானத்தைப் பெறுதலும் எதிர் காலத்தில் மகிழ்ச்சியை அதிகரிக்கிறது.

இறுதியாக, நடப்புப் பயன் $U_t$ மூன்று வகை மாறிகள் அமைப்பின் சார்பு தொடர்பு. அம் மாறிகள் எதிர்காலம் வரை நீள்கின்றன.

$$(1)\quad U_t = f\Big(c_t, \frac{c_{t+1}}{1+m}, \frac{c_{t+2}}{(1+m)^2}, \ldots,$$

$$w_t, \frac{w_{t+1}}{1+m}, \frac{w_{t+2}}{1+m}, \ldots,$$

$$y_t, \frac{y_{t+1}}{1+m}, \frac{y_{t+2}}{1+m}, \ldots\Big)$$

இதில் $C_t$, $W_t$, $y_t$ ஆகியவை முறையே நடப்பு நுகர்ச்சி, சொத்து, வருமானம் ஆகியவைகளைக் குறிக்கின்றன; $c_{t+1}$; $w_{t+1}$; $y_{t+1}$ ஆகியவை முறையே அடுத்த காலத்தில் எதிர்பார்க்கப்படும், நுகர்ச்சி, சொத்து, வருமானம் ஆகியவைகளைக் குறிக்கின்றன. (தள்ளுபடி) m என்ற குறி, காலக் குறைப்பு (time discount) வீதத்தைக் குறிக்கிறது. நிகழ்கால நுகர்ச்சிகளை விட எதிர்கால நுகர்ச்சிகள் காலத்தால் குறைவு பட்டுக் காண்கின்றன. ஏனெனில், அவைகளைப் பற்றிய அறியாமை, மிகக் குறைந்த நம்பிக்கை (பொறுமையின்மை impatience) ஏன், மேலும் கூறப் போனால் எதிர்கால நுகர்ச்சிகள் நிலையற்றவை என்பதால், எதிர் கால நுகர்ச்சிகள் காலக் குறைப்பைப் பெறுகின்றன. எதிர்கால ஆண்டுகள் எதிர்கால நுகர்ச்சி எதிர்பார்ப்புகள், எதிர்கால சொத்

தையும் வருமானத்தையும் பெறுவதற்கான எதிர்பார்ப்புகள் ஆகிய அனைத்துக்கும் ஒரே விதமான கழிவு அமைகிறது என்ற எடுகோளைச் சுருக்கமாக அமைந்துள்ளோம். $U_t$ என்பதற்கான ஒவ்வொரு காலத்து முதல் ஒரு சிறை நுண்வகைக் கெழு (Partial derinative) நேர்நிலை மதிப்பையும், இரண்டாவது ஒரு சிறை நுண்வகைக் கெழுக்கள் எதிர்நிலை மதிப்பையும் பெற்றுள்ளன. (கால அளவை ஏதேனும் ஒன்று உயர்ந்தால் $U_t$ உயரும் என்பது இதன் பொருள். ஆனால், பின் வரும் உயர்வுகள் $U_t$ என்பதற்கு முந்திய மதிப்பு உயர்வை விடக் குறைந்த அளவு உயர்வை அளிக்கும். அதாவது பயனளிக்கும் ஒவ்வொரு மூலமும், குறைந்து செல் இறுதிநிலைப் பயன்–பாட்டிற்கு ஒத்து அமைகிறது). மேலும் சில தொடர்புகள் உண்டு. அவற்றை இவண் விளக்குவோம்.

(2) $y_t \equiv c_t + s_t$

(3) $W_t + 1 \equiv W_t + s_t$

(4) $y_t \equiv e_t + W_t - 1 \cdot r_t$

(5) $c_t \leq y_t + W_t - 1$

சமன்பாடு (2) ஒரு காலத்தில் வருமானம், நுகர்ச்சி, சேமிப்பு ஆகியவைகளின் இடையே ஏற்படும் வரவு செலவுத் திட்டத் தொடர்பை வெளிப்படுத்துகிறது. (இவைகள் சேமிப்பு ஒன்று மட்டும் மற்ற எல்லா மாறிகளை விட எதிர்நிலை மதிப்பைப் பெறும்) சமன்பாடு (3) சேமிப்பின் வழியாகச் சொத்துக் குவிகிறது என்பதை விளக்குகிறது (அல்லது சொத்துக் குவியல் சேமிப்பின்மையால் குறைகிறது என்பதைக் குறிக்கிறது) சமன்பாடு (4) ஒவ்வொரு காலத்தின் வருமானம், உழைப்பு வருமானம் $e_t$, சொத்து வருமானம் ஆகியவைகளின் கூட்டுத்தொகை என்பதை உணர்த்துகிறது. அதில் காணப்படும் $r_t$ என்பது ஒரு காலத்தில் உள்ள நடப்பு வட்டி வீதத்தைக் குறிக்கிறது. இறுதியாக உள்ள சமன்பாடு (5) வரவு செலவுத் திட்டத்திற்குரிய கட்டுப் பாட்டை உணர்த்துகிறது (நமது விளக்கம் எளிமையானதாக இருக்க நுகர்வோர் கடன்களைத் தவிர்த்துள்ளோம். $e_t$; $e_{t+1}$ ஆகியவை தன்னிச்சையாக, அமைந்தவை; (இது தவறானக் கருத்து; ஏனெனில், தனக்காக, கல்விகற்க, அல்லது, பயிற்சி பெறுவதற்காகச் சிலர் முதலீடு செய்கிறார்கள்); காலத் தொடக்கத்தில் உள்ள நடப்புச் சொத்துக்களை $w_{t-1}$ கொடுக்கப் பட்டுள்ளது என்பதை உணர்த்துகிறது. $r_t$, $r_{t+1}$ ஆகியவைகளும், நுகர்வோரைப் பொறுத்த வரை கொடுக்கப் பட்டவை. மேலும் தள்ளுபடிக் காரணி (discount factor). m என்பதன் மதிப்பும் கொடுக்கப்பட்டுள்ளது என்ற எடுகோளும் அமைத்துள்ளோம்.

தொடர்புகள் (2), (3), (4) ஆகியவைகளைப் பயன்படுத்தி, சார்பு தொடர்பு (1) என்பதை மாற்றியமைக்கலாம். அவ்வாறு மாற்றியமைக்கப்பட்டால், அதில் காணப்படும் மாறிகள் மட்டும் நடப்பு நுகர்ச்சி, எதிர்கால நுகர்ச்சி ஆகியவைகளைக் குறிக்கின்றன. அதாவது, கொடுக்கப்பட்ட காரணிகளால் எதிர் காலச் சொத்துக்களையும், வருமானத்தையும் வெளிப்படுத்தலாம். இதுபோல் நிகழ்கால நுகர்ச்சியையும் எதிர்கால நுகர்ச்சியையும் வெளிப்படுத்தலாம். எடுத்துக்காட்டாகப் பதிலீடு செய்து பின்வருவனவற்றை வரவழைக்கலாம்.

$$w_t = w_{t-1} + e_t + w_{t-1} \cdot r_t - c_t$$

$$(6) \qquad w_t = w_{t-1}(1 + r_t) + e_t - c_t$$

இச் சமன்பாட்டிலிருந்து பெறுவது

$$(7) \quad \frac{w_{t+1}}{1+m} = \frac{1}{1+m}([w_{t-1}\{1+r_t\} + e_t - c_t][1+r_{t+1}] + e_{t+1} - c_{t+1})$$

சமன்பாடுகள் (4) (5) ஆகியவைகளிலிருந்து பெறுவது

$$(8) \quad \frac{y_{t+1}}{1+m} = \frac{1}{1+m}(e_{t+1} + [w_{t-1}\{1+r_t\} + e_t - c_t]\, r_{t+1})$$

இதைப்போல் சிக்கலான விளக்கங்களை $w_{t+2}/(1+m)^2, y_{t+2}/(1+m)^2$ வகையறுக்களுக்குப் பெறலாம்.

ஆக, சமன்பாடு (1) $c_t, c_{t+1}, c_{t+2}, \ldots\ldots$ என்ற மாறிகளை மட்டும் கொண்ட விளக்கமாக அமைகிறது. தம் பயன்பாட்டை $U_t$ என்பதை $c_t, c_{t+1}$. ஆகிய காலத் தோரணிகளிலிருந்து (time pattern) தேர்ந்தெடுத்து உச்சப்பாடாக்க நுகர்வோர் முயல்கிறார். இம் முயற்சி, சமன்பாடு (5) உள்ளடக்கிய வரவு செலவுத் திட்டக் கட்டுப்பாடுகளின் தொடர் வரிசைகளை ஒட்டி அமைகிறது. இக் கருத்துக்கான கணக்கியல் வாய்பாடு சிக்கலானது. ஆனால், $c_t$ என்பதன் உத்தமப் பருமன், நுகர்வோரின் நடப்புச் சொத்துக்கள், அவரது நடப்பு உழைப்பு வருமானம், எதிர்கால உழைப்பு வருமானம், நடப்பு வட்டிவீதம், எதிர்கால வட்டி வீதம், காலத் தள்ளுபடி (time discount) காரணி m ஆகியவைகளை ஒட்டி அமையும்.

$C_t$ என்பதன் உத்தமப் பருமனை மதிப்பிட்ட பின் அதன் மதிப்பு மற்ற முழுமைத் தொகுதிகளால் 'எவ்வாறு பாதிக்கப் படுகிறது ? என்ற வினவை எழுப்ப வேண்டியிருக்கிறது. இதனை எளிதில் விளக்கலாம். $y_t$ என்பதன் அளவு உயர்ந்தால் $c_t$ என்பதன் மதிப்பும் உயரும்; ஆனால், குறைந்த விகிதத்தில்

அமையும். மேலும் $r_t$ என்பதன் மதிப்பு உயர்ந்தால், $c_t$ என்பதன் உத்தமப் பருமன் (optimum) மதிப்புக் குறைகிறது. தவிர $w_{t-1}$ என்பதன் மதிப்பு உயர்ந்தால் $c_t$ என்பதன் மதிப்பும் உயரும்.

$e_t$ என்பதன் மாற்றம், $c_t$ என்பதன் மதிப்பை $e_t$ மதிப்பின் உயர்வை விடக் குறைந்த அளவிற்கு உயர்த்துவது, என்பதை முன்னமே குறிப்பிட்டோம்; $e_t$ என்பதன் மதிப்பு மாற்றம்; எதிர்பார்க்கப் பட்ட, எதிர்கால உழைப்பு வருமானங்கள் $e_{t+1}$........தொடர் வரிசையின் விகிதாசார மாற்றங்களையும் உள்ளடக்கியும் உள்ளடக்காமலும் இருந்தால் இவ் விளைவு ஏற்படும். ஆயினும் பல எளிய எடுகோள்களை அமைத்துக் கொண்டால், $e_t$ என்பதன் உயர்வு, $e_{t+1}$.....ஆகியவைகளின் தராதர உயர்வுகளை ஒட்டி அமையும். இதனுல் நடப்பு நுகர்ச்சி, வருமானத்தை விடக் குறைந்த விகிதத்தில் உயர ஊக்குவிக்கும்; ஆனுல் $e_t$ $e_{t+1}$........இவைகள் எல்லாம் முற்றொருமையாக மாறினுல் $c_t$ என்பதும் அதே விகிதத்தில் மாறும்.[1] மற்ற எடுகோள்களின் விளக்கங்கள் வேறு வகையில் விளக்கக் கூடிய காரண காரிய கருத்தியல் எடுகோள்களை வழங்கும்,

நுகர்வோரின் 'தேவைகள்' (needs), அதாவது நிகழ்கால எதிர்காலத் தேவைகளைப் போன்ற மாறிகளைத் தமது பகுப்பாய்வில் புகுத்தச் சில ஆசிரியர்கள் விரும்புகிருர்கள். இதனுல் குடும்ப அளவு மாற்றம், சமூகத்தில் ஒவ்வொருவரின் மதிப்பு, பயன்பாட்டின் பருமன், இவைகளின் மாற்றங்கள் ஒவ்வொருவரது வாழ்க்கைச் சுழலில் எவ்வகை மாற்றத்தைத் தருகின்றன என்பதை எளிதில் விளக்க முடியும். 'தேவைகளின்' பல்வேறு பட்ட எளிய காலத் தோரணிகள் கொடுக்கப் பட்டால், எதிர் காலத்தில் எதிர்பார்க்கும் வருமானத் தோரணிகளின் மாற்றங்களை இதைக்கொண்டு ஆராய்ச்சி செய்யலாம். ஆனுல், 'தேவைகள்' என்பது கருத்தளவில்கூட அல்லது அளந்தறியக் கூடாதது ஆகலின் இவைகளை நாம் சேர்க்கவில்லை. ஆயினும் பகுப்பாய்வின் பல்வேறு கருத்து விரிவுகளைப் பொருத்தலாம். எப்பொழுதெனில் இதற்கு மேற்கூறிய மாறியை வெளிப்படையாகத் தெரியப்படுத்துதல் வேண்டும். அதன் மறுதலையாக முழுமைத் தொகுதி அளவுகளாக அமைத்திடல், அவை சார்பு தொடர்பினைப் (குறிப்பிட முடியாத வகையில்) பாதிக்கின்றன.

[1] எம். பிராய்ட்மென் (இதுவும் அது) 'நிரந்தர வருமானத்தின்' உயர்வு நுகர்ச்சியை விகிதாசார மாற்றங்களை, ஏற்படுத்தும் என்ற எடுகோளை அமைத்தார். ஆனுல், நிலை மாற்றங்களையுடைய வருமானம், நுகர்ச்சிக்குச் சுன்னம் (zero), என்ற மதிப்பை வழங்கும். அதாவது 'அறிவுடை நடத்தைக்கும் அல்லது உலகில் கடைபெறும் நுகர்வோரின் உண்மை நடத்தைக்கும் இவ் வெடுகோளைச் சரிக்கட்டிப் பொருத்தி அமைக்க முடியாது.

# 11. குறுங்கால நுகர்ச்சி நடத்தை[1]

## (Short Run Consumption Behaviour)

நுகர்வோர் வருவாயின் செலவுக்கான, மாறிகளின் முதலடுக்குத் தொடர் போக்கை (linear regression of consumer expenditure) போருக்கு முந்திய, போருக்குப் பிந்திய ஆண்டுகளுக்கு ஒன்று சேர்த்துப் பார்க்கையில், அது நல்லதொரு முடிவை வழங்குகிறது என முந்திய அதிகாரத்தில் குறித்தோம். அவ்வதிகாரத்தில் நுகர்ச்சி இறுதி நிலைத்திறன் (marginal propensity to consume) ·86 என்ற மதிப்பைப் பெற்றுள்ளது எனக் கண்டோம். இம் மதிப்புச் சுமாரான வருமான மட்டங்களுக்கான சராசரித் திறனைவிட மிகச் சிறிய அளவைப் பெற்றுள்ளது.

இதனைச் சற்றுத் துருவிப் பார்ப்போமேயானால், பிரச்சினைகள் பல கிளம்புகின்றன. இவைகளில் சிலவற்றை முன்பே குறிப்பிட்டோம். குறுங்கால, நெடுங்கால நுகர்வோர் நடத்தைகளைப் பொதுவாகச் சரிசெய்யும் முறைகளுடன் அவை தொடர்புடையன. போருக்கு முந்திய ஆண்டுகளை மட்டும் எடுத்துக் கொண்டால், இறுதி நிலைத்திறன், போருக்கு முந்திய, போருக்குப் பிந்திய ஆகிய இரண்டு ஆண்டுகளின் கூட்டுத் தொகையை விட மிகக் குறைந்த மட்டத்தில் அமைந்துள்ளது. *1929*–ஆம் ஆண்டு முதல் *1941* வரை இறுதி நிலைத்திறன் ·*73* என்ற மதிப்பைப் பெற்றுள்ளது. *1941* ஆண்டை நீக்கிவிட்டால் அது ·*79* என்ற மதிப்பைப் பெறும்.

[1] இவ்வதிகாரம், பேராசிரியர் டானியல் பி. சூட்ஸ் (Prof Daniel Suits) அவர்களுடன் நடத்திய விவாதத்தால் பெரிதும் பயனடைந்துள்ளது. பேராசிரியர் சூட்ஸ் என்பவர் அண்மையில்(1958)குறுங்கால நுகர்ச்சி நடத்தைக்கான புள்ளியியல் பகுப்பாய்வை முடித்தார். அவரது பகுப்பாய்வு, இவ்வதிகாரத்தில் காணும் பகுப்பாய்விற்கு வேறுபட்டு அமைந்தாலும், புது வழியைக் காட்டியுள்ளது. அவரது முடிவுகளைப் பணம், பற்று (credit) இவைகளுக்காக நிறுவப்பட்ட தேசிய கமிஷன் ஒரு பொருள் பற்றிய தனிக் கட்டுரையில் (monograph) வெளியிட்டுள்ளது.

[1] போருக்குப் பிந்திய ஆண்டுகளை மட்டும் எடுத்துக் கொண்டால், இறுதி நிலைத்திறன் மிகக் குறைந்து காணப்படுகிறது. இது வியக்கத்தக்கது; அதே நேரத்தில் புதிராகவும் அமைந்துள்ளது. 1946–57 ஆண்டுகளுக்காக அமைக்கப் பெற்ற மாறிகளின் தொடர்போக்கு (Regression) கீழ்க்காணும் விடையைத் தருகிறது. அதாவது $C = 186 \cdot 3 + \cdot 81di$. மேலும் இறுதி நிலைத்திறன், சராசரித் திறனைவிட (average propensity) மிகக் குறைந்த மட்டத்தில் அமைந்துள்ளது. அதோடு மட்டுமல்லாமல் நெடுங் கால இறுதி நிலைத்திறன் மதிப்பாகிய ·86க்குக் கீழ் மட்டத்தில் அமைந்துள்ளது. எனவே, குறுங்கால நுகர்வோர் நடத்தை, நெடுங்கால நடத்தையினின்று மாறுபட்டு அமைகிறது.

பொருளாதார பிரச்சினைகளுக்கு, நுகர்ச்சிச் சார்பு தொடர்பைப் பயன்படுத்தும் எல்லா சந்தர்ப்பங்களிலும், நுகர்ச்சியின் குறுங்கால நடத்தையைப் பயன்படுத்துவதோடு அல்லாமல், அதில் நாட்டமுடையவர்கள் ஆகிறோம். உதாரண மாக வேலை அளவையும், வெளிப்பாட்டையும் மிக உயர்ந்த மட்டத்தில் நிலை நிறுத்த தேவைப்படும் வருவாய்க் கொள்கையை அமைக்க விரும்பினால், வரும் ஆண்டின் நுகர்ச்சிப் படிவத்தில் நாட்டம் கொள்ள வேண்டும். அடுத்த ஆறு மாதங்களுக்கான நுகர்ச்சிச் செலவினத்தின் படிவத்தில் நாட்டம் கொள்ள வேண் டும். குறிப்பாக போருக்குப் பிந்திய ஆண்டுகளில் செலவுக்குரிய வருமானத்துடன் தொடர்புடைய நுகர்ச்சி நடத்தை சில சமயங்களில் ஒழுங்கற்ற முறையில் அமைந்துள்ளது.

காலாண்டு நுகர்ச்சியையும், செலவுக்குரிய வருமான விவரங்களையும் குறித்தால், இவைகளின் உடன் தொடர்பு (Correlation), மிகவும் வலிமையாக இருப்பதைக் காண்போம். இதனை விளக்கப் படம் 11–2-ல் காட்டியுள்ளோம்.[2]

ஆயினும் காலாண்டுக்குக் காலாண்டு மாற்றங்களைக் கூர்ந்து கவனித்தால் இவைகளின் ஒழுங்கற்ற நடத்தைப் பிரச்சினைகள் எளியனவாக விளங்கும். அட்டவணை 11-1 சில தேர்ந்தெடுக்கப் பட்ட போருக்குப் பிந்திய ஆண்டுகளுடன் தொடர்புடைய விவரங்களை விளக்குகிறது.

1 இங்குக் குறிக்கப்பட்டுள்ள எல்லா இறுதிநிலைத் திறன்களும் ஒவ்வொரு தலையைக் குறிக்கும் வகையில் அமைந்துள்ளது (per capita basis). இவைகளை மொத்த மட்டத்திற்குத் தோராயமாக ·02 என்ற அளவால் உயர்த்த வேண்டும்.

2 1946-58 ஆண்டுகளுக்கான விவரங்கள், காலாண்டு விவரங்கள் பருவ கால சரிக்கட்டுகள் அடங்கிய ஆண்டு வீதத்திலும், 1954 விலைகளிலும் குறிக்கப் பட்டுள்ளன. மக்கள் தொகை மாற்றங்களுக்கு அவை திருத்தப்படவில்லை.




படம் 11-1.

**அட்டவணை 11–1**

செலவுக்குரிய வருமானம், நுகர்ச்சிச் செலவுகள், அவை ஒவ்வொன்றின் மாற்றங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட காலாண்டுகள்

*(பிலியன் டாலர்களில். 1954 விலைகளில், பருவக் கால) மாற்றங்களாகிய ஆண்டு வீதங்கள்)*

| ஆண்டு | காலாண்டு | செலவுக்குரிய உண்மை வருமானம் | மாற்றம் | நுகர்வோர் உண்மைச் செலவு | மாற்றம் |
|---|---|---|---|---|---|
| 1948 | 1 | 203.5 | | 198.1 | |
| | 2 | 211.7 | +8.2 | 199.0 | +0.9 |
| | 3 | 215.3 | +3.6 | 199.4 | +0.4 |
| | 4 | 215.1 | —0.2 | 200.6 | +1.2 |
| 1949 | 1 | 212.9 | —2.2 | 199.9 | —0.7 |
| | 2 | 213.9 | +1.0 | 203.6 | +3.7 |
| | 3 | 214.0 | +0.1 | 204.8 | +1.2 |
| | 4 | 214.9 | +0.9 | 209.0 | +4.2 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1950 | 1 | 228.0 | +13.1 | 210.7 | +1.7 |
| | 2 | 227.3 | —0.7 | 214.2 | +3.5 |
| | 3 | 232.0 | +4.7 | 225.6 | +11.4 |
| | 4 | 236.1 | +4.1 | 217.0 | —8.6 |
| 1951 | 1 | 230.9 | —5.2 | 222.3 | +5.3 |
| | 2 | 236.3 | +5.4 | 214.5 | —7.8 |
| 1953 | 4 | 255.9 | | 234.1 | |
| 1954 | 1 | 254.4 | —1.5 | 233.4 | —0.7 |
| | 2 | 254.8 | +0.4 | 236.4 | +3.0 |
| | 3 | 257.0 | +2.2 | 239.0 | +2.6 |
| | 4 | 260.9 | +3.9 | 243.2 | +4.2 |
| 1955 | 1 | 263.0 | +2.1 | 248.7 | +5.5 |
| | 2 | 271.5 | +8.5 | 253.7 | +5.0 |
| | 3 | 276.5 | +5.0 | 259.9 | +6.2 |
| | 4 | 281.4 | +4.9 | 261.8 | +1.9 |
| 1956 | 1 | 282.0 | +0.6 | 263.2 | +1.4 |

இந்த அட்டவணையைக் கூர்ந்து கவனிக்குமிடத்தில் பலஉண்மைகள் புலனுகும். அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ள இருபத்திரண்டு காலாண்டுக்குக் காலாண்டு, நுகர்ச்சி வருமான மாற்றங்கள் எதிர் வீதங்களில் அமைந்திருப்பது முதல் விவரம். மாற்றங்கள் ஒரே திசையில் அமைந்திருப்பின், நுகர்ச்சி மாற்ற அளவு, வருமான மாற்றங்களை 10 நிலைகளில் மிஞ்சுகிறது என்பது இரண்டாவது விவரம். ஆகவே, ஏழு நிலைகளில் மட்டுமே, இங்கு அளவிடப் பட்டுள்ள நுகர்ச்சியின் இறுதி நிலைத்திறன், (marginal propensity to consume) நேர் நிலை (Positive) மதிப்பைப் பெற்றதோடு, ஒன்றுக்குக் குறைந்த மதிப்பையும் பெற்றுள்ளது.

1949-ஆம் ஆண்டிலிருந்த பின்னிறக்கக் (recession) காலத்தில் நுகர்ச்சிச் செலவுகளின் நடத்தையைக் கவனிப்போம். 1948, 1949 ஆகிய ஆண்டுகளின் நான்கு காலாண்டுகளுக்கிடையே செலவுக்குரிய வருமானம் 0·2 பிலியன் டாலர்களாகக் குறைந்து அமைந்துள்ளது. ஆயினும் நுகர்வோரின் செலவுகள் 8·4 பிலியன் டாலர்களாக உயர்ந்தது. எனவே, பின்னிறக்க ஆண்டு களுக்கான எதிர்பார்ப்புகளுக்கு முரணுக நுகர்வோர் நடந்தார்கள் என்பது தெளிவு. வழக்கத்திற்கு மாறுன இத்தகைய நடத்தை, பின்னிறக்க ஆண்டுகளில் மிகவும் தணிவாக அமைந்ததற்கு முக்கிய காரணமாகும்.

1951-ஆம் ஆண்டு மையத்துடன் முடிவடையும், 6 காலாண்டுகளை அடுத்துக் கவனிப்போம். அவ்வாண்டுகளில் உள்ள செலவுக்குரிய வருமானம் மிகக் கூர்மையான மீட்சியைப் (recovery) பெற்றுள்ளது என்பதை முதற்கண் குறிப்பிட வேண்டும். (அட்டவணையில் காணும் எல்லா காலாண்டுக்குக் காலாண்டு மாற்றங்களில் இது மிகப் பெரியது என்பதையும் குறிப்பிட வேண்டும்.) ஆனல், முன்னுள்ள சுருக்கத்தில் கண்டவாறு வருமானத்துடன் மிக உயர்ந்த தொடர்புடைய நுகர்ச்சிச் செலவு, 1·7 பிலியன் டாலர்கள் அளவே உயர்ந்துள்ளது. ஆனல், அடுத்த இரண்டு காலாண்டுகளில், குறிப்பாக 1950-ஆம் ஆண்டின் மூன்ருவது காலாண்டில், வருவாயின் தணிவான உயர்வை விட, நுகர்ச்சிச் செலவு மிக உயர்ந்து காணப் படுகிறது. 1950-ஆம் ஆண்டின் மூன்ருவது காலாண்டும், 1951-ஆம் ஆண்டின் முதல் காலாண்டும் 'அச்சத்துடன் வாங்கும்' (scare buying) ஆண்டுகளாக அமைந்தன. இதற்குக் காரணம் எளிதில் காட்டலாம். அவ்வாண்டுகள் கொரிய சண்டை, சீன கம்யூனிஸ்டுகளின் தலையிடுதல்கள் ஆகியவைகளுடன் தொடர் புடையவைகளாக அமைந்தன. இக் கிளர்ச்சிகளைத் தொடர்ந்து அமைந்த காலாண்டுகளில், வருமானம் உயர்ந்து இருந்தும், நுகர்ச்சிச் செலவுகள் குறைவுபட்டு அமைந்தன. 1950-ஆம் ஆண்டின் முதல் காலாண்டுத் தொடக்கம், 1951-ஆம் ஆண்டு இரண்டாவது காலாண்டு முடிய உள்ள ஐந்து காலாண்டுகளில், வருமானம் 8·3 பிலியன்களாக உயர்ந்தது; ஆனல், நுகர்ச்சி 3·8 பிலியன்களாக உயர்ந்தது.

அட்டவணை கவனம் செலுத்தும் மூன்ருவது கிளைக்கதை (episode) 1953-54 ஆண்டுகளின் பின்னிறக்கம் மீட்சியாக மாறப் பட்ட கதையாகும். 1954-ஆம் ஆண்டு முதல் காலாண்டுத் தொடக்கம், 1955-ஆம் ஆண்டு முதல் காலாண்டு வரையுள்ள 4 காலாண்டு மாற்றங்கள் ஒவ்வொன்றிலும் வருமானத்தை நுகர்ச்சி மிஞ்சியது. மற்ற ஒழுங்கீனங்கள் தெளிவாக அமைந்துள்ளன. 1954-ஆம் ஆண்டு முதல் காலாண்டுத் தொடக்கம், 1956-ஆண்டின் காலாண்டு இறுதியாக வருமானம் 27·6 பிலியன்களாக உயர்ந்தது; நுகர்ச்சி 29·8 பிலியன்களாக உயர்ந்தது. எனவே, 1954 ஆண்டில் ஏற்பட்டுள்ள பின்னிறக்கம் மீட்சியாக மாறியதற்கு நுகர்ச்சிச் செலவுகள் வழி காட்டிகளாக அமைந்தன. இப் பணியில் அவைகளுக்கு 1955-57 ஆண்டுகளில் தொடக்கத்தில் ஏற்பட்ட பொருளாதார வீக்கம் (Boom) பெரிதும் உறுதுணையாக அமைந்தது.

இம் மாற்றங்களை நுகர்ச்சிச் சார்பு தொடர்பு முன்னறிவிப்பு செய்திருக்க முடியாது. போருக்குப் பிந்திய ஆண்டுகள் வரலாற்றில் உள்ள வேறு பல கிளைக் கதைகளும் புரியாத புதிர்களாக இருக்கின்றன. நுகர்ச்சிச் சார்பு தொடர்பைக் கொண்டு முன்னறிவிக்கப்பட்ட தகவல்கள் பழுதுள்ளனவாய் அமைந்தன. அதோடு போருக்குப் பிந்திய ஆண்டுகளில் எழுந்த பல பிரச்சினைகளுக்கு அது அளித்த கருத்துரைகள் பழுதடைந்த கொள்கையில் முடிந்தது. எனவே, நுகர்வோரின் நடத்தை பற்றிய இயக்க இயல் ஆராய்ச்சி குறுங்கால பிரச்சினைகளுக்கு விடை காணும் பணியை எளிதாக்கும்.

## நுகர்ச்சிச் சார்பு தொடர்பில் பின்னீடு உளதா ?
## (Is there a 'lag' in the Consumption Function?)

நுகர்ச்சிச் செலவுகளைப் பின்னீடுகளுடன் வருமானம் பாதிக்கலாம் என்ற கருத்தைப் பல பொருளாதார வல்லுநர்கள் வலியுறுத்தியுள்ளனர். கீன்சு தனது 'உளவியல் விதி'யை (Psychological Law) என்ற கருத்தை விளக்குமிடத்து, செலவை வருமானம் பின்னீடுடன் பாதிக்கும் என்ற கருத்தைத் தெரிவித்துள்ளார். வேறு பல ஆசிரியர்கள் இக் கருத்தைப் பல இடங்களில் வலியுறுத்தியுள்ளனர்.

பின்னீடுகளுக்கான ஒரு மூலம் டி. எச். இராபெர்ட்சன் (D. H. Robertson) அவரைப் பின்பற்றிய கருத்தினர்களது விளக்கங்களில் அடங்கியுள்ளது. இராபெர்ட்சனின் விளக்கம் ரொக்க ஓட்டங்களை உன்னிப்பாகக் கவனிக்கிறது. ரொக்கத்தைப் பெறுவதற்குமுன் அதைச் செலவிட முடியாது. ரொக்க வரவுகள் தொடர்ந்து வருவன அல்ல ; ஆனால், குறிப்பிட்ட காலங்களில் தான் ரொக்கத்தைப் பெறமுடியும். எனவே, வருமான மாற்றத்திற்குப் பின் அமைந்துள்ள, நுகர்ச்சியின் சராசரி பின்னீடு 'ஒரு நாள்' ஆகும். இந்தக் கால அளவு நமது விளக்கப்படம் 5–3ல் காணும் செலுத்துக் கால அளவுடன் முற்றொருமையாய் அமைந்துள்ளது. ரொக்கத்தைப் பெறாமல் அதைச் செலவிட முடியாது என்ற இராபெர்ட்சனின் வாதம் சுன்னம் (zero) மதிப்புள்ள ரொக்க இருப்பு என்ற எடுகோளை உள்ளடக்கியதாகும். அதாவது ஒரு கால அளவின் தொடக்கத்திலும், அதன் முடிவிலும் ரொக்க இருப்புச் சுன்னம் என்ற மதிப்பைப் பெற்றுள்ளது.—இது உண்மையாகவும் இருக்கலாம். அல்லது பொய்யாகவும் இருக்கலாம். மேலும் புத்தகப்பற்று வசதிகள் இல்லை என்ற எடுகோளையும் அவர் வாதம் உள்ளடக்கியுள்ளது. இந்த விளக்கத்தின்

வழி வரும் பின்னீடு குறுகியதாக அமையும். ஏனெனில், இராபெர்ட்சனின் 'நாள்' என்பதன் இலக்கணம் அவ்வாறு அமைந்துள்ளது. 'நாள்' என்பதற்கு அவர் தரும் இலக்கணம் பின்வருமாறு : ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஈட்டிய வருமானத்தை அப்பொழுது செலவிடாமல் அடுத்த நாள் செலவிடக் கூடிய குறுகிய அளவைப் பெற்ற காலத்திற்கு 'நாள்' என்று அவர் கூறுகிறார். மேலும் மக்கள் எல்லோரும் வாரத்திற்கு ஒரு முறை அல்லது இரண்டு வாரங்களுக்கு ஒருமுறை வருமானத்தைப் பெறு கிறார்கள்.

எனவே, வருமானத்திற்கும் செலவிற்குமிடையே பின்னீடுகள் மிகவும் சிறந்தவை என நம்பும் மேதைகளில் பெரும்பாலோர் வருமான மாற்றங்களுக்கு ஏற்றவாறு செலவினம் அமையாமல், அது மெல்ல ஊர்வதற்குப் பல காரணங்கள் காட்டுகிறார்கள். அவைகளில் நிறுவனங்கள் பற்றிய காரணங்கள், உளவியல் பற்றிய காரணங்கள் சிறந்தவைகளாகும். நிறுவனங்கள் பற்றிய காரணங்கள், நீண்ட கால ஒப்பந்தங்கள் (வருமானம் உயர்ந்தால் ஒரு புதிய அறையை அல்லது வீட்டைத் திருத்தி அமைக்க ஒப்பந்த காலம் முடிவடைந்த பின்னர் முற்படும்) ஆண்டு தோறும் வரும் புதிய மாதிரி ஊர்திகள், (ஒரு நிர்வாகி உயர்ந்த வருமானக் கட்டத்தை அணுகி விட்டால் தான் (Chevrolet) என்ற ஊர்தி வகையிலிருந்து (Pontiac) என்ற வகை ஊர்தியை வாங்க விரும்புவான்—ஆனால், எந்த வகை வண்டியை வாங்கினாலும் புதிய மாதிரிக்காக காத்திருப்பான். அல்லது பொதுவாக உள்ள நெடும் பயன் சரக்குகள்—(ஒரு குடும்பம் உயர்ந்த வருவாயைப் பெற்றால் சிறிய அளவு குளுமைப் பொறிக்குப் (Refrigerator) பதிலாக பெரிய அளவு பொறிக்கு மாற்றும். ஆனால், இப்பொழுதுள்ளது புதுமையான மாதிரி என்றால் அதனைப் பதிலீடு செய்ய முற்படுதலில்லை) ஆகியவைகளை உள்ளடக்கியவை.

உளவியல் பற்றிய காரணங்கள், (a) வருமான உயர்வு எதிர் பாராத ஏற்றத் தாழ்வுகளைப் பெறாமல், அவ்வுயர்வு நிலையுள்ள தாய், சில காலம் நீடித்துள்ளதாய் அமைந்துள்ளதா என்ற ஆராய்ச்சி (b) உயர்ந்த வருமானத்தை ஒரு குடும்பம் பெற்றால் அதனால் அக் குடும்பம் மேற்கொள்ளும் புதிய வாழ்க்கை முறைக்கு அதனை முற்றொருமைப் படுத்த வேண்டிய தேவையையும் உள்ளடக்கியது. பொதுவாக நுகர்வோர் வழக்கமாகச் செய்யும் நடத்தைகளை இக் கருத்து வலியுறுத்துகிறது.

இராபெர்ட்சன் அவர்களது கருத்து நீங்கலாகப் பின்னீடுகளைப் பொதுவாக சிக்கலானவை என்ற கருத்துக்கொண்டு குறிக்கப்

படுகிறது—வருமான மாற்றங்களின் விளைவுகளை உடனடியாக முதலில் பெற்று, பின்னர் அவைகளின் விளைவுகளைப் பின்னிட்டுப் பெற்று, அதற்குப்பின் பெருமளவு பின்னீடுகளுக்குப் பிறகு பெறுதல் எனக் குறிப்பிடலாம். இந்தக் கருத்தைக் கீழ்க்காணும் வகையில் வெளிபடுத்துவது, கருத்துகளை மிகவும் சுருக்கி அமைத்துள்ளோம் எனப் பொருள்படும். அதாவது

$$c_t = f(y_t - 1)$$

இக் கருத்தை டூசன்பெரி (Duesenberry) என்பவர் வேறு வகையில் குறித்துள்ளார். அவரது வாய்பாட்டை முன்பு விளக்கியுள்ளோம். அவ் வாய்பாடு கடந்த காலத்தில் பெற்ற வருமானத்தின் உச்ச மட்டம், காலச் சுழலில் வருமானம் குறைவு பட்டுக் காணுமிடத்தும் செலவை ஒரு நிலையாக வைக்கும் என்பதை வலியுறுத்துகிறது.

வருமானத்தைவிட நுகர்ச்சி பின்னடைவதற்காகப் பயன் படும் கருத்தியலான இயக்க இயல் பகுப்பாய்வு பல இருந்தும், பின்னீடுகள் உள்ளன என்பதைச் சரிபார்க்க முடியவில்லை. ஆண்டுகளுக்கான விவரங்களில் இப் பின்னீடுகளை உறுதியாகக் குறிப்பிடுவதில்லை. இக் கருத்தை ஒரு சிதறல் (Scatter diagram) விளக்கப் படத்தைக் குறித்து வாசகர்கள் விவரங்களைச் சரிப் பார்க்கலாம். அவ் விளக்கப் படத்தில் ஒவ்வொரு குறியீடும் ஓர் ஆண்டின் நுகர்ச்சிச் செலவையும், அதற்கு முந்திய ஆண்டின் வருமானத்தையும் குறிப்பிடும். ஆனால், காலாண்டுக்கான பின்னீடு அவ் விளக்கப்படத்தில் இடம் பெறுமா?

இலாயிட் மெட்ஸ்லர் (Lloyd Metzler)[1] ஒரு சோதனையை நடத்தினார். ஒரு காலாண்டின் வருமானச் செலுத்தீடுகளை அடிப் படையாகக் கொண்டு, அதே காலாண்டின் நுகர்ச்சிச் செலவுகளுக் கான சிதறல் விளக்கப்படத்தை (Scatter diagram) வரைந்தார். அதே படத்தை மீண்டும் வரைகையில் அந்தக் காலாண்டுக்கான நுகர்ச்சிக்கு, அதற்கு முந்திய காலாண்டின் வருமானத்தை ஒன்று படுத்தினார். இதனால் அக் காலாண்டில் நுகர்ச்சிச் செலவு பின்னீ டுடன் கொண்ட வருமானத்தை ஒட்டி அமையாமல், நடப்புக் காலாண்டின் வருமானத்தை ஒட்டி அமைந்திருப்பதை அவர் தெளி வாகக் கண்டார். இதனால் நுகர்ச்சிச் செலவு, வருமானம் இவை களுக்கிடையே உள்ள காலப் பின்னீடு மிகவும் குறைந்த கால அளவைக் கொண்டது என அவர் முடிவு தெரிவித்தார்.

[1] வருமானம், வேலை, விலைகளுக்கான கொள்கை என்ற நூலில் 'வருமானச் சுற்று ஓட்டத்தில் மூன்று பின்னீடுகள்' என்ற கட்டுரையில் pp ii தொடர்ச்சியாகப் பார்க்கவும்.

மெட்ஸ்லரின் சோதனை, நாம் முன்பு குறித்த ஒரு பெரிய பிழைக்கு உட்பட்டதாக அமைகிறது. அது நுகர்ச்சி–வருமானத் தொடர்பு என்பது இருமுகத் தொடர்புடையது. நடப்பு நுகர்ச்சியின் உயர்வு அல்லது தாழ்வு நடப்புக் காலாண்டின் செலவுக்குரிய வருமானத்தை உயர்த்தும் அல்லது தாழ்த்துமே தவிர இதற்கு முந்திய காலாண்டின் செலவுக்குரிய வருமானத்தை உயர்த்தவோ அல்லது தாழ்த்தவோ செய்யாது என்பது மிகத் தெளிவான கருத்து. மெட்ஸ்லரின் இரண்டு குறிகளில் ஒன்று வருமானம், நுகர்ச்சி ஆகியவைகளின் தொடர்பைக் குறிக்கிறது; ஆனால், மற்றது அவ்வாறு குறிக்க வில்லை. முதலாவதாக ஒவ்வொரு காலாண்டின் சேமிப்பைக் கொண்டு அதே காலாண்டின் நுகர்ச்சியைக் குறிக்க வேண்டும். பின்னர் முந்திய காலாண்டின் வருமானம், நடப்புக் காலாண்டின் நுகர்ச்சி இவைகளுக் கிடையே உள்ள வேறுபாட்டைக்கொண்டு ஒவ்வொரு காலாண்டின் நுகர்ச்சியைக் குறிக்கவேண்டும். இவ்வாறு செய்தால் சோதனை முழுமையானதாகும். ஏதேனும் ஒரு காலாண்டின் திட்டமிட்ட நுகர்ச்சி, திட்டமிட்ட சேமிப்பு எனப்பாகுபாடு செய்யப்படுகிறது என்ற எடுகோளை நாம் சோதிக்க வேண்டும். ஆனால், அடுத்து வரும் காலாண்டுவரை நுகர்ச்சித் திட்டத்தை நிறைவேற்றுவ தில்லை.

$$y_{q-1} = \bar{c}_{q-1} + \bar{s}_{q-1}$$
$$\bar{c}_{q-1} = c_q$$
$$\bar{s}_{q-1} = y_{q-1} - c_q$$

ஒவ்வொரு குறியின்மேல் காணப்படும் பட்டை (bar) என்பது உண்மை நடப்பு அளவைகளைவிடத் திட்டமிட்ட செய்கைகளை உணர்த்துகிறது. எனவே, (yq—1—cq) என்பதற்கு எதிராக cq என்பதைக் குறிப்பிட வேண்டும். இதைச் சுருக்கமாக 'இராபெர்ட்சனின்' சேமிப்பு ('Robertsonian saving') எனக் கூறலாம்.

மேற் கூறிய இரண்டு சிதறல் விளக்கப் படங்களைப் படம் 11–2ன் இரண்டு பகுதிகாகக் குறித்துள்ளோம். இவைகளில் அடங்கியுள்ள விவரங்கள் 1947 முதல் 1958 வரை பருவ சரிக்கட்டுகள் செய்யப்பட்ட காலாண்டு மொத்தங்கள். அவைகளை ஆண்டு வீதத்தில் குறித்துள்ளோம். அதே நேரத்தில் விலை மாற்றங்களுக்கான திருத்தங்களையும் அவை பெற்றன.

படத்தின் இவ்விரண்டு பகுதிகளை ஒப்பிடுகையில் எந்த உடன் தொடர்பு (correlation) நல்லது என்பது தெளிவாகும். இவைகளுக்கான தொடர்புக் கெழுக்களை (correlation coefficients) கணக்கிடுகையில் காலாண்டு நுகர்ச்சி அதே காலாண்டின் சேமிப்புடன்

கொண்டுள்ள தொடர்பு, ஒரு காலாண்டின் நுகர்ச்சி, 'இராபெர்ட் சனின் சேமிப்புடன் கொண்டுள்ள தொடர்பைவிட உயர்ந்தது என்பது தெளிவாகிறது. (A பகுதிக்கான தொடர்புக் கெழு ·63; B பகுதிக்கான தொடர்புக்கெழு ·61) பின்னீட்டுக் கருதுகோளை (hypothesis) படத்தில் காணும் விவரங்கள் உறுதிப் படுத்தவில்லை.




ஆண்டு வீதங்களின் காலாண்டு சேமிப்புகள் (1954 ஆண்டு பிலியன் டாலர்களில்)

இராபெர்ட்சனின் ஆண்டு வீத சேமிப்புகள் (பிலியன் 1954 டாலர்களில்

படம் : 11—2

காலாண்டுக்கான விவரங்களை அடிப்படையாகக் கொண்டால், நுகர்ச்சி, சேமிப்பு இவைகளின் உடன் தொடர்பு (correlation) மிகவும் குறைந்து காணப்படுவது படத்தில் காணும் வியப்பூட்டும் விவரமாகும். நடப்பு வருமானத்துடன் நடப்பு நுகர்ச்சி கொண்டுள்ள தொடர்பை நீக்கி விட்டால், போருக்குப் பிந்திய ஆண்டுகளின் நுகர்ச்சி நடைத்தையின் ஒழுங்கீனமான படிவம் மிகத் தெளிவாக விளங்குகிறது.

## நுகர்வுப் 'பிடிப்பு' (The Consumption 'Ratchet')

விளக்கப் படம் 11–3, இதற்கு முந்திய விளக்கப் படத்தின் A பகுதியை (அதாவது 11–2 A பகுதி) பெரிய அளவில் விளக்குகிறது. இப் படம் (அதாவது படம் 11-3) ஒவ்வொரு காலாண்டின் விவரங்களை அதற்கு முந்திய, காலாண்டு, அதைத் தொடர்ந்த காலாண்டுகளின் விவரங்களுடன் ஒப்பிடுகையில் கிட்டிய கண்டறிதல்களின் தொடர் வரிசையாக இணைக்கும் கோட்டை உள்ளடக்கியது. நுகர்ச்சி, சேமிப்பு ஆகியவை ஒவ்வொரு காலாண்டில் எவ்வகையில் அமைந்துள்ளன என்பதை இக் கோட்டின் சரிவு வெளிப்படுத்துகிறது. அடுத்தடுத்து வரும்




படம் 11-3.

காலாண்டுகளில் நுகர்ச்சி மாருமல், ஆனுல், சேமிப்பு மாறினுல், இதை வெளிப்படுத்தும் கோட்டின் துண்டு படுக்கிடையாக அமையும். (இதனுல் இறுதிநிலை நுகர்ச்சி நாட்டம் (MPc) சுன்னம் (zero) என்ற மதிப்பையும் இறுதி நிலைச் சேமிப்பு நாட்டம் (MPc) ஒன்று என்ற மதிப்பையும் பெறுகின்றன. அதுபோல் நுகர்ச்சி மாறி சேமிப்பு மாருமலிருந்தால் இதை வெளிப்படுத்தும் கோட்டின் துண்டு செங்குத்தாக அமையும். (இதனுல் இறுதி நிலை நுகர்ச்சி நாட்டம் ஒன்று என்ற மதிப்பையும் இறுதிநிலை சேமிப்பு நாட்டம் சுன்னம் என்ற மதிப்பையும்; பெறுகின்றன) நுகர்ச்சி, சேமிப்பு ஆகிய இரண்டும் ஒரே திசையில் மாறினுல், கோட்டின் துண்டு வலப்புறம் மேல் நோக்கிச் செல்லும். (இது கீன்சின் கருத்து. இதில் இறுதிநிலை நுகர்ச்சி நாட்டம் 0 என்பதற்கும், ஒன்று என்பதற்கும் குறைந்த மதிப்பைப் பெறுகிறது. $0 < MPC < 1$). நுகர்ச்சி, சேமிப்பு ஆகியவை எதிர் திசையில் மாறினுல், கோட்டின் துண்டு வலப்புறம் கீழ்நோக்கிச் செல்லும் (இதனுல் இறுதிநிலை நுகர்ச்சி நாட்டம் என்பது ஒன்றுக்கு மேற்பட்ட மதிப்பை அல்லது எதிர்நிலை (negative) மதிப்பையும் பெறலாம்.

படத்தை நன்கு ஆராய்ந்தால் கீழ்க்காணும் முடிவுகள் புலனாகும். படத்தில் காணப்படும் 46 கோடு துண்டுகளில், 26 கோடு துண்டுகள் வலப்புறம் கீழ்நோக்கிச் செல்கின்றன (அதாவது நுகர்ச்சி, சேமிப்பு ஆகிய இரண்டும் எதிர் திசையில் அசைகின்றன என்பது பொருள்). இதில் 3 கோடு துண்டுகள் தோராயமாக படுக்கிடையாக அமைந்துள்ளன (அதாவது சேமிப்பு மாறும் தன்மையது; ஆனால், நுகர்ச்சி மாறாமலிருக்கிறது எனப் பொருள்படும்). ஆனால், ஒரு கோடு துண்டு மட்டும் செங்குத்தாக உள்ளது என்பது தெளிவாகத் தெரிகிறது. (நுகர்ச்சி மாறுகிறது; ஆனால், சேமிப்பு மாறவில்லை என்பது இதற்குப் பொருள்) 16 கோடு துண்டுகள் வலப்புறம் மேல் நோக்கிச் சரிந்து செல் கின்றன. (இதனால் சேமிப்பு, நுகர்ச்சி ஆகிய இரண்டும் ஒரே திசையில் மாறுகின்றன என்பது புலனாகும்.)




படம் 11·4.

காலாண்டுக்குக் காலாண்டு சேமிப்பு நுகர்ச்சி மாற்றங்கள் எதிர் திசையில் அசையும் போக்கை வெளிப் படுத்துவதாக, கோடு துண்டுகளின் படிவம் அமைவதுபோல் தோன்றுகிறது. ஆனால், காலப் போக்கில் சேமிப்பு, நுகர்ச்சி மட்டங்கள் திடீர் அசைவுடன் மேல் நோக்கிச் செல்கின்றன. இதனால் சிதறல் முழுமைக்கு அவை

நேர்நிலை (positive) மதிப்பைத் தருகின்றன. காலாண்டுக்குக் காலாண்டு, சேமிப்பு நுகர்ச்சித் தொடர்பின் எதிர்நிலை (negative) மதிப்பை விளக்கப் படம் 11-4 காட்டுகிறது. நுகர்ச்சி, சேமிப்பு ஆகியவைகளின் உடனிகழ்கின்ற மாற்றங்களின் படிவத்தை இப் படம் விளக்குகிறது. வடகிழக்கு, தென் மேற்கு நாற்கூறுகள் மட்டும், கீன்சின் எடுகோளுடன் பொருந்தி அமைந்துள்ளன. ஆனல், இவைப்போதா விவரங்களின் தொகைகளைக் கொண்ட வட்டாரங்களாகும்.

சேமிப்பும் நுகர்ச்சியும் வருமானத்துடன் எதிர்வித அசைவு உள்ளவைகளாகக் கீழ்க்காணும் சூழ்நிலைகளில் அமைகின்றன.

(a) வருமானம் விழும்போது நுகர்ச்சி உயரும்;

(b) வருமானம் உயரும்போது நுகர்ச்சி விழும்;

(c) வருமானத்தைவிட நுகர்ச்சி அதிகப்படி உயரும்;

(d) வருமானத்தைவிட நுகர்ச்சி அதிகப்படியாக விழும்;

(e) வருமானம் மாருமலிருந்தால் நுகர்ச்சி உயரலாம் அல்லது; விழலாம் (a), (b) ஆகிய நிலைகள் எதிர்நிலை இறுதிநிலை நுகர்ச்சி நாட்டத்தைக் குறிக்கிறது; (c), (d) ஆகிய நிலைகள் இறுதிநிலை நுகர்ச்சி நாட்டம் ஒன்றுக்கும் மேற்பட்ட மதிப்பைப் பெற்றுள்ளது என்பதைக் குறிக்கிறது. எதிர்வித அசைவுகள் குறுங்கால நடத்தைகளைக் குறிப்பதால் குறுங்கால இறுதிநிலை நுகர்ச்சி நாட்டம் எதிர்நிலை மதிப்பை அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மதிப்பைப் பெறும் என்று முடிவு கூறலாமா? இது ஒரு தவருன விளக்கமாக ஒருகால் அமையலாம். இதே கருத்தை வேறு வகையில் சுருக்கிச் சொல்லலாம். அதாவது வருமானத்துடன் தொடர்பற்ற வகையில் குறுங்கால நுகர்ச்சி மாற்றங்கள் ஏற்படலாம் என்று கூறலாம். ஒரு குறுகிய காலத்தில் அதாவது ஒரு மாதத்தில் அல்லது ஒரு காலாண்டில் நிகழும் வருமான மாற்றங்கள் மிகச் சிறியவை. எனவே, நுகர்ச்சி ஏற்றத் தாழ்வுகள் ஒழுங்கற்ற வகையில் மேலும் கீழுமாக அமைந்தால், சேமிப்பு இதற்கு எதிர் வகையில் அசைவதோடு அல்லாமல் அதன் அளவும் ஏறத்தாழ நுகர்ச்சி மாற்றங்களின் அளவோடு ஒத்து அமைகிறது. மிகக் குறுகிய காலத்தை அதாவது ஒருநாள் அல்லது ஒரு வாரம் என்ற மிகக் குறுகிய காலத்தில் ஏற்படும் நுகர்ச்சி மாற்றங்கள் (அல்லது அவைகளை அளவிடும் தவறுகள்) அவைகளுக்கு ஏற்ற வகையில் ஏற்படும் சேமிப்பின் முற்றொருமையான எதிர்வித அசைவுகளாலும்

நுகர்ச்சி மாற்றங்களுக்கு எதிர்வித மதிப்பைப் பெறுவதாலும், நுகர்ச்சி மாற்றங்கள் சரிக்கட்டப் படுகின்றன.[1]

நுகர்ச்சியின் ஒழுங்கற்ற இந்த மாற்றங்கள் (அவைகளை அளவைத் தவறுகள் எனக் கொண்டால்) வருமான மாற்றங்களை உருவாக்குகின்றன. குறுங்காலத்தில் நுகர்ச்சி வருமானத்தை நிர்ணயிக்கின்றதேயல்லாமல், வருமானம் நுகர்ச்சியை நிர்ணயிப்பதில்லை.

இந்த ஒழுங்கற்ற ஏற்றத் தாழ்வுகள் எப்போதோ நேருகின்ற வகையைச் சார்ந்தவைகள். ஆனல், அவை சராசரியில் சுன்னம் என்ற மதிப்பைப் பெறத்தக்க போக்கை உடையனவாகும். இத்தகைய நிலை மிகப் பெரிய கால அளவை உட்கருத்தாக அமைத்துக் கொள்கிறது. எனவே, நுகர்ச்சி, சேமிப்பு இவைகளின் மாற்றங்களை ஆண்டுக்கான விவரங்களில் காணுமிடத்து அவை இரண்டும் நெருங்கிய தொடர்பு கொண்டவைகளாக அமைகின்றன. இரண்டு ஆண்டு அல்லது மூன்று ஆண்டு காலங்களுக்கான நுகர்ச்சி, சேமிப்பு மொத்தங்களின் விவரங்களை ஆராயுமிடத்து இவை மிக நெருங்கிய தொடர்புடையவைகளாக அமைகின்றன. மிகப் பெரிய கால அளவைகளைப் பயன் படுத்துமிடத்து நுகர்ச்சி மாற்றங்கள், சேமிப்பு மாற்றங்கள் ஆகியவற்றின் தொடர்பு மிகவும் நெருங்கியவைகளாக அமைவதோடு அல்லாமல், அவைகளின் விகித அமைப்பும் பின்வருமாறு அமையும். அதாவது நுகர்ச்சி மாற்றங்கள் ·8 அல்லது ·9 என்ற மதிப்பு விகிதத்திலும் சேமிப்பு ·2 அல்லது ·1 என்ற மதிப்பு விகிதத்திலும் அமையும். இவ் விகிதங்கள் 5 ஆண்டு அல்லது 10 ஆண்டுகால அளவைகளைக் கொண்டு ஒப்பிடுகையில் விளையும்.

ஆனல், நுகர்ச்சியின் ஒழுங்கற்ற மாற்றங்கள் எப்போதோ நிகழ்பவைகளா? அப்படியானல் அவைகளின் விளைவுகள் அடிபட்டு நீங்குவதற்குத் தோராயமாக எவ்வளவு காலம் பிடிக்கும்?

[1] நுகர்வோரின் குறுங்கால நடத்தைக்கு மாறுன ஒரு முறையை ஆர்னல்ட் செல்னர் (Arnold Zellner) என்பவர் வழங்கியுள்ளார். இதனை 'எகனு மிட்ரிக்கா' பாகம் 25 (அக்டோபர் 1957) (P.P. 552-67) என்ற பத்திரிகையில் குறுங்கால நுகர்ச்சி சார்பு தொடர்பு என்ற கட்டுரையில் வழங்கியுள்ளார். (செல்னர் இதற்கு முந்திய ஆராய்ச்சிகளையும் குறித்துள்ளார்). போருக்குப்பிந்திய ஆண்டுகளின் விவரங்களையும், வருமானம், பின்னீடு உள்ள வருமானம், பின்னீடுஉள்ள நுகர்ச்சி, முந்திய உச்சிவரம்பு வருமானம், நீர்மைச் சொத்துகள் ஆகிய இவைகளின் பல கலவைகளையும் பயன்படுத்தி உள்ளார். எதிர்கால நிலை மதிப்பைப் பெற்ற எல்லா இறுதி நிலை நுகர்ச்சி நாட்ட சமன்பாடுகளை அவர் புறக்கணிப்பதை நாம் வெறுக்கிருேம். மேற்காட்டிய பகுப்பாய்வை அடிப்படையாகக் கொண்டால், இத்தகைய புறக்கணிப்புக்குக் காரணம் காட்ட முடியாது.

இவ் வினுக்களுக்கான சான்றுகளை ஆண்டு விவரங்களிலிருந்து பெறலாம். விளக்கப் படம் 11-5 1929 முதல் 1941 வரை 1946-58 வரையுள்ள ஆண்டுகளுக்கான நுகர்ச்சி, மக்கள் சார் சேமிப்பு விவரங்களை வழங்குகிறது. விவரங்கள் அனைத்தும் ஒவ்வொரு தலைக்கு உள்ள விவரங்கள் (Data are per capita) விலை மாற்றங்களுக்கு அவை திருத்தி அமைக்கப்பெற்றவை. படத்தில் காணப்படும் கோட்டுத் துண்டுகள், ஒன்றன்பின் ஒன்ருக உள்ள ஆண்டுகளின் கண்டறிதல்களை இணைக்கின்றன.




படம்: 11—5

இப் படத்தில் காணும் மாறிகளின் தொடர்பு போக்குக் கோடு, 1941 ஆண்டு நீங்கலாக மற்ற எல்லா ஆண்டுகளுக்கான விவரங்களுடன் பொருத்தி அமைக்கப்பட்டுள்ளது. மாறிகளின் தொடர்பு போக்கை நுகர்ச்சிச் சார்பு தொடர்பாக மாற்றி யமைத்தால் அது கீழ்க் காணும் வாய்பாட்டைக் கொண்டது.

$$C = 135{\cdot}7 + {\cdot}84\ di$$

இந்த வாய்பாடு (மூலநூலில் பக்கம் 248–ல் காணும்) செலவுக் குரிய வருமான மாறிகளின் நேரடித் தொடர்பு போக்குக்கான வாய்பாட்டுடன் பொருந்தி அமைவதைக் காணலாம். அந்தப் பக்கத்தில் காணும் தொடர்பு போக்குக்கான வாய்பாடு கீழ்க் கொடுக்கப் பட்டுள்ளது.

$$C = 104{\cdot}9 + {\cdot}86\ di$$

இப் படத்திலிருந்த பலவகை முடிவுகளை உடனடியாகப் பெறலாம் என்பது தெள்ளத் தெளிவு.

(1) விவரங்களுடன் மாறிகளின் தொடர்பு போக்கைப் பொருத்தி அமைத்த முறை மிகப் பிழைபட்ட முறை. இப் படத்தில் காணும் சராசரி தொடர்புகளுக்கு வெகு அண்மையில் பல ஆண்டுகள் அமைந்துள்ளன என்பதைக் குறிப்பிட வேண்டும்.

(2) ஆண்டுக்கு ஆண்டு அமைந்துள்ள கோட்டுத் துண்டுகளின் மிகச் சிலவற்றின் சரிவுடன் மட்டும், படத்தில் காணும் மாறி களின் தொடர்பு போக்குக் கோட்டின் சரிவு பொருந்தி அமைந் துள்ளது. ஆண்டுக் காண்டு கோட்டுத் துண்டுகளின் பெரும் பாலானவை சராசரித் தொடர்புக் கோட்டின் சரிவைவிட விரிவடைந்து காணப்படுகின்றன.

(3) 1948–49, 1950–51, 1954–55 1956–57 ஆகிய ஆண்டு களின் நுகர்ச்சி, சேமிப்புத் தொடர்புக்கான விவரங்கள் தலை கீழான அசைவுகளைப் பெற்றவை என்பதைப் படத்திலிருந்து காணலாம்.

படத்தை நன்கு ஆராயுமிடத்து ஒரு கருத்து நன்கு புலனு கிறது. அதாவது நுகர்ச்சிச் சேமிப்பு இவைகளின் ஆண்டுத் தொடர்புகளில், நுகர்ச்சியும், சேமிப்பும் ஒரே திசையில் அசை கின்றன என்பதையும், சேமிப்பின் மாற்றம் நுகர்ச்சி மாற்றத்தின் அளவைத் தோராயமாகப் பெற்று அமைந்துள்ளதையும் காண லாம். பல தரப்பட்ட அளவைகளைக் கொண்ட இறுதிநிலை நுகர்ச்சித் திறன்களுக்கு ஏற்றவாறு கோட்டுத் துண்டுகளின்

சரிவு அமைந்திருப்பதையும் காணலாம். ஆண்டுக் காண்டு மாற்றங்களை உணர்த்தும் குறிப்புகள் பல இறுதிநிலை நுகர்ச்சித் திறன் ·5 என்ற மதிப்புக்கும் ·7 என்ற மதிப்புக்கும் இடையே உள்ள மதிப்பைப் பெற்று அமைந்துள்ளதையும் காணலாம்.

இத்தகைய 'அகலமான' ஆண்டுக் காண்டு தொடர்புகளுக்கு மேல், மேல் நோக்கிச் செல்லும், அல்லது கீழ் நோக்கிச் செல்லும் பெயர்ச்சிகள் சிலவற்றைப் புகுத்தி இருப்பதையும் காணலாம். ஆனால், இவை மிகச்சில ஆண்டுகளுக்குள் நெருக்கமாக அமைந்துள்ளன. 1930–38 ஆண்டுகளுக்கான மாற்றங்களின் தோரணி (pattern) மிகப் பொருத்தமான தோரணியாக அமைந்துள்ளது. ஆயினும் அது 1929 மட்டத்தைவிட மிகக் குறைந்த மட்டத்தில் அமைந்துள்ளது. 1937–ஆம் ஆண்டு சேமிப்பைவிட மிக உயர்ந்த அளவு நுகர்ச்சி நிலைப் பெயர்வை (transition) உணர்த்துகிறது. இந் நிலைப்பெயர்ச்சி 1938 ஆம் ஆண்டுடன் முடிவடைந்து, பின்னர் 1941 ஆம் ஆண்டு முழுவதும் காணப்படுகிறது. 1946–54 காலத்தில் ஆண்டுக் காண்டு மாற்றப் படிவும் ஒருபடித்ததாய் அமைந்துள்ளது. ஆனால், போருக்கு முந்திய ஆண்டுகளில் உள்ள மட்டங்களை விடக் குறைந்த மட்டத்தில் அமைந்துள்ளது. உதாரணமாக 1929, 1936 ஆண்டுகளை 1937 உடன் ஒப்பிட்டுப் பார்ப்போம். இவ்வாண்டுகளில் உள்ள 'தலா' உண்மைச் சேமிப்பு 1947-49–ல் காணப்பட்ட சேமிப்புகளுடன் சமமானது. ஆனால், 1947-49 ஆண்டில் உள்ள நுகர்ச்சி மட்டங்களைவிட 1937 ஆம் ஆண்டின் நுகர்ச்சி மட்டம் உயர்ந்து காணப்பட்டது. மற்றொரு மிகப் பெரிய பெயர்ச்சி 1954–55 ஆண்டுகளுக்கிடையே உள்ள தொடர்பு மட்டங்களின் பெயர்ச்சியாகும்.

சுருங்கச் சொல்லின், மேற்கூறிய விவரங்கள் நடுத்தரத் தொடர்பை விளக்கின. அதாவது இறுதிநிலை நுகர்ச்சித் திறன் தோராயமாக ·5—·7 என்ற மதிப்புகளிடையே அமைந்த மாற்றங்களை விளக்கின. ஆனால், அதே சமயத்தில் இத் தொடர்புகள் மட்டங்களின் மிகப் பெரிய அல்லது ஒழுங்கற்ற பெயர்ச்சிகளையும் விளக்கின.[1]

[1] 1930-36, 1938-41, 1946-54 ஆண்டுகளுக்குத் தனித்தனி நுகர்ச்சி, சேமிப்பு ஆகியவைகளின் மாறித் தொடர்பு போக்கை அமைத்தால் கீழ்க்காணும் விளைவுகள் கிடைக்கும்.

| | | | |
|---|---|---|---|
| 1930-36 | C= | 857 0 | + 2·29s |
| 1938-41 | C= | 1000·0 | + 1·06s |
| 1946-54 | C= | 1316·3 | + ·91s |

இறுதிநிலே நுகர்ச்சித் திறன் மிகச் சிறிய மதிப்பை அதாவது ·5 என்ற மதிப்பைப் பெற்ற ஆண்டு விவரங்களேக் கொண்ட ஒரே ஒரு புள்ளியியல் ஆராய்ச்சியை லாரென்ஸ் கிலீன் (Lawrence Klein) ஆர்தர் கோல்ட்பெர்கர் (Arthur Goldberger) ஆகிய இருவரும் வழங்கியுள்ளார்கள். அவர்களது நுகர்ச்சிச் சார்பு தொடர்பு கீழ்க்காணும் வகையில் அமைகிறது.[2]

$$C_t = -22{\cdot}26 + {\cdot}55\ W_t + {\cdot}41\ P_t + {\cdot}34\ A_t + {\cdot}26\ C_{t-1} + {\cdot}072\ L_t + {\cdot}26\ N_t$$

இதில் C என்பது நுகர்வோரின் மொத்தச் செலவைக் குறிக்கிறது. W என்பது வரிகள் நீக்கப் பெற்ற உழைப்பாளியின் நட்ட ஈட்டைக் (Compensation after taxes) குறிக்கிறது. P என்பது வரிகளே நீக்கி உள்ள தொழில் முயல்வோரது மொத்த இலாப பங்கீட்டு வருமானத்தைக் குறிக்கிறது. A என்பது வரிகள் நீங்கிய பண்ணே வருமானத்தைக் குறிக்கிறது. L என்பது மக்கள் சார் நீர்மைச் சொத்து வைப்புகள் (முன் குறிப்பிட்டவை எல்லாம் 1939 டாலர் பிலியன் அளவுகளில் குறிக்கப் பட்டுள்ளன). N என்பது மக்கள் தொகையின் மொத்தத்தை மிலியன் அளவில் குறிக்கிறது. 1929-41, 1946-52 ஆண்டுகளுக்கான விவரங்களுடன் பொருத்தப் பட்ட சார்பு தொடர்பை அமைத்த முறையை நாம் இங்கு விளக்கவில்லே. மக்கள் தொகையைத் தனி மாறியாகத் தந்துள்ளோம். இதைத் 'தலா' மதிப்புள்ள மாறிகளின் அடிப்படையில் அமைக்கவில்லே. இதற்கான காரணங்களே நாம் இங்கு விளக்கத் தேவையில்லே. அதேபோல் நீர்மைச் சொத்துப் பெறுதல் என்ற விளக்க மாறியையும் நாம் கவனியாது விட்டுள்ளோம். (இச் சமன்பாட்டில் அதன் பங்கு மிகவும் சிறியது). மிஞ்சியுள்ளது கீக்காணும் சமன்பாடு; $C_t = a(di_t) + b(C_{t-1}) + d$. இதில் கூலி வாங்குவோர், இலாப வருமானத்தைப் பெறுவோர், விவசாயிகள் ஆகிய மூன்று மிகப் பெரிய வருமானத் தொகுப்புகளின் இறுதிநிலே நுகர்சித் திறன்களேக் கணக்கிட்டுள்ளோம். இவைகள் முறையே ·55, ·41, ·34 கூலி வாங்குபவர் மொத்த வருமானத்தில் தோராயமாக மூன்றில் ஒரு

---

செலவுக்கான வருமானங்களேப் பயன்படுத்தி இவ் வாய்பாடுகளே மாற்றியமைத்தால் கிடைப்பது பின்வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1930-36 | C= | 260·5 | + ·70 di |
| 1938-41 | C= | 485·4 | + ·51 di |
| 1946-54 | C= | 689·2 | + ·48 di |

[2] ஐக்கிய அரசுகளின் எகனுமெட்ரிக் (Econometric) மாதிரி 1929-1952 (வடக்கு ஹாலெண்ட், 1955) பக்கம் 90 இதை எளியமுறையில் விளக்கச்சில தொடர்களேப் புகுத்தியுள்ளோம்.

பங்கு வருமானத்தைப் பெறுகிறார்கள். ஆதலால், இத் திறன்களின் குறிப்பிட்ட சராசரி (weighted average) ·5 என்ற மதிப்புடன் ஒட்டி அமைந்துள்ளது.

$C_t$ -1 என்ற கெழு என்பதன் பொருள் என்ன? இதன் மதிப்பை கிலீனும் (Klein) கோல்ட்பெர்கரும் (Goldberger) அளித்த ·26 என்ற மதிப்பின் பொருள் என்ன? கிலீனும் (Klein) கோல்ட்பெர்கரும் (Goldberger) முந்தைய ஆண்டின் நுகர்ச்சியைப் புகுத்தியதன் விளக்கத்தைப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள். வருவாய் மாற்றங்களுக்கு உடனடியாக நுகர்வோர் எதிர் உணர்வு செய்வதில்லை என்பதை எல்லோரும் பொதுவாக ஏற்றுக் கொள்ளுகிறார்கள். எனவே, நடப்பு மதிப்பும், பின்னீடு உடன் அமைந்த வருமான மதிப்புகளை மாறிகளாக (சிலர் பயன் படுத்துகிறார்கள். நமது மாதிரியில் நுகர்வோரின் நிகழ்கால நடத்தையைக் கடந்த கால நுகர்ச்சி நடத்தை நிர்ணயிப்பதைப் பின்னீடுடைய வருமானம் என்று குறிப்பிடாமல், பின்னீடுடைய நுகர்ச்சி என்றுதான் குறிப்பிட்டுள்ளோம். நுகர்வோர் நடத்தைத் திரும்பத் திரும்ப வரும் போக்கை ஓரளவிற்குக் கொண்டது என்பது நமது எடுகோள். ஆனால், அவைகளுக்கான சரிக்கட்டுகள் வருமான நிலைமையை ஒட்டியும், மற்ற மாறிகளை ஒட்டியும் அமைக்கப்படுகிறது.[1]

ஆயினும் Ct-1 என்ற தொடருக்கு நாம் வழங்கும் விளக்கம் இவர்கள் விளக்கத்திலிருந்து மாறுபட்டு அமைந்துள்ளது. நடுத்தர கால அளவுகளில், நுகர்ச்சிச் சார்பு தொடர்பு நிலையுள்ளது என்பது உண்மையானால், ·5 முதல் ·7 வரையுள்ள மதிப்பைப் பெற்ற, இறுதிநிலை நுகர்ச்சித் திறனின் ஒழுங்கற்ற பெயர்ச்சிகளிடையே $C_t$ - 1 என்ற மாறி இந்தப் பெயர்ச்சிகள் நிகழ்ந்த பின்னர் ஏற்றுக் கொள்ளும் பங்கை வகிக்கிறது. நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் மட்டம் மேல் நோக்கி உயர்ந்த பின்னர், அதன் புது மதிப்பை, $C_t$ - 1யின் உயர்ந்த மதிப்பு பிரதிபலிக்கிறது. இதனால் $C_t$ உடன் தொடர்புடைய செலவுக்குரிய வருமானம் உயர்வதால் $C_t$ என்பதன் மதிப்பும் உயர்கிறது. இப் பெயர்ச்சிகள் நிகழும் ஆண்டுகளுக்கு இவ் வாய்பாட்டைப் பயன் படுத்துவதால், குன்றிய மதிப்பீட்டை நாம் பெறுவோம். ஆனால், இத்தகைய ஆண்டுகள் மிகச்சில என்ற காரணத்தால், இந்த வாய்பாடு நுகர்ச்சியை மதிப்பீடுகளைப் பொருள் உள்ளவைகளாக மாற்றி அமைக்கிறது. கிலீன்—கோல்ட்பெர்கர் வாய்பாடு (Klein—Goldberger Formula) கூறுவதாவது; 'கடந்த ஆண்டில் நுகர்ச்சி எந்த மட்டத்திலிருந்தது என்று எனக்குச் சொன்னால்,

1 அவர்களது முன்குறிப்பிட்ட நூலின் 8 ஆம் பக்கத்தைக் காண்க.

நான் இவ்வாண்டுக்கான நுகர்ச்சியை ·5 என்ற மதிப்புடைய இறுதி நிலை நுகர்ச்சித் திறனைப் பயன்படுத்தி முன்னறிவிப் பேன். செலவுக்கான வருமான மாற்றங்களைப் பற்றிக் கவலை யில்லை.'[1]

இவ்வகையில் விளக்கி அமைத்த இவ்வாய்பாடு நுகர்ச்சி மட்டங்களின் பெயர்ச்சிகளை விளக்காமல், பெயர்ச்சிகள் ஏற்பட்ட பின் அவற்றை ஏற்றுக்கொள்கிறது.

மேற்கூறிய விளக்கங்களை ' நுகர்ச்சிப் பிடிப்பு ' (Consumption Ratchet) என்ற கருத்தைக்கொண்டு ஒருவாறு விளக்கலாம். இக் கருத்து டூஸென்பெரி (Duesenberry) அவர்களது கருத்தை நினைவூட்டும் வகையில் அமைந்துள்ளது. மிக நீண்டகால வருமான வளர்ச்சி ஏற்படும் சில ஆண்டுகள் ஒவ்வொன்றிலும், சேமிப்புடன் தொடர்புடைய நுகர்ச்சி மட்டம் முழுவதும் (இதனால் தராதர வருமானம்) மேல் நோக்கி மிகக் கூர்மையாக இடம் பெயர்கிறது. அத்தகைய மேல் நோக்கிய இடப் பெயர்ச்சிகள் உயர்ந்த தராதர வருமானங்களடங்கிய காலங்களில் ஏற்பட்டன. ஆயினும் டூஸென் பெரி (Duesenberry) அவர்களின் 'முந்திய உச்ச மட்டம்' ('previous peak') என்ற கருத்து ஒவ்வொரு நிலையிலும் பொருந்தாது. இடப் பெயர்ச்சிகளுக்குக் காரணம் எதுவாகிலும், இப் பெயர்ச்சிகள் திரும்பவும் வரக்கூடிய நிலையைப் பெறமாட்டா. இதற்குப் பின் ஏற்படும் உயர்வுகளை அல்லது வீழ்ச்சிகளை, மற்றொரு பெயர்ச்சி ஏற்படும்வரை, நுகர்ச்சி, சேமிப்பு ஆகியவை பாகுபாடு செய்து கொள்கின்றன. ஒவ்வொரு பெயர்ச்சியும் இதற்கு முந்திய

[1] $c_t = a(di) + b(c_{t-1}) + d$ என்ற அமைப்பில் உள்ள மாறிகளின் தொடர்பு போக்கை 1929—40, 1946—58 ஆண்டுகளுக்கான விவரங்களுடன் பொருத்துவோமேயானால் நாம் கீழ்க்காணும் தொடர்பைப் பெறுவோம். (இங்குக் குறிப்பிட்டு உள்ளவை ' தலா ' விவரங்களை (per capita) அடிப்படையாகக் கொண்டு 1947—49 விலைகளில் குறிக்கப்பட்டுள்ளன.)

$$c_t = 7_2\, di + \cdot 17 c_{t-1} + 82\cdot 2$$

இதன் உடன் தொடர்பு கெழு ·9337 என்ற மதிப்பைப் பெற்றுள்ளது. இதில் க்லீன்-கோல்ட்பெர்கர் (Klien—Goldberger) வாய்பாட்டில் இறுதிநிலை நுகர்ச்சித் திறன் பெற்ற மதிப்பைவிட மிக உயர்ந்த மதிப்பைப் பெற்றுள்ளதற்குக் காரணம் காட்ட முடியாது. அதுபோல் பின்னீடுடைய நுகர்ச்சிக்கெழு மிகக் குறைந்த மதிப்பைப் பெற்றுள்ளதையும் விளக்க முடியாது. நமது விவரங்கள் ' தலா ' மதிப்பை அடிப்படையாகக் கொண்டுள்ளது; வேறுபட்ட பல ஆண்டுகளின் விவரங்களை உள்ளடக்கியது. வேறுபட்ட விலைக் குறியீடு எண்களைக் கொண்டு சுருக்கியுள்ளது என்பவைகளை நாம் உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். இருப்பினும் மாற்றங்கள் மிக உயர்ந்தவைகளாகக் காண்கின்றன.

நீர்மைச் சொத்துகளைப் புறக்கணித்தது ஒரு காரணமாக அமையலாம். கால அளவையில் அவைகளின் வளர்ச்சிக்கு, வருமானத்திற்குத் தந்துள்ள குறி யிட்ட மதிப்பை வழங்கி உள்ளோம்.

பெயர்ச்சி அளித்த மேடையிலிருந்து அகற்றுகிறது ('takes off'); எனவே, இந்தப் 'பிடிப்பு'க் கருத்து உருவாகிறது.[1]

## சுருக்கம்: (Summary)

நுகர்வோரின் செலவின் மிகக் குறுகிய கால ஏற்றத்தாழ்வுகளை, வருமான மாற்றங்களால் விளக்க முடியாது என்பதை இவ்வதிகாரத்தில் குறித்தோம். காலாண்டுக்கு—காலாண்டு காலத்தை அடிப்படையாகக் கொண்டால் நுகர்ச்சி மாற்றம் வருமான மாற்றத்திற்குக் காரணமாக அமைகிறது. மேலும் நுகர்ச்சி மாற்றம், வருமான மாற்றத்தின் செயலற்ற விளைவாகவும் அமைகிறது.

குறுங்கால நுகர்வோர் செலவு ஏற்றத்தாழ்வுகள், முந்திய ஆண்டின் அல்லது முந்திய காலாண்டின் செலவுக்குரிய வருமான மாற்றங்களின் விளைவுகள் என்ற கருதுகோளை இவ்வதிகாரத்தில் கவனித்தோம். ஆனால், அதைப் புறக்கணித்துவிட்டோம். நுகர்வோரின் குறுங்கால நுகர்ச்சி நடத்தையை விளக்கவும், அதைச் செப்பனிடவும், பின்னீடுகளைக் கொண்ட அமைப்பு ஒன்றுமில்லை.

நுகர்ச்சியின் குறுங்கால ஒழுங்கற்ற ஏற்றத் தாழ்வுகளை விளக்கினோம். இந் நெளிவுகளை ஒப்பிடும் கால அளவைகள் மிக விரிந்து அமைந்தால், இந் நெளிவுகளின் மதிப்புச் சராசரியில் சுன்னம் என்ற மதிப்பைப் பெற்றவை என்பதை விளக்கினோம். நுகர்ச்சி, வருமானம் இவைகளிடையே நம்பத்தக்க ஒழுங்கான தொடர்புகள் நிலவ வேண்டுமானால், இவைகளை ஆராய்வதற்கான கால அளவு மிகவும் விரிந்து காணவேண்டும் என்பதையும் குறித்தோம். ஓர் ஆண்டு காலத்தை அடிப்படையாகக் கொண்டால், நுகர்வோர் நடத்தை (நாம் வருமானத்தை விளக்குவதை மட்டும் இருத்திக்கொண்டால்), மிகவும் 'தட்டையான' (flat) நடுத்தர நுகர்ச்சித் தொடர்புடையது என்ற மிகப் பொருத்தமான விளக்கத்தைக் குறித்தோம். இந் நடுத்தர நுகர்ச்சித் தொடர்பின் இறுதிநிலை நுகர்ச்சித் திறன் ·5 முதல் ·7 வரையுள்ள மதிப்பைப் பெற்றிருப்பதால். இதன் நிலை, 4 ஆண்டுகள் முதல் 6 ஆண்டுகள் வரை ஒரே நிலையானதாகும். ஆனால், சில வேளைகளில் வருமானம்

[1] 1929ஆம் ஆண்டும், இதைப் பின் தொடர்ந்த ஆண்டுகளும், இதற்கு விதி விலக்குகளாகும். முந்திய ஆண்டுகளுக்கான முழு விவரங்களைப் பெறுதவரை, 1929ஆம் ஆண்டுக் குறிப்பாக உயர்ந்த ஆண்டு எனச் சொல்வதற்கில்லை. அல்லது அவ்வாண்டில் நுகர்ச்சிச் சார்பு தொடர்பு கீழ்நோக்கிச் செல்லும் அமைப்புப் பெற்றது எனவும் சொல்ல முடியாது. அவைகளுக்கு விளக்கம் ஒருவேளை முடியுமானால் மிகப் பெரிய தொழில் தேக்கத்தின் (great depression) கோரத் தன்மையை ஓரளவு விளக்க முடியும். (அல்லது அதனை ஏற்படுத்தத் துணைபுரிந்த காரணிகளால் விளக்கம் செய்யப்பட்டது.)

உயரும்போது ஒழுங்கற்ற முறையில் இடம் பெயர்வதுபோல் தோன்றும். இச் சந்தர்ப்பங்களில் இப் பெயர்ச்சிகள் சராசரியில், (ஆனல், மிகப் பெரிய கால அளவில் மட்டும்) ·85 முதல் .9 வரையுள்ள மதிப்பைப் பெற்ற சரிவைக்கொண்ட தொடர்பை உருவாக்கும். இதனல் நுகர்ச்சி, வளர்ச்சி காலப் போக்கில், வருமானத்துடன் விகிதாசாரத் தொடர்புடையதாக அமைகிறது. ஆனல், இவ்வொழுங்கற்ற பெயர்ச்சிகளை விளக்கவில்லை.

ஆயினும் இப் பெயர்ச்சிகளைச் சற்று விளக்குவோம். நடப்புச் செலவுக்கான வருமானம் ஒன்று மட்டுமே, குறுங்கால (உதாரணம் காலாண்டுகள்) அல்லது நடுத்தரக் (உதாரணம் காலாண்டுகள்) கால அளவுகளைக் கொண்ட நுகர்ச்சிச் செலவுகளை முழுமையாக விளக்குவது இல்லை என்பது தெளிவு. இந்த விளைவு வியக்கத்தக்க விளைவு அல்ல; என்றலும், கீன்சு வழிவந்த சில பொருளாதார வல்லுநர்கள் இதை ஏற்றுக்கொண்டுள்ளனர். நமது சொந்தச் செலவைக் கவனிக்குமிடத்து, அது உடனடியாகப் பெற்ற வருமானத்தில் நிர்ணயிக்கப்படுவதில்லை என்பது தெளிவாகிறது. 10 நிமிடங்கள், அல்லது ஒரு மாதம், ஏன் ஓர் ஆண்டு எனக் குறிக்கும் மிகச் சிறிய காலத்திற்கும், இது உண்மைக் கருத்தாக அமைகிறது. குறிப்பிட்ட ஒரு காலத்தில் அமைந்துள்ள நமது நுகர்ச்சி தோரணி, வருமான மட்டத்தால் உறுதியாக நிர்ணயிக்கப்படுகிறது. இவ் வருமான மட்டம், கடந்த காலத்தின் ஒரு பகுதியில் தொடங்கி, எதிர் காலத்தின் ஒரு பகுதிவரை நீட்டி அமைந்துள்ளது. ஆனல், மிகப் பெரிய நீண்ட கால வருமானம் முக்கியமானது. டுஸென்பெரி (Duesenberry) பிராயிட்மென் (Friedman), மற்றும் பலர், மிக எளிமையானது எனத் தோற்றமளிக்கும் இந்தத் தொடர்புக்குப் பல வாய்பாடுகளை வழங்கியுள்ளார்கள். ஆனல், அவர் வாய்பாடு எல்லாவற்றின் அடிப்படைக் கருத்துக் குறையற்றது. நடப்பு நுகர்ச்சியின் விளக்கத்திற்கு உறுதுணை எனக் கருதப்படும், வருமான வரலாறு, அதன் நடப்பு மட்டம், வருமானத்தின் மாற்றம், எதிர்கால வருமானத்திற்கான எதிர்பார்ப்புகள், இவைகளின் குறிப்பிட்ட கலவை எவ்வாருயினும், நுகர்ச்சி, வருமானம் ஆகியவைகளின் தொடர்பு (பணம் மிகுந்து காணும் சமுதாயங்களிலும்), கீன்சு வழிவந்த வல்லுநர்கள் எதிர்பார்த்ததைவிட மிகவும் சிக்கலானது.

நுகர்வோரின் செலவுகளை நிர்ணயிப்பதற்கு வருமானத்தைத் தவிர வேறு பல காரணிகள், மாற்றங்களை விளக்கும் மாறிகளாக உள்ளன. அவைகளை 12ஆம் அதிகாரத்தில் காண்போம்.

(a) குறுங்காலத்தின் நுகர்ச்சிச் செலவுகளை—அதாவது காலாண்டு அல்லது ஆண்டுக்கான தொடர்புகளில் கண்டவாறு உள்ள ஒழுங்கற்ற பெயர்ச்சிகளை விளக்கவும், அல்லது (b) நெடுங்கால நுகர்ச்சிச் செலவுகளின் நடத்தையின் விளக்கத்தைச் செப்பனிடவும், இக் காரணிகளில் சில, பயனுள்ளனவாகின்றன.

# 12. நுகர்ச்சிச் செலவுகளை வளப்படுத்தும் வேறு சில காரணிகள்

## (Other influences on Consumption Spending)

நுகர்வோரின் செலவுகளை விளக்குவதற்கு வருமானம் சிறந்த தொரு காரணி என்று கீன்சு அவர்கள் காட்டிய விளக்கம் முழுமை யானதல்ல. ஏனெனில், இவ் விளக்கத்தை மீண்டும் ஆராயுமிடத்து வேறு பல பிரச்சினைகள் உருவாவதை அதிகாரம் 10 என்பதிலும் (மிக விளக்கமாக அதிகாரம் 11 என்பதிலும்) கண்டோம். குறுங்கால நுகர்ச்சிச் செலவுப்போக்கில், ஒழுங்கற்ற, விளக்க முடியாத விவரங்கள் அடங்கியுள்ளன என்பதையும், அல்லது நுகர்ச்சியை வளப்படுத்த வேறு பல காரணிகள் ஒழுங்கான முறையில் தொடர்பைத் தருகின்றன என்பதையும், நாம் உணர வேண்டும். எனவே, நுகர்ச்சிச் செலவுகளை நிர்ணயிக்கும், வேறு பல காரணிகளை இவ்வதிகாரத்தில் காண்போம்.

காரணிகளை நல்ல முறையில் ஆராய்வதற்கு, இவைகளைப் பல தொகுப்புகளில் அடக்கலாம். வருமானம் என்பது மட்டும் தனிப்பட்ட முறையில் நுகர்ச்சியை நிர்ணயிக்கிறது என்று கீன்சு கூறியிருந்தும், அவர், நுகர்ச்சிக்கான காரணிகளைப் 'புறவயக் காரணிகள்' (Objective factors) என்றும், 'அகவயக் காரணிகள்' (Subjective factors) என்றும் இருவகைப் படுத்தினர். கீன்சு அவர் களின் பாகுபாட்டுடன் ஒட்டி அமைந்த வேறு ஒரு விளக்கமான பாகுபாட்டை நாம் இங்குப் புகுத்தியுள்ளோம். புறவயக் காரணிகள் என்பதில் காணும் மாறிகள் பொருளியல் தொடர் புடைய காரணிகளாக மட்டும் அமையாமல், அவை குறுங் காலத்தில் மாறும் தன்மை உடையவை; மேலும் கருத்தளவில் அவை அளவிடக் கூடிய மாறிகளாகவும், புள்ளியியல் நுகர்ச்சிச் சார்பு தொடர்புடன் பொருந்தி அமைக்கக் கூடியனவாகவும் உள்ளன. புறவயக் காரணிகளில் சில, தனி நபரின் நுகர்ச்சிப்

போக்கைப் பொதுவாக பாதிக்கக் கூடியவை என்ற காரணத்தால் அவற்றை முதற்கண் விளக்குவோம். பின்னர் குறிப்பாக நீள்பயன் சரக்குகளின் செலவுகளுடன் தொடர்புடைய சில காரணிகளை விளக்குவோம். பின்னர், எதிர்பார்ப்புகள், (expectations) போக்குகள் (attitudes)ஆகியவைகளை உள்ளடக்கிய அகவய அல்லது உளவியல் காரணிகளைக் கவனிப்போம். அமைப்புப் பற்றிய 'காரணிகள்' (Structural factors) என்ற தலைப்பின் கீழ் தொகுதி யாக்கல் (aggregation) பிரச்சினைகளுடன் தொடர்புடைய சில பகுதிகளை ஆராய்வோம் குறிப்பிட்ட சில தொகுதிகளின் செலவு அலகுகள் ஒரே நிலையுள்ளனவாய் அமைந்திருப்பினும், பல தொகுதிகளின் தராதரக் குறியீடுகளின் மாற்றங்கள், நுகர்ச்சி, வருமானம் ஆகியவைகளின் மொத்தத் தொடர்பை மாற்றும். (அல்லது வேறு பல விளக்கக் காரணிகள் மாற்றலாம்). மொத்த வெளிப்பாடு அல்லது நாட்டின் மொத்த ஆக்கத்துடன் தொடர் புடைய (தனி நபரின் நடத்தையுடன் தொடர்புடைய வருமான மாறிலி) செலவுக்குரிய வருமானத்தையும், பொருளாதார அமைப்பில் காணப்படும் நுகர்ச்சியின் பங்கையும், பாதிக்கும் சில காரணிகளை இறுதியாக விளக்கியுள்ளோம். இக் காரணிகளில் மிக முக்கியமானது வருவாய்க்குரிய கொள்கையாகும். (fiscal Policy). கீன்சுக்குப் பின் வந்த நிபுணர்களின் ஆராய்ச்சிகளைக் கொண்டு, கீன்சின் நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் மதிப்பீட்டுச் சுருக்கத்துடன் இவ்வதிகாரம் முற்றுப்பெறுகிறது.

## நுகர்ச்சியை வளப்படுத்தும் சில புறவயக் காரணிகள்
## (Some 'Objective Factors' influencing Consumption)

### வட்டி வீதம் (Rate of Interest)

அறிவுடைய மாந்தர் எல்லாம் வட்டி வீதம் மிகுந்து காணு மிடத்து அதிகமாகச் சேமிப்பார்கள்; வட்டி வீதம் குறைந்து காணப்பட்டால், சேமிப்புக்குறைந்து காணப்படுகிறது என்பதற் கான காரணகாரிய (a priori) விளக்கத்தை முன்பே கொடுத்திருந் தும், இது மிகவும் முக்கியமான காரணி என்பதை எவரும் ஏற்றுக் கொள்ள மறுக்கிறார்கள். இக் கிளாசிகல் கருத்தை ஆதரிக்க ஒருவித அனுபவ வழி (empirical) சான்றுமில்லை [1]

1 சில வகையில், குறிப்பாக வங்கி இருப்புகளாக வைக்கப்பட்டிருக்கும் சேமிப்புகள். அவ் விருப்புகளுக்கு வழங்கப்படும் வட்டி வீதத்தை ஒட்டி அமைந்துள்ளன என்ற சான்று நம் ஆராய்ச்சிக்குப் பொருளற்றது. உயர்ந்த வட்டி வீதங்கள் மக்கள் சார்பு சேமிப்புகளை எப்படிப் பாதிக்கின்றன என்பதற்கான சில நுகர்வோர் கணக்கெடுப்புகளால் காணலாம். குறிப்பாக: நுகர்வோரின் எதிர்கால நம்பிக்கை முறிவு (Consumer optimisom Weakening). மக்கள் நடத்தை ஆராய்ச்சிக் கழகம் (ஜூலை 1957) பக்கங்கள் 36-48. இதனை, ஜி. கடோனு (G. Katona) அவர்களது வல்லமையுள்ள நுகர்வோர் (The powerful Consumer) என்ற நூலில் சுருக்கியுள்ளார். பக்கம் 223. இந் நூலை மெக்கிரா ஹில் நிறுவாகம் 1960-ல் வெளியிட்டது.

### ‘அளவுப் பயன்’ (Scale Effect)

ஒரு பண்டத்தின் அல்லது பல பண்டங்களின் மொத்த நுகர்ச்சித் தேவை, மற்றப்பண்டம் அல்லது பண்டங்களின் குறிப்பிட்ட தேவையினுல் விளைவது என்பதைக் கவனியாமல், விளம்பரத்தாலும், வேறு பல விற்பனை முயற்சிகளாலும், மொத்தத் தேவை உயர்கிறது என்று சிலர் கருதுகிருர்கள். ஆயினும், இக் கூற்றில் உண்மை இருக்கத்தான் செய்கிறது. ஏனெனில், சில சமயங்களில் விற்பனை முயற்சிகள் மிகுந்து காணப்படுவதால், நுகர்வோரின் மொத்தச் செலவு உயர்கிறது. ஆனல், இதற்கு ஒரு வரையறை உண்டு. விற்பனை முயற்சிகள் நுகர்வோரது மொத்தச் செலவை உயர்த்த, வருமான மட்டம் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். மொத்தத் தேவைக் கோட்பாட்டில் இதற்குப் போதிய அளவு கவனம் செலுத்தாமைக்குப் பல காரணங்கள் காட்டலாம். முதலாவதாக, விற்பனை முயற்சிகளின் பருமனை அளவிடக் கூடிய தனி அளவை எதுவுமில்லை; விற்பனை முயற்சிகளின் அளவு குறுங்காலத்தில் அதிக நெளிவுகளைப் பெறுமை இரண்டாவது காரணம். இறுதியாக, விற்பனை முயற்சிகள் (கடந்த காலத்திலாவது) சமூகக் கட்டுபாட்டிற்கு உட்பட்டவையல்ல.

### தராதர விலைகள் (Relative Prices)

விற்பனை முயற்சிகள், மொத்தத் தேவையை வளப்படுத்தக் கூடிய காரணிகளில், ஒன்று என்பதைப் புறக்கணித்ததுபோல்-அக்காரணி, ஒரு பண்டத்தின் தேவையை மற்ருெரு பண்டத்திற்கு இடம் பெயரச் செய்வதால்–, பலதரப்பட்ட பண்டங்களின் தராதர விலைகளையும் மொத்த நுகர்ச்சியை வளப்படுத்தும் காரணித் தொகுதிகளிலிருந்து சில பொருளியல் மேதைகள் அப்புறப்படுத்தியுள்ளனர். இத்தகைய புறக்கணிப்புத் தேவையற்றது. மேலும் முறையற்றது என்பதையும், தராதர விலைகள் மொத்தச் செலவை வளப்படுத்தும் காரணிகளில் ஒன்று என்பதையும் விளக்கலாம்;[1] ஆயினும், மொத்த நுகர்ச்சியை வளப்படுத்துவதற்கு ஒரு சில வகை தராதர விலைகளுக்கான கருத்தியல் எடுகோள்கள் வழங்கப்பட்டுள்ளன. விளம்பரச் செலவுகளைப்போல் இக் காரணியும் மொத்த நுகர்ச்சியை வளப்படுத்தும் காரணிகளில் ஒன்ருக அமையலாம். ஆனல், இக் காரணி உண்மையில்

[1] ஜி. ஆக்லே, டி.பி. சூட்ஸ் (G. Ackley, D.B Suits) ‘தராதர விலை மாற்றங்களும் மொத்த நுகர்ச்சித் தேவையும்’ அமெரிக்கன் பொருளியல் விமர்சனம் X L (டிசம்பர் 1950) பக்கங்கள் 785-804; இதே நூலில் அதிகாரம் இருப்பதைக் காண்க.

நுகர்ச்சியை வளப்படுத்துமா அல்லது எவ்வகையில் மொத்த நுகர்ச்சியை அது வளப்படுத்தும் என்பதற்கான கருத்தியல் எடுகோள்கள் வழங்கப்படவில்லை.

## முதலீட்டு ஆதாயம் (Capital Gains)

வருமானம் மட்டும் நுகர்ச்சியை வளப்படுத்தாமல், முதலீட்டு ஆதாயமும் நுகர்ச்சியை வளப்படுத்துகிறது என்ற உண்மையைக் கீன்சு அறியாமல் இல்லை. உண்மையில், இந் நூற்றாண்டின் இரண்டாவது புத்தாண்டுகளில் அமெரிக்காவில் ஏற்பட்ட பூரிப்புக்கு ஒரு காரணத்தைக் கீன்சு ஊகிக்காமல் இல்லை. அக்காலத்தில் ஏற்பட்ட பூரிப்புக்கு, பங்கு மார்கெட்டில் (Stock Market) பெற்ற, அல்லது பெறாத முதலீட்டு இலாபங்களைப் பிரதிபலிக்கும் தொடர்ச்சியாக நுகர்வோரின் செலவு ஒரு காரணமாக அமைந்தது. புள்ளியியல் சார்பு தொடர்பில் முதலீட்டு ஆதாயத்தைப் புகுத்தச் சில பொருளியல் மேதைகள் முற்பட்டனர்.[1] சொத்துகளின் இருப்பு நுகர்ச்சியை ஒரு வேளை பாதிக்கலாம் என்ற கருத்தை இது உள்ளடக்கியது. இக் கருத்தை இப்பொழுது ஆராய்வோம்.

## சொத்துகளின் அளவை (The Volume of Wealth)

நுகர்வோர் செலவைப் பலப்படுத்தும் காரணிகளின், அவரவர் சொத்தின் நிலைமை ஒரு காரணியாகலாம் என்பது ஒரு சாராரின் கருத்து. இக் காரணி பொருந்தி அமையும் வாதங்கள் அனைத்தும், காரணகாரிய வாதங்களாகும். இவ் வாதங்களின் முழுமையான வாய்பாட்டை பிகு (Pigou)[2] என்பவர் வழங்கினார். நுகர்வோர் நடத்தையின் கருத்தியலான (abstract) மாதிரியைக் கொண்டு வாதங்களை அவர் ஆராய்ந்தார். நுகர்ச்சிச் செலவுகள் வருமானத்துடன் தொடர்புடையவை என்பதற்கான காரண காரிய வாதங்களை முன்பு பத்தாம் அதிகாரத்தின் பின் இணைப்பில் குறிப்பிட்டோம். பண்டங்களின் நடப்புப்பயன் நுகர்வோரின் சொத்துகளின் இருப்புகளைச் சார்ந்து அமைந்துள்ளது என்பதை அங்குக் கண்டோம். நடப்பு அல்லது எதிர்காலப் பயன்களும் (நடப்புச் சொத்துகள் அதிகமாயின், நடப்பு நுகர்ச்சியும் அதிகமாகும்) உயரும். நுகர்ச்சிச் சார்பு தொடர்பில் காணப்படும்

1 ஜான் டின்பெர்கன்: 'வியாபாரச் சுழல் கோட்பாட்டுக்கான புள்ளியியல் சோதனை இரண்டாம் பாகம்; ஐக்கிய அரசுகளில் 1919-1932 வியாபாரச் சுழல்' (சர்வதேச சங்கம், ஜினிவா 1939) பக்கங்கள் 35-40.

2 ஏ. சி. பிகு (A. C. Pigou) 'வேலைச் சமநிலை' (லண்டன் 1941) குறிப்பாகப் பக்கங்கள் 96-130; டி. பாடின்கின்: 'பணம், வட்டி, விலைகளும்' (ராவ், பீட்டர்சென் 1956) காண்க.

ஒவ்வொரு மாறிகளின் மதிப்பும் குறைந்து செல் பயன்பாட்டுடன் தொடர்புடையது ஆதலால், சொத்துகளின் இருப்பு உயருமிடத்து அவைகளின் பயனும் குறையும் என்பது தெளிவு. எனவே, நடப்பு நுகர்ச்சியைக் குறைத்து எதிர் காலத்தில் அதிகப்படிச் சொத்து களைச் சேர்ப்பதில் மக்கள் நாட்டம் கொள்ளமாட்டார்கள். இக் கருத்தியல் எடுகோளை வேறு வகையில் வெளிப்படுத்தலாம். அதாவது, மற்றவை மாறுதிருப்ப, ஒருவன் அதிக சேமிப்பைப் பெற்றிருந்தால், மேலும் சேமிப்புகளைக் குவிக்க விரும்பமாட் டான். தேவைகள், விருப்பங்கள், வருமானம் ஆகியவைகளின் முற் றொருமையான நபர் இருவர் உளர் என்று வைத்துக் கொள்வோம். ஆனல், அதில் ஒருவர் (கடந்த சேமிப்பு அல்லது, மரபு உரிமை, அல்லது, நன்கொடை அல்லது எதிர்பாராது கிடைத்த இலாபம் இவைகளால்) ஏற்கெனவே அதிக சேமிப்பைப் பெற்றுள்ளார் என்று வைத்துக் கொள்வோம். இதனுல் அவர் சொத்து களுடன் நடப்புச் சேமிப்புகளைச் சேர்க்க முற்பட மாட்டார்; ஆனல், மற்றொருவர் சொத்துகளைப் பெறுத காரணத்தால், சொத்துகளைச் சேர்ப்பதில் நாட்டமுடையவர் ஆவர். A, B, ஆகிய இருவரது வருமானங்களும் (வரிகள் செலுத்திய பின்னர்) $ 10,000 என்று வைத்துக் கொள்வோம். அவர்கள் இருவரும் எல்லா வகையிலும் முற்றொருமையானவர் ஆனல், A என்பவர் $ 100,000 மதிப்புடைய சொத்துடையவர் B என்பவர் $10,000 மதிப்புள்ள சொத்துடையவர். இந்நிலையில் A என்பவர் $ 1000 சேமிப்பார்; ஆனல், B அவரைவிட அதிகமாகச் சேமிக்க வேண்டும்; அதாவது $ 1 010, $ 1,200 அல்லது $ 2,000 போன்ற வைகளைச் சேமிப்பார். ஆனல், $ 100,000 மதிப்புள்ள அதிகப்படி சொத்துகளைச் சேமிக்க, ஒருவர் ஆண்டுக்கு $ 10, $ 50, அல்லது $ 1000 சேமிக்க வேண்டி வருமா என்பதைக் காரணகாரிய வாதங்களைக் கொண்டு கூற முடியாது. இதனுல் ஏற்படும் விளைவு களின் அளவை அடிப்படையாகக் கொண்ட பருமனைக் கூற முடியாது. ஆகவே, நுகர்ச்சிச் சார்பு தொடர்பில் காணப்படும் இம் மாறிலி மிக உயர்ந்த அல்லது தாழ்ந்த மதிப்பைப் பெற்றுள்ளது.

நுகர்ச்சி, சொத்துகளின் அளவைச் சார்ந்து உள்ளது என் பதை விளக்கப் பயன்பட்ட பல சந்தர்ப்பங்களைக்[1] காட்டி விளக்க லாம்; வேலை நிறைவை ஏற்படுத்தக் கூடிய அளவிற்கு மொத்த

[1] மற்ற சந்தர்ப்பங்களுக்கு ஜி. ஆக்லே சொத்துச்சேமிப்பின் 'பயன்' என்ற கட்டுரையை அரசியல் பொருளாதார அமைப்பு என்ற பத்திரிகை L I X (April 1951) பக்கங்கள் 154-61. மேலும் இந் நூலின் XIX அதிகாரத்தைக் குறிப்பாகப் பக்கங்கள் 555-59 காண்க.

தேவை அமையவில்லை என்றும், கூலிகளும் விலைகளும் மிகவும் இணக்கமானவைகள், அதாவது உழைப்பின் அளிப்பு அதிகமாக இருக்கும் வரை, விலைகளும் கூலிகளும் வரையறையில்லாமல் விழக் கூடியவை என்றும் வைத்துக் கொள்வோம். விலைகளும் கூலிகளும் இவ்வாறு விழுவது பொது மக்களின் சொத்து உடைமைகளின் மொத்த (அதாவது உண்மை) மதிப்பை உயர்த்தும். பொது மக்கள் சொத்துகளின் ஒரு பகுதி பண்டங்களாகவும், நிலமாக வும், சாதாரணப் பங்குகளாகவும் (equities) உள்ளது. அத்தகைய சொத்துகளின் மதிப்பு, மற்ற விலைகள் குறையும்போது குறை கிறது. இதனால் சொத்துகளின் உண்மை மதிப்பு உயர்வதில்லை. ஆனால், சொத்து உடையோரது ஒரு பகுதி மாறுப் பண மதிப்பைப் பெற்றது. மாறுப் பணமதிப்புடைய சொத்து என்பதில் பணம், சில வகைக் கடன்கள் குறிப்பாகப் பொதுக் கடன்கள் ஆகியவை களைப் புகுத்தியுள்ளோம்.[1] விலைகளின் சுருக்கம், நுகர்வோர் சொத்துகளின் பண மதிப்புக் கொடுக்கப்பட்டுள்ளதாயின், அவைகளை (உண்மை அளவில்) உயர்த்தும். சொத்துகளின் (உண்மை) மதிப்பு உயருமேயாகில், நுகர்ச்சி பலப்படுத்தப் படுகிறது. அதன் பிறகு விலைகள் குறைந்தால் மொத்தத் தேவை குறைவுபடுவதைத் தவிர்க்கும் அளவிற்கு விலை குறைப்பு நுகர்ச்சி யைப் பலப்படுத்தும்.

ஆகவே, குறைவுபட்டுக் காணும் மொத்தத் தேவைக்கு, இணக்கமான விலைகள் ஏற்ற மாற்று மருந்து எனச் சிலர் கருது கிறார்கள். இதனைப் ‘பிகு விளைவு’ (Pigou Effect) எனக் குறிப் பிடலாம். பிகு என்ற பொருளியல் வல்லுநர் இதனை முதன் முதலாக வெளியிட்டமையால் இதனைப் ‘பிகு விளைவு’ எனக் குறிப்பிடலாம்.

ஆனால், விளைவின் அளவை அடிப்படையாகக் கொண்ட பருமன் இவ்விடத்தில் தான் முக்கிய இடத்தைப் பெறுகிறது. ஒரு பொருளியல் அமைப்பின் மொத்தத் தேவை 70 என்றும் அதில் 50 நுகர்ச்சியாகவும், 20 அரசு செலவு முதலீடு ஆகியவைகளாகவும் அமைந்துள்ளன என்று வைத்துக்கொள்வோம். வேலை நிறைவு இருக்குமேயானால் மொத்த வருமானமும், மொத்த வெளிப்பாடும் (தாற்காலிக விலை கொண்டு அளவிட்டால்) 100 ஆக இருக்கலாம்.

1 தனித்துறை கடனது விலை, மற்றவிலை மட்டங்களுடன் சேர்ந்து விழுவதில்லை. ஆனால், இது ஒன்றை ஒன்று அடித்து நீக்குவது அல்லது அந்தப் போக்கு நீக்கப் பெறுகிறது. இது கடன் வழங்குவோரின் சொத்து உயர்வு, கடன் வாங்கியவரின் சொத்துக் குறைவதாலும் அல்லது எதிர்நிலைச் சொத்துக் குறைவதாலும் செயற் படுகிறது.

நுகர்ச்சிச் சார்பு தொடர்பு கீழ்க்காணுமாறு அமைந்துள்ளது என்று வைத்துக்கொள்வோம்.

$$C = \cdot 5y + \cdot 2w - 85$$

இதில் c,y ஆகியவை உண்மை நுகர்ச்சியை (real consumption) வெளிப்படுத்துகின்றன. w என்பது நுகர்வோரது சொத்துகளின் உண்மை மதிப்பை உணர்த்துகிறது. (இவைகள் எல்லாம் நடைமுறை விலைகளைக் கொண்டு அளவிடப்படுகின்றன) பொருளாதார அமைப்பின் மொத்தச் சொத்து w என்பது விலை மட்டத்துடன் அதாவது p என்பதுடன் எதிர்விகித தொடர்புடைய உண்மை மதிப்புடைய அரசின் ஆவணங்கள், பணம் ஆகிய 250 அலகுகளையும், பண்டங்கள், ஒப்புரவு பத்திரங்களைக் கொண்ட 250 அலகுகளையும் கொண்டது. இவைகளின் விலைகள் நடப்பு வெளிப்பாட்டின் விலை மாற்றங்களுடன் நெளிவுடையது என்ற எடுகோளுடன் அமைந்தது. இவ்வெடுகோள்களால் அவைகளின் உண்மை மதிப்பு மாறிலியாக அமைகிறது. y = 70 ; w = 500 என்ற மதிப்புகளைச் சார்பு தொடர்பில் புகுத்தினால், மேற் கூறிய சார்பு தொடர்பு C = 50 என்ற மதிப்பை விளைவிக்கிறது.

உண்மைத்தேவை 100 ஆக உயர்வதற்கு, அதாவது உண்மை நுகர்ச்சி 50-ல் இருந்து 80 ஆக உயர, விலைமட்டம் எந்த அளவிற்குக் குறைய வேண்டும் என்பதைக் கீழ்க்காணும் வகையில் கணக்கிடலாம்.

$$C = 80 = .5\,(100) + .2\left(250 + \frac{250}{P}\right) - 85$$

$$80 = 50 + 50 + \frac{50}{P} - 85$$

$$65 = \frac{50}{P}$$

$$P = .769$$

நீர்மைத் தன்மையுடைய சொத்துகளின் உண்மை மதிப்பு 250 லிருந்து 325 ஆக உயர அல்லது சொத்துகளின் மொத்த மதிப்பு 500லிருந்து 575 ஆக உயர, விலைகள் 23 சதவீதம் குறைய வேண்டும். இதனால் விளையும் நுகர்ச்சி உயர்வு $\cdot 2 \times 75 = 15$. இது 2 என்ற மதிப்புடைய பெருக்கியின் (multiplier) மதிப்பிற்கு உட்பட்டது. ஏனெனில், இறுதிநிலை நுகர்ச்சித்திறன் என்பதன் மதிப்பு .5 ஆகும்). இதனால் மொத்த நுகர்ச்சி 30 ஆக உயர்வதற்கான விளக்கம் இப்பொழுது முழுமையாகிறது.

இருப்பினும் நுகர்ச்சிச் சார்பு தொடர்பு கீழ்க்காணும் வகையில் அமைந்துள்ளது என்று வைத்துக்கொள்வோம். அதாவது,

$$C = .5y + 01w + .10.$$

இதில் y, w. c ஆகியவைகளின் தொடக்க மதிப்புகள் (70,500,50) ஆக அமைந்துள்ளன. இவைகளைக் கொண்டு வேலை நிறைவு (full emloyment) நிலையை ஏற்படுத்த அதாவது நுகர்ச்சி c என்பதை 80 ஆக உயர்த்த விலை எந்த அளவிற்குக் குறைய வேண்டும் என்பதைக் கணக்கிடலாம்.

$$C = 80 = .5\,(100) + .01\left(250 + \frac{250}{P}\right) + 10$$

$$80 = 50 + 2.5 + \frac{2.5}{P} + 10$$

$$17.5 = \frac{2.5}{P}$$

$$P = .143$$

இந்நிலையில் தங்கள் துவக்க விலையைவிட ஏழில் ஒரு பங்கு விலைகள் விழவேண்டும் என்பது தெளிவு. சொத்து விளைவு குன்றியிருக்குமாயின், நீர்மைச்சொத்து, நுகர்வோர் வருமானம் ஆகியவைகளின் அல்லது வேலை நிறைவு மட்டத்தில் எடுகோளாக அமைத்த விகிதத்தைவிட, நீர்மைச் சொத்து விகிதம், நுகர்வோர் வருமான விகிதத்தைவிடக் குறைந்து அமைந்தால், இதற்குத் தேவையான விலை குறைப்பு மிகவும் அதிகமாக அமையும். 23 சதவீதம் விலை வீழ்ச்சி அல்லது 86 சதவீதம் விலை வீழ்ச்சி ஆகியவை சமநிலைக்கு ஏற்றவாறு அமையும் எனக் கொண்டாலும், காரண காரியவாதம் (a priori argument), இவைகளில் எந்த எண் அல்லது இவைகள் அல்லாது வேறோர் எண் சரியான எண் ஆகுமா என்று எதிர் பார்க்கலாம்?[1]

ஆகவே, பிகு விளைவு (Pigou Effect) என்பதை மட்டும் அடிப்படையாகக் கொண்டு வேலை நிறைவு பிரச்சனைகளுக்குத் தீர்வு காணும் வகையில் இணக்கமான விலைகளின் தன்மையைப் பெருக்க சமூகக்கொள்கையைத் திருப்பி விடமுடியும் எனக் கொள்வதற்

[1] தாமஸ் மேயர் (Thomas Mayer) 'உண்மை இருப்புக்களின் விளைவின் கருத்தியலான சிறப்புத்தன்மை' (The Empirical Significance of the Real Balance Eeffect) பொருளாதாரக் காலாண்டுப்பத்திரிகை (Quterly Journal of Economics) பாகம் LXX III (மே மாதம் 1959) பக்கம் 275 - 91, பிகு விளைவின் (Pigou effect) கருத்தியலான சிறப்புத்தன்மையை அளவிட ஒரு புது முறையைக் கையாளுகிறார். சொத்துகளின் உண்மை அளவு விலை மாற்றங்களால் எந்த அளவிற்குப் பாதிக்கப்பட்டது (அதாவது 6 சதவீத அளவில்); பின்னர் 7 என்ற மதிப்பைக் கொண்ட இறுதிநிலைச் சேமிப்புத்திறனைப் பொருத்தி அளவிடுகிறார். (பல வகைப்பட்ட தகுதிகளைக் கருதிய பின்னர் பிகு விளைவு (Pigou Effect) நடைமுறையில் மிகவும் குறுகிய பயனை அளிக்கிறது ஏ. ஆன்சன், பிகுவின் விளைவு (Pigouvian Effect) ஜர்னல் ஆப் பொலிடிகல் எகானமி LIX (டிசம்பர் 1951), பக்கம் 535-536 பார்க்க.

கில்லை என்பது சில பொருளியல் வல்லுநர்களின் கருத்து. இக் கருத்துக் குறிப்பாக மூலநூல் பக்கங்கள் 196-197 இவைகளின் விலை இணக்கமான பிரச்சினைகளுக்கும் மேற்கூறிய கருத்துப் பொருந்தும். மேலும், சொத்துகள், வருமானம் ஆகியவைகளைப் பங்கீடு செய்யும் போது ஏற்படும் விலை நெளிவுகளின் சமூகப்பயன்களை ஆராயுமிடத்தும் நன்கு புலனாகிறது. சமூகத்தில் வசதியுள்ள மக்கள் பகுதியில் மட்டும் நீர்மைத் தன்மையுடைய சொத்துகள் மிகுந்து காணப்படுவதால், வேலையின்மைப் பிரச்சினை தலைகாட்டுமிடத்து, சொத்துச் சேர்க்கும் தன்மையை ஏற்கெனவே செல்வந்தர்களிடம் ஒப்புவித்து, அவர்கள் மிகவும் வசதியுள்ளவர்களாதலால் அதிப்படி சேமிப்பைச் செய்ய முடியாத நிலையை ஏற்படுத்தி விடுகிறது என்பது இக் கருத்தின் அடிப்படை நோக்கம்.

சொத்துச் சேமிப்பின் விளைவு நுகர்ச்சியின் மீது பயக்கும் நேர் நிலைப் பயனை இல்லை என்று கூறுபவர்கள் இக் கொள்கைப் புலசார் பற்ற காரண காரியம் (a priori) எதிர்பார்ப்பதை விளைவிக்கும் என்று எண்ணுமிடத்து இக் கொள்கை மிகவும் அபாயமானது. ஓர் உளவியல் மேதை சொத்து விளைவு வாதம், விருப்பங்கள் கொடுக்கப்பட்டவை என்பதை எடுகோளாக அமைத்துள்ளது; ஆயினும், இப் பகுப்பாய்வின் உட்பொருள் சொத்துகளைக் குவிக்கும் தன்மையை விளக்குவதாகும். அதாவது சூழ்நிலை அல்லது நிலைமை ஆகிய இவைகளில் ஏதேனும் ஒன்று விருப்பங்களைப் பாதிப்பதைத் தடுக்க முடியாது. சொத்துகளை அதிகமாகக் கொள்பவர்களும், அவற்றின் பயன்களை நன்கு உணர்ந்தவர்களும், அதிகமாகச் சொத்துச் சேர்க்க விரும்புவார்கள் என்பது உளவியல் கோட்பாட்டின் கருத்தாகும் (1) எனவே, காரண காரிய வாதத்தை (a priori) அடிப்படையாகக் கொண்ட சொத்து விளைவு என்பது வாதத்திற்கு உட்பட்டதாகும்.

மேற்கூறிய சந்தர்ப்பத்துடன், வேறு பல சந்தர்ப்பங்களிலும், சொத்துப்பயன் (Wealth effect) வாதிக்கப் பட்டுள்ளமையைப் பின்னர் ஓர் அதிகாரத்தில் காண்போம். நேர்நிலைச் சொத்துப் பயனாகில், அது இந்தச் சூழ்நிலைகளுக்கு மிகவும் பயனுள்ளதாக அமையும் என்பது உறுதி. 'வர்த்தகச்சுழல்' (Business Cycle) நெளிவுகள் (fluctuations) எனக் கூறப்படும் குறுங்காலச் சூழ்நிலையில் இக் கருத்து அதிகப்பொருள் பெருமலிருக்கிறது. இதற்குக் காரணம் எளிதில் கூறலாம், சில சூழ்நிலைகளைத் தவிர மற்ற எல்லாச் சூழ்நிலைகளிலும், விலை நெளிவுகள் பலத்த பருமனுள்ளதாக அமையாது.

**பண இருப்பு (The Stock of money)**

நுகர்வோரது மொத்தச் சொத்தின் ஒரு பகுதி பணமாக வைக்கப்பட்டுள்ளது. ஆகவே, மேல் விளக்கிய சொத்துப் பயன் என்பது நுகர்வோரது பண இருப்பு மாற்றங்களுக்கும் பொருந்தும். ஆனால், இதற்கு ஒரு நிபந்தனை; அதாவது பண இருப்பு மாற்றங்களுக்கு ஏற்றவாறு சொத்து இருப்புகள் மாறாமல் அமைய வேண்டும். ஆயினும் சில பொருளியல் மேதைகள் இந்த வாதத்தை வெளிப்படையாகவோ அல்லது உட்புகுத்தியோ கருத்துத் தெரிவித்துள்ளார்கள்: அதாவது ஒருவரது மொத்த உண்மைச்சொத்தைக் குறிப்பிடும் பண இருப்புகள் நுகர்ச்சியை ஒருவகையில் பாதிக்கும். என்பது எடுத்துக்காட்டாக, வியாபார மந்தம் (business depression) அல்லது வேலையின்மை (unemloyment) ஏற்படும் நேரம் மையப்பாங்கு பத்திரங்களை வெளி அங்காடி (in open market) வாங்க முயலும். இத்தகைய வாங்குதல்கள் பொது நிதிகளைக் கொண்டு அல்லது வங்கிகளிலிருந்து வாங்கப்படுகின்றன. அவை வங்கிகளிலிருந்து வாங்கப்பட்டால், அத்தகைய வாங்குதல்கள், பத்திரங்களைப் பொது மக்களிடத்து வங்கிகள் மீண்டும் வாங்கும் என எதிர்பார்க்கப் படுகிறது. இவைகளில் ஒவ்வொரு வகையிலும் இந்தக் கொள்கையின் நோக்கம் பொது மக்களின் நீர்மைத் தன்மையை உயர்த்துவதாகும். இந்தக் கொள்கை முன்பு பத்திரங்களைப் பெற்றவர்கள் இப்பொழுது ரொக்கத்தைப்பெற ஒரு வகையில் பாடுபடுகிறது. இந்தக் கொள்கை வட்டி வீதத்தைக் குறைத்து, முதலீட்டைப் பாதித்து, ஏன் நுகர்ச்சியையும் பாதிக்கும் என்பதை முன்னர் கவனித்தோம். வட்டி வீதத்தின் வழியாக முதலீடு, நுகர்ச்சி ஆகியவைகளைப் பாதிப்பதின் விளைவு எத்தன்மையதாயினும், நீர்மைத் தன்மை உயர்வு நுகர்ச்சியை நேரடியாகப் பலப்படுத்தும்.

இத்தகைய நம்பிக்கையின் அடிப்படையை எளிதில் அறிதல் கடினம். தனது சொத்து நீர்மைத்தன்மையதாயின் ஒருவன் சேமிப்பின்மையைக் கையாளுதல் எளிது என்பதற்கான விளக்கங்களை ஆங்காங்கே குறித்தோம். நீர்மைத்தன்மையற்ற ஒரு சொத்தை நீர்மைத் தன்மை உள்ளதாக மாற்றுவதற்கான கடினமான சூழ்நிலையும், அதற்கான வேறுபல சூழ்நிலைகள் ஏற்படாத

1 ஜி. கடோனு என்பவர் எழுதிய பொருளியல் நடத்தையின் உளவியல் பகுப்பாய்வு (Psycological Analysis of Economic Behaviour (Mc Graw-Hill) மெக்கிராஹில் 1951.

காரணத்தால், அதிகப்படிச்செலவு செய்ய வேண்டும் என்ற ஒரு ஆவலைத் தவிர்க்க ஒருவராலும் முடியாது என்பது உறுதி. இக் கூற்று உண்மையானது என்று ஒருவகையில் கூறலாம்; ஆனால், இதன் விளைவு மிகவும் பெரிது என்பதை வெளிப்படுத்தத் தேவையில்லை. முதலாவதாக இக் கூற்றுச் சேமிப்பின்மையைக் கையாளுபவர்களுக்கு மட்டும் பயன்படும் (இத்தகைய மக்கள் தொகுதி நுகர்வோரது மொத்தத் தொகுதியில் பெரிய அளவேயாகும்.); ஆனால், தங்களது நடப்புச்சேமிப்புகளைக் குறைத்து, அதே சமயத்தில் ரொக்கச் சொத்துகளைப்பெற விரும்பாதவர்களுக்கு இக் கூற்றுப் பொருந்தாது. இரண்டாவதாக, மைய பாங்கு வெளிஅங்காடி நடவடிக்கையினால் (open market operatios by central bank) நீர்மைத் தன்மைக்குத், தமது சொத்துகளைத் திருப்பிவிட விரும்பும் 'நுகர்வோர்' பகுதியில் சேர்க்கவேண்டியவை, அறநிலை நிதிகள், ஓய்வுச் சம்பளத் திட்டங்கள், இன்சூரன்ஸ் நிறுவனங்கள், பொதுவாக சொத்துடைய மக்கள் தொகுதியின் ஒரு பகுதி. இப் பகுதியின் சேமிப்பின்மைத் தன்மை குறிப்பிடத்தக்க வகையில் அமையாமல் உள்ளது.

நுகர்ச்சி பண இருப்பைப் பொறுத்து (மொத்தச் சொத்து என்பதை எண்ணாமல்) என்ற வாதம் எளிய நலமுடைய பண அளவைக்கோட்பாட்டின் மறு உரை. இவ்வுரை புதுமையான வருமானப் பகுப்பாய்வின் வழி விளக்கப்பட்டுள்ளது. மேலும் இக் கோட்பாடு, பண்டங்களைப் பெற பணம் மாறிலியான வீதத்தில் புழங்குகிறது என்ற கருத்தை வெளிப்படுத்துகிறது. அதிகப்படிப் பணம் இருந்தால் அதிகப்படிச் செலவு நிகழும். இக் கருத்தின் விளக்கத்தை முன் சில அதிகாரங்களில் கண்டோம். ஆனால், இவ் வாதத்தின் அமைப்பு எண்ணற்ற எடுகோள்களைக் கொண்டு அமைந்துள்ளது. (அவ்வெடுகோள்களின் உண்மை சில சமயங்களில் கேள்விக்குரியது.(ஆனால், தூய்மை கெட்ட 'பண' அளவைக் கோட்பாடு என்பது மக்கள் தம்மிடமோ அல்லது தம் பெயரில் வங்கிகளிலோ பணம் இருக்குமேயானால் அதைச் செலவு செய்யாமலிருக்கும் சூழ்நிலை தவிர்ப்பதில்லை என்ற பொருளில் அமையவில்லை. இதைவிட விளைவு இல்லாச் சொத்தை விட, பலன் அளிக்கும் சொத்துகளை வைத்திருக்க அறிவுடை மாந்தர் முற்படுவர் என்ற நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு இக் கோட்பாடு அமைந்துள்ளது. அதாவது 'தூய்மை கெட்ட' பண அளவைக் கோட்பாடு வட்டி வீதம், முதலீடு ஆகியவை வழி செயலாற்றுகிறதே தவிர நுகர்ச்சியின் நேரடி விளைவுகளின் பயன்களை ஒட்டிச்செயற்படுவதில்லை.

ஆனால், அறிவுடை நுகர்வோர் சில சூழ்நிலைகளில் தங்களது ரொக்க இருப்புகளை அதிகப்படுத்துவர் என்பதைக் கீன்சு தெளிவு படுத்தியுள்ளார். தம்மிடம் உள்ள பத்திரங்களை மைய பாங்கு களுக்கு விற்று ரொக்கத்தை யாரும் பெறத்தேவையில்லை. இந் நிலையில் வங்கிகள் அதிகப்படிப் பணப் புழக்கத்தை எவ்வாறு செயற்படுத்த முடியும்? பத்திரங்களின் விலைகளை அதிகமாக உயர்த்தி; அதனால் பத்திரங்களையே பெற விரும்பிய தனி நபர்கள் நிறுவனங்கள் ஆகியவைகளைப் பத்திரங்களின் விலைகள் நிலையற் றவை என்ற காரணத்தால், பத்திரத்தை விட ரொக்கத்தை விரும்பும் பிரிவிற்கு மாற்றியமைக்கிறது. இதனால் வட்டி வீதம் குறைகிறது, முதலீட்டுச் செலவு அதிகமாகிறது. ஆகவே, 'வருமான விளைவு' (Income effect) என்பதன் வழியாக நுகர்ச்சி உயர்வு விளைகிறது, இதைத் தவிர, ஊக வாணிகர்கள் (Speculators) ரொக்கமாக வைத்திருக்கும் சொத்து இப்பொழுது பத்திரங் களை வாங்கச்செலவு செய்யப்படுமா அல்லது சேமிப்புக் குறைந்து காணப்படுமா என்ற வினக்கள் எழலாமல்லவா?

## நீர்மைச் சொத்து விளைவுகளின் அநுபவவழி விளக்கங்கள்
## (Empirical Studies of the Influence of Liguid Assets)

சொத்துகளின் இருப்பு அல்லது நீர்மைச் சொத்துகளின் (liquid Assets) ஆகியவை, நுகர்ச்சியை எவ்வாறு பாதிக்கின்றன என்ற கருத்து, சமீப காலத்தில் கோட்பாட்டளவில் விவாதிக்கும் கருத்தாகவும், பொதுக் கொள்கை (public policy) சிபார்சுகளின் அடிப்படையாகவும் அமைந்துள்ளது. ஆயினும் இவ் வாதத்தின் உண்மைகளை அநுபவவழிகொண்டு நிலைநாட்டுவது மிகவும் கடினம். ஆனல், இதற்கான பல சோதனைகள் கையாளப்பட்டன; ஆனல், அவைகளின் விளக்கம் கடினமானது என்பதாலும், கிட்டிய சான்றுகள் தொடர்பற்றவை என்பதாலும், அவைகளின் விளைவு முடிவற்றதாக அமைகிறது.

நமக்குக் கிட்டிய முதல் சான்று மொத்த காலத் தொடர் வரிசை (aggregate time series). நுகர்வோரின் மொத்தச் சொத்து டைமையைக் குறிப்பிட்ட ஒரு காலத்தில் அல்லது காலப் போக்கில் அளவிடத் தேவையான ஆண்டு மதிப்பீடுகள் உண்மையானவை எனச் சொல்வதற்கில்லை. நமக்குக் கிட்டுவதெல்லாம் நுகர்வோரின் பண இருப்புகள், செலாவணி, தேவை வைப்புகள், காலவைப் புகள், அரசின் பத்திரங்கள், சேமிப்பு, கடன் பத்திரங்கள் ஆகி யவை உள்பட அமைந்த 'நீர்மைச் சொத்துகள்' என்பவை மட்டும் நமக்குக் கிட்டும் தகவலாகும். ஆகவே, புள்ளியியல் பகுப்பாய்வு

களின் பெரும்பகுதி நீர்மைச் சொத்து என்ற இடைநிலைக் கருத்தைப் பயன்படுத்துகின்றன.

காலத் தொடர்வரிசை என்ற கருத்தைப் பயன்படுத்தி நீர்மைச் சொத்துகளைக் குறியீடாக்கி நுகர்வோரின் மொத்தச் சொத்தின் அளவைக் குறிப்பிடப் பயன்படுத்துகிறார்கள். காலத் தொடர் வரிசையின் மாற்றங்கள் சொத்து உடைமையின் மாற்றங்களைக் குறிக்கிறது என்பது இதன் நோக்கம். இதன் முடிவு எதுவாகிலும் பரவாயில்லை. ஆனால், விளைவுகளைக்கொண்டு, காலத் தொடர் வரிசை மொத்தச் சொத்தை எவ்வாறு பாதிக்கிறது என்பதையும், அல்லது அது நீர்மைச் சொத்துகளைத் தனிப்பட்ட முறையில் எப்படிப் பாதிக்கிறது என்பதையும் விளக்குகிறது. இவ் விளக்கங்கள் கொள்கைக்கான இனங்களை விளக்குவதில் பல சிக்கல்களை விளைவிக்கின்றன என்பதை முன்னமே குறிப்பிட்டோம். ஏனெனில், நீர்மைச் சொத்தின் பலன் சில நேரங்களில் மொத்தச் சொத்தின் பலன்களைப் பாதிப்பதில்லை. மேலும், பணநிர்வாக அதிகாரிகளின் செயல்கள் பண உடைமை மாற்றங்களையும், மொத்த நீர்மைச் சொத்துகளின் மாற்றங்களையும் பாதிக்கின்றன. ஏனெனில், பண உடைமை அதிகமாகவும் அல்லது குறைந்தும் காணப்படுதல், அரசின் ஆவணங்களைப் போக்கிவிடுகிறது. ஆகவே, ஒவ்வொரு விளக்கத்தையும் நல்ல முறையில் விளக்குதல் சிறந்தது.

நீர்மைச் சொத்துகள், நுகர்ச்சி ஆகியவைகளில் ஆண்டுக்கு ஆண்டு ஏற்படும் மாறுதல்கள் மிகச் சிறியவைகளாகக் காணப்படுவதால், காலத் தொடர் வரிசையைப் பயன்படுத்துவதனால் ஏற்படும் சிக்கலாகும். போர்க் காலத்தில் குறிப்பாக 1941–1946–ல் நுகர்வோர் சொத்து உடைமைகளைப் பெறுவதில் மிகப் பெரிய மாற்றங்கள் ஏற்பட்டன. பின் ஆண்டுக்கு ஆண்டு ஏற்படும் மாற்றம் மிகச் சிறியவைகளாகக் காணப்பட்டன. போருக்கு முந்திய அல்லது போருக்குப் பிந்திய ஆண்டுகளில், எளிய நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் இடப்பெயர்ச்சிகள், நீர்மைச் சொத்துகளின் பெயர்ச்சிகளைக் குறிப்பதால், அப் பெயர்ச்சிகள் நீர்மைச் சொத்துகளின் பெயர்ச்சிகளைக் குறிப்பதால், அப் பெயர்ச்சிகள் நீர்மைச் சொத்துகளின் பெயர்ச்சிகளால் ஏற்படுகின்றன என்பதை முன்னமே குறித்தோம். அதேபோல், போருக்கு முன், போருக்குப் பின் ஏற்பட்ட நுகர்ச்சி மட்ட மாற்றங்கள், வருமானத்தை ஒட்டியமையால், வேறு பல காரணங்களால் மாறுகின்றமையால், அவைகளின் மட்டங்களும் காலத்திற்குக் காலம் மாறி அமைகிறது ; அல்லது போர் என்பது மட்டும் விருப்பங்களின் மாற்றங்களை விளக்கும் அடிப்படைக் கருத்து என்பதில் ஐயமில்லை.

இப் பொருத்தத்தை (fit) வளப்படுத்த வழியுண்டு. இதற்கு நுகர்ச்சிச் சார்பு தொடர்பைப் போருக்கு முந்திய அல்லது போருக்குப் பிந்திய ஆண்டுகளின் விவரங்களைப் (data) பயன் படுத்துவதுடன், ஓர் ஊமை மாறியைப் (dummy variable) பயன் படுத்தலாம். இதற்கு 'O' (சுன்னம்) என்ற மதிப்பைப் போருக்கு முந்திய ஆண்டுகளுக்கும், போருக்குப் பிந்திய ஆண்டுகளில் ஒரு மதிப்பையும் புகுத்த வேண்டும். ஆனால், நீர்மைச் சொத்து என்பது ஒருவகையில் ஊமை மாறிலி என்று சொல்வதற்கில்லை.

இந் நூலில் இடம் பெற்று விளக்கப் பெறும் காலத் தொடர் இந்தச் சிக்கலுக்கு அப்பாற் பட்டதல்ல. இவ் வகையில் கிலீன்—கோல்ட்பெர்கர் (klein-Goldberger) புள்ளியியல் நுகர்ச்சிச்சார்பு தொடர்பு முதலிடம் பெறுகிறது. klien-Goldberger statistical consumption function) இத் தொடர்பு *1929–41, 1946-1952* ஆகிய ஆண்டுகளுக்கு ஆன விவரங்களுடன் புகுத்தி அமைத்தபின் கீழ்க் காணும் வகையில் அமைகிறது.

$$C_t = 22{\cdot}26 + {\cdot}55W_t + {\cdot}41P_t + {\cdot}34A_t$$
$$+ {\cdot}26C_{t-1} + {\cdot}073L_t + {\cdot}26N_t$$

இங்கு வெளியிட்டுள்ள விவரங்கள் எல்லாம் *1939*–ஆம் ஆண்டு டாலர்களின் பிலியன் அளவைக் கொண்டு வெளியிடப்பட்டுள்ளன. C என்பது மாறிலியான செலவைக் குறிக்கிறது. W, P, A ஆகியவை முறையே கூலி சம்பாத்தியம் செய்வோர், சொத்து உடைமை யாளர்கள், விவசாயிகள் ஆகியவர்களின் வரிகள் நீக்கப் பெற்ற (செலவுக்குரிய) வருமானங்களைக் குறிக்கின்றன; $L_{t-1}$ முந்திய ஆண்டு நீர்மைச் சொத்தின் இறுதி மதிப்பைக் குறிக்கிறது; N என்பது மக்கள் தொகையைக் குறிக்கிறது. நீர்மைச் சொத்துக்கொள்ளுதலின் கெழு—*0.072* என்ற மதிப்புத் தராதரக் குறைந்த மதிப்பை உடையது. நீர்மைச் சொத்துடைமை ஒரு பிலியன் டாலராக உயர்ந்தால், சராசரியில், மற்றவை மாறுதிருப்ப, நுகர்ச்சிச் செலவு 72 மிலியன் டாலர்களாக உயரும் என்ற கருத்தை இது உள்ளடக்கியுள்ளது.[1]

அடுத்தபடியாக, 'செல்னர்' (zellner) என்பவர் நீர்மைச் சொத்தின் பங்கை ஆராய்ந்துள்ளார். இக் குறிப்பை முன்னமே

[1] கிலீன்—கோல்ட்பெர்கர் (klein-Goldberger) சார்பு தொடர்பு போருக்கு முந்திய ஆண்டுகளின் போருக்குப் பிந்திய ஆண்டுகளின் விவரங்களைப் பயன்படுத்தினாலும் நாம் முன் பத்தியில் கூறிய இன்னல்களிலிருந்து இது தவிர்க்கப் படவில்லை. ஏனெனில், சார்பு தொடர்பில் காணப்படும் பின்னீடு உடைய நுகர்ச்சி $C_{t-1}$ என்பது போருக்கு முந்திய நுகர்ச்சி மட்ட இடப்பெயர்ச்சிகளை எடுத்துப் போருக்கு முந்திய ஆண்டு நுகர்ச்சி மாற்றங்களுடன் புகுத்திவிடுகிறது.

குறித்துள்ளோம். இவ்வாராய்ச்சிக்குப் போருக்குப் பிந்திய கால் ஆண்டு விவரங்களை மட்டும் அவர் பயன்படுத்தினர். நீர்மைச் சொத்துகளுக்கான செல்னரின் கெழு (Zellners Coefficient) கிலீன் கோல்ட்பெர்கரின் (Klein-Goldberger) கெழுவை விட உயர்ந்த மதிப்பைப் பெற்றுள்ளது. இதற்கு எடுத்துக்காட்டாகக் கீழ்க் காணும் சார்பு தொடர்பு அமைந்துள்ளது.

$$C_t = 21 \cdot 9 + 0.708 Y_t + 0 \cdot 368 L_{t-1}$$

இதில் C,Y,L என்பவை முறையே நுகர்ச்சிக்குரிய வருமானம், செலவுக்குரிய வருமானம், நீர்மைச் சொத்து ஆகியவைகளை 1947-49 விலைகளில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. 1947-ஆம் ஆண்டு விவரங்களுடன் தொடங்கி, 1955-ஆம் ஆண்டு முதல் காலாண்டு வரையுள்ள விவரங்களைப் பயன்படுத்தி யுள்ளார். இவர் மதிப்பிட்ட நீர்மைச் சொத்துக் கெழு அதன் தரப்பிழையை (Standard error) மதிப்பில் ஏழு மடங்கு அதிகமானது என்பது வெள்ளிடைமலை. 'செல்னர்' (Zellner) புகுத் தியுள்ள மற்ற சார்பு தொடர்புகளின் நீர்மைச் சொத்தின் கெழு (liquid asset Coefficient) 0.219 முதல் 0·396 வரையுள்ள மதிப் பிற்குள் ஊசலாடுகிறது. தனது கெழுவின் மதிப்பும், கிலீன்-கோல்ட்பெர்கர் (Klein-Goldberger) அவர்களின் கெழுவின் மதிப் பும் மாறியுள்ளமைக்குச் செல்னர் கூறும் பல காரணிகளில் பின் வருபவை குறிப்பிடத்தக்கவை. அவையாவன: நுகர்ச்சியின்மீது நீர்மைச் சொத்து செலுத்தும் ஆதிக்கம், போருக்கு முந்திய ஆண்டுகளைவிட போருக்குப் பிந்திய ஆண்டுகளில் மிகுந்து காணப்பட்டது.[1] மேலும், நீர்மைச் சொத்துகளின் மாற்றம் ஓர் ஆண்டுக்குள் தீர்ந்து விடுவதால், ஆண்டுக்கான விவரங் களைப் பயன் படுத்துகையில் இவைகளின் விளைவுகள் வெளிக் காட்டுவதில்லை.[2] தமது விளக்கத்திற்குச் செல்னர் (zellner) பயன் படுத்திய கால வரம்பில் நீர்மைச் சொத்துகளின் மதிப்பு 174 பிலியன் முதல் 197 பிலியன் டாலர்கள் வரை மாறின. (1947-49 விலைகளில்) அதுபோல் செலவுக்குரிய வருமான மதிப்பின் மாற்றங் களின் நெளிவுகள் (175 முதல் 228 பிலியன் டாலர்களில்) மதிப்பிற் குள் அசைந்தன. நீர்மைச் சொத்திற்குப் பயன்படும் கெழுவின் மதிப்பு, வருமானத்திற்குப் பயன்படும் கெழுவின் மதிப்பை விட பாதி மதிப்பைப் பெற்றமையால், வருமானம் என்பது மட்டுமே முக்கியமான விளக்கத்திற்குரிய காரணியாக அமைந்துள்ளது. ஆயினும் நீர்மைச் சொத்து என்பது நுகர்வோர் செலவின் நெளி வுகளை விளக்கும் காரணியாக அமைந்துள்ளது. இருப்பினும் அதிகாரம் 9-ல் காணும் குறுங்கால (உதாரணமாகக் காலாண்டு)

1 இக் கருத்தைச் சூட்ஸ் என்பவர் ஆமோதிக்கிறார். இதனை மூல நூலின் அதிகாரம் 9 அடிக்குறிப்பு 1-ல் காணலாம். 2 இதுவும் அது. மூல நூல் பக்கம் 565.

நுகர்ச்சிச் சார்பு தொடர்புகளின் நெளிவுகள் ஒழுங்கற்றவை அல்லது ஒழுங்கற்ற முறையில் எழுபவை என்ற கருத்துரையை (thesis) ஒப்புக் கொண்டோமேயானல், செல்னரின் புள்ளியியல் ஆய்வுகளின் முடிவுகளுக்கு மிகக் குறைந்த மதிப்பைத் தர வேண்டியவர்களாகிறோம். ஏனெனில், எதிர்மறை (negative) மதிப்பைத் தரும் இறுதி நிலை நுகர்ச்சித்திறனைக் கொண்ட எல்லாச் சார்பு தொடர்புகளையும் அவர் தள்ளிவிட்டார். இத்தகைய சார்பு தொடர்புகள் புள்ளியியல் விவரங்களைக்கொண்டு பொருத்தி அமைத்திருப்பதால் அவை, செல்னர் (zellner) ஒப்புக்கொண்ட சார்பு தொடர்புகளை விட உயர்ந்தவைகளாக இருப்பினும் அவற்றை ஒதுக்கித் தள்ளிவிட்டார்.

நீர்மைச் சொத்துகளின் உணர்ச்சியைப் பலப்படுத்தக் கிடைக்கும் இரண்டாவது ஆதாரம், வரவு செலவுத் திட்டத்திலிருந்து (budget study) அல்லது முழு நிறைமாதிரி ஆய்விலிருந்து கிடைக்கிறது. (cross-secti n study) குறிப்பாக, மிசிகன் கணக்கெடுப்பு நிலையம் (Michigan Survey Centre) வெளியிட்ட ஆராய்ச்சிகளிலிருந்து, பலதரபட்ட செலவு செய்யும் அலகுகளின் சொத்து நிலவரங்களைப் பற்றிய தகவல்களை ஒன்று கூட்டலாம். இதனுடன் அப் பல்வேறுபட்ட செலவு செய்யும் அலகுகளின் வருமானம், செலவு, சேமிப்புக்கான நடவடிக்கை ஆகியவைகளுடன் தொடர்புடைய தகவல்களையும் ஒன்று கூட்டலாம். இங்கும் கூட பயனுக்குரிய சொத்துகள் மட்டும் (அதாவது செலாவணி தவிர) குறிப்பிடத் தக்கவை. ஆயினும், இச் சொத்துகளை வீடாக வைத்திருப்பவர்கள் எத்தனைபேர், ஊர்திகளாக வைத்திருப்பவர் எத்தனைபேர், கூட்டிணைப்பில்லாத் தொழில் நிறுவனங்களாக வைத்திருப்பவர் எத்தனைபேர் எனப் பங்கீடு செய்யலாம்.

வரவு செலவுத்திட்ட ஆராய்ச்சி என்ற சான்றை ஆராயும் முறை இதனுள் அடங்கியுள்ள நான்குவகை கருத்தியலான சிக்கல்களை ஆராய்தல் ஏற்புடையது. ஏனெனில், இச் சிக்கல்கள் நமது முடிவைப் பாதிப்பவைகளாக அமைகின்றன. சில குடும்பங்களை அக் குடும்பங்களின் சில வருமானத்தைக் கொண்ட பிரிவில் உள்ள வகையில் பிரித்து வைத்துள்ளோம் என்று வைத்துக் கொள்வோம்; அதாவது அதிகப்படி நீர்மைச் சொத்து வைத்துள்ளவர்; குறைந்த அளவு நீர்மைச் சொத்து வைத்துள்ளவர் என்று பிரித்துள்ளோம் என்று வைத்துக் கொள்வோம். இதனுள் அடங்கியுள்ள கருதுகோள் (hypothesis) பின் வருமாறு: மற்றவை மாறாதிருப்ப, அதிகப்படி நீர்மைச் சொத்துகளையுடைய குடும்பங்கள்

அதிகப்படிச் செலவுகளைச் செய்து குறைந்த அளவு சேமிப்பைப் பெறும் குடும்பங்களாக அமைகின்றன. ஆனால், வழக்கில் இதற்கு மாறான வகையில் அமைந்துள்ளபடியால் இக் கருதுகோளை நாம் தள்ளவேண்டி வருகிறது. ஏனெனில், இவ்விருவகைக் குடும்பங்கள் வருமான வகையில், மற்ற எல்லா அளவிடக்கூடிய வகைகளில் ஒன்றுபட்டுள்ள குடும்பங்களாக அமைந்திருப்பினும் அவைகளில் அடங்கியுள்ள மக்கள் தொகையினர், வெவ்வேறு விருப்பங்களை உடையவர்களாக அமைந்துள்ளனர். அதிகப்படிச் சொத்துடைய குடும்பங்கள் சிக்கன முறையைக் கையாளுவதாலும், மிகவும் கவனமாக வாழ்க்கை நடத்துவதாலும், அதிகப்படிச் சேமிப்பைப் பெறலாம். இதனால்தான்போலும் அக் குடும்பங்கள் ஏற்கெனவே அதிகப்படிச் சொத்துகளைச் சேமித்துக் குவித்து வைத்துள்ளன. ஆகவே, எல்லாக் குடும்பங்களும் அதிகப்படிச் சொத்துக்களைச் சேர்த்துக் குவித்து வைப்பதால் ஏற்படும் நன்மைகளை நன்கு உணர்ந்த குடும்பங்கள் என்று உறுதியாகச் சொல்ல முடியாது. எனவே, நாம் சோதிக்க வேண்டிய கருதுகோள் பின் வருமாறு. எல்லாக் குடும்பங்களும் (அல்லது ஏதோ ஒரு குறிப்பிட்ட முறையில் பங்கீடு செய்யப்பட்ட குடும்பங்களும்) அதாவது சிக்கன முறையைக் கையாளும் குடும்பம், அதிகப்படிச் செலவு செய்யும் குடும்பம் ஆகியவை ஒருங்கே அமையப் பெற்றால், அவையெல்லாம் அதிகப்படிச் சொத்துகளைச் சேமித்துக் குறைந்த சேமிப்பைப் பெற்ற குடும்பங்களாக அமைந்தனவா என்பதாகும். நமக்குக் கிட்டிய விவரங்கள் இந்தக் கருதுகோளை நேர்முகமாகப் பரிசோதிக்கப் பயன்படுவதில்லை.

இரண்டாவதாக, செலவிடுதல், சேமித்தல் ஆகியவைகளின் வேறுபாடுகளை ஆராயும் புள்ளியியல் விளக்கங்கள் அனைத்தும் அதிகப்படி மாறிகளை(அதாவது வயது, திருமணம் ஆனவர்களா இல்லையா, குழந்தைகளின் எண்ணிக்கை கிராம வாழ்க்கையைக் கொண்டவர்களா அல்லது நகர் வாழ் மக்களா எனபன போன்ற மாறிகளை (demographic Variable) கருதுதல் வேண்டும். ஆகவே, நீர்மைச் சொத்துகளின் தனிப்பட்ட அல்லது தொடர்பற்ற பயனைக் கொண்டு பிரித்தல் கடினம்.

மூன்றாவதாக, ஒரு குறிப்பிட்ட காலத் தொடக்கத்தில் உள்ள நீர்மைச் சொத்துகளுக்கும் பின் ஒரு காலத்தில் செய்யும் செலவிற்கும் உள்ள நேர் நிலை உடன் தொடர்பு விளக்கங்கள் ஒருவகைச் சிக்கல்களாக அமைகின்றன. நீள்பயன் பண்டங்களை (durable goods) (கடனுக்கு வாங்குவதைவிட) ரொக்கத்திற்கு வாங்க

நுகர்வோர் திட்டமிட்டிருந்தால், அவைகளுக்கு ரொக்கத்தை வழங்க, முதற்கண் ரொக்கத்தைக் குவித்தல் வேண்டும். எனவே, அடுத்துச் செய்ய வேண்டிய செலவு காரணமாக மட்டுமே அதிகப் படி ரொக்கத்தைச் சேர்க்க வேண்டியவர்களாகிறார். ஆனால், ஒரு குறிப்பிட்ட காலத்தில் உள்ள ரொக்க இருப்புகளையும், (cash balances) அதற்கு முந்திய காலத்தில் ஏற்பட்ட செலவையும் ஒப்பிடும் இடத்து, கிட்டும் முடிவு நேர் எதிராக அமைகிறது.—அதாவது அதிகப்படி வாங்குதல்களைச் செய்த மக்கள் தங்களது ரொக்க இருப்புகளைத் தேவையான அளவை விடக் குறைந்த அளவிற்குப் பொருத்தி அமைத்துள்ளனர். ஆகவே, ஒரு காலத் தொடக்கத்திலும் இறுதியிலும் உள்ள நீர்மைச் சொத்துகளின் சராசரி மதிப்பை ஒருவேளை பயன்படுத்தலாம் தவிர, குறைந்த அளவு சராசரி இருப்பைப் பெற்றவர்களை விட அதிகப்படி சராசரி இருப்புகளை உடையவர்கள் அதிகப்படிச் செலவு செய்கிறார்களா என்பதைக் கொண்டு சோதிப்பது நலம். ஆனால், இம் முறை கையாளப்படவில்லை.

இறுதியாக, நீர்மைச் சொத்துகளின் மொத்தம் அதிக மானால் ஏற்படும் விளைவு என்ன என்பதை, பல்வேறு குடும்பங் களின் சொத்துடைமைத் தொடர்புகளைக்கொண்டு அல்லது அக் குடும்பங்களின் செலவின வேறுபாடுகளைக் கொண்டு அளவிடுதல் கடினம். இதனால் ஏற்படும் பிரச்சினை, வரவு செலவுத்திட்ட ஆய்வை விட்டு, மொத்த வருமான மாற்றத்தால் ஏற்படும் நுகர்ச்சிச் சார்பு தொடர்பைப் பயன்படுத்துமிடத்து ஏற்படும் பிரச்சினையுடன் ஒத்து அமைகிறது. அதாவது தராதர 'வருமானம் (relative income) எதிர் நிலைச் 'சிறப்பு வருமானம்' ஆகியவைகளைக் கொண்டு முழுநிறை மாதிரி விளக்கங்கள் (Cross-section interpretation) பிரச்சினையாக அமைகிறது. இது மூல நூல் பக்கங்கள் 223–224 இவைகளில் விளக்கப்பட்டுள்ளது.

இத்துணைச் சிக்கல்கள் உள்ளமையால், முழுநிறை மாதிரி ஆய்வு (Cross-section study) உண்மையில் பயனுள்ளதா என்பது ஐயப்பாடு. ஆயினும் அவை ஓரளவிற்குப் பயனுள்ளனவாய் அமை கின்றன. இம் முறையைக் கையாளுபவர் இப் பிரச்சினைகளைப் பற்றி விளக்காவிட்டாலும், அல்லது இத்தகைய பிரச்சினைகள் உள்ளன என்பதை உணராவிட்டாலும், நாம் இம்முறையில் அடங்கியுள்ள சிக்கல்களை நன்கு உணர்ந்துவிட்டால், இம்முறை அளிக்கும் ஆதாரத்தைப் புறக்கணிக்கமுடியாது.

எல். ஆர். கிலீன், (L. R. Klein), ஜெ. என். மார்கன் (J. N. Morgan)[1] ஆகியவர் செய்த ஆய்விற்குத் தனிக் குறிப்புத் தந்துள்ளோம். மாறிப் பகுப்பாய்வைப் (variance analysis) பயன் படுத்தி, நீர்மைச் சொத்துடைமை நுகர்ச்சியுடன், கருதுகோள் வெளிப்படுத்தியதுபோல் நேர்நிலைத் தொடர்புகொள்ளாமல், எதிர்நிலைத் தொடர்பு உடையது என்பதை மார்கன் (Morgan) என்பவர் வெளிப்படுத்திஞர். இச் சோதனை நாம் கண்ட முதல் தகுதியுடன் அதாவது நீர்மைச் சொத்துடைமை குறைந்த அளவு சேமிப்பாளரைவிட மிகுந்த அளவு சேமிப்பாளர்களை ஆதரிக் கிறது என்பதுடன் நெருங்கிய தொடர்புடையதாக அமைகிறது. அதுபோல், குறைந்த வருமானமுடைய குடும்பங்களிடையே குறிப்பாகக் குறைந்து செல் வருமானம்கொண்ட குடும்பங்க ளிடையே, நீர்மைச் சொத்துடைமை என்பது, செலவுடன் நேர் நிலைத் தொடர்புடையது, என்பதையும் அவர் விளக்கிஞர். இது நமது மூன்ருவது தகுதியை (qualification)—அதாவது சொத்துகள் பின்வரும் செலவுகளுக்காகக் குவிக்கப்படுகின்றன என்பதன் பிரதிபலிப்பு என்பதையும் அவர் குறிப்பிட்டுள்ளார்.[2] கிலீன் (Klein) என்பவர் முழுநிறை மாதிரி (Cross-section) நுகர்ச்சிச் சார்பு தொடர்பைச் சில குறிப்பிட்ட தராதரமாய் ஒரே தன்மையான (homogeneous) நுகர்வோர் வகுப்புடன் ஒப்பிட்டு முடிவு கண்டார். அவ்வாறு ஒப்பிடுகையில் குறிப்பிடத்தக்க நீர்மைச் சொத்துக் கெழு (liquid asset coefficient) ·21 முதல் ·25 வரை மதிப்புள்ள வீச்சுக்கு (Range) உட்பட்டதாகும் என்பதைக் கண்டார். ஆனல், குறைந்து செல் வருமானமுடைய அலகுகளுடன் ஒப்பிடுகையில் கெழுக்களின் மதிப்பு ·25—·31 வரை உயர்கிறது; ஆனல், உயர்ந்து செல் வருமான அலகுகளுடன் ஒப்பிடுகையில் அதன் மதிப்பு சுன்னம் (zero) .(6 ஆகியவை களிடையே ஊசலாடுகிறது.[3]

காலத் தொடர்வரிசை (time seris) வழி, முழு நிறை மாதிரி (Cross-section) வழி கணக்கெடுத்த ஆதாரம் ஒரு முடிவுக்கு வர முடியாவிட்டாலும், (நீர்மைச் சொத்துடைமை 'பணம்'? அல்லது மொத்தச் சொத்து?) நுகர்ச்சிச் செலவுகளைப் பாதிக்கின்றன

[1] 'பொருளியலுக்கான கணக்கெடுப்பு முறைகளுக்குத் தந்த வழங்குதல்கள்' எல். ஆர். கிலீன் தொகுத்தது கொலம்பியப் பல்கலைக் கழக அச்சகம் (1954)—காண்க. (Consumption of Survey Methods to Eeonomic L. R. Klein ed. Colombia University Press, 1954).

[2] இதுவும் அது. பக்கங்கள் 185-86.

[3] இதுவும் அது. பக்கங்கள் 210, 245-47.

என்ற கருதுகோளுடன் பொருந்தி அமைந்துள்ளது. ஆயினும் இதுவரை தந்த விளக்கம் தெளிவாக இல்லை. ஆகவே, கொள்கைக் கான சிபார்சுகளைச் செய்ய விரும்புவோர் இம் முறையைச் சற்று ஐயத்தோடு காண நேரிடுகிறது. இதற்குக் காரணம், குறிப்பாக அங்குக் கிடைத்த ஆதாரம் கொள்கை சிபார்சுகளின் எப் பொருளைக் குறிக்கின்றன என்ற இடத்தில் சரியாக அமைவதில்லை. அதாவது சொத்து மதிப்புகளினுல் ஏற்படும் விலை நெளிவுகள் (பிகு விளைவு Pigou effect) அல்லது நீர்மைத் தன்மை விளைவுகள் (பண வாக்கக் கொள்கை (Monetary policy).

காலம் கடத்திய தேவை (Deferred demand);

போருக்குப் பிந்திய ஆண்டுகளில் போர்க்கால கட்டுப்பாடு காரணங்களால், நுகர்வோர் செலவுகள் தேக்கி வைக்கப்பட்ட தேவையின் குவியலாகும் என்பதைப்பற்றிய விவாதம் அதிகரித்துக் கொண்டே போனது. ஆனல், போர் ஆண்டுகள் வருமானத்துடன் ஒட்டிய தராதர நுகர்ச்சிச் செலவு குறைந்து சென்றது என முன்னமே குறிப்பிட்டோம். இதற்கான காரணங்கள் தெரிந்தவை. தாங்கள் வாங்க வேண்டிய பண்டங்களை வாங்க முடியாமல் தடை செய்துவிட்டால், இக் குறைபாட்டைப் பின்னர் அதிகப்படி பணம் செலவு செய்து சரிக்கட்டி செய்துவிடுவார்களா? இவ் வினவிற்கான முழு விவாதம் சமாதான காலங்களில் நிலவும் சூழ்நிலைகளுக்கு அப்பாற்பட்ட சூழ்நிலைகளுக்கு நம்மை இழுத்துச் சென்றுவிடும். ஆயினும் இவ்விவாதத்தில் சில கோட்பாட்டியல் கருத்துகள் இதனுள் அடங்கியுள்ளன. எடுத்துக்காட்டாக நாம் முன்பு விவாதித்த சொத்து, நீர்மைச் சொத்து ஆகியவைகளுடன் இக் கருத்து நெருங்கிய தொடர்புடையது.

போர்க் காலத்தில் வரிகள் அதிகமாக விதிக்கப்பட்டிருந் தாலும், நுகர்வோரது செலவுக்குரிய வருமானம், (consumer disposable income) குறுகிய அளவு அளிப்பையுடைய நுகர்ச்சிப் பண்டங்களைவிட, அதிகமாகப் பெருகிக்கொண்டே போனது. போர்க் காலத்தில் நுகர்வோர்கட்குக் கிட்டிய நுகர்ச்சிப் பொருள் கள், பொருளியல் அமைப்பின் மொத்த ஆக்கத்தின் அளவிற்கும், அரசின் உதவிக்கு எடுத்துக்கொண்ட அளவிற்கும் (அது இராணுவ சிப்பந்திகளுக்கு எடுத்துக்கொண்ட அளவு), ஆகிய இரண்டில் மிஞ்சியுள்ள அளவேயாகும். தங்களது செலவிற்குரிய வருமான மட்டத்திற்கு ஏற்றவாறு செலவு செய்ய விருப்பும் அளவிற்கும், அவர்களுக்குக் கிட்டும் பண்டங்களின் அளவிற்கும் உள்ள வேறுபாடு நுகர்வோர் பகுதியில் 'வீக்க இடைவெளி' (inflationary

gap) என்பதைக் குறிக்கிறது. இது நேரடித் தட்டுப்பாடுகளைக் கொண்டு 'கீழடக்கி' (suppress) வைக்கப்படுகிறது. போர்க் காலத்தைவிட்டு வேறு காலத்திற்கு நுகர்வோர் வரும்போது அவரவர் கட்டாயச் சேமிப்பு (forced saving) செய்து அதிகப்படிச் சேமிப்புக்களைக் குவித்து வைத்தார்கள். இச் சேமிப்புகளை, நுகர்வோரின் வருமானத்துடன் ஒப்பிடுகையில், அவர்களுடைய சேமிப்புகள் உயர்ந்து காணப்பட்டன. வருமானம் வேகமாக வளர்ந்தாலும், வருமானத்தில் அதிக சதவீதம் சேமிக்கப்படுவதால், சொத்து மிக வேகமாக வளர்ந்தது.

நுகர்ச்சிப் பொருள்களுக்கான காலம் கடத்திய தேவையும் (deferred demand) தராதர வருமான மட்டத்துடன் தொடர்புடைய 'அதிகப்படி' (excess) சொத்துடைமையும் ஒன்றே என்று சிலர் கருதுகிறார்கள். இவ்வதிகப்படி ஒரு குறிப்பிட்ட காலத்தில் தராதர வருமானத்தைவிட நுகர்ச்சி அதிகமாவதால் விளைவது. இவ்வதிகப்படி விளைவதற்கு வேறு பல காரணங்களும் உண்டு. ஒரு குறித்த காலத்திற்கு முந்திய அதிகப்படி சேமிப்புக்களைத் தவிர்ப்பதாலும், அல்லது நுகர்வோரின் நீர்மைச் சொத்தின் மதிப்பைக் குறைத்திடும் பணவீக்கத்தினாலும் ஏற்படுகிறது.

தங்களுக்குக் கிட்டும் அளவைவிட உயர்ந்த அளவிற்கு நுகர்வோர் பண்டங்களை வாங்க முடியாத நிலை ஏற்படும்வரை போர்க் காலங்களில் வரிகளை உயர்த்தினால், பணவீக்கத்தைத் தடுக்க நேரடிக் கட்டுப்பாடுகள் தேவையில்லை; எனவே, அதிகப்படி சேமிப்புகளைப் போருக்குப் பிந்திய ஆண்டுகளுக்கு எடுத்துச் செல்ல முடியாமல் போய்விடும். அத்தகைய அதிகப்படி வருமானத்தைக் கொண்டு அரசு செலுத்துகையில் பற்றுக்குறை (deficit) என்பது குறைந்து காணப்படும்; சில சமயங்களில் பற்றுக்குறை ஏற்படாமலும் போகலாம். (இத்தகைய உயர்ந்த மட்ட வரி விதிப்புகளினால் உபரி விளையலாம்)' போருக்கான நிதிகளை இவ்வழி இயலுமா அல்லது விரும்பதக்க வழியா என்பதை நாம் இங்கு விளக்கவில்லை. அவ்வாறு நிகழ்ந்தால் சொத்துக் குவிப்புகள் ஏற்படாமலிருக்கும் என்பதை மட்டும் குறிப்பிட்டுள்ளோம்.

உயர்ந்த மட்ட வரி விதிப்புகள் இல்லையென்று இருந்தால், சொத்துக்குவிப்புகள் உடனடியாக ஏற்படும். இக் குவியல்கள் எவ்வகை உருவத்தைப் (form) பெறும் என்பது அரசின் பற்றுக் குறை எவ்வகையில் நிதிமயமாக்கப்பட்டது என்பதைப் பொறுத்துள்ளது, அதாவது அப் பற்றுக்குறை வங்கிகள் அல்லாத பொது

மக்களிடம் கடன் பெற்று நிதிமயமாக்கப்பட்டதா அல்லது அப் பற்றுக்குறை (நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ) வங்கிகளிலிருந்து கடன் பெற்று நிதிமயமாக்கப்பட்டதா என்பதைப் பொறுத்து அமைந்துள்ளது. உண்மையில் அப் பற்றுக் குறை வங்கிகளிலிருந்து பெற்ற கடன்களைக் கொண்டு நிதிமய மாக்கப்பட்டமையால், நுகர்வோரின் சொத்துக் குவியல்களின் பெரும் பகுதி வங்கி-இருப்புகளாக (Bank deposits) அமைந்தன. எனவே, நுகர்வோரின் அதிகப்படிச் சொத்துக் குவியல், பண இருப்பின் உயர்வின் விளைவிற்கு ஒத்து அமைந்துள்ளது என்பது சிலரின் கருத்து. போருக்குப் பிந்திய ஆண்டுகளில் பண இருப்பு அதிகமானமையால், நுகர்வோர் செலவும் அதிகமானது என்பது சில பொருளியல் மேதைகள் 'விளக்கப்' பயன்பட்டது.

ஆயினும் இவ் விளக்கம் முழுமையான விளக்கமல்ல என்பது வெள்ளிடைமலை. எடுத்துக்காட்டாக, இதே 'பற்றுக்குறை' (inadequate) வரி மட்டம் பயன்படுகிறது என்று வைத்துக்கொள் வோம். ஆனல், கட்டாயமாகவோ அல்லது சில நல்ல ஊக்குவிப்பு களைக் கொடுத்தோ, பொதுமக்களிடையே பத்திரங்கள் விற்கப் படுகின்றன என்று வைத்துக்கொள்வோம். நுகர்வோர் போர்க் காலத்திலிருந்து மற்ருெரு காலத்திற்குப் போகும்போது அதே சொத்துக்குவியல் உயர்வுடனே போனலும், அவை நீர்மைத் தன்மைக் குன்றிய அமைப்பைப் பெற்றவைகளாகின்றன.[1] இவ்வாறு நிகழ்ந்தால் செலவு நடத்தை மாறி அமையுமா? இது நுகர்வோர் சொத்துக்களின் நீர்மைத் தன்மை அல்லது அவை களுடன் சேர்க்கும் சொத்தின் அளவைப் பொறுத்து அமையும். எனவே, போருக்குப் பிந்திய ஆண்டுகளின் அநுபவத்தை மட்டும் வைத்து இப் பொருளுக்கு முடிவு காணுதல் கடினம்.

பண சிருட்டியாலும், அல்லது ஆவணங்களை விற்பதாலும் ஏற்படும் பற்றுக்குறை நிதிப்பொறுப்பு (deficit financing) தவிர்க்கப்பட்டது என்றும், மேலும் நுகர்வோர் சொத்துக் குவியல் செய்ய முடியாத அளவிற்கு வரிகள் உயர்த்தப்பட்டன என்றும் வைத்துக்கொள்வோம். இதனுல் அமுக்கியத் தேவை (pent-up demand) நிச்சயமாக ஏற்படாது என்று முடிவு கூற முடியுமா? போர்க் காலத்திலிருந்து, நீர்மைக் குவியல் எதுவு மில்லாமல் நுகர்வோர் வெளியேறுவார்கள்; ஆயினும் அவர்கள்

[1] (E-Bond) 'ஈ-பத்திரங்கள்' நுகர்வோர்கட்கு விற்கப்படுகின்றன. அவைகள் நுகர்வோர்கட்குக் குறிப்பிட்ட மறுவாங்கு (repurchase) விலைகளில் வழங்கப்படு கின்றன. அவைகளை எந்த நேரத்திலும் பணமாக மாற்றிக்கொள்ளலாம். இதனுல் இழப்பு ஒன்றுமில்லை. எனவே, அவைகள் பணம் அல்லது வங்கி இருப்பு ஆகியவை களைப்போல் நீர்மைத் தன்மை உடையது.

அக் காலத்திலிருந்து வெளிவருகையில் அவர்கள் இதுகாறும் பழக்கமுற்ற நுகர்ச்சி மட்டத்தைப்பற்றி மிகவும் சோகத்துடன், உற்சாகமற்ற வகையில் வெளி வருவார்கள். இருப்பினும் உயர்ந்த நுகர்வோர் செலவு என்ற 'குமிழி' (bulge), நுகர்வோர் தங்களது முந்திய குறைபாடுகளைச் சரிக்கட்ட முற்படுவதால், ஏற்படுகிறது; எனவே, போருக்குப் பிந்திய ஆண்டுகளில் காணப்பட்ட நுகர்வோர் செலவுகளின் உயர்விற்குக் காரணம் அவர்களிடத்தே காணப்பெற்ற சொத்துக் குவியல் அல்லது பணக் குவியல்கள் காரணமாக அமையாமல், அவர்களது அமுக்கப்பெற்ற தேவை காரணம் எனச் சிலர் கருதுகிறார்கள். உண்மையில், உயர்ந்த சொத்து, உயர்ந்த நீர்மைத் தன்மை, தேவைக்குறைபாடு ஆகிய மூன்றும் முடிவு காண முடியாத பிரச்சினைகளைக் கிளப்புகின்றன. போருக்குப் பிந்திய ஆண்டுகளில் நுகர்வோர் குவிப்பதற்கான ஆர்வமும், அதனைப் பூர்த்தி செய்யுமளவிற்கு வசதியும் பெற்றிருந்தவர்கள் ஆதலால், போருக்குப் பிந்திய ஆண்டில் ஏற்பட்ட நுகர்வோர் செலவு பூரிப்பு (boom) மிக உயர்ந்து காணப்பட்டது. இதற்குக் காரணம் ஆர்வக் குவியலைவிடப் பணக் குவியல் அதிகமானது. இதன் போக்கை நிர்ணயிக்க முடியாமைக்குக் காரணம் இப் பூரிப்புக் குவித்து வைத்த சொத்துகளின் நீர்மைத்தன்மை உயர்ந்து காணப்பட்டமையாகும். இருப்பினும் இக் காரணிகளின் தராதர முக்கியத்துவம் நிர்ணயிக்க முடியாது.[1]

பூர்த்தி செய்ய முடியாமல் தேவைகள் என நாம் குறிப்பிட்டது என்பது பொருள்பட வேண்டுமானால், போர்க் காலத்தில் கிடைக்கப் பெறாத பொருள்களின் வகைகள் யாவை என்பதை முதற்கண் பிரித்தல் செய்யவேண்டும்; ஏனெனில், இவைகளைப் பெற முடியாமல் போனதால், பின்னர் சில பயன்கள் விளையும்; அப் பயன்கள், எவ்வகைப் பண்டங்கள் பற்றாக்குறையாயின என்பதைப் பொருந்தி அமைகின்றன. உணவு போன்ற நுகர்ச்சிப் பொருள்களின் நுகர்ச்சி குறைவுபடவில்லை; அதுபோல் துணிகள், குறிப்பாக அன்றாட வாழ்விற்கான துணிகளின் தேவை குறைவுபடவில்லை. ஆனால், சில நுகர்ச்சிப் பொருள்களின் தேவை குறிப்பாக மாட்டிறைச்சி, வெள்ளைச் சொக்காய்கள் (white

[1] நுகர்ச்சிக்கான 'சாதனம்' (means) என்பது நுகர்வோர் சேமிப்பின்மை செய்யாமலிருந்தனர் என்ற பொருளில் அமையாது. சேமிப்பின் வீதம் குறைவுபட்டு அமைந்தது என்பது உறுதி. குறிப்பாக 1946-1947 ஆகிய ஆண்டுகளில் சேமிப்பின் வீதம் குறைந்து காணப்பட்டது. ஆனால், சொத்துக்குவியல்களின் அளவு குறைவு படவில்லை. சாதனங்கள் (means) வாங்குவதற்காகப் பயன்படவில்லை. நுகர்வோர் குழாமின் நிகரச்சேமிப்பு என்பது வேறு பல தனிப்பட்ட நுகர்வோரின் சேமிப்பின்மை என்பதை நாம் நன்கு உணரவேண்டும். போர்க் காலத்தின் சொத்துக்குவியல்கள் (எந்த அமைப்பைப் பெற்று இருந்தாலும்) இதனைச் சாதித்தன. அதேபோல் நுகர்வோர் கடன் (consumer credit) என்பதற்கான விளக்கம் கீழே தரப்பட்டுள்ளது.

shirts) ஆகியவைகளின் நுகர்ச்சி குறைவுபட்டு அமைந்தது. மாட்டிறைச்சியை விரும்பும் ஒருவருக்கு ஐந்தாண்டுகளுக்கு அது கிடைக்கவில்லை என்று வைத்துக்கொள்வோம். ஆனால், அது கிடைத்துவிட்டது என்று தெரிந்தால் ஒரு வாரம் இரவு சாப்பாட்டிற்கு மாட்டிறைச்சியைத்தான் உண்ணுவார்; அல்லது ஒரு மாத காலத்திற்கு மாட்டிறைச்சியை உண்ணலாம். ஆனால், ஐந்து ஆண்டு காலத்திற்கு விட்டுப்போன அளவிற்கு உயர்ந்த அளவில் அவர் மாட்டிறைச்சி சாப்பிட முற்படமாட்டார். அவ்வாறு உயர்ந்த அளவில் மாட்டு இறைச்சி சாப்பிடுவதால், வேறு இறைச்சி சாப்பிடுவதைச் சற்றுக் குறைத்துக்கொள்ள வேண்டுகிறது. ஆகவே, நீள் பயனில்லாச் சரக்குகளுக்கு நீண்டகாலத் தேவை அமுக்கம் உண்டு என்று எடுகோள் அமைப்பதற்கில்லை என்பதும் ஒருவகையில் பொருந்தும்.

போர்க் காலத்தில் நீள் பயன் சரக்கின்மை என்பது ஒன்று மட்டும் நுகர்வோர் தேடும் பண்டங்களைக் குறைக்கின்றது. உதாரணமாக எஃகு, பித்தளை போன்ற பண்டங்களுக்கு அல்லது சாதன உற்பத்திகளுக்கு இராணுவ ஆக்கத்திற்காக அதிகத் தேவை ஏற்படுகிறது. ஆகவே, ஊர்திகளும், அவைகளுக்குத் தேவைப்படும் பொறித் தளவாடங்கள் ஆகியவைகளுக்கு அதிகத் தேவை இருப்பினும் அதை ஒத்தி வைக்கிறார்கள். நீள் பயனற்ற சரக்குகளை விட, நீள் பயன் சரக்குகளுக்கு ஏற்படும் தேவை அதிகரிப்பு காலம் தள்ளிவைத்த தேவையாக அமைகிறது. ஆகவே, போர் முடிவதற்குள், போர்த் தொடக்கத்தில் உள்ள நீள் பயன் சரக்குகளின் மாற்றி அமைக்கப்படும் தேவையுடன், போர்க் காலத்தில் ஏற்பட்ட நீள் பயன் சரக்குகளை மாற்றியமைக்கத் தேவைப்படும் காலம் கடத்திய தேவையும் சேர்ந்து அமைகிறது. ஆகவே, நீள்பயன் சரக்குகளுடன் காலம் கடத்திய தேவை நெருங்கிய தொடர்புடையதாக அமைகிறது. இத்தகைய காலம் கடத்திய தேவை நீள்பயன் சரக்கு அங்காடிக்குத் தகுந்த ஒத்தாசையாக இருந்தது.[1] நீள்பயன் சரக்குகளை நுகர்வதற்கான விளக்கத்திற்கு இனி கவனம் செலுத்துவோம்.

1 காலம் கடத்திய தேவையின் அளவை மதிப்பிடத் தேவையான வழிகளுக்கு, எல். ஜெ. அட்கின்சன் (L. J. Atkinson) அவர்கள் நடப்புத் தொழிலின் கணக்கெடுப்பு (survey of current business) என்ற பத்திரிகையில் ஏப்ரல் மாதம் 1948 வெளியீட்டில் பக்கங்கள் 15-21; மீண்டும் ஜூன் வெளியீட்டில் பக்கங்கள் 5-10 காண்க.

## நீள் பயன் நுகர்ச்சிச் செலவின் நிலை பேறின்மை

## (The instability of Durable Consumption Spending)

வருமானத்துடன் தொடர்புடைய நுகர்ச்சிச் செலவின் குறுங்கால நிலைபேறின்மை நுகர்ச்சிக்குரிய நீள்பயன் சரக்குகளுடன் நெருங்கிய தொடர்புடையது குறிப்பிடத்தக்கது. இது எதிர்பார்த்த ஒரு தகவலாகும். நடப்பு வருமானத்துடன் தொடர்புடைய நடப்புப் பணிகளை வழங்கும் நீள்பயன் சரக்குகளின் பணிகளை ஆராய்தல் நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் வாதம் என்பது தெரிந்த தகவல். நீள்பயன் சரக்குகள் வழங்கும் நடப்புப் பணிகளின் மாற்றம் அவைகளை வாங்கும் வீதத்தையும் மாற்றியமைக்கும் சக்தி வாய்ந்தது. நீள்பயன் சரக்குகளை வாங்கும் முறைகள் ஆண்டுக்காண்டு ஒழுங்கற்ற முறைகளாக அமைந்தால், அவை அச் சரக்குகள் வழங்கும் நடப்புப் பணிகளின் மாற்றங்களுடன் பொருந்தி அமையும்; ஏனெனில், நீள்பயன் சரக்குகளின் நுகர்வோர் பல ஆண்டுகளாகச் செய்த வாங்குதல்களின் குவியல்களாகும். நீள்பயன் சரக்குகளை வாங்கும் நேரத்தை ஒட்டிய காரணிகள் அச்சரக்குகளுக்கான மொத்தத் தேவையையும் பாதிக்கிறது. அத்தகைய பாதித்தல் வருமானத் தொடர்பைக் கொண்டு வாங்கப்படும் சரக்குகள் வழங்கும் நடப்புப் பணிகளின் ஒழுங்கற்ற முறைகளை வெளிப்படுத்தாதவாறு அமைகிறது.

ஜேம்ஸ் என். மார்கன் (James N. Morgan) என்பவர் நுகர்வோர் செய்யும் நீள்பயன் சரக்குகளுக்கான செலவுகளைத் தனிப்பட்ட வகையில் வைத்து ஆராய்தல் நலம் என்று வாதித்துள்ளார். மேலும் இச் செலவுகள் பின்வரும் செலவுகளிலிருந்து பிரித்துக் கருதப்படவேண்டும். (a) சாதாரண வழக்கமான நுகர்ச்சிச் செலவு; (b) ஒப்பந்தச் சேமிப்புகள் (Contractual Saving) (ஆயுள் இன்சூரன்ஸ், அடைமானம், மறுவழக்கீடுகள் போன்றவை); (c) நீர்மைச் சேமிப்புகள். நுகர்ச்சிச் செலவில் காணப்படும் ஆண்டுக்காண்டு ஏற்படும் மாற்றங்கள், நீள்பயன் சரக்குகளுக்கான செலவு, நீர்மைச் சேமிப்பு ஆகிய இவைகளிடையே ஏற்படும் இடப் பெயர்ச்சிகளைப் பொறுத்து அமைகிறது என்று அவர் கருத்துத் தெரிவித்திருக்கிறார். அவரது ஆராய்ச்சி (Research)[1] பின்வரும் கருத்துகளை விளக்கியது அதாவது நீள்பயன் சரக்குகளுக்கான செலவு (a) எல்லா

[1] நுகர்வோரது முதலீட்டுச் செலவுகள் - 'அமெரிக்கன் எகனமிக் ரெவியூ' X L VIII (Dec 1958), 874-902 Consumer Investment Expenditure American (Economic) Review X L VIII Dec. 1958.874-902

வருமானப் பிரிவிற்கும் ஒரே மாறிலியான சதவீதமாக அமைந்துள்ளது (b) தனிப்பட்ட அலகுகளின் மீது மிகுந்த பருமனுடன் அமைகிறது ; இது அவ்வலகின் பிறப்புநோய் முதலிய சமுதாய நிலைப்புள்ளியியல் காரணிகளையும் (demographic factors) குறிப்பாக வயது, திருமணமாகி எத்தனை ஆண்டுகள் ஆகின்றன என்பன போன்றவைகளையும் ஒட்டி அமைகிறது. (c) வெளிப்புற நிகழ்ச்சிகளுக்கும், நுகர்வோர் நடத்தைக்கும் எதிர் உணர்வு செய்வதுபோல் காலப்போக்கில் நெளிதல் உடையது. (d) வருமானம் விழும்போது அது ஒட்டும் தன்மையதாயும், வருமானம் உயரும்போது அது இணக்கமாயும் அமைந்துள்ளது (e) நீர்மைச் சொத்துகள் அல்லது நுகர்வோர் கடன்களைப் பயன் படுத்துமிடத்து அது அதிகமாகப் பாதிக்கப்படுவதில்லை.

### நுகர்வோரிடம் உள்ள நீள்பயன் சரக்குகளின் இருப்புகள் (Consumer Stock of Durables)

நுகர்வோரிடம் உள்ள நீள்பயன் சரக்குகளின் இருப்புகளும், அவ்விருப்புகளின் வயது ஆகியவை குறிப்பாக நீள்பயன் சரக்குகள் வாங்குதல்களைப் பாதிக்கின்றன. இக் காரணி மார்கென் (Morgan) என்பவரால் ஆராயப்படவில்லை ; இருப்பினும் வேறு பல ஆராய்ச்சிகள் இவ்வுண்மையை வெளிப்படுத்தின. ஆனால், போருக்குப் பிந்திய ஆண்டுகளின் காலம் கடத்திய தேவை பற்றிய நமது ஆராய்ச்சி, இக் காரணிகளை உள்ளடக்கியதாகும். போருக்குப் பிந்திய ஆண்டுகளில் நீள்பயன் சரக்குகளுக்கானத் தேவை உயர்ந்து காணப்படுவதற்குக் கீழ்க்காணும் காரணங்களைக் காட்டலாம். (a) நுகர்வோரிடம் உள்ள நீள்பயன் சரக்குகளின் இருப்பு போர்க்காலத்தில் சுருங்கிப்போய் உள்ளன என்பதாலும், அச் சரக்குகள் ஆற்றும் பணிகளின் தேவை குறைந்து காணப்படுவதாலும் (b) அச் சரக்குகளின் இருப்புப் பழமையான அலகுகளை உடையதாக அமையலாம்.

சாதாரண காலங்களில் நீள்பயன் சரக்குகளுக்கான நுகர்வோரின் தேவையைப்பற்றி விளக்க மேற்கூறிய காரணிகளை வலியுறுத்துபவர் எல்லோருடைய வாதமும் ஒருங்கே அமைகிறது. நுகர்வோர் அத்தனை பேரும் அதிகப்படி புதியமாதிரி ஊர்திகளை வாங்கி இருப்பாக்கி வைத்துள்ளார் என்று வைத்துக்கொள்வோம். இதற்குக் காரணம் இரண்டு ஆண்டுகளில் ஊர்திகள் அதிகமாக விற்கப்பட்டன என்பதாகும் என்றும் வைத்துக்கொள்வோம். இரண்டாண்டு காலம் கழித்து ஊர்திகளின் விற்பனை குறைந்து

காணப்படும் என்று, இதைக் கொண்டு ஒரு முடிவுக்கு வரலாம். இவ்வகை விற்பனை வருமானம் அல்லது வேறு எந்தக் காரணி யுடனும் தொடர்பற்றதாக அமைகிறது.[1]

நீள்பயன் சரக்குகளின் விற்பனை அளவை பாதிக்கும் காரணிக் கான விளக்கங்களில் இது தனிப்பட்ட விளக்கம் என்று சொல் வதற்கில்லை. எடுத்துக்காட்டாக அண்மையில் நிகழ்த்திய எகனு மெட்ரிக் (Econometric) ஆராய்ச்சி, சாலையின் மேல் ஓடும் ஊர்தி களின் இருப்பை மாறியாக அமைத்து, அதனைக் கொண்டு. ஊர்திகளின் புதிய வாங்குதல்களையும், நுகர்வோர் வருமானம் புதிய ஊர்தி, பயன்படுத்திய ஊர்தி ஆகியவைகளின் தராதர விலைகள் ஆகியவைகளை விளக்குகிறது. மேலும் பலர் மாதிரி, மாற்றங்கள் போன்றவைகளைக் கொண்டு இருப்புகளின் முக்கியத் துவத்தை வலியுறுத்துகின்றனர். பழமையாதல் (Obsolescence) என்பதும் படிப்படியாக மதிப்புக் குறைதலும் புதிய நீள்பயன் சரக்குகளுக்கான தேவையை மிகைப்படுத்துகிறது என்பதும் தெளிவு.[3]

மிசிகன் பல்கலைக் கழகம் பொருளாதார வெளித் தோற்றத்தை (outlook) ஆண்டுக்கொருமுறை முன்னறிவிப் பதற்கான எகனுமெட்ரிக் மாதிரிகள், தேவைச் சமன்பாடுகளில் இருப்புக் குவியல்கள் மாறிகளாகத் தெரிகின்றன (அவை நடப்புத் தேவையுடன் எதிர்நிலைத் தொடர்புடையன). 1959 ஆம் ஆண்டு முன்னறிவிப்புகளில் பயன்படுத்திய சமன்பாடுகள் கீழ்க் காண்பவை.

$$A = .103y - .145S_a + .383M_a + .607t + k_a$$

$$D = .116y - .046S_d - .005\,M_d + .439t + k_d$$

[1] கே. ஈ. போல்டிங் (K. . E Boulding) மக்கள் தொகுதிப் பகுப்பாய்வினை ஐக்கிய அரசுகளின் ஊர்தித் தொகுதிக்கு அமைப்பது-கிக்லோஸ் (kyklos) 1956 பக்கங்கள் 109-24), அவர் ஊர்தி அங்காடியை மேல் கூறிய வகையில் ஆராய்ந்துள் ளார். ஒரு புதிய ஊர்தி வாங்க இயலவில்லையேயானால், பழைய வண்டிகளை மாற்றி யமைக்க 12 ஆண்டுகள் ஆகும் என்று அவர் வாதித்துள்ளார். (பழையது எனக் கழிக்கப்படுவதற்கு முன் ஓர் ஊர்தியின் வாழ்க்கை 12 ஆண்டுகளாம்).

[2] டி. பி. சூட்ஸ், (D.B. Suits) ஐக்கிய அரசுகளில் புதிய ஊர்திகளின் தேவை 1929.56-பொருளியல், புள்ளியியல் ஆகியவைகளின் மறு ஆராய்ச்சி X L (ஆகஸ்ட் 1958) பக்கங்கள் 273-80, பார்க்க.

[3] ஈ. 'முல்லர் குடும்ப சரக்குகளுக்கான புதுக்கண்டு பிடிப்புக்கான தேவை' நுகர்வோர் நடத்தை, நுகர்வோர் எதிர் உணர்வுகளின் ஆராய்ச்சி கிலார்க் என்பவர் தொகுத்தது. ஹார்ப்பர் சகோதரர்கள் 1958).

இச் சமன்பாடுகளில் A என்பது புதிய அல்லது நிகர பயன் படுத்திய ஊர்திகளின் நடப்புத் தேவையைக் குறிக்கிறது. y என்பது செலவுக்குரிய வருமானத்தைக் குறிக்கிறது; $S_a$, $S_d$ ஆகியவை முறையே ஊர்திகள், மற்ற நீள்பயன் சரக்குகளின் நடப்பு இருப்புகளைக் குறிக்கின்றன, $M_a$ $M_d$ ஆகியவை சராசரி ஊர்தியின் மாதக்கணக்கும் மற்ற நீள்பயன் சரக்குகளின் தவணைக் கணக்கும் குறிபிடப்பட்டிருக்கின்றன. T என்பது காலத்தைக் குறிக்கிறது; $K_a$, $K_d$ ஆகியவை மாறிகள் $M_a$, $M_d$ T ஆகியவை நீங்கலாக மற்ற எல்லா மாறிகளின் மதிப்பை 1954 டாலர்களில் பிலியன் மதிப்பில் குறிக்கப்பட்டுள்ளது.)[1]

## நுகர்வோர் கடன்களின் பேரங்கள் (terms) (Terms of Consumer credit)

ஊர்திகளை வாங்குவதற்கு ஏதுவான காரணிகளைப்பற்றி விவாதிக்கும்போது நுகர்வோர் கடன் (Consumer credit) என்பதைப் பற்றிக் குறிப்பிட்டோம். அத்தகைய நுகர்வோர் கடன் கிட்டும் வசதிகள் (terms) நுகர்வோர் வாங்கும் நீள்பயன் சரக்குகளைப் பெருமளவு பாதிப்பதோடு அமையாமல், அது ஒரு முக்கிய மாறியாகவும் அமைந்துள்ளது. ஏனெனில், கடன் கொள்கை, சமூகக் கட்டுப்பாட்டிற்கும், பணவாக்கக் கொள்கைக் கும், மற்றும் நேரடிக் கட்டுப்பாட்டிற்கும் உட்பட்டது.

சாதாரண வசதியுள்ள மக்களுக்கு நுகர்வோர் கடன்களை வசதியுடன் அளிப்பது என்பது ஐக்கிய அரசுகளில் புதிதாக ஏற்பட்ட ஒரு பழக்கம். இப் பழக்கம் மிகவும் பரவலாக அந் நாட்டில் பயன்படுகிறது. இவ்வசதியைக் (குறிப்பாக நீள்பயன் சரக்குகளை வாங்குவதற்கென) பயன்படுத்துகிறார்கள். இவ் வசதி தங்கள் வருமானத்தை விட அதிகம் செலவு செய்ய விரும்பு வோரும் அல்லது ரொக்கமாக மாற்றச் சொத்து வசதியற்றவர் களும், அதிகப்படி ரொக்கம், நீர்மைச் சொத்து ஆகியவைகளைக் கொண்டவர்களும் பயன்படுத்திக்கொள்கிறார்கள். நுகர்வோர் கடன்முறை என்பதைச் சேமிப்பின்மை செய்யாதவர்கள் கூடப் பயன்படுத்துகிறார்கள் என்பது ஒருவேளை குறிப்பிடத் தக்கதொரு கருத்தாக அமைகிறது. அதாவது நடப்பு வரு மானத்தைக்கொண்டு வாங்கக் கூடிய இனங்களுக்குக்கூட கடனைப்

1 டானியல் பி. சூட்ஸ் ஐக்கிய அரசுகளின் எகனமெட்ரிக் மாதிரி முன்னறி வித்த 1960க்கு ஆன நோக்கம் (outlook) காண்க. பொருளாதார நோக்கம் (outlook) 7-ஆம் ஆண்டு மாநாடு பொருளாதாரத்துறை, மிசிகன் பல்கலைக் கழகம் 1959 பக்கங்கள் 53.65. முன்னறிவித்தல் என்ற பணியைச் செம்மைப் படுத்த, சமன் பாடுகள் அனைத்தையும் மதிப்பிடுவதோடு நில்லாமல், செயற்படுத்தவும் செய்தனர். ஆயினும் அதன் வழக்கமான அமைப்புக்கு மாற்றியமைக்கப் பட்டால் அச் சமன் பாடுகள் மேற்காணும் சமன்பாடுகளாக அமையும்.

பயன்படுத்தி அவ்வினங்களை வாங்குகிறார்கள்.[1] நுகர்வோர் கடன்களை நல்ல முறையிலும் சிறந்த தவணைகளிலும் வழங்காவிட்டாலும், நுகர்வோர் பலர் அதனைப் பயன்படுத்த இயலுவதால், நுகர்வோர் கடன் வழங்குதல் என்பது கட்டுப்பாட்டிற்கு எவ்வாறு பொருந்தும் என்பது வாதத்திற்குரியதொரு பொருளாக அமைகிறது. இரண்டாம் உலகப் போருக்குப்பின் ஐக்கிய அரசுகளில் வழக்கிலிருந்த கட்டுப்பாட்டு முறைகளைப் பற்றியும் அவற்றின் விளைவுகளைப் பற்றியும் ஒரு விதமான முடிவுக்கு வரமுடியாது.[2] ஆயினும் நுகர்வோர் கடனைப் பயன்படுத்தி மக்கள் பெற்ற நீள் பயன் சரக்குகளின் அளவு கணக்கிலடங்காததால், நுகர்வோர் கடனைப்பெறுவதற்கான செலவு, அது கிட்டுமா, கிட்டாதா என்பன போன்ற பிரச்சினைகள் முக்கியத்துவம் பெறுகின்றன என்பதை எவரும் தவிர்க்க முடியாது. நுகர்வோர் கடனைப் பயன்படுத்துவதைக் குடும்பங்கள் எந்த நோக்கத்துடன் பார்த்தாலும், (அந்நோக்கங்கள் மாறும் தன்மையுடையனவாதலால்), நீள்பயன் சரக்குகளை வாங்குவதற்கான ஆர்வம், நுகர்வோர் கடன் வசதிகள் கிட்டும் செலவுகளைப் பொருந்தி அமைந்துள்ளது என்பது தவிர்க்க முடியாத உண்மை.

தவணைக் கடன்களுக்கு வழங்கப்படும் வட்டி வீதத்தைப் பற்றிக் கருத்து ஒற்றுமை இருக்கிறது. அதாவது தவணைக் கடன்களின் தூய்மையான செலவு (Pure cost) என்பது, திருப்பிக் கொண்டு தவணைகளின் அளவு, தவணைகள் எத்தனை காலத்தில் திருப்பிக் கொடுக்கப்படுகின்றன, கடன் அதிகப்படித் தேவைப்படும்போது அதற்கு அளிக்கப்படும் கடன் தரங்கள் ஆகியவைகளை விடக் குறைந்த அளவு முக்கியத்துவம் பெற்றுள்ளது.

மேற்கூறிய வசதிகள் நுகர்வோர் வாங்கும் பொருள்களின் மீது தாற்காலிக அல்லது ஒருபோக்கு விளைவைத் தரும் என்பதை முதற்கண் குறிக்கவேண்டும். நுகர்வோர்களுக்குக் கிட்டும் கடன் வசதிகள் எளிதானவைகளானால் அவர்கள் கடன்களை அதிகமாகப் பயன்படுத்த முற்படுவர். முன்பு நுகர்வோர் கடன்களைப் பெறுமலிருந்த குடும்பங்களும், கடன்களைப் பெற்றுப் பயன்படுத்திப் பழகிய குடும்பங்களும் இவ் வசதிகளைப்பெற ஏதுவாகும். இம்முறையைப் பயன்படுத்துவதால் நுகர்வோர் செலவின் பருமன் அதிகரிக்கும்; ஏனெனில், கடன் வழங்குவதால் பொருள்களை

[1] விவரங்களுக்கு: ஜே. பி. லான்சிங், ஈ. எஸ். மேயின்ஸ், எம். கிரீன் ஆகியவர்கள் எழுதிய கூட்டுக்கட்டுரை, என்பதை நுகர்வோர் தவணைக் கடன் (Consumer Instalment Credits பாகம் II, Vol. I P. P. 487-520ல் காண்க.

[2] நுகர்வோர் தவணைக் கடன் பாகம் II Vol I என்ற பத்திரிகைக்கு அனுப்பிய சில கட்டுரைகளைப் பார்க்க.

வாங்க முந்திக்கொள்கிறுர்கள். இப்படியாக எல்லோரும் கடன் வசதிகளைப் பயன்படுத்துவதால் ஒரு புதிய சமநிலை (equilibrium) ஏற்பட ஏதுவாகிறது. இச் சமநிலையில் கடன் வழங்கு விஸ்தரிப்புகள் புதிய உயர்ந்த வீதம் முந்திய மிக எளிய கடன் வழங்கு வீதத்தால் ஏற்பட்ட விளைவுகளைச் சரிக்கட்டிவிடும். அதேபோல் கடன் வழங்கும் வசதிகளைச் சிறிது முடுக்கி விட்டால், நுகர்வோர் புதிய கடன் வசதிகள் குறைவுபடுவதோடு அல்லாமல், இதற்கு முன் வாங்கிய கடன்களின் சுமை நடப்புச் செலவுகளைப் பெருமளவிற்குப் பாதிக்கின்றது. இறுதியாக, குறைந்த அளவு கடன் வாங்கும் நிலை, குறைந்த அளவு திருப்பி அளித்தல், குறைந்த அளவு மொத்தக் கடன் பற்றுகளைக் கொண்டு புதிய சமநிலை உருவாகும். கடன் வழங்கும் வசதிகள் மாறுவதால் உருவாகும் புதிய சமநிலை ஏற்படுவதற்கு எவ்வளவு காலமாகும் என்பது கடன் வாங்கி நுகர்ச்சிப் பொருள்களைப் பெற்ற அதே குடும்பங்கள் மீண்டும் கடன் வாங்குவதை எந்த அளவிற்குப் பயன் படுத்துகிறுர்கள் என்பதைப் பொறுத்துள்ளதே தவிர, கடன்களைப் பெறுவதில் திடமான நம்பிக்கையில்லாமல், பெயர்ச்சிகளைச் செய்யும் குடும்பங்களைப் பொறுத்து அமைவதில்லை, இதைப் பற்றிப் பொதுவாக ஆழமான முடிவுகளைத் தெரிவிப்பதற்கு முன் இதைப்பற்றிய அநுபவ வழி ஆராய்ச்சி அதிகம் தேவை.

கடன்கள் வழங்கப்படும் வசதிகளுக்கு ஏற்றவாறு கடன்களை உச்ச அளவிற்குப் பெற முடியும் என்பதை மேற்குறிப்பிட்ட வாதம் வெளிப்படுத்துகிறது. ஆனுல், இந்த உச்ச அளவிற்குக் கடன்களை வாங்கி நுகர்வுப் பொருள்களை வாங்குவதற்காக, கடன் வழங்கும் வசதிகளை எந்த அளவிற்குத் தளர்த்தி விடவேண்டும் என்பது மட்டும் புரியாத புதிராக அமைந்துள்ளது. அதாவது நுகர்வோர் கடன் வசதி என்பது எந்த அளவிற்குக் காரண காரிய காரணியாகப் பணி புரிகிறது என்றும், அது எந்த அளவிற்கு அநுமதிக்(Premissive) காரணியாகப் பணி புரிகிறது என்றும் முடிவு செய்ய இயலவில்லை. எடுத்துக்காட்டாக ஐக்கிய அரசுகளில் 1955ஆம் ஆண்டு உருவான 'பூரிப்பு'க்கு (boom) ஊர்தி வாங்கியது ஒரு பெரிய சூழ்நிலையாக அமைந்தது. (இந்தப் பூரிப்பு 1956, 1957 ஆண்டுகளில் ஊர்திகள், அவைகளுக்கான இயந்திரப் பகுதிகள் ஆகியவைகளை, பெருமளவிற்கு உற்பத்தி செய்ய 1955 ஆண்டில் உருவானச் சூழ்நிலை காரணமாகும்). 1955-ம் ஆண்டு 7.2 மிலியன் புதிய ஊர்திகள் விற்கப்பட்டன (ஆனுல் 1949-54 ஆண்டுகளில் அவைகளின் சராசரி விற்பனை 5.3 மிலியன் அலகுகள் ஆகும்.) இவ்வாறு விற்பனை ஓங்குவதற்கு நுகர்வோர் கடன் வசதி உற்ற தொரு உறுதுணையாக அமைந்தது. 1955 ஆம் ஆண்டில் கடன் கிட்டும் வசதிகள் தளர்த்

தப்பட்டன—குறைந்த திருப்பி வழங்கும் தவணைத் தொகை, திருப்பி வழங்குவதற்கான கால அளவை உயர்த்துவது—போன்ற பல சலுகைகளை அரசு வழங்கியது என்பது குறிப்பிடத்தக்கது. ஆனால், அந்த ஆண்டு உருவானப் பூரிப்பு, கடன் வழங்கும் சலுகைகள் தளர்த்தப் பட்டமை காரணமாக அமைந்ததா அல்லது அச் சலுகைகள் அதிகப்படி விற்பனையை அனுமதித்ததா? என்பதை எளிதில் நிர்ணயிக்க முடியாது. அதாவது குறிப் பிட்ட சில காரணிகள் (அதாவது மாதிரிகளின் மாற்றம்) போன்றவை புதிய வண்டிகளை வாங்கத்தூண்டியதா? இத் தூண்டுதலை மிக எளிய நுகர்வோர் கடன் வசதிகள் பூர்த்தி செய்ய ஒத்தாசை செய்தனவா? (அல்லது கடன் வசதிகள் தளர்த்தப்படாவிட்டாலும் இந்த ஆவல் பூர்த்தியாகுமா?) என்பன போன்ற பல வினாக்கள் எழுகின்றன. அல்லது சுலபமான கடன் வசதிகள் மட்டுமே விற்பனை விஸ்தரிப்புக்குக் காரணமாகுமா? வேறு ஓர் ஆண்டில் கடன் வசதிகள் தளர்த்தப்பட்டால், ஊர்தி வண்டிகளின் விற்பனை தானாக உயருமா? என்பன போன்ற பல வினாக்களும் எழும்.

நுகர்வோர் கடன் வசதிகள், நீள்பயன் சரக்குகளை வாங்கு வதன் நிலைபேறின்மையை அனுமதிக்கிறது. ஒருவேளை நுகர் வோர் கடன் வசதிகள் இல்லையென்றால் நீள்பயன் சரக்குகளை வாங்குவது நிலைபெற்றிருக்கும் எனக் கருதலாம். ஆனால், கடன் வசதிகளின் மாற்றங்கள், வாங்குவதை மாற்றுவதற்குக் காரண மாக அமையும் என்பதை எளிதில் அறிய முடியாது.[1]

## உளவியல் தொடர்புடைய காரணிகள்

## (Psychological Factors)

நுகர்ச்சியைப் பாதிக்கும் பல வகைக் காரணிகளில் சிலவற்றை உளவியல் தொடர்புடைய காரணிகள் எனத் தனிப்படுத்தல், ஒரு வகையில் பொருளற்ற செய்கையாகும். செலவுக்குரிய வருமானம், சொத்து, நுகர்வோர் செலவுகள் ஆகிய இவைகளுடைய தொடர்பை முன்பே குறித்தவாறு, பழக்கமான உருவமுடைய மக்கள் செய்கை அல்லது உணர்ச்சியுடன் சரிக்கட்டும் செய்கை ஆகியவைகள் உள் ளடக்கிய நடத்தையை விளக்கும் தொடர்பாகும். அதாவது

[1] மேற்கண்ட பிரச்சினைகளுக்கு விளக்கம் காண முன்குறிப்பிட்ட பத்திரிகை அதாவது பெடரல் ரிசர்வ் ஆராய்ச்சி (Fedaral Reserve Study), பாகம் I- vol I, அதிகாரம் 7 (எம். மாஸ்) 9 (பி. எஸ். டெய்லர்), 11 (பி. எப். ஸ்மித்தும் மற்றவர்களும் பாகம் II, vol I ல் டி.டி. ஹம்பிரி (D. D.Humphrey), ஈ. மில்லர் (E. Miller), ஜி. கடோனா (Katona); ஜெ. டாபின் (I.Tobin) ஆகியவர்கள் வழங்கிய கட்டுரை களைக் காண்க.

வருமானம், சொத்து, கடன்வசதி ஆகிய காரணிகள் குறிப்பிட்ட, அளவிடக்கூடிய 'பொருளியல்' மாறிகளாகும். (Economic Variables) இவைகளைச் சார்ந்து நிற்கும் நுகர்வோர் செலவு என்ற மாறியை முழு உணர்வு, எதிர் உணர்வு போன்றவைகளின் வழியாகப் பொருளியல் மாறிகள் பாதிக்கின்றன. இத்தகைய தொடர்புகளுக்கும், இங்கு விவாதிக்கப்பட்ட தொடர்புகளுக்கும் உள்ள வேறுபாடு, பின்வருமாறு: பின் விளக்கிய தொடர்புகள் காரணகாரிய மாறிகளை உள்ளடக்கியவை; மேலும் அவை பொருளியல் தொடர்புடைய காரணிகளை உள்ளடக்கியவை களாகும். அவை அடிப்படை மதிப்புடைய காரணிகளாகவும், சில குறிப்பிடத்தக்க போக்குடையவைகளாகவும், மன நிலைமைகளை உள்ளடக்கிய காரணிகளாகவும் உள்ளன. நுகர்ச்சிச் செலவைப் பாதிக்கும் ஒரு காரணி பொருளியல் தொடர்புடையது என்பதும் மற்றொன்று உளவியல் தொடர்புடையது என்பதும், பின்வரும் பொருளில் அமையும். முதல் நிலையில் மனித எதிர்வுணர்வு நிலையான தன்மையுடையது என்றும், அது பொருளியல் காரணியி னின்று, பொருளியல் விளைவாக மாறும்போது, தசை சம்பந்த மான தொடர்பு அல்லது எதிர்பாராது உணர்வு காரணமான காரணிகளைக் குறிப்பிடாமல் விளைகிறது எனப் பொருள்படும். (ஆயினும் உளவியல் மேதைகள் இத்தகைய தொடர்பை விளக்கா தது நமது முடிவைப்பிழையுள்ள முடிவாக்குகிறது எனச் சொல்லு வார்கள்) இரண்டாவது நிலையில், மனித நடத்தையை நிர்ண யிக்கும் காரணிகளில் எந்த மட்டில் சூழ்நிலைச் சம்பந்தமான காரணிகள் பயன்படுகின்றன என்பதை விளக்க முடியவில்லை (ஏனெனில் அதற்கான கோட்பாடு எதுவுமில்லை). மாற்றங்களுக்கு ஏதுவான காரணிகளைக் காண இயலாமையால், ஏதோ ஒரு நடுத் தர காரணிகளைக் குறிப்பிட்டு, அதனை உளவியல் தொடர்புடைய (Psychological) காரணி எனக் கூறி, அது நுகர்ச்சியைத் தூண்டு கிறது எனக் கூறுகிறோம். அத்தகைய காரணிகள் சிலவற்றை இங்கே குறிப்பிடுவோம்.

## கீன்சின் 'அகவயக் காரணிகள்'

## (Keynes, 'Subjective Factors')

சேமிப்புக்கான பலவகை 'நோக்கங்களை'(motives) கீழ்க்காணும் தலைப்புகளில் கீன்சு விளக்கியுள்ளளார். அவையாவன; முன்னெச் சரிக்கை, (Precaution). முன்னோக்கு (Foresight), 'கணிப்பு' (Calculation), 'முன்னேற்றம்)' (Inprovement), 'தன்னுரிமை' (Independence). 'தொழில் துணிவு' (Enteprise), 'தற்பெருமை' (Pride)

அதிக ஆசை' (Avarice), அதேபோல் நுகர்ச்சிக்கான காரணிகளைப் பின்வரும் தலைப்புகளில் விளக்கியுள்ளார். அவை யாவன: 'மகிழ்ச்சி' (Enjoyment) 'குறுகிய நோக்கு' (Short-sightedness), பரந்த 'மனப்பான்மை' (Generosity) 'தப்புக்கணித்தல்' (Miscalculation) 'பகட்டாரவாரம்' (Ostentation) மிகைபட வாழ்தல்' (Extravagance) இவைகளை 'அகவயக் காரணிகள்' (Subjective Factors) எனக் கீன்சு குறிப்பிட்டார். இக் காணிகளின் அடிப்படைப் போக்குகளும் மதிப்புகளும், குறுங்காலத்தில் குறிப்பிடத்தக்க மாற்றங்களைக் கொண்டவையல்ல. ஆனல், நீண்ட காலப்போக்கில் இவ்வடிப் படைக் காரணிகள் குறிப்பிடத்தக்க வகையில் மாறும் தன்மையுடையவை என்பதை நீண்ட கால நிலைபேறுடைய நுகர்ச்சிச்சார்பு தொடர்பை விரும்புவோர் புறக்கணித்துள்ளனர் எனச்சிலர் வாதிக்கிறுர்கள். ஆனல், நல்ல விருப்பங்கள், கலைத் தரங்கள், பிறரைப் பின்பற்றும் தோரணிகள் ஆகியவைகளை நீண்ட காலத்தில் ஒரே தன்மையுடைனவாக்கவும், இவற்றை எல்லாம் ஒருங்கே இணைக்கும் ஓர் எளிய சூத்திரத்தையும் காண்பதில் பொருளியல் மேதைகள் முனைந்துள்ளனர். அமெரிக்க நாட்டு மக்கள் வாழ் தோரணிகள் 1890 முதல் 1960 வரை நல்ல மாற்றத்தை அடைந்தது; ஆனல், இது வருமானத்திற்கும் நுகர்ச்சிக்கும் உள்ள தொடர்பையும் குறிப்பிடத்தக்க வகையில் மாற்றவில்லை. இரண்டு கால வரம்பிற்குள் உள்ள வருமானத்தை ஒப்பிடுதல் என்பது கேள்விக்குரிய பிரச்சினையாகும். ஆகவே, பல்வேறு நாடுகளில், குறிப்பாக ஐக்கிய அரசு, சைனு, பெரு, பிரான்ஸ் போன்ற நாடுகளின் கலாசார மாற்றங்களை அளவிடுவதற்கான ஓர் எளிய சூத்திரத்தை யாராலும் கண்டு பிடிக்க இயலாது. ஆயினும் ஐக்கிய அரசுகளில் 1890 முதல் 1960 வரையுள்ள கலாசார மாற்றங்கள் ஏனைய சமுதாயங்களில் ஏற்பட்ட மாற்றங்களை விட மிகப் பெரிய அளவிற்குக் குறிப்பிடத்தக்கவை.

ஆயினும் இத்தகைய அகவயக் காரணிகளை, கலாசார காரணிகளை எண்ணல் அளவைகளாக மாற்றி அமைக்க முடியாமற் போனலும், அவைகளை நுகர்ச்சிச் சார்பு தொடர்பைப் பாதிக்கும் மாறிகளாகவும் அமைக்க இயலாவிட்டாலும், அவை நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் மட்டத்தையும் அமைப்பையும் மாற்றி அமைக்கக் கூடியவை.

எதிர்பார்ப்புகளும் (Expectations) போக்குகளும் (Attitudes)

பொதுவாகத் தனது வருமானம் உயரும் அல்லது பொருள்களின் விலைகள் ஏறும் என்று நுகர்வோர் எதிர்பார்ப்பார்களே

யானல், அவர் அம் மாறங்கள் ஏற்படாமல் இருந்தால் அல்லது விலைகள் குறையப் போகின்றன என்று நினைக்கும்போது செல விடும் தொகையை விட அதிகம் செலவிடுவார் என்பது அளவையி யலின் கருத்து. வருமானம் அல்லது விலைமட்ட எதிர்பார்ப்புகளைக் கொண்டு விளையும் சம்பவங்களை வர்த்தகச்சுழல் (business cycle) இலக்கியங்களும், பணவீக்க இலக்கியங்களும் பெரும்பாலும் விளக் குகின்றன. பின் கூறிய விளக்கத்தை எடுத்துக்காட்டாக வைத் துக்கொள்வோம். அதில் தொடர்ந்து உயர்ந்து கொண்டு போகும் விலைவாசிகள் விலைகள் மீண்டும் உயரும் என்று நுகர்வோர் தொழில் துறைகள் எதிர்பார்ப்பதை விளைவிக்கிறது. இதனால் அவர்களது செலவின் உண்மை அளவு உயர்கிறது; இதனால் மொத்தத் தேவை உயர்கிறது; இதனால் மீண்டும் விலைகள் உயர்கின்றன; இதனால் விலைகள் மீண்டும் உயரும் என எதிர்பார்க்கபடுகிறது; இவ்வாறு முடிவில்லாமல் ஒன்றை ஒன்று சுற்றிவருகிறது என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. இதனைத் தலைகீழாக மாற்றிச்சொன்னால் (hyper deflation) அமித பணச்சுருக்கம் விளையும் எனவும் குறிப்பிடப் பட்டிருக்கிறது.

இவ்வளவை வாதத்தைக் கீன்சு ஏற்றுக்கொண்டார். ஆனல், மொத்த நுகர்ச்சி என்பதைஆராயுமிடத்து‘எதிர்பார்ப்புகள்’என்ற காரணியைப் புறக்கணிப்பதில் தவறில்லை எனவும் உணர்ந்தார். ஏனெனில், வருமான எதிர்பார்ப்புகளைப் பற்றியவரை அத்த கைய எதிர்பார்ப்புகள் ஒன்றை ஒன்று அடித்து நீக்கி விடுகிறது. ஒருகுறிப்பிட்ட காலத்தில் விலைகள் மீண்டும் உயரலாம் என்று சில குடும்பங்கள் எதிர்பார்க்கின்றன. அதே நேரத்தில் (தங்களது குடும்ப வாழ்க்கைச் சுழலை எதிர்பார்த்து அல்லது அதிர்ஷ்டங்கள் மாறும் என்று அல்லது தனிப்பட்ட நபர்கள் திறமை மாறும் என்று எதிர்பார்த்து)விலைகள் குறையலாம் என்று சில குடும்பங்கள் எதிர் பார்க்கின்றன. தொழில் தொடர்புடைய செலவுகளை விலை வாசி எதிர்பார்ப்புகள் பாதிக்கலாம் என்று கீன்சு சொன்னரே தவிர, நுகர்வோரைப் பற்றிக் குறிப்பிடுகையில் அவர் ஒருகருத்தும் தெரி விக்கவில்லை. ஒரு வேளை இவைகளும் ஒன்றை ஒன்று அடித்துத் தள்ளிவிட்டன என்று எண்ணினர் போலும்.

கீன்சைத் தவிர மற்றப், பொருளியல் வல்லுநர் எவரும் எதிர் பார்ப்புகளை இந்தப் பண்புடைப் பெருந்தகை முறையில் (cavalier fashion) விளக்கியதில்லை. ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்த பொரு ளியல் வல்லுநர்கள் சேர்ந்த ஸ்டாக்கோம் பள்ளி (Stockholm School) என்ற நிறுவனத்தின் உறுப்பினர்களது ஆராய்ச்சி வேறு வகையானது. வருமானம் (அல்லது வேறு எந்த மாறி) நுகர்ச்சிச்

செலவு ஆகியவைகளிடையே உள்ள தொடர்பை எதிர்பார்த்த வருமானம், விளக்கக்கூடிய நடத்தை ஆகியவைகளுடன் தொடர்புடையது என வெளிப் படையான வாய்பாடு ஆக்கியுள்ளார்கள். எதிர்பார்த்த வருமானம் என்பதைக் காரண காரணி எனத் தனிப் படுத்துவது என்றால், எதிர்பார்த்த வருமானம் ஏதோ குறிப்பிடத் தக்க வகையில் அமைந்துள்ளது எனப் பொருள்படும். இதனால் ஏற்படும் கீழ்வரும் வினாக்களுக்கு விடையளிக்க வேண்டிவருகிறது. (1) எதிர்பார்த்த வருமானம் நடப்பு வருமானத்தைவிட அடிக்கடி வேறுபட்டதா? (அவ்வாறு வேறுபடாவிட்டால் நாம் நடப்பு வருமானம் என்றே இரண்டையும் குறிப்பிடலாம்)(2)எதிர்பார்த்த வருமானம், நடப்பு வருமானம் இரண்டும்வேறுபட்டு அமைந் திருப்பதால் நுகர்வோர் வேறுபட்ட வழியில் செலவிடுகிறார்களா? அல்லது அவர் செய்யும் செலவு எதிர்பார்த்த வருமானம் நடப்பு வருமானம் இரண்டும் ஒன்றாகப் பெற்ற நுகர்வோரின் செலவை விட வேறுபட்டதா? அவ்வாறு வேறுபட்டால் அது எவ்வளவு வேறுபாடுடையது? (எதிர்பார்புகள் நடத்தையைப் பாதிக்காத வரையில், வருமான எதிர்பார்புகள் இல்லை.) (3)நடப்பு வருமானம், எதிர்பார்த்த வருமானம் ஆகியவைகளின் தொடர்பு, சில குறிப் பிட்ட தொகுதிகளிடையே குறிப்பிடத்தக்க வகையில் காலப் போக்கில் மாறுகிறதா? (இத்தொடர் நிலையுள்ளதாயின் மொத்த நடத்தையைக் கருதுமிடத்து எதிர்பார்ப்புகளைப் புறக்கணிப்பதில் தவறில்லை. ஆயினும் தனிநபர்களின் நடத்தையை விளக்க எதிர் பார்ப்புகள் அவசியம்). (4) நடப்பு வருமானம் எதிர்பார்த்த வருமானம் இவ்விரண்டிற்குமிடையே உள்ள தொடர்பை எவை நிர்ணயிக்கின்றன? இது மிகவும் முக்கியமும் சிக்கலுமுடைய வினாவாகும். (எதிர்பார்ப்புகளை நிர்ணயிக்கத் தனிக் கோட்பாடு இல்லையேல் எதிர்பார்ப்பு தன்னிச்சையான உளவியல் தொடர் புடைய பாதிப்பை நுகர்ச்சிக்கு வழங்குகிறது.) விலை எதிர்பார்ப் புகளுக்காக இத்தகைய கேள்விகள் பலவற்றை எழுப்பலாம்.

அண்மையில் நடத்திய ஆராய்ச்சிகள், குறிப்பாக மிசிகன் பல்கலைக்கழகக் கணக்கெடுப்பு ஆராய்ச்சி நிலையம் நடத்திய ஆராய்ச்சி இவ் வினாக்களுக்குப் போதிய விளக்கத்தைத் தருகிறது. ஆனால், விளக்கம் தரும் வேளையில் அது வேறுபல பிரச்சினைகளைக் கிளப்புகிறது. எதிர்பார்த்த வருமானம், விலைகள் ஆகிய இரண்டும், அமெரிக்க நாட்டு நுகர்வோரைப் பொறுத்த மட்டில் நடப்பு வருமானத்தைவிட மாறி உள்ளதால், நடப்பு வருமானம் எதிர் பார்த்த வருமானம், விலைகள் ஆகியவைகள் காலத்தால் மாறும் தன்மையுடையன. இவைகளை அட்டவணைகள் 12—1, 12—2 ஆகியவை விளக்குகின்றன.

அட்டவணை 12–1

இனிவரும் ஆண்டுக்கான நிதிமய சூழ்நிலை பற்றிய நுகர்வோர் எதிர்பார்ப்பு

| நிதிமய சூழ்நிலையில் எதிர்பார்த்த மாற்றம் * | அக்டோபர் 1954 | ஜுன் 1955 | நவம்பர்-டிசம்பர் 1957 | மே-ஜுன் 1958 |
|---|---|---|---|---|
| நல்ல நிலை | 31% | 37% | 28% | 30% |
| அதே நிலை | 43 | 41 | 48 | 45 |
| உறுதியல்லாதவை | 14 | 15 | 14 | 14 |
| இனநிலை | 11 | 6 | 9 | 10 |
| சரியாக உணராத நிலை | 1 | 1 | 1 | 1 |
| மொத்தம் | 100% | 100% | 100% | 100% |

* இதற்கான கேள்வி: இப்பொழுதிருந்து முன்னேக்கிப் பார்க்கையில் —அதாவது இப்போதிருந்து இன்னும் ஓர் ஆண்டு காலம் கழித்து மக்களாகிய நீங்கள் நிதிவகையில் நல்ல நிலையை அடைவீரா, அதே நிலையில் இருப்பீரா அல்லது ஈனநிலை அடைவீரா என்பது?

மூலம் : வாங்குவதற்கான நுகர்வோர் மனப்பான்மையும் தோரணிகளும்: ஜுன் 1958: மிச்சிகன் பல்கலைக் கழகக் கணக்கெடுப்பு ஆராய்ச்சி நிலையம் வெளியிட்ட செய்தித்தாள்.

அட்டவணை 12—1 மக்கள் இன்றும் ஓராண்டிற்குப் பின்னும் தங்களது நிதி வகை சூழ்நிலையைப் பற்றிய எதிர்பார்ப்புகளை ஒப்பிடுகிறது. அக்டோபர் 1954-ல் அதாவது அவ்வாண்டில் ஏற்பட்ட திருப்பத்திலிருந்து ஜுன் 1955 வரையுள்ள காலத்தில் நல்ல முன்னேற்றம் உள்ளது. அதாவது எட்டு மாதங்களில் நல்ல முன்னேற்றமடைவோம் என்று குறிப்பிடுகிறது. இதற்குப் பின் அடுத்தடுத்து நிகழ்த்திய கணக்கெடுப்புகளில் எல்லாம் கீழ் நோக்கிச் செல்லும் எதிர்பார்த்த வருமானம் பெயர்ச்சிகள் காணப்பட்டன. அவை 1957 ஆண்டுடன் முடிவடைந்தன. ஏனெனில், அவ்வாண்டில் தொழில் மீட்சி தலைதூக்க ஆரம்பித்தது. தொழில் மீட்சி மிக்க பலம் உடையதாகக் காணப்படினும், வருமான எதிர் பார்ப்புகளில் ஒருவிதமான குறைந்து செல்லுதல் ஏற்படவில்லை என்பது வெள்ளிடைமலை.

அட்டவணை 12-2 விலை எதிர்பார்ப்புகள் வருமான எதிர்பார்ப்புகளைவிட மிகவும் வழுக்கும் தன்மையுடையன. இதனை ஒவ்வொரு வீட்டாரும் வாங்கும் துணி மற்றப் பொருள்களின் விலை எதிர்பார்ப்புகளைக் கொண்டு நல்ல முறையில் விளககித்தருகிறது. இதற்காக அது எடுத்துக் கொண்ட கால வரம்பு 1951, நவம்பர்–டிசம்பர் 1952 இந்தக் கால வரம்பில், விலைகள் உயரும் என்று எதிர்பார்த்த சதவீதம் 52லிருந்து 6 சதவீமாக வீழ்ந்தது; விலை மாற்றம் எதையும் எதிர்பார்க்காத சதவீதம் 19லிருந்து 40ஆக உயர்ந்தது. அதுபோல் விலைகள் குறையும் என்று எதிர்பார்த்த சதவீதம் 6லிருந்து 29 ஆக உயர்ந்தது. [1]

அட்டவணை 12–2

வீட்டுக்குத் தேவைப்படும் பொருள்கள், துணி போன்றவைகளின் விலைப்போக்கு அடுத்த ஆண்டுக்கு எதிர்பார்க்கப்படுவது.

| விலைகளில் எதிர்பார்த்த மாற்றம் * | அக்டோபர் 1954 | ஜூன் 1955 | நவம்பர்-டிசம்பர் 1957 | மே-ஜூன் 1958 |
|---|---|---|---|---|
| உயரும் என்று எதிர்பார்த்தவர்கள் | 14% | 27% | 44% | 28% |
| ஒரு விதமாற்றமும் எதிர்பார்க்கப்படவில்லை அல்லது சிறு உயர்வு, சிறு வீழ்ச்சி | 49 | 46 | 33 | 39 |
| உறுதியில்லை என்று எதிர்பார்த்தவர்கள் | 4 | 9 | 9 | 13 |
| குறையும் என்று எதிர்பார்த்தவர்கள் | 32 | 18 | 13 | 19 |
| சரியாக உணராதவர்கள் | 1 | 0 | 1 | 1 |
| | 100% | 100% | 100% | 100% |

* வீட்டிற்கு வாங்கும் பொருள்கள், துணிமணி ஆகியவைகளின் விலைகள் அடுத்த ஆண்டு எவ்வாறு அமையும்—அப்படியே இருக்குமா, உயருமா, குறையுமா என்பது கேள்வி.

மூலங்கள்:—அட்டவணை 12—1 பயன்பட்ட மூலங்களே.

[1] ஜி. கடோனு; ஈ. முல்லர்; நுகர்வோர் போக்கும் தேவையும் 1950-52 ஆராய்ச்சிக்கழகக் கணக்கெடுப்பு. பக்கம் 25 பார்க்க.

ஆகவே, எதிர்பார்த்த விலைகளும் வருமானங்களும் தனித்து இயங்கும் சக்தியுடையன என்பதும், அவைகள் நடப்பு விலைகளுடனும், நடப்பு வருமானங்களுடனும் கொண்டுள்ள தொடர்பு காலத்தால் பெரிய மாற்றங்களை அடைகின்றன என்பவைத் தெளிந்த கருத்துகள். ஆனால், இவ்வெதிர்பார்ப்புகள் நடத்தையை எவ்வாறு பாதிக்கின்றன என்று நாம் உணர வேண்டும். அட்டவணை 12–3 தங்களது வருமான எதிர்பார்ப்புகளிடையே வேறுபாடுகளுடைய நுகர்வோர் நடத்தைகளைச் சுருக்கி விளக்குகிறது.

அட்டவணை 12-3

வருமானத்தின் எதிர்பார்த்த மாற்றங்களும், அவ்வருமானத்தின் சேமிப்பு விகிதத்தின் தொடர்பும் 1948.

(ஒவ்வொரு அலகுகளிலும் பண்ணைகளுக்கு அல்லாத செலவுகளின் சதவீதம்)

| | அடுத்த ஆண்டு வருமானம் எதிர்பார்க்கும் | | |
|---|---|---|---|
| 1948-ல் சேமிப்பு வீதம் | உயர்ந்தது | அதேபோல் அமைந்தது | குறைந்தது |
| எதிர் நிலை (Negative) | 36% | 28% | 26% |
| சுன்னம் (Zero) | 3 | 8 | 4 |
| நேர் நிலை (Positive) வருமானத்தின் 1 முதல் 19 சதவீதம் | 41 | 47 | 47 |
| 20 சதவீதம் அல்லது அதற்கு மேம்பட்டது | 20 | 17 | 23 |
| மொத்தம் | 100% | 100% | 100% |

மூலம்: ஜி. கடோனு: நுகர்வோர் நடத்தைக்கான உளவியல் தொடர்புடைய ஆராய்ச்சி மெக்கிராகில் 1951 பக்கம் 157 இதே மூலம் 1947ஆம் ஆண்டிற்கும் தேவைப்பட்ட விவரங்களை அளித்தது.

தங்களது வருமானம் உயரும் என்று எதிர்பார்ப்பவர்கள் சேமிப்பின்மையை வெகு எளிதில் கையாள்வார், அதாவது தங்களது வருமானங்கள் குறையும் என்று எதிர்பார்ப்பவர்கள் செய்யும் சேமிப்பை விடக் குறைந்த அளவு சேமிப்பார்கள் என்பதைக் கருதுகோளாகக் கொள்ளலாம். ஆகவே, நடப்பு வருமானத்தை நுகர்வோரது வருமான எதிர்பார்ப்புகள் மாற்றுவதோடு,

அவ்வெதிர்பார்ப்புகள் செலவு செய்யும் நடத்தையையும் தனிப்பட்ட முறையில் மாற்றி அமைக்கிறது என முடிவு கூறலாம்.

விலை எதிர்பார்ப்புகள் செலவு, சேமிப்பு ஆகியவைகளுடன் கொண்ட தொடர்பை விளக்கத் தக்க ஆதாரம் அவ்வளவு தெளிவாக அமையவில்லை. அட்டவணை 12-4, ;1952 ஆண்டுகளில் விலைகள் உயரும் என்று எதிர்பார்த்தவர்களில் (அந்த மாதிரியில் அடங்கியவர்களில் 40 சதவீதம்) இக் காலம் வாங்குவதற்குக் கெட்ட காலம் என்று கருதினர்களே தவிர இந்தக் காலத்தில் வாங்குவது நல்லது எனக் கருதவில்லை. அதேபோல் விலைகள் குறையும் என்று எதிர்பார்த்தவர்களில் (மாதிரியில் அடங்கியவர்களில் 20 சதவீதத்தில்) மிகக் குறைந்த அளவே இது வாங்குவதற்கு நல்ல சமயமில்லை எனக் கருதினர். விலைவாசி எதிர்பார்ப்புகளின் தாக்கு (impact) வேறுபட்டு அமைந்தால், இதனல் மக்கள் ஒரே காலத்தில் பல வித எதிர்பார்ப்புகளைப் பார்க்க நேரிடும். அதாவது (a) விலைகள் உயரும் என்று எதிர்பார்ப்பவர்கள் ஆயினும் (b) பொருள்களை வாங்குவதற்கு இது ஏற்ற காலமில்லை என்று கருதுபவர் ஆக இவர்களை இரு கூறுக்கலாம்.

அட்டவணை 12-4

வரும் பன்னிரண்டு மாதங்களில் நேரிடும் விலை எதிர் பார்ப்புகள், வீட்டிற்கு வேண்டிய பொருள்களை வாங்குவதற்கான கருத்துரைகள் ஆகியவைகளின் தொடர்பு.

(நான்கு கணக்கெடுப்புக்களின் சராசரி 1950 - 52)

| வாங்கும் நிலைகளைப் பற்றிய கருத்துகள் * | வரும் பன்னிரண்டு மாதங்களில் வீட்டிற்கு வேண்டிய பொருள்களின் விலை எதிர்பார்ப்புகள் † | | |
|---|---|---|---|
| | உயர்வு | ஒரு மாற்றமும் இல்லை என்று எதிர்பார்ப்பது | குறைவு |
| வாங்குவதற்கு வசதியுள்ள காலம் | 30% | 35% | 26% |
| உண்டு - இல்லை; அல்லது உறுதியின்மை | 25 | 24 | 21 |
| வாங்குவதற்கு வசதியற்ற காலம் | 45 | 41 | 53 |
| மொத்தம் | 100% | 100% | 100% |

*இதற்கான கேள்வி வீட்டிற்கு வேண்டிய பொருள்களை (மேசை, நாற்காலி, கம்பளிகள்; குளிர் செய்யும் பெட்டி, அடுப்புகள் வானொலி போன்றவைகளை) வாங்குவதற்கு இது ஏற்ற காலமா, அல்லது இல்லையா?

† இதற்கான கேள்வி: வீட்டிற்கு வேண்டிய பொருள்களின் விலைகள் அடுத்த ஆண்டில் எவ்வாறு அமையும்–இருந்த இடத்திலே இருக்குமா, உயருமா, குறையுமா?

மூலம்: ஜி. கடோனு (G. Katona) ஈ. முல்லர் (E. Muller) நுகர்வோர் போக்கும் தேவையும், 1950–52 பக்கம் 72.

செலவு செய்யும் நடத்தை, செலவு செய்யும் நோக்கம் (இது வாங்குவதற்கு நல்ல காலமா அல்லவா என்பதற்கான தீர்ப்புகள்) ஆகியவைகள் வேறுபல எதிர்பார்ப்புகள், போக்குகள் போன்றவைகளால் தூண்டப்படுகின்றன என்பதை மேலும் வரும் பகுப்பாய்வுகள் விளக்குகின்றன. நடைமுறைக்குச் சற்று மாறுபட்ட செலவினங்களைச் செய்வதற்கு, மனநிறைவு, மனநிறைவின்மை, அண்மையில் ஏற்பட்ட பொருளியல் (அல்லது அரசியல்) மாறுதல்கள், நீண்ட காலத்திற்குத் தொழில் வளம் எவ்வாறு அமையும் என்பது பற்றிய தனது தீர்ப்பு (தொழில் தேக்கம் ஏற்படலாம் என்பது உள்பட) பல காரணிகள் உதவி புரிகின்றன.

நுகர்வோரின் பொது நோக்கமும் (இதனுடன் இணைக்கப்பட்ட நுகர்வோரின் நோக்கங்கள்) அதற்குப் பின் ஏற்படும் நீள்பயன் சரக்குகளுக்கான செலவுகளின் தொடர்பை மிசிகன் பல்கலைக் கழக ஆராய்ச்சி நிலையம் பல்வேறு மட்டங்களில் ஆராய்ந்தது. இத்தகைய ஆராய்ச்சியின் ஒரு பகுதி, மக்கள் தொகையின் முழுநிறை மாதிரியின் போக்குகளுக்கும், நீள்பயன் சரக்குகளின் செலவுகளுக்கும் உள்ள தொடர்பை ஆராய்கிறது. இப்பணியை வணிகத்துறை செய்து முடித்தது, அதன் விளைவுகள் சிலவற்றை விளக்கப் படம் 12-1 காட்டுகிறது. நுகர்வோரின் போக்குகள் நீள்பயன் சரக்குகளின் செலவை மிகவும் ஒட்டி அமைந்துள்ளதே தவிர, செலவுக்குரிய வருமானத்துடன் ஒட்டி அமையவில்லை என்பது தெளிவாகிறது. தவிர சில சமயங்களில் போக்குகளின் மாற்றங்கள் செலவின் மாற்றங்களுக்கு ஏதுவாகின்றன.

மற்றொரு ஆராய்ச்சி மட்டம் ஒன்றன்பின் ஒன்றாக வரும் மறு ஆராய்ச்சி காலத்தில் போக்குகள், ஏற்படும் முற்றொருமையான நுகர்வோர் செய்யும் செலவுகள் ஆகியவைகளின் தொடர்பை ஆராய்கிறது. தனிப்பட்ட அலகுகளின் போக்குக் குறிக்கும்

(Indux) அதே அலகுகள் நீள்பயன் சரக்குகளின் மீது செய்யும் செலவிற்கும் நேர் நிலைத் தொடர்பு உண்டு என்பது ஈவா முல்லர் (Eva Muller) நடத்திய ஆராய்ச்சியின் வாயிலாகப் புலனாகிறது.[1]




படம் 12-1.

(மிச்சிகன் பல்கலைக் கழகத்தைச் சார்ந்த, சமூக ஆராய்ச்சி நிலையம் தயாரித்த படத்தின் நகல். அக் கழகத்தாரின் அநுமதியைப் பெற்றது).

பண்டங்களை வாங்குவதற்கு நுகர்வோரின் போக்குகளைப் பாதிக்கும் காரணிகளில் சிறந்தது விலைகள் என்னவாகின்றன என்பதாகுமே தவிர (விலைகள் எதிர் காலத்தில் எப்படி அமையும் என்பதல்ல). கடந்த விலை உயர்வுகளை வெறுத்தல் அல்லது முந்திய விலை பேற்றைப் பற்றிய மனநிறைவு ஆகியவை செலவு செய்யும் நடத்தையைப் பெரிதும் பாதிக்கின்றன. 1951 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 22 சதவீதம் நுகர்வோரே பெரிய குடும்பச் சாமான்களை வாங்குவதற்கு இது நல்ல சமயம் என்று கருதினர்கள்; 53 சதவீதம் இது நல்ல சமயமல்ல எனக் கருதினர். இதில் 39 சதவீதம் குடும்பங்கள் இவ் வினங்களின் விலைகள் எதிர் காலத்தில் உயரும் 13 சதவீதமே விலைகள் விழும் அல்லது ஒரே நிலையில் இருக்கும் என்று கருதியும் மேற் கூறியது நடந்தது. பொருள்களை வாங்குவதற்கு இது நல்ல சமயமில்லை எனக் கருதியவர்கள் அனைவரையும் காரணம் கேற்குமிடத்து, 48 சதவீதம் விலைகள் மிகவும் உயர்ந்து இருந்தால் பொருள்களை வாங்க முடியவில்லை

[1] 'வாங்குதல்களுக்கான நுகர்வோர் போக்குகளின் விளைவுகள் அமெரிக்கன் எகனமிக் ரெவியூ XLVU (டிசம்பர் 1957) பக்கங்கள் 946—965.

என்று கூறினார்கள். அவர்களது வருமானம் (சராசரியில்) விலைகள் உயர்ந்த அளவிற்கு உயர்ந்தும், மீண்டும் விலைகள் உயரும் என்று அவர்கள் எதிர்பார்த்தும் பொருள்களை வாங்க இது நல்ல காலமில்லை எனக் கருதினர். 1951 ஆம் ஆண்டு பண்டங்களை வாங்குவதற்கு நல்ல ஆண்டு இல்லை என்ற கருத்து நுகர்வோர் செலவு குறைந்தமைக்கும் அவ்வாண்டில், நீள்பயன் சரக்கு எல்லாவற்றுக்கும் மிகவும், சாதாரண, அங்காடி அமைந்தமைக்கும் காரணமாகும்.

உயர்ந்த அளவு பாதுகாப்புச் செலவுகள் ஏற்படுகின்றமையால் 1951 ஆம் ஆண்டில் பணவீக்க நிலை உருவாகும் எனப் பொருளாதார நிபுணர்களின் உறுதியை இம் முடிவு நிலை நாட்டியது[1]. உயர்ந்த விலைகளுக்குப் பொருள்களை வாங்குவதை வெறுப்பதையும், எதிர்காலத்தைப் பற்றி ஒருவித முடிவிற்கு வரமுடியாமல் இருப்பதையும் மறு ஆராய்ச்சிக் கணக்கெடுப்பு நிலையத்தின் கணக்கெடுப்புகள் வெளிப்படுத்தின. இம் முடிவுகள் 1951 ஆம் ஆண்டு நடுவில் காணப்பட்ட 'தாற்காலிக வாங்கும் அமைதி' (temporary buying lull) என்பதை முன்னறிவிக்கப் பயன்பட்டன. அதோடு மட்டும் அல்லாமல் இந்நிலை நீடித்து நிற்கும் என்றும் முன்னறிவித்தது.

வாங்கும் பொருள்களுக்கான பணவீக்க அல்லது பணச் சுருக்க எதிர்பார்ப்புகளுக்கான விரிவான ஆராய்ச்சி, ஈ. முல்லர் (E. Muller) அவர்கள் நடத்திய ஆராய்ச்சியில் அடங்கியுள்ளது.[2] ஐக்கிய அரசுகளில் இரண்டாவது உலகப் போரின் பிற்பகுதி காலத்தின் பெரும் பகுதியில் பணவீக்கம் நுகர்வோர் செலவுகளுக்குப் பெரும் தடையாக அமைந்தது என்பது இவ்வாராய்ச்சியின் முக்கிய முடிவு. அதாவது விலை உயர்வுகள் வெறுக்கப்பட்டன என்பதும், இவ் வெறுப்புகள் நுகர்வோர் செலவுகளைக் குறைக்க ஏதுவாயின என்பதும் இதன் பொருள். பணவீக்கத்தைப் பற்றிய நுகர்வோரின் நோக்கங்கள் அதைப் பற்றிய அவர்களது அநுபவம் பெருகுகின்றமையால், மாறுதல்களுக்கு உட்பட்டவையானாலும், இதுவரையிலும் விலைகள் நிலைபேறுடைமைகளாக அமைய நுகர்வோர் பெரிதும் பாடுபட்டார்கள். பொரு

[1] ஜான் பி. லீவீஸ்: நிரந்தரமாக உள்ள அமைதி (lull) (The lull that come to stay,) ஜர்னெல் ஆப் பொலிட்டிக்கல் எகானமி LXIII (பிப்ரவரி 1955) பக்கங்கள் 1-19, காண்க.

[2] பணவீக்கத்திற்கான நுகர்வோரின் எதிர் உணர்வுகள்: பொருளாதாரக் காலாண்டு ஜர்னல் LXIII (மே மாதம், 1959) பக்கங்கள் 246-62.

வியல் நிபுணர்கள் எதிர்பார்த்த வகையில், பணவீக்கத்திற்கு நுகர்வோர் எதிர் உணர்வு செய்தாலும், அதன் எதிர்பார்ப்புகளுக்கான எதிர் உணர்வுகளைச் செய்தாலும், அவர்கள் நடத்தைப் பணவீக்க நிலையைப் பெரிதாக்கப் பெரிதும் பயன்பட்டதாகும். ஆனல், உண்மையில் அவர்கள் நடத்தை அதற்கு அவ்வளவு உரத்தைத்தரவில்லை.

நுகர்வோரின் எதிர் பார்ப்புகள், போக்குகள் ஆகியவைகளின் விளைவுகளைப் பற்றிய விளக்கத்தில் நாட்டமுடைய மாணவர்கள் இதற்கான இலக்கியம் விரிந்து கிடப்பதை உணர்வார்கள்.[1] மொத்த விவரங்கள், கணக் கெடுப்பு விவரங்கள் ஆகியவை தந்த ஆதாரங்களைக் கொண்டு பின்வரும் கருத்துரைகளை வழங்கலாம். (1) வருமான மாற்றங்கள் தூய்மையான 'பொருளியல்' மாறிகள் ஆகியவைகளுடன் இணைக்கப் பட்ட நேர்நிலைக் காரணியாக நுகர்வோர் செலவு அமையாமல் அது தனிப்பட்ட முறையில் இயங்கும் வல்லமையுடையது. (2) பொருளியல் மாறிகளின் மாற்றங்களை நுகர்வோர் போக்குகளும், எதிர் பார்ப்புகளும் ஒரு வேளை பிரதிபலிக்கலாம்; ஆனல், அவைகளும் 'தானக' மாறும் தன்மை உடையனவாகும்; (3) நுகர்வோர் போக்குகள் தாமாக மாறுவதற்கு ஏற்ற விளக்கத்தை நம்மால் இதுகாறும் தரமுடியவில்லை. நுகர்வோர் போக்கு மாற்றங்களுக்கான தோற்றுவாய் இன்னும் சரியாகப் புலப்படவில்லை. ஆனல், நுகர்வோர் போக்குகள் பிடிபடக் கூடியவை ; அவர்களது போக்குகள், எதிர்பார்ப்புகள் ஆகியவைகளை எளிதில் அளவிட முடியும்; இத்தகைய போக்குகள் நுகர்வோர் செயல்களைக் குறிக்கும் முன்னேடிகள் எனச் சொல்லுதல் மிகையாகாது.[2] (4)போக்குகள், எதிர்பார்ப்புகள் அமைவதற்கும் போக்குகள் எதிர்பார்ப்புகள் ஆகியவைகளின் தொடர்பு, அவர்களது செலவு செய்யும் நடத்தைக்கும் ஆன ஆராய்ச்சி, நுகர்வோர் செலவுகளை எளிதில் புரிந்து கொள்ளவும், அவைகளை முன்னறிவிக்கச் செய்யவும், மொத்தச் செலவையும், வேலையையும் நிலைப்படுத்துவதற்கான நடவடிக்கைகளை எடுக்கவும் பயன்படுகிறது.

1 மேற்கூறிய ஆராய்ச்சிகளுடன் பின்வருபவைகளையும் சேர்க்க 'பொருளியலுக்கான கணக்கெடுப்பு முறைகள்; எல். ஆர். கிலீன் அவர்கள் தொகுத்தது. (கொலம்பியப்பல்கலைக் கழகம் அச்சகம் 1954). குறிப்பாக அதிகாரங்கள் 1, 2 ஆகியவை; ஜி. கடோனு, ஈ. முல்லர் ஆகியவர்கள் எழுதிய நுகர்வோர் எதிர்பார்ப்புகள் 1953-56 கணக்கெடுப்பு ஆராய்ச்சி நிலையம் 1957; எல். ஆர். கிலீன்) ஜெ. லான்சிக் எழுதிய நீள்பயன் சரக்குகளை வாங்குவதற்கான முடிவுகள்; அங்காடி செய்வதற்கான பத்திரிகை. (அக்டோபர் 1955) பக்கங்கள் 109-32; ஜி. கடோனு: வலிமையுடைய நுகர்வோர் (மெக்கிராகில் 1960).

2 கடோனு முல்லர்: நுகர்வோர் எதிர்பார்ப்புகள் 1953-56 பக்கம் 110

## நுகர்ச்சிச் செலவுகளைப் பாதிக்கும் அமைப்புப்பற்றிய காரணிகள்
(Structural factors affecting consumption spending)

நாம் இதுகாறும் தந்த விளக்கம் தனிப்பட்ட நுகர்ச்சியாளரின் செலவு அலகுகளைப் பாதிக்கக்கூடிய காரணிகளைப் பற்றிய விளக்கமாக அமைந்தது. நாம் இதுவரை சொத்து, வட்டி வீதம், நுகர்வோர் கடன் வாங்க விரும்பினால் வாங்கும் கடன் வீதத்தின் நிலை எண் (terms of consumer credit) போன்ற புறக்காரணிகளை மட்டும் விளக்காமல் அலகுகள்கொண்ட போக்கு, எதிர்பார்ப்புகள் போன்ற உளவியல் தொடர்புடைய காரணிகளையும் விளக்குகிறோம். தனிப்பட்ட அலகுகளைப் பாதிக்கும் இத்தகைய காரணிகளைத் தவிர, நுகர்வோர் தொகையின் ஒவ்வொரு அலகும் பல தரப்பட்ட அலகுகளுக்குக் கொடுக்கும் முக்கியத்துவத்தைக் கொண்டு மொத்த நுகர்ச்சி பாதிக்கப்படுவதற்கான காரணிகளையும் விளக்குதல் சாலச் சிறந்தது. செலவு செய்யும் அலகுகளின் அமைப்பு மாறினால் அதனால் நுகர்ச்சி மாற்றமும், மொத்த வருமான மாற்றமும் ஒன்றை ஒன்று ஒட்டாமல் தனித்து இயங்கக் கூடிய வலிமையைப் பெறுகிறது. (அல்லது இதற்குமுன் விளக்கிய வேறு காரணிகளுடன் ஒட்டாமல் தனித்து இயங்கும்) அமைப்புப்பற்றிய மாற்றங்கள் மிகவும் தாமதித்து ஏற்படுவதால் நுகர்ச்சி பற்றிய குறுங்கால, அல்லது இடைக்காலப் பகுப்பாய்வினுக்கு இவை பயன்படாதவை. ஆகவே, இவற்றைச் சற்றுச்சுருக்கி விளக்குவோம்.

### வருமானப் பங்கீடு

கொள்கை மட்டத்தில் பெருமளவு விளக்கம் பெற்ற பல அமைப்புப் பற்றிய காரணிகளில் மிகச் சிறந்தது வருமானப் பங்கீடு என்ற அமைப்புப் பற்றிய காரணியாகும். குறைந்த வருமானத்தைக்கொண்ட குடும்பங்களின் இறுதிநிலை நுகர்ச்சித்திறன் உயர்ந்த வருமானத்தைக் கொண்ட குடும்பங்களின் நுகர்ச்சித்திறனை விட உயர்ந்துள்ளது என்பதைக் கருதுகோளாகக் கொண்டால், (இப் பிரச்சினை பின்னர் விளக்கப்படும்) மொத்த நுகர்ச்சியை வலிமைப் படுத்துவதற்கு, உயர்ந்த வருமானத்தைக் கொண்ட குடும்பங்களின் வருமானத்தைக் குறைந்த வருமானத்தைக் கொண்ட குடும்பங்களுக்கு மறு பங்கீடு செய்தலைத் தவிர வேறு வழியில்லை(எடுத்துக் காட்டாக இதனை வேலைக் குறைவு பட்டுக்காணும் காலத்தில் பயன் படுத்தலாம்). இதனை உயர்ந்த வருமானத்திற்குரிய வரி வீதங்களை உயர்த்தியும் குறைந்த வருமானத்திற்குரிய வரி வீதங்களைக் குறைத்தும், (அல்லது உயர்ந்த வருமானமுடைய குடும்பங்களுக்குரிய வரி விதிப்புகளை உயர்த்துவதால் கிடைத்த பொருளைக்

குறைந்த வருமானமுடைய குடும்பங்களுக்கு உதவித் தொகையாக வழங்கியும்) செயற்படுத்தலாம். இந்தச் செய்கையைத் தொழில் தேக்கக் காலங்களில் வேலை வழங்கும் காரணியாகப் பயன்படுத்த லாம் என்பது முற்போக்கு வாதிகளின் (Liberals) கருத்து. நுகர்வோர் பண்டங்களின் தேவை உயர்ந்து காணப்படுவதன் காரண மாகப் பண வீக்கம் ஏற்படும்போது, அந்த மொத்த தேவையைக் குறைக்க, பணக்காரர்களின் வரிகளைக் குறைத்து, ஏழைகளின் வரிகளை உயர்த்தினால், மொத்தத்தேவை மந்தமாகிவிடும் எனக் கூறத் தவறியதில் வியப்பில்லை.

உண்மையில் சம வருமானப் பங்கீட்டை வேறு பல காரணங் களைக் கொண்டு வலியுறுத்துவோர் (வியாபார மந்த காலங்களில்) ‘வேலை நிறைவு’ காரணங்களைக்கொண்டு சமவருமானப் பங்கீட்டை வலியுறுத்துகின்றனர். இக் காரணங்கள் கருத்துற்ற காரணங் களாக அமைந்துள்ளன. இது மிகவும் வருந்தத்தக்க நிலையாகும். சம வருமானப் பங்கீட்டை விரும்புவதற்கான காரணங்கள் (அவை நல்ல காரணங்களாயின்) அக் காரணங்கள் தம்மாலே இயங்கும் சக்தி உடையனவாய் அமையவேண்டுமே யல்லாமல் ‘வேலை நிறைவு’ என்ற காரணத்தை அடிப்படையாகக்கொண்டு அமைவது தவறு, அல்லது அக் காரணங்கள் (பணவீக்க நிலைக்கு) புறம்பட்ட காரணங்களாகவும் அமையலாம். தராதர வரி வீதங்கள் (அதாவது உயர்ந்த வருமானம் குறைந்த வருமான முடைய குடும்பங்களிடையே உள்ள) பொருளியல் காரணங் களையோ அல்லது வேறு பல காரணங்களையோ அடிப்படையாகக் கொண்டு அமையலாம். இக் காரணங்கள் நடப்பு மொத்தத் தேவை மட்டத்துடன் ஒவ்வாததாக அமைந்திருத்தல் வேண்டும். பின் வேலை நிறைவு மட்டத்திற்குப் போதாத அளவு மொத்தத் தேவை அமைந்திருந்தால், ‘முதலீட்டுக்கு எதிர்மாறான நுகர்ச்சிச் செலவை வலுப்படுத்த வேண்டுமானால் நுகர்வோர் வரிகள் எல்லா வற்றையும் குறைப்பதைத் தவிர வேறு வழியில்லை; அல்லது பண வீக்க நிலை பயமுறுத்தினாலும், அல்லது (முதலீட்டை அதிகரிப் பதற்குப் பதிலாக) நுகர்ச்சியைக் குறைக்க வேண்டுமானால், நுகர்வோர் வரிகள் எல்லாவற்றையும் உயர்த்துவதைத் தவிர வேறு வழியில்லை. தராதர வரி வீதங்களின் அமைப்பு நிலைபேறு நோக்கங்களுடன் தொடர்பு இல்லாத வகையில் பொருத்தி நிர்ண யிக்கப் பட வேண்டும். மேலும் (அரசின் செலவுடன் தொடர் புடைய) வரி வீதங்களின் மட்டத்தை, நுகர்ச்சியின் அளவை மாறாம லிருக்கும் அளவிற்கு நிலைபெறச் செய்யும் வகையில் மாற்றி யமைத்தல் வேண்டும்.

ஆயினும் வருமானப் பங்கீட்டின் மாற்றங்களால் நுகர்வோர் செலவுகளின் அளவிற்கு எவ்வகை விளைவுகள் நேரிடுகின்றன என்ற கருத்தில் நமக்கு நாட்டம் அதிகம் உண்டு. எடுத்துக்காட்டாக, தனியார் துறைப் பொருளியல் அமைப்பில் மாற்றங்கள் ஏற்படுவதால் வருமானப் பங்கீடு மாறுகிறது என வைத்துக் கொள்வோம். (இம் மாற்றங்கள் வரிகளுடன் தொடர்பற்றவை). இதனால் மொத்தச் செலவு எவ்வகையில் பாதிக்கப்படுகிறது என்பதற்கான முன்னறிவிப்புகளைக் கூற முடியும். இதனால் வரி வீதங்களின் பொது மட்டத்தை மாற்றியமைப்பதற்கான அவசியத்தையும் வலியுறுத்தலாம். அல்லது வேறு பல காரணங்களால், வரி வீதங்களின் தராதர அமைப்பு மாற்றத்தில் நாம் நாட்டம் கொண்டால், வரிப்பளுவை இவ்வாறு மறு பங்கீடு செய்வதால் மொத்த நுகர்வோர் செலவின் விளைவு என்னவாகும் என்பதன் அவசியத்தையும் நாம் உணர வேண்டும்.

நுகர்வோர் செலவின்மீது வருமானப் பங்கீடு சுமத்தும் பளுவைப் (impact) பற்றிய பகுப்பாய்வுகள் பல, சில சமயங்களில் சராசரி நுகர்ச்சித்திறன் (average propensity to consume) இறுதிநிலை நுகர்ச்சித் திறன் (marginal propensity to consume) ஆகிய இரண்டு கருத்துகளின் பொருளைக் குழப்பி விடுகின்றன. பலதரப்பட்ட வருமான மட்டங்களில், சராசரியின் திறனில் பலதரப்பட்ட மாற்றங்கள் ஏற்படுகின்றன என்பதை நாம் நன்கு உணர்வோம். குறைந்த வருமானத்தைக் கொண்ட குடும்பங்கள், தங்களது வருமானத்தின் பெரும் பகுதியைச் செலவழித்து விடுகின்றன.— அக் குடும்பங்கள் வெகுவாகச் சேமிப்பின்மையைக் கையாளுகின்றன. மிக உயர்ந்த வருமானத்தைக்கொண்ட குடும்பங்கள் தங்கள் வருமானத்தில் பாதிபங்கு அல்லது அதற்கும் குறைந்த அளவைச் செலவு செய்கின்றன. ஆனால், இவ்விரு குடும்பங்களின் இறுதிநிலை நுகர்ச்சித்திறன் ஏறத்தாழ ஒன்றாக அமைகிறது. முழு நிறை மாதிரி (cross-section) விவரங்களைக் கொண்டு பலதரப்பட்ட வருமான மட்டங்களிடையே விளங்கும் இறுதிநிலைத் திறன்களை நம்மால் அளவிட முடியும் என்று வைத்துக் கொள்வோம். இதனால் இறுதிநிலைத் திறன்களில் புலப்படும் வேறுபாடு (difference) வரவு செலவுத் திட்ட நுகர்ச்சிச் சார்பு தொடர்பின் வளைவு பரப்பில் (curvature) பிரதிபலிக்கப்படுகிறது. இவ்விவரங்களைப் பயன்படுத்தி, மொத்த வரி பளுவின் மறு பங்கீடுகள் மொத்த நுகர்ச்சியைச் சிறிய அளவிற்கே பாதிக்கும் என்பதை மஸ்கிரேவ், பெயின்டர்

(Musgrave and Painter) ஆகியவர்கள் விளக்கியுள்ளார்கள்.[1] முழு நிறை மாதிரி விவரங்களைக் கொண்டு, பொருத்தமான இறுதி நிலைத் திறனை உறுதியாகக் கூற முடியுமா என்பது கேள்விக்குரியது. இக் கேள்வி நாம் முன்பு குறிப்பிட்டபடி வருமான வேறுபாடுகளுடன் மட்டும் தொடர்புடையதே தவிர வருமான மாற்றங்களுடன் தொடர்புடையவையல்ல.

குறுங்காலத்தில் (அதாவது வர்த்தகச் சுழல் என்பதை விளக்கப் பயன்படும் குறுங்கால நெளிவுகள் ஏற்படும் காலத்து) நிகழும் வருமான அளவைப் பங்கீட்டின் முறையான பெயர்ச்சிகளின் (shifts) விளைவுகள் மிகவும் சாதாரணமானவை. வர்த்தகச் சுழல் காலத்தில் ஏற்படும் வருமான அளவு பங்கீட்டின் மாற்றங்கள், பூரிப்பு (boom) காலங்களில் ஏற்றத்தாழ்வைக் குறைக்கும் போக்கினைக் கொண்டதாகவும், மந்த (depression) காலங்களில், ஏற்றத்தாழ்வுகள் அதிகமாகும் போக்கினைக் கொண்டதாகவும் உள்ளது என்பது குச்னெட்ஸ் அவர்கள் நடத்திய ஆராய்ச்சியின் முடிவு.[2] இதைவிடச் சிறந்த அமைப்பு, அவரது ஆராய்ச்சி வருமானப் பங்கீட்டின் நூற்றாண்டு கால மாற்றங்களை (secular changes) வெளிப்படுத்தியது. அதாவது ஒரு நூற்றாண்டின் இருபதுகள் (twenties), முப்பதுகள் (thirties) ஆகிய காலங்கள், போருக்குப் பிந்திய ஆண்டுகள் ஆகியவைகளினிடையே ஏற்பட்ட மாற்றங்களை நன்கு புலப்படுத்தின. முப்பதுகளில், நாற்பதுகளில் (வரிகள் விதிக்கப்படுவதற்கு முன் காணப்பட்ட ஏற்றத்தாழ்வுகளின் கூர்மையான குறைவு, போருக்குப் பிந்திய ஆண்டுகளில் காணப்பட்ட, நம்மால் முன்பே குறிப்பிடப்பட்ட, தொடர்பு—அதாவது நுகர்ச்சிக்கும் வருமானத்திற்குமிடையே உள்ள தொடர்பு—ஏற்படுவதற்கு ஒரு சிறந்த காரணம் என்று கூறலாம்.

வருமான அளவுப் பங்கீடு மாற்றங்களைத் தவிர 'செயல் பங்குகளின்' (functional shares) மாற்றங்கள் குறிப்பிடத் தக்கவை. இவை வர்த்தகச் சுழல் காலங்களில் முறையாக ஏற்படுகின்றன. செயல் பங்கு என்பதற்கு, கூலி, சம்பள வருமானம் இலாபம், வட்டி, வாரம், விவசாயப் பண்ணை

[1] ஆர். ஏ. மஸ்கிரேவ், எல். எஸ். பெயின்டர்: மக்கள் சார் நுகர்ச்சியையும் சேமிப்பையும் மாற்றுவரி அமைப்புகளின் பளு (The Impact of Alternative Tax. Stuctures on Personal Consumption of Saving) பொருளாதாரக் காலாண்டு பத்திரிக்கை (Quarterly journal of Economic) LXII (1948) பக்கங்கள் 475-99 காண்க.

[2] எஸ். குச்னெட்ஸ்: 'வருமானம், சேமிப்பு ஆகியவைகளில் உயர்ந்த வருமானத் தொகுதியின் பங்கு' (Shares of upper Income groups in Income and Savings) பொருளாதார ஆராய்ச்சித் தேசிய கழகம் (1953) (National bureau of Economic Research) பக்கங்கள் 48-62 காண்க.

வருமானம் ஆகியவைகளுக்குப் பங்கீடு செய்யும் தொகை என்பது பொருள். வியாபார மந்த (depression) காலங்களில் வட்டி, வாரம் ஆகியவை மிகச் சிறிய அளவே குறைகின்றன. கூலிகளும் பண்ணை வருமானங்களும் விரைவாகக் குறைகின்றன; இலாபப் பங்கு மிகக் கூர்மையாகக் குறைகின்றது. ஆனால், அதே வருமான மட்டங்களில் விவசாயிகளும், சிறிய அளவு தொழில் நடத்துவோரும், கூலியாளர்களை விட உயர்ந்த அளவு சேமிப்பைச் செய்கிறார்கள். வியாபாரச் சுழல் காலத்தில் ஏற்படும் செயல் பங்குகளின் ஒழுங்கான பெயர்ச்சிகள் நாம் சாதாரணமாகக் காணும் குறுங் கால நுகர்ச்சி மாற்றகளுக்கு ஏற்றதொரு விளக்கமாக அமைகின்றன. இதனால்தான் போலும், கிலீன் (klein) கோல்ட்பெர்கர் (Goldberger) ஆகிய இவரும் அவர்களது நுகர்ச்சிச் சார்பு தொடர்பில் வருமானப் பங்குகளைத் தனிப்பட்ட வகையில் புகுத்தியுள்ளார்கள். இதனைப் பல முறை நாம் முன்பே விளக்கியுள்ளோம்.

## பிறப்பு-நோய் முதலிய சமுதாய நிலைப் புள்ளியியல் காரணிகள்

## (Demographic Factors)

நுகர்ச்சிப் பாகுபாடுகளின் காரணம் வருமான மட்டங்கள் என்பதை முழு நிறை மாதிரி (cross-section) ஆராய்ச்சி புலனாக்குகிறது. ஆயினும், வருமான மட்டங்கள் கொடுக்கப்பட்டிருந்தாலும் ஒவ்வொரு தனிப்பட்ட குடும்பங்களிடையே நிலவும் நுகர்ச்சிச் செலவுகள் வேறுபாடு உள்ளது. இவ் வேறுபாடுகளைப் பிறப்பு-நோய் முதலிய சமுதாய நிலைப் புள்ளியியல் காரணிகளைக் ('Demographic Factors') கொண்டு ஒரு வகையில் விளக்கலாம். குடும்பத்தின் அளவு (மற்றவை மாறாதிருப்ப, பெரிய குடும்பங்கள் சிறிய குடும்பங்களை விட அதிகப்படிச் செலவு செய்கின்றன); குடும்பத்தின் வாழ்க்கைச் சக்கரம் (life-cycle) எந் நிலையில் உள்ளது; (சிறு குழந்தைகள் அல்லது கல்லூரிகளில் பயிலும் குழந்தைகளைக் கொண்டு குடும்பங்களின் செலவு, அதே அளவுடைய குழந்தைகள் இல்லாத குடும்பங்கள் செய்யும் செலவை விட அதிகமாகும்); குடியிருக்கும் இடம்; (விவசாயிகள், சிறிய அளவு தொழில் செய்பவர் ஆகியவர் அதிகப்படி சேமிப்பு உடையவர்களாவார்கள்; சொத்து உடைமை; (வாடகை வீடுகளில் இருப்பவர்கள், அடைமானத்தைத் தீர்ப்பவர்களை விடக் குறைந்த சேமிப்பைப் பெற்றவர்களாவார்) இனம் (வருமான மட்டம் கொடுக்கப்பட்டிருந்தால் வெள்ளையர் அல்லாதவர் வெள்ளையர்களை விட

அதிகம் சேமிப்பர்) போன்றவைகள் பிறப்பு-நோய் முதலிய சமுதாய நிலைப் புள்ளியியல் காரணிகளின் உள் அடங்கியவை. தனிப்பட்ட குடும்பங்கள் மேற்கூறிய வகைகள் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குக் குறுங்காலத்தில் போகலாம்; ஆனால், மொத்த மக்கள் தொகையை எடுத்துக் கொண்டால், குடும்பத்தின் அளவு மாற்றங்கள், சொத்து உடையவர்களின் சதவீத மாற்றங்கள், அல்லது தொழில் செய்வோரின் சதவீத மாற்றம் வாழ்க்கைச் சூழலின் பல மட்டங்களின் விகிதாசார அமைப்பு மாற்றங்கள் நகர்ப்புறம் வாழ் மக்கள் தொகுதியின் விகிதாசார அமைப்பு மாற்றம் ஆகிய காரணிகள் சராசரியில் மெள்ள ஊருகின்றன. எனவே, மொத்த நடத்தையை விளக்கம் குறுங்காலப் பகுப்பாய்வினுக்கு இக் காரணிகளின் விளக்கம்' அதிக அவசியமில்லை. ஆயினும் (எடுத்துக் காட்டாக குடும்ப அளவில் குறிப்பிடத் தக்க வேறுபாடுகள் போருக்குப் பிந்திய ஆண்டுகளைப் போருக்கு முந்திய ஆண்டுகளிலிருந்து குறிப்பிடத் தக்க வகையில் பிரித்து வைத்திருக்கின்றன. இவை மொத்த நடவடிக்கை வேறுபாடுகளை விளக்கப் பயன்படுகின்றன. ஆனால், பொதுவாக, பிறப்பு–நோய் முதலிய சமுதாய நிலைப் புள்ளியியல் மாற்றங்கள் வெகு நீண்ட காலங்களில் ஏற்படுவதால், அடிப்படை அகவயக் காரணிகளின் நிலை பேற்றையும் உணர முடியாமல் போகிறது. நாம் முன்பு குறிப்பிட்டதுபோல் தலைமுறை தலைமுறையாக ஏற்படும் நுகர்ச்சிச் செலவை விளக்க ஒரு பொதுச் சூத்திரத்தைக் கையாள முடியும் என எண்ணுவதற்கில்லை. இருப்பினும் பிறப்பு நோய் முதலிய சமுதாய நிலைப் புள்ளியியல், அல்லது வேறு சில காரணிகளை நமது நுகர்ச்சிச் சமன் பாட்டில் புகுத்தலாம்.

## குடும்பம் அல்லாதவைகள் (Non Households)

வணிகத் துறை (அல்லது அதை ஒத்த) வேறு துறை மதிப்பிட்ட நாட்டு வருமானம் அல்லது நாட்டு ஆக்கக் கணக்குகளில் அடங்கியுள்ள மொத்த நுகர்ச்சி அல்லது சேமிப்பை விளக்கப் போவோமேயானால், மக்கள் சார் துறை கணக்கில் குடும்பம் அல்லது சில காரணிகள் அடங்கியுள்ளன என்பதை நினைவுபடுத்தத் தேவையில்லை. எடுத்துக் காட்டாக, தனியார் ஓய்வுச் சம்பளம் அல்லது நலநிதிகள் ஆகியவைகளும், அத்தகைய நிதிகளுக்குச் செலுத்தும் தொகைகளும் மக்களுக்கு வழங்கிய தொகைகள் என்று கணக்கிடப் பட்டிருக்கின்றன. ஆனால், உண்மையில், பூரிப்புக் காலங்களில் அந் நிதிகளுக்கு வழங்கப்படும் தொகை 'இயற்கை' மக்களுக்கு வழங்கப்படும் தொகையை மிஞ்சுகிறது. அத்தகைய நிதிகளில் எதிர்பாராத விளைவுகளைக் குவிக்கும் கூலியா

ளர்கள், தங்களது தனிப்பட்ட சேமிப்புகளை, நிதிக் குவியல் களுக்கு ஏற்றவாறு அமைக்காவிட்டால், அவை நிறுவனங்களையும், அத்தகைய நிதிகளின் குறிப்பிடத்தக்க வளர்ச்சியையும், நுகர்ச்சி, செலவுக்குரிய வருமானம் ஆகியவைகளின் இடையே உள்ள தொடர்பையும் பாதிக்கும். ஏனெனில், இவைகளின் பருமன்கள் நாட்டுக் கணக்குகளில் அளவிடப் பட்டுள்ளன. மற்றக் குடும்பம் அல்லாத நிறுவனங்கள், அவைகளுக்குச் சுமத்தப் பட்டவை (imputation) ஆகியவை நாட்டுக் கணக்கு அளவிடும் நுகர்ச்சி மக்கள் சார் (pesonal) சேமிப்பு ஆகியவைகளில் அளவைகளில் சில பிழைகளைப் புகுத்துகின்றன. போருக்குப் பிந்திய காலத்தில் ஏற்பட்ட குறிப்பான சில பிழைகளை இங்கு விளக்குவோம் என எதிர்பார்ப்பதற்குக் காரணம் ஏதுமில்லை. ஆனால். அப் பிழைகளை அகற்ற அத்தகைய பிழைகள் இருக்கக்கூடும் என்று மாணவர் களுக்கு எச்சரிக்கை விடுக்கும். இப் பிழைகள், நாட்டுக் கணக்கு களின் எளிய அமைப்பிற்குத் தேவையான பழக்க வழங்கங்களைப் பிரதிபலிக்கின்றன.

## நுகர்ச்சியும் நாட்டின் மொத்த ஆக்கமும்
## (Consumption and GNP)

நுகர்வோர் நடத்தையுடன் மிக நெருங்கிய தொடர்பு கொண்ட வருமானக் கருத்து என்பது செலவுக்குரிய வருமானம் என்ற கருத்தாகும் என்று நாம் முன்னமே குறிப்பிட்டோம். ஆனால், நுகர்ச்சிச் சார்பு தொடர்பைப் பேரியல் பொருளாதார மாதிரிகளுக்குப் (macro economic model) பொருத்தி அமைக் கையில் நமக்கு வேறு வகைத் தொடர்பு தேவைப்படுகிறது. அதாவது நுகர்ச்சி, நாட்டின் மொத்த வருமானம் ஆகிய இரண்டின் தொடர்பாகும். பெருக்கி என்ற கருத்தை உள்ளடக்கிய எளிய கீன்சின் மாதிரியை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். முதலீட்டுச் செலவுகள் அதிகமானல் அவை வருமானத்தைப் பன்மடங்காகப் பெருக்கும் என்ற கருத்தை அந்த மாதிரி (model) உருவாக்கியது. வருமானத்தின் புதிய சமநிலை (equilibrium) மட்டத்தில் முதலீட்டுச் செலவு அதிக மாவதோடு அல்லாமல், உயர்ந்த வருமான மட்டம் நுகர்வோர் செலவுகளை அதிகப்படுத்தும் என்ற கருத்தைப் புகுத்துகிறது.

அரசு அல்லது கூட்டமைப்பு நிறுவனங்கள் (corporations) ஆகியவை இல்லை என்று வைத்துக் கொள்ளும் மட்டும், பிரச்சினை ஒன்றும் எழாது. அத்தகைய எளிய பொருளியல் அமைப்பில் நாட்டு ஆக்கம் நாட்டு வருமானத்திற்கும், நாட்டு வருமானம்

செலவுக்குரிய வருமானத்திற்கும் சமமாக அமைகிறது. ஆனால், வரிகள், செலவு, மாற்றுச் செலுத்துகள் வட்டிச் செலுத்துகள்; உதவித் தொகை (subsidies) ஆகியவைகளைக் கொண்ட அரசையும், நடப்பு இலாபத்துடன் வேறுபட்டு அமையும் இலாபப் பங்கீட்டைக் கொண்ட கூட்டமைப்பு நிறுவனங் களையும் புகுத்தினல், நாட்டுக் கணக்கு அமைப்பு மிகவும் கடினமாக அமைகிறது. முதலீட்டுச் செலவு அதிகமானல் நாட்டின் மொத்த ஆக்கம் GNP உயர்கிறது எனப் பொருள்படும்; ஆனல், நுகர்ச்சிச் செலவு நாட்டின் மொத்த ஆக்கத்துடன் பொருந்தி அமையாது; அது செலவுக்குரிய வருமானத்துடன் (disposable income) பொருந்தி அமைந்துள்ளது. நுகர்ச்சிச் செலவு எவ்வாறு அமைகிறது என்பதை அறிய விரும்பினலும், பெருக்கியின் (multiplier) அளவை நிர்ணயிக்க வேண்டு மானலும், அதிகப்படி முதலீட்டுச் செலவு, நுகர்ச்சிச் செலவு ஆகிய இரண்டினல் செலவுக்குரிய வருமானம் எப்படி அமைகிறது என்பதை அறிய வேண்டும்.

பின்வரும் அதிகாரம் ஒன்றில் ('அரசைப் புகுத்திய எளிய கீன்சின் மாதிரி' (simple Keynesian Model with Introduction of Government) என்ற அதிகாரத்தில் இவைகளைக் குறிக் கணக்கியல் மாதிரி (algebraic model) கொண்டு விளக்கியுள்ளோம். இங்கு அத் தகைய கருத்துகளை, சமன்பாடுகளைப் பயன்படுத்தாமல், நாட்டு வருமான கணக்குகளைப் பயன்படுத்தி விளக்கியுள்ளோம்.

நாட்டுக் கணக்கு விவரங்களில் நாட்டின் மொத்த ஆக்கத் திற்கும், செலவுக்குரிய வருமானத்திற்கும் (Disposable income) உள்ள தொடர்பை விளக்க வேண்டுமானல் மேற்கூறிய பிரச்சினை மிகவும் முக்கியமான பிரச்சினையாக அமைகிறது. கீழ்க்காணும் அட்டவணை அத்தொடர்பைச் சுருக்கியுள்ளது.

நாட்டு மொத்த ஆக்கம் (GNP) இதிலிருந்து (a) முதல் நுகர்ச்சித் தொகை (Capital consumption allowances) கழித்து விட்டால் கிட்டுவது நாட்டின் நிகர ஆக்கம் (Net National product). இதிலிருந்து (b) தொழில்துறை மறைமுக வரிகள் (business indirect taxes).

(c) தொழில்துறை மாற்றுச் செலுத்துகள் (business transfer payments).

(d) அரசுத் துறைத் தொழில்களிலிருந்து கிட்டும் நடப்பு உபரி (current surplus) உதவித் தொகை (subsidies) ஆகியவை களைக் கழித்தால் கிட்டுவது

நாட்டு வருமானம் (National Income)

இதிலிருந்து

(e) கூட்டமைப்பு நிறுவனங்களின் இலாப வரிகள் (corporate profit taxes).

(f) கூட்டமைப்பு நிறுவனங்களின் பங்கிடாத இலாபம் (corporate undistributed profits).

(g) கூட்டமைப்பு நிறுவனங்களின் இருப்புப் பட்டியல் மதிப்புச் சரிக் கட்டுதல்கள் (corporate inventory valuation adjustment)

(h) சமூக நல இன்சூரன்ஸ் நிதிகளுக்கான செலுத்தீடுகள் (contribution to social insurance) இவைகளைக் கழித்து

(i) தொழில் மாற்றுச் செலுத்துகள் (Business transfer payments).

(j) அரசு மாற்றுச் செலுத்துகள் (Government transfer payments).

(k) அரசு வட்டித் தொகை (Government impact) இவைகளைக் கூட்டினுல் கிட்டுவது

மக்கள் சார் வருமானம் (personal income)

இதிலிருந்து

(l) மக்கள்சார் வரிகளை நீக்கிவிட்டால், கிட்டுவது D1 செலவுக்குரிய வருமானம்

இதிலிருந்து

(m) மக்கள்சார் சேமிப்பை நீக்கிவிட்டால் கிடைப்பது C நுகர்ச்சிச் செலவுகள்.

முதலீட்டுப் பொருள்கள் அல்லது நுகர்ச்சிப் பொருள்கள் ஆகியவைகளின் உற்பத்தி பெருகினுல் நாட்டின் மொத்த ஆக்கம் உயர்ந்தது என்பது பொருள். இதைக்கொண்டு செலவுக்குரிய வருமானம் D1 (எனவே, நுகர்ச்சிச் செலவுகள் (c)) என்பவைகளின் பொருள் என்ன என்பது நாட்டின் மொத்த ஆக்கம் (GNP) உயரும்போது, செலவுக்குரிய வருமானம் (D1) என்னவாகிறது என்பதைப் பொறுத்து உள்ளது. நாட்டின் மொத்த ஆக்கத்தின் மதிப்பு பிலியன் டாலர்களாக உயர்ந்து அதனுல் செலவுக்குரிய வருமானமும் (D1) பிலியன் டாலர்களாக உயர்ந்தது என்ருல் பிரச்சினை ஏதும் எழாது. ஆனுல், நடைமுறையில் அவ்வாறு அமைவதில்லை. நாட்டின் மொத்த ஆக்கம் (GNP) ஆகியவைகள்

என்ன மாறுதல்களைப் பெறுகின்றன என்பதை உணர, நாட்டின் மொத்த ஆக்கம் (GNP) மாறும்போது, அது முதல் செலவுக்குரிய வருமானம் (DI) வரையுள்ள இடைப்பட்ட இனங்கள் ஒவ்வொன்றில் எத்தகைய மாற்றங்களை நாம் எதிர்பார்க்கிறோம் என்பதை முதற்கண் தீர்மானிக்க வேண்டும்.

பல்வேறு இடைப்பட்ட இனங்களில் ஒன்று தொழில் மாற்று செலுத்துகள் என்பது. இது மிகவும் சாதாரணமான ஓர் இனம். இது முதலாவதாகக் கழிக்கப்பட்டு (c) பின்சேர்க்கப்பட்டுள்ளது (i) எஞ்சியுள்ள இனங்களில் ஏழு (b, d, e, h, j, k, i) ஆகியவை அரசைச் சார்ந்த இனங்கள்; மூன்று (a, f, g) ஆகியவை தொழில் துறையைச் சார்ந்த இனங்கள். முதலில் அரசைச் சார்ந்த இனங்களைக் கவனிப்போம். இவ்வினங்களில் மூன்று வகை வரிகள் நாட்டின் மொத்த வருமானத்திலிருந்து செலவுக்குரிய வருமானம் கணக்கிடப்படும் வரை கழிக்கப்பட்டு வந்தன. நாட்டின் மொத்த ஆக்கம் மாறும்போது வரிச் சேர்க்கைகள் எவ்வாறு மாறுகின்றன? சில வரிகள் (உதாரணமாக, சொத்து வரிகள்) நாட்டின் மொத்த ஆக்கத்துடன் தொடர்பு கொள்ளாமல் தனித்து நிற்கின்றன. மற்ற எல்லா வரிகளின் பெரும்பகுதி, நாட்டின் வருமானம் விரிவடையும்போது ஏதோ ஒரு வகையில் அதிகப்படி வருமானத்தை அரசிற்கு அளிக்கிறது. அவற்றில் சில, உதாரணமாக விற்பனை வரி (Sales Tax) அளிக்கும் தொகையின் அதிகரிப்பும் நாட்டின் மொத்த ஆக்கத்தின் உயர்வும் விகிதாசாரப்படி அமைந்துள்ளது. வேறு சில வரிகள், உதாரணமாக, மக்கள்சார் வருமான வரிகள் விகிதாசாரப்படிக்கு உயர்ந்த வகையில் விரிவடைகின்றன. கூட்டமைப்புத் தொழில் நிறுவனங்களின் இலாப வரிகள் குறிப்பிடத்தக்க வகையில் ஒரு தனிப்பட்ட பங்கை வகிக்கின்றன. அவ்வரிகள், விதிக்கப்படுவதற்கு முன் அவற்றின் தொகை நிறுவனங்களின் மொத்த இலாபத்துடன் மாறிலிகளாக அமைகின்றன. ஆனால், கூட்டமைப்பு நிறுவனங்களின் இலாபம் நாட்டின் மொத்த ஆக்க மாற்றங்களுடன் மிக நெருங்கிய தொடர்புடையது. நாட்டின் மொத்த ஆக்கத்தின் உயர்வு அல்லது வீழ்ச்சி, கூட்டமைப்பு நிறுவனங்களின் இலாபத்தை விகிதாசாரத்திற்கு மேற்பட்ட வகையில் உயர்த்தவும் விழவும் செய்கிறது. ஆக நாட்டின் மொத்த ஆக்கத்தின் உயர்வு கூட்டமைப்பு நிறுவனங்களின் இலாபத்தை விகிதாசார அளவிற்கும் மேம்பட்ட வகையில் உயர்த்துகிறது. சமூகநல இன்சூரன்ஸ் செலுத்துகளும் வரிகளுக்குடைய இடத்தைப் (status) பெற்றிருப்பதால், அவைகளும் நாட்டின் மொத்த ஆக்கம் உயரும்போதும் அல்லது விழும்போதும் உயர்கின்றன, விழுகின்றன.

எனவே, அரசின் வருமானத்துடன் தொடர்புடைய இனங்களும், தனியார் வருமான ஓட்டத்திலிருந்து கழிக்கப்பட்ட இனங்களும், நாட்டின் மொத்த ஆக்கம் விரிவடையும்போது விரிவடைகின்றன. நாட்டின் மொத்த ஆக்கம் சுருங்கும்போது அவையும் சுருங்குகின்றன. நாட்டின் மொத்த ஆக்கம் விரிவடையும்போது செலவுக்குரிய வருமானம் (DI) குறைந்த அளவே விரிவடைகிறது; மற்றவை மாறுதிருப்ப என்பது இதன் பொருள். ஆனால், மற்றவை சமமாக இல்லை; ஆகவே, நமது முடிவு மாற்ற முடியாத முடிவாக அமைகிறது.

நாட்டின் மொத்த ஆக்கத்திலிருந்து செலவுக்குரிய வருமானத்தை அடையும் வரையில் சேர்க்கப்படுவன உதவித் தொகைகள் (subsidis) அரசு மாற்றுச்செலுத்துகள் இவை இரண்டும் நாட்டின் மொத்த ஆக்கம் உயரும்போது குறையும் தன்மையுடையன.

நாட்டின் மொத்த ஆக்க மாற்றத்தினல், செலவுக்குரிய வருமானத்திற்கு ஏற்படும் தாக்கைக் (impact) குறைவுபடுத்துவதற்கென அரசின் இனங்கள் அமைந்துள்ளன போலும். இவ் விளைவை 'உள்ளடக்கிய நிலைபேறு விளைவு' (built-in stabilization effect) என நமது வருவாய்க்குரிய அமைப்பில் கூறுகிறோம். இவ் விளைவு மந்த காலங்களில் வெகுவாக வாதிக்கப்படுகிறது. மொத்த வெளிப்பாட்டின் மதிப்புக் (GNP) குறையும்போது செலவுக்குரிய வருமானம் தானே உயர்கிறது. இவ்வாறு அது தானே உயர்வதற்கு வரி சேர்க்கைகள், சமூக நல இன்சூரன்ஸ் செலுத்துகள் குறைந்தும், உதவித்தொகைகள், மாற்றுச் செலுத்துகள் ஆகியவை உயர்ந்தும் செலவுக்குரிய வருமானத்தைப் பெருமளவிற்குப் பாதுகாக்கின்றன. இத்தகைய உள்ளடக்கிய வருமானப் பாதுகாப்பு உள்ளதால் நுகர்ச்சிச் செலவுகள் குறைவாக விழுகிறது. இத்தகைய நிலைபேறு செய்ய உதவி புரிபவைகள் இல்லையேல் நுகர்ச்சிச் செலவுகளின் மாற்றங்கள் வேறு வகையில் அமையும். ஆகவே, குறைந்து செல்லும் மொத்த வெளிப்பாட்டின் தாக்குக் குவியலின் விளைவைக் குறைக்க இவை பயன்படுகின்றன. இதே விசைகள் மீட்சி காலத்தில் அல்லது பெருக்க காலங்களிலும் செயல் புரியும்.

நமது பட்டியலில் இடை இடையே காணும் இனங்கள் நிலபேற்றை ஏற்படுத்தும் வகையில் பணி புரிகின்றன என்பது குறிப்பிடத்தக்கதொரு விவரமாகும். முதல் நுகர்ச்சிச் செலுத்துகள் (capital consumption allowance) என்பது நாட்டின் மொத்த ஆக்கத்துடன் தொடர்பு கொள்ளாமல் தனித்து இயங்கும் எனச் சிலர் கருதலாம். ஏனெனில், அவைகளின் பரும

ளளவு நடப்புத் தொழில் நிலைகளைத் தழுவாது, முன்பே உள்ள தேய்மானத்திற்குரிய சொத்துகளின் அளவைத் தழுவியுள்ளது. ஆனால், உண்மையில் இச் செலுத்துகள் நல்ல காலங்களில் மேல் நோக்கிச் செல்லவும், கெட்ட காலங்களில் கீழ்நோக்கிச் செல்லவும் சரிக்கட்டலாம். ஏனெனில், இலாபத்தைக் கணக்கிடும் கணக்கர்கள் தாங்கள் வெளியிடும் இலாபத்தை எதிர்பாராத நெளிவுகளிலிருந்து காப்பாற்ற முயலுகிறார்கள். இதன் விளைவு சிறியதாயினும், இது நிலைபேற்றை உண்டாக்கப் பெரிதும் பயன் படுகிறது. கூட்டமைப்பு சேமிப்புகள் பெரியதொரு நிலைபேற்றை உருவாக்கும் காரணியாய் அமைகிறது. கூட்டமைப்பு இலாபம் குறையுமிடத்து, தொழில் நிறுவனங்கள் தங்களது இலாப பங்கை (dividends) குறைக்க மறுக்கின்றன; அல்லது ஒருவாறு குறைக்க முற்பட்டால் மிகவும் குறைத்து விடுகின்றன. ஆகவே, கூட்டமைப்புச் சேமிப்புகள் பூரிப்பு காலங்களில் உயர்ந்ததொரு நேர்நிலை எண்ணிலிருந்து படிப்படியாகக் குறைந்துகொண்டு மந்த காலத்தில் எதிர்நிலை எண்ணாக அமைகிறது. அதேபோல் மந்த காலத்தில் சிறியதொரு எதிர்நிலை எண்ணிலிருந்து படிப்படியாக உயர்ந்துகொண்டே, பூரிப்பு காலத்தில் பெரியதொரு நேர் நிலை எண்ணாக அமைந்து விடுகிறது என்பது இதன் பொருள். இலாபம் தொழில் நிலையுடன் நெருங்கிய நெகிழ்வுத் தன்மையுடையதால் (sensitive) இந்த விளைவு நிலைபேற்றை எளிதில் உண்டாக்கும் காரணியாகப் பணிபுரிவதில் வியப்பில்லை.

இடை இடையே காணும் இனங்களின் மொத்த நிலைபேறு விளைவு மிகவும் உயர்ந்ததாகக் காண்கிறது. தற்போதைய வரி வீதங்கள், சமூக நல இன்சூரன்ஸ் திட்டம், கூட்டமைப்பு இலாபம் நாட்டின் மொத்த ஆக்கத்துடன் கொண்டுள்ள இறுதிநிலைத் தொடர்பு, கூட்டமைப்பு இலாபப் பங்கீட்டுக் கொள்கைகள் ஆகியவைகளைக் கொண்டு ஆராயுமிடத்து நமக்குக் கிட்டும் விளைவின் அளவைக் கீழ்க்காணும் சமன்பாடு சுருக்கி அமைத் துள்ளது.

$$\triangle DI = \cdot 5 \triangle GNP$$

அதாவது நாட்டின் மொத்த ஆக்கம் 1 பிலியன் டாலர்களாக உயர்ந்தாலும் குறைந்தாலும், அதன் விளைவு செலவுக்குரிய வருமானத்தை அரை பிலியன் டாலர் அளவிற்கு உயர்த்தும் அல்லது தாழ்த்தும் என்பது பொருள்.[1]

[1] செலவுக்குரிய வருமான (குறுங்கால) மாற்றங்களின் பிரதிபலிப்பின் மதிப்பை இதைவிடக் குறைந்த அளவிற்குச் சில ஆராய்ச்சிகள் மதிப்பிடுகின்றன. உதாரணமாக ஜெ. டூசென்பெரி, ஓ. எக்ஸ்டீன், ஜி. ப்ரோம் ஆகியவர்கள் உருவாக்கிய ஓர் இயக்க இயல் வீழ்ச்சி—மாதிரி (recession—model), இரண்டு காலாண்டுகளுக்குப் பிறகு செலவுக்குரிய வருமானத்தில் 28 சதவீத மாற்றத்தை உண்டாக்கி அதனைப் படிப்படியாக உயர்த்தி, இறுதியில் ஏழு காலாண்டுகளுக்குப் பிறகு 47 சதவீதமாக்கும் என்பதை வெளிப்படுத்தியது.

செலவுக்குரிய வருமானத்தின் இறுதிநிலை நுகர்ச்சித் திறன் விவாதத்திற்காக ·8 என்ற மதிப்பைப் பெற்றுள்ளது என்று வைத்துக் கொண்டால், நாட்டின் மொத்த ஆக்கம் ஒரு பிலியனாக உயர்ந்தால், இதனால் நுகர்ச்சிச் செலவு ·4 பிலியன் அளவே உயரும் என்பது பொருள். (அதாவது ·8 என்பதை ·5 பிலியன் களால் பெருக்கிக் கிடைத்த தொகை).

இதன் குறிப்புச் சிறப்புத் தெளிவானது. செலவுக்குரிய வருமானத்தின் இறுதிநிலை நுகர்ச்சித் திறனை எடுத்துக் கொண்டு கணக்கிடுகையில், 'பெருக்கியின்' (multiplier)

$$\left(\text{அதாவது } \frac{1}{1-MPC} \quad \frac{1}{1-\text{இறுதிநிலை நுகர்ச்சித் திறன்}}\right)$$ மதிப்பு 5 என்று

கணக்கிட நம்மால் முடியும். (இறுதிநிலை நுகர்ச்சித் திறனின் மதிப்பு ·8 என்றிருப்பதால்). ஆனால், இறுதி ஆக்கப் பொருள்கள் ஒவ்வொன்றின் மீது செலவு செய்யும் ஒவ்வொரு டாலரையும் எடுத்துக்கொண்டால் செலவுக்குரிய வருமானம் 50 செண்டுகளாக மட்டுமே அமையும். இதனால் 'பெருக்கியின் (multiplier) மதிப்பு 5 என அமையாமல் 1·7 என்று மட்டுமே அமையும். அதாவது நமது மாதிரிக்குப் பயன்படக்கூடிய பெருக்கி 'நாட்டின் மொத்த ஆக்கத்தின் நுகர்ச்சி இறுதிநிலைத் திறன் (marginal propensity to consume grossnational product) என்பதன் அடிப்படையாதலால் மதிப்பு அவ்வாறு அமைந்துள்ளது (நமது மாதிரியில் உள்ள அப் பெருக்கியின் மதிப்பு ·4 என்பதே).

இரண்டு மிகச் சிறப்பு வாய்ந்த கருத்துகள் பின் வருமாறு: நமது மாதிரியுடன் நெருங்கிய தொடர்புடைய இறுதிநிலை நுகர்சித் திறன் நுகர்வோர்களின் உளவியல் தொடர்புடைய திறன்களை மட்டும் மேற்கொள்ளாமல், மொத்தச் செலவு மாறுகையில் செலவுக்குரிய வருமானம் மாறுவதற்கு ஏதுவான நிறுவன அமைப்புகளையும் மேற்கொள்ள வேண்டும். இதனால் விளையும் முதல் முடிவு பின்வருமாறு: நுகர்வோரின் உளவியல் திறன்கள் ஒரே நிலையுள்ளனவாய் அமைந்தாலும், நிறுவன அமைப்பு முறைகள் ஒரே நிலையில் அமையாத காரணத்தால் நமது மாதிரியுடன் தொடர்புடைய நுகர்ச்சிச் சார்பு தொடர்பு நிலைபேறு அற்றதாய் அமைகிறது. நாட்டின் மொத்த ஆக்க நுகர்ச்சி இறுதி நிலைத் திறன், செலவுக்குரிய வருமான நுகர்ச்சியின் இறுதிநிலைத் திறனைவிட மிகவும் குறைந்து காணப்படுகிறது. இருப்பினும் அது அவ்வளவு நிலைபேறுடையது அல்ல. இன்னும் ஒரு முடிவு

பின்வருமாறு : நாட்டின் மொத்த ஆக்கம் (GNP) செலவுக்குரிய வருமானம் (DI) ஆகிய இரண்டின் தொடர்பைப் பயன்படுத்தி பொதுத் தலையிடுதலால் நுகர்ச்சிச் செலவு பாதிக்கப்படலாம். அதுவும் நாட்டின் மொத்த ஆக்கத்திலிருந்து தனிப்பட்ட முறையில் பாதிக்கப்படலாம். பின் கூறியதை அடுத்த பத்தியில் நன்கு விளக்கியுள்ளோம்.

## வருவாய்க்குரிய கொள்கையும் நுகர்ச்சியும்
## (Fiscal Policy and consumption)

வரிகள், மாற்றுச் செலுத்துத் தொகைகள் நுகர்ச்சிச் செலவை எப்படிப் பாதிக்கின்றன என்ற பகுப்பாய்வில், கொடுக்கப்பட்ட வரி வீதங்கள், அரசு மாற்றுச் செலுத்துகளின் அமைப்பும் கொடுக்கப்பட்டது என்ற எடுகோள்களை அமைத்து விளக்கினோம். ஆனால், வரி வீதங்கள் அமைப்புகள் ஆகியவை, கொள்கைத் தீர் மானங்கள் போன்றவைகளால் மாறக்கூடியவை. நுகர்வோர் செலவைப் பாதிப்பதற்கெனவே இம் மாற்றங்கள் வெளிப்படை யாக மேற்கொள்ளப் பட்டன. அதேபோல் அரசின் கொள்கை (உதாரணமாக பங்கிடாத இலாபத்தின்மேல் சுமத்தும் ஒரு புதிய வரி) இலாபப் பங்கீட்டுக் கூட்டமைப்புக் கொள்கைகளைப் பாதிக்கும்.

முதலீட்டுச் செலவுகள் குறைந்தன என்று வைத்துக்கொள் வோம். இதனால் குறைவு பட்ட வெளிப்பாடு அல்லது வேலையின்மை ஏற்படலாம் அல்லது உண்மையில் ஏற்பட்டு இருக் கலாம். அச் சமயத்தில் 'உள்ளடக்கிய நிலைபேறுகள்' (built-in stabilizers) இவ் வீழ்ச்சியின் வேகத்தைத் தணிக்கும். ஏனெனில், வரிசெலுத்துகள், கூட்டமைப்புச் சேமிப்பு ஆகியவை குறைவதால் மாற்றுச் செலுத்துகள் உயர்கின்றன. ஆனால், 'உள் அடக்கிய நிலை பேறுகள்' வருமானச் செலவு ஆகியவைகளின் வீழ்ச்சியைத் தவிர்க்க முடியாது. ஏனெனில், வருமானம் விழுகிறது என்பதாலும் அது எந்த அளவிற்கு விழுகிறது என்பதாலும் மட்டுமே அவை இயங்கு கின்றன. ஆயினும் வரி வீதங்களைக் குறைத்தும், மாற்றுச் செலுத்துகளைப் பெறுவதற்கான பண்புகளை உயர்த்தியும் விளையும் நாட்டின் மொத்த ஆக்கத்தின் (GNP) வீழ்ச்சியை, செலவுக்குரிய வருமானத்தின் (DI) உயர்வாக மாற்றலாம். இதனால் நுகர்ச்சிச் செலவு குறையாது. ஆனால் ஒரு வேளை உயரக்கூடும்.

இப் பயனை விளக்கக் கிடைத்த (அதுவும் தற்செயலாகக் கிடைத்த) உதாரணம். 1953-54 ஆண்டில் தோன்றிய வீழ்ச்

சியின் விளக்கமாகும். ஐக்கிய அரசுகளின் வாணிகத்துறை (காலங்களுக்குச் சரிக் கட்டிய ஆண்டு வீதங்களைக்கொண்ட காலாண்டுத் தொடர் வரிசையைப் பயன்படுத்தி அளவிடுகையில், நாட்டின் மொத்த ஆக்கத்தின் உச்சநிலை (peak) 1953 ஆண்டு இரண்டாவது காலாண்டில் அடையப்பெற்றது. அதேபோல் கீழ் மட்ட நிலை (trough) 1954 ஆம் ஆண்டு இரண்டாவது காலாண்டில் அடையப் பட்டது. அட்டவணை 12–5 இவ்விரண்டு காலாண்டுகளுடன் தொடர்புடைய எண்ணிக்கைகளையும் அவை களினிடையே ஏற்பட்ட மாற்றங்களையும் வெளிபடுத்துகிறது.

இந்தக் கால அளவில்—முதலீட்டுச் செலவு, அரசின் செலவு ஆகிய செலவுகள் மொத்தத்தில் 14·6 பிலியன் அளவில் குறைந்தது. இக் காலத்தில் ஏற்றுமதி உபரி (export surplus) 15 பிலியன்களாக உயர்ந்தது. நுகர்ச்சி 3·2 பிலியன்களாக உயர்ந்தது. இவை களால் நாட்டின் மொத்த ஆக்கம் (GNP) 9·9 பிலியன்களாகக் குறைந்தது. நாட்டின் மொத்த ஆக்கம் பெருமளவு குறையு மிடத்து எப்படி நுகர்ச்சி உயரக் கூடும்? அட்டவணையில் காணும் விவரம் இதற்கு விளக்கம் தருகிறது.

அட்டவணை 12– 5

நாட்டின் மொத்த ஆக்கமும், தொடர்புடைய இனங்களும் 1953–1954 ஆண்டுகளின் இரண்டாவது காலாண்டுகள்.

(பருவ காலத்திற்குச் சரிக்கட்டப் பட்ட ஆண்டு வீதங்கள் பிலியன் டாலர்களில்)

| | இரண்டாவது காலாண்டு 1953 | இரண்டாவது காலாண்டு 1954 | மாற்றம் |
|---|---|---|---|
| நாட்டின் மொத்த ஆக்கம் | 368·8 | 358·9 | —9·9 |
| நுகர்ச்சிச் செலவுகள் | 233·3 | 236·5 | +3·2 |
| தனித்துறை உள்நாட்டு மொத்த முதலீடு | 52·9 | 47·2 | —5·7 |
| அரசு வாங்கும் பண்டங்களும் பணிகளும் | 83·3 | 74·4 | —8.9 |
| நிகர ஏற்றுமதிகள் | —·7 | +·8 | +1·5 |
| முதல் நுகர்ச்சிச் செலுத்துகள் | 26·2 | 28·5 | +2·3 |

30

| | | | |
|---|---|---|---|
| தொழில்துறை மறைமுக வரிகள் | 30·1 | 30·2 | + ·1 |
| புள்ளியியல் பிழை | 2·0 | —·8 | —2·8 |
| அரசு தொழில் துறைகளின் உபரியிலிருந்து கழிக்கப்பட்ட உதவித் தொகை | —·4 | —·3 | +·1 |
| கூட்டமைப்பு இலாப வரிகள் | 21·9 | 16·9 | —5·0 |
| கூட்டமைப்புப் பங்கீடாகா இலாபம் | 14·5 | 11·1 | —3·4 |
| கூட்டமைப்பு இருப்புப் பட்டியல் மதிப்புச் சரிக்கட்டல்கள் | —1·6 | 0 | +1·6 |
| சமூகநல இன்சூரன்ஸ் செலுத்துகள் | 8·9 | 9·6 | +·7 |
| அரசு மாற்றுச் செலுத்துகள் | 12·7 | 14·9 | +2·2 |
| அரசு வட்டி | 5·1 | 5·4 | +·3 |
| மக்கள்சார் வரிகள் | 35 9 | 32 8 | —3·1 |
| செலவுக்குரிய வருமானம் | 252·8 | 254·8 | +2·0 |
| மக்கள்சார் சேமிப்புகள் | 19·6 | 18·3 | —1·3 |
| நுகர்ச்சிச் செலவுகள் | 233·3 | 236·5 | +3·2 |

மூலம் : நடப்புத் தொழில்களின் கணக்கெடுப்பு, ஜூலை *1958* பக்கங்கள் *14, 15.*

(Survey of current Business July 1958 p.p. 14, 15)

அட்டவணையில் காணும் பிரதிகூலமான காரணி முதல் நுகர்ச்சிச் செலுத்தீடுகள் ஆகும். (இவை கணக்கிட்டும் இலாபத்தைக் குறைக்கின்றன.) முதல் பொறித் தளவாடங்களின் மேல் சுமத்தப் பட்ட அதிகப்படித் தேய்மானம் இதனை முதன்மையாகப் பிரதிபலிக்கிறது. வெளிப்பாட்டின் அளவு குறைந்து இருந்தும், தொழில்களின் மறைமுக வரி சேர்க்கைகள் உயர்ந்தன. இது இராச்சிய ஆட்சி, தல ஆட்சி ஆகியவைகளின் வீத உயர்வுகளைப் பிரதிபலிக்கின்றது. சமூக நல இன்சூரன்ஸ் செலுத்தீடுகள் ·7 பிலியன்களாக உயர்ந்தது மூன்றுவது பிரதிகூலமான காரணியாகும். இச் செலுத்தீடுகள் (உள் அடக்கிய) அளவு குறையும் என எதிர்பார்க்கப்பட்டது. இது அந்தக் காலத்தில் அமுலில் இருந்த உயர்ந்த செலுத்தீட்டு வீதங்களின் விளைவாகும்.

பிரதிகூலமான இந்தக் காரணிகளின் பயன்கள் யாவும் மறுதலிக்கப் பட்டன. கூட்டமைப்பு இலாப வரிகள் ஐந்து பிலியன் அளவுகளுக்கு வீழ்ந்தது. இது இரண்டு காரணிகளின் விளைவாகும் (1) வரிகளுக்கு முன் கூட்டமைப்பு இலாபங்கள் மிகக் குறைந்து சென்றன. இதனுல் அவை (உள் அடக்கிய built-in) குறைவு வரிகள் அளவில் பல பிலியன்களாக உள்ளன (2) அதிக இலாப வரி (excess profits tax) தள்ளுபடி செய்யப்பட்டது. வரிகள் விதிக்கப்பட்டபின் இலாபங்கள் குறைந்துகொண்டே சென்ருலும் கூட்டமைப்புகள் தங்கள் இலாப பங்கை (dividends) குறைக்க வில்லை. ஆகவே கூட்டமைப்பு பங்கிடாத இலாபங்கள் 3 4 பிலியன் டாலர்களாகக் குறைந்தன. மக்கள் சார் வரிகள் 10 சத வீதமாகக் குறைந்தன. இதற்கு இரண்டு காரணங்கள் காட்ட லாம். ஒன்று குறைந்த அளவு வரிதளம் (tax base) அமைத்தது; இரண்டு மத்திய அரசாங்கம் வருமானவரி வீதங்களைக் குறைத்தது. (இதனை இராச்சிய அரசாங்கம் தல அரசாங்கம் ஆகியவை தங்கள் வரிவீதங்களை உயர்த்தியதால் சரிக் கட்டப் பட்டன.) மாற்றுச் செலுத்துகள் 2·2 பிலியன் டாலர்களாக உயர்ந்தன. இது வேலை யின்மையினுல் தானுக இயங்கும் விளைவாகும்; மேலும் பயன் (benefit) அமைப்பை உயர்த்தி அமைத்ததாலும் விளைந்தது. உள்-அடக்கிய இணக்கம் (built-in flexibility) பெடரெல் (Federal) வரி வீதங்களின் குறைப்பு, மாற்றுச் செலுத்துகளுக்குச் சலுகை காட்டல் போன்றவைகளின் விளைவாக நுகர்வோர் செலவுக்குரிய வருமானம் 2 பிலியன் டாலர்களாக உயர்ந்தது. மக்கள் சார் சேமிப்பு எதிர்பாராத வகையில் குறைந்ததால் நுகர்ச்சிச் செலவு 3·2 பிலியன் டாலர்களாக உயர்ந்தது.

வெளிப்பாடு குறையா வண்ணம் தடுக்க (அதாவது முதலீட்டுச் செலவு குறையும்போதும், அரசின் செலவுகள் குறையும் போதும்) ஏற்படும் வருவாய்க் கொள்கை முறை எவ்வாறு பாடுபடுகிறது என்பதற்கு இது ஒரு பெரிய சான்ருகும். முதலீட்டுச் செலவும் அரசின் செலவும் குறையுமிடத்து நுகர்ச்சிச் செலவும் குறைந்து விளைவை அதிகப் படுத்தாமல் நுகர்ச்சிச் செலவு ஒரே நிலையுள்ளதாக அமைந்ததோடு அல்லாமல், பின்வரும் மீட்சிக்கும் அது பெரியதொரு உறுதுணையாக அமைந்தது. 1957–58 ஆண்டில் தோன்றிய வீழ்ச்சியின் விளை வைச் சரிக்கட்ட பெடரெல் (Federal) வருவாய்க்குரிய கொள்கை பெரிதும் பயன்பட்டது. வரவு செலவுத் திட்டத்தின் (budget) செலவுப் பக்கத்தை மாற்றியமைத்ததன் வாயிலாக இது செயல் புரிந்தது.

## நுகர்ச்சிச் சார்பு தொடர்பிற்கான தீர்மானத்தின் சுருக்கம்
## (Summary Judgement on the consumption Function)

இவ் வதிகாரத்திலும், இதற்கு முந்திய அதிகாரத்திலும் கீன்சின் நுகர்ச்சிச் சார்பு தொடர்பைப் பயன்படுத்துகையில் இதனுடன் இணைக்கப்படும் பல்வேறு தகுதிகளைக் குறிப்பிட்டோம். மொத்த நுகர்ச்சிச் செலவை நிர்ணயிப்பது என்பது கீன்சின் அறிவுரை வழி வந்த உற்சாகக்காரர்கள் எதிர்பார்த்ததை விட மிகவும் சிக்கலான பிரச்சினை. அத்தொடர்பு நடப்பு வருமானமும் நடப்பு நுகர்ச்சியும் கொண்டுள்ள தொடர்பைக் கொண்டு அமையாமல், கடந்த காலத்தில் எதிர்பார்த்த வருமானம், நுகர்ச்சி ஆகியவைகளின் சராசரி போன்ற பல சிக்கலான தொடர்புகளைக்கொண்டு அமைந்துள்ளது. மேலும், வருமானத்தைத் தவிர வேறு பல காரணிகளையும் கவனிக்க வேண்டியது வருகிறது. இத் துணைக் காரணிகளை மேற்கொண்ட பின்னும் நுகர்வோர் நடத்தையில் ஏற்படும் சில ஒழுங்கற்ற தன்மைகளை விளக்க முடியாது. ஆனால், ஒருவகையில் அவற்றை விளக்க வேண்டுமாகில், அதன் விளக்கம் 'உளவியல்' காரணிகளால் விளைகிறது என்று நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். இதற்கு இன்னும் அதிக ஆராய்ச்சி தேவை. அத்தகைய ஆராய்ச்சிகளில் சில மேற்கொள்ளப் பட்டுள்ளன.

ஆனால், கீன்சின் கண்டுபிடிப்பை நிராகரிக்கவோ அல்லது தள்ளிவைக்கவோ முடியும் என்ற முடிவுக்கு நாம் போதல் தவறு. முதலீட்டுத் தொகைக்கு ஏற்றவாறு அதற்கு எதிர் வகையில் நுகர்ச்சி தானாக மாறி நிலைபேறுடைய மொத்த தேவையை நிலைநாட்டும் என்று ஒருவராலும் உறுதியாக எடுகோள் அமைக்க முடியாது. (இதனை, ஒப்புக் கொள்ளப் பட்ட சிறப்பு வாய்ந்த பொருளியல் வல்லுநர்கள் மட்டும் எடுகோளாக அமைத்துக் கொண்டனர்). வருமானம் உயரும்போது அல்லது குறையும்போது நுகர்ச்சி என்னவாகும் என்று சொல்ல முடியாது என்பது ஒருவகையில் சிறந்த முடிவாகும். ஆனால், நுகர்ச்சி மாற்றங்களைச் சரிக்கட்டும் அதனால் வருமான மாற்றங்களைத் தவிர்க்கும் எனக் கொள்ளுதல் அவ்வளவாகப் பொருந்தாது.

இதைவிட மிகவும் இறுதியான நிலையை நாம் அடையலாம். செலவுக்குரிய வருமானம், இரண்டு, மூன்று அல்லது ஐந்து பிலியன் டாலர்களாக உயர்ந்தோ அல்லது குறைந்தோ அமைந்தால், நுகர்ச்சிச் செலவுகள் இதற்கு எதிர் திசையில் அசையும்—

அல்லது ஒரே திசையில் பெரிய தொரு அசைவாக எதிர் உணர்வு செய்யலாம். இத்தகைய எதிர்நிலை முடிவிற்கும் சில தகுதிகள் தேவை. அதாவது வருமான மாற்றங்கள் ஒரு காலாண்டு அல்லது இரண்டு காலாண்டுகளுக்கு நிலைத்து நின்றால், நுகர்ச்சி சரிக் கட்டல் ஒரே திசையில் ஏற்படும் என்று எதிர்பார்ப்பதோ டல்லாமல், அம் மாற்றம் வருமான மாற்றத்தை விடச் சிறிய தாகவும் அமையும். சிறிய ஒழுங்கற்ற முறைகள் சில காலாண்டு களில் ஒன்றை ஒன்று அடித்து நீக்கி விடுவதால், நம்மால் செய்யக் கூடிய குறுங்காலக் கூர்மையான முன்னறிவிப்புகள் தவிர்க்கப் படுகின்றன. ஆனால்–முதலீட்டுச் செலவுகள் பெயர்வதாலும், அல்லது அரசின் செலவு பெயர்வதாலும்-ஏற்படும் மிகப் பெரிய வருமான அசைவுகள் ஏற்பட்டால், நுகர்ச்சி (வருவாய்க்குரிய கொள்கை செலவுக்குரிய வருமானத்தைப் பாதுகாத்தால் தவிர) முதலீடு அல்லது அரசின் செலவை அடிப்படையாகக் கொண்ட வருமான மாற்றங்களைப் பிரதிபலிக்கும்.

நுகர்வோர் போக்குகளையும் எதிர்பார்ப்புகளையும் ஒழுங்கான முறையில் அறிந்து கொள்ள முடியுமானால் நுகர்ச்சியின் குறுங்கால அசைவுகளை நம்மால் எதிர்பார்க்க முடியும் (இவ்வசைவுகள் எவ்வளவு சிறியவையாயினும், வர்த்தகச் சுழல்களின் விளக்கத் திற்கு அவை இன்றியமையாதவை). சொத்து நீர்மைச் சொத்து, நுகர்வோர் கடன், நீள்பயன் சரக்குகளின் இருப்பு, ஆகியவை தவிர வேறு சில காரணிகளை நன்கு உணர்ந்த பின்னர் நுகர் வோர் செலவின் பெருமளவு அசைவுகளையும் நம்மால் நல்ல முறையில் முன்னறிவிக்க முடியும். ஆனால் முழுமையான நல்ல முறை இன்னும் சரியாக அமையவில்லை.

ஆயினும் இப்பொழுது உள்ள அறிவு மட்டத்தைக்கொண்டு சொல்லுகையில், நுகர்ச்சிச் செலவை நிர்ணயிக்கக்கூடிய மிகப் பெரிய தீர்மானியைக் கீன்சு கண்டுபிடித்தார் என்பதை நாம் மறக்க முடியாது; இருப்பினும் நுகர்ச்சிச் சார்பு தொடர்பினைப் பற்றிய கீன்சின் ‘கண்டுபிடிப்பு’ புதுமுறை பொருளியல் கண்டுபிடிப்புகளில் மிகத் தலைசிறந்தது என்பதை யாராலும் மறுக்க முடியாது. கீன்சின் கண்டு பிடிப்பைப் பற்றி ஆல்வின் ஆன்சன்[1] என்பவர் கீழ்க்கண்டவாறு கூறியுள்ளார். ‘பொருளியல் பகுப்பாய்வின் சாதனைகளுக்குக் கீன்சின் படைப்பு போதிய கருவி களைக் கொடுத்திருக்கிறது. இவை மார்ஷல் என்பவர் கண்டுபிடித் தமைக்குச் சமமானவைகளாக உள்ளன. ஏன் ஒரு வகையில்

1 புதிய பொருளியல் (பக்கம் 135) New Economic (page 135)

அவைகளைவிட முதலிடம் பெற்றவை எனவும் கூறலாம்.' ஆனால், இந்தத் தீர்ப்பினை ஒப்புக் கொள்வதற்கில்லை. ஆனால், நுகர்வோரின் செலவுபற்றி பகுப்பாய்வு (அதன் வழியாக மொத்தத் தேவை பற்றிய பகுப்பாய்வு மூன்றில் இரண்டு பங்கு உண்மையானது) முதன்மையானது. ஆனால், அது வருமானம் பற்றி பகுப்பாய் வினைத் தவிர்ப்பதால் அதனை முழுவதும் ஒப்புக் கொள்வதற் கில்லை.

# கலைச் சொற்கள்

| | | |
|---|---|---|
| Aggregation Problems | — | முழுமைப் படுத்தும் பிரச்சினைகள் |
| Budget Studies | — | வரவு செலவு திட்டம் பற்றிய ஆராய்ச்சி |
| Business Cycle Theory | — | வர்த்தகச் சுழற் கோட்பாடு |
| Capital Consumption Allowance | — | முதல் நுகர்ச்சிச் சலுகை |
| Central Bank | — | மைய வங்கி |
| Consumer Credit | — | நுகர்வோர் கடன் |
| Consumption Function | — | நுகர்ச்சிச் சார்பு தொடர்பு |
| Deferred Demand | — | காலம் கடத்திய தேவை |
| Depreciation | — | தேய்மானம் |
| Disposable income | — | செலவுக்குரிய வருமானம் |
| Dynomics | — | இயக்கம் |
| Economic Models | — | பொருளியல் மாதிரிகள் |
| Effective Demand | — | உறுதித்தேவை |
| Employment and out put | — | வேலையும் ஆக்கமும் |
| Exports & Imports | — | ஏற்றுமதி இறக்குமதி |
| Fiscal Policy | — | வருவாய்க்குரிய கொள்கை |
| Hoarding | — | பதுக்குதல் |
| Identities | — | முற்றொருமைகள் |
| Input-out put Analysis | — | உள்ளீடு வெளிப்பாடு பகுப்பாய்வு |
| Liquid Asets | — | நீர்மைச் சொத்துகள் |
| Liquidity preference | — | நீர்மை விருப்பம் |
| Liquidity Trob | — | நீர்மைப் பொறி |
| Loanable funds Theory | — | கடன் நிதிக் கோட்பாடு |
| Macro—Economic | — | பேரியல் பொருளாதாரம் |

Monetary policy — பணவாக்கக் கொள்கை

Multiplier — பெருக்கி

National Income — நாட்டு வருமானம்

Nation's Economic Budget — நாட்டுப் பொருளியல் வரவு செலவு திட்டம்

National product — நாட்டின் ஆக்கம்

Out put & Employment — வெளிப்பாடும் வேலையும்

Period Analysis — காலப் பகுப்பாய்வு

Personal Income — தனிப்பட்ட வருமானம்

Personal Saving — தனிப்பட்ட சேமிப்பு

Pricc level — விலை மட்டம்

Price Index — விலை குறியீடு

Quantity Theory of money — பண அளவு கோட்பாடு

Real National Income — உண்மை நாட்டு வருமானம்

Real National Product — உண்மை நாட்டு ஆக்கம்

Regid wayes — இணையாக் கூலிகள்

Saving & Investment — சேமிப்பு முதலீடு

Saving function — சேமிப்பு சார்பு தொடர்பு

Speculative demand for money — யூக வாணிகத்திற்கானப் பணத் தேவை

Stocks & flows — இருப்பும் ஓட்டமும்

Transactions demand for money — பேரத்திற்கானப் பணத்தேவை

Transfer payments — மாற்று செலவுகள்

Unemployment — வேலையின்மை

Velocity of money — பண புழுக்கச் சுற்று வேகம்

Wage flaxibility — கூலியின் இணையும் தன்மை

Wage rate level — கூலி விகித மட்டம்

Wage flaxibility & Employment — கூலி இணைவும் வேலையும்